உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்

அருளிச்செய்த

# கந்தபுராணம்

முதலாவது

# உற்பத்திகாண்டம்

மூலமும்

யாழ்ப்பாணம் பருத்தித்துறை

பிரமஸ்ரீ. ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள்

செய்த

உரையும்.

ருதிரோற்காரி ஹூ] யாழ்ப்பாணம். [தை மீ

1984

நூல்: கந்தபுராணம் உற்பத்திகாண்டம் உரை.

நூலாசிரியர்: கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள், காஞ்சிபுரம்

உரையாசிரியர்: பிரமஸ்ரீ ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள், பருத்தித்துறை

பதிப்பு: ருதிரோற்காரி தை — 1984. மூன்றும் பதிப்பு

உரிமை: மறவன்புலவு மு. கணபதிப்பிள்ளை

பக்கங்கள்: 1 — 822

விற்பனையாளர்: **காந்தளகம்**
213, காங்கேசன்துறை வீதி, யாழ்ப்பாணம்
12, கோவிந்தன் தெரு, சென்னை, 600029

**விலை: 125/-**

இந்நூலைப் பதிப்பித்து விற்பனை செய்யும் உரிமையை, தும்பை நகர், பிரமஸ்ரீ ச. சோமசுந்தர ஐயர் அவர்கள் அளித்தபடி, மறவன்புலவு மு. கணபதிப்பிள்ளை அவர்களால் இது யாழ்ப்பாணம், ஸ்ரீ காந்தா அச்சகத்தில் அச்சிடப்பெற்றது.

உ

கணபதி துணை.

உரையாசிரியர் கூறிய

# கடவுள் வணக்கம்

### விநாயகக்கடவுள்

சீர்பெறு மான்முதற் றேவர்க் காரருள்
நேர்பெற வியற்றியே நினையு மன்பர்தங்
கார்பெறு வினைக்களை களையு மாமுகத்
தேர்பெறு மிறைவனை யிறைஞ்சி யேத்துவாம்.

### பரமசிவன்

ஒன்ரு யிரண்டாகி மூன்ரு யகண்டமா யோமெனு மெழுத்து மாகிக்
குன்ருத சோதிப் பிழம்பா யநாதியாய்க் கூறரிய பிரம மாகி
மன்ருய தில்லைவன மன்னியா நந்தசின் மயதாண்ட வம்பு ணர்க்கு
நன்ருய பரமசிவ னடியிணை யெனுங்கமல நாண்மலர்கள் போற்றிவாழ்வாம்.

### சுப்பிரமணியக் கடவுள்

நேரறத் துலங்கு பொன்னகர் மகவா னீண்முடி கவித்தர சாளச்
சீருறத் தரும நெறிமிகத் தழைப்பத் தேவர்தஞ் சிறைத்துயர் தீரப்
போரிறுத் தவுணர் குழுவினை வாட்டிப் பொருவிலாத் தெய்வத மாதை
யேருற மணந்த விமலனைக் குகனை யெந்தையைப் பணிந்திடர் தீர்ப்பாம்.

# விதந்துரை

## இப் புராணத்தையும் ஆக்கியோனையும் புகழ்ந்த சில பெரியோர்களின் பாடல்கள்.



### அபியுக்தர் வாக்கு.

உச்சித மாஞ்சிவ வேதியன் காளத்தி யோங்குமைந்தன்
கச்சியப் பன்செய்த கந்த புராணக் கலைக்கடலின்
மெச்சிய கல்வி மதியும்வெண் டாமரை மேவுமின்னு
மிச்செவி நாவினுக் கின்பா மமுது மெழுந்தனவே.

வேதமொடு வேதாங்கம் பயின்று வல்லோன்
விரிந்தசிவா கமமுணர்ந்து மேன்மை பூண்டோன்
போதநிறை சிவமறையோன் காஞ்சி வாழும்
புனிதமிகு கச்சியப்ப குரவ ஞேன்
வாதமுறு புலவர்குழா மகிழ்ந்து போற்ற
மதிமலிமா டம்புடைசூழ் குமர கோட்டத்
தேதமறு சகாத்தமெழு நூற்றின் மேலா
யிலகுகந்த் புராணமரங் கேற்றி ஞனே.

### கந்தபுராணச் சுருக்கம்.

போதமுறு சூதமுனி புகன்ற காந்தப்
புகழ்க்கடலிற் படிந்ததன்கட் பொருள தான
மேதகுவண் புனலருந்தி வைய முய்ய
வெய்யதுயர்ப் பிறவியெனும் வெம்மை தீரத்
தாதவிழ்பூம் பொழிற்காஞ்சிக் குவட்டி லேறிச்
சலதியமு தினைநிகர்செந் தமிழ தான
காதன்மழை பொழிந்தவருட் கொண்டலான
கச்சியப்ப னிருபாத முச்சி வைப்பாம்.

### தொண்டைமண்டலசதகம்.

அந்தப் புரமு மறுநான்கு கோட்டகத் தாருமொன்ருய்க்
கந்தப் புராணம் பதினு யிரஞ்சொன்ன கச்சியப்பர்
தந்தப்பல் லக்குச் சிவிகையுந் தாங்கியச் சந்நிதிக்கே
வந்தப் புராண மரங்கேற்றி ஞர்தொண்டை மண்டலமே.

சுபமஸ்து.

உ

சிவமயம்

வள்ளைக் குளப்பதி ஐங்கரனே சரணம்
வண்ணை யம்பதி வாலாம்பிகா சமேத
வைத்தீஸ் வரனே சரணம்
நல்லையம் பதிக்கதிர் வேற்கந்தப் பெருமானே சரணம்.

# பதிப்புரை

மெய்ம்மையா முழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனு நீரைப் பாய்ச்சித்
தம்மையு நோக்கிக் கண்டு தகவெனும் வேலியிட்டுச்
செம்மையு ணிற்ப ராகிற் சிவகதி விளையு மன்றே.

உலகெலாம் உணர்ந்தோதற்கரிய காஞ்சி குமரகோட்டத்தில் எழுந் தருளியிருக்கும் சுப்பிரமணியப்பெருமான் திருவாக்காக மலர்ந்தது கந்தபுராணம். இது என்றும் உள்ள உண்மைப் பொருள்.

குமரகோட்டத்துக் குமரப்பெருமானை மெய்யன்போடு இடையறாது பூசித் துத் திருவருள் பெருக்கியவர் கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள். இவர் சுமார் ஆயிரம் வருடங்களுக்கு முன்னர்ச் செந்தமிழில் கந்தபுராணம் என்னும் பெருங் காப்பியத்தைப் பாடிச் சைவ உலகிற்கு அளித்தார்.

கந்தபுராணம் — உற்பத்திகாண்டத்திற்கு சைவத் தமிழறிஞர் பலர் உரை எழுதி உள்ளார்கள். இவர்களுள் பருத்தித்துறை தும்பைநகர் பிரமஸ்ரீ ச. சுப்பிரமணிய சாஸ்திரிகளும் ஒருவராவர்.

சைவ உலகில் புராண படன விதிப்படி தேவாலயம், திருமடம், நதிக் கரை, குளக்கரை, நந்தவனம் முதலான பரிசுத்த இடங்களில் புராணம் படித்து உரை (பயன்) சொல்வார்கள். சைவ நன்மக்கள் ஆசாரசீலராய் மெய் யன்புடன் புராண படனத்தைக் கேட்டுத் திருவருள் பெருக்குவார்கள்.

இந்நெறி யாழ்ப்பாணத்தில், நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர் கள் வாழ்ந்த காலத்தில் மிகச் சிறப்பாகக் கடைப்பிடிக்கப்பட்டது.

## பதிப்புரை

வண்ணை வைத்தீஸ்வரன் கோயிலில் புராண படனம் நடைபெறுங் காலங்களில் தூர இடங்களில் உள்ள சைவ அன்பர்கள் பலர் புராண படனம் தொடங்கி முடியுங் காலம் வரை அங்கே தங்கியிருந்து ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள் உரையைக் கேட்டுத் திருவருள் பெருக்குவார்கள்.

சைவபுராணங்களைப் படித்தல், கேட்டல், சிந்தித்தல் முதலான சிவ புண்ணியங்களைச் செய்துவரின் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நற் பேறுகளை அடையலாம் என்பது சைவ சமய உண்மை. இதை

''ஞானநூல் தனையோதல் ஓது வித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்று
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞான பூசை''.

என எடுத்தோதுகின்றது சிவஞானசித்தியார்.

இந் நெறி தொடர்ந்தும் நிலைபெறவேண்டும்; சைவ சமய நூல்கள் சைவசமயிகளுக்கு முட்டின்றிக் கிடைத்தல் வேண்டும். இந் நோக்கத்திற்கு உதவி யாகக் கந்தபுராணம் — உற்பத்திகாண்டம் மூலமும் உரையும் அச்சிட்டு வெளி யிடத் திருவருள் கூட்டியது.

யாழ்ப்பாணம் ஸ்ரீ காந்தா அச்சக வெளியீடுகளாகப் பிள்ளையார் புரா ணம் மூலமும் உரையும், சிவராத்திரி புராணம் மூலமும் உரையும், அச்சிட்டு வெளியிட்டதைத் தொடர்ந்து கந்தபுராணம் உற்பத்திகாண்டம் மூலமும் உரையும் அச்சிட்டு வெளியிடத் தோன்றாத் துணையாகவிருந்து அருள்பாலித்த மறவன்புலவு வள்ளைக்குளப்பதி விநாயகப்பெருமான் திருவடிகளை வாழ்த்தி வணங்குகின்றேன். சைவ அன்பர்கள் இந்நூலை உவந்தேற்றுப் படித்துப் பயன் பெறுவார்களாக.

இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியராக இருந்த கலாநிதி க. கணபதிப்பிள்ளை அவர்களும், நெல்லியடி அரசினர் கலாசாலை அதிபராகப் பணி இயற்றிய கலாநிதி கு. சிவப்பிரகாசம் அவர்களும் உரையாசிரியர் பிரமஸ்ரீ ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள் பற்றி எழுதிய வாழ்க்கை வரலாறுகள் இப் பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நூலை அச்சிடத் தொடங்கியபின் எதிர்பாராது ஏற்பட்ட தடை களால் இடையில் சில மாதங்கள் தொடர்ந்து அச்சிட முடியாத நிலை ஏற் பட்டது. இதனால் மனம் வருந்தி இருந்தேன். அக்காலத்தில் சிவயோக சுவாமி களின் அணுக்கத் தொண்டர் — சிவனடியார் — ஒருவர் எமது அச்சகத்திற்கு வருகை தந்தார்கள். சிவயோக சுவாமிகள் வாழ்ந்த காலத்தில் எமது அச்சகத் திற்கு வருகை தரும் பொழுதெல்லாம் என் மனத்தில்எழும் அன்பு, பத்தி, மகிழ்ச்சி ஆகிய இவைகளை இவ்வடியவரின் வருகை நினைவூட்டியது. வருகை தந்த சிவனடியார் கந்தபுராணம் அச்சிடும் வேலை எந்த அளவில் நடந்திருக்

கின்றது எனக் கேட்டார்கள். "வேகமாக அச்சிடும் ஆற்றல் என்னிடம் இல்லாதிருப்பதை உணர்கின்றேன்" என்க் கூறிக்கவலேயுற்றேன். "சிவனடியார் திருவருள் வழி வேகமாக அச்சிடக் கூடிய நிலே ஏற்படும்" எனக் கூறினூர்கள். இவர்கள் வாக்கே திருவாக்காக அமைந்து அச்சிடும் வேலே துரிதமாக நடந்து புத்தக உருவம் பெற்றதை நினைந்து என்னே வழி நடத்திய சுப்பிரமணியப் பெருமானே வழுத்தி வணங்குகின்றேன்.

இந்நூலே அச்சிடும்பொழுது அச்சுத்தாள்களே ஒப்புநோக்கித் திருத்தம் செய்து உதவிய பண்டிதர் க. மயில்வாகனஞர் அவர்களுக்கும், வித்துவான் க. சொக்கலிங்கம் அவர்களுக்கும், புத்தகத்தை அழகுற அச்சிட உதவிய ஸ்ரீகாந்தா அச்சக அலுவலர்களுக்கும் எமது நன்றியையும் பாராட்டையும் தெரிவித்துக்கொள்கின்றேன்.

பிரமஸ்ரீ ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள் உரை எழுதிய அசுர காண்டம், மகேந்திர காண்டம் ஆகிய நூல்களும் விரைவில் வெளிவரத் திருவருளின் துணையை வேண்டுகின்றேன்.

என்செயினும் என்பெறினும்
என்னிறைவா ஏழையன் யான்
நின்செயலென் றுன்னும்
நினைவுவரக் காண்பேனே.

— தாயுமானவர்.

மு. கணபதிப்பிள்ளை.

மறவன்புலவு,
சாவகச்சேரி.
தை மீ — 1984

திருச்சிற்றம்பலம்

# முகவுரை

பதினெண்புராணங்களுளொன்ருகிய கந்தபுராணம் சனற்குமாரசங்கிதையும் சூதசங்கிதையும் பிரமசங்கிதையும் விஷ்ணுசங்கிதையும் சங்கரசங்கிதையும் சூரசங்கிதையுமென ஆறு சங்கிதைகளையும் ஐம்பது காண்டங்களையும் இலக்கங் கிரந்தங்களையுமுடையது. இவற்றுள் முப்பதிணுயிரங் கிரந்தங்களமைந்த சங்கர சங்கிதையானது பன்னிரண்டு காண்டங்களையுடையது. அவற்றுள் முற்பட்டதாகிய சிவரகசியகாண்டம் சம்பவகாண்டம் முதலிய ஏழு காண்டங்களையும் பதின்மூவாயிரங் கிரந்தங்களையுமுடையது. அந்த ஏழு காண்டங்களுள் முதலிலுள்ள ஆறு காண்டங்களை இற்றைக்கு ஆயிரம் வருடங்களின் முன் கச்சியப்பசிவாசார்ரிய சுவாமிகள் கந்தபுராணமென்னும் பெயருடன் தமிழிலருளிச் செய்தார்.

இந்நூல் சுப்பிரமணியக் கடவுளினவதாரத்தையும் அவர் செய்த அற்புதங்களையும் தேவர் முதலானோர்க்கிடர் செய்து வாழ்ந்த சூரனாதிய அசுரரையழித்தமையையும் தெய்வயானையம்மை வள்ளியம்மை என்னுமிரு கன்னியரையுந் திருமணஞ்செய்ததையும் பிறவற்றையும் விளங்கக் கூறுகின்றது. சொற்சுவை பொருட்சுவை முதலியவற்ருற் செந்தமிழிற் சிறந்ததோர் காப்பியமாக எவராலும் பாராட்டப்பட்டது. சைவசமயிகள் அத்தியாவசியங் கற்கவேண்டிய நூல்களுள் இது சிறந்ததொன்ரும். இந் நூலை இத்தேயத்திற் பெரும்பாலும் ஆலய முதலியவற்றில் வருடந்தோறும் படித்துங் கேட்டும் பலர் விரும்பிய சித்திகளைப் பெற்று வருகின்ருர்கள்.

பல வருடங்களின் முன் இந் நூலின் முதன் மூன்று காண்டங்களுக்குஞ் சிறந்த உரைசெய்து அச்சிட்டு வெளிப்படுத்தினேம். நான்காவதாகிய யுத்தகாண்டத்துக்குரையியற்றி அச்சிடத்தொடங்கியும் நேர்ந்த சில கஷ்டங்களால் ஒரு சஞ்சிகை மாத்திரமே வெளிப்படுத்தத்தக்கதாயிற்று. தற்காலத்தில் எஞ்சிய பாகங்களை உரையுடனச்சிட்டு வெளிப்படுத்தும்படி பலர் எம்மையேவுகின்ருர்கள். முந்திய காண்டங்களின் உரைப்புத்தகங்கள் செலவாய் விட்டதனாலும் அவைகளைப் பலர் வாங்க விரும்புகின்றமையாலும் அவைகளை இரண்டாம் பதிப்பாக அச்சிட்டே எஞ்சிய பாகங்களை அச்சிடவேண்டியதாயிற்று. ஆதலின் முந்திய உற்பத்தி காண்டத்தை அச்சிட்டு வெளிப்படுத்தினேம். பிந்திய காண்டங்களையும் அச்சிட எண்ணியிருக்கிறேம்.

**எமது ஆசிரியரும் மாதுலருமாகிய பிரமஸ்ரீ. ம. முத்துக்குமாரஸ்வாமிக் குருமூர்த்திகளுடைய கட்டளைப்படியும் எமது அபிப்பிராயப்படியும் இப் பதிப்பில் உரைகளிற் சிற்சில திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன.**

இங்ஙனம்.

1926 **ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள்.**

## கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள்

# சரித்திரச் சுருக்கம்.

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் காஞ்சீபுரத்திற் குமரகோட்டத் தருச்சகருளொருவராயிருந்த காளத்தியப்ப சிவாசாரியருக்குச் சுப்பிரமணியக்கடவுளின் வரப்பிரசாதத்தாற் புத்திரராக அவதரித்து ஐந்தாம் வயசில் வித்தியாரம்பஞ் செய்யப் பெற்றுச் சம்ஸ்கிருதம் தமிழ் என்னுமிரு பாஷைகளிலுமுள்ள நூல்களைப் பயின்று ஏழாம் வயசிலுபநயனமுஞ் செய்யப்பெற்று வேதமோதி அதன்மேற் சமய முதலிய தீக்ஷைகளையும் ஆசாரியாபிஷேகத்தையும் பெற்றுக் குமரகோட்டத்துச் சுப்பிரமணியக்கடவுளை மெய்யன்போடு பூசித்துவந்தார்.

அக்காலத்திற் காஞ்சீபுரத்திலுள்ள தமிழ்ப் புலவர்கள் அவரது கல்வித்திறமையையும் சுப்பிரமணியசுவாமியின் மேற்கொண்ட பத்தியையும் நோக்கிச் சுப்பிரமணியக்கடவுளின் சரித்திரத்தை ஓர் புராணமாகத் தமிழிலருளிச் செய்யும்படி வேண்டினார்கள். ஒருநாட் சுப்பிரமணியக்கடவுள் அந்தக் கச்சியப்பசிவாசாரியரது சொப்பனத்திலே தோன்றி, "அன்பனே நீ காந்தபுராணத்தாறு சங்கிதைகளுட் சங்கரசங்கிதையின் முதற் கண்டமாகிய சிவரகசியகண்டத்திலுள்ள நமது சரித்திரத்தைக் கந்தபுராணமெனப் பெயரிட்டுத் தமிழிற் பெருங்காப்பியமாகப் பாடக்கடவாய்" என்று ஆஞ்ஞாபித்து, "திகட சக்கரச் செம்முக மைந்துளான்" என்று அடியுமெடுத்துக் கொடுத்து மறைந்தருளினார். உடனே கச்சியப்பசிவாசாரியர் விழித்தெழுந்து அழலிடைப்பட்ட மெழுகுபோல நெஞ்சநெக்குருக உரோமஞ் சிலிர்ப்ப உரைதடுமாறக் கரையற்ற இன்பக்கடலினழுந்தி "ஒன்றுக்கும் பற்றாத புழுத்த நாயினுங் கடையனாகிய தமியேனையும் பொருட்படுத்தி வந்தருளிச் செய்த எம்பெருமானாகிய சுப்பிரமணியக்கடவுளது பெருங்கருணைத் திறமிருந்தபடி என்னே?' என்று ஆநந்தக் கூத்தாடினார்.

மற்றைத் தினத்திற் கச்சியப்பசிவாசாரியர் நித்தியகரும முடித்துக் கொண்டு சுப்பிரமணிய பூசை செய்தபின் புராணம் பாட ஆரம்பித்து நாடோறும் நூறு செய்யுளாகப் பாடி அவையெழுதப்பட்ட ஏட்டையும் எழுத்தாணியையும் இராத்திரி காலபூசை முற்றியபின் குமர கோட்டத்தடிகளுடைய திருவடிக்கீழ் வைத்துவிட்டுத் திருக்கதவந் திருக்காப்பிட்டுக்கொண்டு தமது மாளிகைக்குப் போவார். பிற்றைநாட் காலையில் நித்திய கருமமுடித்துக்கொண்டு பூசையின் பொருட்டுத் திருக்கோயிலினுட் புகுந்து ஏட்டையெடுத்துப் பார்த்து அதிற் சிலவிடங்களிலே திருத்தப்பட்டிருத்தலைக்கண்டு அதனைச் சிரமேற் கொண்டு ஆநந்தபரவசராய்ச் சிறிது பொழுது நின்று பின் பூசை செய்வார்.

இவ்வாறே கச்சியப்பசிவாசாரியர் கந்தபுராணத்தைப் பாடி முடித்தபின் அதனைக் குமரகோட்டத்திலரங்கேற்றும் பொருட்டுச் சுபதினமுஞ் சுபமுகூர்த்தமும் நிச்சயித்துப் பலருக்கும் பத்திரம் விடுத்தருளினார். ஏவலாளர்கள் திருக்கோயிலையுந் திருவீதிகளையுமலங்கரித்தார்கள். சுட்டப்பட்ட சுபதினத்திற் புலவர்களும் அரசர்களும் பிரபுக்களும் பிறரும் வந்து கூடினார்கள்.

கச்சியப்பசிவாசாரியர் குமரகோட்டத்தடிகளைப் பூசை செய்து, அவர் சந்நிதானத்தில் மெழுகிப் பீடமிட்டு அதன் மேற் பட்டை விரித்துக் கந்தபுராணத் திருமுறையை அதன்மேல் வைத்து அருச்சித்து வணங்கித் துதித்தார். பின்பு இருந்து கொண்டு 'திகட சக்கரச் செம்முகமைந்துளா'னென்னும் முதற் செய்யுளை ஒருமுறை வாசித்து, திகழ் தச கர செம் முகம் ஐந்து உளான் என்று பிரித்துப்

பொருள் கூறத் தொடங்கினர். உடனே அங்கிருந்த தமிழ்ப் புலவர்களுளொருவர் ''சுவாமிகாள்! திகழ் தசம் திகடசமெனப்புணர்தற்கு விதி தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களுள் ஒன்றிலாயினும் இல்லையே'' என்றார். அதற்குக் கச்சியப்பசிவாசாரியர் ''தாங்கள் கூறியதொக்கும், ஆயின் இம் முதலடி என் வாக்கன்று, சங்கப்புலவராகிய சுப்பிரமணியக்கடவுளது திருவாக்கு. அவரே எனக்கு இவ்வடியெடுத்துத் தந்தருளினர்'' என்றார். அது கேட்ட அப்புலவர் புன்முறுவல் செய்து ''சுப்பிரமணியக்கடவுள் சுவாமிகளுக்கு இவ்வடியெடுத்துத் தந்தருளியது சத்தியமாயின் ஆகுக. அது இரகசியம், அதனை நாங்கள் அங்கீகரிப்பதெங்ஙனம்? அக்கடவுள் சுவாமிகளுக்குத் தோன்றியது போல எங்களுக்குந் தோன்றி இவ்வடியை நாமே எடுத்துக் கொடுத்தருளினோமென்று திருவாய்மலர்ந்தருளின் அங்கீகரிப்பேம், அன்றேல் இதற்கு இலக்கண நூலில் விதிகாட்டின் அங்கீகரிப்பேம், அல்லாக்கால், அரங்கேற்றவொட்டேம்'' என்றார். கச்சியப்பசிவாசாரியர் ''இவ்விரண்டினுள் ஒன்று நாளைச் செயப்படும்'' என்றருளிச் செய்து சபையாரைப் போக்கிவிட்டு அற்றைத் தினத்திலே திருவமுது செய்யாது இராத்திரிகால பூசை முற்றியபின் திருக்கதவந் திருக்காப்பிட்டுக் கொண்டு சந்நிதியிலே தரையிற் சயனித்தருளினார். அப்பொழுது சுப்பிரமணியக்கடவுள் அவரது சொப்பனத்திற் றோன்றி, ''அன்பனே! சோழ தேசத்தில் வீரசோழியம் என்று ஓரிலக்கணநூலிருக்கின்றது, திகழ் தசம் திகடசம் எனப் புணர்தற்குவிதி அந்நூலிற் சந்திபடலத்திற் பதினைந்தாஞ் செய்யுளிலிருக்கின்றது, சோழதேசத்துப் புலவனொருவன் அந்நூலை நாளைக்கு இவ்விடத்திற் கொண்டு வந்து அவ்விதியை எல்லாருக்குங் காட்டுவன்'' என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார்.

மற்றைநாட் சபையாரெல்லாருங் கூடியிருந்தபொழுது கச்சியப்ப சிவாசாரியர் தமக்கு முருகக்கடவுள் சொப்பனத்தில் அருளிச் செய்தமையை அவர்களுக்குச் சொல்லியருளினார். உடனே ஒரு புலவர் ஒரு புத்தகத்தைக் கையிற் கொண்டு அங்கே வந்தனர். அவரை அங்குள்ளோர்கள் நோக்கி ''நீர் யாவர்? உமது கையிற் புத்தகம் யாது?'' என்று வினவினார்கள். அதற்கு அப்புலவர் ''நாம் சோழ தேசத்துள்ளேம், இப் புத்தகம் வீரசோழியம்'' என்றார். அப்பொழுது முன்னைநாளில் ஆக்ஷேபித்த புலவர் விரைந்து சென்று அப் புத்தகத்தை வாங்கிச் சந்திபடலத்திற் பதினைந்தாஞ் செய்யுளை வாசித்துத் திகடசக்கரம் என்னும் புணர்ச்சிக்கு விதி அதிலிருத்தலையுணர்ந்து விம்மிதமும் மகிழ்ச்சியுமுற்றனர். மற்றைத் தமிழ்ப் புலவர்களும் ஒருவர் பின்னொருவராக அதனை வாங்கிப் பார்த்து விம்மிதமும் மகிழ்ச்சியுமுற்றார்கள். இறுதியிற் சோழதேசத்துப் புலவர் அப்புத்தகத்தைக் கச்சியப்பசிவாசாரியர் கையிற்கொடுத்துச் சபையாரெல்லாரையும் நோக்கி, ''ஆக்ஷேபம் ஒழிந்ததா ஒழிந்ததா!'' என்று சொல்லிவிட்டு மறைந்தருளினர். உடனே கச்சியப்பசிவாசாரியர் தம்மையாண்டருளிய ஆறுமுகக் கடவுளது பெருங்கருணைத் திறத்தை நினைந்து நினைந்து சரீரம் விதிர்ப்புற மயிர்க்காறோறுந் திவலையுண்டாக என்பெல்லாம் நெக்குநெக்குருக, மதகிடைப் புறப்படுஞ் சலம்போலக் கண்ணீர் பொழிய ஆநந்தபரவசராயெழுந்தருளியிருந்தார். அப்பொழுது சபையாரெல்லாரும் இங்ஙனமெழுந்தருளிவந்த புலவர் குமாரக் கடவுளேயென்று துணிந்து ஆச்சரியமடைந்து வெயிலிடைப்பட்ட வெண்ணெய் போல மனங் கசிந்துருக உரோமஞ் சிலிர்ப்ப ஆநந்தக் கூத்தாடிக் கச்சியப்பசிவாசாரியருடைய பெருமையை நன்குணர்ந்து அவர் திருவடிகளில் அடியற்ற மரம் போல் விழுந்து நமஸ்கரித்துத் தோத்திரஞ் செய்தார்கள். ஆக்ஷேபஞ் செய்த புலவர் கச்சியப்பசிவாசாரியரைப் பலமுறை நமஸ்கரித்து ''எம்பெருமானே! தமியேன் சுவாமிகளுடைய மகிமையைச் சிறிதுமறியாது ஆக்ஷேபித்த பெருங்குற்றத்

தைப் பொறுத்துத் திருவருள் சுரந்தருளுக'' என்று அதிவிநயத்தோடு பிரார்த்தித்து மீட்டும் அடியற்ற மரம்போல் வீழ்ந்து கிடந்தார். கச்சியப்பசிவாசாரியரெழுந்து அப்புலவருடைய இரண்டு கைகளையுந் தம்முடைய அருமைத் திருக்கைகளினாற் பற்றியெடுத்து இறுகத் தழுவி, ''தங்கள் ஆக்ஷேபத்தினாலன்றோ இச் சபையாரெல்லாருக்கும் திருவருளினுண்மை வெளிப்பட்டது. இதன் பொருட்டுத் தங்களுக்குச் செயற்பாலதாகிய கைம்மாறு யாது?'' என்று பாராட்டியருளினர்.

அதன்பின் சபையாரெல்லாரும் நமஸ்கரித்து, ''சுவாமிகாள்! இனிப் புராணத்தைத் தடையின்றியரங்கேற்ற ஆரம்பித்தருளுக'' என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அங்ஙனமே கச்சியப்பசிவாசாரியர் அரங்கேற்றுவாராயினர். கந்தபுராணங் கேட்க வந்த எண்ணிறந்த அடியார்களுக்கெல்லாம் போசனமுதலியவைகள் தொண்டை நாட்டுள்ள இருபத்துநான்கு கோட்டத்து வேளாளப் பிரபுக்களுடைய செலவினால் நடந்தன. எல்லாரும் நியமமாக வந்து பேராசையோடு கேட்கக் கச்சியப்பசிவாசாரியர் தினந்தோறும் புராணம் வாசித்துப் பொருள் சொல்லி ஒரு வருடத்தில் முடித்தருளினர்.

புராணமுற்றுப்பெற்றவுடனே கச்சியப்பசிவாசாரியர் புராணத் திருமுறையை விதிப்படி அருச்சனை செய்து நமஸ்கரித்தார். அப்பொழுது அங்குள்ள எத்திறத்தார்களும் அன்பினோடு விம்மி விம்மித் தண்டாகாரமாக விழுந்து கச்சியப்பசிவாசாரியரை வணங்கியெழுந்து இரண்டுகைகளுஞ் சிரசின் மேலேறிக் குவிய நின்று துதித்தார்கள். சிவாசாரியர் கந்தபுராணத் திருமுறையோடுந் தந்தச்சிவிகையிலெழுந்தருளி இருபத்துநான்கு கோட்டத்துமுள்ள வேளாளப் பிரபுக்களுட் சிலர் சிவிகை தாங்கச் சிலர் வெண்சாமரம் வீசச் சிலர் குடை கொடி பிடிக்க நானாவித மங்கல வாத்தியவொலியினாலே திக்குகளெல்லாஞ் செவிடுபடப் பிராமணர்கள் வேதகோஷஞ்செய்யச் சிவனடியார்கள் சரவணபவ சரவணபவ என்று சொல்லும் பேரொலி தழைக்கத் திருநகரவாசிகள் திருவீதிகளைச் சுத்தி செய்து வாழைகள் நாட்டித் தோரணங்கள் நிரைத்துப் பூமாலைகள் தூக்கிப் பூரணகும்பங்கள் வைத்துப் பொரி தூவித் திருவிளக்கேற்றி அறுகெடுக்கத் தமது அருமைத் திருமேனியிலே தரிக்கப்பட்ட திரிபுண்டரத்தினழகையும் உருத்திராக்க மாலைகளினழகையும் சின்முத்திரையையும் திருக்கண்களினின்று பொழியும் பரமாநந்த வாரியையும் அடியார்கள் கண்டு மனநெக்கு நெக்குருக வணங்கித் துதித்து ஆநந்தக் கூத்தாடத் திருவீதி வலஞ் செய்து குமரகோட்டச் சந்நிதியையடைந்து சிவிகையினின்றுமிறங்கித் திருமுறையைத் திருக்கோயிலினுள்ளே கொண்டுபோய்த் திருமுன்னே வைத்தருளினர். உடனே எல்லாரும் கச்சியப்பசிவாசாரியரை அவரமையுமமையுமென்றவழியுந் தவிராது ஆராமையினாலே பலகாலும் நமஸ்கரித்து ''பரமகருணாநிதியாகிய எம்பெருமான் தமிழ் நாட்டாரெல்லாருமுய்யும் பொருட்டுத் திருவாய் மலர்ந்தருளிய இப்புராணமாகிய திவ்வியாமிர்தத்தை அடியேங்கள் செவிவாய் மடுத்து உய்ந்தோம் உய்ந்தோம்'' என்று விண்ணப்பஞ் செய்து இன்பமுற்றார்கள்.

தமிழ்நாடெங்குமுள்ள சிவனடியார்களெல்லாரும் இக் கந்தபுராணத்தை மிகப் பாராட்டிச் சிரத்தையோடு எழுதுவோரும் வாசிப்போரும் பொருள் சொல்வோருங் கேட்போருமாய் இதன் சொற்சுவை பொருட்சுவைகளை அனுபவித்துப் பேராநந்தப் பெருஞ் செல்வமடைந்தார்கள்.

கச்சியப்பசிவாசாரியர் பின்னருஞ் சிலகாலம் குமரகோட்டத்தடிகளைப் பூசை செய்து கொண்டிருந்து முத்திபெற்றனர்.

## பிரமஸ்ரீ. சுப்பிரமணியசாஸ்திரிகளின் சரித்திரச் சுருக்கம்.

# கந்தபுராண உரைகண்ட சுப்பிரமணிய சாஸ்திரிகள்

### வாழ்க்கை வரலாறும் ஆக்கிய நூல்களும்

[இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர்
கலாநிதி. க. கணபதிப்பிள்ளை அவர்கள்]

புண்ணியதலமாகிய தில்லைமாநகரில் அவதரித்த அந்தணப் பெரியாராகிய பிரமஸ்ரீ. முத்துச்சாமி ஐயரென்பவர், யாழ்ப்பாணம் வடமராட்சி பருத்தித் துறையைச் சேர்ந்த தும்பைநகர்வாசரும் புலோலி பசுபதீசுரர் ஆலயப் பிரதான குருவுமாயிருந்த பிரமஸ்ரீ. மகாதேவக் குருக்களின் தங்கையாகிய அம்மணி அம்மாவைக் கடிமணம் புரிந்து இல்லறம் நடாத்தி வந்தார்.

இவர் பாரத்துவாசகோத்திரத்து ஆபத்தம்ப சூத்திரத்து யசுர்வேத சாகையைச் சேர்ந்தவர். இவர் மூத்தமகனுகிய சபாபதி ஐயரென்பவர் தம் முடைய தாய்மாமனுகிய மகாதேவக் குருக்களின் மகளும், ஆரிய திராவிட மகாபண்டிதர் பிரமஸ்ரீ. முத்துக்குமாரசுவாமிக் குருக்களின் தங்கையுமாகிய மங்களம்மாவை மணம் புரிந்து இல்லறம் நடாத்திவந்தனர்.

அதன்பயனுகக் கலியப்தம் 4976க்குச் சரியான யுவ ஆண்டு மாசி மாதம் 7ஆம் நாள் (17-2-1875) அவருக்கு ஒரு ஆண்மகவு பிறந்தது. உரிய காலத்தில் அதற்கு வேண்டிய கருமங்கள் யாவற்றையும் செய்து அதற்கு முரு கப்பெருமானின் திருநாமங்களுள் ஒன்றுகிய சுப்பிரமணியன் என்னும் பெயரை யும் சூட்டினர்.

தக்க வயது நிரம்பிய பின் அவர் பெற்றேர் அவரைத் தாய்வழிப் பாட்டனுகிய மகாதேவக் குருக்களிடம் அழைத்துச் சென்று முறைப்படி ஏடு தொடக்கினர். அச்சிறுவர் அவரிடம் தமிழ், சம்ஸ்கிருதம் ஆகிய இரு மொழி களையும் கற்றுவந்தனர். மகாதேவக் குருக்களின் மூத்தமகனும், தம் தாய் மாமனும், ஆரிய திராவிட மகாபண்டிதருமாகிய பிரமஸ்ரீ. முத்துக்குமாரசாமிக் குருக்களிடம் சென்று தமிழிலக்கண இலக்கியம், வடமொழித் தருக்கம், வியா கரணம், சோதிடம் முதலியவற்றை ஐயந்திரிபறக் கற்றனர். இவ்வாறு கற் றுத் தேறியபின் ஈராண்டுகளாய் மேலைப்புலோலியிலுள்ள சைவ வித்தியாசாலை யில் ஆசிரியராய் அமர்ந்து கடமையாற்றினர். அவர் சிறுவயது தொடங்கியே சோதிட நூல் கற்பதில் மிகுந்த ஆர்வமுள்ளவராயிருந்தார். அதன் பயனுக, வடமொழியிலுள்ள சோதிட நூல்களாகிய சித்தாந்த சிரோமணி, சூரிய சித் தாந்தம் முதலியவற்றையும் தமிழிலுள்ள சோதிட நூல், கணித நூல் பல

வற்றையும் ஆராய்ந்து கற்றுச் சோதிடத்தில் மிகுந்த வல்லுநராகினர். தமிழிலக்கண இலக்கியம், சம்ஸ்கிருதம், சோதிடம் என்பவற்றில் அவருக்கிருந்த வன்மையையும் திறமையையும் கண்ணுற்றுப் பெரியோர் அவரைச் சாஸ்திரிகள் என அழைத்தனர்.

அக்காலத்தில் யாழ்ப்பாணத்தில் பஞ்சாங்கங்கள் பல கணிக்கப்பெற்று வழக்கிலிருந்து வந்தன. ஆனால் அவை யாவும் காலத்துக்கேற்றபடி சம்ஸ்காரம் செய்து கணிக்கப்படாமல் கிரமக்குறைவாக வெளிவந்தன. அப்பஞ்சாங்கங்களைப் பார்வையிட்ட சாஸ்திரியார் அவர்கள் அவற்றிலுள்ள குறைகளை ஒழிக்கவேண்டுமெனப் பேராவல் கொண்டார். அதன் காரணமாக, அவர் செய்த பெருமுயற்சியினால் ஐய ஆண்டு முதல் பருத்தித்துறையிலிருந்து வாக்கிய கணித பஞ்சாங்கமொன்று ஆண்டுதோறும் வெளிவந்தது. இப்பஞ்சாங்கம், யாழ்ப்பாணத்தில் வெளிவந்த ஏனைய பஞ்சாங்கங்களில் காணப்படாத சிறப்பியல்புகளையுடையதாய்ப் பஞ்சாங்க உலகில் முன்னணியில் நின்று விளங்கியது.

பஞ்சாங்கம் தொடங்கிய காலம் முதல் ஏவிளம்பி வருடம் மட்டும் அவர் பஞ்சாங்கம் பிற அச்சுக்கூடங்களிலேயே அச்சாகி வந்தது. இதனால் பஞ்சாங்கத்தின் விலையை அதிகம் உயர்த்தவேண்டி இருந்தது. அதுமட்டுமன்றி வேண்டிய நேரத்துக்கு அச்சிட்டு எடுத்துக் கொள்வதும் தொல்லையாக இருந்தது. இவற்றைக் கண்டதும் சாஸ்திரிகள் தம்முடைய மாமனாரோடு சேர்ந்து தும்பை நகரிலுள்ள தமது இல்லத்திற்றானே சோதிடவிலாசயந்திரசாலை என்னும் பெயரோடு ஓர் அச்சகத்தை நிறுவி ஏவிளம்பி ஆண்டு முதல் தமது பஞ்சாங்கத்தை அதிலேயே அச்சிட்டு வெளியிட்டனர்.

சாஸ்திரியாரவர்கள் பஞ்சாங்கம் கணிப்பதில் மட்டுமே தமது காலத்தைச் செலவிடவில்லை. ஏனெனில் அக்காலத்திலேயே சாதகரத்னாகரம், இருதுசாதகம், பாலசிக்ஷாமஞ்சரி, சம்ஸ்கிருத பிரதம பாலபாடம், சிவராத்திரி மகிமை முதலிய நூல்களைத் தமது அச்சகத்தில் பதித்து வெளியிட்டனர். பின்னர் குரோதி ஆண்டுத் தொடக்கத்தில் (1904) தமது அச்சகத்தைப் பெருப்பிக்க எண்ணி, தமது தம்பியாராகிய சோமசுந்தர ஐயரவர்களைச் சென்னைக்கு அனுப்பி அவர் மூலமாகத் தமிழ், சம்ஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளிலும் அழகான எழுத்துக்களையும், மற்றைய கருவிகளையும் அழைப்பித்தனர். பின் சோமசுந்தர ஐயரவர்களும் தாமுமாகக் கலாநிதியந்திரசாலை என்னும் பெயருடன் ஓர் அச்சகத்தை நிறுவி, அங்குத் தமது பஞ்சாங்கத்தை அழகுற அச்சிட்டனர்.

இஃது இங்ஙனமிருக்க, சைவப்பெரியார் பலர் சாஸ்திரியாரவர்களின் தமிழறிவையும் உரையெழுதும் வன்மையையும் அறிந்து, ஊர்களில் உள்ள கோயில்களில் ஆண்டுதோறும் படித்துப் பயன் சொல்லிவரும் கந்தபுராணத்துக்குப் பதவுரையும் விருத்தியுரையும் எழுதி வெளியிட்டால் சைவ உலகுக்கு மிகவும் பயன்படுமெனக் கூறி, அங்ஙனம் ஓர் உரை எழுதித்தருமாறு அவரை வேண்டினர். சாஸ்திரியாரவர்களும் அவர் வேண்டுகோளுக்கிணங்கிக் கந்தபுராணத்தின் முதற் காண்டமாகிய உற்பத்திகாண்டத்தைப் பகுதி பகுதியாக உரையெழுதி அச்சிட்டு நிறைவேற்றி, முழுவதும் முடிந்தவுடன் அவற்றைச் சேர்த்து ஒரு நூலாக்கி வெளியிட்டனர்.

இப்போதிருக்கும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தோடு மிகுந்த தொடர்பு பூண்டு தமிழ் மொழிக்கு அழியாப் பெருந் தொண்டாற்றிய புலவரும் புரவலருமாகிய திருவாளர் பாண்டித்துரைத்தேவர் அவர்களும், அக்காலத்தில்

சென்னை பிரெசிடென்சி கல்லூரியில் தமிழ்ப் பண்டிதராயிருந்து கடமையாற்றிய டாக்டர் உ. வே. சுவாமிநாதையர் அவர்களும் சாஸ்திரிகள் இயற்றிய உற்பத்திகாண்ட விருத்தியுரையைக் கண்ணுற்றுப் பதவுரையின் அமைப்பையும் விருத்தியுரையின் தெளிவையும் வியந்து, அடுத்த காண்டங்களையும் தொடர்ந்து எழுதி, அந்நூல் முழுவதுக்கும் உரைசெய்து தமிழுலகிற்கு உதவவேண்டுமெனச் சாஸ்திரியாரவர்களை ஊக்கப்படுத்தினர். அதனால் அவரும் அடுத்த காண்டங்களாகிய அசுரகாண்டத்திற்கும் மகேந்திரகாண்டத்திற்கும் உரையெழுதி, உற்பத்தி காண்டத்தைப்போல் பகுதி பகுதியாக வெளியிடாது முழு நூல்களாகவே நிறைவேற்றி வெளியிட்டனர். நான்காவதாகிய யுத்தகாண்டத்தின் முதற் பகுதியை அச்சிடத் தொடங்கும்போது முதலாம் ஐரோப்பிய மகாயுத்தம் இடையே குறுக்கிட்டது. அதனால் ஏற்பட்ட கடதாசிப் பஞ்சத்தின் காரணமாகத் தாம் எழுதி நிறைவேற்றிய பகுதியை மட்டும் வெளியிட்டு நூலுக்கு உரையெழுதுவதைச் சிறிது ஒத்திவைத்தார். கந்தபுராண உரையை எழுதி வெளியிட்ட காலங்களில் அவர் மாமனாராகிய பிரமஸ்ரீ. ம. முத்துக்குமாரசுவாமிக் குருக்களவர்களின் உதவியும் பிரமஸ்ரீ. சிவ-பஞ்சாட்சரக்குருக்களவர்களின் உதவியும் அவருக்கு இன்றியமையாதனவாயிருந்தன. இவ்வாறு வெளியிட்ட கந்தபுராணத்தின் மூன்று காண்டங்களும் சில காலத்தில் செலவாகிவிடவே அந் நூலின் இரண்டாம் பதிப்பும் விரைவில் வெளிவந்தது.

சாஸ்திரியார் அவர்களின் தமிழ்த்தொண்டு இவ்வளவோடு நிற்கவில்லை. அக்காலத்திலேயே அவர் பிள்ளையார் புராணத்துக்கும் ஓர் உரை எழுதி வெளியிட்டனர். அத்துடன் நீதிவெண்பா விரிவுரை, கந்தரனுபூதி உரை, ஏகாதசிப்புராணக் குறிப்பு முதலிய நூல்களையும் எழுதி அச்சிட்டுத் தமிழுலகினுக்கீந்தனர். அன்றியும், தமிழ் பயிலும் மாணவருக்குப் பயன்படும் பொருட்டுக் குறைந்த விலையில் சொற்பொருள் விளக்கமெனும் கையடக்கமான தமிழ் அகராதி ஒன்றனையும் ஆக்கி வெளியிட்டனர். விலையிற் குறைந்தது எனினும் பொருட் செறிவிற் சிறிதும் குறைந்ததன்று இந்நூல்: சங்ககாலம் முதல் இற்றைநாள் வரையும் தமிழ் மொழியில் எழுந்துலவும் நூல்களில் காணப்படும் தமிழ்ச் சொற்கள் பெரும்பாலும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. தமிழ் பயிலும் மாணவரும் ஏனையோரும் தமிழ் நூல்களைக் கற்றுத் தெரிந்துகொள்வதற்கு, இது மிகுந்த பயனைக் கொடுக்கக் கூடியது.

பல தமிழ் நூல்களுக்கு உரை இயற்றியமையோடும் புதியனவாக உரைநடை இலக்கியங்களை யாத்தமையோடும் அமையாது சாஸ்திரியார் அவர்கள் பலப்பல இடங்களுக்குச் சென்று ஆங்காங்குள்ள அவைகளிலும் கோயில்களிலும் விரிவுரைகள் நிகழ்த்தியும் வந்தனர், ஒரு பொருளைப் பற்றிப் பேசும்போது அவர் அழகாகச் சொற்களை அடுக்கிப் பொருட்செறிவுடன் பேசும் திறமைவாய்ந்தவர். அதுமட்டுமன்றி அவர் கற்றோருடனும் மற்றோருடனும் பொதுவாக உரையாடும்போதும் அவர் வாயினின்று செந்தமிழ்ச் சொற்களே வெளிவந்து கொண்டிருக்கும். கல்வியறிவற்ற பொதுமக்களுடன் சாஸ்திரியாரவர்கள் உரையாடும்பொழுது அதைக் கேட்டுக்கொண்டு நின்றால் மனத்துக்கு மிகுந்த ஆனந்தமாக இருக்கும். அவரின் தமிழ்ச் சொற்களின் ஒலிப்பும் காதுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும்.

இக்காலத்தில் தமிழ் கற்ற பெரியோர் பொதுமக்களுடன் உரையாடும்பொழுது அப் பொதுமக்கள் பேசும் கொடுந்தமிழ் மொழியிலேயே உரையாடுவர். தாம் கற்ற செந்தமிழ்க் கல்வியைக் கற்றோருடன் பேசும்போதும் அவைக்களத்தில் நின்று விரிவுரை நிகழ்த்தும் போதுமே பயன்படுத்துவர். ஆனால் சாஸ்திரியார் போன்ற பெரியோர்களோ "கற்க கசடற கற்பவை கற்ற

பின் நிற்க அதற்குத் தக'' என்னும் தமிழ்மறைமொழிக்கிணங்கத் தாம் கற்றறிந்தவற்றை வாழ்வில் எல்லாத்துறைகளிலும் பயன்படுத்துவர். யாழ்ப்பாணத்தில் அக்காலத்து வாழ்ந்த புலமைமிக்க சான்றோர்களாகிய நாவலர் பெருமான், சபாபதிநாவலர், குமாரசாமிப்புலவர் முதலிய பெரியோர்களும் அவ்வாறே தாம் கற்ற செந்தமிழ் 'மொழியை முறைதவறாது தமது வாழ்க்கையின் பகுதிகள் யாவற்றிலும் பயன்படுத்தினர் எனப் பெரியோர் கூறுவர். சாஸ்திரியாரவர்களும் அப் பெரியோர் போன்றே வாழ்ந்து வந்தனர். அவர் உயிருடன் இருந்த காலத்தில் அவர் வாழ்ந்த இல்லத்தின் முன்பு இருக்கும் திண்ணையருகாகச் செல்வோர் அவ்வழியாற்போகும் மக்களோடு அவர் பேசும் தமிழ் இன்சுவையைக்கேட்டு இன்புற்றனர். ஆனால், அந்தோ அத்தீஞ்சுவை இனிமேல் அங்கு எழாது என எண்ணும்போது எவரின் மனந்தான் உருகாது?

தமிழ் மொழியில் மட்டுமன்றி அவர் வடமொழியிலும் மிகுந்த வன்மை படைத்தவராய் விளங்கினர். தம்முடைய மாமனாகிய பிரமஸ்ரீ. முத்துக்குமார சுவாமிக் குருக்களிடம் வடமொழியைக் கற்ற நாள்தொடக்கம், அதன்மேல் பேரவாவுடையராய் அம்மொழியிலுள்ள நூல்கள் பலவற்றையும் துருவித் துருவி ஆராய்ந்தனர். சோதிட நூல்களில் மிக ஆர்வமுடையராய்ச் சித்தாந்த சிரோமணி, சூரியசித்தாந்தம் முதலிய நூல்களை முனைந்து கற்றதன் பயனாய், அவர் வடமொழியில் மிக்க புலமை சான்றவரானார். அதனோடமையாது வேதம் ஆகமம் முதலியவற்றிலும் மிகுந்த பாண்டித்தியம் எய்தினர். நாவலரவர்களின் முன்னோராகிய திருநெல்வேலி ஞானப்பிரகாச சுவாமிகளால் வடமொழியில் எழுதப்பெற்றுப் பல ஆண்டுகளாக ஏட்டு வடிவிலிருந்த சைவ சித்தாந்த நூல்களாகிய பிரமாண தீபிகா விருத்தி, சிவஞானபோத விருத்தி, சித்தாந்த சிகாமணி என்பனவற்றை நல்லூர் த. கைலாசபிள்ளையவர்கள் அச்சிடுவதற்காகப் பிரமஸ்ரீ. ம. முத்துக்குமாரசுவாமிக் குருக்களைக் கொண்டு பிழையறப் பரிசோதித்தபொழுது சாஸ்திரியாரவர்களும் அவருடன் கூட இருந்து உதவி செய்தனர். சங்கானை அருணாசல சாஸ்திரியாரவர்கள் (அண்ணாசாமிக் குருக்கள்) ''ஆபஸ்தம்ப அபரப்பிரயோகம்'' என்னும் வடமொழி நூலை அச்சிடுகையில் அதற்குப் பல திருத்தங்கள் செய்து சாஸ்திரியார் அவர்கள் அவருக்குத் துணைபுரிந்தாரென்பதை அவர் அந்நூலிற்கெழுதிய முகவுரையிற் காணலாம்.

சதுர்வேதங்களும் பிரதான ஆகமங்களும் தமது கைவசமிருக்கவேண்டுமென்று விரும்பிப் பெரும் பொருள் கொடுத்து அவற்றை வாங்கினர். அந்நூல்களைத் தாம் கற்றதோடமையாது அந் நூல்களைக் கற்கும் தகுதியுடையோர் யாவரும் அவற்றைக் கற்றுப் பெரும்பயன் அடைதல் வேண்டுமென்னும் பெருநோக்குடன் ''வித்தியா விருத்தித் தருமாலயம்'' என்னும் பெயருடன் ஒரு நூல் நிலையத்தைத் தாமிருக்கும் வீட்டிலேயே வைத்து அதனைத் தருமசாசனஞ் செய்தனர்.

சாஸ்திரியாரவர்கள் தம்முடைய மாமனார் பிரமஸ்ரீ. ம. முத்துக்குமார சுவாமிக் குருக்கள் அவர்களின் மகளை மணமுடித்தனர். அதனால் அவருக்கு ஓர் ஆண்மகவு பிறந்தது. ஆனால் அது பிறந்த அன்றே இறந்துவிட்டது. அதனால் மனம் மிக வருந்தியிருந்தனர். பின்னர் அவருடைய தம்பியாராகிய சோமசுந்தர ஐயரவர்களின் புதல்வர் வைத்தியநாத ஐயர் என்பவரைச் சிறுவயது தொடக்கமே அன்புடன் போற்றி வளர்த்து, தமிழ் சம்ஸ்கிருதம் என்னும் இரு மொழிகளையும் கற்பித்துக் கொடுத்தனர். வைத்தியநாத ஐயர் ஆங்கிலத்தையும் பயின்று உயர்தரவகுப்பிற் சித்தியெய்தினர். அதைக் கண்டு சாஸ்திரியாரவர்கள் மனமகிழ்ந்து சோதிடத்தையும் கணித நூலையும் பயிற்றி வந்தார்.

சில ஆண்டுகளில் வைத்தியநாத ஐயரவர்கள் தாமாகவே பஞ்சாங்கத்தைக் கணிக்கவும் முகூர்த்த நிர்ணயஞ் செய்யவும் வல்லுநரானார்.

அதனை அறிந்து சாஸ்திரியாரவர்கள் பிரபவ ஆண்டு முதல் (1927) பஞ்சாங்கம் அச்சிட்டு வெளிப்படுத்த அவருக்கு உத்தரவு கொடுத்தனர். இதுகாறும் சாஸ்திரியாரவர்களின் பெயர் பொறிக்கப்பட்டு வெளிவந்த பஞ்சாங்கம் பிரமஸ்ரீ. சோ. வைத்தியநாதசாஸ்திரிகளின் பெயர் கொண்டு வெளிவந்துலவியது.

தாம் கணித்த காலத்திற் போலவே பஞ்சாங்கம் முறையாக நடந்து வருவதைக் கண்டு மகிழ்ந்து வைத்தியநாத சாஸ்திரிகள் அவர்களின் மேல் பஞ்சாங்கப்பாரம் முழுவதையும் ஒப்படைத்துவிட்டுத் தாம் பல நூலாராய்ச்சிகளிற் காலங் கழித்தனர்.

இவ்வாறு சாஸ்திரியாரவர்கள் மனமகிழ்ந்திருக்குங்கால் பிரபவ ஆண்டிலே (1927) அவரது மனைவியார் சிவபதமடைந்தனர். அதன்பின் அவர் வித்தியாகுருவும் மாமனாருமாகிய பிரமஸ்ரீ. ம. முத்துக்குமாரசுவாமிக் குருக்களவர்கள் யுவஆண்டு (1935) மாசிமாதம் ஏகாதசி புண்ணியகாலத்தில் இறைவன் திருவடி நீழலையடைந்தனர். இதனாலும் சாஸ்திரியாரவர்கள் மிக மனம்வருந்தினார். இது நிகழ்ந்தபொழுது மிகவும் வருத்தமுற்றுத் தம்முடைய தந்தையார் சரியாய் அறுபதாம் வயதில் இந்நிலவுலகவாழ்வை நீத்தனரென்றும் தமக்கு அறுபதாம் ஆண்டு நிறைவேறுங்காலம் தமக்கும் கண்டகாலமாகுமோவென்றும் சொல்லிக்கொண்டிருந்த அவருக்குத் தாம் பிறந்த ஆண்டும் மாதமுமாகிய காலத்தில் மாமனார் இறந்ததுகண்டு தமது கண்டகாலத்தின் பலனே அவர் பிரிவு என்று துயருற்றுக் கூறியுள்ளார்.

அவரது கவலை இத்துடன் நின்றுவிடவில்லை. மாமனார் பிரிந்த ஆறும் மாதத்தில் (1936 ஆவணி) அவருக்கு ஆறுதலளித்துப் பஞ்சாங்க கணிதத்தை நடாத்தி வந்து அவர் உயிர்போலவிருந்த வைத்தியநாத சாஸ்திரிகள் இவ்வுலக வாழ்விற் பற்றில்லாதவராய்ச் சிலகாலம் நடந்து தம்மை இனிமேல் ஒருவரும் காணமுடியாவகை மறைந்து விடுவேனென்று சிலருக்குச் சொல்லியபடி இந்நாட்டை விட்டு வெளியேறினர். சாஸ்திரியார் அவரைத் தேட எவ்வளவோ முயன்றும் பயன் கிடைக்கவில்லை.

வைத்தியநாத சாஸ்திரிகள் போவதற்கு முன்னரே அடுத்த ஆண்டுப் பஞ்சாங்கம் பெரும்பாலும் நிறைவேறிவிட்டது. அதனால் பஞ்சாங்கம் இடையில் நிறுத்தப்படாது வழக்கம் போல் வெளிவந்தது.

தம்மகனாரைப் பிரிந்த கவலைமாறாத நிலையிலிருந்தும் அதுவரை நடந்து வந்த பஞ்சாங்கத்தை இடையிலே நின்றுவிடாது நடத்தவேண்டுமென்ற ஊக்கத்தைத் தளரவிடாது சாஸ்திரியாரவர்கள் தம்பியார் சோமசுந்தர ஐயரவர்களின் உதவியுடன் பின்னரும் அதனை நடாத்திவந்தார்.

சில ஆண்டுகளுக்குமுன் மிகக் கடுமையான நோயொன்று அவரைத் தாக்கியது. ஆனால் ஒருவாறு குணமடைந்தார். இஃது இங்ஙனமிருக்க அவர் தம்பியார் சோமசுந்தர ஐயரின் மனைவி சிலகாலமாய் நோய்வாய்ப்பட்டிருந்து இறந்தனர்: அதனால் சோமசுந்தர ஐயர் பஞ்சாங்க கணிதத்தில் ஊக்கமெடுக்காது விட்டனர். இக்காரணங்களால் ஈற்றில் பஞ்சாங்கம் கணிக்கப்படாது நின்றுவிட்டது.

சாஸ்திரியாரவர்கள் சென்ற விரோதி ஆண்டு மார்கழித் திங்கள் திருவாதிரை நாளாகிய அபிடேக தினத்தன்று பூரணைத்திதியில் சிவபதம் எய்தினர்.

ஆசை, அச்சம், அகந்தையைப் போக்கிச் சினத்தை வீழ்த்திப் பொறையுடைமை போற்றி ஒழுகிய பெருந்தகை நம் சாஸ்திரியாரவர்கள்.

''ஈசன் திருவடி நீழலில் அவர் ஆன்மா இன்புற்றிருப்பதாக.''

யாழ்ப்பாணம் புலோலி கிழக்கு

**மஹாவித்வான் ஸ்ரீமத். வ. குமாரசுவாமிப்புலவர் அவர்களின்**

**அருந்தவப் புதல்வரும்**

நெல்லியடி அரசினர் கலாசாலை அதிபரும் ஆகிய

**டாக்டர். திரு. சிவப்பிரகாசம் M. Sc., Ph. D., Dip., Ed.**

அவர்கள் எழுதி உதவியது.

ஏறக்குறைய ஐம்பது வருடங்களுக்கு முன்னே வடமராட்சிப் பகுதி, ஓர் புலவர் மன்றமாயிருந்தது. உடுப்பிட்டி அ. சிவசம்புப்புலவர், புலோலி ம. முத்துக்குமாரசுவாமிக் குருக்கள் அவர்கள், நரசிங்க சாஸ்திரிகள், நா. கதிரைவேற்பிள்ளையவர்கள் எனது தந்தையார் ஆகியோர் அக்காலத்திலேதான் வாழ்ந்து வந்தனர். அக்காலத்தைத் தமிழ் இலக்கிய வரலாற்றிலே ஒரு பசுமை பெற்ற இனிய காலமென்று கூறலாம். நந்தமிழர் சீவனோபாயம், பதவி, பட்டம் என்னும் ஆசைகளாற் பிடித்துந்தப்பட்டுச் சரணுகதி அடைந்த காலம் அல்ல அது; தமிழ்த் தேனிற்கண்ட இன்பமொன்றே புலவர்களை ஆட்கொண்டிருந்த காலம்; பூக்களை நாடும் வண்டுகள் போலக் கற்ருர் உள்ள இடமெல்லாம் சென்று சென்று தமிழ்மது மாந்திய காலம். தமிழ் அன்பர்கள் பலமைல் தூரம் நடக்கும் வருத்தம், வாழ்வில் ஏற்படும் இன்னல்கள் ஆகிய இவற்றை மறந்து கற்ருர் முற்றங்களிற் சென்று கூடித் தமிழ் அமுதம் பகிர்ந்துண்டனர். நான் சிறுவனுயிருந்த காலத்திலே எங்கள் வீட்டு முன் திண்ணையிலே இப்படியாகப் பெரும் புலவர்கள் கூடிக் கலப்பதைக் கண்டிருக்கிறேன். ஒருவரை ஒருவர் எதிர்த்து வாதிப்பினும் அவர்கட்கிடையில் இருந்த நண்பும் பெருமதிப்பும் வளர்ந்து கொண்டே வந்தது.

> "இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
> நகலின் இனிதாயிற் காண்பாம்......
> அகல்வானத்தும்பர் உறைவார் பதி." என்ருங்கு

அவர்கள் தமிழ்க்கலை விருந்தின்பத்தால் மண்ணுட்டையே விண்ணுடாக்கினர். அத்தகைய தமிழ்ப் பெரியார் குழுவிலே,

## பிரமஸ்ரீ. சுப்பிரமணிய சாஸ்திரிகளும் ஒருவர்.

இவர் எழுதிய கந்தபுராண உரையினைக் கற்கும்போது அவர் படித்த நூல்களின் பரப்பு எத்தகையதென்று வியப்புறக்கூடியதாய் இருக்கிறது. சொற்பொருள்களை விளக்குதற்கு இவர் காட்டும் மேற்கோள்களும் இலக்கண முடிபுகளும் மிக அற்புதமானவை: அவருடைய அறிவின் ஆழத்தை எடுத்துக்காட்டுபவை. ஆங்காங்கே பல நூல்களின் கருத்தையும் இடையிடையே அவர் பொருத்தமான இடங்களில் எடுத்துக்காட்டுவது அவர் அறிவுச் செல்வத்தின் நிறைவையே எடுத்துக்காட்டுகிறது. அவரது வடமொழிப் புலமை மிகச் சிறந்தது. பல்லாண்டுகளாகப் பண்டித பரீட்சைகளுக்குப் பரிசோதகராய் விளங்கினர் என்பது மாத்திரம் அவர் அறிவின் ஆழத்தைக் குறிக்கப்போதாது. அன்றி, வேதம் ஆகமம் பாணினி சூத்திரம் சித்தாந்த கௌமுதி இவற்றை எழுத்தெழுத்தாய் நாநுனியில் வைத்திருப்பவர் என்ருலும் போதாது. சில

காலம் தன் மாமனாராகிய முத்துக்குமாரசுவாமிக் குருக்களுடன் சிறிது வேறுபாடடைந்து பிரிந்திருந்த காலத்தே, அவர் பார்த்து அதிசயிக்குமாறு இயற்றிய சம்ஸ்கிருத சுலோகங்களின் செறிவும் இனிமையும் பொருளாளமுமே அவர் வடமொழிப் புலமையைச் சொல்லும் வாய்களாக அமைந்திருக்கின்றன.

''செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க்கபிலன்'' என்று

தமிழிலேயே புகழப்பட்ட கபிலருடைய கவிதைப் போக்கைப்போல வடமொழியிலே இவரது போக்கு அமைந்திருந்தது.

பெரும் புலவர்களாயிருப்பினும் பலர் சாதாரண வேளைகளிலே பிழையற்ற சுத்தமான தமிழிற் பேசுவதில்லை. இவர் நாவோ துயிலினும், நடப்பினும், கிடப்பினும் சுத்தமான இனிய தமிழையேயன்றி வேறொன்றும் அறியாது. இவரைச் சாதாரண மக்களுடைய பேச்சுத் தமிழிலே சம்பாஷிக்கச் செய்வது முடியாத காரியம், இவர் பேசுவதெல்லாம் அப்படியே அச்சகத்திற் பதிக்கற்பாலன.

சொற்பொருள் விளக்க அகராதியென்னும் ஒரு அரிய நூலை அக்காலத்திலே செய்தார். தமிழ் அகராதிகள் வளர்ந்த அடிச்சுவட்டிலே அவருடைய நூலும் ஒரு நல்ல ஸ்தானத்தை வகிக்கின்றது. சிறுவர்கள் இலகுவிற் பயிலுமாறு நீதிவெண்பா, மூதுரை, நல்வழி போன்ற சிறு நூல்களுக்கும் உரை செய்தார். இன்னும் பல அரிய நூல்களைப் பதிப்பித்தவர்.

இவர் காலத்திலே அநேக இலக்கியப் போர்கள் நடந்தன. அதிலெல்லாம் ஏதாவது ஒரு கட்சியின் சேனாதிபதியாயிருந்து தாமெடுத்த காரியத்தை மிக உறுதியுடன் நிலை நிறுத்தும் கல்வி வன்மையும் எழுத்துவன்மையும் மிக்கவராயிருந்தார். அதனால் எதிரிகளிடமிருந்தும் கற்றோரிடமிருந்தும் நன்மதிப்புப் பெற்றிருந்தார். இலங்கையிலே கணிக்கப்பட்ட பிரசித்தி பெற்ற இரு பஞ்சாங்கங்களில் ஒன்று நின்று போனமைக்கு இவர் மறைவே காரணமாயின் இவர் சோதிடத்தில் எத்தகைய வல்லுநரென்பது சொல்லாமலே விளங்கும். விரதம் அநுஷ்டிப்பு சோதிட கணிதபேதம் என்னுமிவற்றிற் கற்றோரிடத்துக் கலகம் விளைந்த காலத்தும் இருவர் தம்முட் கொள்கை வித்தியாசத்தால் முரண்பட்ட காலத்தும் அவற்றைத் தீர்க்கும் நீதிமன்றமாகவும் இவர் விளங்கினார்.

துறைபோய கல்வியுடன் தவறா ஒழுக்கநெறியும் பத்தியும் ஒருங்குசேரும்போது அதற்கு ஒரு தனி மதிப்பு ஏற்படுகின்றது. அவ்வாறு தனிமதிப்பெய்தியவர்களில் இவரும் ஒருவர். அந்தணருக்குரிய வேதம் ஓதுதலை இடையறாது கைக்கொண்டது மாத்திரமன்றி, தாம் கற்ற நூல்களிற் கூறியாங்கு ஒழுகியும் வந்தார். உரிய காலங்களில் தம் நியமங்களை நிறைவேற்றியன்றி வேறு எக்கருமமும் செய்யார். தாம் மிக வயோதிபமடைந்து தளர்ந்து கண் பார்வை குன்றிய காலத்திலே தாம் ஓதவேண்டிய சில நூல்களை ஓதமுடியாதிருப்பதையெண்ணிப் பெரிதும் கவன்றார். தம்முடைய மாமனார் முதலியோர் இறக்குந்தறுவாயிற் சொல்லவேண்டிய பல தோத்திரங்களையும் மறவாது சொல்லியதுபோலத் தானும் சொல்லுதற்கு நல்லறிவு வருமோ என்று பலமுறையும் ஏங்கினார். அவ்வாறு துதித்து இறப்பதற்கு வரந்தருமாறு இறைவனைப் பலமுறையும் வழுத்தினார்.

கல்விக்கருவூலமாயும், ஒழுக்கச் செல்வனாயும், வைதிகமார்க்க நெறிக்கு வரம்பாயும் சுடர்விட்ட இவர் பூவுலகை விட்டு மறையினும் பொன்னுலகிருந்து இவர் ஆவி தாம் நடாத்திய நிலையம் முன்னிருந்தவாறே வளர்வதைக் கண்டு சாந்தி அடைவாராகுக!

திருச்சிற்றம்பலம்.

# புராணபடன விதி.

எல்லாரும் கேட்டு உய்யும் பொருட்டுத் திருக்கோயில்களிலே யோக்கியர்களைக் கொண்டு புராணங்களை வாசித்துப் பொருள் சொல்லுவித்தல் மிக மேலாகிய புண்ணியமாகும்.

1. குளித்துத் தோய்த்துலர்ந்த ஆடை அணிந்து அநுட்டானம் முடித்துக் கொண்டே புராணம் படித்தல், பொருள் சொல்லல், கேட்டல் என்னும் இவைகளைச் செய்தல் வேண்டும்.

2. புராணபடனம் தொடங்கும் தினத்திலும் முடிக்கும் தினத்திலும் புராணம் படிக்கும் மண்டபத்தைப் பட்டு மேற்கட்டி, பூமாலை, வாழை, கரும்பு முதலியவைகளினால் அலங்கரித்தல் வேண்டும்.

3. புராணபடனத்தைச் சுபதினத்திலே தொடங்கிச் சுபதினத்திலே முடித்தல் வேண்டும்.

4. நாள்தோறும் புராண மண்டபத்தைக் கோமயத்தினால் மெழுகியும், கருங்கல் சீமெந்துத் தரையாயின் கழுவியும் இடம் பண்ணி, அதன்மீது பீடத்தை வைத்துப் பீடத்தின் மேலே பட்டுப் பரிவட்டம் விரித்து, அதன் மேலே திருமுறையை வைத்துச் சந்தனம் மலர் தூபம், தீபம் முதலியவற்றினாலே விதிப்படி பூசைசெய்து வணங்குதல் வேண்டும்.

5. புராணத் திருமுறையினைப் படிக்கும் காலத்திற்கும் எடுத்துக்கொண்ட பொருளினது குணத்திற்கும் ஏற்ற இராகத்தில் ஒருவர் தெளிவாக வாசிக்க அதே இராகத்தில் ஒருவர் பொருள் சொல்லுதல் வேண்டும்.

6. படிக்கத் தொடங்கும் போதும் முடிக்கும் போதும் காப்புச் சொல்லுதல் வேண்டும்.

7. காப்புக்கு முன்னும் பின்னும் திருச்சிற்றம்பலம் என்று உச்சரித்தல் வேண்டும். காப்புச் சொல்லும் பொழுது யாவரும் கும்பிட்டுக்கொண்டிருத்தல் வேண்டும்.

8. புராணம் கேட்போர் புராணத் திருமுறையை வணங்கிப் புராணம் படித்துப் பொருள் சொல்வோருக்கு ஆசனம் கொடுத்து நமஸ்காரம் செய்து சுற்றமித்திரர்களோடிருந்து சிரத்தையுடன் கேட்டல் வேண்டும்.

9. புராணம் கேட்பவர் ஆதி தொடங்கி ஈறுவரையும் தவறாமல் நியமத்தோடு கேட்டல் வேண்டும். புராணம் முற்றுப்பெற்ற தினத்திலே புராணத் திருமுறைக்கு விசேட பூசை செய்வித்துச் சிவனடியார்களுக்கு அன்னங் கொடுத்து உபசரித்தல் வேண்டும்.

10. புராணம் படிக்கும் சபையிலே உயர்ந்த ஆசனத்திருத்தல் கால் நீட்டிக் கொண்டிருத்தல், சயனித்தல், சிரித்தல், வீண் வார்த்தை பேசுதல், வெற்றிலை பாக்குண்ணுதல், சட்டை அணிந்து கொள்ளுதல், இடையில் எழுந்து போதல் முதலியன செய்யத்தகாத குற்றங்களாம்.

திருச்சிற்றம்பலம்.

# பொருளடக்கம்

## கந்தபுராணம் — உற்பத்திகாண்டம்.



## உற்பத்திகாண்டம்

உ

சிவமயம்

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# கந்தபுராணம்

## மூலமும் உரையும்

### 1. பாயிரம்

#### காப்பு

**விநாயகக்கடவுள்**

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

**இதன் பொருள் :** திகழ் தச கர செம் முகம் ஐந்து உளான் — விளங்காநின்ற பத்துத்திருக்கரங்களும் செப்பமாகிய ஐந்து திருமுகங்களுமுள்ளவராகிய சிவபெருமானது, சகட — தேருக்கு, சக்கர — உருளாய் நின்ற, தாமரை நாயகன் — தாமரைக்குத் தலைவனாகிய சூரியன், அகட — வயிற்றின்கண்ணே, சக்கர வில் மணி ஆ உறை — வட்டித்த ஒளிபொருந்திய இரத்தினமாக இருக்கப்பெற்ற, விகடசக்கரன் — விகடசக்கர விநாயகரது, மெய் பதம் போற்றுவாம் — மெய்மையாகிய திருவடிகளை (இந்நூலினிதுமுடிதற்பொருட்டு) யாம் துதிப்பாம் என்றவாறு.

திகழ் தசக்கரம் திகடசக்கரமெனப் புணர்ந்தமைக்குவிதி வீரசோழியத்துச் சந்திபடலத்திற் பதினைந்தாஞ் செய்யுள் ''பதினைந்திறுடெண்ணிரண்டாய்த், தோன்று முடற்பின் றகாரம் வரினிரண்டும்மொருகா, லான்றவைந் தாமுடலாம்'' என்பதாம்.

**பத்துக்கைகளாவன:** வலப்பக்கத்தில் சூலம், மழு, வாள், வச்சிரம், அக்கினி என்பனவமைந்த ஐந்தும் இடப்பக்கத்தில் அபயம், பாசம், மணி, சர்ப்பம், அங்குசம் என்பனவமைந்த ஐந்துமாமென்க. பிறவாறுங் கூறுப; ஈண்டு விரிவஞ்சி விடுக்கப்பட்டது.

ஐந்துமுகங்களாவன: ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தி யோசாதம் என்பனவாம். அவை தாமிருக்கும் இடவகுப்பால் முறையே நடுமுகம், கிழக்குமுகம், தெற்குமுகம், வடக்குமுகம், மேற்குமுகம் எனவும் வழங்கத் தக்கன. ஈசானமுகம் பளிங்கு நிறமும், தற்புருடமுகம் பொன் நிறமும், வாம தேவமுகம் சிவப்பு நிறமும், அகோரமுகம் கருநிறமும், சத்தியோசாதமுகம் வெண்ணிறமும் உடையன.

உளான் குறிப்புவினையாலணையும் பெயர். அகடவென்பதிலகரம் சாரியை. ஆகவென்னும் வினையெச்சம் ஈற்றுயிர் மெய்குறைந்து நின்றது. 'தாமரைநாயகன்... உறை விகடசக்கரன்' என இயைக்க. விகடசக்கரன் வடநூன்முடிபு, விகடக்கூத் திற்குவந்து; சக்கரத்தைக் கொடுத்தவர் என்பது பொருள். தக்கன் யாகம் அழிந்தபோது விஷ்ணு விடுத்த சக்கரத்தை வீரபத்திரக் கடவுள் பூண்ட வெண் டலையொன்று கௌவியது. விஷ்ணுமூர்த்தியின் பொருட்டு அச்சக்கரத்தைப் பெற விரும்பிய அவரது சேனுபதியாகிய விடுவசேனன், கால்களிரண்டையும் கைகளிரண் டையும் வளைத்து, வாயையும் நாசியையுங் கண்களையுஞ்சுரித்தசைத்துப் பற்க டோன்ற விகடக்கூத்தாடினுன். அதனைக் கண்டோரெல்லோரும் நகைக்க, வெண் டலையும் நகைத்தது. நகைத்தலும் சக்கரம் அதன் வாயினின்றும் பூமியில் விழ, விநாயகக் கடவுள் அதனை விரைந்து கவர்ந்து ஒன்றுமறியாதார்போன்றிருந்தனர். அதுகண்ட விடுவசேனன் அவர் முன்னும் விகடக்கூத்தாடி வேண்ட விநாயகக் கடவுள் சக்கரத்தை அவன் கையிற்கொடுத்தருளினுர். இதனை

> ஏக்கறவானவனியற்றும் விகடநட நெடும்போதெம் பெருமானேக்கி
> மாக்கருணை சுரந்தருளி யாழியவன்றனக் களித்தான் வரத்தான்மிக்கீர்
> போக்கறுமிக் காரணத்தானன்று முதற்காஞ்சியினைப் புழைக்கைத்தேவை
> யூக்கமுறுந்திறல் விகடசக்கர விநாயகனென் றுலகங்கூறும்.

எனக் காஞ்சிப்புராணங்கூறுதலானுமறிக. இவர்க்கு விகடர் என்னும் பெயர் வழங்குவதிக் காரணத்தானன்று, பேரழகுடையராதல் பற்றியென்க. விகடக் கூத்தென்பதிக்காலத்திற் கோணங்கிக் கூத்தென வழங்குகின்றது.

யாமென்னுந் தோன்றுவெழுவாய் அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. போற்றுவாமென்பது படிப்போர் கேட்போர் முதலியோரையு முளப்படுத்திய பன்மை. ஒருமையீறே விகாரப்பட்டதென்பர் சிலர்.

சூல முதலியவமைந்து சிறந்தமையால் 'திகடசக்கரம்' எனவும், பதிபசுபாச விலக்கணங்களைத் தெருட்டி முத்திநெறியைக் காட்டு நூல்களாகிய வேதாகமங்கள் தோன்றுதற்கிடமாதலால் 'செம்முகம்' எனவும், உதயமாத்திரையானே புறத்தாம ரைகளையும் சிவபெருமானது நேத்திரங்களிலொன்ருகிநின்று அவரது கடைக்க ணேக்க மாத்திரையானே அன்பர்களது அகத்தாமரைகளையுமலர்த்துதலால் சூரி யனை 'தாமரைநாயகன்' எனவும், அச்சூரியன் தந்தையாகிய சிவபெருமானுக்குத் திரிபுரதகனஞ் செய்த காலத்தில் தேர்க்குருளாயது போலவே மைந்தராகிய விநா யகக் கடவுளுக்குப் பரமேச்சுரரூபங்கொண்ட காலத்தில் வயிற்றிற்கணியாயிற்றென் பது தோன்ற ''செம்முகமைந்துளான் சகடசக்கரத்தாமரை நாயகன் ......மணியா வுறை விகடசக்கரன்'' எனவும், விகடக்கூத்தையுவந்து நோக்கிச் சக்கரமீந்தது போல, நம்புன் கவியையு முவந்து கேட்டுக் கருணை செய்வர் என்பது போதர 'விகட சக்கரன் பதம் போற்றுவாம்' எனவும், இகபர சாதனங்களாய போகமோக்ஷங் களை வழிபடுவோர்க்குப் பயப்பனவாதலின், 'மெய்ப்பதம்' எனவும் விசேடித்தார். விநாயகப் பெருமானது பாரமேச்சுர ரூபத்தை, இக்காப்பியஞ் சொற்குற்றம்

பொருட்குற்ற முதலியவற்றுலிழுக்குருதினிது நிறைவேறுமாறு நூலாசிரியர் துதித்து வேண்டினரென்பதிச் செய்யுளின்ருற்பரியம்.

சூரியன் இரத்தினமாயிருக்கப் பெற்றுனெனவே சந்திரன் முதலிய கிரகங் களும் பிறவும் ஏற்றவாறு இருக்கப்பெறுதலும் அமையும்.

தாரகாக்ஷன் கமலாக்ஷன் வித்தியுன்மாலியென்னும் மூன்றசுரர்களும் பிரமதே வரைநோக்கி எண்ணிறந்த காலந் தவம்புரிந்து, பொன் வெள்ளி இரும்பு என்னு மூன்று லோகங்களாற் பூமிமுதலிய மூவுலகங்களிலும் முப்புரமமைக்கவேண்டுமென வும் அவை ஆயிரம் வருடங்கட்கொருமுறை விரும்பிய இடங்கட்குப் பெயரவேண்டு மெனவும் அவை மூன்றுங் கூடியவழிச் சிவபெருமான் ஒரு கணையா லழித்தா லன்றிப பிறவாற்றுலழியாதிருக்க வேண்டுமெனவும் வரம்பெற்று, அசுரத்தச்சனுல் அவ்வாறு முப்புரங்களையும் இயற்றுவித்து அவற்றில் வாழ்ந்திருந்தனர். அவர்கள் சிவபூசை செய்பவர்களாயினும், தங்குலவியற்கை தவருது தேவர்களோடு பகைத்துத் தங்கள் புரங்களோடுஞ் சென்று வைகுண்ட முதலிய லோகங்களைச் சிதைத்தனர். அவர்செய்யுந் தீங்கையாற்றுது தேவர்களும் விஷ்ணுமூர்த்தியும் மேருமலையின் வடபாகத்துச் சென்று சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்ய, சிவபெருமானெ ழுந்தருளி, ''நமதடியரராய அசுரரைச் செகுத்தல் ஆகாது'' என்று கூறிப்போயி னர். பின்னர் விஷ்ணு புத்தவடிவுகொண்டு சென்று, அவ்வசுரர்க்குள் மூவர்தவிர ஏனையோரையெல்லாம் துர்ப்போதனையால் வசப்படுத்தி மீட்டும் மேருமலையிற் போய்த் தவம் செய்தனர். அஃதறிந்த சிவபெருமான் திரிபுரத்தசுரரைச் செயித் தற்குவேண்டிய தேர்முதலிய கருவிகளை நிரைப்படுத்துமாறு அறிவித்தனர். அச் சமயத்தில் தேவர்கள், சந்திரசூரியர்களை உருளைகளாகவும் பதினுன்குலகங்களையுந் தட்டுக்களாகவும் ஆகாயத்தை ஆசனமாகவும், உதயாஸ்தமன கிரிகளைக் கொடிஞ்சி யாகவும் நக்ஷத்திரங்களை விதானமாகவும் பிறவற்றையும் வேண்டிய அங்கங்களாக வும் கொண்ட திவ்வியமான ஒரு மகாரதத்தை நிருமித்தனர். அந்த ரதத்தையே ஈண்டு சகடமெனச் சுட்டினர்.

விநாயகக் கடவுள் முன்னெருகாலத்திலே இந்திரனெருவன் கொண்ட கர் வத்தை நீக்குமாறு ஒரு பரமேச்சுர ரூபத்தைக்கொண்டனர். அப்பொழுதே சூரியன் அவரது வயிற்றில் ஓர் இரத்தினம்போலக் காணப்பட்டனனென்க.

## வேறு

உச்சியின் மகுட மின்ன வொளிர்தர நுதலி னேடை
வச்சிர மருப்பி னெற்றை மணிகொள் கிம்புரி வயங்க
மெய்ச்செவிக் கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்ர கணபதிக் கன்பு செய்வாம்.

இ—ள்: உச்சியில் மகுடம் மின்ன—சிரசிற் கிரீடம் ஒளிவீசவும், நுதலின் ஓடை, ஒளிர்தர—நெற்றியிற் பட்டம் பிரகாசிக்கவும், வச்சிர மருப்பினெற்றை மணி கொள் கிம்புரி வயங்க—வைரித்த ஒற்றைக்கொம்பில் இரத்தினமழுத்தப் பெற்ற கிம்புரி விளங்கவும், மெய் செவி கவரி தூங்க—உண்மை பொருந்திய காதுகளாகிய சாமரங்கள் தூங்கவும், மா வேழ முகம் கொண்டு கச்சியின் உற்ற — பெருமை பொருந்திய யானைமுகத்தைக் கொண்டுகாஞ்சீபுரத்தி லெழுந் தருளிய, விகடசக்ர கணபதிக்கு அன்பு செய்வாம்—விகடசக்கர விநாயகரிடத்து யாம் அன்பு வைப் பாம். எ—று.

உபலக்கணத்தாற்றுதித்தன் முதலியவற்றையும் அமைத்துக்கொள்க. இவ்வாறே பின்வருஞ் செய்யுட்களினும் வேண்டியவற்றை அமைத்துக்கொள்க. கிம்புரி—கொம்பிலணியப்படும் பூண். செவிக்கவரி—ரூபகம், மா-மஹா என்னும் வட சொல்லின்றிரிபு. 'சக்ர' என்பது இகரம் பெறுது வடசொன்னீர்மையாக நின்றது. கணபதி—கணங்களுக்குத் தலைவர், அன்பின் வயத்தராய தொண்டர் மனம்பரிந்து கூறுந் துதிகளைக் கேட்டலின் 'மெய்ச்செவி' எனவும், மென்மைபடைத்தனவும் இருமருங்கும் வீசுவனவுமாதலின் 'செவிக்கவரி' எனவும், பேரழகுடைமையும் பிரணவரூபமாயிருப்பதும் பிறவும்போதர 'மாமுகம்' எனவும், திருவேகம்பத்திலுள்ள திருக்கோயிலிலெழுந்தருளிய மூர்த்தியென்பது போதர 'கச்சியின் உற்றகணபதி' எனவும் கூறினர். செவிக்கவரி யென்றதற்குச் செவியிற் கவரியெனப் பொருள் கூறுவாருமுளர். (உ)

### சுப்பிரமணியக் கடவுள்

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற இராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

இ—ள்: காஞ்சி மா அடி வைகும் செவ்வேள்—காஞ்சி நகரத்திலுள்ள மாமரத்தினீழலிலெழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளினுடைய, மூவிரு முகங்கள் போற்றி—ஆறுதிருவதனங்களும் (எம்மால்) துதிக்கப்படுவன; முகம் பொழி கருணை போற்றி—அந்தத்திருவதனங்கள் பொழிகின்ற கிருபைவெள்ளமுந் துதிக்கப்படுவது; ஏவரும் துதிக்க நின்ற இராறு தோள் போற்றி—அனைவருந் துதிக்கும்படி நிலைபெற்ற பன்னிரண்டு திருக்கரங்களுந் துதிக்கப்படுவன; மலர் அடி போற்றி—செந்தாமரை மலர் போன்ற பாதங்களும் துதிக்கப்படுவன; அன்னான் சேவலும் மயிலும் போற்றி—அந்தக்கடவுளினுடைய சேவற்கொடியும் மயில்வாகனமுந் துதிக்கப்படுவன; திருக்கை வேல் போற்றி போற்றி—திருக்கரத்திற் பொருந்திய வேலாயுதமுந் துதிக்கப்படுவது துதிக்கப்படுவது. எ—று.

போற்றியென்பதில் இகரஞ் செயப்படுபொருள் விகுதி; வாழியவென்பது வாழியெனவந்தாற்போலவந்த வியங்கோண் முற்றெனக்கொண்டு காக்கவெனப் பொருள் கூறினும் பொருந்தும். அங்ஙனங்கூறின் எம்மையென்னுஞ் செயப்படு பொருள் வருவிக்க: பொழிதல்வினைக்கேற்பக்கருணையை வெள்ளமென வுரைத்தாம். கருணை-முகவிலாசம், மாமரத்தினீழலிருக்குங் கடவுளை மாமரத்தின் கீழிருப்பதாகக் கூறியதிலக்கணை. செவ்வேள்—சிவந்த நிறத்தையுடையவேள். செம்மையான குணத்தினையுடைய வேளெனவும் பொருள்படும். வேள் வேட்கப்படுபவர் ''பூவிற்குத்தாமரையே'' என்னுங்கவிசாகரப் பெருந்தேவனார் வாக்கின்படி தலைமைபற்றிய வழக்காய் மலரென்பது தாமரைமலரை யுணர்த்திற்று; இதனை ''பூவெனப்படுவது பொறிவாழ்பூவே'' என்பதனுனுமறிக. சேவல் முதலியன அப்பெருமானுக்குப் புறத்துறுப்பாதல்பற்றி முன்னர்க்கூறிய அகத்துறுப்புக்களினின்று வேற்றுமை தோன்றஅன்னானென்னுஞ் சொல்லை இடைப்பெய்தார். எச்சவும்மைகள் விரித்துரைக்கப்பட்டன.

சூரனுகியோர் நல்லொழுக்கங்களை மாற்றித்தேவர் முதலிய பெரியோர்களை வருத்தியகாலத்து, அவரைத்தொலேத்து வருணுச்சிரமதருமங்களை நாட்டி உலகத்தைக் காக்குமாறு பன்னிரு படைகளையும் பரித்தனவாதலின் ''ஏவருந்துதிக்கநின்ற விராறுதோள்'' எனவும், தலமூர்த்தி யென்பது போதர ''காஞ்சிமாவடிவைகுஞ் செவ்வேள்'' எனவும், கருநிறமுடையனுய்க் காமத்தை மிகுவிக்குமதவேள் போலாது செந்நிறமுடையராய் ஞானத்தையூட்டும் வேளாதலால் ''செவ்வேள்'' எனவும், செந்நிறமும் தண்மையும் உச்சிமேற்கொள்ளப்படுதலு முடைமைபற்றி ''மலரடி'' எனவும் விசேடித்தார்.

இச்செய்யுளிற் போற்றியென்பது பலமுறைவருதல் சொற்பொருட்பின் வருநிலேயணி. மலரடி உவமையணி. (ரு)

## நூற்பயன்

இந்திர ராகிப் பார்மே லின்பமுற் றினிது மேவிச்
சிந்தையி னினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வர்
அந்தமி லவுணர் தங்க ளடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணந் தன்னைக் காதலித் தோது வோரே.

**இ-ள்:** அந்தம் இல் அவுணர் தங்கள் அடல்கெட முனிந்த — முடிவில்லாத அசுரர்களது வலிமை கெடும்படி கோபித்தழித்த, செவ்வேல் கந்தவேள் புராணம் தன்னை காதலித்து ஓதுவோர் — சிவந்த வேலாயுதத்தை தரித்த கந்தசுவாமியினது (இந்தப்) புராணத்தை விரும்பிப்படிப்பவர்கள், இந்திரர் ஆகி — இந்திரசம்பத்தையுடையவர்களாய், பார்மேல் இன்பம் உற்று இனிது மேவி — இப்பூவுலகத்திற் சுகானுபவத்தைப்பெற்று நன்ருக வாழ்ந்திருந்து, சிந்தையில் நினைந்த முற்றி சிவகதி அதனில் சேர்வர் — மனத்தில் நினேத்த கருமங்கள் நிறைவேறப்பெற்றுத் (தேகாந்தத்திற்) சிவபதத்திற் புகுவர். எ—று.

ஏ ஈற்றசை, சிவகதியதனில் என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. அவுணர் தங்களென்பதில் தம் என்பதும், புராணந்தன்னை யென்பதில் தன்னென்பதும் சாரியைகள். கந்தவேள் இருபெயரொட்டுப் பண்புத்தொகை, நினைந்த வினையாலணையும் பெயர். ஓதுவோரென்பதில் பொருள் சொல்வோரையும் கேட்போரையும் உபலக்கணத்தா லமைக்க. இந்திரர் என்பதற்குச் செல்வமுடையோ ரென்பது பொருள். இனிதுமேவல்—நோய்பகை முதலிய தீங்குகளை யெய்தாது வீரம் அதிகாரம் கீர்த்தி முதலியவற்ருற் சிறந்து வாழ்தல்.

சிவபெருமான் கொடுத்தருளிய வரத்தினுலே நூற்றெட்டுகங்காறும் இறப்பின்றியும் பற்பல மக்களைப்பெற்றுமுள்ளாரென்பது போதர ''அந்தமிலவுணர்'' எனவும், அவ்வவுணரைச் சங்கரித்தனராயினும் அது தம்மைப்பூசித்த இந்திரன் முதலாகிய தேவர்க்குச் சுவர்க்கலோகபோகத்தையும் சுயாதீனவாழ்வையுங் கொடுத்தற்கேயாதலின் மனோரதங்களைப் பெறுமாறு எவராலும் வேட்கப்படுங் கடவுளென்பது போதர ''அவுணர் தங்களடல்கெடமுனிந்த செவ்வேற் கந்தவேள்'' எனவும், அத்தகைய கடவுளின் சரித்திரமாகிய இப்புராணத்தை மெய்யன்புடன் விரும்பியோதினோர் பலன்பெறுதலெளிதாகலின் ''காதலித்தோதினோர்'' எனவும் விசேடித்தார். செல்வங்களெல்லாவற்றினும் இந்திரச்செல்வம் பெரிதாதலின் ''இந்திரராகி'' என்ருர்.

''கந்தவேள் புராணந்தன்னை .... ஓதுவோர் இந்திரராகி......இன்பமுற்று...... சிவகதியதனிற் சேர்வர்'' எனக்கூறியதனால், புராணங்கேட்டலாகிய அறமும் அதனாற் பெறப்படும் பொருள் இன்பம் வீடென்பனவும் ஆக நாற்பயனுங்குஞ் சித்தியாமென்பது குறிக்கப்பட்டது. (ச)

## வாழ்த்து

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக வுலக மெல்லாம்.

இ—ள்: உலகம் எல்லாம—நிலவுலகமெங்கும், வான் முகில் வாழாது பெய்க—ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற மேகங்கள் (மாதமும்முறை) தவறாது மழையைப் பொழிக; மலிவளம் சுரக்க—நிறைந்த வளங்கள் பெருக; மன்னன் கோல்முறை அரசு செய்க—அரசன் செங்கோன்முறைப்படி அரசியலை நடாத்துக; உயிர்கள் குறைவு இலாது வாழ்க—ஆன்மாக்கள் நோய்வறுமை முதலிய இடையூறின்றி வாழுக; நால் மறை அறங்கள் ஓங்க—நான்கு வேதங்களிலும் கூறப்பட்டுள்ள வருணாச்சிரம தருமங்கள் தழைக்க; நல் தவம் வேள்வி மல்க—நல்ல தவங்களும் யாகங்களும் விருத்தியாகுக; மேன்மைகொள் சைவ நீதி விளங்குக—மகிமையையுடைய சைவசமயாசாரம் பிரகாசிக்க. எ—று.

உலகமெல்லாம்—கடைநிலைத்தீபகம். தவம் வேள்வி என்பன நான்மறையறங்களுளடங்குமாயினும் கருமகாண்டத்துக் கூறப்பட்டவற்றுட் சிறந்தது வேள்வியும் ஞானகாண்டத்திற் கூறப்பட்டவற்றுட் சிறந்தது தவமுமாதலாற் பின்னும் எடுத்துக்கூறி வாழ்த்தினர். மழைபெய்தன் முதலியன முறையே ஒன்றற்கொன்று காரணகாரியமாய் நிற்றலின் அதற்கேற்ப நிரைப்படுத்திக் கூறினர். ஐம்புலன்களை யடக்கிச் செயப்படுந்தவமென்பது போதர ''நற்றவம்'' எனவும், அறுசமயங்களின் மிக்கதாதலின் ''மேன்மைகொள் சைவம்'' எனவும் விசேடித்தார். சைவம் சிவசம்பந்தமானது, சிவபெருமானைக் கடவுளாகக்கொள்ளுஞ் சமயமென்பது விளக்கம். இச்சமயம் மற்றச் சமயங்களெவற்றினும் மேலானதென்பதை

சைவ சமய மேசமயஞ் சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளி காட்டு மிந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டாம் முத்திதருந்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் செகத்தீரே.

என்னும் தாயுமான சுவாமிகள் திருவாக்கானுமுணர்க. காப்பு ஒன்றேயன்றி மூன்று ஐந்து ஏழு என்னுந் தொகையமைந்த செய்யுட்களானுங் கூறப்பெறும். ஆசிரியர் ஐந்து செய்யுட்களாற் கூறினரென்க. (ரு)

# 2. கடவுள் வாழ்த்து

கடவுள் வாழ்த்தென்பது கடவுளை வாழ்த்தும் பகுதியென விரிக்கப்படுதலால் இரண்டாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. கட— உள்=கடவுள். கடந்து (தத்துவாதீதமாய்) நிற்பவரென்பது இதன் பொருள். வாழ்த்துதல்—துதித்தல்.

### சிவபெருமான்

திருவந்த தொல்லைப் புவனத்தொடு தேவர் போற்றிப்
பெருவந் தனைசெய் தறிதற்கரும் பெற்றி யெய்தி
அருவந் தனையு முருவத்தையு மன்றி நின்றான்
ஒருவன் றனது பதந்தன்னை யுளத்துள் வைப்பாம்.

இ—ள்: திருவந்த தொல்லை புவனத்தொடு தேவர்—சிறப்புப்பொருந்திய பழைய இப் பூவுலகத்தாரும் தேவர்களும், போற்றி—துதித்தும், பெருவந்தனை செய்து— பெரிய வழிபாட்டைச் செய்தும், அறிதற்கு அரும் பெற்றி எய்தி—உணர்தற்கரிய தன்மையைப் பொருந்தி, அருவந்தனையும் உருவத்தையும் அன்றி நின்றான் ஒருவன் தனது பதம் தன்னை—அருவத்தன்மையையும் உருவத்தன்மையையும் நீங்கி நின்ற ஒப்பற்ற சிவபெருமானது திருவடிகளை, உளத்துள் வைப்பாம்— யாம் மனத்தில் இருத்துவாம். எ—று.

அருவந்தனையும் ஒருவன்றனது பதந்தன்னை என்பவற்றில் தன் மூன்றுஞ்சாரியைகள், உளத்துள்வைத்தல்—தியானித்தல். புவனம்—ஆகுபெயர். நின்றான்—வினை. முற்றுப்பெயரெச்சம். உம்மை விகாரத்தாற்றொக்கது. மங்கலமுதலிய பொருத்தங்கள் பத்துமமையக் காப்பியமுதற்செய்யுளின் முதற்சீர்தொடுத்தன் மரபாதலின் அதற்கேற்ப ''திருவந்த'' எனத்தொடங்கினர். கடவுள்வழிபாடு பகிர்யாகம் அந்தர்யாகம் என இருவகைப்படும். அவற்றுட் பகிர்யாகமாவது: சிலை முதலியவற்றுனின்ற மூர்த்தியிற் கிரியாமார்க்கத்தாற் கடவுளை ஆவாகனஞ்செய்து வழிபடல். இது வெளிப்பூசையெனவும்படும். அந்தர்யாகமாவது: முற்குறித்தவாறு பகிர்யாகஞ் செய்து பரிபக்குவமுற்றோர் யோகமார்க்கத்தினாற் கடவுளை அகத்திலமைத்து வழிபடல். இது உட்பூசையெனவும்படும். இச்செய்யுளிற் பெருவந்தனையென்றது அந்தர் யாகத்தை; உணர்தற்கெளிவந்தருளும் பூசையதுவாகலான் இதனை,

> விறகில் தீயினன் பாலிற் படுநெய்போல்
> மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
> உறவு கோல்நட் டுணர்வுக் கயிற்றினால்
> முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே.

என்னும் திருநாவுக்கரசு ஸ்வாமிகள் தேவாரத்தானுமறிக. அறிதற்கரும் பெற்றியாவது:- காண்டல் முதலிய மூவகையளவைகளாலும் பிரமாணித்தற் கதீதமாய் நிற்றல்.

அருவமாய் நிற்றலாவது:— எல்லாந் தாமேயாய் நின்றவழியுந் தமக்கென வேறோ ருருவின்றி நிட்களமாய் நிற்றல். உருவமாய் நிற்றலாவது:— சராசரங்களெல் லாந் தாமேயாய் நிற்றல். இவையிரண்டுமின்றி நிற்றலாவது:— நிட்களராகிய பரமசிவன் மெஞ்ஞானிகள் தியானத்தாலளவிடுத்தற் பொருட்டுச் சத்திவிகற்ப மான கலைகளானிரம்பப் பெற்றுத் தியான மூர்த்தியாய் நிற்றல். ஒருவன் — அத் துவிதீயன், அதாவது இரண்டாவதற்குப் பிறிது பொருளின்றித் தாமொருவரே பரம்பொருளாய் நிற்பவர். (1)

ஊனாகி யூனு ளுயிராயுயிர் தோறு மாகி
வானாதி யான பொருளாய்மதி யாகி வெய்யோன்
தானாகி யாண்பெண் ணுருவாகிச் சராச ரங்கள்
ஆனான் சிவன்மற் றவனீள்கழற் கன்பு செய்வாம்.

இ—ள்: ஊன் ஆகி—உடலாகி, ஊன் உள் உயிர் ஆய் — அவ்வுடலினுள் ளிருக்குமான்மாவுமாகி, உயிர்தோறும் ஆகி—அந்த ஆன்மாக்கடோறும் வியாபித் திருக்கும் பரமான்மாவுமாகி, வான் ஆதி ஆன பொருள் ஆய்—ஆகாய முதலிய பஞ்சபூதங்களுமாகி, மதி ஆகி—சந்திரனுமாகி, வெய்யோன் ஆகி—சூரியனுமாகி, ஆண் பெண் உரு ஆகி—ஆண்வடிவமும் பெண்வடிவமுமாகி, சர அசரங்கள் ஆனான்—இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளுமானவர், சிவன்—சிவபெரு மானே; (ஆதலால்), அவன் நீள் கழற்கு அன்பு செய்வாம் — அப்பெருமானது நெடிய பாதங்களில் யாம் அன்பு வைப்பாம். எ—று.

தான் மற்று அசைநிலைகள். ஊன் - ஆகுபெயர். ஆனான் - வினையாலணையும் பெயர். உயிர்தோறுமாதல் - உயிர் உடலை உறைவிடமாகக் கொண்டு நிற்றல் போல உயிரை உறைவிடமாகக் கொண்டு நிற்றல். பூதங்களைந்தும் நிலமுத லெண்ணப்படுவனவாயினும் அவற்றின் றோற்றமுறைபற்றி வானாதியான பொருள் எனப்பட்டன. தேற்றேகாரம் தொக்கது, சிவன் என்பது மங்களமுடையவ ரெனவும், சுகமுடையவரெனவும் பொருள்படும்.

சிவபிரான் புருடனும் பஞ்சபூதங்களுஞ் சூரிய சந்திரருமாகிய அட்டமூர்த்தி யாயும் மற்றெல்லாமாயும் நிற்பவரென்பது இச்செய்யுளிற் குறிக்கப்பட்டது. அவர் அவ்வாறு நிற்றலை

> நிலனும் விசும்பாம் நிமிர்கானீர் தீயாம்
> அலர்கதிராம் வான்மதியாம் அன்றி - மலர்கொன்றை
> ஒண்ணறுந் தாரா னொருவனிய மானனுமாய்
> எண்ணிறந்த வெப் பொருளுமாம்.

என்பதனாலுமறிக. (2)

## வேறு

பிறப்பது மிறப்பதும் பெயருஞ் செய்கையும்
மறப்பது நினைப்பதும் வடிவம் யாவையுந்
துறப்பது மின்மையும் பிறவுஞ் சூழ்கலாச்
சிறப்புடை யரனடி சென்னி சேர்த்துவாம்.

இ—ள்: பிறப்பதும் இறப்பதும்—பிறத்தலும் இறத்தலும், பெயரும் செய்கை யும்—நாமமும் தொழிலும், மறப்பதும் நினைப்பதும்—மறத்தலும் நினைத்தலும்,

வடிவும்—உருவமும், யாவையும் துறப்பதும் இன்மையும்—வெறுப்பும் விருப்பும், பிறவும் சூழ்கலா — இவைபோன்ற உயிர்க்குணங்கள் பிறவுஞ்சாரப்பெருத, சிறப்பு உடை அரன் அடி சென்னி சேர்த்துவாம்—மகிமையினையுடைய சிவபெருமானது பாதங்களை யாம் சிரத்திலிருத்துவாம் எ—று.

பிறப்பது இறப்பது மறப்பது நினைப்பது துறப்பது என்பன வினைமுற்றுத் தொழிற்பெயர்கள். யாவையுந் துறத்தல் - எல்லாப் பொருளையும் வெறுத்தல்; இன்மை - அங்ஙனம் வெறுக்காமை எனவே விரும்புதல். பிற,

"அறிவரு ளாசை யச்ச மான
நிறைபொறை யோர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி
துணிவழுக் காறன் பெளிமை யெய்த்தல்
துன்ப மின்ப மிளமை மூப்பிகல்
வென்றி பொச்சாப் பூக்க மறமத
மறவி யினைய வுடல்கொ ளுயிர்க்குணம்."

என்னுஞ் சூத்திரத்திற் கூறியவற்றுள் இச்செய்யுளி லமையாதவை. சிறப்பு, அறுகுணங்கள்; அவையாவன:— முற்றறிவு, வரம்பிலின்பம், இயற்கை யறிவு, தன்வயம், குறைவிலாற்றல், வரம்பிலாற்றல் என்பனவாம். இவற்றிற்கு முறையே சர்வஞ்ஞதை, திருப்தி, அனுதிபோதம், சுவதந்திரம், அலுப்தசக்தி, அனந்தசக்தி என்பன வடநூற் பெயர்கள். அரன் - சங்கரிப்பவர். இப்பொருளை

"உயிர்க்குண் மலமொடுக்க லாலே யுயிரு
ளுயிர்க்கு மரனெனும்பே ருண்டு."

என்னுஞ் சைவசமயநெறித் திருக்குறளானு முணர்க. சென்னி சேர்த்தல் - வணங்குதல்.

இருவினை யீட்டத்துக் கேற்ப யோனிபேத முற்றுப் பிறத்தலும், அப்பிறவிக்குக் காரணமாய வினையனுபவித்துத் தொலைந்தவழி இறத்தலும், இவற்றினிடைப் பட்ட காலத்திற் பெயர் முதலியவற்றைப் பெறுதலும் ஆன்மாக்களுக்குரிய குணமாம். சிவபெருமான் அவ்வான்மாக்கடோறுந் தொழினிகழ்ச்சியின் பொருட்டுப் பேதந் தோன்ருது நின்றவழியும், பதிக்குணங்களாறும் நிறையப்பெற்றவராதலின்,

"கரிசிலைந் தொழில்செய் காரணர் தமக்குங்
காரணன் மாயையிற் பலவாய்
விரிதரு முலகில் வியாபியாய் நின்றும்
விசாரமாதி கடனக் கில்லான்
................................................"

எனவும்,

"பேறிழ வின்பம் பிணிவளர் மூப்புப் பேதுறச் சாதலென் றுரைக்கு,
மாறினு மோவா துயிர்களை யெல்லா மமைவறச் செலுத்தியுந் தனக்குக்
கூறிய விருப்பு வெறுப்பினை யில்லான் கூடியெவ் வுயிரையு மயக்கும்
வீறிய மாயை மயக்கமு மில்லான் விளங்கிய வனுதியே யமலன்."

எனவும் விநாயக புராணத்துக் கூறியவாறு அவ்வான்ம குணங்கள் அவரை யணுகா வென்க.

பூமலர் மிசைவரு புனித னுதியோர்
தாமுணர் வரியதோர் தலைமை யெய்தியே
மாமறை முதற்கொரு வடிவ மாகியோன்
காமரு செய்யபூங் கழல்கள் போற்றுவாம்.

இ—ள்: பூ மலர் மிசை வரு புனிதன் ஆதியோர்—செந்தாமரை மல ராசனத்தின்மேல் வீற்றிருக்கின்ற பரிசுத்தராகிய பிரமா முதலிய தேவர்களும், உணர்வரியது ஓர் தலைமை எய்தி—அறிதற்கரிய முதன்மையைப் பொருந்தி, மாமறை முதற்கு ஒரு வடிவம ஆகியோன்—பெருமை பொருந்திய பிரணவத்தினது ஒப்பற்ற வடிவமாய் நின்ற சிவபெருமானது, காமரு செய்ய பூ கழல்கள் போற்றுவாம்—அழகு பொருந்திய சிவந்த தாமரை மலர்போன்ற பாதங்களை யாம் துதிப்பாம் எ—று.

தாம் ஓர் ஏ அசைநிலைகள். பூவென்ப தீண்டுத் தாமரையை யுணர்த்திற்று சிறப்புபமை விகாரத்தாற்றொக்கது. உணர்வரியது குறிப்புமுற்றுப் பெயரெச்சம். மறைமுதலென்பது மறைக்கு முதலிலுச்சரிக்கப்படு மெழுத்தென விரிக்கப்படுதலால் அன்மொழித்தொகை. ஆகியோன் - வினையாலணையும் பெயர். காமரு என்பதை காமம் மரு என்றாயினும், காமர் உ என்றாயினும் பிரித்துப் பொருள் கொள்க, காமம் மரு எனப் பிரிக்குங்கால் காம் கடைக்குறை. பதியிலக்கணத்தை யுணர்த்து நூல்களுட் சிறந்ததாகிய வேதத்தை யொருங்குணர்ந்தவராதலின், அப்பெருமானை யுணர்தற்கேற்ற பரிபக்குவமுடைய ரென்பது போதர 'புனிதன்' என்றார். (4)

பங்கயன் முகுந்தனும் பரமென் றுன்னியே
தங்களி லிருவருஞ் சமர்செய் துற்றுழி
அங்கவர் வெருவர வங்கி யாயெழு
புங்கவன் மலரடி போற்றி செய்குவாம்.

இ-ள்: பங்கயன் முகுந்தன்—தாமரைமலராசனத்தி லிருக்கின்ற பிரமதேவரும் திருமாலும், நாமே பரம் என்று உன்னி — நாங்களே பரப்பிரமமென்று (தனித் தனி) நினைத்து, இருவரும் தங்களில் சமர்செய்து உற்றுழி — அவ்விருவரும் (ஒருவரோடொருவர்) தங்களுட் போர்செய்துநின்றபொழுது, அங்கு அவர் வெருவர— அவ்விடத்து (இடையே) அவர்கள் பயப்படும்படி, அங்கி ஆய் எழு — அக்கினி மலையாய்த் தோன்றிநின்ற; புங்கவன்—தலைவராகிய சிவபெருமானது, மலர் அடி — தாமரைமலர்போன்ற திருவடிகளை, போற்றி செய்குவாம் — யாம் துதிப்பாம் எ-று.

முகுந்தன் — மோக்ஷத்தைக் கொடுப்பவர். உன்னியே யென்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலைப்பொருள்பட நாமென்பதனோடியைத் துரைக்கப்பட்டது. அங்கு அசைநிலையெனினுமாம். இச்செய்யுளிற் சுட்டிய சரித்திரத்தை மேல் தக்ஷகாண்டத்தில் அடிமுடிதேடுபடலத்திற் றெள்ளிதிற் காண்க. பிரமா முதலியோரால் அறியப் படாதவரென முற்செய்யுளிற் சுட்டியது இச்செய்யுளான் விளக்கப்பட்டது.

காண்பவன் முதலிய திறமுங் காட்டுவான்
மாண்புடை யோனுமாய் வலிகொள் வான்றொடர்
பூண்பதின் றாய்நயம் புணர்க்கும் புங்கவன்
சேண்பொலி திருநடச் செயலை யேத்துவாம்.

இ-ள்: காண்பவன் முதலிய திறமும் காட்டுவான் மாண்பு உடையோனும் ஆய் — காண்பான்முதலிய மூவகைப்பொருளும் காட்டுவானும் ஆகி, வலி கொள் வான் தொடர் பூண்பது இன்றாய் — வலிமை பொருந்திய பெரிய பாசத்தளையைப் பூணுதலின்றி, நயம் புணர்க்கும் புங்கவன் — (ஆன்மாக்களுக்கு) நன்மையைச்

செய்யுந் தலைவராகிய சிவபெருமானது. சேண் பொலி திரு நட செயலை ஏத்துவாம் — சிதாகாசமாகிய கனகசபையிற் பொலியாநின்ற திருநிருத்தத் தொழிலை யாம் துதிப்பாம் எ-று.

காண்பவன் முதலிய மூன்றுவன: காண்பான், காட்சி, காட்சிப்பொருள் என்பனவாம். இவற்றிற்கு ஞாதிரு, ஞானம், ஞேயம் என்பன வடமொழிப் பெயர்கள். இம்மூன்றிற்கும் திரிபுடி யென்பது சமுதாயப்பெயர். காட்டுவான் மாண்புடையோன் - காட்டுவானுகிய மாட்சிமையுடையவன். முன்னைய மூன்றுடன் காட்டுவானுங்கூடி நான்காயது. இவற்றை "கருவிமெய்ப்புலன் காட்டுவான் காண்பவன் காட்சிப் பொருளெனப்படு நான்கையும்" என இந்நூலாசிரியர் பின்னர்க் கூறுதலாலுமுணர்க.

காட்டுவாராகிய கடவுளில்வழிக் காண்பது கூடாதாதலால், காண்பான் முதலிய மூன்றினின்றும் காட்டுவானை வேறுபிரித்து, மாண்புடையோன் என அடை கொடுத்துக் கூறினர். சிவபோதமுற்றுங்காறும் செம்பிற்களிம்புபோலச் சகசமாய் நிற்றலாலும், பிறவிமுதலிய பெருந்துயர்களைத் தருதலாலும் 'வலிகொள்வான் றொடர்' என விசேடித்தார். பஞ்சபூதஸ்தலங்களுள் இது ஆகாசஸ்தலமாதலாற் சேண் என்றார். இந்தச் சிதம்பரம் சகலபுவனங்களுக்கு முன்னுண்டாய தலமாய்த் திருமூலட்டானமெனப் பெயர்பெற்று விராட்புருடனுடைய இருதய ஸ்தானமாக விளங்குதல்பற்றி இத்தலத்திலெழுந்தருளிய மூர்த்தியைத் துதித்தல் அவசியமாயிற்று. இவர் செய்யுநடனம் பஞ்சகிருத்தியமயமாய் முத்திக்கு வாயிலாயிருக்கும் விசேடம் பற்றி, புங்கவனை யேத்துவாமென்னது புங்கவன்றிரு நடச்செயலையேத்துவாம் என்றார். (6)

## உமாதேவியார்

செறிதரு முயிர்தொறுந் திகழ்ந்து மன்னிய
மறுவறு மரனிட மரபின் மேவியே
அறுவகை நெறிகளும் பிறவு மாக்கிய
இறைவிதன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம்.

இ-ள்: செறிதரும் உயிர்தொறும் திகழ்ந்து மன்னிய — (உலகத்தில்) நெருங்கிய ஆன்மாக்கடோறும் விளங்கி வியாபித்த; மறு அறும் அரன் இடம் மரபின் மேவி — குற்றமில்லாத சிவபெருமானது இடப்பாகத்தில் முறைப்படி வீற்றிருந்து, அறுவகை நெறிகளும் பிறவும் ஆக்கிய—ஆறுவகைப்பட்ட உட்சமயங்களையும் பிற சமயங்களையும் உண்டாக்கிய, இறைவிதன் மலர் அடி இறைஞ்சி ஏத்துவாம்—தலைவியாகிய உமாதேவியினது தாமரைமலர்போன்ற பாதங்களை யாம் வணங்கித் துதிப்பாம் எ—று.

ஏ அசை. முன்னர் ஊனுகி என்னுஞ் செய்யுளிற் கூறியவாறு எங்குங் கலந்து பரிபூரணமாய் நிற்பவரென்பது போதர "உயிர்தொறுந்திகழ்துமன்னிய.. அரன்" எனவும், அவ்வாறு கலந்து நின்ற வழியும் பிறப்பதும் என்னுஞ் செய்யுளிற் கூறியவாறு உயிர்க்குணஞ்சாரப் பெறுதவரென்பது போதர "மறுவறுமரன்" எனவும் கூறினர். அறுவகைச் சமயங்களாவன: சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம் என்பனவாம். (7)

### விநாயகக்கடவுள்.

மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
எண்ணிய பொருளெலா மெளிதின் முற்றுறக்
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.

இ—ள்: மண்ணுலகத்தினில் பிறவி மாசு அற—பூவுலகத்திற் பிறக்கும் பிறவி யாகியகுற்றந் தீரும்பொருட்டும், எண்ணிய பொருள் எலாம் எளிதில் முற்றுற—(பெறவேண்டுமென்று) சிந்தித்த பொருள்களெல்லாம் இலகுவிற் கைகூடும் பொருட்டும், கண்ணுதல் உடையது ஓர் மா களிற்று முக பண்ணவன் மலர் அடி—நெற்றிக் கண்ணையுடைய ஒப்பற்ற பெரிய யானைமுகம் பொருந்திய விநாயகக் கடவுளது தாமரைமலர்போலும் பாதங்களை, பணிந்து போற்றுவாம் — யாம் வணங்கித் துதிப்பாம் எ—று.

பிறவிமாசென்பது பிறவியாலாகிய மாசென்றேனும் பிறவியாகிய மாசென்றே னும் விரிக்கப்படும். எல்லாமென்பது எலாமெனத்தொக்கது. செயவெனெச்சங்கள் காரியப்பொருளில் வந்தன. உடையது—குறிப்புமுற்றுப் பெயரெச்சம்; அது முக மென்னும் பெயர் கொண்டது.

மறுமைப் பயனையும் இம்மைப் பயனையும் பெறுதற் பொருட்டு விநாயகக் கடவுளது பாதங்களை வணங்குவாமென்பது கருத்து.

ஆன்மாக்கள் இருவினைவயத்தாற் சுவர்க்க நரகங்களிற் புகினும் அவ்வினைப் பயனை நுகர்ந்தபின் மீட்டும் பிறப்பது நிலவுலகத்திலாதலின் 'மண்ணுலகத்தினிற் பிறவி' எனவும், முத்திக்குத் தடையாதலின் 'பிறவிமாசு' எனவும், தெய்வத் தன்மை யமைந்த முகமென்பது போதர 'கண்ணுதலுடையதோர் களிற்றுமா முகம்' எனவும் விசேடித்தார். கண்ணுதல் - அடியார் கருதித் தியானித்த லெனினுமாம். (8)

### வைரவக்கடவுள்

பரமனை மதித்திடாப் பங்க யாசனன்
ஒருதலை கிள்ளியே யொழிந்த வானவர்
குருதியு மகந்தையுங் கொண்டு தண்டமுன்
புரிதரு வடுகனைப் போற்றி செய்குவாம்.

இ—ள்: பரமனை மதித்திடா பங்கயாசனன் ஒரு தலை கிள்ளி — சிவபெருமா னைப் பரம்பொருளென்று சிந்தியாத பிரமதேவரது நடுத்தலையைக்கொய்து, ஒழிந்த வானவர் குருதியும் அகந்தையும் கொண்டு — ஏனைய [விஷ்ணுமூர்த்தி முதலிய]

தேவர்களுடைய இரத்தத்தையுங் கர்வத்தையுங் கவர்ந்து, முன் தண்டம் புரிதரு வடுகனை — முற்காலத்திலே தண்டனையைச் செய்த வைரவக்கடவுளை, போற்றி செய்குவாம் — யாம் துதிப்பாம் எ—று.

ஏ அசை. மதித்திடாத என்னும் பெயரெச்சம் ஈற்றுயிர்மெய் குறைந்துநின் றது. பங்கயாசனன் வடநூன் முடிபு; தாமரைமலரை ஆசனமாகவுடையவரென்பது பொருள். சிவபெருமானே முழுமுதற்கடவுளென்பது வெள்ளிடைமலைபோல் விளங்க நிற்றலையுணர்த்துவார், பரமன் என்னுஞ் சொல்லைப் பிரயோகித்தார் பிரம தேவரது தலைகளைந்தனுள் இகழ்ந்து குற்றமெய்திக்கிள்ளப்பட்டது நடுத்தலையே யாதலின் ஒருதலையென்பதற்கவ்வாறு பொருளுரைத்தாம்.

முன்னொரு காலத்தில் மேருமலையின்கண்ணே பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியு மிருந்தபோது எண்ணிறந்த தேவர்களும் முனிவர்களும் ஒருங்குகூடி அவர்களை வணங்கி, முழுமுகற்கடவுள் யாவர்? அதனைச் சிறியேங்களுக்கு உணர்த்தவேண்டு மென்று பிரார்த்தித்தார்கள். அதுகேட்ட பிரமதேவர் அகங்கரித்து, நாமே முழுமுதற் கடவுளென்றனர், விஷ்ணுமூர்த்தியும் அகங்கரித்துநீ எப்படி முழு முதற்கடவுளாவாய்; உன்னைத்தந்த யாமே முழுமுதற்கடவுளென்று வாதுசெய் தனர். அப்போது சிவபெருமான் அவர்களுக்கு நல்லுணர்வுண்டாகும் பொருட்டு சோதிசொரூபராய் ஆகாயத்தினடுவே தோன்றினர். விஷ்ணுவும் பிரமாவும் அது கண்டும் அச்சோதியைச் சிவனென்றுமதியாது ஒரு பூதவொளியென்றவமதித்தனர். அதன்மேற் சிவபெருமான் கயிலையிலெழுந்தருளி யிருக்குந் திருக்கோலத்துடன் தோன்ற, அதுகண்ட விஷ்ணுமூர்த்தி அவரைப் பணிந்தனர். பிரமதேவர் அப் போதாயினும் அவரை மதியாமல் தமது நடுத்தலையிலுள்ள வாயால் இகழ்ந்தனர். சிவபெருமான் அவரது அகந்தையை யொழிக்கத் திருவுளங்கொண்டு தமதிருதயத் தினின்று வைரவக்கடவுளைத் தோற்றுவித்து ஏவ, அவர் பிரமாவின் நடுத்தலை யைக்கிள்ளி அகந்தைகொண்ட ஏனைத்தேவரிடம் உதிரப்பலியேற்று அகந்தையை யொழித்தனரென்க. இச்சரித்திரம் மேல் தக்ஷகாண்டத்தில் ததீசியுத்தரப் படலத் தில் விரிவாகக் கூறப்பட்டது.

வெஞ்சினப் பரியழன் மீது போர்த்திடும்
அஞ்சனப் புகையென வால மாமெனச்
செஞ்சுடர்ப் படிவமேற் செறித்த மாமணிக்
கஞ்சுகக் கடவுள்பொற் கழல்க ளேத்துவாம்.

இ—ள்: வெம் சின பரி அழல் மீது போர்த்திடும் — கடுங்கோபத்தையுடைய வடவாமுகாக்கினியின்மேற் சூழப்பெற்ற, அஞ்சன புகை என ஆலம் ஆம் என — கரும்புகைப்படலத்தைப் போலவும் நஞ்சைப்போலவும், செம் சுடர் படிவ மேல் செறித்த மாமணி கஞ்சுக கடவுள் — சிவந்த ஒளிபொருந்திய திருமேனியின்மேல் தரிக்கப்பட்ட பெரிய கருநிறச் சட்டையையுடைய வைரவக்கடவுளது, பொன்கழல் கள் ஏத்துவாம் — அழகிய பாதங்களை யாம் துதிப்பாம் எ—று.

குதிரையின் முகத்திற்றோன்றுதல்பற்றி வடவாமுகாக்கினியைப் பரியழலெனக் கூறினர். வாமனவதாரங்கொண்ட விஷ்ணுமூர்த்தி மாவலிச்சக்கரவர்த்தியிடத்தே சென்று மூன்றடிநிலந்தரும்படியாசித்து அதன்மேற் பேருருக்கொண்டு பூமியை ஓரடியாகவும் ஆகாயத்தை மற்றோரடியாகவும் அளந்து எஞ்சிய மூன்றாமடிக்கிடமின் மையால் அவன்றலைமேற் பாதத்தைவைத்து அடக்கியபின் அவ்வுருவத்துடனே

தருக்குற்றுத்திரிய, வைரவக்கடவுள் அவ்வுருவத்தையழித்துக் கருநிறம்பொருந்திய தோலையுரித்துத் தமது மேனியிற் சட்டையாகத் தரித்தமையின் 'மாமணிக்கஞ் சுகக் கடவுள்' என்றார். வடவா முகாக்கினி செந்நிறமும் புகையும் நஞ்சுங் கருநிறமுமுடையனவாதலால், முறையே வைரவக்கடவுளது மேனிக்குங் கருஞ்சட் டைக்கும் உவமையாயின. ஒருவயிற்போலியணி. (10)

## வீரபத்திரக்கடவுள்.

அடைந்தவி யுண்டிடு மமரர் யாவரும்
முடிந்திட வெருவியே முனிவர் வேதியர்
உடைந்திட மாமக மொடியத் தக்கனைத்
தடிந்திடு சேவகன் சரணம் போற்றுவாம்.

இ—ள்: அடைந்து அவி உண்டிடும் அமரர் யாவரும் முடிந்திட — வந்து அவிப்பாகத்தைப்புசித்த தேவர்களெல்லோரும் இறக்கவும், முனிவர் வேதியர் வெருவி உடைந்திட — முனிவர்களும் மறையவர்களும் (தமக்கு யாதுதீங்குவிளையு மோவென்று) பயந்து நிலைகெடவும், மாமகம் ஒடிய — பெரியயாகஞ்சிதையவும்; தக்கனை தடிந்திடு சேவகன் சரணம் போற்றுவாம் — யாகாதிபனாகிய தக்கனைத் தண்டித்த வீரபத்திரக்கடவுளது பாதங்களை யாம் துதிப்பாம் எ — று.

ஏ அசை, அவி—அன்னமுதலியஓமத்திரவியங்கள், அமரர்-இறத்தலில்லாத வர்; உபசாரம். முடிந்திட உடைந்திட ஒடிய தடிந்திடு சேவகன் என இயைக்க. காவற்கடவுளாகிய விஷ்ணுமூர்த்தியாலே தீங்குநேரிடாவண்ணங் காக்கப்பட்ட யாகமாதலின் 'மாமக' எனவும் அத்தகையகாவலைக்கடந்து யாகத்தைச்சிதைத்து அதிபனாகிய தக்கனைத்தண்டித்த வீரராதலின் 'சேவகன்' எனவும் கூறினார். இச் செய்யுளிற் சுட்டிய சரித்திரம் மேல் தக்ஷகாண்டத்தில் யாகசங்காரப்படலத்தில் விரிவாகக் கூறப்பட்டது. (11)

## சுப்பிரமணியக்கடவுள்

இருப்பரங் குறைத்திடு மெஃக வேலுடைப்
பொருப்பரங் குணர்வுறப் புதல்வி தன்மிசை
விருப்பரங் கமரிடை விளங்கக் காட்டிய
திருப்பரங் குன்றமர் சேயைப் போற்றுவாம்.

இ—ள்: இருப்பு அரம் குறைத்திடும் எஃக வேல் உடை பொருப்பர்—இரும் பினாற் செய்யப்பட்ட அரத்தினாலராவப்பட்ட கூரிய வேற்படையையுடைய வேடர் கள், உணர்வுற—அறியும்படி, புதல்வி தன் மிசை விருப்பு—(அந்தக்குறவரது) புத்திரியாகிய வள்ளிநாயகி தம்மேற் கொண்டகாதலை, அரங்கு அமர் இடை விளங்க காட்டிய—அழிகின்ற போரின்கண்ணே எவர்க்கும் விளங்கும்படி காண் பித்தருளிய, திருப்பரங்குன்று அமர் சேயை — திருப்பரங்குன்றிலெழுந்தருளியிருக் கின்ற குமாரக்கடவுளை, போற்றுவாம்—யாம் துதிப்பாம் எ—று.

அங்கு-அசைநிலை, இரும்பு என்பது வேற்றுமையிற் றம்மின வன்றொடராயது. உடையவென்னுங் குறிப்புப்பெயரெச்சமீற்றுயிர்மெய்குறைந்து நின்றது. பொருப்பர்-மலைவாணர். தன்மிசைப் புதல்விகொண்ட விருப்பை அமரிடைவிளங்கக்காட்டுத லென்றது, வள்ளிநாயகியார் சுப்பிரமணியப்பெருமான்மேற் படைகள் படுதலைச் சகியாது தன்கிளைஞராகிய வேடரைக்கொல்லுமபடி வேண்டுதலை, காட்டிய சேய் என் இயையும். சனன காலந்தொட்டுத் தன்னை வளர்த்துப் பயின்ற பெற்றோரை மறந்தமை தொனிப்ப வள்ளிநாயகியைப் புதல்வியென்றார்.

தெய்வயானையைத் திருமணஞ்செய்ததலமும் பராசரமுனிவரது புத்திரர்க்கு ஞானோபதேசஞ்செய்ததலமும் முதலாந்திருப்படைவீடும் திருப்பரங்குன்றுதலால் அத்தலத்துமூர்த்தியைமுன்னர்த் துதித்தார். (12)

சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்
டீரலை வாயிடு மெஃக மேந்தியே
வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீஇச்
சீரலை வாய்வரு சேயைப் போற்றுவாம்.

இ—ள்: சூர் அலைவாய் இடை தொலைத்து மார்பு கீண்டு—சூரபன்மனைச்சமுத்திரத்தின்கண்ணே அழித்து அவனது மார்பைக்கிழித்து, ஈரலை வாய் இடும் எஃகம் ஏந்தி—ஈரலை வாயில் மடுக்கும் வேற்படையைத் (துட்டநிக்கிரகஞ் செய்பவரென்பதற்கோரடையாளமாகத்) தாங்கி, வேரல் ஐவாய் தரு வெள்ளி வெற்பு ஓரீஇ—பிரம்புகளுஞ் சிங்கங்களும் பொருந்தியகைலாசமலையைநீங்கி, சீரலைவாய்வரு சேயை போற்றுவாம்—திருச்செந்தூரின்கண்ணே எழுந்தருளிவந்து தங்கிய குமாரக்கடவுளை யாம் துதிப்பாம். எ—று.

ஏ அசை, அரசனென்பது அரசெனநின்றாற்போலச் சூரனென்பது சூரென நின்றது. முதலாமடியிலுள்ள அலைவாய்—அலைகின்ற வாயையுடையது என விரிக்கப்பட்டுக்கடலுக்காதலால் வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; வாய்-இடம், ஈரல்-ஓர் தசைவிசேடம். வேரல் மூங்கிலெனினுமாம். ஐவாய்-பஞ்சானனமென்பதன் பரியாயபதம். வேரலைவாய்தரு என்பதற்கு வேரலைத்தன்னிடத்துடைய எனப்பொருள் கூறுவாருமுளர். 'வெள்ளிவெற்பொரீஇச்சீரலைவாய் வருசேய்' எனவே தாம் வசித்தற்குக் கைலாசகிரியினுஞ்சிறந்த தானமென்று விரும்பித் திருச்செந்தியம்பதியிற் கோயில்கொண்டனரென்பது குறிப்பாயிற்று, சீரலைவாய்-திருச்செந்தூர்.

காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர விளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்கு மாலுற
ஆவினன் குடிவரு மமலற் போற்றுவாம்.

இ—ள்: காவினன்—ஐந்தருச்சோலையையுடைய இந்திரன், குடில் உறுகாமர் பொன் நகர் மேவினன் குடிவர—ஆகாயத்திற் பொருந்திய அழகியசுவர்க்கலோகத்திற்புகுந்து குடியேறவும், சூர்முதல் விளிய—சூரபன்மனாகிய முதல்வன் இறக்கவும்

பூவினன் குடிலையம் பொருட்கு மால் உற—தாமரைமலராசனராகிய பிரமதேவர் பிரணவப்பொருளைக் கூறுதற்கறியாது மயங்கவும், ஆவினன்குடி வரும் அமலன் போற்றுவாம்—திருவாவினன்குடியிலெழுந்தருளியிருக்கும் மலரகிதராகிய' குமாரக் கடவுளை யாம் துதிப்பாம். எ—று.

திருவாவினன் குடியிலெழுந்தருளிய மூர்த்தி இவ்வற்புதங்களைச் செய்தாரென் பது குறிப்பு. குடிலையம்பொருளென்பதில் அம் சாரியை. மேவினன்-வினைமுற்றெச் சம். செயவெனெச்சமூன்றும் காரியப்பொருளனவாய், வரும் என்னும் வினை கொண்டன.

ஐந்தருவாவன:— சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்பன. முன்னாத் தன தரசுரிமையின்பாற்பட்டிருந்த சுவர்க்கலோகத்தைச் சூரனாதியோர் செய்த தீங்கினுலிழந்து திரிந்து பின்னர்க் குடியேற்றப்பட்டவ னாதலால் 'காவினன்குடிலுறு காமர்பொன்னகர் மேவினன் குடிவர' என்றார்.

பிரணவப் பொருளைக் கூறும்படி குமாரக்கடவுள் வினவியவழிப் பிரமதேவர் கூறலாற்றாதுமயங்க, குமாரக்கடவுள், இதன்பொருளையறியாது நீ படைத்தற் றொழில்செய்வதெங்ஙனமென்று குட்டிச்சிறைப்படுத்திச் சிலகாலம் தாமேபடைத் தற்றொழிலைநடாத்தினர். இச் சரித்திரம் மேல் அயனைச்சிறைபுரிபடலத்தில் விரி வாகக்கூறப்பட்டது. பிரமதேவர் பிரணவப்பொருளைத் தவறாகக்கூறியதனாற் குமா ரக்கடவுள் சிறைப்படுத்தினரெனக் காஞ்சிப்புராணங்கூறும். பிரணவப்பொருள் சிவபெருமானும் அவரோடபேதமாகிய தாமுமென்பதே குமாரக்கடவுளின் திருவுள் ளம். சிவபெருமானும் பிரமாவின் சிறையை நீக்கும்படிவந்து பிரார்த்தித்த தேவர் களுக்கு ''பிரணவத்தின்பொருள் சிவபெருமானாகிய நாமும் நம்மகனாகிய குமாரக் கடவுளுமென்பதேயாம். சதாசிவோமெனப் பன்முறை கூறும்வேதம் சுப்பிரஹ் மண்யோமென மும்முறை முழங்காநின்றது'' என்றுகூறிச் சிறையினின்று விடுவித் தனர். இதனை

> ''.............................................. பூந்தே,
> நக்கனறுந் தொடையிதழிக் கடவுளவர் தமைநோக்கி நவில்வா னென்னே
> யக்கமலன் விளம்பியவா நம்மையுநம் புதல்வனையு மன்றே மான
> மிக்கபுகழ்ச் சுருதியெலாம் பிரணவத்தின் பொருளாக விளம்பு மாறே.''

எனவும்,

> '' எக்கலைக்கும் பூதங்க ளெவற்றினுக்கும் பிரமனுக்கு மீச னென்னத்
> தக்கமுதல் பரப்பிரமஞ் சதாசிவனே மெனவேதஞ் சாற்று மல்லான்
> முக்கனல்சூழ் வேள்வியிற்சுப் பிரமணிய னேமெனவு முக்காற் கூறும்,
> ............................ ............................................''

எனவும் வருங் காஞ்சிப்புராணத்திருவிருத்தங்களானும், முன்னர்ப் பூமலர் என் னுஞ் செய்யுளில் மாமறை முதற்கொரு வடிவமாகியோன் எனச் சிவபெருமானை யும் பிற்செய்யுளில் தாரகத்துருவமாந்தலைமையெய்திய......அறுமுகன் எனச் சுப்பி ரமணியக்கடவுளையும் இந்நூலாசிரியர்கூறித் துதித்தமையானும் உணர்க. திருவா வினன்குடி இக்காலத்திற் பழனியென வழங்குகின்றது. (14)

நீரகத் தேதனை நினையு மன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீத்திடுந்
தாரகத் துருவமாந் தலைமை யெய்திய
ஏரகத் தறுமுக னடிக ளேத்துவாம்.

இ—ள்: நீர் அகத்தே தனை நினையும் அன்பினோர் — நற்குணம் பொருந்திய மனத்தின்கண்ணே தமமைத் தியானிக்கும் அடியாருடைய, பேர் அகத்து அலமரும் பிறவி நீத்திடும் — பெரிய உலகங்களிற் சுழன்றுதிரியும் பிறவியைப் போக்குகின்ற, தாரகத்து உருவம்ஆம் தலைமை எய்திய — பிரணவத்தின் வடிவமா யிருக்கின்ற தலைமையைப் பொருந்திய, ஏரகத்து அறுமுகன் அடிகள் ஏத்துவாம் — திருவேரகமென்னுந் தலத்தி லெழுந்தருளி யிருக்கின்ற சண்முகப்பெருமானது பாதங்களை யாம் துதிப்பாம் எ—று.

அத்து நான்கும் சாரியைகள். ஏ அசை, நீர் என்பது பண்புப்பொருளுணர்த்தும் மைவிகுதி கெட்டுநின்றது. தனை யென்பதில் னகரவொற்றுத் தொக்கது. அன்பினோர் பிறவி நீத்திடும் அறுமுகன் என இயையும். அகம்-ஆகுபெயர். அகத்து அலமரும் என்பதற்கு, பாவத்தினால் சுழலுகின்ற எனப்பொருள் கூறுவாருமுளர். தாரகம் - (துன்பசாகரத்திநின்றுங்) கடப்பிப்பது. திருவேரம் மலைநாட்டகத்தோர் திருப்பதி; சுவாமிமலையென்பர்சிலர். மனத்துக்குரிய நற்குணமாவன:— பஞ்சாக்ஷரத்தைச் செபித்தல் மானதபூசை சிவோகபாவனை என்பனவாம். இதனை,

> உளத்தி லக்கண மூன்றென் றுரைத்தன
> மளக்கி னஞ்செழுத் துன்ன லகப்பட
> வளர்க்கு மானத பூசனை மைக்கடுக்
> களத்த னைத்தனை யொன்றெனக் காணுதல்.

எனவரும் உபதேசகாண்டச் செய்யுளாலுமுணர்க. (15)

> ஒன்றுதொ றுடலை யொருவி யாவிமெய்
> துன்றுதொ றுடலைத் தொடங்கி ஐவகை
> மன்றுதொ றுடிய வள்ளல் காமுறக்
> குன்றுதொ றுடிய குமரற் போற்றுவாம்.

இ—ள்: (ஆவி) ஒன்றுதொறு ஆடலை ஒருவி—ஆன்மாக்கள் (சுத்தமாயா காரணத்தில்) ஒடுங்குந்தோறும் பஞ்சகிருத்தியத் திருவிளையாட்டை நீங்கியும், ஆவி மெய் துன்றுதொறு ஆடலை தொடங்கி - (அவ்வான்மாக்கள்) சரீரங்களிலே (இருவினை நுகர்ச்சியின் பொருட்டுச்) செறியுந்தோறும் (அந்தத்) திருவிளையாட்டை முயன்றும், ஐவகை மன்று தொறு ஆடிய வள்ளல் காமுற — (இவ்வாறே) பஞ்சசபைகடோறுந் திருநிருத்தம்புரிந்த அருள்வள்ளலாகிய சிவபெருமான் விரும்புமாறு, குன்று தொறு ஆடிய குமரன் போற்றுவாம்—மலைகடோறுந் திருவிளையாடலைச் செய்த முருகக்கடவுளை யாம் துதிப்பாம் எ—று.

வள்ளல்—கொடைக்குணமுடையவர். ஒன்றுதல்—கேவலாவத்தை; மெய்துன்றுதல்—சகலாவத்தை. கேவலாவத்தையாவது; சர்வசங்காரகாலத்து ஆன்மாக்கள் சுத்தமாயாகாரணத்திலே யொடுங்கிச் சிருட்டிகாலமளவும் யாதொரு நினைவுமின்றி யிருப்பது; சகலாவத்தையாவது: சிருட்டிதொடங்கிச் சர்வசங்காரகாலமளவும் ஆன்மாக்கள் எண்பத்துநான்குலக்ஷயோனிபேதங்களிற் பிறந்திறந்துழலுதல்.

சிவபெருமான் ஐவகைமன்றுதோறுமியற்றுமாடல் பஞ்சகிருத்தியமான வைதிக நடனமாதலின் 'ஆடலையொருவி ஆடலைத்தொடங்கி ஐவகைமன்றுதொறுடிய வள்ளல்' என்றார். இதனை

தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்கார — மூற்றமா
யூன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

என்பதனானுமறிக.

மைந்தருடைய விளையாட்டின் அற்புதத்தைக்கண்டுழித் தந்தையர்க்கு ஆர்வ மிகுவது இயல்பாதலின் 'மன்றுதொறாடியவள்ளல்காமுறக் குன்றுதொறாடியகுமரன்' என்றார். முருகக்கடவுள் திருவிளையாடலியற்றிய சிலதலங்களைக் குன்றுதொறாடற் றலமென வழங்குப. பஞ்ச சபைகளாவன:— திருவாலங்காட்டில் இரத்தினசபையும் தில்லையிற் கனகசபையும் மதுரையில் வெள்ளிச்சபையும் திருநெல்வேலியிற் றாமிர சபையும் திருக்குற்றாலத்திற் சித்திரசபையுமாம். (16)

எழமுதி ரைப்புனத் திறைவி முன்புதன்
கிழமுதி ரிளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களிறென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்.

இ—ள்: எழு அம் முதிரை புனத்து இறைவி முன்பு—வளர்ந்த அழகிய தினைப்புனத்திலிருந்த தலைவியாகிய வள்ளியம்மையார்க்கு முன்னாக, தன் கிழம் முதிர் இளநலம் கிடைப்ப—தம்முடைய விருத்தப் பருவமானது மிக்க இளமையின் பத்தைப் பெறும்பொருட்டு, முன்னவன் மழ முதிர் களிறு என வருதல் வேண்டிய— தமையனாராகிய விநாயகக்கடவுள் இளமைமிக்க யானையாகவருதலைவிரும்பிய, பழ முதிர்சோலையம் பகவன் போற்றுவாம்—பழமுதிர்சோலைத் தலத்திலெழுந்தருளிய கடவுளை யாம் துதிப்பாம் எ—று.

அம் சாரியை. 'முதிரைப்புனத்துஇறைவி எழ' எனக் கூட்டி, தினைப்புனத் தின்கண்ணே வள்ளிநாயகியெழுந்தருள எனப்பொருள் கூறினுமாம். முதிரை யென்பது புன்செய்த்தானியங்களுக்குரிய பொதுப்பெயர்; ஈண்டுத்தினையையுணர்த் திற்று. இளநலம். இளமைப்பிராயத்திலனுபவிக்கப்படுமின்பம். பகவன்-ஆறுகுணங் களையுமுடையோன். கிடைப்பவென்னுஞ்செயவெனெச்சங் காரியப்பொருளில்வந் தது. வள்ளிநாயகியையொருப்படுத்துவது தமக்கெளிதாகவும் விநாயகக்கடவுளை வேண்டியது, கருமாரம்பங்களில் அவரைப் பூசிக்கவேண்டுமென்னும்நியதியை உலகி னரிகவாவண்ணம் நாட்டுந் திருவிளையாடலேயென்பதை விளக்க 'முன்னவன்' என்றார். பழமுதிர்சோலை இக்காலத்தில் அழகர்கோயிலெனப் பெயர்பெற்று விஷ் ணுதலமாகவழங்குகின்றது. ஆறுதாரங்களெனவழங்குஞ் சுப்பிரமணியத்தலங்களா றும் முறையே ஆறுசெய்யுட்களாற்றுதிக்கப்பட்டன. (17)

ஈறுசேர் பொழுதினு மிறுதி யின்றியே
மாறிலா திருந்திடும் வளங்கொள் காஞ்சியிற்
கூறுசீர் புனைதரு குமர கோட்டம்வாழ்
ஆறுமா முகப்பிரா னடிகள் போற்றுவாம்.

இ—ள்: ஈறு சேர் பொழுதினும் இறுதி இன்றி—(உலகங்கண்) அழிவுபெறுங் காலத்திலும் அழிதலின்றி, மாறுஇலாது இருந்திடும்வளம் கொள் காஞ்சியில்— ஒப்பற்றதாயிருக்கின்ற வளம்பொருந்திய காஞ்சீபுரத்தின்கண்ணே, கூறுசீர் புனை

தரு குமரகோட்டம் வாழ்—புலவர்களாற் புகழப்படுகின்ற சிறப்பைப் பொருந்திய குமரகோட்டமென்னுந் திருக்கோயிலில் வீற்றிருக்கின்ற, மா ஆறுமுக பிரான் அடிகள் போற்றுவாம்—பெருமைபொருந்திய ஆறுதிருமுகங்களையுடைய பெருமானது பாதங்களை யாம் துதிப்பாம் எ—று.

ஏ அசை. இல்லாதென்பது இலாதெனத்தொக்கது. கிருதமுதலிய நான்கு யுகங்களும் ஒருமுறை நிகழ்வது ஒருசதுர்யுகம்; இந்தச் சதுர்யுகம் ஆயிரநிகழ்வது பிரமாவுக்கோர்பகல்; இப்பகல்முடிவிலே மூவுலகங்களுஞ் சலப்பிரளயத்தாலழியும் பகல்முடிந்தபின்னர் ஆயிரஞ்சதுர்யுகநிகழ்வது பிரமாவுக்கு இராக்காலம்; இவ்விராக்கால முடிந்தபின் பகற்கால ஆரம்பத்தில் முன்னழிந்த உலகஞ்சிருட்டிக்கப்படும்.; இப்படிப்பிரமதினமுந்நூற்றறுபது நிகழ்வது ஓர் பிரமவருடம்; இப்படி நூறுவருடமுடிவது பிரமகற்பம். அஃதாவது பிரமாவின் ஆயுண்முடிவு. ஈண்டுக் காட்டிய பகன் முடிவிலும் ஆயுண்முடிவிலும் காஞ்சீபுரம் அழிவுறாது பிரளயசித்தெனப் பெயர்பெறுதலின் 'ஈறுசேர்பொழுதினுமிறுதியின்றி...இருந்திடும் ..காஞ்சி' என்றார். இதனை நகரப்படலத்து அறுபத்தைந்தாஞ்செய்யுளானுமுணர்க. இச்செய்யுளால் வழிபடுமூர்த்தி துதிக்கப்பட்டனர். (18)

## திருநந்திதேவர்

ஐயிரு புராணநூ லமலற் கோதியுஞ்
செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையான்
மெய்யறு சூள்புகல் வியாத னீட்டிய
கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்.

இ—ள்: ஐ இரு புராணநூல் அமலற்கு ஓதியும்—பத்துப் புராணசாத்திரங்களைச் சிவபெருமானுக்கு (உரியனவாகக்) கூறியும், செய்யபல் மறைகளும் தெரிந்தும்—செப்பமாகிய பல வேதங்களையுமுணர்ந்திருந்தும், மாயையால் மெய் அறு சூள் புகல் வியாதன் நீட்டிய கை அடும் - பரமபதியின்மாயையினுற் பொய்ச் சபதத்தைச்சொல்லிய வியாசமுனிவர் உயர்த்திய கையை (சபித்துத்) தம்பனஞ் செய்த, நந்திதன் கழல்கள் போற்றுவாம்—திருநந்திதேவரது பாதங்களை யாம் துதிப்பாம் எ—று.

புராணநூல் இருபெயரொட்டு. அமலன் - மலரகிதர். மறை - மறைந்த பொருளையுடையது; அதிகாரமில்லாதார்க்கு மறைக்கப்படுவதெனினுமாம். ஓதியும் தெரிந்தும் என்பவற்றிலும்மை உயர்வுசிறப்பு, மறைகளுமென்பதிலும்மை சிறப்போடு முற்றுமாம். திருமால் முதலியோரைப் பரமென்று துதிக்கும்பாகமும் வேதங்களிலுளவாயினும் சிவபெருமானே முழுமுதற்கடவுளென்று கூறும்பாகமே சிறந்ததாதலால், அவற்றையுணர்த்துதற்குச் 'செய்யபன்மறைகளும்' எனக் கூறினர், வியாசமுனிவர் காசியம்பதியில் விசுவநாதசுவாமியின் சன்னிதியினின்று கையையுயர்த்தி '' ஸத்யம்ஸத்யம்புனஸ்ஸத்யம் நதைவம்கேசவாத்பரம் '' என்று கூற, நந்திதேவர் கோபங்கொண்டு உயர்த்தியகை பெயராதுநிற்கும்படி சபித்தருளினரென்க. இச்சரித்திரம் காசிகாண்டத்தில் விரித்துக் கூறப்பட்டது.

சிவநிந்தை பரந்து வந்தகாலத்தில் அதனை யொழித்தற்காக இறைவன் செய்த தோர்மாயம் இது என்பதும், வியாச முனிவர் இந் நிகழ்ச்சிக்கு முந்திபே உண்மையையுணர்ந்து பலநூல்களையுஞ் செய்துள்ளாரென்பதும் உய்த்துணர்தற்பாலன. (19)

## திருஞானசம்பந்த சுவாமிகள்

பண்டைவல் வினையினாற் பாயு டுத்துழல்
குண்டரை வென்றுமுன் கூடல் வைகியே
வெண்டிரு நீற்றொளி விளங்கச் செய்திடு
தண்டமிழ் விரகன்மெய்த் தாள்கள் போற்றுவாம்.

இ—ள்: பண்டைவல் வினையினால் பாய் உடுத்து உழல் குண்டரை முன் வென்று—பழைய தீவினையினாலே பாயை (ஆடையாக) உடுத்துத்திரிகின்ற கீழ்மக்களாகிய சமணரை முற்காலத்தில் வெற்றிகொண்டு, கூடல் வைகி—மதுராபுரியில் வீற்றிருந்து, வெண் திரு நீற்று ஒளி விளங்க செய்திடு—வெள்ளிய விபூதியின் பிரகாசத்தை விளங்கும்படி பரப்பிய, தண் தமிழ் விரகன்—செந்தமிழ்ச்சாதுரியமுடையராகிய திருஞானசம்பந்தசுவாமிகளது, மெய் தாள்கள் போற்றுவாம்—மெய்மையாகிய பாதங்களை யாம் துதிப்பாம் எ— று.

ஏ அசை. ஈரடிமேல்வைப்பு மூவடிமேல்வைப்பு ஏகபாதம் எழுகூற்றிருக்கை மாலைமாற்று முதலிய இலக்கணங்களமையத் தேவாரங்களையோதினமையால் இவரை முத்தமிழ்விரகரென ஆன்றோர் கூறினர். வெண்ணிற விபூதியேயன்றி ஏனைநிறவிபூதி தரிக்கலாகாமைபற்றி 'வெண்டிருநீற்றொளி' என்றார். இதனை,

> கறுப்புச் சிவப்புக் கடியதொரு தூமம்
> வெறுப்புடனே பீதம் விடு.

என்பதனானுமறிக திருநீற்றினொளியை விளங்கச்செய்தனரெனவே சைவசமயத்தைப் பரவச் செய்தனரென்பது குறிக்கப்பட்டது.

திருஞானசம்பந்தசுவாமிகள் சமணரை வென்று சைவத்தைப் பரவச்செய்த சரித்திரம்; முன்னொருகாலத்திலே பாண்டியராசன் சமணருடைய துர்ப்போதனையான் மயங்கிச் சத்தியமார்க்கமாகிய சைவசமயத்தைவிடுத்துச் சமணசமயத்திற் பிரவேசித்தான் அரசன் அங்ஙனமாக, மன்னனெப்படி மன்னுயிரப்படி என்றவாறே குடிகளும் அச்சமயத்திற் புகுந்தன. சைவமார்க்கங்குன்றிற்று. அங்ஙனமாயும் பாண்டியனது மனைவியாராகிய மங்கையர்க்கரசியாரும் முதன்மந்திரியாராகிய குலச்சிறையாரும் அரசனறியாவண்ணஞ் சைவநெறியிலொழுகினார்கள்; அங்ஙனமொழுகு நாட்களிலே பரசமயகோளரியாகிய திருஞானபசம்பந்தமூர்த்திநாயனார் வேதாரணியத்திலெழுந்தருளினரென அவர்கள் கேள்வியுற்றுப் பரிசனரைக்கொண்டு தம்மூர்க்கழைப்பித்தனர். இவரது வரவைக்கண்ட சமணர்யாவரும் அரசனுக்கறிவித்து அவனனுமதியுடன் அவர்வந்துதங்கியிருந்த திருமடத்தில் தீமூட்டினர். மடத்திலிருந்த பரிசனர்கள் அதுகண்டு அக்கினியைச் சிதைத்து நீக்கிவிட்டு, இச்செய்தியைச் சுவாமிகளுக்கு விண்ணப்பஞ்செய்ய அவர் அரசனால் விளைந்ததிதுவென்பதையுணர்ந்து ''அமணர்கொளுவுஞ்சுடர், பையவே சென்று பாண்டியற்காகவே '' என்பதையமைத்துப் பதிகம் பாடியருளினார்' உடனே அந்த அக்கினியின் வெம்மை பாண்டியனைப்பற்றியது; அதுகண்ட சமணர் அந்நோய்தீரும்பொருட்டுப் பல உபாயஞ் செய்தும் ஒன்றும் பயன்படாவாக நோய் அதிகரித்தது. உடனே பாண்டிமாதேவியாருங் குலச்சிறையாரும் அரசனைநோக்கி ''திருஞானசம்பந்தசுவாமிகளுக்குச் செய்த தீமையினால் இது விளைந்தது; அவருடைய அருள்பெற்றால் மாறும்'' எனக் கூறினர். அதுகேட்ட பாண்டியன் ''அவரையிங்கே அழையுங்கள், என்னுடைய

நோயை நீக்கினவரெவரோ அவர்பக்கஞ்சேர்வேன்'' என்றனன். பாண்டிமாதே வியாருங் குலச்சிறையாரும் அதனைத் திருஞானசம்பந்தசுவாமிகளுக்கறிவித்து வேண்ட, அவர் பாண்டியனிடத்திற்கெழுந்தருளினார். அவரைத் தரிசித்தமாத்தி ரத்தே பாண்டியனுடைய வெப்புநோய் சிறிதுதணிந்தது. அதுகண்டசமணர் தஞ் சமயநூல்களை எடுத்துச்சொல்லி வாதுசெய்தனர். அரசன் திருஞானசம்பந்தசுவா மிகளையும் சமணரையும் நோக்கி ''நும் மிருதிறத்தினருள்ளும் எனது நோயை மாற்றியவரே வாதில்வென்றவர்'' என்றனன். சமணர் இடப்பாகநோயைத் தீர்ப் போமென்று பேசித் தமது மந்திரங்களான் மாற்றமாட்டாது தோற்றனர். திரு ஞானசம்பந்தசுவாமிகள் ''மந்திரமாவது நீறு'' என்னுந் திருப்பதிகத்தைப்பாடித் திருநீறினாலே தடவிமாற்றினார்.பின்னர்ச் சமணர்கள்''எங்கள் சமயக்கருத்தை ஏட்டி லெழுதி அக்கினியிலிடுவோம் வேவப்பெறுமையே வெற்றி'' என்றனர். திருஞானசம் பந்தசுவாமிகள் சம்மதித்துத் தாம்பாடிய தமிழ்வேதத்திருமுறையையவிழ்த்துத் திருக்கரத்தான் மறித்து, வந்துநேர்ந்த ''போகமார்த்தபூண்முலையாள்'' என்னுந் திருப்பதிகத்தைக்கழற்றி ''தளரிளவளரொளி'' என்னுந்திருப்பதிகத்தைப்பாடி அக் கினியிலிட்டனர். அவ்வேடு வேவாது பச்சையாய் விளங்கிற்று. சமணர்களும் தங் கள் நூற்பொருளையெழுதிய ஏட்டை இட்டனர். அது உடனே சாம்பராயிற்று, பின்னுஞ் சமணர்கள் ''நாங்களிருபக்ஷத்தேமும் எங்கள் சமயவுண்மைகளெழுதப் பட்ட ஏட்டை ஓடுகின்ற வைகையாற்றிலிடுவோம்; எதிர்ந்துசெல்லுமேடே மெய்ப் பொருளுடையது'' என்றனர். அப்பொழுது குலச்சிறைநாயனார் இனிச்செய்யப் படும்வாதிலே தோற்றவர்களுக்குச்செய்வது யாதெனவினவ, சமணர் வாய் சோர்ந்து ''தோற்றோமாயின் எங்களை இவ்வரசர் கழுவிலேற்றக்கடவர்'' என்ற றனர். அதன்பின் யாவரும் வைகையாற்றையடைந்தனர். அப்போது சமணர் ''அத்திநாத்தி'' என்றெழுதிய ஏட்டை அவ்வாற்றிலிட்டனர். அது விரைந்துகடலை நோக்கி ஓடிற்று. திருஞானசம்பந்தசுவாமிகள் ''வாழ்கவந்தணர்'' என்னுமுதற் குறிப்பையுடைய திருப்பாசுரத்தைப்பாடி ஏட்டிலெழுதி வைகைநதியிலிட்டனர். அது நீரைக்கிழித்துக்கொண்டு எதிரே சென்றது அப்பாசுரத்தில் ''வேந்தனுமோங்குக'' என்றுபாடியதனால் அப்பாண்டியனுடைய கூனும் நிமிர்ந்தது. பாண்டியன் வாதுபேசித்தோற்ற எண்ணாயிரஞ் சமணரையுங் கழுவிலேற்றினன். பின்பு திரு ஞானசம்பந்தசுவாமிகள் விபூதிகொடுத்தருள அரசன் நமஸ்கரித்து வாங்கி அணிந் தான். உடனே பாண்டியநாட்டிலுள்ளார யாவரும் விபூதியையணிந்தனர் என்ப தாம். இச்சரித்திரத்தையும் பிற்செய்யுட்களில் வரும் திருநாவுக்கரசுநாயனார் சுந் தரமூர்த்திநாயனார் சரித்திரங்களையும திருத்தொண்டர் பெரியபுராணத்தாற் றெள்ளிதிலுணர்க. (20)

## திருநாவுக்கரசு சுவாமிகள்

பொய்யுரை நூல்சில புகலுந் தீயமண்
கையர்கள் பிணித்துமுன் கடல கத்திடு
வெய்யகற் றோணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் லரசர்தா டொழுது போற்றுவாம்.

இ—ள்: பொய் உரை நூல் சில புகலும் தீ அமண் கையர்கள்—பொய்ம் மொழிகளையுடைய நூல்கள் சிலவற்றை (மெய்ந்நூலென்று) கூறுங்கொடிய சமண ராகிய கீழ்மக்கள், முன் பிணித்து கடல் அகத்து இடும் வெய்ய கல் தோணி ஆய் மிதப்ப—முற்காலத்திலே கட்டிக்கடலிலிட்ட கொடியகல்லே தெப்பமாக

மிதக்க, மேல் படு—(அதனை ஆதாரமாகக்கொண்டு) கரையேறிய, துய்யசொல் அரசர் தாள்—பரிசுத்தராகிய திருநாவுக்கரசுசுவாமிகளது திருவடிகளை, தொழுது போற்றுவாம்—யாம் கைதொழுது துதிப்பாம் எ—று.

உலகமெல்லாம் நித்தியமாயிருக்குமருகேசுரன் குருத்துவமாத்திரத்திலே கருத்தாவாயிருப்பனென்றிவ்வாறு பிதற்றும் நூலாதலாற் 'பொய்யுரை நூல்' எனவும் தவறவிடா தமிழ்த்தும் பெரும்பாரமுடைய கல்லாதலால் 'வெய்யகல்' எனவும், நாவுக்கரசு எனத் திருவதிகை வீரட்டானேசுரரா லருளப்பெற்றமையின் 'துய்ய சொல்லரசர்' எனவும் விசேடித்தார்.

திருநாவுக்கரசுசுவாமிகளைச் சமணர் கடலிற்கட்டியிட்ட சரித்திரம்: — திருமுனைப்பாடி நாட்டிலே வேளாளர்குலத்திலே புகழனாரென்பவருக்குத் திலகவதியாரென்னும் புத்திரியும் மருணீக்கியாரென்னும் புத்திரரும் பிறந்து வளருநாட்களிலே, தந்தையாகிய புகழனார் சிவபதமடையத் தாயாரும் சககமனஞ்செய்தனர். அதன்மேல் அந்தப் புத்திரி புத்திரரிருவரும் பலதருமங்களைச்செய்து வருநாளில் ஒருநாள், மருணீக்கியார் பாடலிபுரமென்னுநகரத்திற் சமணர்களுடைய பள்ளியையடைந்து அங்குள்ள சமணரது துர்ப்போதனையான்மயங்கி ஆருகதசமயமே முத்தியடைதற்குரிய நெறியென்றுதுணிந்து அச்சமயத்திற்பிரவேசித்து அந்தச் சமணசமயநூல்களையெல்லாங்கற்றுப் பாண்டித்தியமுடையராய்ப் புத்தர்களை வாதில்வென்றனர். அதுகண்டசமணர் அவருக்குத் தருமசேனரெனப் பெயரிட்டு அவரைத் தஞ்சமய குரவரெனக்கொண்டு வழிபட்டனர். திலகவதியார் திருவதிகைவீரட்டானேசுரரைப் பணிந்துவருங்காலத்தில் ஒருநாள் ''சுவாமீ! சமணசமயப்படுகுழியில்விழுந்த தமியேனுடைய தம்பியை மீட்டுக் காப்பாற்றல் வேண்டும்'' என்று பெருமானைப் பிரார்த்தித்தனர். சிவபெருமான் திலகவதியாருக்குச் சொப்பனத்திலே தோன்றி ''உன்தம்பி நம்மையடையும்படி முற்பிறவியிற்செய்த தவத்திற் சிறிது வழுவியதனால் அன்னியமதத்திற் பிரவேசித்தான்; இனிச் சூலைநோயினாலாட்கொள்வோம்'' என்று மறைந்தருளினார். அதன்மேல் தருமசேனருக்குச் சூலைநோயுண்டாயிற்று. அந்நோயை மாற்றத்தக்க மந்திரப்பிரயோக முதலியவைகளையெல்லாஞ் சமணர் செய்தும் மாறாமையாற் கைவிடத் தருமசேனர் தமது சகோதரியாரிருக்குந் திருமடத்தையடைந்து அவரது பாதங்களில் விழுந்தயர்ந்தார். திலகவதியார் அவரை யெழுப்பி இது சிவன்செய லென்பதை யுணர்த்திச் சிவபெருமானுக்குத் தொண்டு செய்யும்படிகூறி விபூதிகொடுத்துப் பஞ்சாக்ஷரத்தை உபதேசித்தார். மறுநாள் திலகவதியார் தம்பியாரைத் திருக்கோயிலுக்கழைத்துக்கொண்டுசென்று விடுத்தனர். அவர் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து எழுந்துநின்று ''கூற்றாயினவாறு விலக்ககிலீர்'' என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினர். உடனே சூலைநோய் நீங்கிற்று, அதன்மேல் அற்புத சின்மய மதுரத் தேவாரங்களைப் பாடியதனால் நாவுக்கரசெனச் சிவபிரானால் அசரீரிவாக்கருளப்பெற்றுச் சைவசமயத்தினராய்ச் சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய்துவந்தார். தஞ்சமயாசாரியராயிருந்த இவர் சைவசமயத்திற் பிரவேசித்தமையின் இனி நஞ்சமயம் அழிந்துவிடுமென்று துன்பமேலிட்டுத் தம்மரசனுக்கறிவித்து அவரைத்தம்மூர்க்கழைப்பித்துக் கொல்லுதற்கு முயன்று, நீற்றறையிலிட்டும் நஞ்சூட்டியும் யானையையேவியும் தங்கருத்துச் சித்திபெறாமையினால், ஒரு பெருங்கல்லோடணைத்துக் கட்டிப் படகிலேற்றிக்கொண்டு சென்று நடுக்கடலிற்றள்ளினர். அப்போது திருநாவுக்கரசுசுவாமிகள் ''சொற்றுணை வேதியன்'' என்னும் நமச்சிவாய திருப்பதிகத்தைப்பாடக் கல்லானது அவர் மேற் பக்கத்திலிருக்கத் தக்கதாக மிதந்தது; கயிறுகள் அறுந்துபோயின; வருணபகவான்

கல்லே தோணியாக அவரைத் திருப்பாதிரிப்புலியூரென்னுஞ் சிவதலத்தின் பக்கத் திற் சேர்த்தனன் என்பதாம்.

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்

வறந்திடு பொய்கைமுன் னிரம்ப மற்றவண்
உறைந்திடு முதலைவந் துதிப்ப வன்னதால்
இறந்திடு மகன்வளர்ந் தெய்தப் பாடலொன்
றறைந்திடு சுந்தர னடிகள் போற்றுவாம்.

இ-ள்: வறந்திடு பொய்கை முன் நிரம்ப — வற்றிய தடாகம் முந்தியபெற் றியதாய் நீர் நிறையவும், அவண் உறைந்திடும் முதலை வந்து உதிப்ப — அத்தடாகத் திலிருந்த முதலையானது வந்து தோற்றவும், அன்னதால் இறந்திடும் மகன் வளர்ந்து எய்த — அந்தமுதலையான் மாண்ட பிராமணச் சிறுவன் (கழிந்த வயதினளவுக்கேற்ப) உருவளர்ந்து (அம்முதலைவாயினின்று) தோற்றவும், பாடல் ஒன்று அறைந்திடு — ஓர் தேவாரத் திருப்பதிகத்தைக் கூறியருளிய, சுந்தரன் — சுந்தரமூர்த்திநாயனு ருடைய, அடிகள் போற்றுவாம் — பாதங்களை யாம் துதிப்பாம் எ—று.

மற்று - வினைமாற்று. முன் என்பதற்கு முற்காலத்து எனப் பொருள் கூறினு மாம். செய்வெனெச்சங்கள் காரியபபொருளன.

சுந்தரமூர்த்திசுவாமிகள் முதலையான்மாண்டசிறுவனைத் தோற்றுவித்த சரித்திரம்: முன்னொரு காலத்திற் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தோழராகிய சேரமான்பெருமா ணுயனாரைக் காணும் பொருட்டுப் புறப்பட்டுப் போமபோது கொங்க தேசத்தி லுள்ள திருப்புக்கொளியூரில் ஒரு வீட்டில் மங்கலவொலியும் அடுத்த மற்றோர் வீட்டில் அழுகையொலியும் நிகழக் கேட்டு, ஐந்து வயதுள்ள இரண்டு குமாரர் முன்னொருநாட் குளத்திலே ஸ்நானம் செய்தபோது ஒரு புதல்வன் முதலைவாய்ப் பட்டிறந்தா னென்பதையும் இறவாதெஞ்சிய குமாரனுக்குபநயனஞ் செய்ய இறந்த குமாரனது பெற்றோர் தம் புத்திரனை நினைத்துப் பிரலாபிக்கின்றன ரென்பதையும் அங்குநின்ற பிராமணரா லுணர்ந்து திருவுளமிரங்கினர். அப்பொழுது புதல்வனை யிழந்த பிராமணரும் மனைவியும் வந்து முகமலர்ச்சியோடு அவரது பாதங்களைப் பணிந்தனர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவரை நோக்கி "அப்புதல்வனை முதலை விழுங்கியவாவி யெங்கே!" என்று வினவி அதன் கரையிற் சென்று பதிகம் பாடி யருளினர். உடனே அப்பொய்கை நீர் நிறையப்பெற்று முதலையை யுடைத்தாயது,

உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியாய்
அரைக்கா டரவா வாதியு மந்தமு மாயினுய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே
கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே.

என்னும் நான்காந் திருப்பாட்டு முடியு முன் யமன் அந்தப் புதல்வனுடைய உயி ரைக் கொண்டுவந்து அவ்வாவியிலுள்ள முதலை வயிற்றினுள்ளே சென்ற ஆண்டு களின் வளர்ச்சியையுடைய தேகத்துடன் புகுத்திவிட்டான். முதலை அப்புதல்வனைக் கரையிலுமிழ்ந்தது என்பதாம், (22)

### மாணிக்கவாசக சுவாமிகள்

கந்தமொ டுயிர்படுங் கணபங் கம்மெனச்
சிந்தைகொள் சாக்கியர் தியங்க மூகராய்
முந்தொரு மூகையை மொழிவித் தெந்தைபால்
வந்திடு மடிகளை வணக்கஞ் செய்குவாம்.

இ—ள்: உயிர் கந்தமொடு கண பங்கம் படும் என — ஆன்மாவானது பஞ்ச கந்தங்களுடனே கணந்தோறும் வேறுபாடடையுமென்று, சிந்தை கொள் சாக்கியர் — நினைத்திருந்த புத்தர்கள், மூகராய் தியங்க — ஊமைகளாய் (தருக்கிக்க லாற்ருது) மனஞ்சோர, முந்து ஒரு மூகையை மொழிவித்து — பிறவி தொடங்கிப் பேசாதிருந்த (அரசன் புதல்வியாகிய) ஒரு ஊமையைப் பேசுவித்து, எந்தை பால் வந்திடும் அடிகளை வணக்கம் செய்குவாம் — எம் பரமபிதாவாகிய சிவபெருமானிடத்துச் சாயுச்சியமான மாணிக்கவாசக சுவாமிகளை நாம் வணங்குவாம்எ—று.

ஒடு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. மகரவொற்று விரித்தல். கந்தம்—சமூகம். பஞ்ச கந்தங்களாவன: உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்பன. இவற்றுள், உருவகந்தமாவது: பிருதுவி அப்பு தேயு வாயு என்னும் பூதவுரு நான்கும் கடினம் ரசம் உருவம் கந்தம் என்னும் உபாதாயவுரு நான்கும் ஆகிய எட்டுமாம். வேதனு கந்தமென்பது: குசலவேதனை அகுசலவேதனை குசலாகுசலவேதனை யென்னு மூன்றுமாம். இவை முறையே சுகவறிவு துக்கவறிவு சுகதுக்கவறி வென்னும் பொருளன. குறிப்புக் கந்தமாவது: பொறி ஐந்துஞ் சித்தம் ஒன்றும் ஆகிய ஆறுமாம், பாவனு கந்தமாவது: புண்ணியம் பத்தும் பாவம் பத்துமாகிய இருபதுமாம். புண்ணியம் பத்தாவன: அருள் அவாவின்மை தவ விச்சை இனியவைகூறல் உண்மைகூறல் பயனுளகூறல் அறங்கூறல் வணக்கம் ஈகை தவஞ்செய்தல் என்பன. பாவம் பத்தாவன: தீச்சிந்தை ஆசை கோபம் கடுஞ்சொல் பொய்யுரை பயனிலகூறல் குறளைகூறல் களவு கொலை பயனிலசெயல் என்பன. இவ்விரு வகைகளுள்ளும் முதன் மூன்றும் மனத்தாலும், இடையன நான்கும் வாக்காலும், கடையன மூன்றுங் காயத்தாலும் நிகழ்வன. விஞ்ஞானகந்தமாவது புலனைந்தும் சிந்தனை யொன்றுமாகிய ஆருனுமறியும் அறிவு ஆறுமாம். உருவகந்தம் எட்டு. வேதனுகந்தம் மூன்று, குறிப்புக்கந்தம் ஆறு, பாவனுகந்தம் இருபது, விஞ்ஞானகந்தம் ஆறு ஆகப்பஞ்சகந்தவிரி நாற்பத்துமூன்றும். இதனை,

எட்டவை யுருவ மூன்று, வேதனை யாறு ஞான
மொட்டிய குறிப்போ ராறு செய்கை யுமிரு பதாகக்
கட்டிய பஞ்ச கந்தங் கணத்தினிற் பங்க மாகித்
தொட்டநாற் பத்து மூன்றுஞ் சுகதநூற் றுணிவ தாமே.

என்பதனுனுமறிக:

கணபங்கமாவது: பிரத்தியட்சம் அனுமானம் என்னும் பிரமாணங்களால் அறியப்படுகின்ற ஞானம் ஞேயம் என்னுமிரண்டும் கணந்தோறுஞ் சந்தானத்தே பேதப்படுதல். சந்தானம் - தொடர்ச்சி. கணமென்பது, எட்டுத் தாமரையிதழை யுளியூடறுக்கும் காலம். பங்கம்—சிதைவு. இக்கணபங்கம் வாயுசந்தானம், தீபசந்தானம், தாராசந்தானம், பிபீலிகாசந்தானமென நான்கு வகைப்படும். இவற்றுள், வாயுசந்தானம் வாயுவினெழுக்கம்: தீபசந்தானம் தீபத்தின் சுடரழிவு, தாராசந்தானம் நீரொழுக்கம்; பிபீலிகாசந்தானம் எறும்பினெழுக்கம், இவற்றைக் கெட்டுக்

கெட்டே போதல், கெட்டுக்ஷயித்தல், கெட்டுவர்த்தித்தல், கெட்டொத்து நிற்றல் எனவும் வழங்குப. இவற்றுற் போந்த பொருள்: உலகம் கணந்தோறும் வேறுபா டுற்றுக்கொண்டே யிருக்கு மென்பதாம். இவையெல்லாம் பௌத்தமத நூல்களிற் கூறப்பட்டன. வெற்றிலை பாக்கு சுண்ணம் என்னும் மூன்றுந் தம்முட் கூடுங்கூட் டத்தின்கண் ஓர் நிறவேறுபாடு தோன்றுதல்போலப் பிருதுவி முதலிய நான்கு பூதமுந் தம்முட் கூடியவழி ஓர் அறிவு வேறுபாடு தோன்றுவதல்லது உடம்பின் கண் அதற்கு வேருயுயிரென்ஞெரு பதார்த்தமில்லையென்பது புத்தர் கொள்கை.

மாணிக்கவாசக சுவாமிகளா லுண்மை யுணர்த்தப்பட்டவழியும் அதனை மெய் யென்று தெளியாது, பின்னுந் தங்கருத்தையே சாதிக்க நினைத்தவ ரென்பது போதர 'கந்தமொ டுயிர்படுங் கணபங்கம் மெனச் சிந்தைகொள் சாக்கியர்' என்றுர்.

**மாணிக்கவாசக சுவாமிகள் புத்தரை வென்ற சரித்திரம்:** முன்ஞெரு காலத்தில் ஈழநாட்டிற் புத்தசமயம் மிகப் பரவியது. அங்ஙனம் பரவி வரும்போது தேசங்க டோறுஞ்சஞ்சரித்து ஆங்காங்குள்ள தலமகிமை முதலியவற்றை ஆராய்ந்துணரும் ஒரு சிவனடியார் அவ்வீழமண்டலத்திற் போயினர், அவர் நிற்கும்போதும் இருக்கும் போதும் திருவம்பலமென் றுச்சரிப்பார். அவரது வரவைப் புத்தர் அரசனுக்குக் கூற அரசன் அவரை அழைப்பித்தனன். வந்த அடியார் அவ்விடத்திலிருக்கும் போதும் திருவம்பலமென்றுச்சரித்தனர். அப்போது அரசன் அவரை நோக்கி நீர் திருவம்பலமென்று சொல்வது எதற்காக என்று வினவினன். அடியார், புலி யூரின்கண்ணே கனகசபை யென்ருே ரம்பல மிருக்கின்றது, சிவபெருமான் ஆன் மாக்களுக்கு முத்தியைக் கொடுக்கும் பொருட்டு உமாதேவியுடன் அச்சபையி னின்று ஆனந்த தாண்டவஞ் செய்வார், அக்கடவுளைச் சிந்தித்தற்காகவே திரு வம்பலமென்று சொல்வது என்றனர், அச்சபையிலிருந்த புத்தகுரு அவ்விடத்திற் ருன் போய் வாதுசெய்து தன் சமயத்தைத் தாபிப்பேனென்றுகூறி, அரசனும் பரிசனரும் பின்வரப் புலியூரிலுள்ள திருக்கோயிலிற் போயிருந்தனன். அங்குள் ளார் எழுந்து போம்படி கூறவும், என்சமயத்தைத் தருக்கத்திஞலுட்டி யன்றிப் புறப்படுவதில்லை யென்று கூறினன். பின் அங்குள்ளார், சோழராசனுக்கும அந் தணர் முனிவர் புலவர் முதலிய எத்திறத்தார்க்கும் அடுத்த தினத்திற் சபைக்கு வரும்படி ஓலைபோக்கி இரவு சயனித்தனர். கனகசபேசர் அவர்கட்குச் சொப் பனத்திற்றேன்றி, "வாதவூரன் புத்தரை வாதில் வெல்வன், நீவிர் கவலையை யொழிமின்" என்றருளிச் செய்தனர். மறுநாள் யாவரு மொருங்குகூடிப் பெருமா னருளை வியந்துபேசி வாதவூரடிகட்கு அந்நிகழ்ச்சிகளை அறிவித்தழைத்தனர், அவ ரெழுந்தருளிவந்து சபையில் வாதில்வென்று புத்தர்களை ஊமைகளாக்கி, பிறவி யூமையாகிய புத்தராசனது மகளைக் கொண்டு முன் புத்தர் வினவிய வினக்கட் கெல்லாம் விடை கூறுவித்தனர், இச்சரித்திரத்தைத் திருவாதவூரடிகள் புராணத் தாற் றெள்ளிதினுணர்க. (23)

## திருத்தொண்டர்கள்

அண்டரு நான்முகத் தயனும் யாவரும்
கண்டிட வரியதோர் காட்சிக் கண்ணவாய்
எண்டகு சிவனடி யெய்தி வாழ்திருத்
தொண்டர்தம் பதமலர் தொழுது போற்றுவாம்.

இ—ள்: அண்டரும் நான்முகத்து அயனும் யாவரும் கண்டிட அரியது ஓர் காட்சி கண்ண ஆய் எண் தகு சிவன் அடி — தேவர்களும் நான்கு முகங்களை

யுடைய பிரமதேவரும் பிறரெல்லோரும் காணுதற்கரிய காட்சியைத் தம்மிடத் துடையனவாய் மதிப்பு வாய்ந்த சிவபெருமானது திருவடிகளை, எய்தி வாழ் — சேர்ந்து வாழுகின்ற, திருத்தொண்டர் தம் — சிறந்த அடியார்களுடைய, பத மலர் — பாத தாமரைகளை, தொழுது போற்றுவாம் — யாம் கைதொழுது துதிப் பாம் எ — று.

பிரமதேவரைப் பின்னர்க் கூறுதலால் முன்னர்த் தேவரென்றது அவரொழிந் தோரை யாவருமென்றது முனிவராதியரை. ஓர் அசைநிலை. காட்சிக்கண்ண என் பதில் கண் இடம். 'கண்ணவாய் ... தகு ... அடி' என இயைக்க. அரியது — குறிப்புமுற்றுப் பெயரெச்சம்.

தில்லைவாழந்தணர் முதலிய திருத்தொண்டர்களைத் துதிப்பான்புக்க ஆசிரியர், சமயாசாரியர் நால்வரையும் முறையே நான்கு செய்யுளாற் றுதித்து ஏனையரை இச்செய்யுளாற் றுதித்தனர், தேவர் முதலியோர்க்குக் காட்சிக்கும் அரியனவா யிருக்குந் திருவடிகள் தொண்டர்க்கு வாழ்விடமாயினவென்னும் விசேடந் தோன்ற 'அண்டரு நான்முகத் தயனும் யாவருங் கண்டிட வரியதோர் காட்சிக் கண்ணவா யெண்டகு சிவனடி யெய்திவாழ் திருத்தொண்டர்' என்றார். இதனால் திருமால் பிரமா முதலியோரினுந் தொண்டர்கள் விசேடமுடைய ரென்பது பெறப்பட்டது. "அரி யயனுக் கரியானை யடியவருக் கெளியானை" என்றார் சேக் கிழாரும். பதமலர் — ரூபகம். (24)

சரசுவதி

தாவறு முலகெலாந் தந்த நான்முகத்
தேவுதன் றுணைவியாய்ச் செறிந்த பல்லுயிர்
நாவுதொ றிருந்திடு நலங்கொள் வாணிதன்
பூவடி முடிமிசைப் புனைந்து போற்றுவாம்.

இ—ள்: தா அறும் உலகு எலாம் தந்த நான்முக தேவு தன் துணைவி ஆய் — குற்றமற்ற உலகங்க ளெல்லாவற்றையும் படைத்த பிரமதேவரது தேவியாய், செறிந்த பல் உயிர் நாவு தொறு இருந்திடும் — நெருங்கிய பலவகைப்பட்ட ஆன் மாக்களின் நாக்கடோறும் வசிக்கின்ற, நலம் கொள் வாணிதன் — நன்மை பொருந் திய சரசுவதியினது, பூ அடி — தாமரைமலர் போன்ற பாதங்களை, முடி மிசை புனைந்து போற்றுவாம் — சிரமேற் சூடித் துதிப்பாம் எ — று.

உகரங்களிரண்டும் சாரியைகள். வாணி - வாக்குக்குரிய தெய்வம். வாக்கு நாவினால் வசனிக்கப்படுதலாற் சரசுவதியை 'நாவுதொ றிருந்திடு ..... வாணி' என்றார். இதனை "மைந்தர் மடவார் தமது வாக்கிறைவி நீயே'! என்னுந் திரு வாதவூரடிகள் புராணச் செய்யுளாலு முணர்க. நான்முகத்தேவு — நான்கு முகங் களையுடைய கடவுள். உலகெலாந் தந்த நான்முகத் தேவுதன் துணைவியாய் ...... உயிர் நாவுதொ றிருந்திடு ...... வாணி' என்றதனால் உயிர்கட்குந் தாயெனச் சிறந்தவளென்பது பெறப்பட்டது.

அத்தகைய தேவி, நாவிற் சான்னித்தியமாக நின்று இக்காப்பியத்தை வழு வின்றி இனிது நிறைவேற்றல் வேண்டுமென ஆசிரியர் துதித்தவாறு. (25)

கடவுள் வாழ்த்து முற்றிற்று.

ஆகவிருத்தம் 30.

———

# 3. அவையடக்கம்

அவையடக்கமென்பது அவைக்கு அடங்குதலை யுணர்த்தும் பகுதியென விரிக்கப்படுதலால் நான்காம் வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. அவை — பெரியோர்குழு. அடக்கம் — தாழ்மை. கடவுளரை வாழ்த்தியபின் கற்றுணர்ந்த பெரியோரைப் பணிந்து தாமிந்நூல் செய்யப் புகுந்த காரண முதலியவற்றைக் கூறியே எடுத்துக்கொண்ட பொருளைக் கூறத் தொடங்கல் முறையாகலான் இது கடவுள் வாழ்த்தின்பின் வைக்கப்பட்டது.

இறைநில மெழுதுமு னிளைய பாலகன்
முறைவரை வேனென முயல்வ தொக்குமால்
அறுமுக முடையவோ ரமலன் மாக்கதை
சிறியதோ ரறிவினேன் செப்ப நின்றதே.

இ — ள்; சிறியது ஓர் அறிவினேன் — சிற்றறிவினையுடைய தமியேன், அறுமுகம் உடைய ஓர்அமலன் மாகதை செப்பநின்றது — ஆறு திருமுகங்களை யுடைய ஒப்பற்ற மலரகிதராகிய சுப்பிரமணியப்பெருமானது பெருமை பொருந்திய இப்புராணத்தைச் சொல்லத் துணிந்து நின்றதன்மை, இளைய பாலகன் — வயதிற் குறைந்த சிறுவன், இறை நிலம் எழுதும்முன் முறை வரைவேன் என முயல்வது ஒக்கும் — விரலினாலே நிலத்தில் எழுதப் பயிலுதற்கு முன்னே புத்தகத்தை யெழுதுவேனென்று துணிந்து முயற்சிசெய்தலைப்போலும் எ—று.

ஆல் என்பதும் சிறியதோர் என்பதில் ஓர் என்பதும் ஏகாரமும் அசைநிலைகள். இறை — ஆகுபெயர். எழுத்துப் பயிற்சியேயன்றி மதிநுட்பத்தாலொருவாறு நிறைவேற்றற்குரிய பருவமுமில்லா னென்பது போதர 'இளைய பாலகன்' எனவும், முற்றறிவுடைய கடவுளென்பது போதர 'அமலன்' எனவும், அவரின் மான்மியங்களை யுணர்த்தும் நூல்களுட் சிறந்ததென்பது போதர 'மாக்கதை' எனவும், அத்தகைத்தாய இந்நூலைப் பாடுதற்கேற்ற கல்வியும் கவித் திறமையுமமையப்பெற்றிலே னென்பது போதர 'சிறியதோரறிவினேன்' எனவும் கூறினார். இந்நூலைப் பாடி முடித்தல் தம்மாலியலாதென்பது உவமைமுகத்தால் விளக்கப்பட்டது. (1)

## வேறு

ஆன சொற்றமிழ் வல்ல வறிஞர்முன்
யானு மிக்கதை கூறுதற் கெண்ணுதல்
வான கத்தெழும் வான்கதி ரோன்புடை
மீனி மைப்ப விரும்பிய போலுமால்.

இ — ள்: ஆன சொல் தமிழ் வல்ல அறிஞர்முன் — சிறந்த சொற்களையுடைய தமிழ்ப் பாஷையில் வல்ல புலவர்களுக்கு முன்னே, யானும் இ கதை கூறுதற்கு எண்ணுதல் — (பாஷைவன்மை யில்லாத) தமியேனும் இப்புராணத்தைச் சொல்லுதற்கு நினைத்தல், வான் அகத்து எழும் வான்கதிரோன் புடை — ஆகாயத்தின்கண்ணே கிளருகின்ற பெரிய கிரணங்களையுடைய சூரியனுக்குப் பக்கத்தில், மீன் இமைப்ப விரும்பியபோலும் — நட்சத்திரங்கள் ஒளிபரப்ப விரும்பிய தன்மையைப்போலும் எ—று.

ஆல் அசை. உம்மை இழிவு சிறப்பு. விரும்பியது என்றது ஈற்றுயிர்மெய் குறைந்து நின்றது, சிறந்த சொற்களையுடைய தமிழாவது செந்தமிழ். சொல் ஆனதமிழ் என மாற்றிப் பொருள் கூறினுமாம். சொற்றமிழ் என்பதற்கு இலக்கணநூலெனப் பொருள் கூறுவர் சிலர், வடநூலார் சத்தமென வழங்குதல்பற்றி இக்கதை யென்றது கந்த புராணத்தை. இம்முயற்சி சித்தியாதலரி தென்பதும் ஒருவாறு சித்தியாயினும் கற்றுவல்ல புலவராற் செய்யப்பட்ட நூல்போல் மாட்சியுருதென்பதும் உவமை முகத்தால் விளக்கப்பட்டன. (2)

முன்சொல் கின்ற முனிவட நூறெரீஇத்
தென்சொ லாற்சிறி யேனுரை செய்தலான்
மென்சொ லேனும் வெளிற்றுரை யேனும்வீண்
புன்சொ லேனு மிகழார் புலமையோர்.

இ—ள்: சிறியோன்—சிற்றறிவினனாகிய யான், முனி முன் சொல்கின்ற வடநூல் தெரீஇ—(பேரறிவினராகிய) சூதமகாமுனிவர் முற்காலத்தில் (நைமிசாரணியவாசிகளுக்கு) உபதேசித்த வடநூற் காந்தபுராணத்தை அராய்ந்து, தென் சொலால் உரை செய்தலால்—தமிழ்ப்பாக்களாலே பாடுதலால், மென்சொலேனும் —(என்சொற்கள்) மென்சொற்களாயினும், வெளிற்றுரையேனும் — வெளிப் பொருட் சொற்களாயினும், வீண் (சொலேனும்)—பயனில் சொற்களாயினும், புன்சொலேனும் — இழிசொற்களாயினும், புலமையோர் இகழார்—கல்வியறிவினையுடைய ஆன்றோர்கள் நிந்திக்கமாட்டார்கள் எ—று.

முன் சொல்கின்ற என்பது இறந்தகாலத்தோடு நிகழ்காலமயங்கிய வழுவமைதி, சொல்லால் சொல்லேனும் என்பவற்றில் லகரவொற்றுத்தொக்கன. சிறியேனென்பதற்கேற்பச் சூதமுனிவர்க்குப் பேரறிவுடைமை வருவித்துரைக்கப்பட்டது. வடதிசைக்கண் பரந்துவழங்கியதால் ஆரியமொழியை வடமொழியெனவும், தென்றிசைக்கண்வழங்கியதாற் றமிழ்மொழியைத் தென்மொழியெனவும் வழங்குப. மென்சொல்—சுவையற்றசொல், சுவைகள்:— சொற்சுவை பொருட்சுவை என இரண்டு. அவற்றுட் சொற்சுவை:— குணம் அலங்காரம் என்பனவாம். பொருட்சுவை:— காமம் கருணை நகை வீரம் உருத்திரம் அச்சம் குறிப்பு வியப்பு சாந்தம் என்பனவாம். வீண்சொல்—நெல்லின்கட்பதர்போல அவ்வவ்விடத்தில் வேண்டப்படாது நிற்குஞ்சொல். புன்சொல்—அசப்பியமொழி. முனியை வியாசரென்பாருமுளர். பதினெண் புராணங்களையுங் கூறிய வியாசமுனிவரது மாணக்கருட் சிறந்த சூதமாமுனிவர் வடமொழியிலுபதேசித்த காந்தபுராணத்தையே சரித்திர பேதமுறுவண்ணந் தமிழிற்பாடுதலாற் சரித்திர மகிமையைப் பாராட்டி வழுக்களைச் சிந்தியாது இந்நூலை அறிவுடையோர் ஏற்றுக்கொள்வரென்பது இச் செய்யுளாலுணர்த்தப்பட்டது. (3)

சிந்து மென்பு சிரம்பிறை தாங்கினேன்
மைந்த னாதலின் மற்றவன் றானுமென்
சந்த மில்லுரை யுந்தரிப் பானெனக்
கந்த னுக்குரைத் தேனிக் கதையினை.

இ—ள்: சிந்தும் என்பு சிரம் பிறை தாங்கினோன் மைந்தன் ஆதலின்—சிதறிக்கிடக்கும் எலும்புகளையும் கபாலங்களையும் பாலசந்திரனையும் விரும்பித் தரித்த

சிவபெருமானது குமாரராதலால், அவன் தானும் என் சந்தம் இல் உரையும் தரிப்பான் என — அக்குமாரரநும் சிறியேனது இன்னிசையில்லாத பாக்களையும் ஏற்றுக்கொள்வாரென்றெண்ணி, கந்தனுக்கு இ கதையினை உரைத்தேன் — கந்தசுவாமிக்குரியதாக இப்புராணத்தைப் பாடினேன் எ — று.

மற்று அசைநிலை. தான் சாரியை. உம்மையிரண்டனுள் முன்னையது இறந்தது தழீஇயவெச்சம். பின்னையது இழிவு சிறப்பு; எச்சமுமாம். உரை — ஆகுபெயர். சிந்துமென்பென அடைகொடுத்துக் கூறினர் அதன் புன்மையை விளக்க; தசை தோல் முதலியன கழியப்பெற்ற எலும்பெனக்கூறினுமாம். தந்தையாகிய சிவபிரான் தாமேமுழுமுதற் கடவுளென்பதை எவருமுணர்ந்து வழிபடும்பொருட்டுக் கற்பங்கடோறுமிறந்த பிரமாமுதலியோரது எலும்புகளையுந் தலையோடுகளையுங் கலைதேய்ந்த சந்திரனையும் அவற்றினிழிவைப் பொருட்படுத்தாது தரித்தவாறே, மைந்தராகிய கந்தவேளுந் தமதற்புதத்தை யெவருமுணர்ந்து வழிபடும்பொருட்டுத் தமியேனுற் பாடப்பட்ட இப்புராணத்தைக் குற்றம் பாராட்டாது ஏற்றுக் கொள்வர்; கடவுளுமேற்றுக்கொள்வரேயானுற் புலவரேற்றுக் கொள்வதற்குத் தடையென்னையென முற்செய்யுளிற் சுட்டியகருத்து இச்செய்யுளால் வற்புறுத்தப் பட்டது. (4)

வெற்றெ னத்தொடுத் தீர்த்து வெளிற்றுரை
முற்று மாக மொழிந்தவென் பாடலிற்
குற்ற நாடினர் கூறுப தொல்லைநூல்
கற்று ணர்ந்த கலைஞரல் லோர்களே.

இ — ள்: வெற்றென தொடுத்து ஈர்த்து — வெறுமையாகச் சொற்களைத் தொடுத்திசைத்து, முற்றும் வெளிற்றுரை ஆக மொழிந்த என் பாடலில் — முழுதும் வெளிப்பொருளாகப்பாடிய எனது பாக்களிலே, தொல்லை நூல் கற்று உணர்ந்த கலைஞர் அல்லோர்களே — பழைய சாத்திரங்களைக்கற்றறிந்த புலவரல்லாதவர்களே, குற்றம் நாடினர் கூறுப — குற்றத்தைத் தேடிச் சொல்லுவார்கள் எ — று.

ஏகாரம் — பிரிநிலை. நாடினர் — வினைமுற்றெச்சம். தொடுத்து ஈர்த்து மொழிந்த பாடல் என இயைக்க. கலைஞரல்லோர்கள் குற்றநாடிக் கூறுவர், கலைஞர் குற்றங்களையாராய்தலானுங் கூறலானுந் தமக்குச்சிறிதும் பெறுபேறின்மையால் அவற்றின்முயலாரென அவையடக்கங் கூறினரென்க. (5)

குற்ற மேதெரி வார்குறு மாமுனி
சொற்ற பாவினு மோர்குறை சொல்வரால்
கற்றி லாவென் கவிவழு வாயினும்
முற்று நாடிவல் லோருய்த் துரைக்கவே.

இ — ள்: குற்றமே தெரிவார் — குற்றத்தையே ஆராய்கின்றவர்கள், மாகுறுமுனி சொற்ற பாவினும் ஓர் குறை சொல்வர் — மகிமை பொருந்திய அகத்திய முனிவர் பாடிய பாக்களிலும் ஒருகுற்றத்தைச் சொல்லுவார்கள்; (ஆதலால்), வல்லோர் — கல்வியறிவில்வல்ல புலவர்கள், உற்று நாடி — நுனித்து ஆராய்ந்து, கற்றிலா என் கவி வழு ஆயினும் உய்த்து உரைக்க — கல்வியறிவில்லாத சிறியேனது செய்யுட்கள் குற்றமுடையனவாயினும் தெரிந்து கூறுக எ — று.

ஆல் அசை. ஏகாரமிரண்டனுள் முன்னையது பிரிநிலை; பின்னையது அசை. தெரிவார் — வினையாலணையும்பெயர். உம்மை யிரண்டனுள் முன்னையது உயர்வு சிறப்பு; பின்னையது எதிர்மறை மாந்தர்க்கு நியமித்த நீட்சியினின்று குறிதான வடிவத்தையுடைமையால் அகத்திய முனிவரைக் குறுமுனியெனவழங்குவர். தமிழிலக்கணத்தையருளிச் செய்தவராதலின் அம்முனிவரது பாவைச் சிறந்தபாவாக எடுத்துக்காட்டினார். அவரது பாவுங் குற்றந்தெரிதற் கிடமாகுமேற் கல்வியறிவில்லாத மூடனாகிய எனது பா அங்ஙனமாகாமையெவ்வாறு? ஆயினும் பெரியோர் குற்றங்களைப் பொருட்படுத்தாது ஏற்றுக்கொள்வரெனப் பின்னுமோர் காரணத்தால் அவையடக்கங் கூறினரென்க. (6)

## வேறு

குறைபல மாமதி கொளினு மன்னதால்
உறுபய னோக்கியே யுலகம் போற்றல்போற்
சிறியவென் வெளிற்றுரை சிறப்பின் றாயினும்
அறுமுகன் கதையிதென் றறிஞர் கொள்வரே.

இ — ள்: மா மதி பல குறை கொளினும் — பூரணசந்திரனானது பலகுற்றங்களைப் பொருந்தியிருந்தாலும், அன்னதால் உறுபயன் நோக்கி உலகம் போற்றல் போல் — அச்சந்திரனாலுண்டாகும் பிரயோசனங்களையுற்றுணர்ந்து உலகத்தவர்கள் துதிப்பதுபோல, சிறிய என் வெளிற்று உரை சிறப்பு இன்று ஆயினும் — சிற்றறிவினையுடைய எனது வெளிச்சொற்பாடல் சிறப்பில்லாததாயினும், அறுமுகன் கதை இது என்று அறிஞர் கொள்வர் — சண்முகக்கடவுளினது காப்பியமிதுவென்று அறிவுடையோர் பாராட்டிக்கொள்ளுவார் எ — று.

சந்திரன் பல குற்றங்களையுடையனாயினும் அதனாலுண்டாகும் பிரயோசனம் பெரிதாதல்கருதி உலகத்தார் துதித்தல்போல, என்கவியும் குற்றங்களையுடைத்தாயினும் சுப்பிரமணியக்கடவுளின் மான்மியத்தை விளங்கவுணர்த்தும் விசேடம்பற்றி அறிவுடையோர் போற்றிக்கொள்வரென்பது கருத்து.

ஏ. அசைகள். உலகம் உரை என்பன ஆகுபெயர்கள்.

சந்திரனுக்குள்ள குற்றங்கள் களங்கமுடைமை கலைதேய்தல் முதலியன. குணம் அமிர்தத்தால் தேவராதியரைத் திருப்திப்படுத்துதல் பயிர்களை வளர்த்தல் முதலியன. ஆசிரியர்கள் தங்கவிக்குச் சந்திரனை உவமித்தலை.

"அலர்மதியு மென்கவியுங் களங்குறையுங் கலைகுறையு மானக் காலும்
புலவரெலா மிகமகிழ்ந்தே யமுதெனவே பயனுகர்ந்து புகழா நிற்பர்
நிலவுமிழு மதிகரவு புரிபவர்க்கும் விரகியர்க்கும் நெருப்பாத் தோன்று
முலகினிலென் கவியழுக்கா றுடையவர்க்கும் பேதையர்க்கு முவப்பெய் தாதே"

என்னுஞ்செய்யுளானும், குணங்களிவையென்பதை,

"................................................ ........................................................வயங்குவெண் மதிய
மேயதன் கலையால் விண்ணவர் தம்மை விழைந்துறை தென்புலத் தாரை
ஏய்வுற நிறைய வூட்டிநன் காய விருந்தவப் பயிர்கண்மற் றெவையுந்
தேய்வுறு வாகி நாடொறு மிகுந்து தீதற வளர்ந்திடச் செய்யும்"

என்னுஞ்செய்யுளானும் உணர்க.

பூரணசந்திரன் கலைதேயும்போது, முதலாவதுமுதற் பதினைந்தாவதீருகிய கலை களின் அமிர்தத்தை முறையே அக்கினியும் சூரியனும் விசுவதேவரும் வருணனும் வஷட்காரதேவதையும் இந்திரனும் இருடிகளுடன் தேவர்களும் அஜசரணரும் யமனும் வாயுவும் உமாதேவியும் பிதிரரும் குபேரனும் பசுபதியும் பிரஜாபதியும் பருகுவரெனவும், எஞ்சியகலையினமிர்தம் நீரில் வியாபித்துப் பயிர்களைவளர்க்கு மெனவும், பசுக்களால் அந்நீர்பருகப்பட்டுப் பாலாகி அப்பால் ஓமத்துக்குபகரண மாம்போது தேவர்க்குப்பிரீதியாமெனவும் சோமோற்பத்தியிற் கூறப்பட்டுளது. சந்திரன் உலகத்தாரா ற்றுதிக்கப்படுதலை,

"அந்தி யாரண மந்திரத் தன்புட னிவனை
வந்தி யாதவர் மண்ணினும் வானினு மில்லை
———————————————"

என்னும் மகாபாரதச்செய்யுளானுமுணர்க.

பெரியோரிந்நூலை வரையாது கொள்ளுதற்குக்காரணமிச் செய்யுளாற் கூறப் பட்டது. (7)

நாதனு ரருள்பெறு நந்தி தந்திடக்
கோதிலா துணர்சனற் குமரன் கூறிட
வாதரா யணமுனி வகுப்ப வோர்ந்துணர்
சூதனே தியதுமூ வாறு தொல்கதை.

இ—ள்: நாதனுர் அருள் பெறு நந்தி தந்திட—(எல்லாவுலகங்களுக்குந்) தலை வராகிய சிவபெருமானது உபதேசானுக்கிரகத்தைப்பெற்ற திருநந்திதேவர் போதிக்க, கோது இலாது உணர் சனற்குமரன் கூறிட—குற்றம்பொருந்துதலின்றி அவரிடங்கேட்டறிந்த சனற்குமாரமுனிவர்போதிக்க, வாதராயண முனிவகுப்ப— (சனற்குமாரமுனிவர்பாற்கேட்ட) வியாசமுனிவர் வகைப்படுத்துப் போதிக்க, ஓர்ந்து உணர் சூதன் ஓதியது தொல் கதை மூவாறு—விளங்கியறிந்த சூதமுனிவர் சொல்லிய பழையபுராணங்கள் பதினெட்டாம் எ—று.

ஆர் விகுதி உயர்வுபற்றிவந்தது; இதனை அருளென்பதற்கடையாக்கி நிறைந்த கருணையெனினுமாம். குற்றங்களாவன: ஐயம் திரிபு அறியாமை என்பன. இல்லாது என்பதில் லகரவொற்றுத்தொக்கது. சனற்குமரன்=பிரமாவின் புத்திரர். வாதரா யணமுனி=வதரிகாச்சிரமத்தில் வசித்திருந்தமுனிவர். சூதன்=நின்றேத்துவோர். சிவபெருமானது திவ்வியப்பிரபாவங்களையெல்லாம் அடியார் சமூகங்களினின்று எடுத்தோதித் துதிப்பவராதலாலிப்பெயரிவர்க்காயிற்று. முன்னே பெருந்தொகைக் கிரந்தங்களுடன் ஓரே நூலாயிருந்த புராணத்தை நான்கிலக்கத்தெண்ணுயிரங் கிரந்தங்களாகப் பதினெண்வகைபெறவியற்றினுர் வியாசராதலால் 'வாதராயண முனிவகுப்ப' எனவும், புராணங்களையுபதேசிக்குந்தோறும் வேதாந்தசாரத்தோ டொற்றுமையாயிருத்தலை நோக்கி மெய்ப்புளகமுற்றுக்கேட்ட விசேடத்தினுல் ரோமகர்ஷணரென வியாதராற் பெயரிடப்பட்ட மகானுபாவரென்பது போதர 'ஓர்ந்துணர் சூதன்' எனவும் கூறினுர். பதினெண்புராணங்களின் பெயர்முதலியன பாயிரப்படலத்திற் கூறப்பட்டன. இச்செய்யுளாற் புராணங்களின்ருெகையும் பாரம்பரியமுங் கூறப்பட்டன. (8)

சொல்லிய புராணமாந் தொகையு ளீசனை
அல்லவர் காதைக ளனையர் செய்கையுள்
நல்லன விரித்திடு நவைகண் மாற்றிடும்
இல்லது முகமனு லெடுத்துக் கூறுமே.

இ—ள்: சொல்லிய புராணம் ஆம் தொகையுள்—மேற்கூறிய பதினெண் புராணங்களாகிய தொகுதியுள், ஈசனை அல்லவர் காதைகள் — சிவபெருமானை யொழிந்ததேவர்களது புராணங்கள், அனையர் செய்கையுள் நல்லன விரித்திடும்— அத்தேவர்களது செயல்களுள்ளே நன்மையுடையசெயல்களை விரித்துக்கூறும்; நவை கள் மாற்றிடும்—குற்றமுள்ள செயல்களைக் கூறுதுவிடுக்கும்; இல்லதும் முகமனுல் எடுத்து கூறும்—அத்தேவர்கட்கில்லாத சிறப்புக்களையும் துதிவாதமுறையாற் கற் பித்துச்சொல்லும் எ று.

புராணமென்பது பழையசரித்திரமெனப்பொருள்படும். காதையென்பது க வர்க்கத்திருதீய மும் த வர்க்கத்துவிதீயமும் தற்பவமாய்வந்த வடசொல். நவை ஆகுபெயர். திருமால் முதலிய தேவர்களது புராணங்கள் அவர்க்குப் பரத்துவங் கற்பித்தற்காகக் குணங்களை விரித்துக்கூறிக் குற்றங்களைக்கூறுது மறைக்குமென்பதும், கிருத்தியங்களை நடப்பித்தற்பொருட்டுக் கலந்துநிற்றலாலாய பரத்துவமே அப் புராணங்களாற் கூறப்படுவதென்பதும் இச்செய்யுளாற் போந்தகருத்து.

இதனுற் சிவபுராணமல்லாத பிறபுராணங்களின் குறைவுணர்த்தப்பட்டது.

பிறையணி சடைமுடிப் பிரான்றன் காதைகள்
இறையுமோர் மறுவில யாவு மேன்மையே
மறைபல சான்றுள வாய்மை யேயவை
அறிஞர்க ளுடியே யவற்றைக் காண்கவே.

இ—ள்: பிறை அணி சடைமுடி பிரான் தன் காதைகள் — பாலசந்திரனை அணிந்த சடைமுடியினை யுடைய சிவபெருமானது புராணங்கள், இறையும் மறு இல — சிறிதாயினும் குற்றமில்லாதன, யாவும் மேன்மையே — எல்லாம் மகத் துவமுடையனவே. மறை பல சான்று உள — அதற்குப் பல வேதங்கள் சாட்சியா யுள்ளன, அவை வாய்மையே — (ஆதலால்) அவை உண்மை யுடையனவே, அவற்றை அறிஞர்கள் நாடி காண்க — அத்தகைமைகளை அறிவுடையோர் ஆராய்ந் துணர்க எ — று.

இறை — விரற்கணுவின்கணுள்ள ரேகை; அஃதீண்டுச் சிறுமையை யுணர்த் திற்று. ஓர் அசைநிலை. கலையொழிதலாகிய குற்றத்தை யடையாவண்ணங் காக்கு மாறு பாலசந்திரனைச் சடைமுடியி லணிந்த சிவபெருமானது புராணமாதலின் அவையுங் குற்றமுடையனவாகா வென்பார், பிறையணி சடைமுடிப் பிரான்றன் காதைக ளிறையுமோர் மறுவில' என்றார். ''எல்லாப் பிரமாணங்களுக்கு மியை முக்கியமாம் பிரமாணம், வல்லாருரைக்கும் வேதமே'* எனவும்

'' .................................................. மறைக்கு விரோதமுறு
மொழியார் தருநற் புராணங் கள்முற் றும்பிர மாணங்களே
கழியா மறைமூலம் மாகாக் கசட்டு நூல்கள் யாவுமிகு
பழியார் நூல்கள் பிரமாணப் படாது படிமுற் றளந்தோயே.

எனவும் சூதசங்கிதை கூறியதற்கேற்ப வேதவிரோதமானவற்றைத் தவறென்று விலக்குவதும் விரோதமாகாதனவற்றைத் தவறற்றனவென்று கொள்வதும் முறை யாதலின், இச்சிவபுராணங்கள் வேத அவிரோதங்களாய்ப் போற்றப்படுவன வென் பதை யுணர்த்திமெய்ப்படுத்துவார் 'மறைபல சான்றுள வாய்மையே யவை' என வும், வேத முற்றையு மொருங்கோதி மெய்ப்பொரு ளுணர்ந்தார் நுனித்துணரி னன்றிப் பிறவாற்ருற் புலப்படா தென்பார் 'அறிஞர்கணுடி... காண்க' என வுங் கூறினர்.

இச்செய்யுளாற் சிவபுராணங்களின் விசேடங் கூறப்பட்டது. (10)

புவியின ரேனையர் புராணந் தேரினுஞ்
சிவகதை யுணர்கில ரென்னிற் றீருமோ
அவர்மய லரசனை யடைந்தி டாரெனில்
எவரெவ ராக்கமு மினிது போலுமால்.

இ—ள்: புவியினர் ஏனையர் புராணம் தேரினும்—பூமியிலுள்ளவர்கள் மற் றைத் தேவர்களது புராணத்தைக் கற்றுணர்ந்தாலும், சிவகதை உணர்கிலர் என் னில்—சிவபுராணத்தைக் கற்றுணரா தொழிவரேயாஞல், அவர்மயல் தீருமோ— அவர்களது அறியாமை நீங்குமா? (நீங்காதே), அரசனை அடைந்திடார் எனில்— அரசனை அணுகப்பெருதவர்களாஞல், எவர் எவர் ஆக்கமும் இனிதுபோலும்— எவரெவரது செல்வமும் சிறந்த செல்வம் போலுமன்றே எ—று.

ஆல் அசை. உம்மைகளிரண்டனுள் முன்னையது உயர்வு சிறப்பு. பின்னையது இழிவுசிறப்பு. ஓகாரம்—எதிர்மறை. எவரெவரென்னுஞ் சொல்லடுக்கு அரசனி னும் மிகக் குறைந்த செல்வமுடையாரை யுணர்த்தற்கண் வந்தது. அரசனுடன் பயின்று அவனது செல்வப் பெருக்கை யுணராதார்க்கு அவனினும் மிக விழிந்த அற்பரது செல்வமெல்லாம் இணையில் பெருவளமாகக் காணப்படுவது போலவே, சிவபுராணத்தைக் கேட்டுணராதார்க்கு அற்ப தேவர்களைப் பரமாகக் கூறும் பிற புராணங்கள் சிறந்தனவாய்த் தோன்றி, முழுமுதற்கடவுள் சிவபெருமானே யென் னும் உண்மையை யொழிக்கும் என்பதாம்,

இச்செய்யுளாற் சிவபுராணங் கேட்டுணர்த லவசியமென்ப துணர்த்தப் பட்டது. (11)

மங்கையோர் பங்குடை வான நாயகற்
கிங்குள பலபுரா ணத்துள் எஃகவேற்
புங்கவன் சீர்புகழ் புராண மொன்றுள
தங்கதி லொருசில வடைவிற் கூறுகேன்.

இ—ள்: மங்கை ஓர் பங்கு உடை வான நாயகற்கு இங்கு உள பல புரா ணத்துள்—உமாதேவியை வாமபாகத்திலுடைய தேவத் தலைவராகிய சிவபெரு மானுக்குரியனவாக இவ்வுலகத்தில் வழங்கப்பட்டுள்ள பல புராணங்களுள்ளே, எஃகவேல் புங்கவன் சீர்புகழ் புராணம் ஒன்று உளது—கூரிய வேலாயுதத்தை யேந்திய தலைவராகிய சுப்பிரமணியசுவாமியினது மான்மியத்தைப் புகழ்ந்து சொல் லுகின்ற புராணமொன்று இருக்கின்றது. அதில் ஒரு சில அடைவில் கூறுகேன்— அப்புராணத்திற் சிற்சிலசரித்திரங்களை முறைப்படி எடுத்துச்சொல்வேன் எ—று.

உடையவென்பது ஈற்றுயிர்மெய் குறைந்துநின்றது. உள்ள என்பதில் ளகர வொற்றுத் தொக்கது. பலவென்றதீண்டுப் பத்தையுணர்த்திற்று. அங்கு அசைநிலை. ஒரு என்னும்பதத்தோடு சிலவென்பதியைந்து சிலவற்றினுள்ளுந் தெரிந்தெடுக்கப் பட்ட சுருக்கத்தையுணர்த்தற்று. 'எஃகவேற்புங்கவன்சீர்புகழ்புராணம்' என்றது வட நூற்காந்தபுராணத்தை. காண்டங்களையுஞ் சரித்திரங்களையும் பிறழ்வின்றி முத னூலினுரைக்கப்பட்டவாறே கூறுவனென்பார் 'அடைவிற் கூறுகேன்' என்றார்.

இச்செய்யுளால் நூல்வந்தவழி கூறப்பட்டது. (12)

புதுமயி லூர்பரன் புராணத் துற்றிடாக்
கதையிலை யன்னது கணித மின்றரோ
அதுமுழு தறையவெற் கமைதற் பாலதோ
துதியுறு புலமைசேர் சூதற் கல்லதே.

இ—ள்: புது மயில் ஊர் பரன் புராணத்து உற்றிடா கதை இலை—புதிய மயிலை (வாகனமாகக்கொண்டு) செலுத்துங்கடவுளாகிய சுப்பிரமணியப்பெருமானது புரா ணத்தில் அமையப்பெருத சரித்திரம் ஒன்றுமில்லை, அன்னது கணிதம் இன்று— அந்தச்சரித்திரம் அளவிறந்தது, அது முழுது அறைய — அச்சரித்திரத்தை ஒருங்கே பாடுதற்கு, துதி உறு புலமை சேர் சூதற்கு அல்லது — புகழ்பொருந்திய கல்வியறிவு வாய்ந்த சூதமகாமுனிவரொருவர்க்கேயன்றி, எற்கு அமைதற்பாலதோ — சிறியே னுக்கு அமைவுபடத்தக்கதா (அன்று) எ — று.

அரோ ஏ அசைகள். புதுமயிலூர்பரன்புராணம் — காந்தபுராணம். உற்றிடாத என்பது ஈற்றுயிர்மெய் குறைந்துநின்றது, இல்லையென்பதில் லகரவொற்றுத் தொக் கது, சூரனுகியமயிலென்பது போதர 'புதுமயில்' எனவும், முன்னரே எட்டாஞ்செய் யுளில் ஓர்ந்துணர் என்பதற்குரைத்த விசேடமுடையரென்பது போதர 'துதியுறுபுல மைசேர்சூதன்' எனவும் கூறினர்.

இச்செய்யுளால் தாம் முழுதுங்கூருமைக்குக் காரணமுணர்த்தப்பட்டது. (13)

காந்தமா கியபெருங் கடலுட் கந்தவேள்
போந்திடு நிமித்தமும் புனிதன் கண்ணிடை
ஏந்தல்வந் தவுணர்கள் யாரு மவ்வழி
மாய்ந்திட வடர்த்தது மற்றுங் கூறுகேன்.

இ—ள்: காந்தம் ஆகிய பெரும் கடலுள் — காந்தபுராணமாகிய பெரியசமுத் திரத்துள், கந்தவேள் போந்திடும் நிமித்தமும் — கந்தசுவாமி திருவவதாரஞ்செய்த காரணத்தையும், ஏந்தல் புனிதன் கண் இடை வந்து — அக்கந்தசுவாமி பரிசுத்தரா கிய சிவபெருமானது நெற்றிக்கண்களினின்றுந் திருவவதாரஞ்செய்து, அவ்வழி அவு ணர்கள் யாரும் மாய்ந்திட அடர்த்ததும் — அதுவாயிலாக அசுரர்களெல்லாமிறக் கும்படி பொருததையும், மற்றும் கூறுகேன் — பிவற்றையும் எடுத்துச் சொல்வேன் எ — று.

கிரந்தசங்கியை, கதைப்பரப்பு அரும்பொருட்கிடக்கை பொருளாளம் என்பன வற்றால் மற்றைய புராணங்களைவற்றினுஞ் சிறப்புடைமைபற்றிக் காந்தத்தைக் கட லென உருவகித்தார். ஆகியவென்னுமாட்டேற்றுச் சொல்விரிந்துகிடந்தமையினிது விரியுருவகம். காந்தம் — கந்தசம்பந்தமானது. கந்தவேள் போந்திடுநிமித்தமென்றது சூரனுதியராற்றேவர்க்கு நேர்ந்ததுயரை, ஏந்தல் — தலைவர். மற்றென்றது விண்குடி யேற்றல் திருமணம் முதலியவற்றை. (14)

இச்செய்யுளால் நுதலிய பொருள் கூறப்பட்டுள்ளது.

வேறு

ஏதி லாக்கற்ப மெண்ணில சென்றன
ஆத லாலிக் கதையு மனந்தமாம்
பேத மாகுமப் பேதத்தி னுள்விரித்
தோது காந்தத்தி னுண்மையைக் கூறுகேன்.

இ—ள்: ஏதிலா கற்பம் எண் இல சென்றன — (முற்செய்யுளிற்ரெகுத்த சரித்திரங்கள் நிகழ்ந்தபின்) குற்றமில்லாத பிரமகற்பகங்கள் அளவிறந்தன கழிந்தன, ஆதலால் — ஆதலினுல், இ கதையும் அனந்தம் ஆம் பேதம் ஆகும் — இச்சரித்திரமும் பலவேறுபாடுகள் பொருந்திபிருக்கும், அ பேதத்தினுள் — அந்தவேறுபாடுகளுள்ளே, விரித்து ஓது காந்தத்தின் உண்மையை கூறுகேன் — (இச்சரித்திரத்தை) விரித்துக் கூறுகின்ற காந்தபுராணத்தினது உண்மையை யான் ஆராய்ந்து சொல்வேன் எ—று.

இல்லாதவென்பது ஈற்றுயிர்மெய்குறைந்து லகரவொற்றுத்தொக்குநின்றது. இல — குறிப்புவினையாலணையும் பெயர். அனந்தமென்பது ஈண்டு எண்ணின் ரெகைமையுணர்த்தாது மிகுதியையுணர்த்திற்று. பலகாலஞ் சென்றதனுல் இச்சரித்திரத்தைப் பலவாறு வேற்றுமைப்படுத்தி வழங்கினர். ஆயினும் முதனூலிற் கூறப்பட்ட சரித்திரம் யாதென்பதை உள்ளவாறே ஆராய்ந்து கூறுவேனென்பது கருத்து.

கற்பங்கடோறுஞ் சுப்பிரமணியக் கடவுளவதரித்துச் சூரனைச் சங்கரித்தன் முதலிய திருவிளையாடலைச் செய்தாரெனவும், ஒவ்வொரு கற்பங்களினும் நடக்குஞ் சூரசங்கார முதலியவை ஒன்றற்கொன்று சிறிதுபேதமாகுமெனவும், அவ்வாறு வரும் பேதங்களையே அனந்தமாம் பேதமாகும் என்று ஆசிரியர் சுட்டினரெனவும் சிலர் கூறுவர். அவ்வாருயின், தாங்கூறிய சரித்திரம் நிகழ்ந்த கற்பம் யாதென்பதைக் கூறவேண்டியதவசியம். அங்ஙனங்கூருது உண்மையைக் கூறுகேன் என்றதனுல் அது ஆசிரியர்க்குக் கருத்தன்றென்க.

இச்செய்யுளால் இந்நூலிற்கூறப்படுஞ் சரித்திரங்களினுண்மை நாட்டப்பட்டது. *(15)*

முன்பு சூதன் மொழிவட நூற்கதை
பின்பி யான்றமிழ்ப் பெற்றியிற் செப்புகேன்
என்ப யன்னெனி லின்றமிழ்த் தேசிகர்
நன்பு லத்தவை காட்டு நயப்பரோ.

இ — ள்: முன்பு சூதன் மொழி வட நூல் கதை — முன்னரே சூதமகா முனிவர் சொல்லிய வடநூற் புராணத்தை, பின்பு யான் தமிழ் பெற்றியில் செப்புகேன் — பின்னரே சிறியேன் தமிழ் நடையிற் பாடுவேன், என் பயன் எனில் — அவ்வாறு பாடுவது யாதுபயன் கருதியெனில், இன் தமிழ் தேசிகர் நன் புலத்து அவை காட்டும் நயப்பு — இனிய தமிழ்ப்புலவரது நல்ல அறிவின்கண்ணே அவற்றைப்புலப்படுத்தும் விருப்பமேயாம் எ — று.

அரோ — அசைநிலை. கதை ஆகுபெயர். தேசிகர் — புலவர். பாஷைகளெவற்றினும் மிக்க மாதுரியமுடையதாதலின் 'இன்றமிழ்' என்ருர். வடமொழியிலிருப்பவும் தாம் இந்நூலைத் தமிழிற்பாடுதற்கு காரணம் இச்செய்யுளாற் கூறப்பட்டது. *(16)*

தோற்ற மீறின்றித் தோற்றிய சூர்ப்பகைக்
கேற்ற காதைக் கெவன்பெய ரென்றிடின்
ஆற்று மைம்புலத் தாறுசென் மேலையோர்
போற்று கந்த புராணம தென்பதே.

இ—ள்: தோற்றம் ஈறு இன்றி தோற்றிய சூர்ப்பகைக்கு ஏற்ற காதைக்கு—முதலுமுடிவுமில்லாதவராயவதரித்த கந்தசுவாமிக்கியைந்த இந்த நூலுக்கு, பெயர் எவன் என்றிடில் — பெயர் யாதோவெனில், ஆற்றும் ஐம் புலத்து ஆறு செல் மேலையோர் போற்று கந்தபுராணமது என்பதே — அடக்கப்பட்ட ஐம்புலன்களின்வழியே யொழுகுகின்ற பெரியோர்கள் வியந்து கூறுகின்ற கந்தபுராணமென்பதேயாம் எ - று.

சூர்ப்பகை —சூரபன்மனுக்குப் பகைவர்; பகை—ஆகுபெயர். எவனென்பதீண்டு வினைப்பொருளைத் தருங்குறிப்பு வினைமுற்று. ஆற்றுமைம்புலத்தாறு = ஐம்புலம் ஆற்றும் ஆறு; உண்டிசுருக்கன் முதலிய செயல்களான் மனத்தைப் புலன்களின் வழிச் செல்லாமற்றடுத்துச் சிவத்தியானத்தினிறுத்துதல். ஐம்புலன்களாவன: சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. கருவிலமைந்து பிறவாது, பதிரூபமாக அவதரித்தலின் 'தோற்றமீறின்றித் தோற்றிய' எனவும், பிறவிக்குவித்தாய ஐம்புலன்களையுமொரு வழிப்படுத்திய பெரியோர்க்கே இப்புராணத்தின் மகத்துவந் தோன்று மென்பது போதர 'ஆற்றுமைம் புலத்தாறு சென்மேலையோர் போற்று கந்தபுராணம்' எனவும் கூறினர். ஆகவே, இப்புராணந் திருமால் முதலாயினோரது புராணங்களினிலக்கணம் பெருது சிவபுராணத்தின் மகத்துவத்தைப் பெற்றுள்ளதென்பது குறிப்பாயிற்று. முதனூற்பெயரோடிணக்கமுடைய பெயரென்பது தோன்றத் தேற்றேகாரம் புணர்த்திக் கூறினர்.

இச்செய்யுளால் நூற்பெயர் கூறப்பட்டது. (17)

பகுதி கொண்டிடு பாக்களி னத்தினுண்
மிகுதி கொண்ட விருத்தத் தொகைகளால்
தொகுதி கொண்டிடு சூர்கிளை சாய்த்தவன்
தகுதி கொண்ட தனிக்கதை சாற்றுகேன்.

இ—ள்: பகுதி கொண்டிடு பாக்கள் இனத்தினுள் — பல பேதங்களைப் பொருந்திய பாவகைகளுள்ளே, மிகுதிகொண்ட விருத்த தொகைகளால் — பெரும்பான்மையாயமைந்துள்ள விருத்தங்களின் றெகுதிகளால், தொகுதி கொண்டிடு சூர் கிளை சாய்த்தவன் தகுதி கொண்ட தனிகதை சாற்றுகேன் — கூட்டமாகிய சூரபன்மனது சுற்றத்தைத் தொலைத்தவராகிய சுப்பிரமணிய சுவாமியினது தகைமை பொருந்திய ஒப்பற்ற சரித்திரத்தைக் கூறுவேன் எ — று.

பாக்கள், வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா என நான்காய், ஒவ்வொன்றுந் தனித்தனி பலவகைப்படுதலின் 'பகுதிகொண்டிடு பாக்களினம்' என்ருர். விருத்தத்தொகையென்றது விருத்தபேதங்களை. அவையாவன: ஆசிரிய விருத்தம், கலி விருத்தம், வஞ்சிவிருத்தம் என்பன இந்நூலில் வேறுபாவினங்களுஞ் சிறுபான்மை யுளவாயினும் கமுகந்தோட்ட மென்ருற்போல மிகுதிபற்றிக் கூறுதலின் 'மிகுதி கொண்ட விருத்தத் தொகைகளால்' என்ருர். தொகுதிகொண்டிடு என்னும் பெயரெச்சம் கிளை என்னும் பெயர் கொண்டது. விருத்தத்தொகைகளால்... சாற்றுகேன் என இயையும். தன்னிகரில்லாத் தலைவனையுடைத் தென்பது போதர 'தொகுதி கொண்டிடு சூர்கிளை சாய்த்தவன்றகுதிகொண்ட தனிக்கதை' என்ருர்.

இச்செய்யுளால் தாங்கூறுங்காப்பியத்தின் பாவினங் கூறப்பட்டது. (18)

செந்த மிழ்க்கு வரம்பெனச் செப்பிய
முந்து காஞ்சியின் முற்றுணர் மேலவர்
கந்த னெந்தை கதையினை நூன்முறை
தந்தி டென்னத் தமிய னியம்புகேன.

இ—ள்: செந்தமிழ்க்கு வரம்பு என செப்பிய முந்து காஞ்சியில் முற்று உணர் மேலவர் — செந்தமிழ்ப் பாஷைக்கு எல்லையென்று பெரியோர்களாற் சொல்லப்பட்ட முதன்மை பொருந்திய காஞ்சிபுரத்தில் வாழுகின்ற எல்லா நூல்களையுங்கற்றுணர்ந்த பெரியோர், கந்தன் எந்தை கதையினை நூல் முறை தந்திடு என்ன — கந்த சுவாமியினது சரித்திரத்தை முதனூலிற் கூறிய முறைப்படி பாடுகவென்று வேண்ட, தமியன் இயம்புகேன் — சிறியேன் (அவர்கேள்விப்படி) பாடுவேன் எ — று.

செந்தமிழ், செம்மையாகிய தமிழ். தமிழ்ப்பாஷையில் வல்லார்க்குச் சுவைதோற்றுவிப்பதா யியற்சொற்களாலாக்கப்படும் பாமுதலியன. இதற்கெதிர் கொடுந்தமிழென்க. எல்லையானது குறித்த பொருண் முழுதையுந் தன்னுளமைத்தல் போலக் காஞ்சியானது செந்தமிழ் முற்றையுந் தன்னுளமைத்து நிற்றலிற் செந்தமிழுக்கு வரம்பெனப்பட்டது. 'செந்தமிழ்க்கு வரம்பெனச் செப்பியமுந்து காஞ்சியின் முற்றுணர் மேலவர்' எனவே தமிழ்ப்புலவரென்பது பெற்றாம். சிலர் இச்செய்யுளைத் தம் முளம் போனவாறு கொண்டுகூட்டி, கந்தசுவாமி பாடும்படி அருள் செய்ய யான் பாடத் தொடங்குவேனெனப் பொருள் கூறுவர். கச்சியப்பசிவாசாரியர் வடமொழி தென்மொழியிரண்டினுந் திறமையுடையவரும் சுப்பிரமணியக் கடவுளின் றொண்டருமாதலால், தமிழ்ப்புலவர் இப்புராணத்தை மொழிபெயர்த்துப் பாடும்படி அவரை வேண்டினர். அவ்வேண்டுகோட்கேற்பவே கடவுளும அருள் புரிந்தனர். அங்ஙனமின்றெனிற் சுப்பிரமணியக் கடவுள் தமிழிற்பாடும்படி அருள் செய்தற்குக் காரணம் இல்லையாம். ஆதலின் அவருரை பொருந்தாதென்க. இன்றமிழ்த் தேசிகர் நன்புலத்தவை காட்டுநயப்பு என முன்னர்க்கூறியதனுனும் இக்கருத்து விளங்கும். என்றந்தை எந்தையென மரீஇயிற்று.

இச்செய்யுளால் நூல் செய்தற்குக் காரணங் கூறப்பட்டது. (19)

வெம்பு சூர்முதல் வீட்டிய வேற்படை
நம்பி காதையை நற்றமிழ்ப் பாடலால்
உம்பர் போற்ற வுமையுடன் மேவிய
கம்பர் காஞ்சியிற் கட்டுரைத் தேனியான்.

இ—ள்: யான் — தமியேன், வெம்பு சூர் முதல் வீட்டிய வேல் படை நம்பி காதையை — கோபித்தெதிர்த்த சூரபன்மனுகிய முதல்வனை அழித்த வேலாயுதத்தையுடைய சுப்பிரமணியக் கடவுளது சரித்திரத்தை, நல் தமிழ் பாடலால் — நல்ல தமிழ்ச் செய்யுட்களால், உம்பர் போற்ற உமையுடன் கம்பர் மேவிய காஞ்சியில் — தேவர்கள் துதிக்க உமாதேவியுடன் ஏகாம்பரநாதர் வீற்றிருக்கின்ற காஞ்சீபுரத்தில், கட்டுரைத்தேன் — அரங்கேற்றினேன் எ — று.

வேற்படை — இருபெயரொட்டுப் பண்புத் தொகை. நம்பி — ஆண்மக்களுட் சிறந்தவர். ஏகாம்பரநாதருடைய தேவியைக் காமாட்சியம்மையென்பர். மேவிய — காலவழுவமைதி. படிக்குந்தோறும் கேட்குந்தோறும் இனிமை பயத்தலின் 'நற்றமிழ்ப் பாடல்' என்றார், இச்செய்யுளால் அரங்கேற்றியதலம் குறிக்கப்பட்டது, பாயிரவுறுப்புக்களுள் ஆசிரியர் கூறாது விடுத்தபிற உய்த்துணர்தற்பாலன. (20)

அவையடக்கம் முற்றிற்று.

ஆக விருத்தம் 50.

# 4. ஆற்றுப் படலம்

ஆற்றுப்படலமென்பது ஆற்றின் சிறப்பைக் கூறும்படலமென விரிக்கப்படுதலால் இரண்டாம் வேற்றுமையுருபும் பொருளுமுடன் றொக்க தொகை. படலம் நூலின் பகுதி; இதனைச் சருக்கம் இலம்பகம் பரிச்சேதம் எனவும் வழங்குவர்.

ஆசிரியர் அவையடக்கங்கூறியபின் முதனூலிற்கூறப்பட்ட புராணவரலாற்றைக் கூறுவான் கருதி, அதற்கு வேண்டற்பாலதும் தாம் வசிக்கும் தலமுமாகிய காஞ்சிமாநகரைப் பெருங்காப்பியவிலக்கணத்துக்கேற்ப வருணிப்பான் றொடங்கி, அந்நகரையுடைய தொண்டை நாட்டின் சிறப்பை முதற்கூறுவான் புக்கு, அந்நாட்டிற் பாயும் பாலியாற்றை இப்படலத்தால் வருணித்தனர்.

செக்கரஞ் சடைமுடிச் சிவனுக் கன்பராய்த்
தக்கவ ரறிஞர்க டவத்தர் செல்வராய்த்
தொக்கவர் யாரும்வாழ் தொண்டை நாட்டினுண்
மிக்கதோ ரணியிய லதுவி ளம்புகேன்.

இ-ள்: செக்கர் அம் சடை முடி சிவனுக்கு அன்பர் ஆய் — செந்நிறம் பொருந்திய அழகிய சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு அடியவர்களாயும், தக்கவர் அறிஞர்கள் தவத்தர் செல்வர் ஆய் — யோக்கியர்களும் அறிவுடையவர்களும் தவமுடையவர்களும் ஐசுவரியமுடையவர்களுமாயும், தொக்கவர் யாரும் வாழ் தொண்டைநாட்டினுள் — தன்னிடத்துச் செறிந்தோரெல்லோரும் வாழுகின்ற தொண்டை மண்டலத்தின்கண்ணே, மிக்கது ஓர் அணி இயல் அது விளம்புகேன் — மிகுந்திருக்கின்ற சிறப்பினியல்பைத் தமியேன் சொல்வேன் எ-று.

அம் சாரியையெனினுமாம். ஓர் அசைநிலை, அது பகுதிப்பொருள் விகுதி. தொண்டைமண்டலத்தில் வாழ்ந்திருப்பவரெல்லோரும் சிவனடியாரும் யோக்கியரும் தபோதனரும் செல்வருமே, அன்னோரன்ன தகைமையில்லாதோர் அந்நாட்டிலரியர் என்பது குறிப்பு. இதனை,

"வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்துப் — பூழியர்கோன்
றென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து"

என்பதனானுமறிக.

அடியார்க்கேற்ற வேடமுடையரென்பது போதர, 'செக்கரஞ் சடைமுடிச் சிவன்' என்றார். இச்செய்யுளால் எடுத்துக்கொண்டவர்ணியமின்னதென்பது உணர்த்தப்பட்டது. (1)

சுந்தர மாயவன் றுயிலு மாழிபோல்
இந்திர னூர்முகி லியாவு மேகியே
அந்தமில் கடற்புன லருந்தி யார்த்தெழீஇ
வந்தன வுவரியின் வண்ண மென்னவே.

இ—ள்: இந்திரன் ஊர் முகில் யாவும் — தேவேந்திரன் (வாகனமாகக் கொண்டு) செலுத்தும் மேகங்களெல்லாம், சுந்தர மாயவன் துயிலும் ஆழிபோல் ஏகி — அழகினையுடைய விஷ்ணுமூர்த்தி அறிதுயில்செய்யும் பாற்சமுத்திரம்போல (வெண்ணிறமுடையனவாய்ச்) சென்று, அந்தம் இல் கடல் புனல் அருந்தி, ஆர்த்து எழீஇ — முடிவில்லாத சமுத்திரத்திலுள்ள நீரைப்பருகி முழங்கிக் கிளம்பி, உவரியின் வண்ணம் என்ன வந்தன — உவர்க்கடலினிறம்போலக் (கருநிறமுடையனவாய்) மீண்டன எ-று.

ஏகாரங்கள் அசைகள். மேகங்கள் நிரைபட்டுச் செல்லுதலாற் கடல்போலக் காணப்படுவன; அன்றியும், நீரைப் பருகமுன் வெண்ணிறமுடையனவாதலாற் பாற்கடலையும், பருகியபின் கருநிறமுடையனவாதலால் உவர்க்கடலையும் நிகர்ப்பன. சூரியனது உஷ்ணமாகிய கிரணத்தினால் மேலிழுக்கப்படுகின்ற கடனீரினாலேயே மேகமெனப்பட்டு அவை காற்றின் சீதளத்தாற் குளிர்ந்து நீராய்ச் சிந்துவதே மழையென்ப துண்மையாகவும் இச்செய்யுளிலிவ்வாறு கூறியது பௌராணிக வர்ணனையென்க. (2)

> பார்த்தென துலகடும் பரிதி யென்னொடும்
> போர்த்தொழில் புரிகெனப் பொங்கு சீற்றத்தால்
> வேர்த்தெனப் பனித்துவெள் ளெயிறு விள்ளநக்
> கார்த்தென வேதடித் தசனி கான்றவே.

இ-ள்: பார்த்து எனது உலகு அடும் பரிதி — தேடிப்பார்த்து என்னுடைய மண்டலத்தையழிக்கின்ற சூரியனே!, என்னொடும் போர் தொழில் புரிக என — என்னுடனே (இனி) யுத்தமுயற்சியைச் செய்கவென்று இகலி, பொங்கு சீற்றத்தால் வேர்த்து என பனித்து — மேன்மேலுங் கிளருகின்ற கோபத்தினால் மெய் வேர்த்தாற் போலத் துளித்து, வெள் எயிறு விள்ள நக்கு (என) தடித்து — வெள்ளிய பற்கடோன்றச் சிரித்தாற்போல மின்னலையும், ஆர்த்து என அசனி — ஒலித்தாற்போல இடியையும், கான்ற — தோற்றுவித்தன மேகங்கள் எ—று.

ஏகாரங்கள் - அசைகள். எனதுலகென்றது மேகமண்டலத்தை. பரிதி - அண்மைவிளி. நக்கார்த்தெனத் தடித்தசனிகான்ற என்பது நிரனிறை. புரிகவென்னும் வியங்கோளீறு தொக்கது. சிரிக்கும்போது தோன்றும் வெள்ளெயிற்றொளியே மின்னற்குபமானமென்க. பார்த்து என்பதை மேகத்தின் வினையாகக் கொண்டு சூரியனைப் பார்த்து என உரைப்பினுமாம்.

சூரியனே! நீ கழிந்துபோன முதுவேனிற் காலத்திலே அதிக வெய்யிலினால் என் மண்டலத்தை மிக வருத்தினையே! உனக்கதிகாரம் வாய்ந்த காலமெனக்கருதியன்றோ அங்ஙனம் வாட்டினை! இனி என்காலம் வந்துவிட்டது. நீ என் மண்டலமில்லையென்னும்படி யழித்துக் கிரணங்களைப் பரப்பியதுபோல, யானும் என் மண்டல பலத்தால் உன் மண்டலமில்லையென்னும்படி மறைத்து இருளைப் பரப்புகின்றேன். வல்லையேலங்ஙனஞ் செய்யவொட்டாது தடுத்துக்கொள்ளென்று இகலி அந்நேரத்தெழுந்த பெருங்கோபத்தினால் மெய்வியர்த்தாற்போலச் சிறுதிவலைகளை வீசின, சிரித்தாற்போல மின்னின, பேரொலிவிளைத்தாற்போல முழங்கின என்பது இச்செய்யுளின் விளக்கம்.

முதுவேனிற் காலம் நீங்கிக் கார்காலம் தொடங்கும்போது மேகம் பலவகைக் காற்றுக்களின் கலப்பினாலே நீர்த்துளிகளை முதலில் வீசுதலையும், மின்னுதலையும், முழங்குதலையும் தற்குறிப்பணிபெற இவ்வாறு கூறினர். (3)

சுந்தர வயிரவத் தோன்றன் மீமிசைக்
கந்தடு களிற்றுரி கவைஇய காட்சிபோல்
முந்துறு சூன்முகின் முழுது முற்றுற
நந்தியம் பெருவரை மீது நண்ணிய.

இ—ள்: சுந்தர வயிரவ தோன்றல் மீமிசை — அழகினையுடைய வைரவக் கடவுளின்மேல், கந்து அடு களிற்று உரி கவைஇய காட்சி போல் — கட்டுந்தறியை முரிக்கின்ற யானையினது தோலானது போர்க்கப்பட்ட தோற்றத்தைப்போல, முந்து உறு சூல் முகில் முழுதும் — முந்தப்பெற்ற கருவுடைய மேகங்களெல்லாம், நந்தியம் பெரு வரைமீது முற்றுற நண்ணிய — பெரிய நந்திமலையின்மேல் எங்கும் பொருந்தப் படிந்தன எ-று.

வைரவர் - பயங்கரமான தோற்றத்தையுடையவர். மீமிசை — ஒரு பொருட் கிளவிகள். முந்துறுசூன்முகில் — சூன்முந்துறுமுகில். நீர் பொழியும் பருவமணுகப் பெற்ற முகில் என்பது கருத்து. முற்றுற — இடைவெளியின்றி.

வைரவக்கடவுளினது பயங்கரமான சரீரகாந்தி யானைத்தோலினால் மறைக்கப் படுதல்போல மலையினிடங்களும் மேகத்தினால் மறைக்கப்பட்டனவென்க. நந்திமலை செந்நிறமும் மேகங்கள் கருநிறமுமுடையனவாதலின் அவற்றிற்கு முறையே வைர வக் கடவுளையும் யானைத் தோலையுமுவமித்தனர். (4)

## வேறு

வாரை கான்றநித் திலமென வாலிகண் மயங்கச்
சீரை கான்றிடு தந்திரி நரம்பெனச் செறிந்த
தாரை கான்றவோ ரிருதுவி னெல்லையுந் தண்பால்
வீரை கான்றிடு தன்மைய தாமென மேகம்.

இ-ள்: மேகம் — மேகங்கள், வாரை கான்ற நித்திலம் என ஆலிகள் மயங்க— மூங்கிலுமிழ்ந்த முத்துக்கள்போல ஆலங்கட்டிகள் பொருந்த, சீர் ஐ கான்றிடு தந்திரி நரம்பு என செறிந்த தாரை — சிறப்பையும் அழகையும் தோற்றுவிக்கின்ற யாழினரம்பைப்போல நெருங்கிய நீர்த்தாரைகளை, ஓர் இருதுவின் எல்லையும் — ஒரு பருவகால முடியும் வரையும், தண் பால் வீரை கான்றிடு தன்மையது ஆம் என — குளிர்ச்சி பொருந்திய பாற்சமுத்திரத்தையுமிழுந் தன்மையைப்போல, கான்ற — உமிழ்ந்தன எ-று.

வரையெனற்பாலது வாரையென நீண்டது. ஆலி - மழைக்கட்டி, இது சீதள பூமிகளில் அதிகமழை பெய்த காலத்திற் காணப்படுவது. மயங்கவென்னுஞ் செய வெனெச்சங் காரியப்பொருட்டு. சிறப்பு - மகிமை கீர்த்தி முதலியன. அழகு வடிவழகு. சீரைக்கான்றிடு எனற்பாலது எதுகைநோக்கிக் ககரமெய் தொக்க தெனக்கொண்டு பொருள்கூறுவாருமுளர். ஓரிருதுவென்றது கார்காலத்தை. உம்மை முற்று. தன்மையது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. மேகம் தாரை கான்ற என இயைக்க. (5)

பூட்டு கார்முகந் தன்னொடுந் தோன்றிய புயல்வாய்
ஊட்டு தண்புன னந்தியங் கிரிமிசை யுகுத்தல்
வேட்டு வக்குலத் திண்ணனார் மஞ்சனம் விமலற்
காட்டு கின்றதோர் தனிச்செயல் போன்றுள தன்றே.

இ-ள்: பூட்டு கார்முகந் தன்னொடுந் தோன்றிய புயல் — நாண் பூட்டப்பட்ட வில்லோடுந் தோற்றிய மேகமானது, வாய் ஊட்டு தண் புனல் — வாயின் மடுத்த குளிர்ந்தநீரை, நந்தியம் கிரிமிசை உகுத்தல் — நந்திமலையிற் பொழிதல், வேட்டுவ குல திண்ணனார் விமலற்கு மஞ்சனம் ஆட்டுகின்றது ஓர் தனி செயல் போன்று உளது — வேடுவர் குலத்தவராகிய கண்ணப்பநாயனார் சிவபெருமானுக்குத் திருமஞ்சனத்தை அபிடேகம் செய்கின்ற ஒப்பற்ற செயலையொத்திருந்தது. எ—று.

வில்லென்றது — இந்திரவில்லை. பூட்டுகார்முகம் — சாதியடை. அம்—சாரியை. ஓர், அன்று, ஏ அசைநிலைகள். திண்ணனாரென்பது சிவனைப்பூசித்து அருள்பெற முன் கண்ணப்பநாயனாருக்கிடப்பட்டிருந்த பெயர். மஞ்சனம் என்பது மச்சனம் என்னும் வடமொழியின் றிரிபு; இது நீரையுணர்த்தலால் ஆகுபெயர். மஞ்சன மாட்டுகின்றதென ஒருசொன்னீர்மைபெறச் சேர்த்து அபிடேகிக்கின்றவெனப் பொருள்கூறினுமாம். ஆட்டுகின்றது — வினைமுற்றுப்பெயரெச்சம். உள்ளதெனற் பாலது உளதெனத் தொக்கது.

சூரியனுடைய பலவிதமான கிரணங்கள் மேகத்தின்மேல் விழுதலாலும் அம் மேகங்கள் காற்றினாற் சிதறுதலாலும் பலவகையான நிறங்களுடன் இந்திரவிற் காணப்படும்; இது மழைபெய்யமுன் காணப்பட்டால் மழை அதிகமாகப் பெய்யும், பெய்யும்போதுகாணப்பட்டால் மழைகுன்றும் என்பது பிரகற்சங்கிதை முதலிய சோதிடநூல்களின் கருத்து. ஆதலின், பெருமழைபெய்தற்குரிய குறியாக மழை பெய்யமுன்னரே காணப்பட்டதென்பார், 'பூட்டுகார்முகந்தன்னொடுந் தோன்றிய புயல்' என விசேடித்தார். வில்லுடன்றோன்றிய மேகத்திற்குக் கையில்வில்லேந்திய கண்ணப்பநாயனாரும் நந்திமலைக்குச் சிவபெருமானும் உவமை.

கண்ணப்பநாயனார் சிவபெருமானது திருமேனியின் முதனாட் சாத்தப்பட்டிருக்கும் நிர்மாலியங்களைத் தமது காற்செருப்பா னீக்கி வாயினிறைத்துக் கொணர்ந்த நீரை அப்பெருமான்மேற் கொப்பளித்தலாகிய அபிடேகத்தை யியற்றிச் சிரசிற் சூடிக்கொணர்ந்த மலரையெடுத்துச் சாத்தித் தம்வாயான் மென்று சுவைபார்த்த ஊனை நிவேதித்தது பூசாவிதிகட்கு விரோதமாகவும் அப்பெருமான் அதனை உத்தம பூசையாக விரும்பியேற்று ஆருந்தினத்தில் அவரது பேரன்பைச் சோதித்து அருள் செய்தனராதலின், அவரது தொழிலைத் 'தனிச்செயல்' என விசேடித்தார். (6)

கல்லென் பேரிசைப் புனன்மழை பொழிதலாற் கானத்
தொல்லும் பேரழல் யாவையு மிமைப்பினி லொளித்த
வெல்லுந் தீஞ்சல மருவுமிக் காருக்கு வியன்பார்
செல்லுங் காலையி லங்கண்வீற் றிருப்பரோ தீயோர்.

இ-ள்: மழை கல் என் பேர் இசை புனல் பொழிதலால் — மேகங்கள் பெரிய கல்லென்னுங் குறிப்பொலியினையுடைய நீரைப் பொழிதலினால், கானத்து ஒல்லும் பேர் அழல் யாவையும் இமைப்பினில் ஒளித்த — காட்டிற் பொருந்திய பெரிய

அக்கினி முழுதும் மாத்திரைப் பொழுதினுள் மறைந்தன, வெல்லும் தீ சலம் மருவும் மிக்காருக்கு வியன் பார் செல்லுங் காலையில் — வெல்லப்பெற்ற கொடுங் கோபத்தையுடைய மேலோர்களுக்குப் பெரிய பூவுலகம் உரிமையாய் நடக்குங் காலத்தில், தீயோர் அங்கண் வீற்றிருப்பரோ — கொடியோர்கள் அப்பூவுலகத்தில் வாழ்ந்திருப்பார்களா? (இருக்கமாட்டார்களே) எ — று.

கோபத்தை யடக்கிய மேலோர் அதிபராகுங் காரணத்தாற் கீழோர் அடங் குதல்போல மேகம் பெருமழை பெய்தலால் அக்கினி தணிந்ததென்பது கருத்து, வெல்லுந் தீஞ்சல மருவு மிக்கார்=தீஞ்சலம் வெல்லுதல் மருவுமிக்கார்.

பின்னிரண் டடிகட்கும் சிலேடைப் பொருள்: வெல்லும் தீம்சலம் மருவும் இ காருக்கு — (உவர்த் தன்மையை) வென்ற நன்னீர் பொருந்திய இந்த மேகத் திற்கு, வியன் பார் செல்லும் காலையில் — பெரியபூமி உரிமையாய் நிகழுங் கார் காலத்தில், தீயோர் அங்கண் வீற்றிருப்பரோ — அக்கினியார் அவ்விடத்திற் றங்கி யிருப்பாரா என்பதாம்.

இப்பொருளில், ஈற்றயல் திரிந்த தீயோர் என்பதிற் பன்மை விகுதி இழிவு பற்றி வந்தது. இச்செய்யுள் சிலேடையின் முடித்த வேற்றுப்பொருள் வைப் பணி. (7)

தேக்கு தெண்டிரைப் புணரிநீர் வெம்மையைச் சிந்தி
ஆக்கி வாலொளி யுலகில்விட் டேகலா லடைந்தோர்
நீக்க ரும்வினை மாற்றிநன் னெறியிடைச் செலுத்திப்
போக்கின் மேயின தேசிகர்ப் பொருவின புயல்கள்.

இ — ள்: தேக்கு தெள் திரை புணரி நீர் வெம்மையை சிந்தி — நிறைந்த தெளிந்த திரை மறிகின்ற கடனீரினது உவர்த் தன்மையை மாற்றி, வால் ஒளி ஆக்கி — வெள்ளிய ஒளியை யுண்டாக்கி, உலகில் விட்டு ஏகலால் — பூவுலகத்திற் பொழிந்து செல்லுதலால், அடைந்தோர் நீக்க அரும்வினை மாற்றி—தம்மைச் சார்ந்த சீடரது போக்குதற்கரிய வினைகளைப் போக்கி, நல் நெறி இடை செலுத்தி போக்கில் மேயின தேசிகர் பொருவின — நல்ல மார்க்கத்திற் பிரேரித்துப் போத லின் மேம்பட்ட ஆசாரியரைப் போன்றிருந்தன, புயல்கள் — மேகங்கள் எ—று.

போக்கு — முதனிலைத் தொழிற்பெயர். நீக்கவென்பதி லகரந் தொக்கது. ஏகலால் ...... பொருவின என இயையும், மேகத்திற்கு ஆசாரியரும் உவர்த் தன்மையை நீக்கிவா லொளியாக்கற்கு வினையை நீக்கித் தூயராக்குதலும் உலகிற் பொழிதற்கு நன்னெறியிற் செலுத்துதலும் உபமானமென்க. வினை: பிராரத்தம் சஞ்சிதம் ஆகாமியம் என்பன. தீக்ஷாக்கிரமத்தானன்றிப் பிறவாற்றா னொழிப்ப தரிதாதலின் 'நீக்கரும்வினை' என்றார். வாலொளி—தூய்மையான ஒளி எனினுமாம். (8)

கழிந்த பற்றுடை வசிட்டன திருக்கையாக் கவிஞர்
மொழிந்த நந்தியம் பெருவரை மொய்த்தசூல் முகில்கள்
பொழிந்த சீதநீர் பொற்புறு சாடியிற் பொங்கி
வழிந்த பாலெனத் திசைதொறு மிழிந்தன மன்னோ.

இ — ள்: கழிந்த பற்று உடை வசிட்டனது இருக்கை ஆ கவிஞர் மொழிந்த— நீங்கிய ஆசையினையுடைய வசிட்டமுனிவரது இருப்பிடமாகப் புலவர்கள் கூறிய, நந்தியம் பெரு வரை — பெரிய நந்திமலையில், மொய்த்த — படிந்த, சூல் முகில்கள் — கருக்கொண்ட மேகங்கள், பொழிந்த சீத நீர் — கான்ற குளிர்ச்சியையுடைய நீரானது, பொற்பு உறு சாடியில் பொங்கி வழிந்த பால் என — அழகு பொருந்திய தாழியினின்றும் பொங்கி வழிந்த பாலைப்போல, திசைதொறும் இழிந்தன — திக்குகடோறுங் கீழ்நோக்கிப் பாய்ந்தன எ—று.

அம் சாரியை. மன் ஓ அசைகள். உடைய ஆக என்பன ஈற்றுயிர்மெய் குறைந்து நின்றன. கழிந்த பற்றுடை வசிட்டன்=பற்றுடைமை கழிந்த வசிட்டன். உலகப் பற்றுக்களை வெறுத்தவரென்பது கருத்து. வசிட்டன் என்பதற்கும் பொறிகளை யடக்கினவ ரென்பதே பொருள்.

ஓடிவு முதலிய ஊறுகளையுருது செவ்வனே யமைந்த வாயை யுடையதும் சரிவின்றி நிறுத்தப்பட்டது மென்பது போதர 'பொற்புறுசாடி' என விசேடித்தார். அத்தகைய பாத்திரத்திற் பொங்கிய பால் எல்லாப் புறங்களினும் வழிதல்போல நந்திமலையி னுச்சியிற் சிந்திய மழைநீரும் எல்லாத் திசைகளினுமிழிந்தன வென்க. நந்திமலைக்குப் பாத்திரமும் நீருக்குப் பாலும் உவமை.

உலகப் பற்றற்ற பெரியோர் கிடைத்த பொருளைத் தாமனுபவிக்காது பிறர்க்குக் கொடுத்தல்போல, நந்திமலையும் வசிட்ட முனிவர்க்கு வாழ்விடமாம் விசேடத்தால் தன்னிடத்துள்ள மழைநீரைத் தனக்குபயோகமாகும் பொருட்டு வைத்துக்கொள்ளாது தேசத்தார்க் குபயோகப்படுமா றுதவிய தென்பதை 'கழிந்தபற்றுடை வசிட்டன திருக்கையாக் கவிஞர் மொழிந்த நந்தியம் பெருவரை' எனக் கருத்துடை யடைபுணர்த்தி விளக்கினர்.

ஆறு பெருகுதற்கு மழையே காரணமாதலின் இரண்டாஞ் செய்யுண்முதலிதுகாறும் எட்டுச் செய்யுட்களால் மேகம் மழை பெய்தமை வருணிக்கப்பட்டது. (9)

> சீல மேதகு பகீரதன் வேண்டலுஞ் சிவன்றன்
> கோல வார்சடைக் கங்கையம் புனலினைக் குன்றின்
> மேலை நாள்விட வந்தென நந்திவீழ் விரிநீர்
> பாலி யாறெனும் பெயர்கொடு நடந்தது படிமேல்.

இ — ள்: சீலம் மேதகு பகீரதன் வேண்டலும் — நல்லொழுக்கத்தின் மேம்பட்ட பகீரதராசன் பிரார்த்தித்தலும், சிவன் தன்கோல வார் சடை கங்கையம் புனலினை குன்றின் மேலை நாள் விட வந்து என — சிவபெருமான் தமது அழகிய நீண்ட சடை முடியிற் றரித்த கங்கா தீர்த்தத்தைக் கயிலைமலையின்கண்ணே முற்காலத்தில் விட அது பூவுலகத்திற் பாய்ந்தாற்போல, நந்தி வீழ் விரி நீர் — நந்திமலையினின்றுமிழிந்த பரந்த நீரானது, பாலியாறு எனும் பெயர் கொடுபடி மேல் நடந்தது — பாலியாறென்னும் பெயரைப் பெற்றுப் பூமியிற் பாய்ந்தது எ—று.

என்னும் என்பதில் னகரவொற்றுத் தொக்கது. கங்கை=பாய்தலையுடையது. சிவபெருமானும் முடிமேற்கொண்ட மகிமையை யுடைய தென்பது போதர 'சிவன்றன் கோல வார்சடைக் கங்கை யம்புனல' எனவும், அத்தகைய கங்கையைப் பூவுலகி லழைத்தற் கேற்ற அருந்தவஞ் செய்துடைய னென்பது போதர, 'சீலமே

தகு 'பகீரதன்' எனவும் விசேடித்தார், மலையினின் றிழிதலாலும், வேகமாய்ப் பாய்தலாலும், பரிசுத்தத்தையுந் தீர்த்த மகிமையையும் உடைமையாலும், பாலி யாற்றிற்குக் கங்கையை யுவமித்தார்.

**கங்கைநதி பூமியில் வந்த சரித்திரம்:**—அயோத்தியாபுரியை அரசுபுரிந்த சகரராசன் அசுவமேத யாகஞ் செய்ய முயன்று, தேசங்கடோறுஞ் சென்று விசயஞ் செய்து வருமாறு குதிரையை விடுத்தனன். அதனை யறிந்த இந்திரன் யாகமுற்றியவழித் தன் வாழ்வுக்கீனம் வருமென்பதை நினைத்து, அக்குதிரையைக் கரவிற் பற்றிக்கொண்டு பாதலலோகத்திற் சென்று அங்கே அருந்தவஞ் செய்த கபிலமுனிவர் பக்கத்திற் கட்டிப் போயினன். அதன்பின் அரசனனுமதிப்படி சென்ற குமாரர் அறுபதினுயிரவரும் அக்குதிரையைப் பூவுலகத்தி லெங்குந் தேடிக் காணாமையாற் பூமியைத் தோண்டிப் பாதலவுலகம் புகுந்து கபிலமுனிவர்பாற் கட்டப்பட்டு நிற்கக்கண்டு நங்குதிரையைக் கவர்ந்த கள்வனிவனே யென்று வைதனர். அதுகேட்ட முனிவர் கோபமுற்று விழிக்க, அவரது விழித்தீயினால் அவரனைவருஞ் சாம்பராயழிந்தனர். சிலகாலங்கழிந்தபின் இவர் சந்ததியிற் பிறந்த பகீரதனென்னு மரசன் தன்முன்னோர் முனிவராலெரிந்து நிரயமெய்தின ரென்பதை யறிந்து, புண்ணியலோகத்திற் சேர்க்கக் கருதிப் பிரமாவை நோக்கித் தவஞ்செய்ய, அவர் பிரசன்னராய் ''அரசனே! கங்கையை நிரயம்புக்க நும்முன்னோரது எலும்பிற் பாய விடுத்தாற் சுவர்க்கமடைவர். அந்நதி பூவுலகத்துவரின் வேகத்தையாற்று தலரிது, அதனையமைத்தற் பொருட்டுச் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்க'' என்றனர். பகீரதராசன் அவ்வாறே தவஞ்செய்து சிவனருள் பெற்றுப் பின்பு கங்கையை நோக்கித் தவஞ்செய்தனன். கங்கை பெண்வடிவுடன் தோன்றி ''அரசனே! என் வேகத்தைத் தணிக்கும்பொருட்டு சிவபெருமானை நோக்கிப் பின்னுந் தவம்செய்து அருள்பெற்று என்னையழைப்பாயாக'' என்று கூறியது. அரசன் அவ்வாறே பின்னுந்தவஞ்செய்து அருள்பெற்றுக் கங்கையையழைத்தனன். அப்போது அக்கங்கை நதி மூவுலகத்தாருமஞ்சத்தக்க வேகத்துடன் வர, சிவபெருமான் வேகத்தைத் தணித்துச் சடையிற்றரித்து, பகீரதராசன் வேண்டுதல் செய்ய ஒரு சிறுதிவலையை விட்டனர். அத்திவலைபெருகிச் சகரபுத்திரரின் எலும்பிற் பாய அவர்கள் நற்கதி சேர்ந்தனர். பகீரதனாற் பூவுலகில் வருவிக்கப்படுதலாற் கங்கைக்குப் பாகீரதியென்னும் பெயர் வழங்கிற்று.

பூவுலகத்தில் வந்த கங்கை பிரமலோகத்திலிருந்த கங்கையாம். இதனை,

> ''அந்நதி மூன்று தன்னி லயனகர் புகுந்த கங்கை
> பன்னருந் திறலின் மிக்க பகீரதன் றவத்தான் மீளப்
> பின்னரு மிமையா முக்கட் பெருந்தகை முடிமேற் றூங்கி
> இந்நில வரைப்பிற் செல்ல இறையதில் விடுத்தல் செய்தான்''.
>
> (தக்ஷ - ததீசி. 375)

என மேல் தக்ஷகாண்டத்துத் ததீசியுத்தரப் படலத்திற் கூறப்படுதலாலு முணர்க. (10)

வாலி தாகிய குணத்தினன் வசிட்டனென் றுரைக்குஞ்
சீல மாமுனி படைத்ததோர் தேனுவின் றீம்பால்
சால நீடியே தொல்லைநாட் படர்ந்திடு தன்மைப்
பாலி மாநதிப் பெருமையான் பகர்வதற் கெளிதோ.

இ-ள்: வாலிது ஆகிய குணத்தினன் வசிட்டன் என்று உரைக்கும் சீல மா முனி படைத்தது ஓர் தேனுவின் தீம் பால் — பரிசுத்தமான குணத்தினை யுடைய வசிட்டரென்று சொல்லப்படுகின்ற நல்லொழுக்கத்தையுடைய பெரிய முனிவர் பெற்றுக்கொண்ட காமதேனுவினது இனியபாலானது, சால நீடி தொல்லை நாள் படர்ந்திடு தன்மை — மிகப்பெருகி முன்னாளிற் பாய்ந்த தன்மையினையுடைய, மா பாலி நதி பெருமை யான் பகர்வதற்கு எளிதோ — பெரிய பாலியாற்றின் பெருமையானது சிறியேன் சொல்லுதற்கு எளிதாகுமா? (அரிதேயாம்; ஆயினும் ஒருவாறு கூறுவேன்) எ-று.

ஓர் ஏ அசைகள். குணத்தினன் முனி என இயைக்க. கபடமில்லாத குணத்தினரென்பார், வாலிதாகிய குணத்தினன் என்றார். வாலிது — குறிப்புவினையாலணையும் பெயர். பாலி - பாலையுடையது. முன்னொருகாலத்தில் வசிட்டமுனிவர் நந்திமலைக்கு வந்தபோது அவரிடத்துள்ள காமதேனுவானது சிவபெருமானது வாகனமாகிய இடபதேவரைக் கண்டு காமித்து அதனாற் பால்வற்றிநிற்க, வசிட்ட முனிவர் ஒரு தருப்பையை யெடுத்துக் கன்றாக்கித் தேனுவின்முன் விடுத்தனர், அந்தக் கன்றை நோக்கியவுடன் காமதேனுவுக்குப் பால் அதிகமாகச் சுரந்து ஆறாகப் பெருகியோடியது. ஆதலின் 'வசிட்டனென்றுரைக்குஞ் சீலமாமுனி படைத்ததோர் தேனுவின் றீம்பால்... படர்ந்திடு தன்மைப்பாலிமா நதி' என்றார். இதனால் முனிவர் பசுப்போலப் பாலிநதியும் விரும்பிய எவற்றையுங் கொடுப்பதென்பது பெறப்பட்டது; இதனை,

> "காரணப் பொருளின் தன்மை காரியத் துளதா மென்ன
> ஆரணப் பனுவல் கூறு மரும்பொரு டெளியத் தேற்றும்
> பேரிசைப் புவிமேல் யார்க்கும் பெட்டன பெட்ட வாறே
> சீரிதிற் கொடுக்குந் தேனுத் தரவருஞ் செழுநீர்ப் பாலி"

என்னுங் காஞ்சிப்புராணச் செய்யுளானு மறிக. (11)

> எய்யும் வெஞ்சிலைப் புளிஞரை யெயிற்றியர் தொகையைக்
> கைய ரிக்கொடு வாரியே சிறுகுடி கலக்கித்
> துய்ய சந்தகில் பறித்துடன் போந்தது தொன்னாள்
> வெய்ய சூர்ப்படை வான்சிறை கவர்ந்துமீண் டதுபோல்.

இ-ள்: தொல் நாள் வெய்யசூர் படை வான் சிறை கவர்ந்து மீண்டது போல் — முன்னாளிலே கொடிய சூரபன்மனது சேனை தேவர்களைச் சிறையாகப் பிடித்துக்கொண்டு திரும்பியதுபோல, எய்யும் வெம் சிலை புளிஞரை எயிற்றியர் தொகையை — அம்பையெய்கின்ற கொடியவில்லையுடைய குறவர்களையும் குறத்தியரது தொகுதியையும், கையரிக்கொடு வாரி சிறுகுடி கலக்கி — அகப்படுத்தி இழுத்து அவர் வசித்த சிற்றூரைக் கலங்கச்செய்து, துய்ய சந்து அகில் பறித்து உடன் போந்தது — பரிசுத்தத்தினையுடைய சந்தனமரங்களையும் அகிலமரங்களையும் பிடுங்கிக்கொண்டு அவற்றுடன் பாய்ந்தது (அந்தப்பாலியாறு) எ-று.

ஏ அசை. கையரிக்கொளல் — திரைக்கையினால் அரித்துக்கொள்ளுதல். வான் — ஆகுபெயர். சூரனது முதற்குமாரனாகிய பானுகோபனும் சேனைகளும் தம்முடன் பொருத தேவர்களையும் அவரது பெண்களையுஞ் சிறைப்படுத்தி அவரது இருப்பிடங்களையழித்துக் கற்பக முதலியவைகளைச் சிதைத்துத் தம்மூர்க்குத் திரும்

பியதுபோல, பாலியாறும் வில்லேந்தி அம்பெய்து நின்ற குறவர்களையும் அவர் பெண்களாகிய குறத்தியர்களையும் தன்னுளமிழ்த்தி இழுத்துக்கொண்டு அவரிருந்த சிற்றூரை நீர்ப்பெருக்கால் அழித்துச் சந்தனமரங்களையும் அகிலமரங்களையும் பிடுங்கிக் கொண்டு பாய்ந்ததென்பது கருத்து. (12)

காக பந்தரிற் கருமுகிற் காளிமங் கஞலும்
மாக நீள்கரி யாவையுங் குழுவொடும் வாரிப்
போகன் மேயின மேற்றிசைப் புணரியுண் டமையா
மேக ராசிகள் குணகடல் மீதுசெல் வனபோல்.

இ-ள்: காக பந்தரில் கரு முகில் காளிமம் கஞலும் மாகநீள் கரி யாவையும் — காகங்களாலான பந்தரைப்போலக் கருக்கொண்ட மேகங்களின் கருநிறஞ் செறிந்த ஆகாயமளவு முயர்ந்த யானைகளெல்லாம், மேல்திசை புணரி உண்டு அமையா மேக ராசிகள் குண கடல் மீது செல்வன போல் — மேற்குத்திசையிலுள்ள கடலைப்பருகி நீர்வேட்கை தணியப்பெறாத மேகக்கூட்டங்கள் வேட்கை தணியப் பருகுமாறு கிழக்குத் திசையிலுள்ள கடலைநோக்கிப் போவனபோல, குழுவொடும் வாரி போகல் மேயின — கூட்டத்தோடும் அந்தப்பாலியாற்றில் அகப்பட்டுச் சென் றன எ-று.

காகம் பந்தரிட்டது போலவும் முகில் செறிந்ததுபோலவும் கருநிறம் விளங்கு கின்ற யானை என்க. காகபந்தரென்றது பலகாகங்கள் ஓரிடத்திற் குழீஇயிருத்தலை. பந்தலென்பது பந்தரெனப்போலியாயிற்று. மேகங்கள் மேற்றிசைக் கடனீரையுண்டு வேட்கை தணியாமையாற் கீழ்த்திசைக் கடனீரைப் பருகும்படி செல்லுதல்போல, யானைக்கூட்டங்கள் மேற்றிசையினின்று கீழ்த்திசையை நோக்கிப் பாயும் பாலியாற்று வெள்ளத்தா லிழுக்கப்பட்டுப் போயின என்பது கருத்து, கூட்டத்தில் ஒன்றுந்தவரு தமிழ்ந்தியவென்பார் 'குழுவொடும்... போகன்மேயின' என்றார். யாவையுமென் பதில் ஐயை இரண்டனுருபாகக் கொண்டு வாரியென்பதை வினையெச்சமாக்கிப் பொருள் கூறுவர் சிலர். அங்ஙனங்கூறுங்கால், அதிகாரத்தான் வருவிக்கப்படும் பாலியாறென்னுமெழுவாய் ஒருமையாயிருப்ப, மேயின என்னும் பயனிலை அதற் கேலாதபன்மைவினைமுற்றாய் நிற்றலின், அப்பொருள் பொருந்தாதென்க.

இச்செய்யுளாலும் முற்செய்யுளாலும் குறிஞ்சிநிலத்திற் பாய்ந்தமை வருணிக் கப்பட்டது. (13)

குவட்டு மால்கரிக் குருகுதே ரரிபுலிக் குவையுண்
டுவட்டி யுந்திடு திரைப்புனல் மதூகநல் லுழிஞ்சில்
கவட்டி னோமை சாய்த் தாறலை கள்வரூர் கலக்கித்
தெவிட்டி வந்தது பாலையுட் கொண்டிடு செருக்கால்.

இ-ள்: குவட்டு மால் கரி குருகு தேர் அரி புலி குவை உண்டு உவட்டி உந்திடு திரை புனல் — மலைபோன்ற பெரிய யானையினது மூளையை (உண்ணுதற்கு விரும்பித்) தேடுகின்ற சிங்கக் கூட்டங்களையும் புலிக்கூட்டங்களையும் உள்ளமிழ்த்திப் பெருகி உதைத்துப் பாய்கின்ற திரைமறிகின்ற பாலியாறனது, மதூகம் நல் உழிஞ்சில் கவட்டின் ஓமை சாய்த்து — இருப்பை மரங்களையும் நல்ல அழிஞ்சில் மரங்களையும் கிளைகளையுடைய ஓமைமரங்களையும் விழுத்தி, ஆறு அலை கள்வர் ஊர் கலக்கி —

வழியினின்றும் மறித்துப் பறிக்குந் திருடர்களது ஊர்களைச் சிதைத்து, பாலை உள் கொண்டிடு செருக்கால் தெவிட்டி வந்தது — பாலைநிலத்தைத் தன்னுளடக்கிக் கொண்ட கர்வத்தினால் நிறைந்து பாய்ந்தது எ-று.

குருகு — யானை மத்தகத்தினுள் வெண்ணிறமுடைத்தா யிருப்பதோரூன் விசேடம். இதனையுண்ணும் வேட்கையானே சிங்கம் யானையைக் கண்டவுடன் பாய்ந்து கிழிக்குமென்க. குவையென்பது அரியென்பதனோடுங் கூட்டிப் பொருள் கொள்ளப் பட்டது. பாலைத்தன்னுளடக்கிய மதர்ப்பினாலென்னும் பொருளுமமையப் பாலை யுட்கொண்டிடு செருக்கால் என இரட்டுற மொழிந்தார். (14)

காலை வெம்பகல் கதிரவன் குடதிசைக் கரக்கும்
மாலை யாமம்வை கறையெலாஞ் செந்தழல் வடிவாய்
வேலை யும்பரு கியவெழும் வெம்மைபோய் விளிந்து
பாலை காண்கிலா வாரியின் பெருமையார் பகர்வார்.

இ-ள்: காலை — சூரிய உதயமும், வெம் பகல் — மத்தியானமும், கதிரவன் குட திசை கரக்கும் மாலை — சூரியன் மேற்றிசையிற் சென்று அத்தமிக்கின்ற மாலையும், யாமம் — அர்த்தராத்திரியும், வைகறை எலாம் — விடியலுமாகிய ஐவகைக் காலங்களினும், செம் தழல் வடிவு ஆய் — சிவந்த அக்கினியின்மயமாய், வேலையும் பருகிய எழும் — சமுத்திரத்தையும் பருகும்படி கிளருகின்ற, வெம்மை, — வெப்பமானது, போய்விளிந்து — நீங்கி அழிந்து, பாலை காண்கிலா — பாலைநிலங்கள் காணப்பட்டில; (ஆதலால்), வாரியின் பெருமை யார் பகர்வார் — அப்பாலியாற்றின் பெருமையை யார்தாஞ் சொல்லவல்லார் எ-று.

வெம்பகல் — வெப்பத்தைத்தருங்காலம். வேலையுமென்பதிலும்மை உயர்வு சிறப்பு. பருகியவென்பது செய்யியவென்வாய்பாட்டு வினையெச்சம். சிறிது காலமேனுந் தணியாது எப்போதும் அக்கினிமயமாய்ச் சமுத்திரத்தையும் பருகும்படி கிளருகின்ற பாலைநிலத்தையும் இல்லையெனும்படி யழித்ததாதலின் அவ்வாற்றின் பெருமை ஒருவராலுஞ் சொல்லமுடியாதென்பது கருத்து.

இச் செய்யுளாலும் முற்செய்யுளாலும் பாலைநிலத்திற் பாய்ந்தமை வருணிக்கப்பட்டது. (15)

குல்லை மாலதி கொன்றைகா யாமலர்க் குருந்து
முல்லை சாடியே யானிரை முழுவது மலைத்து
மெல்ல மற்றவை நீந்தலுங் கரைக்கண்விட் டுளதால்
தொல்லை மாநதி யான்வழித் தோன்றிய தொடர்பால்.

இ-ள்: குல்லை — வெட்சியும், மாலதி — மல்லிகையும், கொன்றை — கொன்றையும், காயா — காயாவும், மலர் குருந்து — பூக்களையுடைய குருந்தும், முல்லை — முல்லையுமாகிய இவைகளை, சாடி — சிதைத்து, ஆன் நிரை முழுவதும் அலைத்து — பசுக்கூட்டங்கள் முழுவதையும் அலைவுசெய்து, அவை மெல்ல நீந்தலும் — அந்தப் பசுக்கள் மெல்லவாக நீந்துதலும், தொல்லை மா நதி ஆன் வழி தோன்றிய தொடர்பால் — பழைய பெரிய அப்பாலியாறு காமதேனுவென்னும் பசுவினின்றும் முற்காலத்திலே தோற்றிய சம்பந்தத்தால், கரைக்கண் விட்டுளது — அவைகளைக் கரையின்கண்ணே ஒதுக்கிவிட்டது எ-று.

ஏ மற்று ஆல் அசைகள். உள்ளதென்பதில ளகரவொற்றுத் தொக்கது. பசுக்கள் நீந்திக் கரையேறியதைத் தன்னுற்பத்திக்குக் காரணமாய பசுவினின மாதல்பற்றி யாறு கரையேற்றியதெனக் கூறியது தற்குறிப்பேற்றம்.

இச்செய்யுளால் முல்லைநிலத்திற் பாய்ந்தமை வருணிக்கப்பட்டது. (16)

சுளையு டைப்பல வாசினி பூகமாந் துடவை
உளைம லர்ச்சினை மருதமோ டொழிந்தன பிறவுங்
களைத லுற்றுமாட் டெறிந்தது கண்ணகன் குடிஞை
அளவின் மிக்குறு பாணிபெற் றதற்கவை யரிதோ.

இ-ள்: சுளை உடை பலவு — வருக்கைப் பலாமரங்களையும், ஆசினி — ஆசினிப் பலாமரங்களையும், பூகம் — கமுகமரங்களையும், மா துடவை — மாமரச் சோலைகளையும், உளை மலர் சினை மருதமோடு — நெருங்கிய புஷ்பங்கள் பொருந்திய கிளைகளையுடைய மருதமரங்களையும், ஒழிந்தன பிறவும் — இவையல்லாத பிற மரங்களையும், களைதல் உற்று மாட்டு எறிந்தது — பிடுங்கிப் பக்கத்தில் வீசியது, கண் அகன் குடிஞை—இடமகன்ற அந்தப் பாலியாறு, அளவின் மிக்கு உறு பாணி பெற்றதற்கு அவை அரிதோ — அளவின் மேம்பட்ட நீரைப் பெற்றிருக்கின்ற அவ்வாற்றிற்கு அச்செயல்கள் அரியனவா? (அல்ல) எ-று.

ஓடு எண்ணுப் பொருளில் வந்தது. வருக்கை ஆசினி என்பன பலாவின் பேதங்கள். சினைக்குரிய விசேடணமாகிய சுளையுடைமை முதலாகிய மரத்திற்கேற்றிக் கூறப்பட்டது. அகல் என்பது அகனெனத் திரிந்தது. அவையரிதோ — ஒருமை பன்மை மயக்கம். பாணி என்பதற்குக் கைகளெனவும் இரட்டுற மொழிந்து கொள்க. (17)

இச்செய்யுளால் மருதநிலத்திற் பாய்ந்தமை வருணிக்கப்பட்டது.

இலைவி ரித்துவெண் சோறுகால் கைதையு மெழுதுங்
கலைவி ரித்திடு பெண்ணையுங் களைந்திடுங் களைபோய்
அலைவி ரித்திடு கடல்புக வொழுகுமா றனந்தன்
தலைவி ரித்துழி யுடனெளித் தன்னதோர் தகைத்தால்.

இ-ள்: இலை விரித்து வெண் சோறு கால் கைதையும் — மடல்களைப் பரப்பி வெள்ளிய பராகத்தைச் சொரிகின்ற தாழையும், எழுதும் கலை விரித்திடு பெண்ணையும் — எழுதப்படுகின்ற சாத்திரங்களைப் பரப்புகின்ற (இலைகளையுடைய) பனையும் ஆகிய, களைந்திடும் களை போய் — பிடுங்கப்பட்ட மரங்கள் சென்று, அலை விரித்திடு கடல் புக ஒழுகும் ஆறு — திரைகளைப் பரப்புகின்ற சமுத்திரத்திற் புகும்படி பாய்கின்ற அப்பாலியாறுனது, அனந்தன் தலை விரித்துழி உடல் நெளித்து அன்னது ஓர் தகைத்து — ஆதிசேடன் தலைகளை விரித்தபோது சரீரத்தை நெளித்தாற் போலுந் தகைமையை யுடையது எ-று.

ஓர் ஆல் அசைகள். எழுதுங்கலை விரித்திடு பெண்ணையென்பது சினைவினைமுதல் வினையாகக் கூறப்பட்டது. கலை விரித்து எழுதிடும் எனக்கூட்டிச் சாத்திரங்களை விரித்தெழுதற்கிடமாகிய எனப் பொருள் கூறினுமாம். களையென்பதிற் செயப்

படுபொருளுணர்த்தும் ஐ விகுதி புணர்ந்துகெட்டது. பரப்பிய இலைகளையுடைய தாழைமரங்களையும் பனைமரங்களையும் பிடுங்கிக்கொண்டு கடலைநோக்கிப் பாயும் பாலியாறு எதிரேயுந்துங் கடற்றிரைகளினால் அம்மரவகைகளின் றலைகள் மேற்கிளம்புந்தோறும் சேடன் றலைவிரித்தலைப் போன்றிருப்ப, யாறு சுழித்தல், உடனெளித்தலை ஒத்திருந்தது என்பது கருத்து.

இச்செய்யுளால் நெய்தனிலத்திற் பாய்ந்தமை வருணிக்கப்பட்டது. (18)

கொங்கு லாமலர்க் கொன்றைகூ விளைகுர வுழிஞை
பொங்கு மாசுணந் தாதகி பாடலம் புன்னை
துங்க மார்திருத் தலைமிசைக் கொண்டுறுந் தொடர்பால்
எங்க ணாயகன் றன்னையு மொத்ததவ் விருநீர்.

இ - ள்: கொங்கு உலாம் கொன்றை மலர் — வாசனைபொருந்திய கொன்றைப் பூக்களையும், கூவிளை — வில்வப்பத்திரங்களையும், குரவு – குராமலர்களையும், உழிஞை — சிறு பூளைமலர்களையும், பொங்கும் மாசுணம் – சீறுகின்ற சர்ப்பங்களையும், தாதகி — ஆத்திமலர்களையும், பாடலம் — பாதிரிமலர்களையும், புன்னை — புன்னை மலர்களையும், துங்கம் ஆர் திரு தலை மிசை கொண்டு உறும் தொடர்பால் — உயர்ச்சிபொருந்திய சிறந்த மேற்புறத்திற் றாங்கிக்கொண்டு பாயும் சம்பந்தத்தினால், எங்கள் நாயகன் தன்னையும் ஒத்தது — எங்கள் தலைவராகிய சிவபெருமானையும் நிகர்த்தது, அ இரு நீர் — அந்தப் பெரிய பாலியாறு எ—று.

திருக்தலைமிசை என்பதை, ஆற்றுக்காம்போது திருத்து அலை மிசை எனக் கண்ணழித்துப் பொருள் கூறினுமாம். சிவபெருமானுக்கியையக் கூறுங்கால், திருத்தலைமிசைக் கொண்டுறுந் தொடர்பாலென்றதற்கு, அழகிய சிரசின்மேற் றரித்திருக்குந் தொடர்பாலென்க. தொடர்பென்றது ஆற்றின்கண்ணுஞ் சிவன்றலையின் கண்ணுமுள்ள பொருள்களினியைபை. நாயகன் — நடப்பிப்பவன். உம்மை-உயர்வு சிறப்பு; எதிரது தழீஇய வெச்சமுமாம். (19)

கொலைகொள் வேன்மற வீரர்த மிருக்கையிற் குறுகாச்
சிலையும் வாளொடு தண்டமுந் திகிரிவான் படையும்
நிலவு சங்கமுங் கொண்டுசென் றடல்புரி நீரால்
உலக மேழையு முற்பக லயின்றமா லொக்கும்.

இ - ள்: கொலை கொள் வேல் மற வீரர் தம் இருக்கையில் குறுகா — கொலைத்தொழில் பொருந்திய வேற்படையைத் தாங்கிய வேட்டுவ வீரர்களது இருப்பிடங்களிற் போய், சிலையும் வாளொடு தண்டமும் வான் திகிரி படையும் — அங்குள்ள வில்லும் வாளும் தண்டும் பெரிய சக்கராயுதமும், நிலவு சங்கமும் கொண்டு சென்று அடல் புரி நீரால் — விளங்குகின்ற சங்குமாகிய பஞ்சாயுதங்களையுங்கொண்டு பாய்ந்து அழிவுசெய்யும் நீரையுடைமையால், உலகம் ஏழையும் முன் பகல் அயின்ற மால் ஒக்கும் — ஏழுலகங்களையும் முற்காலத்திலுண்ட திருமாலை நிகர்க்கும் (அந்தப் பாலியாறு) எ—று.

ஒடு எண்ணுப்பொருளில் வந்தது. உலகமேழையுமென்பதிலும்மை முற்று. திருமாலுக்கியையப் பொருள்கொள்ளுங்கால், அசுரர்களது இருப்பிடங்களையணுகி வில் முதலிய பஞ்சாயுதங்களைத் தாங்கிச்சென்று அவர்களையழிக்குந் தன்மையால்

எனவுரைக்க. இவர் தைத்தியாரியென்னும் பெயருடையராதலால் வீரரை அசுர ரென்றும். வில் முதலிய நாற்படைகளும் வேடரூரிற் கவரப்பெற்றன. சங்கு அங்ஙனங் கவரப்பட்டனவோடு நீரில்வாழ்வனவாயுள்ளனவுமாம் என்க. திருமாலி னது வில் சார்ங்கமெனவும் வாள் நந்தகமெனவும் தண்டு கௌமோதகியெனவும் சக்கரம் சுதர்சனமெனவும் சங்கு பாஞ்சசன்னியமெனவும் பெயர்பெறும். பஞ்சா யுதங்களுட் சக்கரம் விசேடமுடைத்தென்பார் 'வான்படை' என விசேடித்தார். படைகளைப் பரித்து வீரரையழித்தலாலும அவரது இருப்பிடங்களை நீறுற் சிதைத்த லாலும் அசுரரை அழித்தவரும் பூமியையுண்டவருமாகிய திருமாலைப் பாலியாற் றிற்குவமித்தனர், உலகமேழென்றது ஏழு தீவுகளை. (20)

தேன்கு லாவிய மலர்மிசைப் பொலிதரு செயலால்
நான்க வாமுகந் தொறுமறை யிசையொடு நணுகிக்
கான்கு லாவிய கலைமரை மான்றிகழ் கவினுல்
வான்கு லாமுல களிப்பவ னிகர்க்குமால் வாரி.

இ - ள்: தேன் குலாவிய மலர்மிசை பொலிதரு செயலால் — தேன்பொருந் திய பலவகைப் பூக்கள் தன்மேற் பொலியுஞ் செய்கையினுலும், கான் குலாவிய கலை மரை மான் — காட்டிற் சஞ்சரித்த கலைமான்களும் மரைகளும் மான்களும், அறை இசை ஒடு நான்க ஆம முகம் தொறும் நணுகி திகழ் கவினுல் — அதிருகின்ற ஓசையுடனே நான்கு திக்குகளினுஞ் செறிந்து விளங்குஞ் சிறப்பினுலும், வான் குலாம் உலகு அளிப்பவன் நிகர்க்கும் — பெருமை விளங்குகின்ற உலகத்தைப் படைப்பவராகிய பிரமதேவரை நிகர்க்கும், வாரி — அந்தப் பாலியாறு எ—று.

ஆல் அசை. நான்க = நான்கென்னுந் தொகையினையுடையன; குறிப்புவினையா லணையும் பெயர். பிரமதேவர்க்கியையப் பொருள் கொள்ளுங்கால், தேன் குலா விய மலர் மிசை பொலிதரு செயலால் — தேன்பொருந்திய செந்தாமரை மலரின் மேற் பொலிந்திருக்குஞ் செய்கையினுலும், கான் குலாவிய மரை கலை மான் — வாசனைசெறிந்த வெண்டாமரை மலரில் வீற்றிருக்கின்ற கலைமகளானவள், மறை யிசையொடு நான்க ஆம் முகம் தொறும் நணுகி திகழ் கவினுல் — வேதகீதத்தோடும் நான்கு முகங்கடோறும் பொருந்தி விளங்குஞ் சிறப்பினுலும் என்க

இப்பொருளில், மரை முதற்குறை; மான் உவமவாகுபெயர். முகமென்பதை ஆஸ்யமென்னும் வடமொழிபோற்கொண்டு வாயென்னப் பொருளுரைப்பினுமாம். சரசுவதி வாக்குத்தேவியாய்ப் பிரமதேவரது நாவினிற்றலால் 'நான்கவாமுகந் தொறும் . கலைமான்றிகழ்கவினுல்' என்றார். இதனை,

"காரதிருங் கயிலைமலைக் கண்ணுதன்முப் புரமெரிக்கக் கருது மந்நாள்
நீரதிகந் தருந்தரங்கத் தடங்கடல்சூழ்ந் திடும்புடவி நெடுந்தே ரூர்ந்த
சாரதிதன் றிருநாவி லடியருளத் தினிலிருக்குந் தவள மேனிப்
பாரதி ......................................................................................."

(சிவ—கடவுள் 13)

என்னுஞ் சிவராத்திரிபுராணச் செய்யுளானுமுணர்க.

சொற்பொதுமை காரணமாக உவமை கூறுதலி னிது சிலேடை யுவமையணி. இச்செய்யுளும் முன்னிரு செய்யுட்களுமாகிய மூன்று செய்யுட்களாலும் முறையே மும்மூர்த்திகளுமுவமிக்கப்பட்டனர். (21)

மீது போந்திரி சங்கைவிண் ணிடையின்மீ னோடும்
போத லாயுற வீசலாற் சலமிகும் புலனால்
தீதின் மாக்களைச் செறுத்தலா லளித்திடுஞ் செயலாற்
காதி காதல னிகர்க்குமாற் கன்னிமா நீத்தம்.

இ-ள் : மீது போந்து இரி சங்கை விண் இடையில் மீனோடும் போதல்ஆய் உற வீசலால் — மேற்கிளம்பியலைகின்ற சங்குகளை மீன்களோடும் ஆகாயத்திற் போய்ப் பொருந்தும்படி திரையெறிதலினாலும், சலம் மிகும் புலனால் நீர்மிகுந்த இடத்தினாலும், தீதின் மாக்களை செறுத்தலால் — கொடுமையையுடைய மிருகங்களை அழித்தலினாலும், அளித்திடும் செயலால் — (உலகத்தைக்) காக்குந் தன்மையினாலும், காதிகாதலன் நிகர்க்கும் — காதிராசனது புதல்வராகிய விசுவாமித்திர முனிவரைப் போலும், கன்னி மா நீத்தம் — புதிய பெரிய அந்தப் பாலியாறு எ—று.

ஆல் அசை நிலத்திலூருஞ் சங்குகள் வெள்ளத்தினலைப்பினால் மேற்கிளம்பியசைதலின் 'மீதுபோந்திரி சங்கை' என்றார். திரிசங்கை எனக் கண்ணழித்து முறுகிய முகத்தினையுடைய சங்குகளை என்பாருமுளர்; அஃதத்துணைச் சிறப்பின்று. புலம் என்பது புலனெனப் போலியாயிற்று. அளித்திடுஞ் செயலென்றது : தானிய முதலிய வளங்களைப் பெருக்குதலால் உயிர்களைக் காத்தலை; பாலியாறங்ஙனங் காத்தலை,

"தன்னடிப் படுத்து மேலைத் தண்டக நாடு முற்றும்
முன்னுறக் கவர்ந்து கொண்ட வளத்தினு மூவி ரட்டி
பின்னுற வளித்து வானிற் புலவரும் பெட்கு மாற்றால்
அந்நிலை யுயிர்க ளோம்பி யரசுசெய் துறையும் பாலி"

எனக் காஞ்சிப்புராணங் கூறுதலாலுமுணர்க.

விசுவாமித்திரர்க் கியையக் கூறுங்கால் :-மீது போம் திரிசங்கை — மேலுலகத்திற் (சரீரத்துடன்) போகவிரும்பிய திரிசங்குராசனை, விண் இடையில் மீனோடும் போதல் ஆய் உற வீசலால் — ஆகாயத்தில் நக்ஷத்திர மண்டலங்களோடும் போயிருக்கும்படி எறிதலினாலும், சலம் மிகும் புலனால் — கோபமிகுந்த சிந்தையினாலும், தீது இல் மாக்களை செறுத்தலால் — தீமையில்லாத மனிதரை அழித்தலினாலும், அளித்திடுஞ் செயலால் — படைத்தலினாலும் என்க.

திரிசங்குவைச் சுவர்க்கம் புகுவித்தல் முதலிய சரித்திரம் :- சூரியவண்ணனென்னும் அரசனது புதல்வனாய், அயோத்திநகரையாண்டு வந்த திரிசங்கு மகாராசன் ஒருநாள் தனது குலகுருவாகிய வசிட்டமுனிவரை யடைந்து "சுவாமி! யான் இந்தச் சரீரத்தோடு சுவர்க்கம் புக விரும்புகின்றேன். அவ்வாறு செய்தருளவேண்டும்" என்று வேண்டினன். முனிவர் அச்செயல் கூடாதென மறுத்தனர். பின்பு அவரது புதல்வர்களிடம் போய் வேண்டினன். அவர்களும் அவ்வாறே மறுத்தனர். பின் அவ்வரசன், 'என்னெண்ணத்தைப் பொருட்படுத்தி நிறைவேற்ற நினையாது மறுத்துவிட்டனரே யென்று துக்கித்து அவர்மேல் வெறுப்புற்று, பிறமுனிவரிடஞ் சென்று நினைத்தது முடிப்பேனென்று கூறிப்போயினன். அதனையறிந்த வசிட்ட முனிவர் "குருபத்தியை விடுத்தமையால் நீ புலையனாவாய்." எனச் சபித்தனர். உடனே திரிசங்கு புலைய வடிவுபெற்று, வசிட்ட முனிவர்க்குப் பகைவர் விசுவாமித்திரர் என்பதை ஆராய்ந்தறிந்து அவரிடம்போய் நிகழ்ந்த விருத்தாந்தங்களெவற்றையும் கூறினன். அதுகேட்ட முனிவர் திரிசங்குராசனைச் சுவர்க்கலோகம்

புகுவிக்குமாறு யாகஞ்செய்யவெண்ணி முனிவர்களையழைத்தனர். வசிட்டமுனிவரின் புத்திரர் அம்முனிவர்களைப் போகாவண்ணம் தடுத்தனர். அதனையறிந்த விசுவாமித்திரமுனிவர் அந்த வசிட்டமுனிவரின புத்திரரை வைது கொன்றுவிட்டு, பின்னர்த்தாமே தனித்து யாகஞ்செய்து அவிசொரிய, தேவர்கள் அதனையேற்றிலர். அதனால் விசுவாமித்திரர் அதிககோபமுற்று ஆகுதிசெய்யுஞ் சுருவத்தில் திரிசங்குவை யேற்றிச் சுவர்க்கம் புகுமாறு எறிந்தனர். அதுகண்ட தேவர்கள் ''நீசனே! நீ இவ்விடம் வரத்தக்காயல்லை'' என்று கூறித் தலைகீழாய் விழும்படி தள்ளினர். அவ்வாறு தள்ளுண்டு மீண்டுவருந் திரிசங்கு விசுவாமித்திரரை நோக்கி ஓலமிட, விசுவாமித்திரர் தம்முடைய தவவலிமையினால் அவ்வரசனை அந்தரத்திற்றானே நிறுத்தி. வேறொரு சுவர்க்கமமைக்கக் கருதி நக்ஷத்திரங்கள் தேவகணங்கள் சராசரங்கள் முதலிய சிலவற்றைப் படைத்தனர். தேவர்களும் இந்திரனும் அவற்றைக் கண்டு பயந்து விசுவாமித்திரரையடைந்து, ''முனிசிரேட்டரே! இனிப் படைத்தலை விடுக, இப்பொழுது படைத்தவர்களையும் திரிசங்குவையும் நக்ஷத்திர மண்டலத்தினருகி லிருத்துக'' என்று வேண்டினர். விசுவாமித்திரமுனிவர் அவ்வாறேயிருத்தினர் இந்தத் திரிசங்குவின் குமாரன் அரிச்சந்திரன்; இவன் வசிட்டரையே குருவாகக் கொண்டான். அதனால் விசுவாமித்திரர் அதிக கோபமுண்டு விரோதஞ் சாதித்துத் துன்பப்படுத்தினர் என்பதாம் (22)

தெழித்த மால்கரி யினங்கட மெயிற்றினாற் சிதையக்
கிழித்த பேரிறால் சொரிந்ததேன் கிரியுள மெல்லாங்
கொழித்து வந்துற வணைதரும் பாலியின் கொள்கை
சுழித்த நீர்க்கங்கை யமுனையைக் கலந்தெனத் தோன்றும்.

இ-ள்: தெழித்த மால்கரி இனங்கள் தம் எயிற்றினால் சிதைய கிழித்த பேர் இறால் சொரிந்த தேன் — பிளிறுகின்ற மதமயக்கினையுடைய யானைக் கூட்டங்கள் தங்கள் கோடுகளினாற் கெடும்படி குற்றிக்கிழித்த பெரிய தேன்கூடுகள் சொரிந்த மதுவெள்ளமானது, கிரி உள எல்லாம் கொழித்து வந்து உற — மலைகளிலுள்ள பொருள்களெல்லாவற்றையும் வாரிக்கொண்டு வந்து பொருந்த, அணைதரும் பாலியின் கொள்கை — அத்தேனாற்றோடு வந்து கலக்கும், பாலியாற்றின் றன்மையானது, சுழித்த நீர் கங்கை யமுனையை கலந்து என தோன்றும் — சுழிபொருந்திய நீரினையுடைய கங்கைநதி காளிந்தி நதியைச் சேர்ந்தாற்போலக் காணப்படும் எ—று.

தெழித்த - இயற்கையான் வந்த காலவழுவமைதி பாலியாறு வெண்ணிறமுந் தேனாறு கருநிறமுமுடைமையாலவற்றிற்கு முறையே கங்கைநதியையும் யமுனை நதியையு முவமித்தார். தேன் செந்நிறமுடைத்தாயினும் மலையிற் பாய்ந்துவந்தமையாற் கருநிறமுடைத்தாயிற்று. யமுனைநதியினுங் கங்கை பெரியதென்பார் 'சுழித்த நீர்க்கங்கை' என அடைகொடுத்துக் கூறினர். உபமானமிங்ஙனங் கூறப்படவே உபமேயமாகிய பாலியாறுந் தேனாற்றிலும் பெரிதென்பதுபோதரும். (23)

சங்க மார்த்திடத் திரையெழ நதியுறுந் தகைமை
அங்கம் வெம்பினை பனிக்கதி ரல்லைநீ யழலோய்
இங்கு வாதிலைத் தேகுதி யெனக்கர மெடுத்தே
பொங்கும் வாய்விடா விரவியை விளிப்பது போலும்.

இ-ள்: சங்கம் ஆர்த்திட திரை எழ நதி உறும் தகைமை - சங்குகள் ஒலிக்கவும் திரைகள் கிளம்பவும் அந்தப்பாலியாறு பொருந்துந் தன்மையானது, அழலோய் —

சூரியனே, நீ அங்கம் வெம்பினை — நீ சரீரம் வெதுப்பப் பெற்றாய், பனி கதிர் அல்லை — குளிர்ந்த கிரணங்களை யுடையாயல்லை (ஆதலால்), இங்கு வா திளைத்து ஏகுதி என கரம் எடுத்து — இங்கே வா (வெப்பந்தீர) நீராடிப்போ என்று கையை யுயர்த்தி, பொங்கும் வாய் விடா இரவியை விழிப்பது போலும் — பொலிந்த வாயைத் திறந்து சூரியனை அழைப்பது போலும் எ — று.

ஏ அசை. அழலோன் — சுடுகிரணங்களையுடையவன். விளியாதலினீறு திரிந்தது. விடா — செய்யாவென் வாய்பாட்டு வினையெச்சம். நதியுறுந் தகைமை இரவியை விழிப்பதுபோலும் என இயையும். சங்கமார்த்தல் வாய்விடுதலையும் திரையெழுதல் கையெடுத்தலையும் போலுமென்க. தற்குறிப்பேற்றவணி. (24)

வேத மேமுதல் யாவையு முணர்கினு மேலாம்
ஆதி வானவன் கறைமிடற் றிறையென வறியாப்
பேதை மாக்கட் முணர்வென வலைந்துபேர் கின்ற
சீத நீரெலாந் தெளிதலின் றாயது சிறிதும்.

இ - ள்: வேதம் முதல் யாவையும் உணர்கினும் — வேதமுதலாகிய நூல்களெல்லாவற்றையுங் கற்றுணர்ந்தாலும், மேல் ஆம் ஆதி வானவன் கறை மிடற்று இறை என அறியா — மேலாகிய முதற் கடவுள் காளகண்டப் பெருமானேயென்றுணராத, பேதை மாக்கள்தம் உணர்வு என — மூடரது அறிவைப்போல, அலைந்து பேர்கின்ற சீத நீர் எலாம் — கலங்கிப் பாய்கின்ற குளிர்ச்சியையுடைய நீர்முழுதும், சிறிதும் தெளிதல் இன்று ஆயது — சற்றாயினும் தெளிவின்றியிருந்தது எ—று.

ஏ அசை. உணர்கினுமென்பதிலும்மை உயர்வுசிறப்பு. ஆகுமென்பது ஆமென நின்றது. பிரிநிலையேகாரம் விகாரத்தாற்றொக்கது. கறைமிடற்றிறை - நஞ்சார்ந்த கண்டத்தையுடைய தலைவன்.

முற்காலத்திலே தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தபொழுது தோற்றித் திருமால் முதலிய தலைவரையுமடர்த்து வந்த ஆலாகலத்தை அமுதாக அயின்று தேவர்முதலியோரனைவரும் இடர்வந்தக்காற் சரணடைதற்கேற்ற பரமபதி தாமே யென்பதற்கோ ரிலச்சினையாக மிடற்றில் வைத்துடையரென்பதையுணர்த்தி, வேத முதலியவற்றையேயன்றி இக்குறியீட்டையுமுணராத மூடரென விழிப்பார் 'ஆதி வானவன் கறைமிடற்றிறையெனவறியாப் பேதைமாக்கள்' என்றார் காளகண்டம முதற்கடவுளிவரென் றுணர்தற்கிலச்சினையென்பதை,

"மறையகத் தெல்லாத் தலைமையோ ரொருபால் வகுத்திடுங் கேவல மதுதான்
இறைவனே யிவ்வா றம்புயன் முதலோ ரினும்பிரித் துத்தியால் விளக்கா
தறைதரு மிதனுன் மாறுபட் டுழிவேறெ ராற்றினிற் போக்கவற்றமற்
கறைமிடற் றடக்கி ஏழைவா னவரைக் காத்தருள் கருணைமா கடலே."

எனச் சிவதத்துவ விவேகங் கூறுதலானுமறிக.

அறியாத என்பது ஈற்றுயிர்மெய் குறைந்து நின்றது. பேதைமாக்கள் - உய்த்துணர்வில்லா மாந்தர். பெயர்கின்ற எனற்பாலது பேர்கின்ற என விகாரமாயிற்று. எல்லாமென்பதில் லகரவொற்றுத் தொக்கது.

வேதமுதலிய நூல்களையறிந்தும் விசுவாதிகரும் விசுவசேவியரும் சிவபெருமானேயெனத் தெளியாது திருமால் முதலிய மற்றைத் தேவர்களைப் பரமென்று கூறும் வைணவர் முதலிய அந்நிய மதத்தவர் அஞ்ஞானம் நீங்காதவாறு போல,

பாலியாறு நீரையுடைத்தாயிருந்தும் கலங்கிப்பாய்தலாற் றெளிவில்லாததாயிற்று என்பது கருத்து.

"மறைமுதற் கலைக ளெல்லா மணிமிடற் றவனே யெங்கு
நிறைபர மென்றும் பூதிசாதன நெறிவி டென்று
மறைகுவ தறிந்துந் தேரு ரறிவெனக் கலங்கி............
"

என்றார் பரஞ்சோதிமாமுனிவரும்.

வேதமுதலிய நூல்களாவன - வேதம் நான்கு. வேதாங்கங்கள் ஆறு, நியாய நூல் மீமாம்சை மிருதிகள் புராணங்கள் என்னும் பதினான்கு வித்தைகளுமாம். இதனை,

அங்க மாறு மறைநான்கு மீமாங் கியமோன் றருள் கொழித்துத்
தங்கு நீதி நூலொன்று புராணமொன்று தவறெறிந்து
பொங்கு தரும நூலொன்று புகன்ற வீரேழ் விஞ்சையினை
அங்க ணுலகின் றவனளித்தா னிவற்றை யுணர்ந்தோ ரறிவுடையோர்.

எனக் கூர்மபுராணங் கூறுதலானுமறிக. இவற்றுடன் ஆயுர்வேத முதலியவற்றைச் சேர்த்து வித்தை பதினெட்டென்பாருமுளர். (25)

செம்பொன் மால்வரை யல்லன கிரிகளுந் திசையும்
உம்பர் வானமுந் தரணியுந் துளங்கவந் துறலால்
எம்பி ரான்முனம் வருகென நதிகளோ டெழுந்த
கம்பை மாநதி யொத்தது கரைபொரு பாலி.

இ - ள்: செம் பொன் மால் வரை அல்லன கிரிகளும் திசையும் — பசும்பொன் மயமாகிய பெரிய மேருமலையல்லாத (மற்றைய) மலைகளும் எட்டுத்திக்குகளும், உம்பர் வானமும் — மேலுள்ள ஆகாயவுலகமும், தரணியும் — பூவுலகமும், துளங்க வந்து உறலால் — நடுங்கும்படி பாய்ந்து வருதலால், எம்பிரான் முனம் வருக என — எங்கள் கடவுளாகிய ஏகாம்பரநாதர் முற்காலத்திலே பெருகிவருகவென்று பணிக்க, நதிகளோடு எழுந்த — மற்றைத் தீர்த்தங்களோடும் பெருகிய, மா கம்பை நதி ஒத்தது — பெரிய கம்பைநதியைப் போன்றது, கரைபொரு பாலி — கரையை அலையினால் மோதுகின்ற பாலியாறு எ—று.

அல்லன - குறிப்பு முற்றுப் பெயரெச்சம். துளங்கவென்னுமெச்சங் காரியப் பொருட்டு. முன்னமென்பதில் னகரவொற்றும் வருகவென்னும் வியங்கோளின் ஈற்றகரவுயிரும் தொக்கன. நதிவேகத்தானடுங்காத மலையாதலின் மேருமலையை விலக்கினர்.

முன்னொரு காலத்திற் காஞ்சீபுரத்தில் உமாதேவியார் சிவபூசை செய்துவரும் போது ஒருநாள் ஏகாம்பரநாதசுவாமி தேவியின் பூசாபத்தியைப் பரீட்சித்து உலகினர்க்கு காட்டுமாறு கம்பைநதியிலே சகலதீர்த்தங்களையும் வருவிக்க, அக்கம்பை மாநதி ஊழிகாலத்தெழுங் கடற்பிரவாகம்போல ஆகாயத்தையளாவிப் பெருகியது. இச்சரித்திரத்தைக் காஞ்சிப் புராணத்தாலும் பெரிய புராணத்தாலுந் தெள்ளிதினுணர்க. (26)

உதிரு கின்றசிற் றுண்டிகொண் டொலிபுனற் சடைமேல்
மதுரை நாயகன் மண்சுமந் திட்டமா நதியின்
முதிரு முத்தமிழ் விரகன தேடென மொய்ம்மீன்
எதிர்பு குந்திடப் போவது பாலியா மியாறு.

இ-ள்: மதுரைநாயகன் மதுராபுரிக்குத் தலைவராகிய சோமசுந்தரக்கடவுள், உதிருகின்ற சிற்றுண்டி கொண்டு — உதிருகின்ற பிட்டைக் கூலியாக ஏற்று, ஒலி புனல் சடைமேல் மண் சுமந்து இட்ட — ஆரவாரிக்கின்ற கங்கை நதியையணிந்த சடைமுடியின்மேல் மண்ணைச் சுமந்து கொட்டிய, மா நதியில் — பெரிய வைகை யாற்றில், முதிரும் முத்தமிழ் விரகனது ஏடு என — சிறந்த முத்தமிழ்ச்சாதுரிய ராகிய திருஞானசம்பந்தசுவாமியினது திருப்பதிகத் திருவேடு எதிர்சென்றதுபோல, மொய் மீன் எதிர் புகுந்திட — மொய்க்கின்றமீன்கள் பாயுந்திசைக்கெதிரே செல்ல, போவது—பாய்வது, பாலி ஆம் யாறு — பாலியென்னும் பெயரையுடையாறு எ-று.

நீர்மிகப்பெருகிப் பாய்தலால் உவகைமேலிட்டு மீன்கள் எதிரேயோடுவன என்க. சிற்றுண்டி சிறுமையாகிய உணவு. ஒலி, வினைத்தொகை. ஆகுமென்பது ஆமென நின்றது. பாலியாமியாறென்பதி லிகரம் பதப் புணர்ச்சிக்கண் வந்த சாரியை. முத்தமிழாவன: இயல், இசை, நாடகம் என்பனவாம்.

செய்யுந்தொழிற்குப் போதாத கூலியென்பார் 'உதிருகின்ற சிற்றுண்டி' என வும் மண்ணையேந்திச் சுமத்தற்கேலாத மகிமையுடைத் தென்பார் 'ஒலிபுனற் சடை' எனவும், அற்பமான கூலியை விரும்பியேற்று இந்த இழிதொழிலைச் செய்தது மதுரையில் வாழ்பவளாகிய பிட்டுவிற்றுண்பாளைக் காக்கும் வியாசமேயென்பார் 'மதுரைநாயகன்' எனவும், அவ்வாறு சோமசுந்தரக் கடவுளும் மண்சுமந்தடைத்த பெருநதியென்பார் 'மண்சுமந்திட்டமா நதி' எனவும், அத்தகைய நதியின் வேகத் தைத் தமிழிற்பாடிய தேவாரத் திருப்பதிகத்தால் வென்றவரென்பார் 'முதிருமுத் தமிழ் விரகன்' எனவும் கூறினார்.

சோமசுந்தரக்கடவுள் மண்சுமந்த சரித்திரம்:- முன்னொரு காலத்திற் குதிரை கொள்ளும்படி பாண்டியராசன் கொடுத்த திரவியங்களை யெல்லாம் மந்திரியா யிருந்த திருவாதவூரடிகளேற்றுச் சென்று தருமவிஷயங்களிற் செலவுசெய்து வந்தார். அதனையறிந்த பாண்டியராசன் திருவாதவூரடிகளை வருத்த, சோமசுந்தரக்கடவுள் நரிகளைப் பரியாக்கிக் கொணர்ந்து அரசனுக்குக் கொடுத்துத் தமது தொண்ட ராகிய வாதவூரடிகளது துயரையொழித்தனர். அவர்கொடுத்த பரிகளெல்லாம் அன்றிரவு நரிகளாயின. பாண்டியரசன் பின்னும் வாதவூரடிகளை வருத்தினன். அப்பொழுது அவர்படுந்துயரத்தை நீக்கத் திருவுளம்பற்றிய சோமசுந்தரக் கடவுள் வைகை நதியுடன்சென்று பெருகுமாறு கங்கைநதியைவிட அந்நதி வைகைநதியுடன் கூடிப்பெருகியலைத்தது. அரசன் அதுகண்டு சிவனடியாரை வருத்தியதாலன்றோ இந்த ஆபத்து நேர்ந்ததென்றெண்ணி வாதவூரடிகளை வருத்தாது நன்மொழி கூறி விடுத்துப் பெருகாதமைக்கும்படி வேண்டினன். வாதவூரடிகள் சிவபெருமானைத் தியானிக்க, அந்நதி பெருகா தமைந்தது. அதன்மேல் அந்நதிக் கணைகட்டுமாறு மதுரா நகரத்தில் வசிப்பார்க்கு நிலத்தை யளந்து கூறுபடுத்திக் காரியஸ்தர்கள் ஒப்பித்தனர். அக்கூறுகளுள் பிட்டு விற்றுண்ணுஞ் செம்மனச்செல்வியினது பாகம் அடைப்பாரின்றிக் கிடந்தமையால் அவளைக் காரியஸ்தர்கள் நெருக்கினர். அப் பொழுது அவளது துயரைத் தீர்க்குமாறு சோமசுந்தரக் கடவுள் கூலியாள் வடி வங்கொண்டு வந்து உதிரும் பிட்டைக் கூலியாக வேற்று மண் சுமந்தனர் என் பதாம்.

வைகை நதியி லேடிட்ட சரித்திரத்தை முன்னர்க் கடவுள் வாழ்த்தில் இரு பதாஞ் செய்யுளுரையிற் காண்க. (27)

### வேறு

மாசறத் துளங்கு துப்பு மரகதத் திடைவந் தென்னப்
பாசடை நடுவட் பூத்த பங்கயத் தடாகம் யாவுந்
தேசுடைத் தரங்க நீத்தச் செலவினுற் சிதைந்த மன்னோ
பேசிடிற் சிறுமை யெல்லாம் பெருமையா லடங்கு மன்றே.

**இ-ள்:** மாசு அற துளங்கு துப்பு மரகதத்து இடை வந்து என்ன—குற்றம நீங்கி விளங்குகின்ற பவளமானது நீல ரத்தினங்களிடையே பதிந்தாற்போல, பாசு அடை நடுவண் பூத்த பங்கய தடாகம் யாவும் — பசிய இலைப்பரப்புகளி னடுவே மலர்ந்த செந்தாமரை மலர்களையுடைய தடாகங்ளெல்லாம், தேசுஉடை தரங்க நீத்த செலவினுல் சிதைந்த — ஒளி பொருந்திய திரைகளையுடைய (அந்தப்) பாலியாற்றின் வேகத்தினுலழிந்தன, பேசிடில் — சொல்லுக்கால், சிறுமை எல்லாம் பெருமையால் அடங்கும் அன்றே — சிறிய பொருளெல்லாம் பெரிய பொருளால் அடக்கப்படுமன்றோ? எ — று

சிறியனவாகிய தாமரைத் தடாகங்களெல்லாம் பெரியதாகிய பாலியாற்று லழித்தனவென்பது கருத்து.

மன் ஓ அசைகள். அன்றே — பலரறி தேற்றம். மாசு — கோணுதல் புழு வரித்தல் முகமொடிகல் முதலியன. பசுமை அடை பாசடையெனச் சந்தி பெற் றது. பங்கயம் சிறுமை என்பன ஆகுபெயர்கள். தேஜஸ் என்னும் வடமொழி தேசெனத் தற்பவமாயிற்று. சிதைந்த அன்பெறுத அகரவீற்று அஃறிணைப் பன்மை வினைமுற்று. அற என்னும் எச்சம் செய்தெனெச்சமாகத் திரிக்கப்பட்டது. (28)

வளவயன் மருத வைப்பின் வாவியங் கமலம் யாவுங்
கிளையொடும் பறித்துவாரிக் கேழுறப் பொலிந்த தோற்றம்
விளைதரு பகையிற் றோலா வெவ்வழற் சிறுமை நோக்கிக்
களைதலைப் புரிந்து பற்றிப் பெயர்ந்தெனக் காட்டிற் றன்றே.

**இ-ள்:** வள வயல் மருத வைப்பின் வாவியம் கமலம் யாவும் — வளத்தைத் தருகின்ற வயல்களையுடைய மருதநிலத்தின்கண்ணுள்ள தடாகங்களின் மலர்ந்த செந்தாமரைப்பூக்களெல்லாவற்றையும், கிளையொடும் பறித்து வாரி — இனத் தோடும் பிடுங்கி வாரி, கேழ் உற பொலிந்த தோற்றம் — அம்மலர்களின் செந் நிறம் பொருந்த (அப்பாலியாறு) பொலிந்த காட்சியானது, விளைதரு பகையில் தோலா வெவ் அழல் சிறுமை நோக்கி — மூழுகின்ற பகைமுகத்திலே தோல்வி யடையாத கொடிய அக்கினியின் உருவச்சிறுமையைக்கண்டு, களைதலை புரிந்து பற்றி பெயர்ந்து என காட்டிற்று — அதனைக் களைந்து பற்றிக்கொண்டு நடந் தாற்போலக் காண்பித்தது எ — று.

அன்று ஏ அசைகள். அம் — சாரியை. கமலம் ஆகுபெயர். கம் — நீர். அலம் — அலங்கரிப்பது. நீரைப் பூஷிப்பது என்பது சொற்பொருள். தோலா வென்பது ஈற்றுயிர் மெய்குறைந்து நின்றது. தோற்றம்...... காட்டிற்று என்பது பாவகருத்தா.

ஒருங்கே பறித்தென்பார் 'கிளேயொடும் பறித்து' எனவும், என்றும் நீங்காப் பெரும்பகையென்பார் 'விளேதருபகை' எனவும், எப்பொருள்களேயும் எரித்தழிக்குந் தீயென்பார் 'வெவ்வழல்' எனவும் கூறினர்.

முற்செய்யுளிற்கூறியவாறு மருதநிலத்துள்ள தாமரைத் தடாகங்களேச் சிதைத்து, அங்குள்ள மலர்களேத் திரையினுற் பிடுங்கித் தன்மேற் பரப்பிப் பாலியாறு பாய்தல், பகையென்று கருதித் தணிக்குந்தோறுந் தணியாமையால் அவ்வக்கினியைப் பற்றிக்கொண்டு செல்லுதல் போன்ற தென்பது கருத்து. தற்குறிப்பேற்றவணி. (29)

திரைகட லீத்தங் கொண்மூ வினத்தொடு சேண்போய் நோக்கித்
தரையிடை யிழிந்துசென்று தன்பொருள் கொடுபோந் தென்னப்
பரதவ ரளவர் வாரிப் படுத்தமீ னுப்பின் குப்பை
இருபுடை யலேத்து வெளவி யேகிய தெறிநீர்ப் பாலி.

இ-ள்; திரை கடல் நீத்தம் — அலேகின்ற சமுத்திர நீரானது, கொண்மூ இனத்தொடு சேண் போய் நோக்கி — மேகக்கூட்டங்களோடு ஆகாயத்திற் சென்று பார்த்து, தரை இடை இழிந்து சென்று தன்பொருள் கொடு போந்து என்ன — பூமியி லிறங்கிப் பாய்ந்து தன் பொருள்களேக் கவர்ந்துகொண்டு போனுற்போல, பரதவர் அளவர் வாரி படுத்த மீன் உப்பின் குப்பை — நுழையர்களும் உப்பமைப்போரும் வாரிக்குவித்த மீன் குவியல்களேயும் உப்புக் குவியல்களேயும், இரு புடை அலேத்து வெளவி ஏகியது — இருபக்கங்களிலும் அரித்துக் கவர்ந்துகொண்டு பாய்ந்தது, எறி நீர் பாலி — அலேமோதுகின்ற நீரினேயுடைய பாலியாறு எ-று.

திரை — விளேத்தொகை. போந்தால் என்னும் விளேயெச்சத்தில் ஆல்விகுதி தொக்கது. பரதவ ரளவர் வாரிப்படுத்த மீனுப்பின் குப்பையென்றது நிரனிறை.

சமுத்திர நீரானது, தன்னிடத்திற் பிறர்கவர்ந்த பொருள்களெவற்றையுந் தேடி மீட்டும் பெற்றுக்கொள்ளவேண்டுமெனவும் அப்பொருளிலிருந்துழியெல்லாஞ் சென்று சென்று தேடிக்காண்பதினும் மேலெழுந்துபோய் நின்றுழியே நின்று ஒரே காலத்திற் காண்பது தக்கதெனவுங்கருதி மேகங்களாற் பருகப்பட்டு மேலெழுந்து சென்று தன்பொருள் வைக்கப்பட்டிருக்குமிடங்களேயெல்லாம் நன்கு தெரிந்து பின் பூமியில்வந்து அவற்றைக் கவர்ந்து சென்று தன்னிடத்திலுய்த்தாற்போல, பாலி நதி நெய்தனிலச்சார்பிற் குவிக்கப்பட்டிருந்த மீன்குவைகளேயும் உப்புக்குவைகளேயும் அலேவீசிக் கவர்ந்து கடலேநோக்கிப் பாய்ந்ததென்பது கருத்து. இதுவும் தற்குறிப்பேற்றவணி. (30)

பாரிடை யினேய பண்பிற் படர்ந்திடு பாலி யந்தத்
தாருயி ரனேத்துந் தத்த மருவினேக் கமைத்த நீராற்
சேருறு கதிக ளென்ன மரபினிற் றிறமே யென்னத்
தாருவின் கிளேக ளென்னத் தனித்தனி பிரிந்த தன்றே.

இ-ள்: பார் இடை இனேய பண்பில் படர்ந்திடு பாலி — பூமியின்கண் இத்தன்மையாகப் பாய்ந்த பாலியாருனது, அந்தத்து ஆருயிர் அனேத்தும் தத்தம் அருவினேக்கு அமைத்த நீரால் சேருறு கதிகள் என்ன — தேகாந்தத்தில் நிறைந்த ஆன்மாக்களெல்லாம் தங்கள் தங்களது அருமையாகிய விளேப்பகுப்புக்கிசைய வமைத்த முறைக்கேற்ப புகுகின்ற கதிபேதங்கள் போலவும், மரபினில் திறம் என்ன

— சாதிகளின் பகுப்புப்போலவும், தாருவின் கிளைகள் என்ன — மரத்தின் கவடுகள் போலவும், தனித்தனி பிரிந்தது — வேறுவேறுகப் பிரிந்தது எ-று.

அன்றும் ஏ இரண்டும் அசைகள். ஆன்மாக்கள் இப்பூவுலகமொன்றிற்றுனே சனித்தும் தாந்தாமீட்டிய வினைகளின் அனுபவத்திற்கேற்ப மேலுள்ள சுவர்க்க முதலியவற்றிலும் கீழுள்ள நரகவகைகளிலுமாகப் பிரிந்து செல்லுதல்போலவும், நால்வகைச் சாதிகளும் ஒரு கடவுளாலே படைக்கப்பட்டும் பலவகைப்பட்டுக் கிராம விலக்கணத்திற்கிசைய விதிக்கப்படுமிடங்கடோறும் பிரிந்து வாழ்தல்போல வும், கிளைகள் ஓர் மரத்திற்றுனே கிளைத்தும் தமக்கேற்ற இடங்களிற் சாய்ந்து பிரிந்து வளருதல்போலவும் ஒரேவெள்ளமாய்ப் பாய்ந்த பாலியாறுனது கால்வாய் முதலியவற்றினெழுகிப் பலகிளைகளாகப் பிரிந்ததென்பது கருத்து. (31)

கால்கிளர் கின்ற நீத்தங் கவிரிதழ்க் கலசக் கொங்கைச்
சேல்கிளர் கரிய வுண்கட் டிருநுதல் மிழற்றுந் தீஞ்சொல்
மேல்கிளர் பரவை யல்குன் மெல்லிய லறன்மென் கூந்தல்
மால்கிளர் கணிகை மாதர் மனமெனப் போயிற் றுமால்.

இ-ள்: கால் கிளர்கின்ற நீத்தம் — முற்செய்யுளிற் குறித்தபடி பிரிந்து கால் வாய்கடோறு மோடிய வெள்ளமானது, கவிர் இதழ் — முருக்கலர் போன்ற அதரத் தையும், கலச கொங்கை — பூரணகும்பம் போன்ற தனங்களையும், சேல் கிளர் கரிய உண் கண் — கயல்மீன்போன்று விளங்குகின்ற கரிய மையுண்ட கண்களையும், திரு நுதல் — அழகிய நெற்றியினையும், மிழற்றும் தீம் சொல் — மெல்லெனப் பேசுகின்ற இனியசொல்லையும், மேல்கிளர் பரவை அல்குல் — மேலாகக் கிளருகின்ற சமுத் திரம்போன்ற நிதம்பத்தினையும், மெல் இயல் — மெல்லிய சாயலையும், அறல் மென் கூந்தல் — கருமணல்போன்ற மெல்லிய கூந்தலையுமுடைய, மால் கிளர் கணிகை மாதர் மனம் என போயிற்று — காமவேட்கை மிகுந்த கணிகைப் பெண்களது மனம்போலப் பாய்ந்தது எ-று.

ஆம் ஆல் அசைகள். கவிர் - ஆகுபெயர், சிவந்தநிறமுடைமையால் அதரத் திற்கு முருக்கலரும், உள்ளே நீருடைத்தாய் உருண்டு திரண்டிருத்தலாற் பயோ தரங்களுக்கு நீர்க்கலசமும், பிறழ்ச்சியினுலும் வடிவினுலும் கண்களுக்குச் சேலும், அகன்றிருத்தலால் நிதம்பத்திற்குக் கடலும், வார்ந்து கருநிறமுடைத்தாயிருத்த லாற் கூந்தற்குக் கருமணலும் உவமையாயின. மிழற்றும் என்பதற்கு நச்சினுக் கினியரும் சீவகசிந்தாமணியில் மெல்லப்பேசும் என உரைத்தார்.

காமவேட்கை மிக்க கணிகையர் மனம் நேர்ந்த ஆடவர்மாட்டெல்லாம் நாணமின்றி விரைவிற் செல்லுதல்போல, வெள்ளமும் நேர்ந்த கால்வாய்கடோறும் பிரிந்து தடையின்றி விரைந்து பாய்ந்ததென்பது கருத்து. (32)

பாம்பளை புகுவ தேபோற் பாய்தரு பரவைத் தெண்ணீர்
தூம்பிடை யணுகு மாற்றுற் சொன்முறை தடைசெய் வோரில்
தாம்புடை பெயரா வண்ணந் தலைத்தலை தள்ளு மள்ளர்
ஏம்பலோ டார்க்கு மோதை யுலகெலா மிறுக்கு மாதோ.

இ-ள்; பாம்பு அளை புகுவதே போல் — சர்ப்பமானது புற்றினுட் புகுதலையே போல, பாய்தரு பரவை தெள்நீர் — பாய்கின்ற பரந்த தெளிந்த வெள்ளத்தை, தூம்பு இடை அணுகும் ஆற்றுல்—மதகிற்புகும்படி, புடைபெயரா வண்ணம் தலைத்

தலை தள்ளும் மள்ளர்—விலகாதபடி இடங்கடோறும் நின்று பாய்ச்சுகின்ற உழவர்கள், சொல் முறை தடை செய்வோரில் ஏம்பலோடு ஆர்க்கும் ஓதை — சொல்லின் முறையினுற் றடுப்பவர்களைப்போல இறுமாப்பினுடனே ஒலிக்கின்ற ஓசையானது, உலகு எலாம் இறுக்கும் — உலகங்களெங்குஞ் சென்றுதங்கும் எ - று.

தாம் மாது ஓ அசைகள். ஏகாரம் — தேற்றம். புகுவது — வினைமுற்றுத் தொழிற் பெயர். மள்ளரை இக்காலத்திற் பள்ளரென வழங்குவர். சொன்முறை தடைசெய்தலாவது:- நீரைப் புறம்பேபாய வொட்டாது தம் வாய்மொழியினுலச் சுறுத்தித் தடுத்தல்; மந்திரத்தாற் றடுத்தலெனினுமாம். புகுவதேபோல் அணுகு மாற்றுல் என இயையும்.

பாம்பு தலையை முன்னரேயுட்புகுத்தி உடலை நெளித்துச் சுரித்துப் புற்றினுட் புகுவதுபோலக் கால்வாய்களிற் பாயும் நீரும் உள்மடங்கிச் சுழிந்து மதகினுட் புகுமென்க. (33)

பணையொலி யிரலை யோதை பம்பையின் முழக்க மங்கட்
கிணையொலி மள்ள ரார்ப்புக் கேள்கிழர் தரங்க நன்னீர்
அணையொலி யவற்றை வானத் தார்ப்பொலிக் கவனி தானும்
இணையொலி காட்டிற் றேவென் றெண்ணுவார் விண்ணுளோரும்.

இ - ள்: பணை ஒலி — முரசவாத்தியத்தியத்தினேசையும், இரலை ஓதை — ஊதுகொம்பினேசையும், பம்பையின் முழக்கம் — பம்பைப் பறையினேசையும், அம் கண் கிணை ஒலி — அழகிய கண்ணையுடைய மருதப்பறையினேசையும், மள்ளர் ஆர்ப்பு — உழவர்களினெலியும், கேழ்கிளர் தரங்க நல் நீர் அணை ஒலி — நிறம் விளங்குகின்ற திரைமறிகின்ற நல்ல நீரானது பாய்கின்ற ஓசையுமாகிய, அவற்றை— அந்த முழக்கங்களை, விண்ணுளோரும் — கேட்ட தேவர்களும், வானத்து ஆர்ப்பு ஒலிக்கு அவனி தானும் இணை ஒலி காட்டிற்றே என்று எண்ணுவார் — வானுலகத்தினிகழும் ஆரவாரவோசைக்குப் பூவுலகமும் எதிரோசை விளைவித்ததோ என்று ஆலோசிப்பார்கள் எ - று.

அணை — வினைத்தொகை. உம்மைகளிரண்டனுள் முன்னையது இறந்துதழீஇய வெச்சம்; பின்னையது உயர்வு சிறப்பு. வானத்தார்ப் பொலியென்பதை மேகமுழக்க மென்றேனும் சுவர்க்கலோகத்துத் தேவதுந்துபி முதலிய வாத்தியங்கங்களியம்பு மோசை யென்றேனுங் கொள்க.

தொண்டை நாட்டினிகழுமோசை அதிகதூரத்திலுளதாகிய விண்ணுலகத்தில் வாழ்பவர்களுக்கும் தம்முலகினிகழ்ந்த ஓசையோடு சமமாகச் செவிப்புலனுயதென்பது கருத்து. ஆகவே அவ்வொலி வானுலகவொலியினும் பன்மடங்கதிகமான பெருமுழக்கென்பது பெற்றும். (34)

இயல்புகுங் களிநல் யானை இனந்தெரிந் தெய்து மாபோல்
கயல்புகுந் துலவுஞ் சின்னீர்த் தடம்புகுங் காமர் காவின்
அயல்புகுங் கோட்ட கத்தி னகம்புகு மார்வத் தோடி
வயல்புகுங் களிப்பு நீங்கா மாக்களின் மயங்கு மாதோ.

இ - ள்: இயல் புகும் களி நல் யானை இனம் தெரிந்து எய்துமா போல் — தகுதி பொருந்திய களிப்பினையுடைய நல்ல யானையானது தன்னினத்தைத் தேடிப்

புகுந்தன்மைபோல, கயல் புகுந்து உலவும் சில் நீர் தடம் புகும் — சேல்மீன்கள் பேரயுலாவுகின்ற அற்பமான நீர் பொருந்திய தடாகத்திற்பாயும், காமர் காவின் அயல் புகும் — அழகிய சோலைகளினருகிலும் பாயும், கோட்டகத்தின் அகம் புகும்— ஏரிகளினிடத்தும் பாயும், ஆர்வத்து ஓடி வயல் புகும் — விருப்பத்துடனே ஓடி வயல் களினும் பாயும், களிப்பு நீங்கா மாக்களின் மயங்கும் — களிமயக்கு மாறாத மனி தரைப்போல மயங்கும் எ — று.

மாது ஓ அசைகள். எய்துமாறு என்னும் வினையெச்சமும், நீங்காத என்னும் பெயரெச்சமும் ஈற்றுயிர் மெய்குறைந்து நின்றன. அகம் — ஏழனுருபு. மாக்களின் என்பதில் ஐந்தனுருபு ஒப்புப்பொருளில் வந்தது. தடத்துக்குச் சின்னீரென்னும் விசேடணம் புணர்த்தலாற் கோட்டகத்தைப் பெரிய நீர்நிலையென்க. ஆர்வத் தோடலாவது: தடையின்றி விரைந்து பாய்தல்.

யானை தன்னினமுள்ள இடங்களைத் தேடிச்செல்லுதல்போலப் பாலியாற்று வெள்ளமும் தாம் பாய்தற்கேற்ற பள்ளமாகிய தடாக முதலியவைகளை நாடிப் பாய்ந்த தென்பார் 'யானையினந்தெரிந்தெய்துமாபோல்... புகும்' எனவும், மதுக் களிப்புடையோர் சோர்ந்த நடையுடன் தள்ளாடிப் பலவிடத்திலும் உலாவுதல்போல வேகமின்றி இடங்கடோறும் மெல்லெனப் பாய்ந்ததென்பார். 'களிப்பு நீங்கா மாக்களின் மயங்கும்' எனவுங் கூறினர். (35)

எங்கணு நிறைந்து வேறோ ரிடம்பிறி தின்மை யாகச்
சங்கமா யீண்டு மள்ளர் தாங்குபல் லியமு மார்ப்பப்
பொங்கிய நகரந்தோறும் புறமெலாம் வளைந்த நீத்தம்
அங்கண்மா ஞாலஞ் சூழு மளக்கரை நிகர்த்த தாமே.

இ - ள்: வேறு ஓர் இடம் பிறிது இன்மை ஆக எங்கணும் நிறைந்து — வேறொரு இடம் புறம்பாக இல்லை யென்னும்படி எவ்விடங்களினும் நிறைந்து, சங்கம் ஆய் ஈண்டும் மள்ளர் தாங்கு பல் இயமும் ஆர்ப்ப — கூட்டமாகி நெருங் கிய உழவர்க ளேந்திய பலவகையான வாத்தியங்களு மியம்ப, பொங்கிய நகரம் தோறும் புறம் எலாம் வளைந்த நீத்தம் — பொலிந்த நகரங்களெங்கும் புறவிட முழுதையுஞ் சூழ்ந்துநின்ற வெள்ளமானது, அம் கண் மா ஞாலம் சூழும் அளக் கரை நிகர்த்தது — அழகிய இடத்தையுடைய பெரிய பூவுலகத்தைச் சூழ்ந்து நிற் குங் கடலை யொத்தது எ - று.

ஆம் ஏ அசைகள், இன்மையாக ஈண்டும் எனவியையும். தோறும் — இடப் பன்மைப் பொருளில் வந்தது. நகரங்களுக்குப் பூமியும், யாற்றினீர்க்குக் கடலும் மள்ளரது வாத்திய முழக்கத்திற்குக் கடலொலியு முவமை.

பரந்த இடத்தையுடையவென்பார் 'அங்கண்' எனவும் நகரங்களில் உட்புகாது வெளியே வளர்ந்து நிற்றலால் 'ஞாலஞ்சூழு மளக்கரை நிகர்த்தது' எனவும் கூறினர். (36)

மாறடு மள்ள ருய்ப்ப மருதத்தி னிறைந்து விஞ்சி
ஏறிய நார மீட்டு மிருங்கடனோக்கிச் சென்ற
வேறுகொள் புலனை வென்றோர் மேலைநன் னெறியுய்த் தாலுந்
தேறிய வுணர்வி லாதோர் செல்வுழிச் செல்வ ரன்றே.

இ-ள்: மாறு அடும் மள்ளர் உய்ப்ப — எதிர்த்தாரை அழிக்கின்ற உழவர்கள் பாய்ச்ச, மருதத்தில் நிறைந்து விஞ்சி ஏறிய நாரம் — வயனிலத்தினிறைந்து மிஞ்சி வழிந்த வெள்ளங்கள், மீட்டும் இரும் கடல் நோக்கி சென்ற — பின்னும் பெரிய கடலை நோக்கிப் பாய்ந்தன, வேறுகொள் புலனை வென்றோர் மேலை நல் நெறி உய்த்தாலும் — ஒன்றோடொன்று பேதமுறுகின்ற ஐம்புலன்களாகிய பகையைவென்ற ஞானிகள் மேலாகிய நல்ல மார்க்கத்திற் பிரேரித்தலாலும், தேறிய உணர்வு இலாதோர் செல்வுழி செல்வர் அன்றே — தெளிந்த நற்புத்தியில்லாத அஞ்ஞானிகள் தாம் முன் செல்ல நினைந்த துன்மார்க்கத்திற் செல்வார்களன்றோ எ-று.

மாறு — ஆகுபெயர். உய்ப்ப என்னும் எச்சங்காரணப் பொருளதாய் நிறைந்தென்னும் வினைகொண்டது. மருதம் ஈண்டு வயலென்னும் பொருட்டு, சென்ற — அன்பெறாத அகரவீற்றஃறிணைப் பன்மைவினைமுற்று. வெல்லுதல் வினைக்கேற்ப புலனைப் பகையென்றும், "அவமிகும் புலப்பகை கடந்து" என்றார் பரஞ்சோதி மாமுனிவரும். வென்றார் உணர்விலாதார் என்னும் வினையாலணையும் பெயர்களில் அயலாகாரமோகாரமாயின. இல்லாதோரென்பதில் லகரவொற்றுத் தொக்கது. நன்றியுய்த்தாலுமென்பதில் உம்மை நன்னெறிக்கட் செலுத்துதலரிதென்பதை வற்புறுத்திற்று. செல் உழி என்பது உடம்படுமெய்யல்லாத வகரம்பெற்றுச் செல்வுழி எனப் புணர்ந்தது, சார்வுழிச் சார்ந்தகைய என்பதிற்போல. அன்றே — பலரறி தேற்றம். ஐம்புலப்பகையை வெல்லுதலாவது:- மனத்தைப் பொறிவழி போகவொட்டாமற் றடுத்து யோகசாதனத்தினிறுத்துதல்.

வேகத்துடன் கடலைநோக்கிப் பாயும் வெள்ளத்தைத் தந்திறப்பாட்டானடக்கி வயலிற்போக்கினரென்பது போதர 'மாறடுமள்ளருய்ப்ப' என்றார்.

மெஞ்ஞானிகள் நன்னெறிக்கட் புகுத்தியவழியும் அஞ்ஞானிகள் ஐம்புலப்பேய்களாலீர்ப்புண்டு மதிமயங்கி உண்மைநெறியைக் கடைப்பிடியாது புன்னெறியிற்றானே சேறல்போல, உழவர் வயலிற் பாய்ச்சியவழியும் வெள்ளமானது அமையாது மிஞ்சி உவர்க்கடலை நோக்கிப் பாய்ந்தது என்பது கருத்து.

மள்ளர்க்கு ஞானிகளும் வெள்ளத்திற்கு அஞ்ஞானிகளும் நன்னெறிக்கு வயல் நிலமும் புன்னெறிக்கு கடலுமுவமை. (37)

வாளெனச் சிலைய தென்ன வால்வளை யென்னத் தெய்வக்
கோளெனப் பணிகளென்னக் குலமணி குயிற்றிச் செய்த
மீளிவெஞ் சரங்க ளென்ன வேலென மிடைந்து சுற்று
நாளெனப் பிறழுமீன்க ணடவின நார மெங்கும்.

இ-ள்: வாள் என — வாட்படையைப்போலவும், சிலையது என்ன — வில்லைப்போலவும், வால் வளை என்ன — வெள்ளிய சங்கைப்போலவும், தெய்வ கோள் என — தெய்வத்தன்மை பொருந்திய கிரகங்களைப் போலவும், பணிகள் என்ன — சர்ப்பங்களைப்போலவும், குல மணி குயிற்றி செய்த மீளி வெம் சரங்கள் என்ன — உயர்ந்த சாதியான இரத்தினங்களையழுத்திச் செய்த வீரனது கொடிய அம்புகளைப் போலவும், வேல் என — வேற்படையைப் போலவும், மிடைந்து சுற்றும் நாள் என — நெருங்கிச் சூழுகின்ற நக்ஷத்திரங்களைப்போலவும், பிறழும் மீன்கள் — பெயருகின்ற மீன்களானவை, நாரம் எங்கும் நடவின — நீரின் எவ்விடங்களினுஞ் சஞ்சரித்தன எ-று.

பலவடிவுடையனவாயுலாவின என்பதாம். அது — பகுதிப்பொருள் விகுதி. தெய்வக்கோளென்றது சூரியன் முதலாகிய கிரகங்களை. பின்னேயடையுஞ் சுகதுக் கங்களை முன்னரே காண்பித்து, அவற்றை ஏற்ற காலங்களில் ஊட்டுதலாலும் தம்மை வழிபட்டோர்க்குத் துன்பத்தை நீக்கிச் சுகத்தைக் கொடுத்தலாலும் 'தெய்வக்கோள்' என விசேடித்தார். (37)

மாண்டகு பொய்கை தோறும் வயறொறு மற்று மெல்லாம்
வேண்டிய வளவைத் தன்றி மிகுபுனல் விலக்கு கின்ற
ஆண்டகை மள்ளர் தம்பா லமைந்திடுங் காலை யெஞ்சி
ஈண்டிய வெறுக்கை வீசும் இடைப்படு வள்ள லொத்தார்.

இ-ள்: மாண் தகு பொய்கைதோறும் வயல்தொறும் மற்றும் எல்லாம் — மாட்சிமை பொருந்திய தடாகங்களினும் வயல்களினும் மற்றும் எல்லாவிடங்களி னும், வேண்டிய அளவைத்து அன்றி மிகு புனல் விலக்குகின்ற ஆண்டகை மள்ளர் — (செய்கைக்கு) வேண்டுமளவினதாகிய நீரைப் பாய்ச்சுவதேயன்றி மிஞ்சிய நீரைப் பாயவொட்டாது போக்குகின்ற ஆண்டகைமையினையுடைய உழவர்கள், தம் பால் அமைந்திடும் காலை — தம்மிடத்து வேண்டிய அளவு அமைந்தபோது, எஞ்சி ஈண்டிய வெறுக்கை வீசும் இடைப்படு வள்ளல் ஒத்தார் — மிஞ்சிச் செறிந்த செல் வத்தைப் பிறர்க்குக் கொடுக்கின்ற இடைவள்ளலை நிகர்த்தார் எ-று.

தோறும் தொறும் என்பன இடப்பன்மைப் பொருளில் வந்தன. அளவைத்து — குறிப்பு வினையாலணையும் பெயர். ஆண்டகைமையாவது ஆண்மக்களுக்குரிய வீரம் உற்சாகம் வலிமை முதலிய குணங்களையுடைமை.

இடைவள்ளலாவார்:- அக்குரன், சந்திமான், அந்திமான், சிசுபாலன், வக்கிரன், கன்னன், சந்தன் என்னுமெழுவருமாம். உழவருள் ஒவ்வோர் குழுவினரும் வேண் டிய நீர் பாய்ந்தவுடன் எஞ்சிய நீரைப் பிறருக்குபயோகமாகும்படி புறம்பே விடு கின்றனர். ஆதலின், வேண்டிய அளவு செல்வத்தைப்பேணி வைத்துக்கொண்டு மிகுந்தவழிப் பிறருக்குக் கொடுக்கின்ற இடைவள்ளலை நிகர்த்தனர் என்பது கருத்து.

இதனுல் வயல்கட்கு வேண்டிய நீர்வளம் அமைந்தமை கூறப்பட்டது. (39)

ஆற்றுப்படலம் முற்றிற்று.

ஆகவிருத்தம் 89.

# 5. திருநாட்டுப் படலம்

திரு என்னும் பல பொருள் ஒரு சொல் ஈண்டு, ஆரியத்தில் வழங்கும் ஸ்ரீ என்பதுபோல மகிமையுடைய பொருள்கட் கியைத்துரைக்கப்படுமோ ரடைமொழி. நாட்டுப் படலம் என்பது நாட்டின் சிறப்பைக் கூறும் படலமென உருபும் பொருளுமுடன் றொக்க தொகை. நாடென்ற தீண்டுத் தொண்டைமண்டலத்தை.

அவ்வியல் பெற்றிடு மாற்றன் மள்ளர்கண்
மைவரு கடலுடை மங்கை தன்னிடை
மெய்வளங் கொள்வதை வேண்டி யந்நிலச்
செவ்விக ளுடியே யினைய செய்குவார்.

இ—ள்: அ இயல் பெற்றிடும் ஆற்றல் மள்ளர்கள் — அந்த இயல்பினைப் பெற்ற வலிமையினையுடைய உழவர்கள், மை வரு கடல் உடை மங்கைதன் இடை — கருநிறம் பொருந்திய சமுத்திரத்தை ஆடையாக உடைய பூமாதேவியினிடத்து, மெய்வளம் கொள்வதை வேண்டி — மெய்மையாகிய வளத்தைப் பெற்றுக்கொள் வதை விரும்பி, அ நில செவ்விகள் நாடி இனைய செய்குவார் — அந்த நிலத்தின் பருவங்களை யாராய்ந்து இத்தொழில்களைச் செய்வாராயினர் எ—று.

ஏ அசை. இனைய வென்றது மேற்கூறப்படும் உழவு முதலிய தொழில்களை.

முற்படலத்தில் வருணித்தவாறு நீர்வளம் பெற்றுடைய வென்பார் 'அவ்வியல் பெற்றிடும்' எனவும், அவ்வாறு நீர்வளங் கிடைத்தமையாற் பெருமகிழ்ச்சி பெற் றுத் தேங்கின ரென்பார் 'ஆற்றன் மள்ளர்கள்' எனவும், நீர்வளத்துக் கேது வாகிய மழைக்கு முதல் கடலேயாதலின் அக் கடலாற் சூழப்பட்டமை எவ்வகை வளங்களையும் பெறுதற்குக் காரணமென்பது போதர 'கடலுடை மங்கை' எனவும், தவறுது கிடைக்குமென்று துணியப்பட்ட வளமென்பார், அன்றேல் உலகத்தைப் பசி முதலிய தீமைகளினின்று காக்கவல்ல வளமென்பார் 'மெய்வளம்' எனவும் விசேடித்தார். (1)

சேட்டிளந் திமிலுடைச் செங்க ணேற்றொடுங்
கோட்டுடைப் பகட்டினம் விரவிக் கோன்முறை
காட்டினர் நிரைபட வுழுப காசினி
பூட்டுறு பொலன்மணி யாரம் போலவே.

இ—ள்: சேடு இளம் திமில் உடை செம்கண் ஏற்றொடும் — பெரிய இளமை யாகிய முரிப்பையும் சிவந்த கண்களையுமுடைய எருதுகளுடனே, கோடு உடை பகட்டு இனம் விரவி — கொம்புகளையுடைய எருமைக் கடாவினங்களையுங் கலந்து (பூட்டி), கோல் முறை காட்டினர் — தாற்றுக்கோலை முறைப்படி காட்டி, காசினி பூட்டுறு பொலன் மணி ஆரம்போல — பூமிதேவி யணிந்த அழகிய இரத்தின மாலை போல, நிரைபட — நிரை பொருந்துமாறு, உழுப — உழுதார்கள், (மள்ளர்கள்) எ—று.

ஏ அசை. கோல் எருது முதலியவற்றை ஏவுந் தண்டு. காட்டினர் வினை முற்றெச்சம்.

" ஏறுயர் கபிலமெய் யெழுந்த நோயது
கூறிடின் முரிந்தவால் கூர்கொம் புள்ளது
மாறிடின் மற்றவை விளைவின் மாட்சியாம் "

என்று கூறிய குற்றம் நீங்கி நல்லிலக்கண முடையன வென்பார். 'சேட்டிளந் திமிலுடைச் செங்கணேறு' எனவும், மேனியி லோச்சாது செல்லவும் வளையவும் வேண்டிய திசைகளைக் குறிப்பிற் காட்டி யேவினர் என்பார் 'கோன்முறைக ாட்டி னர்' எனவும். படைச் சால்க ளொன்றுட னென்று நெருங்கி வளைந்து கிடப்ப வென்பார் 'காசினி பூட்டுறு பொலன் மணியாரம்போல...நிரைபட' எனவுங்கூறினர்,

காற்றினு மனத்தினுங் கடுமை சான்றன
கோற்றொழில் வினைஞர்தங் குறிப்பிற் செல்லுவ
ஏற்றினஞ் சேறலு மிரிந்த சேலினம்
பாற்றின மருளவிண் படர்ந்து பாயுமால்.

இ-ள்: காற்றினும் மனத்தினும் கடுமை சான்றன — வாயுவேகத்தினின்றும் மனோவேகத்தினின்றும் மிக்க கடுமையமைந்தனவும், கோல் தொழில் வினைஞர் தம் குறிப்பில் சொல்லுவ — கோலைக்காட்டுந் தொழிலையுடைய உழவர்களது குறிப்பின் வழியே நடப்பனவுமாகிய, ஏற்று இனம் சேறலும் — பகட்டினங்கள் செல்லுதலும், இரிந்த சேல் இனம் — அவற்றின் வேகநடையைக் கண்டு வெருண்ட சேல்மீன்கள், பாற்று இனம் மருள விண் படர்ந்து பாயும் — (உயர்ந்து வட்டமிட் டுப் பறப்பனவாகிய) பருந்துக் கூட்டங்களஞ்ச ஆகாயத்திற் கிளம்பிப் பாயும் எ-று.

ஆல் அசை. காற்று மனம் ஆகுபெயர்கள். உம்மைகள் சிறப்போடெண்ணு மாம். சான்றன செல்லுவ வினையாலணையும் பெயர்கள். ஏறென்றது இடபங் களையும் எருமைக் கடாக்களையும். சேறலும் — உம்மீற்று வினையெச்சம். சேலினம் பாயும் என இயையும். (3)

சால்வளை தரவுழும் வயலிற் றங்கிய
வால்வளை யினம்வெரீஇ யலவன் மாப்பெடைச்
சூல்வளை புகுவதங் கறிஞர் சூழ்விலைக்
கோல்வளை மகளிர்பாற் கூட்ட மொத்ததே.

இ-ள்: சால் வளைதர உழும் வயலில் தங்கிய வால்வளை இனம் வெரீஇ — படைச்சால்கள் வளைந்துவரும்படி உழுகின்ற வயலிற் றங்கியிருந்த வெள்ளிய சங் குக் கூட்டங்கள் (அவ்வுழவுத் தொழினிகழ்ச்சியைக்கண்டு) அஞ்சி, மா பெடை அலவன் சூல் வளை புகுவது — பெரிய பெடை நண்டுகளினது தோண்டப்பட்ட அளையினுட் போய் மறையுந்தன்மை (எது போன்றதெனில்), அறிஞர் சூழ்கோல் வளை விலைமகளிர் பால் கூட்டம் ஒத்தது — அறிவிற் சிறந்த பெரியார் சூழுகின்ற கோலிய வளையலை அணிந்த வரைவின் மகளீரிடத்தே (சென்று) கூடுதலை நிகர்த் தது எ-று.

அங்கு ஏ அசைகள். சூல் வினைத்தொகை; சூலல் — தோண்டுதல். கோலம் என்பது கடைக் குறையாயிற் றெனக்கொண்டு கோல்வளை யென்பதற்கு அழகிய வளைய லெனப் பொருள் கூறினுமாம். சூழ்தல்: ஆடவரை வசீகரித்தற்கேற்ற உபாயங்களைப் புரிதல். விலைமகளிர்—விலைக்காட்படும் மகளிர், கூட்டம்—தொழிற் பெயர். சூழ் வினை கோல்வளை என்பன தனித்தனி மகளிரை விசேடித்தன.

படைச்சால் வளைந்துவர உழும்போது அவ்வளையங்களினுள்ளிடங்களிற் றங்கிய சங்குகள் ஒதுக்கிடந் தேடியிரிந்து பெடைநண்டு வாழும் அளையினுட் புகுந்தொளித்தல், கபடம் புரிந்து மயக்கும் வரைவின்மகளிர்மாட்டு அறிஞர் போய்க் கூடுதலை யொத்த தென்பது கருத்து.

சால் வலயத்தினுட்பட்டமைபற்றிப் பிறிது புகலிடந் தேடற்கியலாதன வென்பார் 'சால்வளைதர வுழும் வயலிற் றங்கிய...வளையினம்' எனவும், சாதியானுயர்ந்தன வென்பார். 'வால் வளையினம்' எனவும், கொழுமுனை புகுந்தாழ்வினும் மிக்க ஆழமுடைத் தென்பார். 'சூல்வளை எனவும் விசேடித்தார்,

அறிஞர் வாயிலில் வந்துநின்று தம்மை மயக்கும் பரத்தையருடன் ஏகாந்தத்திற் சென்று கூடினாற்போலச் சங்குகள் வளைமுகத்தின் வந்து உழவி னிகழ்ச்சியை நோக்கி யஞ்சியுட் புகுந்தொளிக்கும் ஞெண்டுகளுடன் அவ்வளையின் கீழ்ப்பாகத்திற் போயிருந்தன. இதனால் அறிஞர்க்குஞ் சங்குக்குமுள்ள பொதுத் தன்மையையுய்த் துணர்க. (4)

உலத்தொடு முறழ்புயத் துழவர் பொன்விளை
புலத்தினும் வியத்தகு வயலிற் போக்கிய
வலத்திடைப் பிறழ்மணி வேள்வி யாற்றிடும்
நிலத்திடைப் பிறந்தமின் னிகர்க்கும் நீர்மைய.

இ—ள்: உலத்தொடும் உறழ் புயத்து உழவர் — திரண்ட கல்லை நிகர்த்த புயங்களையுடைய மள்ளர்கள், பொன் விளை புலத்தினும் வியத்தகு வயலில் போக்கிய அலத்திடை — பொன்விளைகின்ற நிலத்தினின்றுஞ்சிறந்த வயலிற்செலுத்திய கலப்பைச் சாலின் கண்ணே, பிறழ் மணி — பெயருகின்ற இரத்தினங்கள், வேள்வி ஆற்றிடும் நிலத்திடை பிறந்தமின் நிகர்க்கும் நீர்மைய — (சனகராசன்) புத்திரகாமேட்டி யாகத்தைச் செய்த பூமியின் கண்ணே (முற்காலத்தில்) தோற்றிய சீதாதேவியை யொக்குந் தன்மையுடையன எ—று.

புலத்தினும் என்பதில் உம்மை உயர்வுசிறப்பு. மின் உவமவாகுபெயர். மணி... நிகர்க்கு நீர்மைய என இயையும்.

உழவுத் தொழிற் சாமர்த்திய முடைரென்பது போதர 'உலத்தொடுமுறழ் புயத்துழவர்' எனவும், நீர்வளங் குன்றிய காலத்தினுந் தவறாது பலிக்கும் வயலென்பார் 'பொன்விளை புலத்தினும் வியத்தகு வயல்' எனவும், உற்றுநோக்காதவழியுங்கட்புலத்துக்கு விடயமாகும் பெருமணியென்பது போதர 'மின்னிகர்க்கு நீர்மைய' எனவும் கூறினார்.

சனகராசன் புத்திரகாமேட்டிக்காகப் பூபரீக்ஷை செய்யும்போது அவ்வுழவு சாலின் கண்ணே சீதாதேவி தோற்றினள். இச்சரித்திரத்தை இராமாயணமுதலிய வற்றாற் றெள்ளிதினுணர்க. வயலுழும்போது பெருவிலையுடைய இரத்தினங்கள் பெயர்கின்றனவே அந்நாடு செல்வத்தான் மிக்கதென்பது தாற்பரிய மாயிற்று. (5)

நாறுசெய் குநர்சிலர் நார நீர்வயல்
ஊறுசெய் குநர்சில ரொத்த பான்மையிற்
சேறுசெய் குநர்சிலர் வித்திச் செல்லுநீர்க்
காறுசெய் குநர்சில ரளப்பின் மள்ளரே.

இ-ள்: நாறு செய்குநர் சிலர் — நாற்றங்காலை விதைக்கின்றவர்கள் சிலர், நார நீர்வயல் ஊறு செய்குநர் சிலர் — நீர் பொருந்திய வயலை உழுகின்றவர்கள் சிலர், ஒத்தபான்மையில் சேறுசெய்குநர் சிலர் — ஒத்தபான்மையாகச் சேறுபடுத்து கின்றவர்கள் சிலர், வித்தி — (அச்சேற்றில்) விதைத்துவிட்டு, செல்லும் நீர்க்கு ஆறு செய்குநர் சிலர் — பாய்கின்ற நீருக்குப் புறம்பேயோடும் வழியமைக்கின்ற வர்கள் சிலர்; அளப்பு இல் மள்ளர் — (அவர்கள் யாரெனில்) அளவிடப்படாத உழவர்கள் எ—று.

ஏ அசை. நகரவிடைநிலை நிகழ்காலத்தில்வந்தது. நாரம் நீர் — ஒருபொருட் கிளவிகள். ஒத்தபான்மையாகச் சேறுசெய்தலாவது; உழுதபின் நீரை நிறையப் பாய்ச்சி எருமை முதலியவற்றால் உழக்கிச் சமப்படுத்துதல்.

உழவர்களுள் ஒருசாரார் வயல்களில் பேர்த்து நடுதற்காக நாற்றங்கால்களில் விதைப்பவர்களும், மற்றொருசாரார் வயலை உழுபவர்களும், பிறிதொருசாரார் உழுதபின் நீர்பாய்ச்சி உழக்கிச்சேறாக்குபவர்களும், வேறுமொருசாரார் அச்சேற்றில் நென்முளைகளை விதைத்துப் பின் அவ்வயலுக்கு நீர் அமையுமாதலின் எஞ்சிய நீரைப் புறம்பேவிடுதற்கு வழியமைப்பவர்களுமாயின ரென்பது கருத்து.

ஊறுசெய்தல் — உழுதல். நீரினால் வயலை ஊறச்செய்தல் எனச் சிலர் பொரு ளுரைப்பர். அது முன் ஆற்றுப்படலத்திற் கூறப்பட்டதனானும் "ஊறுசெய்படை வாய்தேயவுழுநரும்" எனத் திருவிளையாடற் புராணத்தும் உழுதலையே கூறின ராதலானும் அவ்வுரை பொருந்தாதென்க. (6)

குச்செனப் பரிமிசைக் குலாய கொய்யுளை
வைச்செனத் தளிர்த்தெழு நாற்றின் மாமுடி
அச்செனப் பதித்தனர் கடைஞ ராவியா
நச்சின மகளிரை நினைந்து நைந்துளார்.

இ-ள்: கடைஞர் — தாழ்குலத்தவராகிய உழவர்கள், நச்சின மகளிரை ஆவியா நினைந்து நைந்துளார் — விரும்பிய பெண்களைத் தமது உயிர்போல் அரும் பொருளாக நினைந்து மனம் வருந்தியவர்களாய், குச்சு என — பாவாற்றியைப் போலவும், பரி மிசை குலாய கொய் உளை வைச்சு என — குதிரையின் மேற் பொருந்திய கொய்யப்பட்ட பிடர் மயிரை பதித்ததுபோலவும், தளிர்த்து எழும் நாற்றின் மா முடி — தளிர்த்து வளருகின்ற நாற்றுகளின் பெரியமுடிகளை, அச்சு எனப் பதித்தனர் — அச்சிற் பதித்ததுபோலணிபெறப் பூமியில் ஊன்றினர் எ—று.

பாவாற்றி ஆடைநெய்யுமாந்தர் நூற்பாவை ஒழுங்குசெய்தற் பொருட்டு அப் பாவின்மேல் வைத்தீர்த்துச் செல்லுமோர் கருவி. கொய்தல் — கத்தரித்தல். குலாய என்பது குலாவிய என்பதன் விகாரம். ஆக என்பது ஈற்றுயிர் மெய் குறைந்து நின்றது. வைத்தென என்பது எதுகை நோக்கிப் போலியாயிற்று. நைந்துளார் — குறிப்பு முற்று வினையெச்சம். அச்சு:- செய்யப்படும் பொருள்களை ஒன்றோடொன்று ஒப்புமையுடையனவாக அமைத்தற்கேற்ற கருவி. பாவாற்றி யையும் குதிரையின் பிடர்மயிர் பதித்ததையும் போல இளமென்றளிர்கள் கற்றை யாய்ச் செறிந்தோங்க வளர்ந்த நாற்றுக்களை நுனியொழுங்குபெற ஊன்றினர் என்பது கருத்து.

குச்சென அச்சென எழும் என இயையும், உழவர்கள் உழத்தியர்களுடன் ஒருங்கு விரவிநின்று நட்டனரென்பதையும் அங்ஙனம் நடும்பொழுது உழவரது

கண்ணுங் கருத்தும் அழகுடைய உழத்தியர் மாட்டுப் பதிந்தன என்பதையும் பதிந்துழியும் கைத்தொழில் சிறிதனுங் குறைவுபாடடைந்தில தென்பதையும் விளக்குவார் 'ஆவியாநச்சின மகளிரை நினைந்து நைந்துளார்... பதித்தனர்' என்றார். (7)

வாக்குறு தேறலை வள்ள மீமிசைத்
தேக்கின ருழவர்தந் தெரிவை மாதரார்
நோக்குறு மாடியி னுனித்து நோக்கினர்
மேக்குறு காதலின் மிசைதன் மேயினார்.

இ-ள்: உழவர் தம் தெரிவை மாதரார் — உழவர்களது மாதர்களாகிய உழத்தியர்கள், வாக்குறு தேறலை வள்ள மீமிசை தேக்கினர் — (கள்விற்போரால்) வாக்கப்பட்ட கள்ளைக் கிண்ணத்திலே ஏந்தி நிறைத்து, நோக்குறும் ஆடியில் நுனித்து நோக்கினர் — நிழல் பார்த்தற்கேற்ற கண்ணாடிபோல அந்தக் கள்ளினுட் டங்கணிழலை உற்றுப் பார்த்து, மேக்குறு காதலின் மிசைதல் மேயினார் — மேல் கிளர்கின்ற ஆசையினாற் பருகத் தொடங்கினார்கள் எ—று.

மீமிசை தெரிவை மாதரார் என்பன ஒருபொருட் பன்மொழிகள். மாதரார் என்பதில் ஆர் விகுதிமேல்விகுதி; இழிவுபற்றி வந்தது. தேக்கினர் நோக்கினர் என்பன முற்றெச்சங்கள். கண்ணாடியிலே தங்கள் நிழலை எவ்வாறு உற்று நோக்குவாரோ அவ்வாறே கிண்ணத்தினிறைத்த கள்ளில் உற்று நோக்கினரென்பார், 'நோக்குறுமாடியி னுனித்து நோக்கினர்' என்றார். (8)

வாடுகின் றார்சிலர் மயங்கி நெஞ்சொடும்
ஊடுகின் றார்சில ருயிர்க்கின் றார்சிலர்
பாடுகின் றார்சிலர் பணிகின் றார்சிலர்
ஆடுகின் றார்சிலர் நறவ மார்ந்துளார்.

இ—ள்; நறவம் ஆர்ந்துளார் சிலர் மயங்கி வாடுகின்றார்—கள்ளுண்ட உழத்தியர்களுட்சிலர் அறிவழிந்து மெய்சோருகின்றார்கள், சிலர் நெஞ்சொடும் ஊடுகின்றார்—சிலர் தம்மனத்தினுடன் வெறுக்கின்றார்கள், சிலர் உயிர்க்கின்றார்கள்—சிலர் பெருமூச்சு விடுகின்றார்கள், சிலர் பாடுகின்றார் — சிலர் (பாடல்களைப்) பாடுகின்றார்கள், சிலர் பணிகின்றார் — சிலர் வணங்குகின்றார்கள்; சிலர் ஆடுகின்றார் — சிலர் கூத்தாடுகின்றார்கள் எ — று.

நறவமார்ந்துளார் என்பதையும் மயங்கி என்பதையும் ஊடுகின்றார் முதலியவற்றோடுஞ் சேர்த்துப் பொருளுரைக்க. நெஞ்சோடு மூடலாவது: வெறுக்கும் போதுண்டாகும் மெய்ப்பாட்டுடன் பற்றில்லாத வசனங்களைத் தம்மொடு தாம் பயிறல், ஆர்ந்துளார் - வினையாலணையும் பெயர். உளார் - தொகுத்தல்.

வாடுதல் முதலியன இயற்கையிலுள்ள குணங்களன்று, கட்குடியானேர்ந்தன என்பார் ''நறவமாந்துளார்'' என்றார். (9)

அந்தரப் புள்ளொடு மளிக டம்மொடும்
வந்தடுத் தவரொடு மயக்கு தேறலை
இந்திரத் தெய்வத மிறைஞ்சி வாமமாந்
தந்திரக் கிளைஞர்போற் றாமு மேயினார்.

இ—ள்: வாமம் ஆம் தந்திர கிளைஞர் போல் — வாமசமயத்தார் போல, தாமும்—தாங்களும், இந்திர தெய்வதம் இறைஞ்சி—தம்நிலக் கடவுளாகிய இந்திரனை வணங்கி, அந்தர புள்ளொடும் அளிகள் தம்மொடும்—அந்தரத்திற் பறக்கும் பறவைகளோடும் வண்டுகளோடும், வந்து அடுத்தவரொடும் — பக்கத்தில் வந்து நெருங்கினவரோடும் கூட, மயக்கு தேறலை மேயினர்—அறிவை மயக்குகின்ற கள்ளைப் பருகினார்கள் எ—று.

இந்திரத்தெய்வம்—இருபெயரொட்டு. தைவதம் என்னும் வடமொழி தெய்வதமென நின்றது. வாமமாந்தந்திரக் கிளைஞர்—வாமமாகிய நூலுக்குரிய கூட்டத்தார். ஆகுமென்பது உயிர்மெய்கெட்டு ஆமென நின்றது. தாமுமென்றது உழத்தியரை. உம்மை—இறந்தது தழீஇயவெச்சம்.

வாமசமயிகள் தமது தெய்வமாகிய சத்திக்கு மதுவகைகளை நிவேதித்துப் பலர் ஒருங்குகூடி எச்சிற்பேதமின்றி அவற்றைப் பருகிக் களித்தல்போல, உழத்தியர்கள் தந்நிலத்தேவனாகிய இந்திரனை வழிபட்டுப் பறவைகளும் வண்டுகளும் வாய்வைத்துப் பருகிய எச்சிலாகிய கள்ளை வந்தோருடன் எச்சிற்பேதமின்றிப் பருகினார்களென்பது கருத்து.

கையெடுத்தோச்சும்போது உயரப்பறந்தும் சிறிது நேரத்தின்பின் அணுகிவந்து பருகியுந் திரிந்தனவாதலின் ''அந்தரப்புள்'' என்றார்.

> ''மாயோன் மேய காடுறை உலகமும்
> சேயோன் மேய மைவரை உலகமும்
> வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
> வருணன் மேய பெருமணல் உலகமும்
> முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
> சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே''
>
> தொல்—பொருள் அக. 5

என்ற விதிப்படி இந்திரன் மருதநிலக் கடவுளாகலின் ''இந்திரத் தெய்வதம்'' என்றார். (10)

> வி்ள்ளுறு நாணினர் விரகத் தீயினர்
> உள்ளுறு முயிர்ப்பின ருலையு நெஞ்சினர்
> தள்ளுறு தம்முணர் வின்றிச் சாம்பினர்
> கள்ளினு முளதுகொல் கருத்த ழிப்பதே.

இ—ள்: விள்ளுறு நாணினர்—நீங்கியவெட்கத்தை யுடையவர்களாயும், விரக தீயினர்—காமாக்கினியையுடையவர்களாயும், உள் உறும் உயிர்ப்பினர்—உள்ளடங்கிய மூச்சையுடையவர்களாயும், உலையும் நெஞ்சினர்—நிலைகெட்ட மனத்தையுடையவர்களாயும், தள்ளுறு தம் உணர்வு இன்றி சாம்பினர்—தள்ளாடுகின்ற தங்கள் இயற்கையறிவு இல்லாமற் சோர்ந்தார்கள் (உழத்தியர்கள்; ஆதலால்) கருத்து அழிப்பது கள்ளினும் உளது கொல் — அறிவைக் கெடுக்கும் பொருள் கள்ளினின்றும் (மேலாக வெறொன்று) உண்டா? (இல்லையே) எ—று.

ஏ. அசை விள்ளுறு நாணினர்=நாண்விள்ளுற்றோர். நாணினர் தீயினர் உயிர்ப்பினர் நெஞ்சினர் என்னுங் குறிப்பு முற்றெச்சங்கள் சாம்பினர் என்னும் வினை கொண்டன. தள்ளுறு என்னும் வினைத்தொகையைத் தம் என்பதனோ டியைக்க

கள்ளினுமென்பதில் உம்மை இழிவு சிறப்பு. உளது — தொகுத்தல் விகாரம். அழிப்பது—வினையாலணையும் பெயர்.

நாணத்தை விடுத்துப் புணர்ச்சி விருப்பமேலிட்டு மூச்சொடுங்கி மனமுலைந்து தள்ளாடி அறிவழிந்து சோர்ந்தனரென்க. இன்னோரன்ன துர்க்குணங்கட்கெல் லாங் காரணங்களேயாதலின் அதனை யுட்கொள்ளாதீ ரென்பார் ''கள்ளினுமுளது கொல் கருத்தழிப்பதே'' என்றார். தீபோற்சுடுதலின் விரகத்தைத் தீயென்றார். இதனை

''ஊரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகும்—நீருட்
குளிப்பினுங் காமஞ் சுடுமே குன்றேறி
ஒளிப்பினுங் காமஞ் சுடும்.''

என்பதனாலு முணர்க. (11)

பளிக்கறை யன்னதோர் படுகர்ப் பாங்கினுந்
தளிர்ப்புறு செறுவினுந் தவறுற் றேகுவார்
தெளிப்பவ ரின்மையி னெறியிற் சென்றிலர்
களிப்பவர் தமக்குமோர் கதியுண் டாகுமோ.

இ—ள்: பளிங்கு அறை அன்னது ஓர் படுகர் பாங்கினும் — பளிங்கினாலாய பாறைபோன்ற தடாகங்களின் பக்கங்களினும், தளிர்ப்பு உறு செறுவினும் தவறுற்று ஏகுவார்—(பயிர்கள்) செழிக்கப்பெற்ற வயல்களினும் வழிதவறிப்போவார் கள், தெளிப்பவர் இன்மையில் நெறியில் சென்றிலர்—மயக்கத்தைத் தெளிவிப்பா ரின்மையால் நல்வழியில் நடந்திலார்கள் அந்த உழத்தியர்கள்; களிப்பவர் தமக் கும் ஓர் கதி உண்டாகுமோ—கள்ளுண்டு களிப்பார்க்கும் ஓர் நல்வழியுளதாகுமா? (ஆகாதே) எ—று.

தமக்குமென்பதிலும்மை இழிவு சிறப்பு. அன்னதோர் என்பதில் ஓர் அசை. பளிங்கு அறை என்பதில் மெல்லொற்று வல்லொற்றாயிற்று. அழுக்கற்றுத் தெளிந்த நீர் நிலையென்பார் ''பளிக்கறையன்னதோர்படுகர்'' எனவும் தவம் செய்து மெய் வருந்துவோர்க்கேயன்றி களியாட்டயர்வார்க்கு மறுமையில் நற்கதி ஒருபோதுங் கிடையாதென்னும் பொருளுமுட்பட ''களிப்பவர் தமக்குமோர்கதியுண்டாகுமோ'' எனவும் கூறினர். (12)

இன்னன பற்பல வியற்றி யீண்டினர்
உன்னருந் தொல்லையி லுணர்வு வந்துழிக்
கன்னெடுந் திரள்புயக் கணவ ரேவலில்
துன்னின ரவரொடுந் துவன்றிச் சூழ்ந்துளார்.

இ—ள்: இன்னன பற்பல இயற்றி ஈண்டினர்— இன்னோரன்ன பற்பலவிபரீதங் களைச் செய்து நேர்ந்த இடங்கடோறுஞ் செறிந்த உழத்தியர்கள், உன்ன அரும் தொல்லையில் உணர்வு வந்துழி— (இத்துணைச் சிறப்பினதென எவராலும்) நினைத் தற்கரிய பழைய நல்லறிவுவந்து சேர்ந்தபொழுது, கல் நெடுந்திரள் புய கணவர் ஏவலில் துன்னினர்—திரண்ட கற்போன்ற நெடிய திரண்ட புயங்களையுடைய தங் கள் நாயகரது ஏவலில் அமைந்து, அவரொடும் துவன்றி சூழ்ந்துளார்—அந்தநாய கரோடும் (பிரியாது) நெருங்கிச் சூழ்ந்தார்கள் எ—று.

இன்னவென்றது கண்மயக்கானேரும் வேறுபாடுகள் முன்னெடுத்துக்' கூறப் படாதனவற்றை. பற்பல — மிகப்பல. ஈண்டினர் — வினையாலணையும் பெயர். இன்ன அன்ன என்பது இன்னன எனவும், உன்ன அரும் என்பது உன்னரும் எனவும், வந்த உழி என்பது வந்துழி எனவும் தொக்கன. திரண்ட கல், வடிவினு லும் வன்மையினுலும் புயத்திற்குபமானமாயிற்று. ஆடவர் புயம் முழந்தாளளவு நீளுதல் சாமுத்திரிகா லட்சணத்தில் உத்தமாகக் கூறப்பட்டது. துன்னினர் — வினைமுற்றெச்சம்.

கட்குடியான் மயங்காக்கால் எவராலும் வியக்கற்பாலதாம் நன்மதியென்பார் 'உன்னருந் தொல்லையிலுணர்வு' எனவும், பெண்கள் மாட்டு ஆடவரையவாவச் செய்யும் முலையுங்கண்ணும்போல ஆடவர்மாட்டுப் பெண்களை யவாவச் செய்யும் பேரழகுடையனவென்பார் 'கன்னெடுந்திரள்புயம்' எனவும், ''மேவு காதலருள்ளம் விழைந்தன, வேவுமுன்னர்க் குறிப்பினியற்றுவார்'' எனக் காசி காண்டத்திற் கூறப்பட்ட கற்பிலக்கண நெறிக்கேற்ப வொழுகினரென்பார் 'கணவரேவலிற்றுன் னினர்' எனவுங் கூறினர். (13)

மள்ளர்தம் வினைபுரி மழலைத் தீஞ்சொலார்
கள்ளூறு புதுமணங் கமழும் வாலிதழ்
உள்ளூறு நறுவிரை யுயிர்த்து வீசிய
வெள்ளிய குமுதமென் மலரின் மேவுமே.

இ-ள்: மள்ளர்தம் வினைபுரி மழலைத் தீம் சொலார் — (முற்செய்யுளிற் கூறிய வாறு தங்கொழுநராகிய) உழவர்களது ஏவற்றெழிலைச் செய்யத் தலைப்பட்ட இனிய குதலைமொழியையுடைய உழத்தியர்களது, கள் உறு புது மணம் கமழும் வால் இதழ் — கள்ளின்கட் பொருந்திய புதிய வாசனை மணக்கின்ற வெளுத்த அதர மானது, உள் உறு நறு விரை உயிர்த்து வீசிய வெள்ளிய மெல் குமுதமலரின் மேவும் — உள்ளே பொருந்திய நறுமணத்தை முகையவிழ்ந்து வெளியே பரப்பிய வெண்ணிறத்தையுடைய மெல்லிய ஆம்பன் மலரைப்போல பொருந்தும் எ — று.

ஏ அசை, சொலார் — தொகுத்தல். தீஞ்சொலாரது இதழ் குமுதமலரின்மேவு மென இயைக்க. வெள்ளியகுமுதம் — வெள்ளாம்பல்.

இயற்கை மணமும் நிறமும் கட்குடியால் விகாரமெய்தினவென்பார். 'கள் ளூறு புதுமணங் கமழும்வாலிதழ்' என்றூர். கட்குடி ஐம்பெரும் பாதகங்களுள் ஒன்றாயினும் தாழ்ந்த வருணத்தாருட் சிலர் பருகுதல் வழக்காயிருந்தமையானும் அதனை வருணித்தல் காப்பியவிலக்கணத்துக்கு வேண்டப்படுதலானும் எட்டாஞ் செய்யுள் முதலாக இதுகாறும் ஏழுசெய்யுளாற் கூறினர். (14)

நட்டதோர் குழுவினை நடாத தோர்குழு
ஒட்டலர் போலநின் றொறுத்த லுன்னியே
அட்டன ராமென வடாத வான்களை
கட்டனர் வேற்றுமை யுணருங் காட்சியார்.

இ-ள்: நட்டது ஓர் குழுவினை நடாதது ஓர் குழு ஒட்டலர் போல நின்று ஒறுத்தல் உன்னி — நடப்பட்டு வளர்ந்த நெற்பயிர்க்கூட்டங்களை நடப்படாது முளைத்து வளர்ந்த களைக்கூட்டங்கள் பகைவர்போல் உடனின்று அடர்த்தலை நினைத்து, அட்டனர் ஆம் என — அழித்தார் போல, அடாத வான் களை கட்

டனர் — தகாதனவாகிய பெரிய களைகளைப் பிடுங்கினர், வேற்றுமை உணரும் காட்சியார் — (பேதந்தோன்றாது வளர்ந்த களைக்கும் நெற்பயிருக்குமுள்ள) பேதத்தை யாராய்ந்து உள்ளபடியறியுங் காட்சியினையுடைய உழத்தியர் எ — று.

ஓர் இரண்டும் ஏகாரமும் அசைகள். காட்சியார் — குறிப்புவினைமுற்றாலணையும் பெயர். பின் வேறோரிடத்தில் நடவேண்டுமென்று விரும்பி வேரறுதல் தழையொடிதன் முதலிய பங்கம் நேராமே பிடுங்கும் நெற்பயிர் நாற்றுப் போலன்றி நேர்ந்தவாறு பிடுங்கினரென்பார், 'அட்டனராமென... கட்டனர்' என்றார். நண்புற்றிருக்குமோர் கூட்டத்தாரை நண்பில்லாத மற்றோர் கூட்டத்தார் பகைவர் போல உடனின்று வருத்துதலைச் சிந்தித்து நண்பர்க்காக நள்ளாதாரையழித்தன ரெனும்படி என்னும் பொருளும் போதர 'நட்டதோர் குழுவினை நடாததோர்குழு வொட்டலர் போலநின் றொறுத்த வுன்னியே யட்டனராமென' என இரட்டுற மொழிந்தனர்.

ஏயின செயலெலா மியற்றி வேறுவே
றாயிடை வேண்டுவ தமைய வாற்றியே
மாயிரும் புவிமிசை மகவைப் போற்றிடுந்
தாயென வளர்த்தனர் சாலி யீட்டமே.

இ - ள்: ஏயின செயல் எலாம் இயற்றி — முன்னர்க் கூறியுள்ள தொழில்களெல்லாவற்றையுஞ் செய்து, வேறு வேறு ஆயிடை வேண்டுவது அமைய ஆற்றி — வெவ்வேறாக அவ்விடத்தில் வேண்டிய காவல் முதலிய பிறவற்றையும் பொருந்த நடத்தி, மா இரும் புவிமிசை மகவை போற்றிடும் தாய் என — மிகப்பெரிய இப் பூவுலகின் கண்ணே குழந்தைகளை வளர்க்கும் தாயைப்போல, சாலி ஈட்டம் வளர்த்தனர் — நெற்பயிர்க் கூட்டங்களை வளர்த்தார்கள் எ — று.

ஏ அசை. எலாம் — தொகுத்தல். அ இடை என்பது ஆயிடையெனச் சந்தி பெற்றது. வேண்டுவது — வினையாலணையும் பெயர். மா இரும் — ஒருபொருட் கிளவிகள். இயற்றி ஆற்றி வளர்த்தனர் என இயையும். சாலி — ஆகுபெயர்.

தாய்மார் மனங்கசிந்து பாலூட்டித் தாலாட்டிக் குழந்தைகளைப் பாதுகாத்தல் போல, உழவர் விருப்புவைத்து நீரூட்டி அவ்வக் காலங்களில் வேண்டுவசெய்து பயிரைப் பாதுகாத்தனராதலின் 'மகவைப் போற்றிடுந் தாயென வளர்த்தனர் சாலியீட்டம்' என்றார். தாயன்பு தலையன்பென்பதை ''பானினைந்தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து'' என்று மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்ததனாலு மறிக. இச்செய்யுட் கருத்தையுள்ளிட்டே காஞ்சிப் புராணமும்

''இளமகப் பசிதனக் கேந்து கொங்கைப்பா
லளவறிந் தூட்டுதாய் மான வாறறி
களமர்கண் முளைப்புனல் செவ்வி கண்டுநீள்
வுளவயல் பாய்த்தித் தம்மகவி னோம்புவார்''

எனக் கூறியது. (16)

மன்சுடர் கெழுமிய வயிர வான்கணை
மின்சுடர் தூணியின் மேல கீழுறத்
தன்சுடர் பொலிதரச் செறித்த தன்மைபோற்
பொன்சுட ரிளங்கதிர் புறத்துக் கான்றவே.

இ—ள்: மன் சுடர் கெழுமிய வயிர வான் கணை — பேரொளி பொருந்திய வைரத்தினுற் செய்யப்பட்ட பெரிய அம்புகளை, மின்சுடர் தூணியில் — ஒளிவிளங்குகின்ற கூட்டின் கண்ணே, மேல கீழ் உற தன்சுடர் பொலிதர செறிந்த தன்மை போல் — மேலிருக்கவேண்டிய அடிப்புறம் கீழேபொருந்தவும் தன்னெளி ( கூட்டினுண் மறையாதுவெளியில் ) துலங்கவும் செருகிய தன்மைபோல, பொன்சுடர் இளம் கதிர் புறத்து கான்ற — அழகு விளங்குகின்ற இளங் கதிர்களை வெளியே ஈன்றன ( நெற்பயிர்கள்) எ—று.

ஏ அசை. மன்சுடர் — தலைமையாகிய ஒளி; நிலைபெற்ற ஒளி யெனினுமாம். மின்சுடர் பொன்சுடர் என்பவற்றில் சுடர், வினைத்தொகை. மேலவென்பதில் அகரஞ்சாரியை, அம்புக்கூட்டின் வாயிலே அடிமேலாகவும் நுனி கீழாகவுஞ் செருகும் வழக்கத்திற்கு மாருக அம்புகளை நுனிமேலாய் வெளியே தோன்றச் செருகி வைத்தாற்போல நெற்பயிர்களின் வாயினின்றும் இளங்கதிர்கள் தோன்றின என்பது கருத்து.

நெற்பயிர்களிற்றேன்றும் முகைக்குக் கூடும் முகையினின்று நீளுங்கதிர்க்கு அம்பு முவமையென்க. (17)

பச்சிளங் காம்புடைப் பணையின் மீமிசை
வச்சிரத் தியற்றுமோ ரிலைகொள் வான்படை
உச்சிமே லுறநிறீஇ யொருங்கு செய்தெனக்
குச்சுறு சாலிமென் கதிர்கு லாவுமால்.

இ—ள்: பசு இளம் காம்பு உடை பணையின் மீமிசை — பசிய இளமையாகிய காம்பினையுடைய மூங்கிலின்மேல், வச்சிரத்து இயற்றும் ஓர் இலை கொள் வான் படை — வைரரத்தினத்தாற் செய்யப்பட்ட இலைத்தொழின் முற்றிய பெரிய ஒரு ஆயுதத்தை, உச்சிமேல் உற நிறீஇ ஒருங்குசெய்து என—நுனிமேற் பொருந்த நிறுத்தி ஒன்றுபடுத்தினுற்போல, குச்சு உறு சாலி மென் கதிர் குலாவும் — கொத்தாந்தன்மை பொருந்திய நெற்களையுடைய இளம்கதிர் விளங்கும் எ–று.

ஆல் அசை. பசுமை இளமை காம்பு என்பன பச்சிளங்காம்பு எனச் சந்தி பெற்றன. உடைய என்பது ஈற்றுயிர் மெய் குறைந்து நின்றது. மீமிசை — ஒரு பொருட்பன்மொழி. இலைத்தொழின் முற்றலாவது: தகட்டு வடிவாய்க் கூர்மை பெறும்படி அரத்தினுற் குறைத்தல். வான் ஈண்டு நீட்சியின்மேற்று, நிறீஇ — நிறுவி யென்பதன் விகாரம். செய்தாலென என்பது செய்தென எனத்தொக்கது. குச்சம் என்னும் வடமொழி குச்சென நின்றது. நெற்பயிர்க்கு மூங்கிலும் கதிர்க்குப் படையுமுவமை. (18)

சுற்றுறு பல்தலைச் சுடிகை மாசுணம்
பெற்றுறு குழவிகள் பெயர்த லின்றியே
முற்றுறு நிவப்பொடு முறையி னிற்றல்போல்
நெற்றுறு பசுங்கதிர் நிமிர்தல் மிக்கவே.

இ - ள்: சுற்றுறு பல் தலை சுடிகை மாசுணம் பெற்று உறு குழவிகள்—சூழ்ந்துள்ள பல தலைகளிற் சுடிகையையுடைய சர்ப்பம் பெற்ற குட்டிகள், பெயர்தல் இன்றி—நிலைபிரிதலில்லாமல், முற்று உறு நிவப்பொடு முறையில் நிற்றல்போல் — முழுதாகிய உயர்ச்சியோடும் வரிசைபெற்றுநிற்றல்போல, நெல் துறு பசும்கதிர் நிமிர்தல் மிக்க — நெற்கள் நெருங்கப்பெற்ற இளம்கதிர்கள் நிமிர்ச்சி மிகுந்தன எ—று.

ஏ அசை. பலதலை யென்பது நிலைமொழியீற்றகரங்கெட்டு லகரம் ஆய்தமாக வும் வருமொழித் தகரம் றகரமாகவுந் திரிந்து பஃறலையென நின்றது. முற்றுறு நிவப்பொடு நிற்றலாவது; வால்மாத்திரம் பூமியிற் பொருந்த மேனிமுழுதையும் மேலெழுப்பித் தண்டாகாரமாக நிற்றல். நாகக் குட்டிகள் தோன்றிய இருபத் தெட்டா நாளில் நஞ்சைப்பெறும் பொருட்டுச் சூரியனை நோக்கித்தவஞ் செய்வன வென்று விஷவைத்திய சாஸ்திரங்கள் கூறுதலின் அதனையீண்டுக் கூறியுவமித்தன ரென்க. ஐந்தலை நாகமென்பார் 'பஃறலைச் சுடிகை மாசுணம்' என்றார். நெற் பயிர்கட்குச் சர்ப்பக் குட்டிகளின் மேனியையும் கதிர்கட்கு அவற்றின் றலையையு முவமித்தார். (19)

மையுறு கணிகையர் மகிழ்நர் வந்துழிப்
பொய்யுறு மளியெனப் பயனில் புன்கதிர்
கையுறு முவகையாற் பணியுங் கற்பினோர்
மெய்யுறு பரிவென விளைந்து சாய்ந்தவே.

இ - ள்: மை உறு கணிகையர் மகிழ்நர் வந்துழி பொய் உறும் அளி என பயன் இல் புன் கதிர் — குற்றம் பொருந்திய பரத்தையர்கள் ஆடவர்வந்தபோது காட்டும் பொய்யன்புபோலப் பயனின்றிநின்ற புன்மையான நெற்கதிர்கள், (மகிழ் நர்வந்துழி) கை உறும் உவகையால் பணியும் கற்பினோர் மெய் உறு பரிவு என விளைந்து சாய்ந்த — கணவர் வந்தபோது ஒழுக்கம் பொருந்திய மகிழ்வினுடன் வணங்கும் பதிவிரதைகளினது மெய்யன்புபோல விளைந்து சாய்ந்தன எ - று.

கணிகை—கணத்தையுடையவள்; கணம் — பல புருடர்களின் தொகுதி. வந்த உழி என்பது வந்துழி எனத் தொக்கது. கை — ஒழுக்கம்.

பரத்தையர் ஆடவரைக் கண்டபோது அகத்தன்பின்றிப் புறத்தன்பு காட்டி உடை நடையாதியவற்றான் மருட்டி ஒய்யாரமாக இறுமாந்து நிற்பதுபோல, இளங் கதிர்கள் உள்ளீடின்றிக் காட்சிக்கு மாத்திரம் மனோகரமாய் நிமிர்ந்து நின்றன. பின்னர் அவை தாமே, கற்புடை மகளிர் கணவர் வந்தவுடன் அகத்தன்புடைய ராய் மகிழ்ந்து பணிவதுபோல, அரிசியாகிய உள்ளீடுடையனவாய் விளைந்து சாய்ந் தன என்பது கருத்து. தம்மையணுகுவோர் கீழோராயினும் முதியோராயினும் நோயாளராயினும் பாவம் பழிக்கஞ்சாது பொருள் பறித்தலையே கருதிச் சூழ்ச்சி புரிவோராதலால் 'மையுறு கணிகையர்' என்றார்' (20)

மாலுறு பொன்னகர் மருவு மன்னற்குப்
பாலுறு தீம்பதம் பலவு மார்த்தியே
மேலுறு சாலியின் விளைவு நோக்கியே
கோலிநின் றரிந்தனர் குழாங்கொண் மள்ளரே.

இ - ள்: குழாம் கொள் மள்ளர் — கூட்டமாகிய உழவர்கள், மால் உறு பொன் நகர் மருவும் மன்னற்கு பால்உறு தீம் பதம் பலவும் ஆர்த்தி —பெருமை பொருந்திய சுவர்க்க லோகத்தில் வாழுகின்ற தேவேந்திரனுக்குப் பால் சேர்த்துச் சமைத்த மதுரமான பலவகை யன்னங்களையும் நிவேதித்து, மேல் உறு சாலியின் விளைவு நோக்கி — மேன்மை பொருந்திய நெல்லின் விளைவைப் பார்த்து, கோலி நின்று அரிந்தனர் — வளைந்துநின்று அரிந்தார்கள் எ - று.

ஏகாரங்கள் அசைகள். பலவு மென்பதிலும்மை முற்று. தீம்பதம் என்பத னாற் சர்க்கரை முதலிய மதுரப்பொருள்களுஞ் சேர்ந்த அன்னமென்பது பெற்றாம்,

அமராவதியின்கண் அரசியல் புரிந்து வசிப்பவனென்பார். 'மாலுறு பொன்னகர் மருவு மன்னன்' எனவும், அவ்விந்திரன் மேகங்களைக்கொண்டு மழை பெய்விப்பவனும் மருதநிலத் தேவனுமாதலால் புதிதெடுத்தாக்கிய அமுதை நிவேதித்துப் பின்னரே யரிந்தன ரென்பார்.'பொன்னகர் மருவு மன்னர்க்குப் பாலுறுதீம்பதம் பலவுமார்த்தி...அரிந்தனர்' எனவும், விளைவான் முந்தியவற்றை முன்னும் பிந்தியவற்றைப் பின்னுமாக அரிந்தனரென்பார் 'விளைவுநோக்கி...அரிந்தனர்' எனவும், இடங்கடோறும் பலர் கூடி நின்றரிந்தன ரென்பார் 'குழாங்கொண் மள்ளர் ...அரிந்தனர்' எனவும் கூறினர். (21)

அரிந்திடு சுமைகளா லவனிப் பேருடல்
நெரிந்திடச் சேடனு நெளிந்து நீங்கிடத்
தெரிந்திடும் போர்கள்சே ணளவுஞ் சேறலால்
விரிந்திடு கதிர்சுலா மேரு வாயவே.

இ-ள்: அரிந்திடு சுமைகளால் — அவ்வுழவர்கள் அரிந்து தொகுத்த சுமைகளினால், அவனி பேர் உடல் நெரிந்திட — பூமிதேவியினது பெரிய சரீரம் நெரியவும், சேடனும் நெளிந்து நீங்கிட — (அப்பூமாதைத் தாங்கும்) ஆதிசேடனும் (பாரஞ்சுமத்தலரிதாதலால்) உடல் நெளிந்து விலகவும், தெரிந்திடும் போர்கள்— தெரிந்தடுக்கும் போர்களானவை, சேண் அளவும் சேறலால் — ஆகாயமளவும் உயர்ந்து போதலினால், விரிந்திடு கதிர் சுலாம் மேரு ஆய — பரந்த கதிர்கள் சூழுகின்ற மேருமலையாயின எ — று.

ஏ அசை. நெரிந்திட நீங்கிட என்னும் எச்சங்கள் காரியப்பொருளன. சேடனுமென்பதிலும்மை உயர்வு சிறப்பு. சுலாவுமென்னும் பெயரெச்சம் ஈற்றயலுயிர்மெய் கெட்டு நின்றது. கதிரென்பதற்கு, மேருமலைக் காம்போது சூரிய சந்திரரெனவும் போர்க்காம்போது நெற்கதிர்களெனவு முரைப்பர் சிலர்.

"அரிவர் சேர்ப்ப ரடுக்குவர் சிக்கென
வரிவர் சென்னியில் வைப்பர் களஞ்செலப்
புரிவர் பொன்னங் கிரியெனப் போர்செய்வர்.'

எனக் காஞ்சிப் புராணம் கூறியவாறு, நெற்பயிர்களை யரிந்து சேர்த்தடுக்கிச் சுமையாக்கிக்கொண்டு சென்று களத்திற் போர் செய்தனரென்பார். அரிந்திடு சுமைகளால் — தெரிந்திடும் போர்கள்' எனவும், வயல்களில் எங்கும் பரவியிருந்தனவற்றை ஓரிடத்திற் சேர்த்துப் போராக்குதலாற் பூமாதிற்கும் சேடனுக்கும் அளவின்மிக்க பாரமாயிற்றென்பார் 'அவனிப் பேருட னெரிந்திடச் சேடனு நெளிந்து நீங்கிட' எனவும் கூறினர். (22)

ஏற்றொடு பகட்டின மிசைத்துப் போருரு
மாற்றினர் வலமுறை திரித்து வாழ்த்தொலி
சாற்றினர் பரனொடு தமது தெய்வதம்
போற்றினர் மீமிசை பொலிகென் றோதுவார்.

இ—ள்: ஏற்றொடு பகட்டு இனம் இசைத்து — எருத்தினங்களுடன் எருமைக் கடாவினங்களைப் பிணைத்து, போர் உரு மாற்றினர் — நெற்போர்களி னுருவத்தைக் குலைத்து, வலமுறை திரித்து—பிரதக்கிணமாகச் சூழ்வித்து, வாழ்த்து ஒலி சாற்றினர் — மங்கல வாழ்த்துக்களைக் கூறி, பரனொடு தமது தெய்வதம் போற்றினர் — சிவபெருமானையுந் தங்கள் நிலக் கடவுளாகிய இந்திரனையும் துதித்து, மீமிசை பொலிக என்று ஓதுவார் — மேலும் மேலும் பொலிக என்று சொல்வார்கள் (அவ்வுழவர்கள்) எ — று.

மாற்றினர் சாற்றினர் போற்றினர் என்பன முற்றெச்சங்கள். பின்னேய ஒடு எண். தைவதமென்னும் வடசொல் தெய்வதம் என நின்றது, மீமிசை — ஒரு பொருட் பன்மொழி. பொலிக என்னும் வியங்கோளீற் றகரந் தொக்கது. தமது தெய்வத மென்பதற்குத் தங்களால் தொன்றுதொட் டனுசரிக்கப்பட்டு வருங் குல தெய்வமெனினுமாம்.

மங்கல கருமமாதலின் 'வலமுறை திரித்து' எனவும், ஒருமுறை யிருமுறைகளி னமையாது பன்முறை கூறுதலின் 'மீமிசை பொலிகென் றோதுவார்' எனவும் கூறினர். வாழ்த்தொலி சாற்றுதலுந் தெய்வம் போற்றுதலும் பொலிகெனக் கூறுதலும் தானியம் பொலிதற் பொருட்டென்க. தம் நிலக்கடவுளாகாதபோதும் முதற்கடவுளாதல் பற்றிப் பரமசிவனேயும் வழிபட்டனரென்பார் 'பரனெடு தமது தெய்வதம் போற்றினர்' என்றார். (23)

தொங்கலம் பூமுடித் தொழுவர் போரினே
அங்குறப் படுத்துவை யகற்றி யாக்கிய
பொங்கழிப் பதடிகள் புறத்து வீசியே
எங்கணு நெற்குவை யியற்று வாரரோ.

இ—ள்: பூ தொங்கலம் முடி தொழுவர் — மலர்மாலையையணிந்த குடுமியினேயுடைய உழவர்கள், போரினே அங்கு உற படுத்து — நெற்போரை அவ்விடத்தில் மிகவும் மிதித்து, வை அகற்றி ஆக்கிய பொங்கழி பதடிகள் புறத்து வீசி— வைக்கோலேப் புறத்தி லொதுக்கி யமைத்த தூற்றாத நெற்பொலியின்கணுள்ள பதர்களேப் புறத்தே (விலகுமாறு) வீசி, எங்கணும் நெல்குவை இயற்றுவார் — எவ்விடத்தும் நெற்குவியலே அமைப்பார்கள் எ—று.

அம் — சாரியை; அழகெனினுமாம், ஏ அரோ அசைகள். அங்கென்றது — களத்தை, பொங்கழி — தூற்றாத நெல்லாகிய பொலி. (24)

களப்படு கைவலோர் கால்க ளான்முகந்
தளப்புறு நெற்குழா மவற்றுண் மன்னவற்
குளப்படு கடன்முறை யுதவி மள்ளருக்
களித்தனர் வேண்டிய தனேய நாட்டுளோர்.

இ—ள்: களபடு கை வலோர் கால்களால் முகந்து அளப்பு உறும் நெல் குழாம் அவற்றுள் — நெற்களத்தின்கணின்ற கைப்பயிற்சியால் வல்லவர்கள் மரக்கால்களினுலே மொண்டு அளக்கும் நெற்கூட்டங்களுள், மன்னவற்கு உள படு கடன்முறை உதவி — அரசனுக்குரியதாக மதிக்கப்படுகின்ற (ஆறிலொரு பங்காகிய) கடமையை முறைப்படி கொடுத்து, மள்ளருக்கு வேண்டியது அளித்தனர்—(பின்) உழவர்களுக்கு வேண்டிய நெல்லேக் கொடுத்தார்கள். அனேய நாட்டு உளோர் — அந்தத் தொண்டைநாட்டின்கணுள்ள வேளாண்டலேவர்கள் எ—று.

கை — ஆகுபெயர். வல்லோர் உள்ளோர் என்பன வலோர் உளோர் எனத் தொக்கன. கிடைத்த பொருளே ஆறு கூறாக்கி, அரசனுக்கும் பிதிரர்க்கும் தேவர்க்கும் விருத்தினர்க்கும் உறவினர்க்கும் ஆக முறையே ஐந்து கூற்றையும் விநியோகித்து, எஞ்சிய ஒரு கூற்றையே தாமனுபவிக்க வேண்டுமென்னும் மனுதரும நூற்றுணிபுக் கேற்ப, முன்னேயதாகிய அரசனது பங்கை அக்களத்திற்றானே வழக்

கப்படி கொடுத்தனரென்பார் 'மன்னவற் குளப்படு கடன்முறையுதவி' என்முர். பிதிரராதிய ஐவர்க்குங் கொடுப்பது தன் மனையினுதலின் ஈண்டுக் கொடுத்தில ரென்க. திருவிளையாடற் புராண ஆசிரியரும் இக்கருத்தை யுள்ளிட்டே,

> "கற்றைவை களைந்து தூற்றிக் கூப்பியூர்க் காணித் தெய்வ
> மற்றவர்க் கற்ற வாறீந் தளவைகண் டாறி லொன்று
> கொற்றவர் கடமை கொள்ளப் பண்டியிற் கொடுபோய்த் தென்னு
> டுற்றவர் சுற்றந் தெய்வம் விருந்தினர்க் கூட்டி யுண்பார்,"

எனக் கூறினுர்.

உழுதல் முதலாக மிதித்தலீருகிய தொழில் முழுதையுமியற்றி மெய் வருந் தினராதலின், அவர் மனங்கோணு துவப்பக் கொடுத்தனரென்பார் மள்ளருக் களித்தனர் வேண்டியது' என்முர். (25)

> சொற்குவை வழிபடப் புகழிற் ருேன்றுதம்
> மிற்குவை வேண்டுவ தேவி யெஞ்சிய
> நெற்குவை குரம்பையி னிரப்பு வித்தனர்
> பொற்குவை யரிந்தனர் பொதிவித் தென்னவே.

இ—ள்: சொல் குவை வழிபட புகழில் தோன்று தம் இற்கு — கவிகள் புகழும்படி கீர்த்தியுடன் விளங்குகின்ற தம்முடைய மாளிகைக்கு, உவை வேண்டுவது ஏவி — அந்நெற்குவைகளிற் செலவிற்கு வேண்டிய தொகையை அனுப்பி, எஞ்சிய நெல் குவை — மிஞ்சியிருந்த நெற்குவியலை. பொன் குவை அரிந்தனர் பொதி வித்து என்ன குரம்பையில் நிரப்புவித்தனர் — பொற்குவியலை யரிந்து பொதிவித் தாற்போல நெற்கோட்டைகளில் (ஏவலாளரால்) நிரப்புவித்தார்கள் (அவ்வேளாண் டலைவர்கள்) எ—று.

ஏ அசை. சொல் ஆகுபெயர். வழிபட என்னுஞ் செயவெனெச்சங் காரி யப் பொருளதாய் 'தோன்று' என்னும் வினைகொண்டது. தோன்று என்னும் வினைத்தொகை முதல் குறுகிய தாம் என்னும் பெயரோடியைந்தது. அரிந்தனர்— முற்றெச்சம். பொதிவித்தாலென்னஎன்பது பொதிவித்தென்ன எனத்தொக்கது. உவை என்னுஞ்சுட்டு அகரச்சுட்டின் பொருள்பட்டு நின்றது.

> "உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்ரு
> தெழுவாரை யெல்லாம் பொறுத்து"

எனவும்,

> "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
> தொழுதுண்டு பின்செல் பவர்"

எனவும்,

> "..................................................
> உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லைக் கண்டீர்
> பழுதுண்டு வேருேர் பணிக்கு"

எனவும் புலவர்கள் புகழ்ந்து பாடுதலின் 'சொற்குவை வழிபடப் புகழிற்ருேன்று தம்' என்றும், பின்னர் நெல் விதைத்து விளைவுறுங்காலம் வரையும் வீட்டினிக முஞ் செலவிற்குப் போதிய நெல்லை யனுப்பினரென்பது போதர வேண்டுவதேவி' என்றும், பொற்குவியலை மகிழ்வுடன் பேடக முதலியவற்றிற் சேமிப்பது போலப் பேருவகையுடனே நிரப்புவித்தனரென்பது போதர 'பொற்குவை யரிந்தனர் பொதி வித்தென்ன நிரப்புவித்தனர்' எனவும் கூறினுர். (26)

தலத்திடை வேறிடத் தொதுங்குந் தண்ணிய
குலத்திடைப் பிறந்தவர் கூட்ட மாமென
நலத்திடை வந்திடு முதிரை நல்வளம்
நிலத்திடை யொருசிறை விளையு நீரவே.

இ—ள்: தலத்திடை வேறு இடத்து ஒதுங்கும் — கிராமங்களிற் புறம்பான இடங்களிலே ஒதுங்கி வாழுகின்ற, தண்ணிய குலத்திடை பிறந்தவர் கூட்டம் ஆம் என — தாழ்ந்த சாதியிற் பிறந்தவர்களது தொகுதிபோல, நலத்திடை வந்திடும் முதிரை நல்வளம் — இன்பத்தைத் தரும் பொருட்டு வரும் புன்செய்த் தானியங்களாகிய நல்ல வளங்கள், நிலத்திடை ஒருசிறை விளையும் நீர — அந் நாட்டிலுள்ள நிலங்களில் ஒவ்வோர் சாரில் விளையுந்தன்மை யுடையன எ—று.

ஏ அசை. பிறந்தவர் கூட்டம் என்பது பிண்டப் பொருளும் பிண்டித்த பொருளும் வேறாகாது உரைப்போர் குறிப்பின் வேறுபட்டு நின்றது; நெல்லது குப்பை என்பதுபோல. கிராம விலக்கணத்திற் கேற்ப அந்தணர் முதலிய உயர்குலத்தார் நடுப்பாகங்களில் வசிப்ப, அவரைத் தீண்டுதற் கருகரல்லாத பஞ்சமர் முதலிய தாழ்ந்த குலத்தார் புறத்தே ஒதுங்கி வாழுதல் நூற்றுணிபும் வழக்கமுமாதலின் 'தலத்திடை வேறிடத் தொதுங்குந் தண்ணிய குலத்திடைப் பிறந்தவர் கூட்டமாமென' எனவும், புன்செய்த் தானியங்களா ஞக்கப்படும் போசன பதார்த்தங்க ளில்லாவழி நன்செய்த் தானியத்தா லாக்கப்படு மன்னஞ் சுவை பெருமையின் 'நலத்திடை வந்திடு முதிரை' எனவும், அதிகமழை மழையின்மை முதலியவற்ருன் வருங்கேடுகளின்றி விளையும் வளமாதலின் 'நல்வளம்' எனவும் கூறினர். புன்செய்த் தானியங்கள் பயறு உழுந்து எள் முதலியன.(27)

பிறப்பதும் வளர்வதும் பின்னர் மூப்புவந்
திறப்பதும் வைகலு முலகி லேய்ந்தெனச்
சிறப்புட னடுவதும் பருவஞ் செய்வதும்
மறுப்பதுந் தொகுப்பது முலப்பின் ருயவே.

இ—ள்: பிறப்பதும் — (ஆன்மாக்கள் யோனிவாய்ப்பட்டுப்) பிறத்தலும், வளர்வதும் — (பிறந்தபின் காலந்தோறும்) சரீரம் வளர்தலும், பின்னர் மூப்பு வந்து இறப்பதும் — சிலகாலஞ் சென்றபின் கிழப்பருவம் நேர்ந்து சாதலும் (ஆகிய இவைகள்), வைகலும் உலகில் ஏய்ந்து என — தினந்தோறும் உலகத்திற் (குறைவின்றி) நிகழ்ந்தாற்போல, சிறப்புடன் நடுவதும்—(முன்னர்க் கூறப்பட்ட) சிறப்புக்க ளமையப் பயிர்களை நடுதலும், பருவஞ்செய்வதும் — (நீர்ப்பாய்ச்சுதல் களை கட்டல் முதலிய) பருவத் தொழில்களைச் செய்தலும், அறுப்பதும் தொகுப்பதும் — (விளைவு நோக்கி) அரிதலும் குவித்தலும் (ஆகிய முயற்சிகள்), உலப்பு இன்று ஆய — (அத்தொண்டை நாட்டிற் காலந்தோறுங்) குறைவின்றி நிகழ்ந்தன எ—று.

ஏ அசை. ஏய்ந்தாலென என்பது ஏய்ந்தென எனத்தொக்கது. பருவம்—ஆகு பெயர்.

பிறத்தலும் வளர்தலுஞ் சாதலுமாகிய மூன்றும் உலகத்தில் மீட்டும் மீட்டும் நிகழ்தல்போல, அந்நாட்டிலுள்ள நிலங்களிலும் பயிரிடுதலும் வளர்த்தலும் அறுத்தலுமாகிய தொழில் வகைகள் பரிவிருத்தியாய் நிகழ்ந்தன என்பது கருத்து.(28)

முழவொலி விண்ணவர் முதல்வற் காக்குறும்
விழவொலி கிணையொலி விரும்பு மென்சிறூர்
மழவொலி கடைசியர் வள்ளைப் பாட்டொலி
உழவொலி யல்கலு முலப்பு றுதவே.

இ—ள்: முழவு ஒலி—முழவினோசையும், விண்ணவர் முதல்வற்கு ஆக்குறும் விழவு ஒலி — தேவர்க்கரசனாகிய இந்திரனுக்கு நடாத்தும் திருவிழாவினோசையும், கிணை ஒலி — மருதப்பறையினோசையும், விரும்பும் மென் சிறூர் மழவு ஒலி — எவராலும் விரும்பப்படுகின்ற இளஞ் சிறுவர்களது மழலை வார்த்தையினோசையும், கடைசியர் வள்ளைப்பாட்டு ஒலி — உழத்தியர்கள் பாடும் உலக்கைப் பாட்டினோசையும், உழவு ஒலி — உழவினோசையும் (ஆகிய இவையெல்லாம்) அல்கலும் உலப்பு உறுத — தினந்தோறும் அந்நாட்டிற் குறையாது நிகழ்வன எ—று.

ஏ அசை. முழவு, அகமுழவு அகப்புறமுழவு புறமுழவு புறப்புறமுழவு பண்ணமைமுழவு நாண்முழவு காலைமுழவு என எழுவகைப்படும். அவற்றுள் அகமுழவாவன: உத்தமக் கருவியாகிய மத்தளம் சல்லிகை இடக்கை கரடிகை பேரிகை படகம் குடமுழா என்பன. அகப்புறமுழவாவன: மத்திமக் கருவியாகிய தண்ணுமை தக்கை முதலியன. புறமுழவாவன: அதமக் கருவியாகிய கணப்பறை முதலியன. புறப்புற முழவாவன: நெய்தற்பறை முதலியன. பண்ணமை முழவாவன: முரசு நிசாளம் துடுமை திமிலை என்னும் வீரமுழவு நான்குமாம். நாண் முழவாவது நாட்பறை: இது நாழிகைப்பறை யெனவும்படும். காலை முழவாவது துடி. இவற்றுள் ஈண்டியைந்தன கொள்க. உழவொலியாவது: உழுதற்றொழில்புரியு மள்ளர் எருது முதலியவற்றைச் செலுத்தும் பொருட்டு உரப்புதல் முதலியன. (29)

காலுற நிமிர்ந்திடு காமர் சோலையும்
நீலமுங் கமலமு நிறைந்த பொய்கையும்
ஆலையங் கழனியும் அனங்கற் காயுத
சாலைக ளிவையெனச் சாற்ற நின்றவே.

இ—ள்; கால் உற நிமிர்ந்திடு காமர் சோலையும் — அடியான் மிகவும் உயரப்பெற்று வளர்ந்த அழகிய சோலைகளும், நீலமும் கமலமும் நிறைந்த பொய்கையும் — நீலோற்பலங்களும் தாமரைகளும் நிறையப்பெற்ற தடாகங்களும், ஆலையம் கழனியும் — கரும்புகளையுடைய வயல்களும், அனங்கற்கு ஆயுதசாலைகள் இவை என சாற்ற நின்ற — மன்மதனுக்கு ஆயுதசாலைக ளிவைதாமென்று கண்டோர் சொல்லும்படி பொலிவுற்று நின்றன. எ—று.

ஏ அசை. சோலையும் பொய்கையும் கழனியும்...சாற்றநின்ற என இயையும். ஆலை—ஆகுபெயர். அனங்கன் — உருவமில்லாதவன். மன்மதன் தேவர் வேண்டுகோட்படி சிவபெருமானது ஞானநிலையைப் பங்கப்படுத்துவான் புகுந்து அவரது நுதற்கணோக்கத்தா லிறந்தனன்; பின் அவனது தேவியாகிய இரதி வேண்டுதல் செய்யச் சிவபெருமான் அவனை யெழுப்பி, அவ்விரதிக்கு மாத்திரம் தோன்றும்படியும் சூழ்ச்சிசெய்த தேவர்க்கும் பிறர்க்குந் தோற்று தொழுகும்படியும் பணித்தனர். அக்காரணத்தால் அனங்கனென்னும் பெயர் அவனுக்காயிற்று.

மன்மதனுக்கு மலர்கள் கணைகளும் கரும்புவில்லுமாதலால் அவைகளையுடைய இடங்களை 'ஆயுதசாலைகளிவை யெனச்சாற்ற நின்ற' என்றார். இதனை,

" ஆலைக் கரும்புசிலை ஐங்கணைபூ நாண்சுரும்பு
மாலைக் கிளிபுரவி மாருதந்தேர்—வேலை
கடிமுரசங் கங்குல் களிறுகுயில் காளங்
கொடிமகரந் திங்கள் குடை ";

என்பதனாலு மறிக. ஐங்கணைக்குரிய மலர்கள்:—தாமரைப்பூ மாம்பூ அசோகப்பூ முல்லைப்பூ நீலப்பூஎன்பனவாம். இதனை,

" குடைகவித்த நற்கஞ்சங் கோதறு சூதப்பூ
கடியுமசோ கந்தளவு காவி—படையெடுத்து
வாங்காச் சமர்விளைக்கு மாரனுக்கெப் போதுமங்கை
நீங்காக் கணையா நினை "

என்பதனாலு மறிக. ஆயுதசாலை சமர்க்குப் புறப்படும்போது பகைவரை யடர்த்தற் கேற்ற சிறந்த படைகளைத் தெரிந்தெடுத்தற்குரியதாதல் போல இத்தொண்டை நாட்டிலுள்ள சோலை முதலியனவும் மன்மதன் படைக் கேற்றதென்று விரும்பிக் கைக்கொள்ளத்தக்க சிறந்த கரும்பு முதலியவைகளையுடையனவாயின வென்பது கருத்து. (30)

நெறியிடை யொழுகலா விழுதை நீரரை
மறலிதன் னகரிடை வருத்தல் போலுமால்
குறைபடத் துணித்தவண் குவைசெய் கன்னலை
அறைபடு மாலைக ளிடையிட் டாட்டலே.

இ—ள்: குறை பட துணித்து அவண் குவை செய் கன்னலை - துண்டாகும் படி வெட்டி அவ்விடத்திற் குவித்த கரும்பை, அறைபடும் ஆலைகள் இடை இட்டு ஆட்டல் — ஒலிபொருந்திய ஆலைகளினிடையே வைத்து ஆட்டுதல், நெறி இடை ஒழுகலா இழுதைநீரரை — சன்மார்க்கத்திலமைந்து நடவாத அறிவிலிகளை, மறலி தன் தன்நகர் இடை வருத்தல் போலும் — யமன் தன்னுடைய சம்யமினி நகரத்தில் (வருவித்து) வருத்துதல்போலும் எ—று.

சன்மார்க்கத்தி லொழுகாத பாவிகளை யமன் நரகிலிட்டு வருத்துதல்போலக் கரும்புகளை ஆலையில்வைத்து நெரித்தனர் என்பது கருத்து.

ஆல் ஏ அசைகள். ஒழுகலாத என்பது ஈற்றுயிர்மெய் குறைந்து நின்றது. யமனுடைய நகரை வைவச்சுவத நகரெனவும் வழங்குப. நெறியாவது;—வேதங்களிலும் அவற்றின் வழிநூல்களாகிய மிருதி புராண முதலியவற்றிலும் விதிக்கப் பட்டமார்க்கம். அம்மார்க்கத்தி லொழுகாதோர் பாஷண்ட ரெனப்பட்டு மறுமையில் நிரயம் புகுவரென்க. (31)

ஏறுகாட்டி யதிற லிளைஞ ரெந்திரங்
கூறுகாட் டியகழை யழுங்கக் கோறலுஞ்
சாறுகாட் டியதரோ யாதுந் தம்மிடை
ஊறுகாட் டினர்க்கலால் உலோப ரீவரோ.

இ—ள்: ஏறு காட்டிய திறல் இளைஞர் — ஆண்சிங்கத்தைப்போன்ற வலிமையினையுடைய காளையர்கள், எந்திரம் கூறு காட்டிய கழை அழுங்க கோறலும் — ஆலையில் துண்டுசெய்யப்பட்ட கரும்புகளை வைத்துநசியும்படி நெரித்தலும், சாறு காட்டியது — (அவைகள்) தம்மிடத்துள்ளசாற்றை வெளிப்படுத்தியன, தம் இடை

யாதும் ஊறு காட்டினர்க்கு அலால் உலோபர் ஈவரோ — தம்மேனியில் யாதேனு மொரு ஊறுபாட்டைச்செய்தவர்க்கு (ஆற்ருமையாற் பொருளைக்கொடுப்பதே) அன்றி (அவ்வாறு செய்யாதார்க்கு) உலோபிகள் கொடுப்பார்களா ? (கொடார் களே) எ—று.

அரோ—அசை. ஏறுகாட்டியதிறல் —சிங்கவேறு தன்னிடத்துள்ளதாகக் காட்டிய வலிமை. ஏறு என்பதற்கு இடபமெனக்கூறினுமாம். யந்திரத்தைஆட்டிக்கரும்பை நெரித்துப் பிழிதற்கேற்ற வலிமையுடையரென்பது போதர 'ஏறுகாட்டிய திறலினை ஞர்' என்ருர். யந்திரமென்னும் வடமொழிமுதலிலுள்ள யகரம் எகரமாயிற்று. இதன்விதியைப் பிரயோகவிவேகத்திற் காண்க. எந்திரம் கோறலும் என இயையும். கோறலும் உம்மீற்றுவினையெச்சம். ஊறு அடித்தல் முரித்தல் குத்துதல் முதலி யன. அலால்—தொகுத்தல். உலோபர் பேராசைகொண்டு உடாதும் உண்ணுதும் கொடாதும் பொருளீட்டுவோர். இவர் தண்டஞ்செய்தவழியே பொருளைக் கொடுத் தல்போல, கரும்புகளும் ஆலையில்வைத்துநெரித்தவழிச் சாற்றைவெளிப்படுத்தின என்பதுகருத்து. (32)

மட்டுறு கழையினும் வலிதிற் கொண்டபின்
இட்டகொள் கலங்களி னிருந்த தீம்புனல்
தொட்டிடு கடலெனத் தோன்று மன்னவை
அட்டதோர் புகைமுகி லளாவிற் ெறுக்குமே.

இ—ள்: மட்டு உறு கழையினும் வலிதில் கொண்ட பின்—அளவாகத்து ணிக்கப்பட்ட கரும்பினின்றும் வலாற்காரமாகக்கவர்ந்தபின்பு, இட்ட கொள்க லங்களின் இருந்த தீம் புனல் — (சிந்துமிடத்தில்) வைக்கப்பட்ட பாத்திரங்களில் நிறைந்திருந்த இனிய சாறு, தொட்டிடு கடல் என தோன்றும் — (முற்காலத்திற் சகரராலே) தோண்டப்பட்ட சமுத்திரம்போலத் தோற்றும், அன்னவை அட்டது ஓர் புகை — அவற்றைக்காய்ச்சுதலாலுண்டாகிய புகையானது, முகில் அளாவிற்று ஒக்கும் — மேகங்கள் படிதலைப்போலும் எ—று,

ஓர் ஏ அசைகள். வலிதிற்கொள்ளல்—ஆலையினுல்நெரித்துப்பிழிதல். கொண்ட பின் இருந்த எனவியையும். கொள்கலம்—பாத்திரம். தொடுதல்—தோண்டுதல். அளாவிற்று — வினைமுற்றுத்தொழிற்பெயர். ஆழமானகடலென்பார் 'தொட்டிடு கடல்' என்ருர்.

பாத்திரங்களில் ஏந்திவைத்த சாறு கடல்போலிருப்ப, அந்தச்சாற்றை வெல்ல முதலியனவாக்குமாறு காய்ச்சும்போதெழுந்த புகை மேகம்படிதல்போலத்தோன் றியதென்பது கருத்து. (33)

கூடின தேனிசை யிளமென் கோகிலம்
பாடின மயில்சிறை பறைய டித்தன
வாடின வஞ்சிதந் தலைய சைத்திடா
நாடின பாதவம் புகழ்வ நாரையே.

இ—ள்: தேன் இசை கூடின—வண்டுகள் கீதம்பாடின: இளம் மென்கோகி லம் பாடின — இளமையான மெல்லியகுயில்கள் பாடின, மயில் சிறை பறை அடித்தன — மயில்கள் சிறகுகளாகிய பறைகளை அடித்தன, வஞ்சி ஆடின — கொடிகள் நடித்தன, பாதவம் தம் தலை அசைத்திடா நாடின — மரங்கள் தங் கள் தலையை யசைத்து நோக்கின, நாரை புகழ்வ—நாரைகள் அவற்றைப் புக ழுவன எ—று,

ஏ அசை. இசை — முதனிலைத்தொழிற்பெயர். இசைகூடுதல் = இசைத்தலைப் பொருந்துதல். வண்டினிசைகள் கூடின எனினுமாம். சிறைப்பறை — ரூபகம். பாதபம் என்னும் வடமொழி பாதவமெனநின்றது. பாத — பம் = அடியினாற் பாய்ச்சப்பட்ட நீரைக் குடிப்பது. புகழ்வ அன்பெறாத அகரவீற்றஃறிணைப்பன்மை வினைமுற்று. நாரை—ஓர்வகைப் பறவை. செவிக்கின்பம் பயப்பது மழலையோசையாதலின் அதற்கேற்றனவென்பது போதர 'இளமென்கோகிலம்' என்றார்.

நாடகமன்றின் கண்ணே பாணர் யாழ் முதலிய கருவிகளையிசைத்தலும் சங்கீத சாமர்த்தியர்கள் மிடற்றாற் பாடுதலும் வாத்தியகாரர் வாத்தியங்களை முழக்குதலும் கணிகைமாதர் நடம் புரிதலும் சபையினர் தலையசைத்து நோக்கலும் புகழ்தலும் நிகழா நிற்கும்; அவையெல்லாம் தொண்டை நாட்டிலுள்ள அஃறிணைப் பொருள்களினுமமைந்திருந்தனவென்பது கருத்து. (34)

காசொடு நித்திலப் பொதியுங் காட்டியே
பாசடை மாதுளை சினையிற் பைங்குயில்
பேசிட நிற்பன பெறீஇயர் வம்மென
வீசுதல் கருதியே விளித்தல் போன்றவே.

இ—ள்: பாசு அடை மாதுளை — பசிய இலைகளையுடைய மாதுள மரங்கள், காசு ஒடு நித்தில பொதியும் காட்டி — மாணிக்கப் பொதியையும் முத்துப் பொதியையும் (தம்மிடத்துள்ளனவாகக்) காண்பித்து, சினையில் பைங்குயில் பேசிட நிற்பன — கொம்பரிற் பசுமையாகிய குயில்களிருந்து கூவ நிற்பன; (ஆதலால்), வீசுதல் கருதி — பிறர்க்கு கொடுக்குமாறு நினைத்து, பெறீஇயர் வம் என விளித்தல் போன்ற — பெற்றுக்கொள்ள விரும்பியவர்கள் வாருங்கள் என்று அழைத்தல் போன்றன எ—று.

ஏகாரங்கள் அசைகள். ஒடு — எண்ணில் வந்தது. பொதியென்பது காசென்பதனோடுஞ் சேர்த்துப் பொருள் கொள்ளப்பட்டது. பசுமை அடை பாசடை எனவும், பசுமை குயில் பைங்குயிலெனவுஞ் சந்தி பெற்றன. பைங்குயில் — இளங்குயில், வம்மினென்பது வம் என முன்னிலை யேவற்பன்மைவிகுதிதொக்கது.

மாதுளமரங்களுட் சில வெண்ணிறவித்துடைய பழங்களும், சில செந்நிற வித்துடைய பழங்களும் தூங்க, கிளைகளிலிருந்து குயில்கள் கூவ நிற்பன; ஆதலின், திரவியங்களைப் பெற விரும்பியவர்களே வாருங்களென்று அழைக்கும் கொடையாளிகள் போன்றன என்பது கருத்து. மாணிக்கப்பொதி போல்வன பழங்களெனவும் முத்துப்பொதி போல்வன காய்களெனவுங் கூறுவாருமுளர். (35)

சித்திரக் கதலிமா வருக்கைத் தீங்கனி
துய்த்திட வரும்பய னுதவுந் தோற்றத்தால்
உத்தம முதலிய குணத்தி னோங்கிய
முத்திறத் தவர்கொடை மொழிய நின்றவே.

இ—ள்: சித்திர கதலி மா வருக்கை தீம் கனி—அழகிய வாழை மா பலா என்பவற்றின் இனிமையாகிய பழங்கள், துய்த்திட வரும் பயன் உதவும் தோற்றத்தால் — (விரும்பினோர்) புசிக்கும்படி தம்மிடத்துத் தோன்றும் பிரயோசனத்தைக்கொடுக்குந் தன்மையினால், உத்தமம் முதலிய குணத்தின் ஓங்கிய முத்திறத்தவர்

கொடை மொழிய நின்ற — உத்தம முதலாகிய மூவகைக் குணங்களினுற் சிறப்புற்ற மூவகை வள்ளல்களது கொடையை உவமை கூறும்படி நின்றன எ—று.

ஏ அசை, துய்த்திட மொழிய என்னுஞ் செயவெனெச்சங்கள் காரியப் பொருளன. அரும்பயனெனப் பிரித்து அதற்கேற்பப் பொருள் கூறினுமாம். உத்தம முதலிய குணமாவன: — உத்தமக்குணம் மத்திமக்குணம் அதமக்குணம் என்பன. அவற்றையுடையோர் முறையே முதல்வள்ளல் இடைவள்ளல் கடைவள்ளலெனப் பெயர் பெறுவர். அவருள் முதல்வள்ளல் எழுவர்; இடைவள்ளல் எழுவர்; கடைவள்ளல் எழுவர். இவர்கள் பெயர்களை,

''மிக்க செம்பியனேகாரி விராடனே நிருதி தானும்,
தக்கதுந்து மாரி தானுஞ் சகரனு நளனுந் தாமுன்,
அக்குரன் சந்திமாஞேடந்திமான் சிசுபா லன்னே,
வக்கிரன் கன்னன் சந்த னிடைவள்ளல் வகுத்த வாறே''

எனவும்,

''பாரியா யெழினி நள்ளி பசுந்தொடை மலயன் பேகன்
ஓரியே கண்டயி லுற்ரே ருறுபொரு டண்டா தீந்தும்
வாரியி லிரந் தோர்க் கிட்டும் வளர்புகழ் துதிக்க வீந்தும்
பேரியல் வையமெண்ணப் பெற்றனர் முப்பா லாகும்''

எனவுஞ் சூடாமணி நிகண்டு கூறும். இவற்றுட் சில பெயர்களை வேற்றுமையாகவுஞ் சிலநூல் கூறும்.

வாழைப்பழம் கருவியொன்றையும் வேண்டாது கையினுற்றேல் போக்கிய வழிப்புசித்தற்குப் பயன்படுதலால் கேட்குமுன் குறிப்பறிந்து கொடுக்கும் உத்தமக் குணத்தையுடைய முதல் வள்ளலையும், மாம்பழம் கருவியினுற்றேல் போக்கியரிந்தவழியே பயன்படுதலால், கேட்ட பின் கொடுக்கும் மத்திமக் குணத்தையுடைய இடைவள்ளலையும். பலாப்பழம் ஓர் பெருங்கருவியினுற் பிளந்து பல கூறுக்கித் தண்டு நீக்கிச் சுளைகளைத் தெரிந்தெடுத்து அவற்றினுள்ளிருக்கும் விதை முதலியவற்றைப் போக்கிய வழியே பயன்படுதலால், இன்சொற் கூறிப் பன்னுளிரந்து திரிந்த பின் கொடுக்கும் அதமக் குணத்தையுடைய கடைவள்ளலையும் ஒத்தனவென்பது கருத்து. அந்நாட்டின் கண்ணே முப்பழங்களுங் குறைவற்றிருந்தனவென்பது தாற்பரியம். (36)

வீசுகால் பொரவசை விசும்பிற் ருழைகள்
தேசுலாம் பரிதிமெய் தீண்டுஞ் செய்கைய
காசினி தன்கையாற் கலைவெண் டிங்கள்போல்
மாசுரு வகைதுடைத் திடுதல் மானுமே.

இ—ள்: வீசு கால் பொர அசை விசும்பில் தாழைகள் — வீசுகின்ற காற்றுனது மோதுதலால் அசைகின்ற ஆகாயத்தையளாவி வளர்ந்த தென்னை மரங்கள், தேசு உலாம் பரிதி மெய் தீண்டும் செய்கைய — ஒளி பொருந்திய சூரியனது மண்டலத்தைப் பரிசிக்குந் தன்மையையுடையன (ஆதலால்), காசினி — பூமிதேவியானவள், கலை வெண் திங்கள் போல் மாசு உருவகை தன் கையால் துடைத்திடுதல் மானும் — கலைகள் நிறைந்த வெண்மையாகிய சந்திரன் போலக் களங்கமுரு வண்ணம் தனது கையினுலே துடைத்தல் போலும் எ—று.

ஏ அசை. பொர என்னுஞ் செயவெனச்சங் காரணப் பொருளில் வந்தது. உலாவுமென்பதி லீற்றயலுயிர் மெய்கெட்டது. பரிதி — வட்ட வடிவுடையவன். கலை — சந்திரபிம்ப மானத்தின் பதினுறிலொரு பாகம்; இது, சந்திரனைப் பூச்சாயை

நேர்பட்டு மறைத்தலாலும் விலகி வெளிப்படுத்தலாலும் கொள்ளப்படுவது. உரு வகை — வகையீற்று வினையெச்சம். துடைத்தற்ஞெழிற் கேற்ப மாசுதீர்த்தலாகிய பயனைப் பெற்ருனென்பது போதர 'தேசுலாம்பரிதி' எனவும், பூரண சந்திரனென் பது போதர 'கலைவெண்டிங்கள்' எனவும் கூறினுர்.

ஆகாயத்தையளாவியுயர்ந்த தெங்குகள் காற்று மோதுதலாலசைதல், முன் எவராலாயினுந் துடைக்கப்படாமையானன்ருே சந்திரன் தன் மேனியிற் களங்க முடையனுயினன்; அவன் போலக் களங்கமுரு வண்ணஞ் சூரியனை யான் புனிதப் படுத்துவேன் என்று பூமிதேவி சிந்தித்துத் தன்கையை நீட்டித் துடைத்தல்போலும் என்பது கருத்து. தென்னைகள் கைபோலுமென்க. (37)

வாசநீள் பொதும்பரின் மைந்தர் மாதர்கள்
காசுநூன் மேகலை பரியக் கைவளை
பூசலிட் டல்மரப் புணருஞ் செய்கைகண்
டாசைமிக் கழுங்குவ பிரிந்த வன்றிலே.

இ—ள்: வாசம் நீள் பொதும்பரில் — வாசனை மிகுந்த பூஞ்சோலைகளில், மைந்தர் மாதர்கள் — காளையர்களும் மங்கையர்களும், காசு நூல் மேகலை பரிய கைவளை பூசல் இட்டு அலமர புணரும் செய்கை — (அரையிலுள்ள) பொன்னு ணிற் கோக்கப்பட்ட மேகலாபரணம் நழுவவும் கையில் இறுகத்தரிக்கப்பட்ட வளையல்கள் நெகிழ்ந்து ஒன்ருேடொன்று தாக்கிச் சுழலவும் சேருந்தன்மையை, பிரிந்த அன்றில் கண்டு — சேவலைப் பிரிந்திருக்கும் பெடையன்றில் பார்த்து, ஆசை மிக்கு அழுங்குவ — காமமிகுந்து கவலைப்படுவன. எ—று.

ஏ அசை. காசு நூன்மேகலை; — பொன்னூலாலிழைக்கப்பட்ட நாணில் மணி களைக் கோத்தியன்ற ஏழு கோவையுடையதோரணி. எண்கோவை யென்பாரு முளர். பொதும்பரில் புணரும் செய்கை என இயையும். மேகலைபரிய கைவளை பூசலிட்டலமர என்பவற்றை ஏற்புழிக் கோடலான் மகளிர்க்கே கொள்க. மேனி வாடுதலாலிவை நிகழ்வனவென்க. கலவி நிகழ்ச்சியைக் கண்டவழிக் காமமேலிடு தல் பிராணிகளனைத்திற்கு மியல்பாயினும் பிரிவாற்ருதவழி இறந்துபடுவதன் றிலாதலின் அதனைக் கூறினுர்,

மதனுக்குப் படை வீடாந் தன்மை யுடையன வென்பது போதர 'வாசநீள் பொதும்பர்' எனவும், கரை கடந்த காமக்கடலி லாழ்ந்து உடலிரண் டுயிரொன் றெனும்படி மனமொன்றிப் புணர்ந்தன ரென்பது போதர மேகலை பரியக்கைவளை பூசலிட்டலமரப் புணரும்' எனவும் விசேடித்தார். (38)

கானுலா நந்தன வனமுங் காரென
வானுலாந் தண்டலை மருங்கும் வைகலும்
வேனிலா னன்னவர் மகளிர் மேயினுர்
ஊனுலாங் குரம்பையு ளுயிருற் றென்னவே.

இ—ள்: வேனிலான் அன்னவர் மகளிர் — மன்மதன் போன்ற (அழகுமிக்க) ஆடவர்களும் பெண்களும், கான் உலாம் நந்தன வனமும் — வாசனை பொருந்திய பூந்தோட்டங்களிலும், கார் என வான் உலாம் தண்டலை மருங்கும் — மேகஞ் செறிதல்போல ஆகாயத்திற் றழை பொதுளிய சோலைகளிலும், வைகலும் —

நாடோறும், ஊன் உலாம் குரம்பை உள் உயிர் உற்று என்ன மேயினர் — தசை பொருந்திய உடலின் கண்ணே உயிர் ஒன்றுபட்டிருந்தாற் போலச் சேர்ந்திருந் தார்கள் எ—று.

ஏ அசை, உலாவும் என்பன ஈற்றயலுயிர் மெய்கெட்டு நின்றன. நந்தன வனம்: மலர்மரங்களையுடைய வனம். தண்டலை: மலருடன் காய் கனிகளையுந் தரும் மரங்களையுடைய வனம். தண்-தலை=குளிர்ந்த இடம். வேனிலான்—வேனிற் பருவத்தைத் (தனதரசியற்காலமாக) உடையவன். குரம்பை - கூடு. உடம்பைக் கூடென்று சொல்வதை ''எல்லாப்படியாலு மெண்ணிஞலிவ்வுடம்பு - பொல்லாப் புழுமலி நோய்ப்புன் குரம்பை'' என்னும் ஔவையார் வாக்கானுமறிக. உற் றென்ன - தொகுத்தல். 'நந்தன வனமும் தண்டலை மருங்கும் மேயினர்' என இயையும். மருங்கு—ஏழனுருபு.

கலவிக்கேற்ற ஏகாந்தத்தானமென்பது போதர 'காரென வானுலாந்தண்டலை' எனவும், உடலுமுயிரும்போல் மனமொன்றுபட்டுச் சேர்ந்தன ரென்பது போதர 'ஊனுலாங் குரம்பையுளுயிருற்றென்ன மேயினர்' எனவும் கூறினர். புணருங்கால் இருவர் மனமும் ஒற்றுமைப்படுதற்கு உடலுயிர்களின் ஒற்றுமையையுவமித்தலை

''ஒருமை யுற்று டலுயிர் எனும்படி
ஒண்டழற் கெதிர் மன்றல்செய்
கருமை யுற்றகண் மங்கை கொங்கை
கலந்து காம நுகர்ந்து''

என்னும் ஏகாதசிப் புராணச் செய்யுளானுமுணர்க. பூந்தோட்டங்களிலுஞ் சோலை களிலும் ஆடவர்களும் பெண்களுமமைந்திருத்தல் உடலினுள் உயிரமைந்திருத்தல் போலுமென உரைப்பினுமாம். (39)

அசும்புறு மகன்புன லருத சூழலின்
விசும்புற வோச்சிய விரைமென் றாதினாற்
பசும்பொனிற் குயிற்றிய பதியிற் றூபிகைத்
தசும்பெலாம் வெள்ளிய தாக்குந் தாழையே.

இ—ள்: அசும்பு உறும் அகன் புனல் அருத சூழலின் — சேறுபொருந்திய பெரு வெள்ளம் (எஞ்ஞான்றும்) ஒழியாத இடங்களிலுள்ள, தாழை — தாழைமரங்கள், விசும்பு உற ஓச்சிய விரை மென் தாதினால் — ஆகாயத்திற் செல்லும்படி வீசிய வாசனை பொருந்திய மெல்லிய பராகத்தினால், பசும் பொனில் குயிற்றிய பதியில் தூபிகை தசும்பு எலாம் — மாற்றுயர்ந்த பொன்னினாற் செய்த சுவர்க்கலோகத் திலுள்ள தூபியாகிய குடமுழுவதையும், வெள்ளியது ஆக்கும் — வெண்ணிற முடையதாகச் செய்யும் எ—று.

ஏ அசை. பொனில் எலாம் என்பன தொகுத்தல். குயிற்றிய என்னும் பெய ரெச்சம் பதியென்னுஞ் செயப்படுபொருட் பெயர்கொண்டது. தாதினால் வெள் ளியதாக்கும் எனவியையும்.

சேற்றுடன் கூடிய வெள்ளம் எஞ்ஞான்றுங் குறைவின்றி நிற்றலால் தாழை கள் தழைத்து வளர்ந்து மலர, அம்மலர்களின் பராகங்கள் உதிர்ந்து காற்றினு லள்ளுண்டு பொன்னகர்க்கணுள்ள மாளிகை முதலியவற்றின் தூபிகைக் குடங் களில் இடைவெளியின்றிப் பற்றி வெள்ளியெனக் காண்பிக்கும் என்பது கருத்து.

உற்றிட வரிதவ னுழவர் நீத்ததார்
சுற்றிடுந் தாண்மிசை யிடறுஞ் சூல்வளை
தெற்றிடும் பூங்கொடி புடைக்குஞ் சேலினம்
எற்றிடுந் தேம்பழ மிழுக்குந் தேன்களே.

இ—ள்: அவண் உற்றிட அரிது — அத்தொண்டை நாட்டின் கண்ணே சஞ்சரிக்க இயலாது (ஏனெனில்), உழவர் நீத்த தார் தாள் மிசை சுற்றிடும் — மள்ளர்கள் தரித்துக் கழித்த பூமாலைகள் கால்களிற் சூழ்ந்துகொள்ளும்; சூல்வளை இடறும் — கருக்கொண்ட சங்குகள் இடறும்; பூ கொடி தெற்றிடும் — மலர்களையுடைய கொடிகள் தடக்கும்; சேல் இனம் புடைக்கும் — கயல் மீன் கூட்டங்கள் அடிக்கும்; தேம்பழம் எற்றிடும் — தெங்கம் பழங்கள் எற்றும்; தேன்கள் இழுக்கும் — தேன் வெள்ளங்கள் வழுக்கும் எ—று.

ஏ அசை. இடு - பகுதிப் பொருள் விகுதி, அரிது என்பது ஈண்டு இயலாமையில் வந்தது. நீத்த என்னும் பெயரெச்சம் தார் என்னும் செயப்படு பொருட் பெயர்கொண்டது. தாண்மிசையென்பதைப் பின்னைய தொடர்களுக்கு மியைத்துப் பொருளுணர்க. இடறுதல்—நிலமென்றெண்ணிச் சங்கின்மேல் மிதிக்கும்போது அவைகள் காலூன்றுதற்கேற்ற நிலைக்களமாகாமையாற் புரளக் கால்நிலை பெயர்தல். எற்றுதல் - முட்டிய விசையினுற் றள்ளுண்டு சிறிது தூரம் பாய்தல். தேம்பழமென்பதற்கு இனிமையாகிய பழமெனப் பொருள் கூறுவாருமுளர், அஃதித்துணைச் சிறப்பின்று; கான் முட்டியவுடன் சிதைவுபெறத்தக்க பழங்களை எற்றிடும் எனக் கூறல் பொருந்தாமையின். (41)

கானிமிர் கந்திகள் கான்ற பாளைமேன்
மீனினம் பாய்தலுஞ் சிதறி வீழ்வுறு
வானதோர் மருதவைப் படையுந் தன்மைய
வானுறு தாரகை வழுக்கிற் றொக்குமால்.

இ—ள்: கால் நிமிர் கந்திகள் கான்ற பாளை மேல் — அடியுயரப்பெற்ற கமுக மரங்கள் ஈன்ற பாளைகளின் மேல், மீன் இனம் பாய்தலும் — மீன் கூட்டங்கள் பாய்ந்தவுடன், சிதறி வீழ்வுறு — (அப்பாளையிலுள்ள மலர்கள்) உதிர்ந்து விழுந்து, ஆனது ஓர் மருத வைப்பு அடையும் தன்மைய — சிறந்த மருதநிலங்களைச்சாருந் தன்மையினை யுடையன (ஆதலால் அவை), வான் உறு தாரகை வழுக்கிற்று ஒக்கும் — ஆகாயத்திற் பொருந்திய நக்ஷத்திரங்கள் தவறி வீழ்தலைப் போலும் எ—று.

ஓர் ஆல் அசைகள். கான்ற என்னும் பெயரெச்சம் பாளை என்னும் செயப்படு பொருட் பெயர் கொண்டது. மீனினம் — மீனினது தொகுதி. பாய்தலும் — உம்மீற்று வினையெச்சம். வழுக்கிற்று — வினைமுற்றுத் தொழிற்பெயர். (42)

மாகுல வல்லியின் மஞ்ஞை யாடல்போற்
கோகில மார்தருக் குழாத்தி னூசன்மேற்
பாகுல வின்சொலார் பனிக்கு மெல்லிடைக்
காகுலம் பிறர்கொள மகிழ்வி னுடுவார்.

இ—ள்: பாகு உலவு இன்சொலார் — பால்போன்ற [மாதுரியமாகிய] சொற்களைப் பேசுகின்ற பெண்கள், கோகிலம் ஆர் தருகுழாத்தின் ஊசல்மேல் — குயில்

கள் நிறைந்துள்ள மரங்களின் ஞெருகுதிகளிற் கட்டப்பட்ட ஊஞ்சல்களின்மீது (இருந்து), பிறர் பனிக்கும் மெல் இடைக்கு ஆகுலம் கொள — (தம்மைக் கண்ட) பிறர், நடுங்குகின்ற மென்மையாகிய இடையின் பொருட்டு வருத்தமுற, மா குல வல்லியில் மஞ்ஞை ஆடல்போல் மகிழ்வின் ஆடுவார் — பெரிய கூட்டமாகிய கொடிகளில் மயிலாடுதல்போல உவகையுடன் ஆடுவார்கள் எ—று.

குலம் — கூட்டம். குலவல்லி என்பதை வல்லிக்குலமென மாற்றியுரைப்பினு மாம். இருந்து என்பது சொல்லெச்சம். உலவு ஈண்டு உவமவுருபு. இது 'போலப் புரைய' என்னும் நன்னூற் சூத்திரத்துப் பிறவுமென்றதனு லமையும். சொலார்— தொகுத்தல். 'ஆகுலம் பிறர்கொள மகிழ்விஞடுவார்' என்றதனுல் அப்பெண் கட்கு ஆகுலமின்றென்பது பெறப்பட்டது. செயவெனெச்சங் காரியப்பொருளில் வந்தது. இடையின் பொருட்டு வருந்தலாவது: தன முதலிய பாரங்களைத் தாங்கலாற்று தொசியுமியல்பிற்றுகிய மெல்லிடை ஊஞ்சலாடுதலா லென்படுமோ வென்றிரங்கல். ஊஞ்சலுக்குக் கொடிகளையும் பெண்களுக்கு மயிலையு முவமித்தார். பால்போன் மாதுரியமாகப் பேசுகின்ற அம்மகளிர் மகிழ்தற்கேற்ப ஆடுந்தோறுங் குயில் கூவப்பெறுவன வென்பார், 'கோகிலமார்தருக் குழாம்' என்றுர். மகிழ் வின் என்பதில் ஐந்தனுருபு உடனிகழ்ச்சிப் பொருள்பட மூன்றனுருபாகத் திரிக் கப்பட்டது. (43)

## வேறு

ஊச லுற்றவர் குழைக்குடைந் திடுதலா லுவரை
வீச லொப்பன வாடுதல் கிளிமொழி வெருவிப்
பேச லொப்பன வீழ்ந்திலர் பிழைத்ததீ தென்னு
ஏச லொப்பன கோகிலப் பறவைக ளிசைத்தல்.

இ—ள்: ஊசல் ஆடுதல்—(முன்னர்க் கூறியதன்மையமைய) ஊஞ்சல்கள் ஆடு தல், உற்றவர் குழைக்கு உடைந்திடுதலால் உவரை வீசல் ஒப்பன — தம்மிடத் திருந்த பெண்களது காதுக்குத் தாம் உவமையாகாது தோற்றலினுல் அந்தப்பெண் களை (வேறிடத்தகற்றுமாறு) வீசுதலைப்போல்வன, கிளிமொழி—அங்குள்ள கிளிகள் பேசுதல், வெருவி பேசல் ஒப்பன — அஞ்சிப்பேசுதல் போல்வன; கோகில பறவை கள் இசைத்தல் — குயிற்பறவைகள் கூவென்று ஒலித்தல், வீழ்ந்திலர் ஈது பிழைத் தது என்னு ஏசல் ஒப்பன — (ஊஞ்சல் சினந்து வீசியபோதும் பெண்கள்) வீழ்ந் திலார் இவ்வூஞ்சலே (தன்கருத்து முற்றுது) தவறிற்றென்று பழித்தல் போல் வன எ—று.

ஊசலென்னுஞ் சொல்லை ஊஞ்சலென்றும் வழங்குப. உகரச் சுட்டுத் தன் னகத்திருப்போ ரென்பதை யுணர்த்திற்று. தொழிற்பெயரும் பாற்பொதுமையன வாதலின் பன்மை வினைமுற்றைப் பயனிலையாகக்கொண்டன. மொழி—முதனிலைத் தொழிற்பெயர். கோகிலப்பறவை — இருபெயரொட்டு.

கிளிகள்பேசக் குயில்கள் கூவப் பெண்கள் சோலைகளில் ஊஞ்சலாடுகின்றனர். அப்போது ஊஞ்சலாடுதல் 'இப்பெண்கள் தமது காதழகால் நமதழகைக் குறைத்து வென்றி பெற்றுப் பகைஞராயினர்; இவரை நாஞ்சுமந்து கொண்டிருப்பது தகாது' என்று நினைத்து அப்பெண்களைத் தூரத்தில் விழும்படி வீசுதல்போன்றது. கிளி கள் பேசுதல் 'ஐயகோ! இவ்வூஞ்சல் பெண்களை வீசுகின்றதே என்படுவரோ' என்று அச்சமொழி பேசுதல் போன்றது. குயில்கள் கூவுதல் 'ஊஞ்சலெறிந்த

போதும் பெண்கள் வீழ்ந்திலார் ஊஞ்சலே பிழைபட்டது' என்று பழிக்குங் குறிப்புப் போன்றது என்பது கருத்து.

காதிற்கு ஊஞ்சலுபமானதென்பதை ''காதிற்கு — வள்ளை - ஒப்பரியகத்தரிக்கை யூசலாம்'' என உபமான சங்கிரகங் கூறுதலானறிக. (44)

கூர்ப்புக் கொண்டகட் கொடிச்சியர் குளிர்புனங் காப்போர்
ஆர்ப்புக் கொண்டுகை விசைத்தெறி மணிக்கல்வந் தணையச்
சார்ப்புக் கொண்டதஞ் சிறகரால் விலக்கியத் தடத்துப்
பார்ப்புக் கொண்டு கொண்டெழுவன தோலடிப் பறவை.

இ — ள்; குளிர் புனம் காப்போர் கூர்ப்பு கொண்ட கண் கொடிச்சியர் — குளிர்ந்த தினைப்புனத்தைக் காவல் செய்பவராகிய கூர்மை பொருந்திய நோக்கத்தையுடைய குறத்தியர்கள், ஆர்ப்பு கொண்டு கை விசைத்து எறி மணி கல் வந்து அணைய — சத்தமிட்டுக் கையினால் வீசியெறிகின்ற இரத்தினமாகிய கவண் கற்கள் வந்து கிட்ட, தோல் அடி பறவை — தோல் பொருந்திய கால்களையுடைய பறவைகள், சார்ப்பு கொண்ட தம்சிறகரால் விலக்கி—இரு புடையுஞ் சார் தலையுடைய தமது சிறகினால் அவற்றை அகற்றி, அ தடத்து பார்ப்பு கொண்டு கொண்டு எழுவன — அந்தத் தடாகத்தில் வைக்கப்பட்ட தங்குஞ்சுகளை எடுத்தெடுத்துக்கொண்டு கிளர்வன எ—று.

கூர்ப்பு — பண்புப்பெயர். குளிர் எறி என்பன வினைத்தொகை. காப்போர் என்னும் வினையாலணையும்பெயர் கொடிச்சியர்க்கு விசேடணமாய் நின்றது. ஆர்ப்புக்கொண்டு ஒருசொல். மணிக்கல் — இருபெயரொட்டு. சிறகு சிறகர் எனப் போலியாயிற்று.

கதிரைக் கவரும்பொருட்டுப் புனத்தில் நாற்றிசைகளிலும் வரும் பறவைகளையும் மிருகங்களையுந் தவறாது காண்பனவென்பார் 'கூர்ப்புக்கொண்ட கண்' எனவும், செழிப்புடைய தென்பார். 'குளிர்புனம்' எனவும், எத்துணைத் தூரத்தினுஞ் சென்று பறவைளைத் தாக்குமாறு எறிந்தன ரென்பார். 'விசைத்தெறி—கல்' எனவும், வாவற்பறவையினிறகுபோன் மென்மையுடையதும் சுருங்குதற்கும் விரிதற்கும் ஏற்றதுமாகிய தோலைக் காலினுடைய தாரா முதலியனவென்பார் 'தோலடிப் பறவை' எனவுங் கூறினர். தோலடிப்பறவை — அன்னமெனினுமாம்.

இச்செய்யுளால் தினைப்புனச் சிறப்பும் இரத்தின மிகுதியும் தடாகச் சிறப்புங் குறிக்கப்பட்டன. (45)

### வேறு

கடற்பரு கியமுகில் பெய்யுங் காட்சிபோல்
அடற்பெரு மேதிக ளனைத்தும் புக்குராய்த்
தடப்புனல் வறிதெனப் பருகித் தம்முலைக்
குடத்திழி பாலினாற் குறையைத் தீர்க்குமே.

இ—ள்: கடல் பருகிய முகில் பெய்யும் காட்சிபோல் — சமுத்திர நீரைக் குடித்த மேகங்கள் மழையைப் பெய்யுந் தன்மைபோல, அடல்பெரு மேதிகள் அனைத்தும் புக்கு உராய்—வலிய பெரிய எருமைகளெல்லாம் புகுந்து செறிந்து,

தடபுனல் வறிது என பருகி — தடாகத்திலுள்ள நீரை அற்பமாயிற்றென்னும்படி குடித்து, தம் முலை குடத்து இழி பாலினுல் — தமது மடியாகிய குடத்தினின்றுஞ் சிந்துகின்ற பாலினுல், குறையை தீர்க்கும் — அக்குறையை நீக்கும் எ—று.

ஏ அசை. கடல் ஆகுபெயர். உராய் — உரைந்து என்பதன் விகாரம். இதற்கு நீரைக் கலக்கி எனவும் பொருள் கூறுவர். முலைக்குடம்—ரூபகம். மடியி னின்றும் பால் சிந்துதல் மழைபெய்தல் போலுமென்க.

மேகங்கள் கடலிலுள்ள உவர் நீரைப் பருகி நன்னீராக்கிப் பெய்து அக்கடலை நிறைப்பதுபோலப் பெண்ணெருமைகள் தடாக நீரைப் பருகித் தம்முலையினின்று பாலைச்சிந்தி அக்குறையைத் தீர்ப்பன என்பது கருத்து.

ஈன்றணித்தாய எருமைகள் சில கன்றை நினைத்தவழித் தானைகப் பால்சிந்தப் பெறுவன. இதனை

"ஈர நீர்படிந் திந்நிலத் தேசில
கார்க ளென்ன வருங்கரு மேதிக
ளூரி னின்றகன் றுள்ளிட வுண்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே"

என்னும் இராமாயணச் செய்யுளாலு முணர்க.

"மோட்டெருமை வாவிபுக முட்டுவராற் கன்றென்று
வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே."

எனப் பிறர் கூறியவாறே தடாகத்திலுள்ள மீன்கள் பாய்ந்து மடியில் முட்டுத லாற் பாலுகுப்பன வென்பாருமுளர்.

இச்செய்யுளால் எருமைகளின் சிறப்புக் கூறப்பட்டது. (46)

பாட்டிய லளிமுரல் பதுமக் கோயிலில்
நாட்டிய நிமலன்மு னந்தி நீரிடை
மாட்டிய பல்பெருஞ் சுடரை மானுமாற்
கோட்டுயர் தடந்தொறுங் குவளை பூத்தவே.

இ—ள்: கோடு உயர் தடம் தொறும் குவளை பூத்த — கரை யுயரப்பெற்ற தடாகங்கடோறுஞ் செங்குவளைப் பூக்கள் மலர்ந்திருத்தல், அளி பாட்டு இயல் முரல் பதுமகோயிலில் நாட்டிய நிமலன் முன் — வண்டுகள் பண்ணைப் பாடுதற் கிடமாகிய தாமரையின் பெயரியைந்த கோயிலின்கண்ணே [திருவாரூரின்கண்ணே] தாபிக்கப்பெற்ற மலரகிதராகிய சிவபெருமானது சந்நிதானத்தில், நந்தி—நமிநந்தி யடிகள், நீர் இடை மாட்டிய பல்பெரும் சுடரை மானும் — நீரின்கண்ணே ஏற் றிய பல பெரிய தீபங்களைப் போலும் எ—று.

ஆல் ஏ அசைகள்; பாட்டியல் — பாடலின்றன்மை=பண். முரல் என்னும் வினைத்தொகை பதுமமென்னும் பெயர்கொண்டது. பதுமக்கோயில்=கமலாலயம்; இது இலக்குமியாற் பூசிக்கப்பட்ட தலமெனப் பொருள்படும். நாட்டிய என்னும் பெயரெச்சம் நிமலன் என்னுஞ் செயப்படு பொருட்பெயர் கொண்டது. நிர்மலன் என்னும் வடமொழியை நிமலன் எனவும் வழங்குப. நந்தி முதற்குறை. கோடுய ரெனற்பாலது கோட்டுயரென டகரவொற் றிரட்டித்ததை "நெடிலோ டுயிர்த் தொடர்க் குற்றுகரங்களுட் டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே" என்னும் நன்னூற் சூத்திரத்திலுள்ள 'மிகவே' என்பதனுலமைக்க. குவளை — ஆகு பெயர். பூத்த—வினைமுற்றுத் தொழிற்பெயர்.

அந்திக் காலத்தின் மலர்தலாலும் செந்நிறமுங் குமிழ்த்த வடிவு முடைமை யாலும் குவளை மலர்க்குத் தீபத்தை யுவமித்தார்.

**நமிநந்தியடிகள் தண்ணீரில் விளக்கேற்றிய சரித்திரம்:**—சோணாட்டில் ஏமப்பே ரூரில் அந்தணர் குலத்திற் பிறந்த நமிநந்தியடிக ளொருநாள் திருவாரூர்க் கெழுந் தருளி வன்மீக நாதரைத் தரிசித்த பின் அங்குள்ள அரநெறி யப்ப ராலயத்திற் சுவாமி தரிசனஞ் செய்யப் புகுந்தபோது தீபங் குறைந்தமையால் மிகுதியாகத் தீப மேற்றித் தரிசிக்க வேண்டுமென்று சிந்தித்துச் சமீபத்தி லிருந்த வீடுகளிற் புகுந்து தீபமேற்ற நெய்தாருங்கள் என்று கேட்டனர். அங்குள்ளார் புறச் சமயிகளாகிய சமணராதலால் நெய் கொடாராய் "நுங்கடவுள் கையிற்றானே தீப மிருக்கின் றதே! நீர் தீபமேற்ற வேண்டிய தென்னை? வேண்டுமானாற் கமலாலய தீர்த்த சலத்தை யள்ளி நிறைத்துத் தீப மேற்றுவீராக" என்று பரிகாசஞ் செய்தனர். அதுகேட்ட நமிநந்தியடிகள் மனம் நொந்து சுவாமி சந்நிதியிற் போய் நிற்ப, "இந்தக் குளத்து நீரை யள்ளி வார்த்து விளக்கெரிப்பாயாக" என்று ஓரசரீரி வாக்குப் பிறத்தது. நமிநந்தியடிகள் மனமுவந்து திருக்குளத்திலுள்ள தண்ணீரை மொண்டுவந்து அகல்களினிறைத்து விளக்கெரித்தனர் என்பதாம். (47)

கலனிடைத் தருவதுங் கானத் துள்ளதும்
பொலனுடைப் பொருப்பிடைப் பொருளு மல்லது
நலனுடை நாட்டவர் நயத்த லின்றியந்
நிலனிடைப் பொருள்பகர் வழக்க நீத்ததே.

இ—ள்: கலன் இடை தருவதும்—மரக்கலங்களிலேற்றிக்கொண்டுவருந் திரவி யத்தையும், கானத்து உள்ளதும்—காடுபடுதிரவியத்தையும், பொலன் இடை பொருப்பு இடை பொருளும்—அழகினையுடைய மலையிலுண்டாகின்ற திரவியத் தையும், அல்லதும்—நகர்படுதிரவியத்தையும், நலன் உடை நாட்டவர் நயத்தல் இன்றி—நன்மையினையுடைய அத்தொண்டை நாட்டிலுள்ளார் விரும்புதலின்மை யால், அ நிலன் இடை பொருள் பகர் வழக்கம் நீத்தது—அந்தத் தொண்டை நாட்டின் கண்ணே திரவியங்களைக் கூறிவிற்கின்ற வழக்கம் ஒழிக்கப்பட்டது. எ—று.

நாடுபடுதிரவியங்கள் போலக் கடல்படுதிரவிய முதலிய பிற பொருள்களும் அந் நாட்டினிறைந்திருத்தலால், பொருள்களைக் கூறி விற்றலும் மாற்றலுமாகிய வழக்கங்கள் அங்குள்ளாரால் ஒழிக்கப்பட்டன என்பது கருத்து.

ஏ அசை. கலம் நலம் நிலம் என்பனவற்றினிறுதியிலுள்ள மகரவொற்றுக்கள் போலியாய் நின்றன. பொன் என்பது "பொன்னென்கிளவியீறு கெடமுறையின்—முன்னர்த்தோன்றும் லகாரமகாரஞ்—செய்யுண்மருங்கிற்றொடரியலான "என்னுந் தொல்காப்பியச் சூத்திரவிதிப்படி பொலம் என்றானது; இதனைப் பிற்காலத்து நிகண்டாசிரியர் பொன்னின் பரியாய நாமங்களுளொன்றாகச் சேர்ந்தனர்; இறுதி மகரம்போலியாயிற்று. உடைய இரண்டும் ஈறுதொக்கன. இன்றியென்னும் வினை யெச்சம் ஏதுவில்வந்தது. நீத்தது என்பதிற் படுவிகுதி தொக்கது.

செல்வம் விளைவு வளமிகுதி செங்கோன்மை நோயின்மை குறும்பின்மை எனப் படும் நாட்டமைதியாறும் பொருந்தியவென்பார் 'நலனுடை' என்றார்.

கடல்படுதிரவியம்:—உப்பு பவளம் முத்து சங்கு ஒக்கோலை என்பன. காடு படுதிரவியம்:—அரக்கு இருல் தேன் மயிற்பீலி நாவி என்பன. மலைபடுதிரவியம்:—

மிளகு கோட்டம் அகில் தக்கோலம் குங்குமம் என்பன. நகர்படுதிரவியம்:— கண்ணுடி பித்தன் மந்தி யானை அரசன் என்பன. நாடுபடுதிரவியம்:—செந்நெல் செவ்விளநீர் சிறுபயறு வாழை கரும்பு என்பன. இவற்றை

அரக்கிரு வினிய தேனே யாய்மயிற் பீலி நாவி
நெருக்கிய காட்டி லுற்ற நெடுந்திர வியங்க ளைந்தாம்
திரைக்கடற் படுவ வுப்புச் செய்யவொண் பவளம் வெண்முத்
திரைத்தெழு சங்கொக் கோலை யிவ்வைந்து மென்ன லாமே.

எனவும்

செந்நெல் செவ்விளநீர் மற்றைச் சிறுபய றுடனே வாழை
கன்ன லிவ்வைந்து நாட்டிற் கருதிய திரவி யப்பேர்
மின்னு கண்ணுடி பித்தன் வெந்திறன் மந்தி யானை
மன்னவ னகரி யைந்து வருந்திர வியங்க ளென்ப

எனவும்

கறியொடு கோட்ட மிக்க காரகி லொடுதக் கோல
நறியகுங் குமமைந் தென்ப நன்மலைத் திரவி யப்பேர்

எனவும் வருஞ்சூடாமணி நிகண்டானுணர்க. (48)

யாழ்க்கையர் பொருநருக் கிறைவ ரேழிசை
வாழ்க்கைய ரளவையின் வகுத்த பாடலைக்
கேட்குநர் நன்றென மருப்புக் கிம்புரிப்
பூட்கைக ளுதவுவார் பொதுவி றோறுமே.

இ—ள்: யாழ் கையர்—யாழையேந்திய கையினையுடைய பாணர்களும், பொருநருக்கு இறைவர் — கூத்தர்களுக்குத் தலைவர்களும், ஏழு இசை வாழ்க்கையர் — சப்தசுரங்களையும் பாடுதலாற் சீவிப்பவர்களும், அளவையின் வகுத்த பாடலைக் கேட்குநர்—வரையறைப்படி பாடிய பாடல்களைக் கேட்கின்ற பிரபுக்கள், நன்று என—இது நன்றாயிருக்கின்றதென்று புகழ்ந்து, பொதுவில் தோறும்—சபைகடோறும், மருப்பு கிம்புரி பூட்கைகள் உதவுவார்—கொம்பின் கண்ணே கிம்புரியையுடைய யானைகளைப் பரிசாகக் கொடுப்பார்கள். எ—று.

ஏ அசை. ஏழிசையாவன: குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரம் என்பன. அளவை: பரதசாஸ்திரத்திற் கூறிய காலம் தாளம் தானம் முதலியன தவறுபடாமை. மருப்புக்கிம்புரி என்பதைக் கிம்புரிமருப்பு எனமாற்றியுரைப்பினுமாம். பொதுவில்—பொதுவாகிய இல்லம்.

பேரியாழ் சகோடயாழ் மகரயாழ் செங்கோட்டியாழ் என்னும் நால்வகை யாழையும், பண்ணல் பரிவட்டணை ஆராய்தல் தைவரல் செலவு விளையாட்டு கையூழ் குறும்போக்கு என்னும் தொழில் விதங்களெட்டு மமையப் பாடிக் கை வந்தவ ரென்பார் 'யாழ்க்கையர்' எனவும். தாளம் அபிநயம் முதலியவற்றுற் றவருது நடித்து, மற்றைய கூத்தர்களை யெல்லாம் வென்று விருதுபெற்றவ ரென்பார். 'பொருநருக் கிறைவர்' எனவும், மிடற்றுற் சங்கீதம் பாடுதலையே தமது தொழிலாகக்கொண்டு பெரும்பொருளீட்டி வாழ்பவரென்பார். 'ஏழிசை வாழ்க்கையர்' எனவும், விலையுயர்ந்த யானைகளென்பார், 'மருப்புக் கிம்புரிப் பூட்கைகள்' எனவும் கூறினர். (49)

கஞ்சிதேய்ப் புண்டகில் கமழும் பூந்துகில்
வஞ்சிதேய்ப் புண்டன மருங்கு லாரடி
பஞ்சிதேய்ப் புண்டன பணியத் தாக்கலாற்
குஞ்சிதேய்ப் புண்டன குமரர் கூட்டமே.

இ—ள்: கஞ்சி தேய்ப்புண்டு அகில் கமழும் பூ துகில்—கஞ்சிப்பசை தேய்க்கப்பட்டு அகிற்புகை யூட்டப்பெற்றுக் கமழுகின்ற பொலிவாகிய ஆடையையணிந்த, வஞ்சி தேய்ப்புண்டு அன மருங்குலார்—வஞ்சிக்கொடி (முன்னையினும் மென்மையுறத்) தேய்க்கப்பட்டாற்போன்ற இடையினையுடைய பெண்களது, பஞ்சி தேய்ப்புண்டன அடி—செம்பஞ் சூட்டப்பட்டனவாகிய கால்கள் பணிய தாக்கலால்—வணங்குந்தோறும் உதைத்தலினுல், குமரர் கூட்டம் குஞ்சி தேய்ப்புண்டன—காளையர் கூட்டம் குடுமிதேயப்பெற்றன எ—று.

ஏ அசை. உண்—செயப்பாட்டு வினைப்பொருளுணர்த்த வந்தது. அகில்—ஆகுபெயர். வஞ்சி—ஓர் கொடி. அன—தொகுத்தல். மூன்றுமடியில் தேய்ப்புண்டன—வினைமுற்றுப் பெயரெச்சம்; வினைமுற்றாகக்கொண்டு அடிக்குப் பயனிலையாயிற்றெனினுமிழுக்காகாது; அவ்வாறு கொள்ளின் தாக்குதற்கு அடியென்னும் வினை முதல் வருவிக்க.

''மனைவி யுயர்வுங் கிழவோன் பணிவு
நினையுங் காலைப் புலவியு ளுரிய''

என்றுராசிரியர் தொல்காப்பியனுராதலின், புலவிக்கண் ஆடவர்பணிதல் இழுக்காகாதென்க. மகளிரது கால்களிற் றேய்க்கப்பட்ட பஞ்சு குடுமியிற்றேய்க்கப்பட்டன எனப் பொருள் கூறினுமாம். (50)

அன்றிலம் பெடைகளை யணுகி யன்னைகேள்
நன்றென வினையின்மே னடந்த நாயகர்
இன்றுவந் திடுவரிங் கெம்பொ ருட்டினல்
ஒன்றுநீ யிரங்கலென் றுரைக்கின் றுர்சிலர்.

இ—ள்: சிலர் அன்றிலம் பெடைகளை அணுகி—சிலபெண்கள் (தம்மைப்போலப் பிரிந்து புலம்புகின்ற) பெடையன்றில்களைச் சமீபித்து, அன்னை கேள்—தாயே கேட்பாயாக, நன்று என வினையின் மேல் நடந்த நாயகர்—நல்லதென்று கருதி வினைவயிற் பிரிந்துசென்ற (எங்கள்) கணவர், இன்று இங்கு வந்திடுவர்—இற்றைத் தினத்தில் இங்கே வந்து சேர்வார் (ஆதலால்); எம் பொருட்டினுல் நீ ஒன்றும் இரங்கல் என்று உரைக்கின்றுர்—எங்கள் காரணமாக நீ சிறிதேனும் புலம்பற்க என்று சொல்லுகின்றுர்கள் எ—று.

தங்கணவர் போர்வயிற் பிரிந்துசென்று பலநாட்கழிந்தமையானும் வருநாளணுகியமையானும் , விரகமேலிட்ட சிலபெண்கள், சேவலைப்பிரிந்து வருந்தும் பெடையன்றிலைத் தமக்காக வருந்துவதென்றெண்ணி அதனையணுகி, 'தாயே! நங் கணவர் இனிக்காலந் தாழ்க்கமாட்டார், இற்றைத்தினத்தில் வருவது திண்ணம் ஆதலால் எமக்காக நீ கவலைப்படுதலையொழி' என இன்சொற் கூறுவரென்பது கருத்து. பிரிவாற்றுமையாற் பெண்கள் வருந்துகின்றனரென்பது குறிப்பு.

ஆணன்றிலைப் பிரிந்திரங்கும் பெடையன்றிலைத் தமக்காகப் புலம்புவனவென்று காமமயக்கத்தாற் சிந்தித்தலின் 'அன்னே' எனவிளித்தனர்; இது மரபுவழுவமைதி. அண்மைவிளியாதலினியல்பாயிற்று. ஒன்று—அற்பமென்னும் பொருளில் வந்தது. (51)

ஆடியல் கருங்கணுஞ் சிவப்புற் றங்கமும்
வாடுவ தாகியே மதன வேர்வுறுக்
கூடிய மகளிருங் குமரர் தங்களை
ஊடிய மகளிரு முலப்பின் றாயினார்.

இ—ள்: ஆடு இயல் கரும் கணும் சிவப்பு உற்று—இமைத்தல் பொருந்திய கரியகண்களுஞ் சிவக்கப்பெற்று, அங்கமும் வாடுவது ஆகி — சரீரமும் வாடப் பெற்று, மதன வேர்வு உறு—காமவேர்வையுண்டாகி, குமரர் தங்களை கூடிய மகளிரும்—காளையர்களைச் சேர்ந்த பெண்களும், ஊடிய மகளிரும் — அவர்களுடன் புலந்த பெண்களும், உலப்பு இன்றுஆயினார் — அந்நாட்டில் அளவற்றவராயினார்எ—று

ஏ—அசை. முன்னைய உம்மைகளிரண்டும் எச்சங்கள். ஆடு முதனிலைத்தொழிற்பெயர். இயலுதல் — பொருந்துதல். கருங்கணும் — தொகுத்தல். குமரர்தங்களை—தாப்பிசை. கண்சிவத்தன் முதலியன காமமீறிக் கணவரைக் கலந்தாரிடத்துக் காணப்படுமடையாளங்கள்;

> ''வாயிற் சிவப்பை விழிவாங்க
> மலர்க்கண் வெளுப்பை வாய்வாங்கத்
> தோயக் கலவி யமுதளிப்பீர் . . . . .''

என்றார் பிறரும். ஆடியல் என்பதற்கு ஆடவர்களைப் பார்வையால் வெல்லுமியல்பையுடைய எனினுமாம். (52)

அகனமர் கணிகைய ரடிகள் சூடியே
முகனுறு முவகையான் முயங்கி யன்னவர்
நகனுறு குறிகொளீஇ நாளுங் காமநூல்
தகைமைசெய் காளையர் தொகுதி சான்றதே.

இ—ள்: அகன் அமர் கணிகையர் அடிகள் சூடி—தம்மனத்திற் குடிகொண்ட பொதுமகளிரது கால்களைச் சிரமேற்புனைந்து, முகன் உறும் உவகையால் முயங்கி—(அதன்மேல்) அவரது முகத்திற்றோன்றும் மகிழ்வினாலே தழுவி, அன்னவர் நகன் உறு குறி கொளீஇ—அப்பெண்களது நகத்தினாலுண்டாகிய குறிகளை ஏற்று, நாளும் காம நூல் தகைமை செய்—தினந்தோறும் மதனுக்மத்திற் கூறிய திறமையையனுசரிக்கின்ற, காளையர் தொகுதி—இளைஞர்களதுதொகை, சான்றது—அந்நாட்டில் மிகுந்தது எ—று.

ஏகாரங்கள் அசைகள். அகம் முகம் நகம் என்பவற்றினிறுதி மகரங்கள் போலியாயின. காளையர்க்கு அகத்தன்பு மிகுந்தவழியும் கணிகையர்க்குப் புறத்தன்பே தோன்றிற்றென்பார் ''அகனமர் கணிகையர்'' எனவும் ''முகனுறுமுவகை'' எனவும் விசேடித்தார். அகம்—பாவமெனினுமாம். கொளீஇ—கொண்டு என்பதன் விகாரம். காமநூற்றகைமை என்றது ஆலிங்கனம் கரணம் முதலியவற்றை. புணரத்தலைப்படுங்கால்

''ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்''

என்ற திருக்குறட்கேற்ப நாயகி ஊடுதலும், நாயகன் ஊடறீர்த்துப் புணர்தலும், அங்ஙனம் புணரும்போது நகக்குறியழுத்துதலும் பிறவும் நிகழ்வது காமநூன்முறை யாதலின் இவ்வாறு கூறினர் (53)

வாளைக ளிகல்புரி வயலும் வாவியும்
பாளையொ டுற்பலம் பதும நாறுமால்
வேளயர் தடங்கணூர் விரைமென் ருளிணை
காளையர் குஞ்சியுங் கரமு நாறுமால்.

இ—ள்: வாளைகள் இகல்புரி வயலும் வாவியும் — வாளைமீன்கள் ஒன்ரோடொன்று போர்செய்கின்ற வயல்களிலுந் தடாகங்களிலும், பாளையொடு உற்பலம் பதுமம் நாறும்—கமுகம் பாளையும் நீலோற்பலமலரும் தாமரைமலரும் கமழும்; வேள் அயர் தடம் கண்ணூர் விரை மென்தாள் இணை—ஆசையை விளைக்கின்ற விசாலித்த கண்களையுடைய மங்கையரது வாசனைகமழுகின்ற மெல்லிய இரண்டு கால்களும், காளையர் குஞ்சியும் கரமும் நாறும்—இளைஞர்களது குடுமியினுங் கைகளினுங் கமழும் எ—று.

ஆல் இரண்டும் அசைகள். வாளைகளிகல்புரி என்பதை வாவியோடு மியைத்துக்கொள்க. உத்பலம் என்னும் வடமொழித் தகரவொற்று றகரவொற்ருயிற்று. உற்பலம் பதுமம் என்பன ஆகுபெயர்கள். ஒடு—எண்ணிடைச்சொல். வேள்—முதனிலைத் தொழிற்பெயர். அயர்தல்—செய்தல். வேளயர் என்றதற்குப் பார்வையினுலே மன்மதனும் மயங்கத்தக்க எனப் பொருள் கூறினுமாம். இப்பொருட்கு உயர்வு சிறப்பும்மை விகாரத்தாற் ருெக்கது.

வயலினும் வாவியினும் பாளை முதலியவை கமழுதல் போலக் காளையரது குடுமிகளிலுங் கைகளிலும் கணிகையரது கால் கமழுமென்பது கருத்து. ஊடறீர்க்கும்படி ஆடவர் வணங்க உதைத்தலினுற் குடுமியிலும், பற்றி வருடுதலாற் கைகளிலும் பெண்களது கால்மணம் பற்றுமென்க, கணிகையர்மேற் காளையர் பேரன்பு வைத் தொழுகின ரென்பது இச்செய்யுளா லுணர்த்தப்பட்டது. தாளிணைகளிற் குஞ்சியும் கரமும் நாறுமெனப் பொருள் கூறுவாருமுளர்.

ஐம்பதாஞ் செய்யுண் முதலிதுகாறும் ஆடவர்களும் பெண்களும் காமித்தலும் கலந்து களித்தலும் வருணிக்கப்பட்டன. (54)

சேவக மணைவன கரிகள் சேனைகள்
காவக மணைவன கலைகள் புள்ளினம்
பூவக மணைவன பொறிவண் டாயிடைப்
பாவக மணைவன பாட லாடலே.

இ—ள்: ஆயிடை—அத்தொண்டை நாட்டில், கரிகள் சேவகம் அணைவன — யானைகள் துயிலிடத்தை அடைவன; சேனைகள் (சேவகம் அணைவன) — சேனைகள் வீரத்தைப் பொருந்துவன; கலைகள் கா அகம் அணைவன—சாத்திரங்கள் காத்தலையுடைய மனத்தை யடைவன; புள்ளினம் (கா அகம் அணைவன)—பறவைக் கூட்டங்கள் சோலைகளிற் செல்வன; பொறி பூ அகம் அணைவன—இலக்குமி பொலி

வார்ந்த மாளிகையை அடைவள்; வண்டு (பூஅகம் அணைவன)—வண்டுகள் பூக்களிற் போய்ச் சேர்வன; பாடல் பா அகம் அணைவன—பாட்டுகள் பாவினுறுப்பைப் பொருந்துவன; ஆடல் (பாவகம் அணைவன)—நடனங்கள் அபிநயத்தைப் பொருந்துவன எ—று.

அத்தொண்டை நாட்டில் எல்லாம் தத்தமக்கு வேண்டிய அமைதி பொருந்திச் சிறந்தனவென்பது தாற்பரியம்.

ஏ அசை. கலைகட்காம்போது கா முதனிலைத் தொழிற்பெயர். பொறி என்னும் உயர்திணைச் சொல் வண்டென்னும் அஃறிணைச் சொல்லுடன் சேர்த்துக் கூறப்பட்டமையானும் செய்யுட் சிறப்பு நோக்கியும் அஃறிணைப் பன்மை வினைமுற்றோடு முடிக்கப்பட்டது. சூரியன் சந்திரன் என்னும் பெயர்கள் போறலினங்ஙன முடிந்த தென்பாரு முளர்.

புள்ளினம் காவகமணைவன வண்டு பூவகமணைவன என்பவற்றில் அகம் ஏழனுருபு. அ இடை என்பது ''தூக்கிற் சுட்டு—நீளின் யகரமுந் தோன்றுதனெறியே'' என்ற விதிப்படி சுட்டு நீண்டவழி யகரந் தோன்றி முடிந்தது. காத்தலையுடைய மனமென்றது மறவாது பயில்வாரது மனத்தை. (55)

ஆடக மாமதி லம்பொற் கோபுரம்
நீடிய மண்டப நெறிகொ ளாவணம்
பாடலொ டாடிடம் பிறவும் பாலிநன்
ஞடுள பதிதொறு நண்ணி யோங்குமே.

இ—ள்: ஆடக மா மதில் — பொன்னாலாகிய பெரியமதிலும், அம் பொன் கோபுரம்—அழகிய பொன்னாலாகிய கோபுரங்களும், நீடிய மண்டபம் — நெடிய மண்டபங்களும், நெறி கொள் ஆவணம்—வழியையுடைய வீதிகளும், பாடலொடுஆடு இடம்—பாட்டினுடனே நிருத்தஞ் செய்கின்றசாலைகளும், பிறவும்—இவைபோன்ற பிறவும், பாலி நல்நாடு உள பதிதொறும் நண்ணி ஓங்கும்—பாலியாறு சூழ்ந்த நல்ல அந்தத் தொண்டை நாட்டிலுள்ள ஊர்கடோறுஞ் செறிந்து சிறக்கும் எ—று.

ஏ அசை. ஆடலின்கட் பாடலும் வேண்டப்படுதலாற் 'பாடலொடாடிடம்' என்றார். ''பதங்களிற் றண்ணுமைபாணி பண்ணுற — விதங்களின் விதிமுறை சதிமிதிப்பவர்'' என்றார் கம்பநாட்டாழ்வாரும்; பாடுமிடமும் ஆடுமிடமுமென வுரைப்பாருமுளர்.

இச்செய்யுளால் அத்தொண்டை நாட்டிலுள்ள ஊர்களின் சிறப்புச் சுருக்கியுணர்த்தப்பட்டது. (56)

தெண்டிரை யுலகினிற் சீர்பெற் றோங்கிய
மண்டல மெங்கணு மதிக்க நின்றதோர்
தொண்டைநன் ஞட்டணி சொல்லி ஞமினித்
தண்டமிழ் வளநகர்த் தன்மை கூறுவாம்.

இ—ள்: தெள் திரை உலகினில் சீர்பெற்று ஓங்கிய — தெளிந்த திரையை யுடைய கடலாற் சூழப்பட்ட பூவுலகத்திற் சிறப்புற்றுயர்ந்த, மண்டலம் எங்கணும் மதிக்க நின்றது—தேசங்கள் யாவும் மதிக்கும்படி நிலைபெற்றதாகிய, நல் தொண்டைநாட்டு அணி— நல்ல தொண்டை நாட்டின் சிறப்பை, சொல்லினும்—கூறிமுடித்தோம், இனி—இப்பால், தண்தமிழ்வளநகர் தன்மை கூறுவாம்—செந்தமிழ் வழங்குகின்ற வளத்தினையுடைய காஞ்சிநகரத்தின் சிறப்பைச் சொல்லுவாம் எ—று

ஓர் அசை. தெண்டிரை — அன்மொழித்தொகை. மண்டல மென்பது சேர மண்டலம் சோழமண்டலம் பாண்டிமண்டலம் முதலியவற்றை.

அகத்தியமுனிவர் வீற்றிருந்து தமிழ் பரப்பிய விசேட முடைமையால் 'தண்டமிழ் வளநகர்' என்றார். இதனை,

> ''காசியி னின்றும் போந்து கம்பர் தாமருளப் பெற்று
> மாசிலாக் கச்சி மூதூர் மன்னி வீற்றிருந்து பூமே
> லாசிலாத் தமிழ்ப ரப்பி யிருந்தமிழ்க் குரவு பூண்ட
> தேசினன் மலய வெற்பி குறுமுனி திருத்தாள் போற்றி''

என்னுங் காஞ்சிப் புராணச் செய்யுளா னுணர்க. முன்னர் அவை யடக்கத்தில் 'செந்தமிழ்க்கு வரம்பெனச் செப்பிய முந்துகாஞ்சி' என்றதூஉ மிக்கருத்துப் பற்றியே யென்க.

இச்செய்யுளாற் கூறிமுடித்த தின்னதென்பதும் மேற்கூறப்படுவதின்ன தென்பது முணர்த்தப்பட்டன. (57)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 146,

# 6. திருநகரப்படலம்



திரு—அடைமொழி. நகரப்படலமென்றது நகரத்தினது சிறப்பைக்கூறும் படலமென விரிதலால் உருபும் பொருளுமுடன்றொக்கதொகை, நகரமென்றது காஞ்சியை.

## இப்படலப் பொழிப்பு

பூவுலகத்திலுள்ள நகரங்களுட் காஞ்சிநகர் மிகச் சிறப்புற்றதாயிருந்தது. அந்நகரிற் கச்சபாலயமென்னுந் தலத்திற் பிரமதேவர் போய்ச் சிவபிரானைப் பூசித்துக்கொண்டிருந்தார். அப்போது பூவுலகத்திலுள்ள முனிவர்கள் பலர் ஒருங்குகூடி அவரையணுகித் தங்கள் மனமொருப்படத் தவஞ் செய்தற்குரிய வனமொன்றைக் கூறவேண்டுமென்று பிரார்த்தித்தனர். பிரமதேவர் ஒரு தருப்பையை யெடுத்துச் சக்கரமாக வளைத்து இது ஒய்ந்த இடமே நுமக்கேற்ற தபோவனமாமென்று கூறி உருட்டினர். முனிவர் அதன்பின் சென்று அதுதங்கி நைமிசாரணியமென்னும் பெயர்பெற்ற இடத்தையே தமக்குரிய தபோவனமாகக்கொண்டு அங்கிருந்து தவஞ் செய்து யாகமுடித்துப் பரிசுத்தராயிருப்பச் சூதமாமுனிவர் அவ்வனத்திற் போயினர். முனிவர்கள் அவரையுபசரித்துக் கந்தசுவாமியின் திவ்விய சரித்திரங்களைத் தமக்குப் போதிக்கும்படி வேண்டினர். சூதமாமுனிவர் உடன்பட்டுப் போதிக்கத் தொடங்கினர் என்பதாம்.

> மாவுல கெங்கு மலர்த்தட மாகத்
> தாவறு சீர்புனை தண்டக நாடே
> மேவிய கஞ்சம தாவதின் மேவுந்
> தேவினை யொத்தது சீர்பெறு காஞ்சி.

இ—ள்: மா உலகு எங்கும் மலர் தடம் ஆக—பெரிய பூவுலகமுழுவதும் (ஓர்) தாமரைத்தடாகம் போலாக, தா அறு சீர் புனை தண்டக நாடே மேவிய கஞ்சமது ஆ—குற்றமற்ற கீர்த்தியை வகித்த தொண்டை மண்டலமே அத்தடாகத்திற் பொருந்திய தாமரைமலர் போலாக, சீர்பெறு காஞ்சி—சிறப்பைப்பெற்ற காஞ்சி நகரானது, அதில் மேவும் தேவினை ஒத்தது—அம்மலரில் வீற்றிருக்கும் பிரமதேவரை நிகர்த்தது எ—று.

ஏ அசை. மகா என்னும் வடசொல் மா எனத் தமிழில் வழங்கிற்று. உலகமென்பது உலகெனநின்றது. கஞ்சம்—ஆகுபெயர். கஞ்சமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. ஆக என்பது ஈறுகுறைந்து நின்றது.

எண்ணிறந்த நாடுகளையுடைத்தாதலின் ''மாவுலகு'' எனவும், நீர்நிலையைச் சிறப்பிக்குந் தாமரை மலர்போன்று நிலவுலகத்துள்ள நாடுகளெவற்றையுஞ் சிறப்பித்துச் சிறந்து விளங்குதலின் 'தாவறுசீர்புனை தண்டகநாடே மேவியகஞ்சமதா' எனவும், அந்நாட்டினடுவே நாற்றிசைக் கோபுரங்களுடன் உயர்ந்து பொலிதலின் ''அதின் மேவுந் தேவினையொத்தது சீர்பெறுகாஞ்சி'' எனவும் கூறினர்.

> ''சலதியுடைச் சேயிழைக்குத் தமிழ்நாடே
> மதிமுகமாத் தமிழ்நா டுள்ளு
> மலர்புகழ்த்தண் டகநாடே கனிவாயா
> வதனுள்ளுஞ் சாதி பேதங்

குலவுமாரு யிர்க்கெல்லாந் தத்தமது
மரபொழுக்கங் குடங்கை சேரா
மலகமெனத் தேற்றுதலி ஞவெனலாங்
காஞ்சி . . . . .

என்னுங் காஞ்சிப் புராணச் செய்யுளானுமுணர்க.

பூங்கம லத்துறை புங்கவன் மாயோன்
பாங்குறை தேவர்பல் லாண்டிசை பரவ
ஓங்கிய புள்ளின மூர்ந்தவ ணுறலால்
ஆங்கவர் மேவு மரும்ப தமாமே.

இ—ள்: பூ கமலத்து உறை புங்கவன் மாயோன்—தாமரை மலராசனத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும், பாங்கு உறை தேவர் பல்லாண்டு இசை பரவ—பக்கத்தில் வசிக்கின்ற தேவர்கள் வாழ்த்தொலியினுலே துதிக்க, ஓங்கிய புள் இனம் ஊர்ந்து அவண் உறலால்—சிறந்த (அன்னமுங் கருடனுமாகிய) பறவைகளை வாகனமாகக்கொண்டு செலுத்தி அங்கே வந்திருத்தலால், அவர் மேவும் அரும் பதம் ஆம்—அவ்விருவரும் வசிக்கின்ற அருமையாகிய பதவிகள் போலும் (அக்காஞ்சிபுரம்) எ—று.

ஆங்கு ஏ அசைகள். பூங்கமலம் = கமலப்பூ. புங்கவன் — உயர்வுடையோன். மாயோன்—மாயாவிநோதஞ் செய்பவன். பல்லாண்டு — பல ஆண்டுகழியும் வரையும் வாழ்க என்னும் பொருளமையக் கூறும் மங்கல வாழ்த்து. ஆகுமென்பதீற்றயலுயிர்மெய் கெட்டு ஆமென நின்றது. அரும்பதமென்றது சத்திய லோகத்தையும் வைகுண்டலோகத்தையும்.

பரிவாரதேவரென்பார் 'பாங்குறைதேவர்' எனவும், தெய்வத்தன்மை வாய்ந்த பறவைகளென்பார் 'ஓங்கியபுள்ளினம்' எனவும் கூறினர். (2)

இன்னிய றேர்தரு மிந்திரன் முதலா
மன்னிய வானவர் மற்றுளர் யாருந்
துன்னின ராயிடை சூழ்ந்துறை செயலாற்
பொன்னக ரென்று புகன்றிட லாமால்.

இ—ள்: இன் இயல் தேர்தரும் இந்திரன் முதல் ஆ மன்னிய வானவர்—இனிய இயல்பைத் தேடுகின்ற இந்திரன் முதலாக நிலைபெற்ற தேவர்களும், மற்று உளர் யாரும் — (அவருடனிருந்த முனிவர் முதலிய) பிறர் அனைவரும், ஆயிடை துன்னினர் சூழ்ந்து உறை செயலால்—அக்காஞ்சிநகரில் வந்து சூழ்ந்திருக்குந் தன்மையினல், பொன் நகர் என்று புகன்றிடலாம் — அக்காஞ்சிநகரைச் சுவர்க்கலோகம் போலுமென்று சொல்லலாம் எ—று.

ஆல் அசை, ஆகவென்பதீறு குறைந்து நின்றது. துன்னினர்—வினைமுற்றெச்சம். சுகத்தையனுபவித்தற்குச் சிறந்த இடம் யாதென்று தேடி அவ்விடத்து வாழுங்குணமுடையரென்பார், 'இன்னியறேர்தருமிந்திரன் முதலாமன்னிய வானவர் என்றார். (3)

கின்னரர் சித்தர் கெழீஇயத ஞலத்
தந்நிக ரில்லவர் தம்பதி போலும்
பன்னக வேந்தர் பராயின ருறலால்
அன்னவர் தம்பதி யாகிய தன்றே.

இ—ள்: கின்னரர் சித்தர் கெழீஇயதனல்—கின்னரர்களுஞ் சித்தர்களும் நெருங்கியிருத்தலால், அ தம் நிகர் இல்லவர் தம்பதிபோலும்—சமானதீதர்களாகிய அவர்களது நகரங்கள்போலும், பன்னகவேந்தர் பராயினர் உறலால் — நாகராசர்கள் பரந்து வாழ்ந்திருத்தலால், அன்னவர் தம்பதி ஆகியது — அவர்களது வாழ்விடமாகிய நாகலோகம்போன்றது (அக்காஞ்சிநகரம்) எ—று.

கின்னரர் வாழ்வதலாற் கின்னரலோகத்தையும் சித்தர் வாழ்தலாற் சித்தலோகத்தையும் நாகர் வாழ்தலால் நாகலோகத்தையும் நிகர்க்குமென்பது கருத்து.

அன்று ஏ அசைகள். கின்னரர்=கிஞ்சித் நரர்; அதாவது சிறிதுபாகம் நரவடிவுடையவர்; குதிரைமுகமும் மானுடவடிவமு முடையராதலின் இவ்வாறு கூறப்படுவர். இவர்கள் தேவசபையிற் கீதம்பாடுந் தொழிலுடையர். சித்தர் அணிமை முதலாகிய எண்வகைச் சித்திகளையுமுடையவர்; கெழீஇயது — கெழுவியது என்பதன் விகாரம், தந்நிகரில்லவர்—தமக்கொப்பாவார் பிறரில்லாதவர். பன்னக வேந்தர் என்றது ஆதிசேடன், வாசுகி, அனந்தன், தக்ஷன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் ஆதியரை. பன்னகம்=பத்—ந—கம், காலினல் நடவாதது; பன்ன—கம் என பிரித்துக் கீழ்முகமாகச் செல்வதெனினுமாம். பராயினர் வினைமுற்றெச்சம்; பரவினர் என்பதன் விகாரம். (4)

எண்டிசை காவலர் யாவரு மீண்டப்
பண்டவர் பெற்ற பதங்களை மானும்
மண்டல மார்சுடர் மற்றைய வுறலால்
அண்டமு மாகிய தப்பதி யென்பார்.

இ—ள்: அ பதி—அந்தக் காஞ்சிநகரமானது, எண்திசை காவலர் யாவரும் ஈண்ட பண்டு அவர் பெற்ற பதங்களை மானும்—அட்டதிக்குப் பாலகரனை வருஞ் செறிந்து வாழ்தலால் முற்காலத்தில் அவர்கள் (சிவபெருமானிடம்) பெற்றுக் கொண்ட பதவிகளைப்போலும், மண்டலம் ஆர் சுடர் மற்றைய உறலால்—மண்டலத்திற் (பொருந்தி) வாழ்கின்ற சூரியனும் பிறவும் வந்திருத்தலினல், அண்டமும் ஆகியது என்பார்—ஆகாயத்தையும் போன்றதென்று புலவர் கூறுவர் எ—று.

பிற என்றது சந்திரன் முதலிய கிரகங்களும் நக்ஷத்திரங்களுமாம். எண்டிசையாவன; கிழக்கு தென்கிழக்கு தெற்கு தென்மேற்கு மேற்கு வடமேற்கு வடக்கு வடகிழக்கு என்பன. அவற்றிற்கதிபர்களாவார் முறையே, இந்திரன் அக்கினி யமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன் என்னும் எண்மருமாம். அவர்ளது பதங்களாவன: அமராவதி தேசோவதி சம்யமினி கிருஷ்ணவதி சரஸ்வதி கந்தவதி அளகை யசோவதி என்னும் எட்டு நகரங்களுமாம், செயவெனெச் சங் காரணப் பொருளில் வந்தது. மண்டலம் வட்டவடிவமான இருப்பிடம். அண்டமுமென்பதிலும்மை எச்சம். (5)

இப்படி யாவரு மெய்திய திறனல்
ஒப்பன போல வுரைத்திட லொப்போ
அப்பதி யேயத னுக்கிணை யன்றிச்
செப்பரி தாற்பிற சீர்கெழு காஞ்சி.

இ—ள்: இப்படி யாவரும் எய்திய திறனல்—இவ்வாறு பிரமா முதலினேர் அனைவரும் (தம்பதங்களினின்றும் வந்து) தங்கிய காரணத்தால், ஒப்பன போல உரைத்திடல் ஒப்போ—அவ்வவரது இடங்களை ஒப்பாவனபோல நினைத்துச் சொல்

லுதல் (உபமான உபமேய விலக்கணங்களுக்கு) இசையுமா? (இசையாது; பின்னர தற்குவமையாதென ஆராயப்புகின்), அ பதியே அதனுக்கு இணை—அந்தக் காஞ்சி நகரே அதற்குஒப்பாம், அன்றி—அல்லாமல், சீர் கெழு காஞ்சி பிற செப்பு அரிது—சிறப்புப் பொருந்திய காஞ்சிநகரத்திற்குப் பிறநகரங்களை உவமை கூறுதல் அரிது எ—று.

காஞ்சிநகர்க்கும் பிரமனுதியோரது இடங்கட்குமுள்ள பெருமை சிறுமைகளை நன்காராய்ந்துணராது அவர் வசித்தலொன்றையே காரணமாகக் கொண்டு உவமித்து இதுகாறுங் கூறினம், அவரால் வெறுத்து விடப்பட்ட பதங்களை விரும்பப் பட்ட இந்நகர்க்குவமிப்பது தக்கதன்று, இக்காஞ்சி நகரையே பொதுநீங்குவமையாகக் கூறல்வேண்டும் என்பது கருத்து.

காஞ்சி நகரத்தோடு ஏனைய நகரங்களை ஒப்பிடலாகா தென்பதை,

''மறையுட னேனை நூல்களை யெச்சந் தன்னுடன் மற்றை நல்வினையைக்
கறையறும் பார்ப்பா ரோடு சூத்திரரைக் காஞ்சியி னெடும்பிற நகரைப்
பிறைமுடிக் கடவு ளோடரி யயனை யொப்பெனப் பேசற்க பேசிற்
குறைவரு நிரயக் குழியி னீடுழி குளிப்பதற் கையமொன் றிலையே''

என்னுங் காஞ்சிப்புராணச் செய்யுளானு முணர்க.

ஆல்–அசை. திறம்—திறனெனப் போலியாயிற்று. ஒப்பன—வினையாலணையும் பெயர். ஏ தேற்றம். செப்பு—முதனிலைத் தொழிற்பெயர்.

பூவுலகத்துள்ள நகரங்களினும் மற்றையுலகங்களிலுள்ள நகரங்களிலும் சிறந்து விளங்குதலின் ''சீர்கெழுகாஞ்சி'' என்றார். (6)

மறைமுத லோர்தனி மாவி னிழற்கீழ்
உறைதரு காஞ்சி தனக்குல கெல்லாம்
பெறுமய னாதியர் பெற்றிட வன்னோன்
நிறுவிய தொன்னக ரோநிக ராமே.

இ—ள்: மறை முதல் ஓர் தனி மாவின் நிழல் கீழ் உறைதரு காஞ்சி தனக்கு—வேதமுதல்வராகிய சிவபெருமான் ஒப்பற்ற ஒரு மாமரத்தினீழலில் வீற்றிருக்கப் பெற்ற அந்தக் காஞ்சி நகரத்துக்கு, உலகு எல்லாம் பெறும் அயன் ஆதியர் பெற்றிட—உலகங்களெல்லாவற்றையும் படைக்கின்ற பிரமா முதலிய தேவர்கள் பெற்றுக்கொள்ளும்படி, அன்னோன் நிறுவிய தொல் நகரோ நிகர் ஆம்—அச்சிவபெருமான் படைத்து நிறுத்திய பழைய நகரங்களா ஒப்பாகும்? (ஒப்பாகா) எ—று,

ஏ அசை. தனிமை ஒப்பின்மை. கீழ்—ஏழனுருபு. மறைமுதல் அன்மொழித் தொகை, வேதங்கட்கு மூலமாதலையுடையானெனவிரியும். வேதங்களானிச்சயிக்கப் படுமுதல்வரெனக் கூறினுமாம்.

மீது மன்னிய மூலமும் கிழக்கு நோக்கு
சாகையு மாய்விரை கமழும்
பாத வந்தனை யுணர்ந்தவன் வீடு பற்று
மாங்கது பலகனி படைத்துச்
சீத வார்புன லொழுக்கருக் கம்பைத் திருநதிக்
கரைம ருங்கொலி வேதச்
சூத மாமர மெனத்திகழ்ந் தொளிருந் தொல்லை
வையகம் பெரும்பயன் படைப்ப.

எனவும்

''ஏழி ரட்டிய கல்வியு மதன்மேன் மல்லி
கைக்கொடி யெனப்படர்ந் தமரும்
பாழி விச்சைகட் கிறைவியாங் காமக் கண்ணி
யத்தகு பசுங்கொடிக் கினியா
ளூழி யிற்றினு முலப்பருந் தகைசான் ரேங்கு
மாவினுக் குரிமையம் யாமே
யாழி யேந்திய நாரணன் விரிஞ்ச
னரனெனப் படுமன் புடைப்பு தல்வீர்''

எனவும் காஞ்சிபுராணங்கூறிய விசேடங்களையுடைய தெய்வீகமா வென்பார் ''தனிமா'' என்றும் பிரமன் திருமால் முதலாயினோர் ஆதிகாலத்திற் காஞ்சிநகரிற் சிவபெருமானைப்பூசிக்க அப்பெருமானவர்க் கெளிவந்து, படைத்தல் காத்தன் முதலிய அதிகாரங்களையுதவி அவ்வவர்க்கேற்பச் சத்தியலோகம் வைகுண்டலோக முதலியவற்றைச் சிருட்டித்து அவற்றிலவர்களைக் குடியேற்றிப் பட்டாபிடேகஞ் செய்தரெனக் காஞ்சிப்புராணம் கூறலின் அந்நகரங்களை ''உலகெல்லாம் பெறுமயனுதியர் பெற்றிடவன்று—னிறுவியதொன்னகர்'' என்றும் கூறினர். முற்செய்யுட் கருத்தைப் பிறிதொரு காரணவாயிலான்வற் புறுத்தியதிச் செய்யுளென்க. (7)

மேயதொல் லூழியில் வேலைக ளேழுந்
தூயத னெல்லை சுலாவுற நிற்றல்
ஆய பரஞ்சுட ராங்குள தாயு
மாயைகள் சுற்றிய மன்னுயி ரொக்கும்.

இ—ள்: மேய தொல் ஊழியில்—பழமை பொருந்திய உகாந்தகாலத்தில், வேலைகள் ஏழும் தூய தன் எல்லை சுலாவுற நிற்றல்—ஏழு சமுத்திரங்களும் (உட்புகுந்தழிவு செய்யாது) பரிசுத்தமாகிய தனது எல்லையைப் புறத்தே சூழ (அக் காஞ்சி நகரம்) நிற்குந்தன்மை, பரம் ஆய சுடர் ஆங்கு உளதாயும் — பரஞ்சோதியாகிய சிவபெருமான் அங்கே இருக்கப்பெற்றும், மாயைகள் சுற்றிய மன் உயிர் ஒக்கும் — மாயைகளாற் சூழப்பட்டிருக்கின்ற நிலைபெற்ற ஆன்மாவைப் போலும் எ—று.

பிரளயகாலத்தில் ஒருங்கு பிரவாகித்து உலகமனைத்தையுமழிக்குங் கடல்களேழும் அக்காஞ்சி நகரையழிக்க வலியின்றி உட்புகாது மதிலின்புறத்தே நிற்குந் தன்மை, சீவான்மாக்களை மயக்கும் மாயைகள் அவற்றினுள் வியாபித்து நின்றியக்கும் பரமான்மாவை மயக்கவலியின்றி அதற்குப் புறம்பேநிற்றலை யொக்கும் என்பது கருத்து.

சீவான்மாக்களை மயக்கும் மாயை பரவான்மாவை மயக்கா தென்பதை,

''பேறிழ வின்பம் பிணிவளர் மூப்புப் பேதுறச் சாதலென் றுரைக்கு
மாறினு மோவா துயிர்களை யெல்லா மமைவறச் செலுத்தியுந் தனக்குக்
கூறிய விருப்பு வெறுப்பினை யில்லான் கூடியெவ் வுயிரையு மயக்கும்
வீறிய மாயை மயக்கமு மில்லான் விளங்கிய வனுதியே யமலன்''

என்னும் விநாயக புராணச் செய்யுளானுமறிக.

ஆங்குளதாய பரஞ்சுடரை ஆராய்கிற மாயை சூழப்பெற்ற உயிரைப்போலுமென வுரைப்பர் சிலர்.

மேய—மேவிய என்பதன் விகாரம். மேயதொல்லூழி=தொன்மைமேய வூழி. சமுத்திர மேழாவன: உவர்க்கடல் பாற்கடல் தயிர்க்கடல் நெய்க்கடல் கருப்பஞ் சாற்றுக்கடல் தேன்கடல் நன்னீர்க்கடல் என்பன. பரமாயசுடர்—பரஞ்சோதி. ஆங்கு—ஆன்மாவினிடத்து, உம்மைகளுள் முன்னையது முற்று; பின்னையது உயர்வு

சிறப்பு. நிற்றல் ஒக்கும் என இயையும். தமம் மாயை மோகம் அவித்தை அனிர்தம் என மாயை ஐவகைப்படுதலிற் பன்மையாகக் கூறினர், அவற்றுள், தமமாவது: சிவசை தன்னியத்தை மறைத்தல்; மாயையாவது: உலகத் தோற்றத்திற்குக் காரண மாதல்; மோகமாவது: விபரீத ஞானத்தை யுண்டாக்குதல்; அவித்தையாவது: உணர்வழித்தல்; அனிர்தமாவது: சத்துத் தோற்றத்திற் கன்னியமாதல்.

வந்தக்காற் பல்லாயிரமாண்டு நீடித்து நிற்பதும் கழிந்தக்காற் பின்னும் பல் லாயிரமாண்டின்மேல் வருவதுமென்பது தோன்ற 'மேயதொல் லூழி' எனவும் எச் சுடருந் தன்னுளடங்க விளங்கும் பெருஞ்சுடரென்பது போதர 'ஆய பரஞ்சுடர்' எனவும் விசேடித்தார்.

இதுகாறும் எட்டுச் செய்யுட்களால், காஞ்சிநகர் மற்றெல்லா நகரங்களினுஞ் சிறந்ததென்பது கூறப்பட்டது. (8)

வேறு

பாழி மால்வரை யெறிதிரை வைய்கம் பலவும்
வாழு மண்டங்கள் சிற்றுரு வமைந்துவந் தென்னச்
சூழு நேமியம் புள்ளின முதலிய சுருங்கும்
ஆழி நீத்தம தொத்தது மதிற்புறத் தகழி.

இ—ள்: பாழி மால் வரை எறிதிரை வையகம் பலவும் வாழும் அண்டங்கள் சிற்றுரு அமைந்து வந்து என்ன—முழைகளையுடைய பெரிய மலைகளும் வீசுகின்ற திரைகளையுடைய சமுத்திரங்களும் பூமியும் (மற்றுமுள்ள சராசரப் பொருள்கள்) பலவும் வாழப்பெற்ற பிரமாண்டங்கள் சிறிய வடிவு கொண்டு வந்தாற்போல, நேமியம் புள் இனம் முதலிய சூழும்—சக்கரவாகப் பறவைகள் முதலியன சூழ்ந்து வாழும், மதிற்புறத்து அகழி—(அங்ஙனம் வாழப்பெற்ற) மதிலின் புறத்திலுள்ள அகழியானது, சுருங்கும் ஆழி நீத்தமது ஒத்தது—(பரப்பினுற்) சுருங்கி வந்திருக் கும் புறவாழியைப் போன்றது எ—று.

சக்கரவாக முதலிய நீர்வாழ் பறவைகள் அண்டங்கள் சிறிய வடிவுகொண்டு வந்தாற்போலிருப்ப, அப்பறவைகள் வாழப்பெற்ற அகழியானது சுருங்கிவந்த புற வாழியைப் போன்றிருந்ததென்பது கருத்து.

எறிதிரை—அன்மொழித்தொகை. உம்மை—முற்று, வந்தென்ன—தொகுத்தல். புள்ளினம்—பறவைக்கூட்டம். அது—பகுதிப்பொருள் விகுதி.

வட்ட வடிவுடைய பறவையாதலின் 'சிற்றுரு வமைந்த அண்டங்களை யுவமித் தார்' மற்றைய கடல்க ளெவற்றினும்மிக்க பரப்பும் ஆழமுமுடைத்தான புறக் கடலானது ஆழத்தினுற் சுருங்குத லின்றிப் பரப்பினுன் மாத்திரஞ் சுருங்கி வந் ததுபோலு மென்பார் 'சுருங்குமாழி நீத்தம தொத்தது' என்றூர். சூழுமென் பதைப் பெயரெச்சமாக்கி, 'நேமியம் புள்ளின முதலிய சுருங்கும் மதிற்புறத்தகழி ஆழி நீத்தமதொத்தது' என ஒரே முடிபாகக்கொண்டு கூட்டிப் பொருள் கூறினு மாம். நீர்ப்பறவைகள் வாழ்தல் அகழிக்கலங்காரமென்க.

''உன்னு நாரை மகன்றில் புதாவுளி
வன்னங் கோழி வண்டானங் களாளிப்புள்
கின்ன ரங்குரண் டங்கிலுக் கஞ்சிரல்
சென்னங் காகங் குலைஞ் சிலம்புமே.''

என்றூர் பிறரும்,

இச்செய்யுளால் அகழியின் சிறப்புக் கூறப்பட்டது.

மண்ட லப்பொறை யாற்றுவான் பற்பல வகுத்து
முண்ட காசன மீமிசை யிருந்திடு முதல்வன்
அண்ட கோளகை தாங்கவோர் சுவர்த்தல மதுவும்
பண்டு செய்தென வோங்கிய நெடுமதிற் பரப்பு.

இ—ள்: முண்டக ஆசன மீமிசை இருந்திடும் முதல்வன்—தாமரைமலராசனத்தின்மேல் வீற்றிருக்கின்ற தலைவராகிய பிரமதேவர், மண்டல பொறை ஆற்றுவான் பற்பல வகுத்து—பூமி பாரத்தை தாங்கும்படி பலபல பொருள்களைச் சிருட்டித்து (அதன்மேல்) அண்டகோளகை தாங்க ஓர் சுவர் தலம் அதுவும் பண்டு செய்து என—அண்டகோளகையைச் சுமக்கும்படி ஒரு சுவரையும் முற்காலத்திற் சிருட்டித்தாற்போல, நெடுமதில் பரப்பு ஓங்கிய—அந்நகரிலுள்ள நெடிய பரந்த மதிலானது உயர்ந்திருந்தது எ—று.

நகரைக் காத்தற்கு வேண்டிய உயரத்தினளமையாது இம்மதில் அண்டமுகட்டையளாவவுயர்ந்திருத்தலால் இவ்வாறு வர்ணித்தார். ஆற்றுவான்—வானீற்று வினையெச்சம். பற்பல என்றது—ஆதிகூர்மம் ஆதிசேடன் அட்டமாநாகங்கள் அட்டதிக்கயங்கள் முதலியவற்றை, முண்டக ஆசனம்—வடநூன்முடிபு. முண்டகம்—ஆகுபெயர். மீமிசை—ஒரு பொருட்பன் மொழி. அண்டகோளகை — அண்டவுருண்டை. அது—பகுதிப்பொருள் விகுதி. பண்டு என்றது சிருட்டியாரம்பத்தை, செய்தென—தொகுத்தல். ஓங்கியது என்பது ஈறுகுறைந்து நின்றது. மதிற்பரப்பு—பின்மொழிநிலையல்; மதிநுட்பமென்பது போல. (10)

சென்று மூவெயி லழலெழ நகைத்தவன் செழும்பொற்
குன்று தோளுற வாங்கலு முலகெலாங் குலைந்த
அன்று நான்முக னனைத்தையுந் தாங்குகென் றருள
நின்ற தென்னவும் பாதலம் புகுந்துமே னீண்ட.

இ—ள்: சென்று மூ எயில் அழல் எழ நகைத்தவன்—போர் செய்யப்போய் முப்புரங்களினுந் தீ மூளும்படி புன்னகை செய்தருளிய சிவபெருமான், செழும் பொன் குன்று தோள் உற வாங்கலும்—செழுமை பொருந்திய மேருமலையாகிய வில்லைத் தோளிற் பொருந்த வளைத்தலும், உலகு எலாம் குலைந்த அன்று—அதனால் உலகங்கள் யாவும் நிலைகலங்கிய அக்காலத்தில், நான்முகன் அனைத்தையும் தாங்குக என்று அருள நின்றது என்னவும்—நான்கு முகங்களையுடைய பிரமதேவர் எல்லாவுலகங்களையுந் தாங்குவாயாக என்று கூறி (அந்தமேருவுக்குப் பதிலாகப்) படைக்க நிலைபெற்ற தன்மைபோலவும், பாதலம் புகுந்து மேல் நீண்ட—(கீழுலகமாகிய) பாதலலோகங்காறும் புதைந்து மேலுலகங்காறும் உயர்ந்திருந்தது(அந்தமதில்) எ—று.

பொன் வெள்ளி இரும்பு என்னும் மூவகைலோகங்களானும் முறையே முப்புவனங்களினுமியற்றப்பட்டனவாதலின் ''மூவெயில்'' என்றார். தோளுறவாங்கலாவது: வில்லை இடப்புறத்தினிறுத்திநின்று உயர்த்தியகையினால் அவ்வில்லின் மேற்குதையைப்பற்றி யூன்றித் தோளிற்படுந்துணையும் வளைத்தல். வாங்கலும — உம் மீற்று வினையெச்சம். எலாம் தாங்குகென்று என்பன – தொகுத்தல். நீண்டது என்பது ஈற்றுயிர்மெய் குறைந்து நின்றது. நின்றது — வினைமுற்றுத் தொழிற்பெயர். உம்மைகளிரண்டனுள் முன்னையது முற்று; பின்னையது எச்சம். (11)

மேக நாட்டிற்கும் விஞ்சையர் நாட்டிற்கும் விண்ணோர்
மாக நாட்டிற்கும் மலரய னாட்டிற்கும் மற்றை
நாக நாட்டிற்கும் பாதல நாட்டிற்கும் நணுகிப்
போக நாட்டிய பொன்மதில் ஆனதப் புரிசை,

இ—ள்: மேகநாட்டிற்கும்—மேகமண்டலத்திற்கும், விஞ்சயர் நாட்டிற்கும்—வித்தியாதர லோகத்திற்கும், விண்ணோர் மாக நாட்டிற்கும்—தேவர்களது (வாழ்விடமாகிய) சுவர்க்க லோகத்திற்கும், மலர் அயன் நாட்டிற்கும்—தாமரைமலராசனராகிய பிரமதேவரது சத்தியலோகத்திற்கும், மற்றைய நாக நாட்டிற்கும்—மற்றையதாகிய நாகலோகத்திற்கும், பாதல நாட்டிற்கும் — பாதல லோகத்திற்கும், நணுகிபோக—அணுகிச் செல்லும்பொருட்டு, நாட்டிய—நிறுத்தப்பட்ட, பொன் மதில்ஆனது—பொன் மதில் போன்றது, அ புரிசை—அந்தமதில் எ—று,

பூவுலகத்தின்மேல் மேகமண்டலமும் அதன்மேல் வித்தியாதர லோகமும் அதன் மேல் தேவலோகமும் அதன்மேற் பிரமலோகமும் ஒன்றன்மேல் ஒன்றுயர்ந்தும் கீழ்நாகலோகமும் அதன்கீழ்ப் பாதலலோகமும் ஒன்றன்கீழ்ஒன்று தாழ்ந்துமிருத்தலின், அவ்வுலகங்களெங்குஞ் சென்றுள்ள அம்மதில், ஒருலகத்தினின்று மற்றொருலகத்திற்கிவர்ந்து மிழிந்துஞ் சஞ்சரித்தற்கேற்றதோர் சோபானம் போன்றிருந்ததென்பது கருத்து. கீழுலகமென்பது போதர 'மற்றை நாகநாடு' என்றார்; ஐகாரஞ்சாரியை. (12)

முதிரை வண்ணமா நவமணிக் குவையும்வான் முளைக்குங்
கதிரி னெல்லெனும் பொருளுட னேனவுங் காட்டிப்
பொதிவ தாகியே முழுவதும் நிரம்புதல் பொருந்தா
நிதிய மேயகூ டொத்தது நெடியமா மதிலே.

இ—ள்: முதிர் ஐ வண்ணம் ஆம் நவ மணி குவையும்—சிறந்த ஐவகை நிறங்கள் பொருந்திய நவரத்தினக் குவியல்களையும், வான் முளைக்கும் கதிரின் எல் எனும் பொருள் உடன் ஏனவும் காட்டி—ஆகாயத்திலுதிக்கின்ற சூரியசந்திரர்களது ஒளியெனப்படுகின்ற சூரியகாந்த சந்திரகாந்தங்களுடன் (பொன்முதலிய) பிறபொருள்களையும் (தன்னிடத்துக்) காண்பித்து, பொதிவது ஆகி—(அவற்றைப்) பொதியப் பெறுவதாய், முழுவதும் நிரம்புதல் பொருந்தா —முழுவதும் நிரம்புதலைப் பொருந்துதலால், நிதியம் மேய கூடு ஒத்தது—திரவியசாலையைப் போன்றது, நெடிய மா மதில்—நீண்ட பெரிய அந்த மதிலானது எ—று.

அக்காஞ்சிநகரிலுள்ள மதிலானது, நவரத்தினங்கள் சூரியகாந்தம் சந்திரகாந்தம் என்பவற்றை எவர்க்குங் காட்சிப்படுமாறு கற்களாகவைத்துப் பொன் முதலிய லோகங்களாற் கட்டுப்பட்டுக் குறைவின்றி முழுவேலையும் நிறைவேற்றப்பெற்றிருத்தலால், இரத்தினவகைகளையும் உலோவகை முதலிய வகைகளையும் வேண்டுவோர்க்குக் காட்டிப் பின்மூடப்படுவதும் சிறிதும் வெள்ளிடமின்றி அப்பொருள்கள் நிரம்பப்பெற்றதுமாகிய திரவியசாலையைப் போன்றது என்பது கருத்து.

ஏகாரங்கள் அசைகள். எனும்—தொகுத்தல். கூடம் என்பது கூடனெக் குறைந்து நின்றது. ஐவண்ணமாவன: வெண்மை செம்மை கருமை பொன்மை பசுமை என்பன. பொருந்தா எனும் வினையெச்சம் ஏதுப்பொருளில் வந்தது.

நவரத்தினங்களாவன:—மாணிக்கம் முத்து பவளம் மரகதம் புருடராகம் வைரம் நீலம் கோமேதகம் வைடூரியம் என்பன. அவ்விரத்தினங்கள் பல வகை நிறங்களை யுடையனவாயினும் பெரும்பான்மை ஐந்து நிறத்துளமைதலால் ''முதிரை வண்ணமா நவமணிக்குவை'' என்றார்.

> ''இரவியெதி ரெரியிறைக்குங் கல்லுமதி யெதிர்செழுநீ ரிறைக்குங் கல்லு
> முரையிடுமொன் பதிலொன்றி லுட்கிடையாக் கிடக்கும்''

எனக் கூறப்படுதல்பற்றிச் சூரியகாந்தத்தையுஞ் சந்திரகாந்தத்தையும் இரத்தினங் களின் பின்னியைத்துக் கூறினர். (13)

> நிறையும் வார்கடல் சுற்றிய நேமியு நேமிக்
> குறையு ளாகிய கணிப்பிலா வண்டமு மொப்ப
> சிறையில் வான்கிரி நிரையெனச் செவ்விதிற் கிளர்ந்து
> மறுகெ லாந்திகழ் மாளிகைப் பத்திசூழ் மதிலே.

இ—ள்: சிறை இல் வான் கிரி நிரை என செவ்விதில் கிளர்ந்து மறுகு எலாம் திகழ் மாளிகை பத்தி சூழ் மதில்—சிறகில்லாத பெரியமலை வரிசைகளைப் போலச் செப்பம் வாய்ந்துயர்ந்து வீதிகளெவற்றினும் விளங்குகின்ற மாளிகை நிரையும் அதனைச் சூழ்ந்த மதிலும், நிறையும் வார் கடல் சுற்றிய நேமியும் நேமிக்கு உறையுள் ஆகிய கணிப்பு இலா அண்டமும் ஒப்ப — நீர் நிறைந்த நெடிய புறக் கடலாற் சூழப்பெற்ற சக்கரவாளகிரியையும் அக்கிரிக்கு இருப்பிடமாகிய அள வில்லாத அண்டங்களையும் நிகர்ப்பன எ—று.

வீதிகளி னெண்டிசைகளினும் மாளிகை நிரைகளமைந்து கிடப்ப அவற்றின் புறத்தே மதில் சூழ்ந்திருத்தல், சக்கரவாளகிரி உட்பட வெளியே அண்டச்சுவர் சூழ்ந்திருத்தல்போன்ற தென்பது கருத்து. மாளிகைப்பத்திசூழ்மதி லென்பதற்கு மாளிகை நிரையைச் சூழ்ந்த மதிலெனப் பொருளுரைத்து, சக்கரவாளகிரியையும் மதிலுக்கே யுபமானமாக்கினுமாம்.

ஏ அசை. மற்றைய கடல்களின் மிக்க பெருநீருடைமையின் 'நிறையும் வார் கடல்' எனவும், அக்கடலாற் சூழப்பட்ட சக்கரவாள கிரியையுள் ளமைந்திருத் தலின் 'நேமிக் குறையுளாகிய கணிப்பிலா வண்டம்' எனவும், சிறையுடையன வாயின் காலந்தோறும் இடம் பெயர்ந்து நிரை தவறுமாதலாலும் சிறியனவும் பெரியனவும் விரவின் ஒன்றையொன் றொத்துச் செவ்வி பெறுவாதலாலும் அவற்றை யொழித்து முற்காலத்தில் இந்திரனாற் சிறகரியப்பெற்ற மலைகளுள்ளே வடிவத்தா லொப்புமை யுடையனவாய்த் தெரிந்து நிரைத்த பெருமலைகளுளவேல் அவற்றையே நிகர்ப்பன வென்பார் 'சிறையில் வான்கிரி நிரையெனச் செவ்வி திற் கிளர்ந்து மறுகெலாந் திகழ்......பத்தி' எனவும் கூறினர்.

முன்னொரு காலத்திலே மலைகள் சிறகுபெற்றுத் தாமிருந்த இடங்களி னின்று மெழுந்து பறந்து திரிந்து விரும்பிய இடங்களிற் பின்னுந் தங்கிவந்தன. அதனாற் பிராணிகளுக்குத் தீங்கு நேரிடுதலை யறிந்த இந்திரன் வச்சிராயுதத்தினால் அவற் றின் சிறகுகளை யரிந்தனனென்பது பூர்வீக வதந்தி.

பத்தாஞ் செய்யுண் முதலிதுகாறும் ஐந்து செய்யுட்களால் மதிலின் சிறப்புக் கூறப்பட்டது. (14)

தடுக்கு மாற்றலர் நால்வகைப் படையொடுஞ் சாய
முடுக்கும் வாள்கொடு விதிர்த்திடு மெழுவினுன் முருக்கும்
எடுக்கு மெற்றிடு மெறிந்திடும் விழுங்கிடு மீர்க்கும்
படுக்குங் கன்மழை சொரிந்திடும் விற்படை பயிலும்.

இ—ள்: அ மதில் மேல் உறும் பொறிகள் — அந்த மதிலின் மேலமைக்கப்பட்ட யந்திரங்கள், தடுக்கும் மாற்றலர் நால்வகை படையொடும் சாய முடுக்கும் — முற்றுகையிட்ட பகையரசர்கள் சதுரங்க சேனைகளோடும் பின்னிடும்படி விரைவிற் றள்ளும், வாள்கொடு விதிர்த்திடும் — வாளைக் கையிற் கொண்டு சுழற்றும், எழுவினுல் முருக்கும் — அவர்களை வளை தடியினுல் அழிக்கும், எடுக்கும் — தூக்கும், எற்றிடும் — அடிக்கும், எறிந்திடும்—எறியும், விழுங்கிடும்— தம் வாயிலிட்டு விழுங்கும், ஈர்க்கும் — பற்றியிழுக்கும், படுக்கும் — கொல்லும், கல் மழை பொழிந்திடும் — அவர்கள்மேற் கன்மாரியைச் சொரியும், விற்படை பயிலும் — அவர்களுடன் விற்போரைச் செய்யும் எ—று.

தடுக்குமென்பதை வினைமுற்றுகக்கொண்டு, பகைவரை யுட்செல்ல விடாது தடுக்கும் எனக் கூறினுமாம். பத்தொன்பதாஞ் செய்யுளிலுள்ள 'அம்மதின் மேலுறு பொறிகள்' என்பது இச்செய்யுட் கெழுவாயாகக் கொள்ளப்பட்டது. அச்செய்யுள் காறும் ஐந்துசெய்யுட்கள் ஒரு தொடர். நால்வகைப்படை: யானை, தேர், குதிரை, காலாள் என்பன. விற்படை — இருபெயரொட்டாகு பெயர்.

வேற்றரசர் படையெடுத்து வந்தகாலத்தில் அவருடன் பொருதுவெல்லுமாறு மதிலின் மேல் யந்திரங்களமைக்கப் பட்டிருப்பன வென்க. (15)

உருக்குஞ் செம்பினை வங்கத்தை யிழுதொடு மோச்சும்
வெருக்கொ ணேமிக ளெறிந்திடும் வச்சிரம் வீசி
இருக்கும் நின்றிடுங் குப்புறுஞ் செறுநரை யிகலி
நெருக்குந் தாழ்ந்திடும் உலகளந் தோனென நிமிரும்.

இ—ள்: உருக்கும் செம்பினை வங்கத்தை இழுதொடும் ஓச்சும் — உருக்கிய செம்பையும் ஈயத்தையும் நெய்யுடன் பகைவர்மேல் வீசும், வெருகொள் நேமிகள் எறிந்திடும் — ஏவியவழி (எத்தகைய வீரரும்) அஞ்சத்தக்க சக்கராயுதங்களை வீசும், வச்சிரம் வீசி இருக்கும் — வச்சிராயுதத்தைச் செலுத்திவிட்டு இருக்கும். நின்றிடும் — எழுந்து நிற்கும், குப்புறும் — குதிக்கும், செறுநரை இகலி நெருக்கும் — பகைவரைக் கோபித்து நெருக்கும், தாழ்ந்திடும்—தாழும், உலகு அளந்தோன் என நிமிரும் — உலகத்தையளந்த திரிவிக்கிரம மூர்த்தியைப்போல வளரும் எ—று.

வாமன ரூபங்கொண்டு மாவலிச் சக்கரவர்த்தியினிடம் மூன்றடி நிலத்தைத் தானமேற்றுப் பின் அவனையடக்குமாறு திரிவிக்கிரம ரூபங்கொண்டு மண்ணுலகத்தை ஓரடியாகவும் விண்ணுலகத்தை மற்றோரடியாகவும் அளந்தனராதலின் திருமாலை 'உலகளந்தோன்' என்று கூறினர். (16)

பீடு தங்கிய பணைமுர சியம்பிடும் பிடிக்குங்
கோடு மார்த்திடுந் துடிகளு மொலித்திடுங் கொட்புற்
றோடும் மீயுயர் புள்ளையு மெறிந்திடு மரண்மேல்
ஓடும் மீளுமக் கதிரையுந் தடுப்பபோ லுந்தும்.

இ—ள்: பீடு தங்கிய பணை முரசு இயம்பிடும் — பெருமை பொருந்திய முரசப் பறையை முழக்கும், பிடிக்கும் கோடும் ஆர்த்திடும் — கையிற் பிடித்த கொம்பையும் ஊதும், துடிகளும் ஒலித்திடும் — உடுக்குகளையும் அடிக்கும், கொட்புற்று ஆடும் — சுழன்று ஆடும், மீ உயர் புள்ளையும் எறிந்திடும் — ஆகாயத்தில் உயர்ந்து சஞ்சரிக்கின்ற பறவைகளையும் துணிக்கும், அரண் மேல் ஓடும் — மதிலின் மீது ஓடிச் செல்லும், மீளும்—திரும்பிவரும், அ கதிரையும் தடுப்ப போல் உந்தும் — அந்தச் சூரிய சந்திரர்களையுந் தடைப்படுத்துவன போல உயரும் எ—று.

பணை பறையென்னும் பொருளில் வந்தது. உம்மைகளுண் முன்னைய இரண்டும் எச்சம், பின்னைய இரண்டும் உயர்வு சிறப்பு. எதிர்ந்தாரை எறிவதுந் தடுப்பதுமேயன்றித் தன்னியல்பிற் சஞ்சரிப்பனவாகிய பறவைகளையுங் கதிர்களையுந் தடுப்பன போலஎனப்பொருள் கொண்டவழிப் பின்னையவும்மைகளும் எச்சங்களாம். கொட்புறுதல்—சுழலுதல். மிகவும் உயர்ந்த மார்க்கத்திற் சஞ்சரிக்கும் சூரிய சந்திரரென்பது தோன்ற 'அக்கதிர்' என்றார். தடுப்ப — வினையாலணையும் பெயர். (17)

சூலம் வீசிடுந் தோமரம் வீசிடுஞ் சுடர்வேல்
ஆலம் வீசிடுஞ் சுடுமணல் வீசிடு மளப்பில்
சாலம் வீசிநின் றீர்த்திடு மகழியிற் றள்ளுஞ்
சீலம் வீசிய பாரிட மாமெனத் திரியும்.

இ—ள்: சூலம் வீசிடும் — (பகைவர்மேற்) சூலப்படையைச் செலுத்தும், தோமரம் வீசிடும் —இருப்புலக்கையைச் செலுத்தும், சுடர் வேல் ஆலம் வீசிடும்—ஒளி பொருந்திய வேற்படையையும் மழுப்படையையும் செலுத்தும், சுடுமணல் வீசிடும் — சுடுமணலையும் வீசும், அளப்பு இல் சாலம் வீசி நின்று ஈர்த்திடும் — அளவில்லாத வலைகளை வீசி (அதனுட்பகைவரையகப்படுத்தி) நின்று இழுக்கும், அகழியில் தள்ளும் — (அவர்களை) அகழியில் விழுத்தும், சீலம் வீசிய பாரிடம் ஆம் எனத் திரியும் — நல்லொழுக்கத்தை விட்ட பூதங்களைப்போலப் (பயங்கரமான வடிவத்துடன்) உலாவும் எ—று. (18)

திகழும் வெங்கன லுமிழ்ந்திடு மொன்னலர் செலுத்தும்
பகழி மாரியை விழுங்கிடும் பறவையிற் படரும்
இகழு நாவையு மனத்தையு மெறிந்திடு மென்னுற்
புகழு நீரவன் றம்மதின் மேலுறும் பொறிகள்.

இ—ள்: திகழும் வெம் கனல் உமிழ்ந்திடும் — பிரகாசிக்கின்ற கொடிய அக்கினிப் பொறிகளைக் கக்கும், ஒன்னலர் செலுத்தும் பகழி மாரியை விழுங்கிடும் — பகைவர்கள் செலுத்துகின்ற பாணமழையை விழுங்கும், பறவையில் படரும் — பறவைகளைப்போலப் பறந்து செல்லும், இகழும் நாவையும் மனத்தையும் எறிந்திடும் — தம்மையிகழ்ந்து பேசுகின்ற (பகைவர்களது) நாக்கையும் நெஞ்சையும் வெட்டும் (இன்னோரன்ன பற்பல அற்புதங்களைச் செய்தலின்), என்னால் புகழும் நீர அன்று — என்னால் வருணித்து முடிக்கத்தக்கனவல்ல எ—று.

இடைவிடாது செலுத்தப்படுதலாற் பகழியை மாரியென்றார். பதினைந்தாஞ் செய்யுண்முதலிதுகாறும் ஐந்து செய்யுட்களால் மதிலிலுள்ள யந்திரங்களின் சிறப்புக் கூறப்பட்டது.

பூணி னேர்தரும் பொன்னவாம் புரிசைமேற் புனைந்த
வாணி லாநெடுந் துகிலிகை பெயர்வன மலரோன்
சேணு லாயதீஞ் சுடரெனுங் கோபுர சிகரங்
காண வேபல வெகினமாய்த் தேடல்போற் கவினும்.

இ—ள்: பூணின் ஏர் தரும் பொன் அவாம் புரிசைமேல் புனைந்த வாள் நிலா நெடும் துகிலிகை பெயர்வன — ஆபரணங்கள் போல அழகைச் செய்கின்ற இலக்குமியும் விரும்பத்தக்க மதிலின்மேல் அமைக்கப்பட்ட வெண்ணிறச் சோதியையுடைய நெடிய கொடிகள் (காற்றினால்) அசையுந்தன்மை, மலரோன்—பிரமதேவர், சேண் உலாய தீ சுடர் எனும் கோபுர சிகரம் காண — ஆகாயத்தில் வளர்ந்து சென்ற அக்கினிப் பிளம்புபோன்ற அந்நகர்க் கோபுரங்களின்முடிகளைக் காணும்படி, பல எகினம் ஆய் தேடல் போல் கவினும் — பல அன்னப்பறவைகளினுருக் கொண்டு தேடுதல்போல விளங்கும் எ—று.

சோதிப் பிழம்பாய் வளர்ந்துநின்ற சிவபெருமானது முடியை ஓரன்னப்பறவையுருக்கொண்டு தேடி முற்றுப்பெறு தொழிந்தமையின் மாணிக்கரத்தின மழுத்தப் பெற்றுயர்ந்து அச்சோதிப் பிழம்பு போலொளிவீசிநிற்குங் காஞ்சிநகர்க் கோபுரங்களின் முடிகளைத் தேடுதற்குப் பிரமதேவர் பல அன்னப் பறவைகளி னுருவங்களைக் கொண்டு பறப்பதுபோல, மதில்களின் மேற் கட்டப்பட்ட கொடியாடைகள் காற்றினுலசைவன என்பது கருத்து.

ஏ அசை, பூண் பூணப்படுவது; செயப்படுபொருள் விகுதி புணர்ந்து கெட்டது. பொன்னவாம் என்பதிற் சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. ஏர்தரும்புரிசை என இயையும். புனைந்த என்னும் பெயரெச்சம் துகிலிகை என்னும் செயப்படுபொருட் பெயர்கொண்டது. பெயர்வன — வினைமுற்றுத் தொழிற்பெயர். உலாய— உலாவிய என்பதன் விகாரம். தீ சுடர் என்பது பூப்பெயர்போல இனமென்மை தோன்றித் தீஞ்சுடரென முடிந்தது. கோபுர சிகரம் வடநூன்முடிபாத லினியல்பாயிற்று. செயவெனெச்சங் காரியப்பொருட்டு.

பொன்னாற் செய்யப்பட்டு இரத்தினங்களழுத்தப்பெற்றிருத்தலின் 'பூணினேர் தரும்' என்றார். (20)

ஈர்த்த மாமதி சசியென்ப துலகுளோ ரிட்ட
வார்த்தை யல்லது சரதமோ கடிமதின் மருங்கில்
தூர்த்த கேதன மவன்மணி மேனியிற் றுடக்கப்
போர்த்த வெண்ணிலாக் கஞ்சுகம் பீறிய போலாம்.

இ—ள்: ஈர்த்த மா மதி சசி என்பது உலகு உளோர் இட்ட வார்த்தை அல்லது சரதமோ — குளிர்ச்சிபொருந்திய பெரிய சந்திரனை முயற்களங்க முடையானென்று சொல்வது இப்பூவுலகத்தார் கற்பித்த வாசகமாகுமேயன்றி உண்மையாகுமா? (ஆகாது, பின்னென்னையெனின்), கடி மதில் மருங்கில் தூர்த்த கேதனம் அவன் மணி மேனியில் துடக்க — காவலாகிய அம் மதிலின் கண்ணே செறிக்கப்பட்டுள்ள கொடிகள் அச்சந்திரனது கரிய வடிவத்திலே குற்றுதலால், போர்த்த வெள் நிலா கஞ்சுகம் பீறிய ஆம்—மேற்போர்த் திருந்த வெள்ளிய நிலவாகிய சட்டையானது கிழிந்ததென்பதே உண்மையாம் எ—று.

குளிர்ந்த கிரணங்களைப் பரப்பி உலகத்திலுள்ள ஆன்மாக்களையெல்லாம் உவப்பிக்குஞ் சந்திரனைக் களங்கமுடையானென்று உலகத்தார் குறைகூறுவது பொய்யே,

காஞ்சி நகரத்து மதிலின் கொடிக் காம்புகள் குற்றுதலினுற் கருநிறமுடையனுகிய அச்சந்திரன் தரித்திருந்த நிலவாகிய வெண்ணிறச் சட்டை கிழிந்ததென்பதே உண்மை என்பது கருத்து. கொடிகள் சந்திரமண்டலத்தை யளாவியுள்ளனவென் பது தாற்பரியம்.

போல் அசைநிலே. ஈர்த்த — ஈரமென்னும் பண்புப் பெயரடியாகப் பிறந்த பெயரெச்சம். மாமதி — பூரண சந்திரன். சசி—முயற்களங்கமுடையவன்; சசம்—முயல். நீர் நிலம் காடு மதில் என்னும் நால்வகைக் காவலுள் மதிலுமொன்ருதலின், கடிமதில் என்பதற்குக் காவலாகிய மதில் எனப் பொருளுரைத்தாம். மருங்கு — ஏழனுரு பின்பொருள்பட நின்றதோரிடைச் சொல். செயவெனச்சங் காரணப் பொருளில் வந்தது. பீறியது என்னும் வினைமுற்றில் துவ்விகுதி தொக்கது.

நூலாசிரியர்கள் சந்திரமண்டலத்திலுள்ள முயற்களங்கத்தை மறுத்துத் தங் குறிப்பையேற்றி வருணிப்பதை,

> ஒழுகொளி விரிந்த கதிர்மணி வண்ண னுந்தியந் தாமரை உறைவோன்
> முழுமதிக் கலை யுணிறைந்த பேரழகை மொண்டுகொண் டரிபரந் தகன்ற
> மழைமதர் நெடுங்கட் டமயந்தி வதனம் வகுத்தன னகரத்தினு லெடுத்த
> புழைவழித் தோன்றும் விசும்பினை யன்றே களங்க மென்றின்னமும் புகல்வார்.

என்னும் நைடதச் செய்யுளானுமறிக. (21)

> காட்சி மேயவக் கடிமதிற் கதலிகை காணூஉச்
> சூட்சி நாடிய பரிதியுங் கீழுறத் தொடர்ந்தான்
> மாட்சி தேய்ந்திலன் வரன்முறை மனப்படு மதியோர்
> தாட்சி செய்யினு மனையர்பா லணுகுமோ தவறு.

இ—ள்: காட்சி மேய அ கடி மதில் கதலிகை காணூஉ — பார்வையமைந்த காவலாகிய அந்த மதிலிலுள்ள கொடிகளைக் கண்டு, சூட்சி நாடிய பரிதியும் கீழ் உற தொடர்ந்தான் — உபாயபுத்தியையுணர்ந்த சூரியனும் அக்கொடிகளின் கீழாகச் சஞ்சரித்தான், மாட்சி தேய்ந்திலன் — (அதனுலவன் மேலுயர்ந்து சென்ற சந்திரன் போலத் தன்) பெருமை குறையப் பெற்றிலான், வரன்முறை மனப்படும் மதி யோர் தாட்சி செய்யினும்—வரலாற்று முறையானது மனத்தின்கண்ணே அமையப் பெற்ற நற்புத்தியினையுடைய பெரியோர்கள் தாழ்வு செய்தாலும், அனையர்பால் தவறு அணுகுமோ — அவர்களிடத்துக்குற்றஞ் சாருமா? (சாராதே) எ—று.

காட்சி—எத்துணைத்தூரத்தினுங் கட்பொறிக்கு விடயமாந்தன்மை. சூட்சி தாட்சி என்பன தொடை நோக்கி வந்தவிகாரம். வரன்முறை — செய்யத்தக்கன இவை தகாதன இவை எனப் பெரியோர் வகுத்தமுறை. உம்மையிரண்டனுள் முன்னையது உயர்வு சிறப்பு; பின்னையது எதிர்மறை.

முற்செய்யுளாற் சந்திரன் கொடிக்கு மேலாகச் சஞ்சரித்தானெனவும், இச் செய்யுளாற் சூரியன் கொடிக்குக் கீழாகச் சஞ்சரித்தானெனவுங் கூறி, சந்திரமண் டலத்தின் கீழ்ச் சூரியமண்டல முளதென்னுங் கருத்தை ஆசிரியர் அமைத்தனர். மேலும் ஆங்காங்கே சிற்சில செய்யுட்களில் இக்கருத்தை யமைத்துக் கூறினர். இது பௌராணிகர் மதம். சந்திரமண்டலத்தின்மேற் சூரியமண்டல முளதென்பதே சோதிட சித்தாந்தம்.

இருபதாஞ் செய்யுண் முதலிதுகாறும் மூன்றுசெய்யுட்களால் மதிலிலுள்ள கொடிகளின் சிறப்புக் கூறப்பட்டது. (22)

புடைப ரப்பிய புரிசையி னாற்றிசைப் புறத்துந்
தடநி லைப்பெருங் கோபுர முளதழ னிறத்துக்
கடவு ளுச்சியின் வதனமொன் றின்றியே காண்பான்
அடைத லுற்றிடு திசைமுகம் பொருவின அவையே.

இ—ள்: புடை பரப்பிய புரிசையின் நால் திசை புறத்தும் — இடமகலப்பெற்ற அந்த மதிலில் நான்கு திக்குகளிலும், தட நிலை பெரும் கோபுரம் உள — விசாலித்த நிலைகளையுடைய பெரிய கோபுரங்கள் உள்ளன, அவை—அக்கோபுரங்கள், தழல் நிறத்து கடவுள் — அக்கினிபோலுஞ் சிவந்த நிறத்தையுடைய சிவபெருமான், காண்பான் — அந்நகர்ச் சிறப்பைக் காணும்படி, உச்சியின் வதனம் ஒன்று இன்றி அடைதல் உற்றிடு திசை முகம் பொருவின—உச்சிமுகமொன்றையொழித்து (அமைந்து) வந்த நான்குமுகங்களைப் போன்றன எ—று.

சிவபெருமான் அந்நகர்ச் சிறப்பைப் பார்க்குமாறு நான்முகங் கொண்டுவந்தது போல நாற்றிசைக் கோபுரங்களு மமைந்திருந்தன வென்பது கருத்து.

ஏகாரங்கள் — அசைகள். புறம் — ஏழனுருபு. உள — தொகுத்தல், கடவுள் அடைதலுற்றிடு திசைமுகம் என இயையும். காண்பான் — பானீற்று வினையெச்சம். தழனிறத்துக் கடவுள் பிரமா எனக் கூறுவாருமுளர்.

அகன்று கனத்த சுவரென்பார் 'புடைபரப்பிய' புரிசை எனவும், அதனைக் கடந்துட் புகுதற்கு நாற்றிசையினும் பெரியவாயிலமைந்த கோபுரங்கள் உளவென்பார் 'நாற்றிசைப்புறத்துந் தடநிலைப்பெருங் கோபுரமுள'எனவும்,அவை செந்நிறமணிகள் பதிக்கப்பட்டு ஒளிபரப்புவனவென்பார் 'தழநிறத்துக் கடவுளுச்சியின் வதனமொன் றின்றியே காண்பானடைதலுற்றிடு திசைமுகம் பொருவின' எனவும் கூறினர். (23)

என்று மாமதிக் கடவுளும் பிறருமீ ரியல்பாங்
குன்ற மேயெனக் கீழ்த்திசை யதனெடுங் குடபால்
நின்ற கோபுரங் கடக்கலர் வாய்தலி னெறியே
சென்று சென்றுபோ யப்புறத் தேகினர் திரிவார்.

இ—ள்: என்றும்—சூரியனும், மா மதி கடவுளும்—பெரிய சந்திரனும், பிறரும் —செவ்வாய் முதலிய பிற கிரகங்களும், ஈர் இயல்பு ஆம் குன்றமே என கீழ்த்திசை அதனெடும் குட பால் நின்ற கோபுரம் கடக்கலர் — உதயமலையையும் அஸ்தமன மலையையும் போலக் கிழக்குத்திக்கிலும் மேற்குத்திக்கிலும் பொருந்திய கோபுரங்களைக் கடவாது, வாய்தலின் நெறியே சென்று சென்றுபோய் — வாயிலின் வழியே நடந்து நடந்து போய், அப்புறத்து ஏகினர் திரிவார் — அப்பாற் சஞ்சரித்துத் திரிவார்கள் எ—று.

சூரியன் முதலிய கிரகங்கள் தங்கக்ஷாமார்க்கத்தின் மேல் உதயாஸ்தமனகிரிகளுயர்ந்திருத்தலின் அவற்றின் மேலாகச் செல்லாது கீழ்ப்படிந்து செல்வர், அது போலவே இந்நகரின் கீழ்த்திசையினும் மேற்றிசையினுள்ள கோபுர வாயில்களும் உயர்ந்திருத்தலின் மேலாகச் செல்லாது வாயில் வழியாகச் சஞ்சரிப்பர் என்பது கருத்தாயிற்று. ஆகவே, கீழ்த்திசையிலுள்ள உதயகிரியினின்று வரும்போது உதித்தும் மேற்றிசையிலுள்ள அஸ்தமனகிரியிற் புகும்போது மறைந்தும் உலகினர்க்குக் காணப்படுதல்போல, கீழைக் கோபுரவாயிலினின் றுட்படும்போது உதித்தும் மேலைக் கோபுர வாயிலினின்று வெளிப்படும்போது மறைந்தும் அந்நகரத்தார்க்குக் காணப் படுவரென்பதூ உம் பெறப்பட்டது.

ஈரியல்பாங்குன்று — (கிரகங்களை உதிக்கச்செய்தலும் அஸ்தமிக்கச்செய்தலு மாகிய) இரண்டு தன்மைகளையுடைய மலைகள். ஏகாரங்களிரண்டுந் தேற்றம். கீழ்த் திசையதனெடும் என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி. கடக்கலர் ஏகினர் என்பன வினைமுற்றெச்சம். குன்றமேயென கடக்கலர் என இயையும். சென்று சென்று என்னும் அடுக்கு எஞ்ஞான்றும் நிகழ்தலையுணர்த்திற்று. (24)

தீபு ரத்திடை மடுத்தவ ஞணையாற் சிறந்த
மாபு ரத்திடை வான்றொடுங் கடிமதில் வரைப்பில்
ஆபு ரத்தவாய்க் கிளர்ந்தவே யமைத்தவன் றென்னக்
கோபு ரத்திடைக் கொழுந்துபோ லோங்கிய கொடிகள்.

இ—ள்: தீ புரத்திடை மடுத்தவன் ஆணையால்— (தமது புன்சிரிப்பிற்றோன்றிய அக்கினியை முப்புரங்களினும் நிறைத்தெரித்த சிவபெருமானது கட்டளையினல், சிறந்த மா புரத்து இடை வான் தொடும் கடி மதில் வரைப்பில் — சிறப்புற்ற பெரிய அந்தக் காஞ்சிநகரிலுள்ள ஆகாயத்தை யளாவிய காவலாகிய மதிலி னெல்லையில், ஆபுரத்தஆய் கிளர்ந்தவே—புரந்தோன்றியநாளிற் றோன்றியனவாய் வளர்ந்தனவே, அமைத்த அன்று என்ன — இடையிற் பிறரால் அமைக்கப்பட்டனவல்ல வென்று சொல்லும்படி, கொடிகள்—கொடிகளானவை, கோபுரத்திடை கொழுந்துபோல் ஓங்கிய—அந்நகர்க்கோபுரத்தின்கண்ணே கொழுந்துகள்போல வளர்ந்திருந்தன எ-று.

கோபுரத்தின்கண்ணே அலங்காரத்தின் பொருட் டமைக்கப்பட்டுள்ள கொடி வகைகள் நகருடன் தோன்றினவே பின்பியற்றி வேருய் வைக்கப்பட்டனவல்ல வென்று கண்டோர் சொல்லும்படி, கொடிகள் கோபுரத்தோடு பொருந்தினவாய் மனேரம்மியமாக உயர்ந்து வளர்ந்துள்ளன என்பது கருத்து.

ஆபுரம் வடசொல். ஆ என்னுமுபசர்க்கம் ஈண்டெல்லைப் பொருளில் வந்தது. ஏ தேற்றம்.

பிரமதேவரது சிருட்டி காரணமாகச் சிவபெருமானுற் படைக்கப்பட்ட நகரமாதலின் 'தீபுரத்திடை மடுத்தவனுணையால்...கிளர்ந்த' என்றுர்.

இருபத்துமூன்றுஞ் செய்யுண்முத லிதுகாறும் மூன்று செய்யுட்களாற் கோபுரச் சிறப்புக் கூறப்பட்டது. (25)

மாடமாளிகை மண்டபங் கோபுர மறுகிற்
கோடி கோடியின் மேலுமுண் டன்னதார் குணிப்பார்
ஆடு கேதனத் தளவையு மன்னதே அகல்வா
னூடு போகலா தலமரும் பறவைக ளொப்ப.

இ—ள்: மாடம் மாளிகை மண்டபம் கோபுரம் — மாடங்களும் மாளிகைகளும் மண்டபங்களும் கோபுரங்களும், மறுகில் கோடிகோடியின் மேலும்உண்டு— ஒவ்வொரு வீதிகளிலும் கோடா கோடியின் மேலும் உள்ளன, அன்னது ஆர் குணிப்பார்—அத்தொகையை யார்தாம் அளவிட்டுக் கூறவல்லார் [எவராலு மரிதென்பதாம்], அகல் வான் ஊடு போகலாது அலமரும் பறவைகள் ஒப்ப ஆடு கேதனத்து அளவையும் அன்னதே—அகன்ற ஆகாயத்தின்கண்ணே (போக விரும்பிப் பறந்தும்) போகலாற்றுது உலைகின்ற பறவைகளைப்போல அசைகின்ற கொடிகளின் தொகையும் அத்தன்மையதே [அளவிடற்கரிது] எ—று.

கோடி கோடி—கோடியாலுறழ்ந்த கோடி. உம்மை யிரண்டனுள் முன்னையது உயர்வு சிறப்பு; பின்னையது எச்சம். ஆர் யாவரென்னும் வினாப்பெயரின் விகாரம். ஏகாரம் தேற்றம். ஊடு ஏழனுருபின் பொருள்பட நின்றதோ ரிடைச்சொல்.

சிகர மால்வரை யன்னமா ளிகைதொறுஞ் சிவணும்
மகர தோரண மாடிகள் பலவுற வயங்கல்
இகலும் வெய்யகோ ளிரண்டுமா யொருவடி வெய்தி
அகல்வி சும்பிடைக் கதிர்களின் புறமறைத் தனைய.

இ—ள்: சிகர மால் வரை அன்ன மாளிகை தொறும் சிவணும் மகரதோரணம்—முடிகளையுடைய பெரிய மலைகளை நிகர்த்த வீடுகடோறும் பொருந்திய மகர தோரணங்களானவை, பல ஆடிகள் உறவயங்கல்—பல கண்ணாடிகள்(தம்பக்கத்தே) பொருந்த விளங்குந்தன்மை, இகலும் வெய்யகோள் இரண்டும் ஆய் ஒரு வடிவு எய்தி—பகைக்கின்ற கொடிய இராகு கேதுக்களென்னுங் கிரகங்க ளிரண்டுங் கூடி ஒருருக் கொண்டு, அகல் விசும்பு இடை கதிர்களின் புறம் மறைத்து அனைய—அகன்ற ஆகாயத்திற் சூரிய சந்திரர்களின் புறத்தை மறைத்தாற்போலும் எ—று.

இரண்டு மகரமீன்கள் பொருந்தி இரு புடையுந் தூங்கும் வடிவாக, நடுவிற் பலவிதமான கொடிகள் செறிய அமைந்திருப்பது மகரதோரணம்; இதனை,

"த்வயோர் மகரயோர்வக்த் ரைஸ்ஸ்க்தம்மத்யமபூரிதம்
நாநாவிதலதாயுக்தமேதந்மகர தோரணம்"

என்னுங் காமிகாகம வசனத்தா லுணர்க. இவ்விலக்கணமுடைய மகர தோரணங்கள் பல கண்ணாடிக ளழுத்தப்பெற்று விளங்குதலின், சந்திரனை மறைப்பதாகிய ராகுவும் சூரியனை மறைப்பதாகிய கேதுவும் ஒன்ருகி நீண்டு பல சூரிய சந்திரர்களின் புறத்தை ஓர் காலத்திற்றானே மறைத்ததுபோலும் என்பது கருத்து. இது அபூதவுவமை. மகரங்கட்கு இராகு கேதுக்களும் கண்ணாடிகளுக்குச் சூரிய சந்திரருமுவமை.

மகரதோரணங்கள் அங்குள்ள கண்ணாடிகளிற் பிரதிபிம்பித்தலை இவ்வாறு கூறியுவமித்தன ரென்பர் சிலர். அவை பிரதிபிம்பித்தலாற் கண்ணாடியின் புறம் மறைக்கப்படுத லின்மையின், அது பொருந்தாதென்க.

மறைத்தால் என்னும் வினையெச்சத்தில் ஆல் விகுதி தொக்கது, (27)

செம்பொ னிற்புரி நிலையுடைத் திகிரியந் தேர்கள்
அம்ப ரத்திடை வசியுற வீற்றுவீற் ருகுந்
தம்ப முற்றல மருவன செய்யகோற் றலையிற்
பம்ப ரத்துருத் திரிப்புறக் கறங்கிய படிய.

இ—ள்: செம்பொனில் புரி நிலை உடை திகிரியம் தேர்கள் — செம்பொன்னினாற் செய்யப்பட்ட நிலையாயமைக்கப்பட்ட உருளைகளையுடைய தேர்கள், அம்பரத்து இடை வசி உற வீற்று வீற்று ஆகும் தம்பம் உற்று அலமருவன — ஆகாயத்தின்கண்ணே கூரானது பொருந்த வெவ்வேருயமைந்துள்ள தம்பங்களில் பொருந்திச் சுழல்வன; ஆதலின், செய்யகோல் தலையில் பம்பரத்து உரு திரிப்பு உற கறங்கிய படிய — செப்பமாகிய கோலினுச்சியிற் பற்றிப் பம்பரங்களினுருவங்களைச் சுழற்ற அவை சுழலுந்தன்மை போன்றன எ—று.

மாளிகைகடோறுங் கூர்மேலாக நிறுத்திய தம்பங்களில் நிலைத்தேர்களமைக்கப்பட்டு இரவும் பகலும் காற்றினால் சுழன்றுகொண்டிருத்தல், கோல்களினுச்சியிற் பம்பரங்களைச் சுழற்ற அவை சுழலுதல்போலும் என்பது கருத்து.

செம்பொனிற்புரிதேர்கள் நிலையுடைத்தேர்கள் எனத் தனித்தனி இயையும். செயவெனெச்சங்களுள் முன்னையது காரியப்பொருளிலும் பின்னையது காரணப்பொருளிலும் வந்தன. நிலைத்தேரை மரக்காற்றாடிபெனவும் வழங்குப.

பளிங்கி னாற்செய்த தெற்றியின் றலைமிசைப் பனிதோய்
வளங்கொ ணித்திலஞ் செம்மணி குயிற்றிய வைப்பில்
துளங்க நாற்றிய பொன்மணிப் பாலிகை தொகுவ
குளங்கொ டாமரை மலர்ப்பொகுட் டாயின குறிக்கின்.

இ—ள்: பளிங்கினால் செய்த தெற்றியின்தலை மிசை—பளிங்குக் கற்களாலியற்றிய திண்ணையின்மேல், பனி தோய் வளம் கொள் நித்திலம் செம்மணி குயிற்றிய வைப்பில்—குளிர்ச்சி பொருந்திய வளப்பத்தினையுடைய முத்துக்களும் மாணிக்கங்களும் அழுத்திய இடங்களிலே, துளங்க நாற்றிய பொன் மணி பாலிகை தொகுவ—விளங்கும்படி முளையாகச்செய்த பொன்னினாலும் இரத்தினங்களாலுமியன்ற பாலிகைகள் செறிந்திருப்பன, குறிக்கின்—(அவை எவை போன்றன என) ஆராயுங்கால், குளம் கொள் தாமரை மலர் பொகுட்டு ஆயின—தடாகத்திற் பொருந்திய தாமரைப்பூவிலுள்ள பொகுட்டுப் போன்றன எ—று.

தெற்றியின்றலை—திண்ணையினிடம். பனிதோய்நித்திலம் வளங்கொள் நித்திலம் எனத் தனித்தனி இயையும். பொகுட்டு—தாமரை மலரினடுவிலிருப்பது; இதை வடமொழியிற் கர்ணிகை என்பர்.

பளிங்குக்கற்படுத்த திண்ணைக்குத் தடாகத்தையும் முத்துநிலத்திற்கும் மாணிக்கநிலத்திற்கும் வெண்டாமரை செந்தாமரை மலர்களையும் பாலிகைகட்கு அத்தாமரைமலர்ப் பொகுட்டையும் உவமித்தார். (29)

ஓவி யத்தியன் மரகதத் தலத்தின தும்பர்த்
தாவி லாடகத் தலமிசை நித்திலத் தலமேற்
கோவை பட்டசெம் மணித்தலம் பொலிதலாற் கொண்மூ
மூவ கைக்கதிர் வியலிடந் தெரிப்பதம் மூதூர்.

இ—ள்: ஓவியத்து இயல் மரகத தலத்தினது உம்பர்—சித்திரத்துடனமைந்த மரகதநிலத்தின்மேல், தா இல் ஆடக தலம்—குற்றமில்லாத பொன்னிலமும், மிசை நித்தில தலம்—அதன்மேல் முத்துநிலமும், மேல் கோவை பட்ட செம்மணி தலம் பொலிதலால்—அதன்மேல் வரிசைப்படுத்திய மாணிக்கரத்தினத்தாலாகிய நிலமும் பொலிந்திருத்தலினால், அ முது ஊர்—அந்தப்பழைய காஞ்சிநகரமானது, கொண்மூ மூவகை கதிர் வியல் இடம் தெரிப்பது — மேகமண்டலத்தையும் முச்சுடர்களின் பெரியமண்டலங்களையும் முறையே காண்பிப்பது எ—று.

நால்வகை நிலங்களும் ஒன்றன்மேலொன்றடுக்காயிருத்தல், முறையே, மேகமண்டலமும் சூரிய சந்திராக்கினிமண்டலங்களும் ஒன்றன்மேலொன்று அடுக்காயிருத்தல்போலுமென்பது கருத்து. முதுமை ஊர்—மூதூர் எனச் சந்திபெற்றது. (30)

இச்செய்யுளால் மேன்மாளிகைகளின் சிறப்புக்கூறப்பட்டது.

கன்னல் வேளெனும் மைந்தரும் மாதருங் கலந்து
மன்னு நித்தில மாளிகைப் பத்தியின் மாடே
பொன்ன வாஞ்சிறை மணிமயிற் குழாத்தொடும் போகும்
அன்னம் மாமதி முகிலிடை நுழைந்துபோ யனைய.

இ—ள்: கன்னல் வேள் எனும் மைந்தரும் மாதரும் கலந்து மன்னும் நித்தில மாளிகை பத்தியின் மாடு—கருப்புவில்லையுடைய மன்மதன் போன்ற (பேரழகினை யுடைய) காளையர்களும் மங்கையர்களும் கூடியிருக்கின்ற முத்துக்களாற் செய்யப் பட்ட மாளிகைவரிசையின் பக்கத்தில், பொன் அவாம் சிறை மணி மயில் குழாத் தொடும் போகும் அன்னம்—அழகுபொருந்திய சிறகினையுடைய கரிய மயிற்கூட் டத்தோடும் செல்லும் அன்னப்பறவை, மா மதி முகில் இடை நுழைந்து போய் அனைய—பூரணசந்திரன் மேகங்களினடுவே நுழைந்து சென்றாற்போலும் எ—று.

ஏ அசை. போயினால் என்பது போய் எனத்தொக்கது, வேளென்பது முரு கக்கடவுட்கும் பெயராதலின் பிறிதினியைபுநீக்கிய விசேடணம்புணர்த்தி ''கன்னல் வேள்'' எனவும், கலாபத்தை விரித்துக்கொண்டு சென்றனவென்பது போதர ''பொன்ன வாஞ்சிறை......மயில்'' எனவும் கூறினார்.

முத்துமாளிகையில் மயில்களின் சாயை தோன்றுமிடங்கள் கறுத்தும் அன்னத் தின் சாயைதோன்றுமிடம் மாத்திரம் வெளுத்தும் தோன்றுதலின், முறையே மேகத் தையும் அம்மேகத்திநுழைந்து செல்லுஞ் சந்திரனையும் உவமித்தார். மயில்கட்கும் அன்னத்திற்கும் மேகத்தையும் சந்திரனையும் உவமித்துக் கூறுவர் சிலர். அவ்வாறு கொள்ளின், ''நித்தில மாளிகைப் பத்தியின்மாடே'' என்றது வாளாகூறலா மென்க. (31)

தண்ட மாகியே புவியுறு பணியெலாந் தழுவி
அண்ட மீமிசை யிரவியும் மதியமு மடைதல்
கண்டு மாளிகைச் சூளிகை மருங்குபோய்க் கவர்வான்
கொண்ட சீற்றத்தின் நாவெறிந் தன்னபூங் கொடிகள்.

இ—ள்: புவி உறு பணி எலாம்—பூவுலகத்திலுள்ள சர்ப்பங்களெல்லாம், அண்ட மீமிசை இரவியும் மதியமும் அடைதல் கண்டு—ஆகாயத்தின்மேற் சூரிய னுஞ் சந்திரனும் வருதலைப் பார்த்து, மாளிகை சூளிகை மருங்கு போய்—(அவை கள் அணிமையனவாம்படி) மாளிகைகளிலுள்ள தூபிகளின் பக்கங்களில் இவர்ந்து சென்று, தண்டம் ஆகி தழுவி—தண்டாகாரமாகி ஒருங்குகூடி, கவர்வான் கொண்ட சீற்றத்தில் நா எறிந்து அன்ன—அவைகளைப் பற்றும்படி கொண்ட கோபத்தினால் நாவை நீட்டினாற்போன்றன, பூ கொடிகள்—மலர்களையுடைய கொடிகள் எ—று.

இராகு கேதுக்களாகிய சர்ப்பங்களிரண்டும் சந்திர சூரியர்களைப் பற்ற நாம் வாளாவிருப்பதாவென்று பூவுலகிலுள்ள சர்ப்பங்கள் நினைந்து அச்சூரிய சந்திரர் கள் தமக்கணிமையாமாறு மாளிகைகளின் மேலிவர்ந்து போய்ப்பற்ற முயன்று ஒருங்கு குழுமித் தண்டாகாரமாக நாநீட்டி நிற்றல்போல, அம்மாளிகைகளிலுள்ள தூபிகளினருகே பொன் முதலியவற்றால் அழகின்பொருட்டமைக்கப்பட்ட பூங் கொடிகள் பொருந்தியிருந்தன என்பது கருத்து.

ஏ அசை. எறிந்தால் என்னும் வினையெச்சத்தில் ஆல் விகுதிதொக்கது. சூளிகை தூபிக்குப் பெயரென்பதை, (32)

"ஸ்தூபிகாச கட: கிலச்சுளுகஸ்தூபிரித்யபி ।
சிகாஸ்தூபிரிதிக் யாதாசூளிகாசத்வி ஜோத்தமா: ॥"

எனக் காமிகாகமங் கூறுதலாலுணர்க.

தேனை வென்றசொல் லாரொடு மைந்தருந் திளைக்கும்
மீன வாவிபோல் வியன்படி கத்தினுல் விளங்குந்
தான மீமிசைத் தயங்கிய முழுமணித் தலந்தான்
வான நின்றிடு தெய்வத மானமே மானும்.

இ—ள்: தேனை வென்ற சொல்லார் ஒடு மைந்தரும் திளைக்கும் மீனவாவிபோல்—தேனையும்வென்ற (அத்துணை இனிமைவாய்ந்த) சொற்களைப் பேசுகின்ற மங்கையர்களுடன் காளையர்களும் ஸ்நாநஞ் செய்கின்ற மீன்களையுடைய தடாகம் போல, வியன் படிகத்தினுல் விளங்கும் தானம் மீமிசை—பெரிய பளிங்கினுற் செய்யப்பட்டு விளங்குகின்ற இடத்தின்மேல், தயங்கிய முழுமணித்தலம்—விளங்கிய மாணிக்க நிலமானது, வானம் நின்றிடு தெய்வத மானமே மானும்—ஆகாயத்தினிற்கின்ற தெய்வ விமானத்தையே போலும் எ—று.

சிறப்பும்மை விகாரத்தாற்றெக்கது. முழுமணி—மாணிக்கம். தான்—அசை நிலை. ஏ—தேற்றம்.

தேனைப் பருகுவார்க்குத் தோன்றுஞ்சுவையினும் பன்மடங்கதிகமான சுவை கேட்பார்க்குத் தோன்றுமாறு இன்சொற்களைப் பேசுதலின் 'தேனைவென்றசொல் லார்' எனவும், நீர் வாவிபோலுமென்பது போதர 'திளைக்குமீனவாவிபோல்' எனவும் கூறினுர். (33)

தேவர் தானவர் முனிவரர் சித்தரோ டியக்கர்
வாவு கின்னர ருவணர்கந் தருவர்மற் றுள்ளோர்
ஏவ ருந்தம தகன்பதி யிகந்தவ ணெய்தா
மேவு கின்றன தனித்தனி யிருக்கைகண் மிகுமால்.

இ—ள்: தேவர் தானவர் முனிவரர் சித்தரோடு இயக்கர் — தேவர்களும் அசுரர்களும் முனிவர்களும் சித்தர்களும் இயக்கர்களும், வாவு கின்னரர் உவணர் கந்தருவர்—தாவிச்செல்லுகின்ற கின்னரர்களும் கருடர்களும் கந்தருவர்களும், மற்று உள்ளோர் ஏவரும்—பிறரனைவரும், தமது அகன் பதி இகந்து அவண் எய்தா—தங்கள் பெரிய இருக்கைகளை வெறுத்துவிட்டு அக்காஞ்சிநகரில் வந்து, மேவுகின்றன இருக்கைகள்—வசிக்கின்ற இருப்பிடங்கள், தனித்தனி மிகும்—வேறு வேருக மிகுந்திருக்கும் எ—று.

ஒடு எண்ணில்வந்தது. எவருமெனற்பாலது ஏவருமெனநீண்டது. மேவுகின்றன—வினைமுற்றுப்பெயரெச்சம். தேவராதியோர் தம்பதியைவெறுத்துவிடுங் காரணத்தை மேல் எழுபத்தொன்பதாம் செய்யுளிற் காண்க.

தத்தம் நகரில் வாழ்வதுபோல எக்காலத்தும் நிலைபெற்று வாழும்படி அமைக்கப்பட்டனவென்பதுபோதர 'தனித்தனியிருக்கைகள்' என்றுர். (34)

தூங்கு குண்டிகை யருகுறக் காலெதிர் தூண்டி
ஓங்கு நாசிமேல் விதிமுறை நயனங்க ளுறுத்தி
ஆங்கொ ராசனத் திருந்தர னடியகத் தடக்கிப்
பாங்கர் மாதவம் புரிகுநர் சாலைகள் பலவால்.

இ—ள்: தூங்கு குண்டிகை அருகு உற—தூங்குகின்ற கமண்டலம் தமது பக்கத்திற் பொருந்த, கால் எதிர் தூண்டி—பிராணவாயுவை எதிரே செலுத்தி, ஓங்கும் நாசி மேல் விதிமுறை நயனங்கள் உறுத்தி—உயர்ந்த மூக்கு நுனியிற் சாஸ்திரவிதிப்படி விழிகளைப்பதித்து, ஆங்கு ஒரு ஆசனத்து இருந்து—அவ்விடத்தே ஓராசனத்தில் இருந்து, அரன் அடி அகத்து அடக்கி—சிவபெருமானது திருவடிகளை இருதயகமலத்திலிருத்தி, பாங்கர் மாதவம் புரிகுநர் சாலைகள் பல—பக்கங்களிற் பெரிய தவத்தைச் செய்கின்ற முனிவர்களது ஆச்சிரமங்கள் பல (அந்நகரத்தில் உள்ளன) எ—று.

ஆல் அசை. 'காலெதிர் தூண்டி' என்பதனுற் பிராணுயாமமும், 'நாசிமேல் விதிமுறை நயனங்களுறுத்தி' என்பதனுற் பிரத்தியாகாரமும் தாரணையும், 'ஆங்கொராசனத்திருந்து' என்பதனுல் ஆசனமும், 'அரனடியகத் தடக்கி' என்பதனுல் தியானமும் சமாதியும் ஆகச் சடங்கயோகமும் இச்செய்யுளி லடக்கிக் கூறப்பட்டனவென்க.

பிராணுயாமமாவது:—பிராணவாயுவைத் தடுத்தல். அது இரேசகம் பூரகம் கும்பகம் என மூன்று பகுதியை யுடையது. அவற்றுள், இரேசகமாவது: அகத்துள்ள அசுத்தவாயுவைப் புறத்தே கழித்தல். பூரகமாவது: புறத்துள்ள சுத்த வாயுவினுலே இயன்றமட்டுஞ் சரீரத்தை நிறைத்தல். கும்பகமாவது: கழித்தலையும் உட்கொள்ளலையு மொழித்து உள்ளேயுள்ள வாயுவைத் தடுத்துநிற்றல். பிரத்தியாகாரமாவது:—ஐந்து அங்கங்களையும் ஆமை உள்ளடக்குதல் போலப் பஞ்சேந்திரியங்களையு மடக்கி உண்ணேக்கல். தாரணையாவது:—கண்டம் இதயம் நெற்றி கபாலம் நாபி என்பவற்றுளொன்றில் இடைவிடாது சிந்தைவைத்தல். ஆசனமாவன:—சுவத்திகம் கோமுகம் பதுமம் வீரம் கேசரி பத்திரம் முத்தம் மயூரம் சுகம் என்னும் ஒன்பதுமாம். அவற்றுள், சுவத்திகமாவது: தொடைக்கு முழங்காற்கு நடுவே இரண்டுள்ளங் கால்களையுஞ் செலுத்தி யிறுமாந்திருத்தல். கோமுகமாவது; சகனப் பக்கத்தி லிருகாற்பரட்டையு மாற வைத்து அவ்விருகாற் பெருவிரல்களையுங் கையிற் பிடித்திருத்தல். பதுமமாவது: இருதொடைமேலு மிரண்டுள்ளங் காலையு மாறித் தோன்றவைத்தல். வீரமாவது: வலத்தொடையி லிடக்காற் பரட்டைச் சேர்த்தி யிறுமாந்திருத்தல். கேசரியாவது: பீசத்தின் கீழ்ச் சீவினியிடத்துப் பரட்டைவைத்து இட முழங்கையை முழந்தாளில் வைத்து அங்குலி விரித்து நாசியைப் பார்த்திருத்தல். பத்திரமாவது: பீசத்தின் கீழ்ச் சீவினியிடத்து இருகாற் பரட்டையும் வைத்து அவ்விரு பதத்தையு மிருகையாலு மிறுகப் பிடித்தசையா திருத்தல். முத்தமாவது: இடக்காற்பரட்டாற் சீவினியை யழுத்தி வலக்காற்பரடு அப்பரட்டின் கீழழுந்த விருத்தல். மயூரமாவது: முழங்கை யிரண்டு முந்திப் புறத்தி லழுத்தப் புவியிற் கையூன்றிக் காலீட்டித் தலை நிமிர்ந்திருத்தல். சுகமாவது; சுகமுந்திடமு மெவ்வாறிருக்கி னெய்துமோ அவ்வாறிருத்தல். தியானமாவது:—ஆற்றினீர் இடைவிடாது பாய்தல்போலச் சிவத்தை இடைவிடாமற் சிந்தித்திருத்தல், இது சகுணம் நிர்க்குணமென இருவகைப்படும். சகுணத் தியானமாவது: உருவத்துட னிருக்குஞ் சிவபெருமானை மந்திரத்தாற் றுதித்து மனத்தி லிருத்துதல். நிர்க்குணத் தியானமாவது: மந்திரசபமின்றிப் பிரமத்தை மனத்தி லிருத்துதல். தன்மாத்திரையைந்துஞ் செவி முதலாகிய ஐந்திற் பொருந்துந்துணையுமே இது தியான மெனப்படும். இதன்மேற் சமாதி யெனப்படும். சமாதியாவது:—ஆன்மாத்தானல்லது பிறிதொன்றில்லை யெனும்படி புலனிறந்து சூரியன் இருளை நீக்கி ஒளிபரப்பி விளங்கல் போல நினைவினுள்ளே பிரகாசித்து அலையற்ற சமுத்திரமெங்கும் நிறைந்து நின்றாற்போல் நிறைந்து பொலிந்து சிவத்தைத் தரிசித்திரண்டற் றிருத்தல். இவை சில நூல்களில் வேறுபாடாகவுங் கூறப்படுகின்றன. அவற்றை ஈண்டு விரிப்பிற் பெருகும்.

தன் கமண்டலமே தனக்கு யுக்தமாதலின் அதனைப் பிறர் கைப்படாவண்ணம் பாதுகாப்பாக வைத்தனரென்பது போதர 'தூங்கு குண்டிகை யருகுற' எனவும், பிராணவாயுவை உள்ளிருந்து வெளியே செல்லாவண்ணம் அடக்கி என்பார் 'காலெதிர் தூண்டி' எனவும், சாமுத்திரிகா சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட புருட விலக்கணத்திற் கேற்ப நீண்டுயர்ந்த நாசி யென்பது போதர 'ஓங்குநாசி' என வும், சிவபெருமான் பஞ்ச கிருத்திய சூக்கும நடன மியற்றுந் தானமாகிய புருவ மத்தியத்தை யுள்ளமைத்து இமையாது பார்த்தென்பது போதர 'நாசிமேல் விதி முறை நயனங்களுறுத்தி' எனவும்,

"எறிபுனல் சாம்பர் கரியுமி கொசுகீ யென்புதீ யெய்திட மன்றங்
குறு கருங்கானந் தொழுவிவற் றிருந்து யோகினைக் குறித்தலுமாகா"

எனக்காசிகாண்டம் விலக்கிய தானங்களை நீக்கி, ஆலயம் மடம் புண்ணிய நதிதீர முதலிய நற்றானங்களில் தருப்பை கம்பலம் புலித்தோல் கருமான்றோல் பட்டு யஞ்ஞ விருக்ஷம் முதலியவற்றா லமைந்த ஆசனங்களுள் யோகசித்திக்கும் அவகாசத்துக்கு மேற்ற ஒன்றில் பதுமாசனமாகவேனும் ஏற்ற பிற ஆசனமாகவேனு மிருந்தென் பது போதர 'ஆங்கொ ராசனத்திருந்து' எனவும்,

"துயக்கந் துடைத்த ஞானியர்க்குத் தோன்று மெங்குந் துகளில்லான்
மயக்க மறுத்த யோகர்க்கு மருவுமிதய மலர்மீதே
பயக்கும் பலத்தைப் பாவகனிற் பார்ப்பார் தமக்குப் பாங்குறவே
நயக்கு முருவின் மற்றை யவர்நாட வுறைவ னூடோறும்"

எனச் சிவதருமோத்தரங் கூறியவாறு அனைத்தையுந் தம்முளமமைத்தலால் அரசப்த வாச்சியனான சிவபெருமான் யோகியர்க்கு மனத்து ளமைதலின் 'அரனடியகத் தடக்கி' எனவும்,

"மூக்குநுனி தன்னையிரு கண்கண் முகிழாதே
நோக்கியுயர் மாயைகள் விடுத்து நுவன்ஞானந்
தேக்கியெனை யன்பினொடு சிந்தையி னிருத்தி
யேக்கறவி னோடு பணிவோர்க் கெளிய னாவேன்"

எனக் கூர்மபுராணம் கூறியவாறே சிவபெருமான் எளிவந்தருளுதற்கேற்ற தொழி லாதலின் 'மாதவம்' என விசேடித்தார்.

இச்செய்யுளால் யோகியர் ஆச்சிரமங்களின் சிறப்புக் கூறப்பட்டது. (35)

பாடு நான்மறை யந்தணர் வேள்விகள் பயில
மூடு தண்புகை யண்டமுங் கடந்தன முன்னந்
தேடு கின்றதோர் பரஞ்சுடர் மீட்டுமித் திறத்தால்
நீடு கின்றதோ வென்றுநான் முகத்தனும் நினைய.

இ—ள், நால் மறை பாடும் அந்தணர் வேள்விகள் பயில மூடு தண் புகை— நான்கு வேதங்களையும் (சந்த விலக்கணந் தவறாது) ஓதுகின்ற பிராமணர்கள் யாகங்களைச் செய்தலால் மூடிய செறிந்த புகைப் படலங்கள், முன்னம் தேடு கின்றது ஓர் பரஞ்சுடர் மீட்டும் இ திறத்தால் நீடுகின்றதோ என்று நான்முகத் தனும் நினைய—முன்னை நாளில் நாந் தேடிய ஒப்பற்ற பரஞ்சோதியானது பின் னரும் இவ்வடிவாக வளருகின்றதோ என்று நான்கு முகங்களையுடைய பிரமதேவ ரும் நினைக்கும்படி, அண்டமும் கடந்தன—ஆகாயத்தையுங் கடந்து அப்பாற் சென்றன எ—று.

முற்காலத்திலே திருமாலும் யானுமாகத் தேடும்படி செந்தழல் வடிவாய் வளர்ந்த பரஞ்சோதியானது பின்னுமோர்முறை கருநிற வடிவாக வளருகின்றதோ என்று சத்தியலோகத்தில் வாழும் பிரமதேவரும் ஐயுறும்படி அந்நகரிலுள்ள வேதி

யர்கள் வளர்க்கும் யாகாக்கினியின் புகை அண்டத்தைக் கடந்து அப்பாற் சென் றன என்பது கருத்து. அந்தண சிரேட்டர்கள் வேள்வி புரிகின்றனரென்பது தாற் பரியம்.

ஓர் அசைநிலை யெனினுமாம். நால் வேதங்களாவன: இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்பன. அந்தணர்—அழகிய தட்பத்தினை யுடையவர். வேள்வி— வேட்கப்படுவது. அண்டமும் நான்முகத்தனும் என்பவற்றில் உம்மைகள் உயர்வு சிறப்பு. முன்னம் தேடுகின்றது—காலமயக்க வழுவமைதி. தேடுகின்றது—வினைமுற் றுப் பெயரெச்சம். இதற்கு விதி: இலக்கணக்கொத்தில் ''இருவகை முற்றுமீரெச் மாதலும்.........உளவென மொழிப வொரோவழிப் புலவர்'' என்பதாம். செய வெனெச்சங்களுண் முன்னையது காரணப் பொருட்டு; பின்னையது காரியப் பொருட்டு.

வேதங்களையோதி யுணர்ந்தவரே யாகஞ் செய்தற்குரியராதலின் 'பாடுநான் மறை யந்தணர்' என்றார். (36)

நான்ம மறைக்குலத் தந்தணர் நவையறு காட்சி
ஊன்ம றைத்திடு முயிரென வோம்பிய வொழுக்கார்
மேன்மு றைக்கணோ ரைம்புலப் படிற்றினை வென்றோர்
வான்ம றைத்திடு மாளிகை வீதியும் மலிந்த.

இ—ள்: நவை அறு காட்சி ஊன் மறைத்திடும் உயிர் என ஓம்பிய ஒழுக் கார்—குற்றமற்ற தோற்றத்தினையுடைய உடலான் மறைக்கப்பட்ட உயிரைப் போலப் பேணுகின்ற நல்லொழுக்கத்தினை யுடையவர்களும். மேல் முறைக்கணோர்— பாரம்பரியக் கிரமத்தில் (தவறுபடா தமைந்து) நிற்பவர்களும், ஐம்புல படிற்றினை வென்றோர்—ஐம்புலங்களால் விளையும் குற்றத்தை அடக்கினவர்களுமாகிய, நால் மறை குலத்து அந்தணர் — நால்வேதங்கட்குமுரிய குலத்தவர்களாகிய வேதியர்க ளது, வான் மறைத்திடும் மாளிகை வீதியும்—ஆகாயத்தை மறைக்கின்ற [அத்துணை உயர்ச்சி மிக்க] மாளிகைகள் பொருந்திய வீதிகளும், மலிந்த—அந்நகரில் நிறைந் திருந்தன எ—று.

உம்மை எச்சம். நவையறு காட்சி யென்றது பிரமதேசு முதலியவற்றாற் புனிதமுறப் பொலிந்து தோன்றுதலை. காட்சி அறிவெனினுமாம். வேதவுரிமை, அந்தணர் முதன் மூன்று சாதியார்க்கு முளதாயினும், அரசர் வணிகரென்னுமிரு சாதியாரும் ஓதற்கல்லது ஓதுவித்தற்கதிகார மிலராக, முதல் வருணத்தினராய அந்தணர் அவ்விரண்டின்கண்ணும் அதிகாரமுளராகிய சிறப்புநோக்கி 'நான்மறைக் குலத்தந்தணர்' எனவும், 'ஒழுக்கம் விழுப்பந் தரலானொழுக்க—முயிரினுமோம்பப் படும்' என்றபடி ஒழுக்கத்தைத் தம்முயிர்போலப் பாதுகாப்பவரென்பது போதர உயிரென வோம்பிய வொழுக்கார்' எனவும், முன்னோரொழுகிய கிரமத்திற்றவ றாது நடத்தல் வேண்டுமெனத் தருமநூல்கள் விதித்தவாறு நிற்பவரென்பது போ தர 'மேன்முறைக்கணோர்' எனவும், 'உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்—வரனென்னும் வைப்புக்கோர் வித்து' என்றவாறு ஐம்புலன்களைத் தம் வயப்படுத்தி யடைத்தவ ரென்பது போதர 'ஐம்புலப் படிற்றினை வென்றோர்' எனவும் கூறினர்.

இச்செய்யுளாலும் முற்செய்யுளாலும் அந்தணர் வீதியின் சிறப்புக் கூறப்பட் டது. (37)

ஏவு பல்படை வலியினர் வெஞ்சம மிகந்தோர்
நாவி னுன்மறை பயில்பவர் நணுகுறு நலத்தாற்
கோவு நீணகர் மறுகெலாங் குருமணிச் சிகரத்
தேவு நீணகர் நிலைமையே போல்வன தெரியின்.

இ—ள்: ஏவு பல்படை வலியினர்—பல படைக்கலங்களைப் பிரயோகித்தலிற் சாமர்த்தியமுடையவர்களும், வெம் சமம் இகந்தோர்—கொடிய பல போர்களைக் கடந்தவர்களும். நாவில் நால்மறை பயில்பவர்—நாக்கினுலே நான்கு வேதங்களையும் ஓதுகின்றவர்களுமாகிய அரசர்கள், நணுகுறும் நலத்தால்—பொருந்தி வாழும் நன்மையினுல், நீள் நகர் கோவு மறுகு எலாம்—நெடிய அந்தக் காஞ்சி நகரிலுள்ள அரசர் வீதிமுழுவதும், தெரியின்—ஆராயுமிடத்து, குருமணி சிகரநீள் தேவு நகர் நிலைமையே போல்வன—நிறம் விளங்குகின்ற இரத்தினங்க ளிழைத்த முடிகளையுடைய பெரிய தேவலோகத்தின் றன்மையையே நிகர்ப்பன எ—று.

ஏவு பல்படை வலியினர்=பல்படை ஏவுதலில் வலியினர். கோவு தேவு என்பவற்றில் உகரங்கள் சாரியைகள். ஏகாரம்—பிரிநிலை. நணுகுறு நலத்தால்போல்வன என இயையும்.

ஓதல் வேட்டல் ஈதல் உலகோம்பல் படைபயிறல் பொருதல் என்னும் அரசர் தொழிலாறனுள் 'ஏவு பல்படை வலியினர்' என்றதனுற் படை பயிறலும், 'வெஞ்சம மிகந்தோர்' என்றதனுற் பொருதலும், 'நாவி னுன்மறை பயில்பவர்' என்றதனுல் ஓதலும் கூறப்பட்டன, அக்காஞ்சி நகரிலுள்ள அரசர் குலத்தவரெல்லாம் இந்திரச் செல்வத்தினை யுடையவராதலின் அவர் வீதிகளைச் சுவர்க்கலோகத்திற் குவமித்தார்.

இச்செய்யுளால் அரசர் வீதியின் சிறப்புக் கூறப்பட்டது' (38)

அணியி னேங்கலும் பன்மணிக் குவால்களு மார்வந்
தணிவி லாடகக் குவைகளும் பிறவுமுன் றழைப்பக்
கணிக ணுணுறு கற்பக மனையன காட்சி
வணிக ராவணத் தெற்றிகள் வயின்றொறும் வயங்கும்.

இ—ள்: அணியின் ஓங்கலும்—ஆபரணக் குவியல்களும், பல் மணி குவால்களும்—பலவகைப்பட்ட இரத்தினக்குவியல்களும், ஆர்வம் தணிவு இல் ஆடக குவைகளும்—(கண்டோர்க்கு) ஆசைநீங்குதலில்லாத பொற்குவியல்களும், பிறவும் முன் தழைப்ப—மற்றைய பொருள்களும் முன்னுகப்பொலிய, கணிகள் நாண் உறு கற்பகம் அனையன காட்சி வணிகர் ஆவண தெற்றிகள்—(அளவிடுதலரிதாதலின்) கணிதர்களும் வெட்கமடையத்தக்க கற்பகதருவைப்போன்ற தோற்றத்தையுடைய வைசியர்களது கடைவீதியிலுள்ள திண்ணைகள், வயின் தொறும் வயங்கும்—அந்நகரினிடங்கடோறும் விளங்கும் எ—று.

கணிகள்—கணிதர்கள். சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. அனையன —குறிப்புமுற்றுப்பெயரெச்சம். எல்லாப் பொருள்களையுந் தம்மிடத்தமைத் துடையனவாதலின் வணிகர்வீதிகளைக் 'கற்பகமனையன காட்சி......... ஆவணத்தெற்றிகள்' என்றூர். கணிகணுணுறு ஆவணத்தெற்றி, கற்பக மனையன காட்சி ஆவணத் தெற்றி எனத் தனித்தனி இயையும்.

இச்செய்யுளால் வைசியர் வீதியின் சிறப்புக் கூறப்பட்டது. (39)

கங்கை மாமகள் தொல்பெருங் குலத்தர்கா சினியின்
மங்கை யாளருள் புரிதரு மகாரெனும் வழக்கோர்
செங்கண் மானிகர் வெறுக்கையர் அயன்பதஞ் சேர்ந்தோர்
துங்க வீதியு மேனையர் மறுகொடுந் தொகுமே.

இ—ள்: கங்கை மா மகள் தொல் பெரும் குலத்தர்—மகிமை பொருந்திய கங்காதேவியினது பழைய பெரிய மரபிற்பிறந்தவர்களும், காசினியின் மங்கையாள் அருள்புரிதரும் மகார் எனும் வழக்கோர்—பூமிதேவி பெற்ற புத்திரர்களென்று சொல்லப்படும் வழக்கத்தை யுடையவர்களும், செம் கண் மால் நிகர் வெறுக்கையர்—சிவந்த கண்ணேயுடைய விஷ்ணுமூர்த்தியையொத்த பெருஞ்செல்வத்தையுடையவர்களும், அயன்பதம் சேர்ந்தோர்— பிரமதேவரது பாதங்களிலுதித்தவர்களும் ஆகிய வேளாளரது, துங்கவீதியும்—மேன்மைபொருந்திய வீதிகளும், ஏனையர் மறுகொடும் தொகும்—மற்றையவர்களது வீதிகளுடன் (அந்நகரிற்) செறிந்திருக்கும் எ—று.

ஏ அசை. ஏனையரென்றது அந்தணர்முதலிய நாற்குலத்தாடவருந் தஞ்சாதியாரல்லாத பெண்களுடன் கூடிப்பெற்ற அனுலோமராதியர் வசிக்கும் வீதிகளை. இவர்திறத்தை மேற்காமதகனப்படலம் 18 ஆஞ் செய்யுளிற் காண்க

" ஓங்கியநாற் குலத்தொவ்வாப் புணர்விற் றம்மில் உயர்ந்தனவும் இழிந்தனவு மான சாதி
தாங்குழுமிப் பிறந்தகுல பேதம் எல்லாம் தந்தகைமைக் கேற்றதனி இடங்கள் மேவி
ஆங்குநிறை கிளைபயின்று மரபின் ஆற்ற அடுத்தவினைத் தொழின்முறைமை வழாமை நீடு
பாங்குவளர் இருக்கைநிலை பலவுமெல்லாம் பண்புநீ டியவுரிமைப் பால அன்றே "

என்றார் சேக்கிழார் நாயனாரும். அந்தணர்முதன் முற்கூறிய மூவருணத்தாரது வீதிகளுடன் சூத்திரர் வீதியுஞ் செறிந்திருக்குமென வுரைப்பர் சிலர். வீதியு மென்பதிலும்மை—எச்சம்.

வேளாண் மரபிற் கங்கையின் வழிவந்த மரபே சிறந்ததாதலின் 'கங்கைமாமக டொல்பெருங் குலத்தர்' எனவும், பயிரிடலாதிய தொழில்களை யியற்றிப் பூமியாற் கொடுக்கப்படும் வளங்களைப் பெற்று வாழ்தலால் மண்மகள் புதல்வரென வழங்கப்படுவ ரென்பது போதர 'காசினியின் மங்கையாளருள்புரி தருமகாரெனும் வழக்கோர்' எனவும், செல்வ மடந்தையாகிய திருமகட்கு நாயகராதல்பற்றிச் செல்வமுடையாருள் முதலாக விஷ்ணு மூர்த்தியைத் தெரிந்தெடுத்து 'செங்கண் மானிகர் வெறுக்கையர்' எனவும், பிரமதேவரது முகத்தில் அந்தணரும் புயத்தில் அரசரும் தொடையில் வைசியரும் பாதத்திற் சூத்திரருந் தோன்றியமையின் சூத்திரரை 'அயன் பதஞ் சேர்ந்தோர்' எனவும், அனுலோமராதிய ஏனையருட் சூத்திரரினு முயர்ந்த தரத்தினர் சிற்சிலருளராயினும் அவர் சாதியினுஞ் சூத்திர சாதியே முதலெண்ணப்படும் விசேடமுடைத் தென்பதுபோதர 'அயன் பதஞ்சேர்ந்தோர் துங்கவீதியும்' எனவுங் கூறினர்.

பிரமதேவரின் முக முதலிய அங்கங்களில் அந்தணர் முதலிய நால்வருந் தோற்றின ரென்பதை

" மதுமடை யுடைக்குஞ் செந்தாமரை மலர்ப்பீட மேலோன்
விதுமுகத்தினின் முன்றோற்ற விளங்கு வாசனையான் முன்னோர்
கதுமென மடவாரோடு முதித்தனர் கவின்செய்தோளின்
வதுவைசெய் மடவாரோடு மன்னவ ருதித்தா ரன்றே "

எனவும், "ஊருவினுய் கர்மாதருட னுதித்தனராற் பின்னோர் — சாருமா மடவாரோடுந் தாளிடை உதித்தார்" எனவும் சூதசங்கிதை கூறுதலாலுணர்க.

கோவைசியர் பூவைசியர் தனவைசியரென வைசியர் மூவகைப்படுவரென்றும் அவருட் பூவைசியரே வேளாளரென்றும் அவரைச் சூத்திரரெனக்கூறல் பொருந்தா தென்றும் வேளாளரினுந் தாழ்ந்த சில சாதியார்களையே சூத்திரரெனக் கூறல் வேண்டுமென்றும் சிலர் பேசுவர். அவை நூற்கொள்கைக்கு முரணும்; 'காசினி யின் மங்கையா ளருள்புரி தருமகாரெனும் வழக்கோர்' எனவும் பின்னர் 'அயன் பதஞ் சேர்ந்தோர்' எனவுங் கூறுதலால் ஆசிரியர்க்கும் அஃதுடன்பாடன்றென்பது விளங்கக் கிடக்கின்றது.

இச்செய்யுளால் வேளாளர் வீதியின் சிறப்பும் பிற வீதிகளின் சிறப்புங் கூறப் பட்டன. (40)

கண்டு கேட்டவை யுண்டுயிர்த் துற்றறி கருவி
கொண்ட வைம்புல னொருங்குற நடாத்திய கொள்கைத்
தொண்டர் கூட்டமும் விழிவழிப் புனலுகத் தொழுங்கை
அண்டர் கூட்டமு மாலயந் தொறுந்தொறு மருவால்.

இ—ள்: கண்டு—(காணத்தக்கனவற்றைக்) கண்டும், கேட்டு—(கேட்கத்தக்கன வற்றைக்) கேட்டும், அவை உண்டு—உண்ணத்தக்கனவற்றை உண்டும், உயிர்த்து—(மோக்கத்தக்கனவற்றை) மோந்தும், உற்று—(பரிசிக்கத்தக்கனவற்றைப்) பரிசித் தும், அறி கருவி—அறிகின்ற கண் முதலிய ஐம்பொறிகளையும், கொண்ட—இட மாகக்கொண்டிருக்கின்ற, ஐம்புலன்—ஐம்புலன்களையும், ஒருங்கு உற நடாத்திய கொள்கை—ஒருவழிப்படச் செலுத்திய கோட்பாட்டினையுடைய, தொண்டர் கூட்ட மும்—அடியார் கூட்டமும், விழி வழி புனல் உக தொழும் கை அண்டர் கூட்ட மும்—கண்களின் வழியே ஆனந்த பாஷ்பஞ் சிந்தும்படி தொழுகின்ற கையினை யுடைய தேவர் கூட்டமும். ஆலயந் தொறும் தொறும் அரு—(அந்நகரிலுள்ள) ஒவ் வோர் தேவாலங்களினும் எஞ்ஞான்றுங் குறையா எ—று.

ஆல்—அசை. ஆலயம் தொறும் தொறும் என்ற அடுக்கு எல்லாக் கோயில் களிலுந் தவறாது பொருந்துதலை யுணர்த்திற்று. கண் செவி வாய் மூக்கு மெய் என்னும் ஐம்பொறிகளையுங் கருவியாகக் கொண்டே ஐம்புல வுணர்ச்சி பொருந் துதலின் 'கண்டு கேட்டவையுண் டுயிர்த் துற்றறி கருவிகொண்ட வைம்புலன்' என்றார். அவற்றை ஒருங்குற நடாத்த லென்றது: ஓர் பொறிவழியே புலன் செல லும்போது மற்றைப் பொறிக ளுண்குஞ் செயலற் றிருத்தலை. "ஐந்து பேரறி வுங் கண்களே கொள்ள" என்றார் சேக்கிழாரும், மெய்யன்பு கூர்ந்து வழிபடுவ ரென்பது போதர, 'விழிவழிப் புனலுகத் தொழுங்கை யண்டர்கூட்டம்' என்றார்.

ஆதி நான்முகன் எகினத்தி னடிகளு மமலன்
பாதி யாளன்றன் உவணத்தி னடிகளும் பனிக்கார்
நாத னூர்தரு தந்தியி னடிகளும் நாளும்
வீதி வீதிக டொறுந்தொறுங் காண்வர விளங்கும்.

இ—ள்: ஆதி நான்முகன் எகினத்தின் அடிகளும்—முதல்வராகிய பிரமதேவ ரின் வாகனமாகிய அன்னத்தினது அடிச்சுவடுகளும், அமலன் பாதியாளன் தன் உவணத்தின் அடிகளும்—மலரகிதராகிய சிவபெருமானது பாதித் திருமேனியை யுடைய திருமாலின் வாகனமாகிய கருடனது அடிச்சுவடுகளும், பனி கார் நாதன் ஊர்தரு தந்தியின் அடிகளும்—குளிர்ந்த மேகங்களுக்கதிபதியாகிய இந்திரன் ஏறிச் செலுத்துகின்ற ஐராவத யானையினது அடிச்சுவடுகளும், வீதிகடொறும் வீதிக

டொறும் காண்வர நாளும் விளங்கும் — அந்நகரின் ஒவ்வோர் வீதிகளிலும் எவ ருங் காணும்படி எப்போதுந் தோன்றும் எ—று.

பிரமா முதலிய தேவர்கள் அந்நகர வீதிகளிற் றினந்தோறும் வாகனருடராய்ச் சஞ்சரிப்பரென்பது கருத்து.

அடிகள்—ஆகுபெயர்கள். வீதி வீதிகடொறுந் தொறும் என்ற அடுக்கு எல்லா வீதிகளினுங் குறையாது காணப்பட்டமையை யுணர்த்திற்று.

முதற்றொழிலாகிய படைத்தற்குக் கருத்தாவாதலின் 'ஆதிநான்முகன்' என் றூர். விஷ்ணுமூர்த்தி சிவபெருமானது மேனியிற் பாதியாக நிற்றலை,

> ''இடமால் வலந்தானிடப் பாறுமாய் வலப்பாலொண்கொன்றை
> வடமா லிடந்துகில் தோல் வலமாழி யிடம் வலமான்
> இடமால் கரிதால் வலஞ்சேதிவனுக் கெழினலஞ்சேர்
> குடமாலிடம் வலங்கொக்கரையா மெங்கள் கூத்தனுக்கே ''

எனப் பொன்வண்ணத்தந்தாதியும், '' எச்சகங்களுந் தந்தமியல்பினுல்—வைச்ச நம் மொருபாதி வடிவமா—மெச்சனீர்ந்துளபத்தொடை மாயவன் '' எனக் காஞ்சிப் புராணமுங் கூறுதலாலுமுணர்க.

(42)

> மாவி னோதையுங் களிற்றின தோதையும் மருங்கின்
> மேவு தேர்களி னோதையுங் கவிகையாய் விரிந்த
> காவு சூழ்தரு மன்னர்சீ ரோதையுங் கறங்குந்
> தேவ துந்துபி யோதையு மிறுத்தில தெருவு.

இ—ள்: மாவின் ஓதையும்—குதிரைகளின் கனைப்பொலியும், களிற்றினது ஓதை யும்—யானைகளின் பிளிற்றொலியும், மருங்கில் மேவு தேர்களின் ஓதையும்—பக்கங் களிற் பொருந்திய தேர்கள் ஓடுகின்ற ஒலியும், கவிகை ஆய் விரிந்த காவு சூழ் தரும் மன்னர் சீர்ஓதையும் — குடைகளாகி விரிந்த சோலை சூழப்பெற்ற அரசர்க ளது பேரொலியும், கறங்கும் தேவதுந்துபி ஓதையும்—இடைவிடாது முழங்கு கின்ற தேவதுந்துபிகளினொலியும், தெருவு இறுத்தில—அந்நகரின் வீதிகளில் எக் காலமும் ஒழிந்தில எ—று.

காவு தெருவு என்பவற்றில் உகரங்கள் சாரியைகள். கவிகையாய் விரிந்த காவு=குடைக் கூட்டம்.

(43)

> நாட்டி யச்செயல் யாவையுஞ் சிவனது நடனம்
> பாட்டி சைத்திறம் யாவையு மன்னதே பதியோர்
> கேட்டி ருப்பன யாவையு மவனிசைக் கேள்வி
> கூட்டம் யாவையு மன்னவன் றொண்டுசெய் கூட்டம்.

இ—ள்; நாட்டியச் செயல் யாவையும் சிவனது நடனம்(ஏ)—(அந்நகரிற் செய் யப்படும்) நடனங்க ளெல்லாம் சிவபெருமானுக்காகப்புரியும் நிருத்தங்களேயாம், பாட்டு இசை திறம் யாவையும் அன்னதே—(பாடப்படும்) பாடல்க ளெல்லாம் அச் சிவபெருமானது தோத்திரமேயாம், பதியோர் கேட்டு இருப்பன யாவையும் அவன் இசை கேள்வி (ஏ)—அந்நகரிலுள்ளார் (செவிக்கின்பமாகக்) கேட்டுக்கொண் டிருப் பவைக ளெல்லாம் அவரது கீர்த்திப் பிரபாவமேயாம், கூட்டம் யாவையும் அன் னவன் தொண்டு செய்கூட்டம் (ஏ)—அங்குள்ள கூட்டங்களெல்லாம் அவரது திருந் தொண்டுகளைச் செய்கின்ற கூட்டங்களேயாம் எ—று.

பிரிநிலை யேகாரம் ஏனைய தொடர்கட்குஞ் சேர்க்கப்பட்டது. பாட்டிசைத் திறம்—பாட்டைப் பாடுந் தன்மை. யாவையு மென்பதில் ஐகாரஞ் சாரியை.

"நின்று மிருந்துங் கிடந்து நடந்துநினை—யென்றுஞ் சிவன் றாளிணை" என்ற படி அங்குள்ளார் இடையறாத சிவநேசமுடையரா யொழுகினரென்பது தாற்பரியம்.

"எவ்விடத்துஞ் சிவகதையே யியம்புவோருங் கேட்போரு
மெவ்விடத்துஞ் சிவபணியே யியற்றுவோரு மெச்சுநரு
மெவ்விடத்துஞ் சிவனடி யாரெதிர்கொள் விருந்து புறந்தருத
லெவ்விடத்துஞ் சிவநாம முழக்கமன்றி யிலையங்கண்"

என்றார் காஞ்சிப் புராணத்தாரும். (44)

பாலு றுந்ததி யிழுதுதே னிருக்கைகள் பலவுங்
கோல மாகுமந் நகரிடை யவையுறை கூவல்
போலு மாயிடை மாதவத் தவளறம் புரியுஞ்
சாலை யாயின வரம்பிலா அடிசிலஞ் சாலை.

இ—ள்: கோலம் ஆகும் அ நகரிடை—அழகுபொருந்திய அந்தக் காஞ்சி நகரிலுள்ள, பால் உறும் ததி இழுது தேன் இருக்கைகள் பலவும்—பாலும் மிகுந்த தயிரும் நெய்யும் தேனுமாகிய பொருள்கள் இருக்குமிடங்கள் யாவும், அவை உறை கூவல் போலும்—அவ்வப் பொருள்களிருக்குங் கிணறுகள்போலும், வரம்பு இலா அடிசிலம் சாலை—அளவில்லாத அன்னசத்திரங்கள், ஆயிடை மா தவத் தவள் அறம் புரியும் சாலை ஆயின—அந்நகரத்தின்கண் பெரிய தவத்தைச் செய்கின்ற காமாக்ஷியம்மையார் முப்பத்திரண்டு தருமங்களையும் இயற்றிய தருமசாலையை நிகர்த்தன எ—று.

எடுக்குந்தோறுங் குறைவற்றிருத்தலின் பால் முதலிய தங்குமிடங்களை 'அவையுறை கூவல்போலும்' எனவும், அன்னத்தை மாத்திரமன்றி வேண்டிய பிறவற்றையும் இனிது பெறுதற்கிடனாயிருத்தலின் அன்னசத்திரங்களை 'மாதவத்தவளறம் புரியுஞ் சாலையாயின' எனவும் கூறினார்.

உமாதேவியார் தவமியற்றுதலை எண்பத்தைந்தாஞ் செய்யுளினும், தருமங்களியற்றுதலை எழுபத்தெட்டாஞ் செய்யுளினும் மேற்காண்க. (45)

அளவில் பற்பகல் தம்மினும் நீங்கியோ ரடுத்த
கிளைஞர் வந்துழி யெதிர்தழீஇ நன்னயங் கிளத்தி
உளம கிழ்ந்தவர்க் கூட்டுமின் னடிசில்போ லுறுவோர்
எளிதி னுங்கிட வழங்குமால் ஓதன விருக்கை.

இ—ள்: அளவில் பல் பகல் தம்மினும் நீங்கியோர்—மிகப் பலநாளாகத் தம்மினின்றும் பிரிந்தவர்களாகிய, அடுத்த கிளைஞர் வந்துழி—நெருங்கிய சுற்றத்தவர்கள் வீட்டில் வந்தபொழுது, எதிர் தழீஇ நல் நயம் கிளத்தி—எதிர்சென்று அவர்களைத் தழுவி நல்ல பிரியவசனங்களைக் கூறி, உளம் மகிழ்ந்து அவர்க்கு ஊட்டும் இன் அடிசில் போல்—மனமுவந்து அவர்களுக்கு அருத்துகின்ற இனிய போசனத்தைப்போல, ஓதன இருக்கை—அந்நகரிலுள்ள அன்னசத்திரங்கள், உறுவோர் எளிதில் நுங்கிட—தன்னிடத்தே வருபவர்கள் இலகுவாகப் போசனஞ் செய்யும்படி, வழங்கும்—உணவுகளைக் கொடுக்கும் எ—று.

அன்னசத்திரங்களிலுள்ளார் முன்னொருகாலுங் கண்டறியாத புதியவர் வரினும் நெடுங்காலம் தூரதேசத்திற் பிரிந்திருந்துவந்த உற்ற சுற்றத்தவர்களைப்போல அன்புவைத்துச் சேய்மையிற்றானே யின்முகங் காட்டி இன்சொற் கூறி அறியாத இவர் நம்மை உவந்தேற்றுக்கொள்வதெப்படியென அவர் மனத்தில் விளைந்த ஆசங்கையை நீக்கிப் போசனங் கொடுப்பரென்பது கருத்து.

"அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்"

எனவும்,

"மோப்பக் குழையு மனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து."

எனவும் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாருங் கூறினர்.

ஆல் அசை. அளவில் பற்பகல்—அளவில்லாத பலநாள், எனவே மிகப் பல நாளென்பது பெற்றும். வந்துழி—தொகுத்தல். தழீஇ—தழுவியென்பதன் விகாரம். நயம்—ஆகுபெயர். ஓதனவிருக்கை வழங்கும் என்றது இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்தின் மேலேற்றிக் கூறப்பட்டது. அடிசில்போல் வழங்கும் என இயைக்க. (46)

வேறு

மாட மாளிகை வாயி றொறுந்தொறும்
நீடு கண்ணுள ராமென நின்றுநின்
றாடு சித்திரப் பத்தி யமரரும்
நாடி நோக்கி நயந்திடப் பட்டதே.

இ—ள்: மாடம் மாளிகை வாயில் தொறும் தொறும்—(அந்நகரிலுள்ள) மேன் மாடங்களினதும் மாளிகைகளினதும் வாயில்களொவ்வொன்றினும், நீடு கண்ணுளர் ஆம் என நின்று நின்று ஆடு—நெடிய கூத்தர்களைப்போல நின்று நின்று நடிக்கின்ற, சித்திர பத்தி—சித்திரப்பாவை வரிசை, அமரரும் நாடி நோக்கி நயந்திட பட்டது—தேவர்களாலுந் தேடிப்பார்த்து விரும்பப்பட்டது எ—று.

ஏ அசை. வாயிறொறுந்தொறும் என்ற அடுக்கு ஓவ்வொரு வாயில்களினுந் தவறாது நிகழ்ந்ததென்பதை யுணர்த்திற்று. அவ்வடுக்குக்கேற்பவே பின்னும் 'நின்று நின்று' என அடுக்கினர். அமரருமென்பதில் உம்மை—உயர்வு சிறப்பு. (47)

எல்லை தீர்ந்த விரவிக டூண்டிய
சில்லி யாழித் திகிரிகண் மானுமால்
மல்லன் மாநகர் மைந்தர்க ளூர்தரும்
பல்வ கைச்சுடர்ப் பண்ணுறு தேர்களே.

இ—ள்: மல்லல் மா நகர் மைந்தர்கள் ஊர்தரும் பல்வகை சுடர் பண் உறு தேர்கள்—வளப்பத்தையுடைய பெரிய அந்தக் காஞ்சிநகரிலுள்ள சிறுவர்கள் உருட்டுகின்ற பலவகைப்பட்ட ஒளிபொருந்திய பண்ணமைக்கப்பட்ட சிறு தேர்களானவை. எல்லை தீர்ந்த இரவிகள் தூண்டிய சில்லி ஆழி திகிரிகள் மானும்—அளவிறந்த சூரியர்கள் செலுத்திய வட்டித்த உருளைகளையுடைய தேர்களைப்போலும் எ—று, சிறுவர்கள் சிறு தேருருட்டி விளையாடுகின்றனரென்பது தாற்பரியம்.

ஆல் ஏ—அசைகள். பண்ணுறுத்தல் செலுத்துதற்கேற்ப அமைதிப்படுத்துதல். மற்றைய உலகங்களிலுள்ள நகரங்களெவற்றினும் வளத்தாற் சிறந்தமையின் 'மல்

லன் மாநகர்' என்றார். இதனை மேல்வரும் ஐம்பத்தைந்தாஞ் செய்யுளுரையானு மறிக. இரத்தினாபரணங்களை அணிந்து விளங்குதலால் மைந்தர்க்குச் சூரியர்களை யும் இரத்தினங்களிழைக்கப்பெற்று விளங்குதலால் அம்மைந்தர்களுருந் தேர்கட் குச் சூரியர்களுருந் தேர்களையுமுவமித்தார். (48)

வெள்ளை யாதி வியன்கவி யாவையுந்
தெள்ளி தின்மொழி தென்கலை யேமுதல்
உள்ள பல்கலை யோதுகின் றார்களும்
வள்ளி யோர்களும் மன்றுதொ றீண்டுவார்.

இ—ள்: வெள்ளை ஆதி வியன் கவி யாவையும் தெள்ளிதில் மொழி தென் கலையே முதல் உள்ள பல்கலை ஓதுகின்றார்களும்—வெண்பா முதலிய சிறந்த பாக்க ளனைத்தையும் தெளிவுபெறப் பாடுதற்கேற்ற தமிழ்ப்பாஷையே முதலாகவுள்ள பலபாஷை நூல்களையும் படிக்கின்றவர்களும், வள்ளியோர்களும்—(அவரது கல்வித் திறத்திற்கேற்பப்) பொருள் கொடுக்கின்றவர்களும், மன்றுதொறு ஈண்டுவார்— (அந்நகரிலுள்ள) சபைகடோறும் நெருங்குவார்கள் எ—று.

ஏகாரம்—தேற்றம். ஆதியென்றதனால் ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பனவும், அவற்றினமாகிய தாழிசை துறை விருத்தங்களுங் கொள்ளற்பாலன. பல்கலையென்றது தேவபாஷையாகிய ஆரியத்தையும் பதினெண் பாஷைகளுள் தமி ழொழிந்தவற்றையுமென்க. தமிழொழிந்த பதினெழு பாஷைகளாவன: சிங்களம் சோனகம் சாவகம் சீனம் துளுவம் குடகம் கொங்கணம் கன்னடம் கொல்லம் தெலுங்கம் கலிங்கம் வங்கம் கங்கம் மகதம் கடாரம் கவுடம் கௌசலம் என்பன வாம். பாஷைகளனைத்திற்கும் முதலிலெண்ணப்படுவது ஆரியமேயாகவும், ஆசிரி யர் 'தென்கலையே முதலுள்ள பல்கலை' எனக் கூறியது அந்நகரின்கண்ணே தமிழ்ப் பாஷை மிகவும் பரந்து வழங்குதலினென்க.

"அமிழ்தமுங் கைப்பக் குழூங்குழா மாகி
அறிஞர்தாங் கழகங்கள் தோறும்
தமிழ்தெரி காஞ்சி வரைப்பு.........",

என்றார் பிறரும்.

"சூசினியிற் பிள்ளைக் கவிக்கம் புலிபுலியாம்
பேசு முலாவிற் பெதும்பைபுலி — யாசு
வலவர்க்கு வண்ணம் புலியாமற் றெல்லாப்
புலவர்க்கும் வெண்பாப் புலி."

என்றும் "வேறு மறையோராதி நாற்சாதி வெள்ளைமுதல்" என்றும் ஆன்றோர் கூறிய விசேடமுடைமையின் வெண்பாவை முதலாக எடுத்து 'வெள்ளையாதி-வியன் கவி' எனவும். பிற பாஷைகளைப் படிக்குந்தோறுங் கேட்குந்தோறுந் தோன்றுஞ் சுவையினும் பன்மடங்கதிகமான பெருஞ்சுவையைத் தரவல்லனவாதலின் 'வியன் கவி' எனவும் 'தெள்ளிதின்மொழி' 'தென்கலை' எனவும் கூறினார். (49)

இகலும் வேழத் தெயிற்றினை யேய்ந்திடும்
நகிலி னார்க ணறுங்குழன் மேலிடும்
அகிலி னாவியு மாய்மணி மாடமேல்
முகிலும் வேற்றுமை யின்றி முயங்குமே.

இ—ள்: இகலும் வேழத்து எயிற்றினை ஏய்ந்திடும் நகிலினார்கள்—ஒன்றோ டொன்று பகைக்கின்ற யானையினது கோடுகளை நிகர்த்த தனங்களையுடைய மங்கை

யர்கள், நறும் குழல் மேல் இடும் அகிலின் ஆவியும்—மணங்கமழுங் கூந்தலில் (ஈரம் புலருமாறு) ஊட்டிய அகிற்புகையும், ஆய் மணி மாட மேல் முகிலும்—தெரிந்தெடுக்கப்பட்ட இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற மாடங்களின்மேற் படிந்த மேகங்களும், வேற்றுமை இன்றி முயங்கும்—வேற்றுமை தோன்ருது கலந்திருக்கும் எ—று.

உத்தமசாதிப் பெண்களின் கூந்தல் மணங்கமழப் பெறுதலின் 'நறுங்குழல்' எனவும், விண்ணளவோங்கியிருத்தலால் மலையென்று கருதிப் படிந்தனவென்பது போதர 'ஆய்மணிமாடமேன்முகில்' எனவும், அம்முகில் எத்துணைச் செறிவுங் கருமையுமுடைத்தாமோ அத்துணையாகச் செறிந்திருண்ட புகையென்பது போதர 'அகிலினுவியும்—முகிலும் வேற்றுமையின்றி முயங்கும்' எனவும் கூறினூர். ''அகிலிடுகொழும்பு கையளாய் மயங்கின—முகிலொடு வேற்றுமை தெரிகலா'' என்றூர் கம்பநாட்டாழ்வாரும்.

இச்செய்யுளாற் பெண்கள் சிறப்பும் மாளிகையுயர்வுங் குறிக்கப்பட்டன. (50)

பண்ணி னோசையும் பானலை வென்றிடுங்
கண்ணி னூர்கள் களிநட வோசையுந்
தண்ண ரம்பிய றந்திரி யோசையும்
விண்ணு ளோர்க்கும் விருந்தென லாயவே.

இ—ள்: பண்ணின் ஓசையும்—சங்கீதத்தினொலியும், பானலை வென்றிடும் கண்ணினூர்கள் களி நட ஓசையும்—கருங்குவளை மலரைவென்ற கண்களையுடைய கணிகையர்களது களிப்பைத் தருகின்ற நிருத்தத்தினொலியும், தண் நரம்பு இயல் தந்திரி ஓசையும்—இனிய நரம்புகள் பொருந்திய யாழினொலியும், விண்ணுளோர்க்கும் விருந்து எனல் ஆய—விண்ணுலக வாசிகளாகிய தேவர்களுக்கும் செவிவிருந்தென்று சொல்லத்தக்கனவாயின எ—று.

ஏ அசை. பண்—(நெஞ்சு முதலிய தானங்களெட்டானும் எடுத்தல் முதலிய கிரியைகளெட்டானும்) பண்ணப்படுவது. இதனை,

> ''......... பெருந்தான மெட்டானும் — பாவாய்
> எடுத்தன் முதலா விருநான்கும் பண்ணிப்
> படுத்தமையாற் பண்ணென்று பார்''

என்பதனுலுணர்க. பானல்—ஆகுபெயர். விண்ணுளோர்க்கும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு, விருந்து: புதிதாய் வந்தோர்க்கூட்டும் உணவு. ஈண்டுச் செவிக்கின்பமாகிய கேள்வியை யுணர்த்திநின்றது.

நாடகமன்றின்கண் வந்து குழீஇய காளையர், வயமழிந்து தம்மை நோக்கிய வழியும் அவரை விரும்பி நோக்குதலின்றி நடனத்திற்கேற்றவாறு புடைபெயர்வன என்பது போதர 'பானலை வென்றிடுங்கண்' எனவும், இணை கிளை பகை நட்பு ஆதிய பகுதிகளைத் தெரிந்து ஏற்றவாறு வீக்கிய நரம்பினையுடைய யாழென்பது போதர 'தண்ணரம்பியறந்திரி' எனவும், கந்தருவர் கின்னரர் முதலிய தேவகாயகர் இசைக்கும் பாட்டிசைகளையும் உருப்பசி திலோத்தமை முதலிய தேவரம்பையர்களியற்றும் நடனத்தையும் நேரேகேட்டுக் கண்டுகளித்த தேவர்க்கும் பரோக்ஷத்திலிருந்து கேட்டமாத்திரத்தே செவிவிருந்தாமேல், செவி கண்ணிரண்டிற்கும் புலப்பட அம்மன்றின்கணிருந்து கேட்டுக் கண்டோர்பெற்ற இன்பம் எத்துணைப் பேரின்பமாமென அதன் பெருமை விளங்க 'விண்ணுளோர்க்கும் விருந்தெனலாய' எனவும் கூறினூர். (51)

அணிகு லாவு மரம்பையர் காளையர்
நணிய தோளை நயப்புற நாகருங்
கணிகை மாதரைக் காமுற மேவலான்
மணிகொள் காஞ்சி மதனர சாயதே.

இ—ள் : அணி குலாவும் அரம்பையர் காளையர் நணிய தோளை நயப்புற—பேரழகு விளங்கப்பெற்ற தேவகணிகையர்கள் தேவர்களை விரும்பாது இங்குள்ள இளைஞர்களது செறிந்த புயங்களை விரும்ப; நாகரும் கணிகை மாதரை காமுற மேவலால்—தேவர்களும் அரம்பையரை விரும்பாது இங்குள்ள பொதுமகளிரை விரும்பச் சிறந்திருத்தலால், மணி கொள் காஞ்சி—அழகு பொருந்திய காஞ்சி புரம், மதன் அரசு ஆயது—மன்மதனுடைய இராசதானியாயிருந்தது எ—று.

காஞ்சிநகரிலுள்ள காளையரும் மங்கையரும் விண்ணுலகிலுள்ள தேவர்களினும் கணிகையரினும் மிக்க வனப்புடையராயினர் என்பது தாற்பரியம்.

ஏ அசை. ரம்பா என்னும் வடசொல் அரம்பை எனத் தற்பவமாயிற்று; விரும்பப்படுபவள் என்பது பொருள். நண்ணிய என்பது நணிய எனத் தொக்கது. காமம் என்பது காம் எனக் கடைக்குறையாயிற்று. அரசு என்பது அரசிய லெனப் பொருள்படுதலின் உகரவீற்றுப் பாவதத்திதன்; அது தானியாகு பெயராய் இராசதானியை உணர்த்திற்று. உம்மை—எச்சத்தோடுயர்வு சிறப்பு.

கல்லென இறுகித் திரண்ட புயமென்பார், 'நணிய தோள்' எனவும், கீழுலகத்தாரை மேலுலகத்தார் காமுறல் யாண்டுமின்றாகவும் காஞ்சிநகர் அவ்வாறு விரும்புதற்கிடனாயிருத்தலின் 'மதனரசாயதே' எனவும் கூறினார். அழகின்மிக்க காளையரைக் கண்டவழி அவாவும் மங்கையரது கண்கள் அவர்தோளிற் சேறலியல் பாதலின் 'அரம்பையர் காளையர் நணியதோளை நயப்புற' என்றார்.

"நோக்கிய நோக்கெனு நுதிகொள் வேலிணை
ஆக்கிய மதுகையான் தோளின் ஆழ்ந்தன,"

என்றார் கம்பநாட்டாழ்வாரும். (52)

கூற்றிற் செல்லுங் கொலைக்கரித் தானமும்
ஏற்றிற் செல்லு மிடையர்தஞ் சேரியின்
ஊற்றிற் செல்லுமொண் பாலு முடனுரு
ஆற்றிற் செல்லுமவ் வாவணந் தோறுமே.

இ—ள் : கூற்றில் செல்லும் கொலை கரி தானமும்—யமனைப்போலக் (கோர ரூபத்துடன்) சஞ்சரிக்கின்ற கொலைத்தொழின் முற்றிய யானைகளின் மதநீரும், ஏற்றில் செல்லும் இடையர் தம் சேரியின் ஊற்றில் செல்லும் ஒண் பாலும்—இடபத்தைப்போல உல்லாசம்பொருந்த உலாவுகின்ற இடையர்களது சேரிகளினின்றும் ஊற்றுநீர்போலப் பெருக்கெடுத்துப் பாய்கின்ற ஒளிபொருந்திய பாலும், உடன் உரு—ஒருங்கு கலந்து, அ ஆவணம் தோறும் ஆற்றில் செல்லும்—அந்நக ரத்திலுள்ள வீதிகடோறும் ஆற்றைப்போலப் பாயும் எ—று.

ஏ அசை. கூற்றிற் செல்லுங் கரி என இயைக்க. எண்ணிய உயிரைத் தவறாது கொண்டு மீளுதலின் 'கூற்றிற் செல்லுங் கொலைக்கரி' என்றார்.

இச்செய்யுளால் யானைகளினதும் பசுக்களினதும் செழிப்புணர்த்தப்பட்டது. (53)

### வேறு

பண்ணுளர் நரம்பியல் பாணிக் கேற்றிட
எண்ணுள கணிகைய ரினத்தொ டாடலுங்
கண்ணுள ராடலுங் காம ஞடலும்
விண்ணுள ராடலும் வெறுப்ப மேவுமே.

இ—ள்: பண் உளர் நரம்பு இயல் பாணிக்கு ஏற்றிட—பண்ணை விளக்கின்ற நரம்புக் கருவிக்கும் மிடற்றிசைக்குமிசைய, எண் உள கணிகையர் இனத்தொடு ஆடலும்—மதிப்புள்ள நடனமாதர்கள் கூட்டமாகநின்று நடித்தலும், கண்ணுளர் ஆடலும்—கூத்தர்கள் நடித்தலும் (ஆகிய இரண்டும்), காமன் ஆடலும் விண்ணுளர் ஆடலும் வெறுப்ப மேவும்—மன்மதனது நடனத்தையும் தேவரம்பையர்களது நடனத்தையும் வெறுக்கும்படி (அந்நகரில் எந்நாளும்) பொருந்தும் எ—று.

ஏ அசை, நடனத்தொழிலை இனிது பயின்றவரென்பார் 'எண்ணுளகணிகையர்' என்ருர். தனது மகஞ்கிய அநிருத்தனைச் சிறைமீட்பான் வாணுசுரநகர் புகுந்து ஆண்மைத்தன்மை திரிந்த பெண்மைக் கோலத்துடன் மன்மதன் ஆடினன். இது பேடியாடலெனப்படும். இதனை,

> ''சூரியற் ருடி மருள்படு பூங்குழற்
> பவளச் செவ்வாய்த் தவள ஒண்ணகை
> நீணில மளந்தோன் மகன்முன் ஆடிய
> பேடிக் கோலம்..............................''

என மணிமேகலையும்,

> '' ஆண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக்
> காம ஞடிய பேடி யாடலும் ''

எனச் சிலப்பதிகாரமும் கூறுதலாலுணர்க. காமனுடலும் விண்ணுளராடலும் எதிர்நிரனிறை. (54)

அரிவையர் மைந்தர்க ளணிந்து நீத்ததே
திருமகள் காமுறுஞ் செல்வ மாகு மேற்
கருதரு நான்முகக் கடவுட் காயினும்
பொருவரு நகர்வளம் புகலற் பாலதோ.

இ—ள்: அரிவையர் மைந்தர்கள் அணிந்து நீத்ததே திருமகள் காமுறும் செல்வம் ஆகுமேல் — அங்குள்ள மங்கையர்களும் காளையர்களும் தரித்துக் கழித்தவைகளே இலக்குமியும் விரும்பத்தக்க போக்கியப்பொருளாகுமாஞல், பொரு அரு நகர் வளம் — ஒப்பற்ற அந்தக்காஞ்சி நகரின் வளமானது, கருத அரும் நான்முகக் கடவுட்கு ஆயினும் புகலற்பாலதோ — நினைத்தற்கரிய நான்முகங்களையுடைய பிரமதேவராலாயினும் சொல்லத்தக்கதாகுமா? (ஆகாதே) எ—று.

உலகினரெவர்க்குஞ் செல்வத்தையருளுந்தேவியாகிய திருமகள்தானும் அக்காஞ்சி நகரிலுள்ளாரணிந்து கழித்த ஆடை ஆபரணம் சுகந்தமாலை முதலியவைகளைச் சிறந்த போக்கியப் பொருளென்று விரும்புவளேயாஞல் அந்நகர் வளம் யாரால் கூறமுடியும், எவர்க்குமரிது என்பது கருத்து.

ஏகாரம் — பிரிநிலை. திருமகள் காமுறும் என்பதிற் சிறப்பும்மை விகாரத்தாற்ருெக்கது. ஆகுமேல்— ஏலீற்று வினையெச்சம். கடவுட்கென்பதில் நான்கனுருபு மூன்றனுருபாகத் திரிக்கப்பட்டது. நான்கு முகங்களையுடையவரும் கலைமகட்குக் கணவருமாதலின் பிரமாவை விசேடமுடையராகத் தெரிந்து 'கருதரு நான்முகக்

கடவுட்காயினும்...... புகலற்பாலதோ எனக் கூறினர். 'தோட்டலர்வனசத்திசை முகன் முன்னஞ் சொற்றனன்' என மேல் நூற்று மூன்றுஞ் செய்யுளிற் கூறுதலின், அக்காஞ்சி மான்மியத்தைக் கூறிய பிரமதேவர்தாமும் முற்றாய் வருணித்து முடிக்க வன்மையுடையாரல்லரென்னுங் கருத்துப் போதர அங்ஙனங் கூறினரெனினுமாம்.

''புரங்க டந்தவர் காஞ்சி புரம்புகழ்
பரம்பு நீள்புவ னம்பதி நான்கினும்
வரம்பில் போக வனப்பின் வளமெலாம்
நிரம்பு கொள்கல மென்ன நிறைந்ததால்,

என்றார் சேக்கிழாரும். (55)

## வேறு

மாறாய்ச் சிறார்க ளெறிந்தாடிய மான்ம தத்தாற்
சேறாய்ப்பொற் சுண்ணத் துலர்வாய்ப்பனி நீர்கள் சிந்த
ஆறாய்ப் பளிதத் தினில்வாலுகத் தாறு மாகி
வேறாய்ப் புவியோ ருணர்வாமென மேய வீதி.

இ—ள்: சிறார்கள் மாறு ஆய் எறிந்து ஆடிய மான்மதத்தால் சேறு ஆய் — சிறுவர்கள் எதிர்ந்து ஒருவர்மேலொருவர் வீசிவிளையாடிய கஸ்தூரிக் குழம்பு சிந்துதலாற் சேறாகி, பொற்சுண்ணத்து உலர்வு ஆய் — பொற்சுண்ணம் சிதறுதலால் அச்சேறு புலர்ந்து, பனி நீர்கள் சிந்த ஆறு ஆய் — (சிவிறியிலுள்ள) பனிநீர்த் திவலைகள் சிதறுதலால் யாறாகி, பளிதத்தினில் வாலுகத்து ஆறும் ஆகி— பச்சைக் கர்ப்பூரப் பொடி சிதறுதலால் வெண்மணல் வழியுமாகி, வேறு ஆய்—இவ்வாறே கணந்தோறும் வேறுபாடுற்று, புவியோர் உணர்வு ஆம் என மேய — பூவுலகத்தில் வாழ்கின்ற மனிதரது அறிவுபோல நிலைதிரிந்தன, வீதி — அந்நகரிலுள்ள வீதிகள் எ—று.

விளையாட்டின் பொருட்டுக் கஸ்தூரிக் குழம்பு முதலிய ஒவ்வோரினங்களையுஞ் சிறுவர் வீச அவைபரவுந்தோறும் அந்நகரவீதிகள் வெவ்வேறுவடிவாய்த் தன்னியன் மாறுதல் எதுபோலுமெனில், மாந்தரது சிந்தை விடயங்களிற் செல்லுந்தோறும் வெவ்வேறு தன்மையை யடைதல்போலும் என்பது கருத்து.

'மாறாய்ச் சிறார்களெறிந்தாடிய' என்பதனை பனிநீர்க்கும், 'சிந்த' என்பதை மான்மதத்திற்கும், இவ்விரண்டையும் தனித்தனி பொற்சுண்ணம் பளிதம் என்பவற்றிற்கும் ஏற்றவாறொட்டிப் பொருளுணர்க. சிந்த என்னும் வினையெச்சம் ஏதுப் பொருளில் வந்தது. ஆறு யாறு என்பதன் விகாரம். மேய—மேவிய என்னும் வினையெச்சங்கள் முறையே ஒன்றையொன்று கொண்டு மேய என்னும் வினைமுற்றுடன் முடிந்தன. மனம் நிலைமாறுதலை

''உறுகயிற் றூசல் போல ஒன்றைவிட் டொன்று பற்றி
வருகயிற் றூசல் போல வந்துவந் துலவு நெஞ்சம்''

என்னும் தேவாரப பதிகத்தானுமறிக. (56)

தண்டா மரையேந் தியவானவன் றன்னையொத்தான்
எண்டா வியமா மதனேந்திழை யாரி லஞ்சி
வண்டா மரைபூத் தனவொத்தனர் வந்து செந்தேன்
உண்டா டியதேன் களையொத்தனர் ஓங்கல் மைந்தர்.

இ—ள்: எண் தாவிய மா மதன் — (திருமாலினது) சிந்தையிற் றோன்றிய பெருமையினையுடைய மன்மதனனைவன், தண் தாமரை ஏந்திய வானவன் தன்னை

ஒத்தான்—குளிர்ந்த தாமரை மலர்களைக் கைகளிற்றாங்கிய சூரியனை நிகர்த்தான், ஏந்து இழையார் இலஞ்சி வண்தாமரை பூத்தன ஒத்தனர்—ஆபரணங்களையணிந்த மங்கையர்கள் தடாகத்தில் வளப்பத்தினையுடைய தாமரைப்பூ மலர்ந்திருத்தலை நிகர்த்தார்கள், ஓங்கல் மைந்தர் வந்து செம்தேன் உண்டு ஆடிய தேன்களை ஒத்தனர்—வலிமையினையுடைய இளைஞர்கள் அம்மலரின்கண் வந்துகூடிச் செம்மையாகிய தேனைப் பருகிவிளையாடிய வண்டுகளை நிகர்த்தார்கள் எ—று.

அந்நகரிலுள்ள ஆடவர்களும் பெண்களும் காமவிகாரமுற்றுக் கலந்து இன்புறுகின்றனரென்பது தாற்பரியம்.

தாமரை இரண்டும் ஆகுபெயர்கள். ஏந்திழையார்—ஏந்திய இழையினையுடையார். எண்டாவிய என்பதற்கு மகளிர் சிந்தையிற் புகுந்த மன்மதனெனவுரைப்பினு மிழுக்காது. பூத்தன—வினைமுற்றுத் தொழிற் பெயர். நாளத்துடன் கூடிய இரண்டு வெண்டாமரை மலர்களை இரண்டு கைகளினுஞ் சூரியன் ஏந்தியிருத்தலின் 'தண்டாமரை யேந்திய வானவன்' என்றார்.

தாமரை மலர்தற்குச் சூரியனுதித்தல் காரணமாதல் போலக் காமவிச்சை யுண்டாதற்கு மன்மதனுதித்தலே காரணமாதலின் 'தண்டாமரை யேந்திய வானவன் றன்னை யொத்தானெண்டாவிய மாமதன்' எனவும், சூரியனது கிரணங்களால் தாமரைப் பூக்கள் மலர்த்தப்படுவதுபோல மன்மதனுடைய பூங்கணைகளால் மாதர்களது மனம் நெகிழ்க்கப்படுதலின் 'ஏந்திழையாரிலஞ்சிவண்டாமரை பூத்தனவொத்தனர்' எனவும், தாமரை மலரை வந்தணைந்து தேனைப்பருகி வண்டுகள் களித்தல் போல மகளிரைக் கூடி அதரபானஞ் செய்து ஆடவர் கலவியின்பமனுபவித்தலின் 'வந்து செந்தேனுண்டாடிய தேன்களையொத்தனரோங்கன் மைந்தர்' எனவும் கூறினார். (57)

ஏமங் குலவு முரசங்க ளிரட்ட வாசத்
தாமங் கமழ்பந் தரினூடு தமக்கி யன்ற
ஓமங் களின்மா மணஞ்செய் தனரூர் குலாவும்
மாமங் கலமே யுலப்பின்றி மலிந்த தன்றே.

இ—ள்: ஏமம் குலவும் முரசங்கள் இரட்ட—சுபகரம் பொருந்திய முரசவாத்தியங்கள் முழங்க, வாச தாமம் கமழ் பந்தரின் ஊடு — மணங்கமழுகின்ற மலர் மாலைகள் (தூக்கப்பட்டுப்) பரிமளிக்கின்ற மணப்பந்தர்களில், தமக்கு இயன்ற ஓமங்களின் மாமணஞ் செய்தனர் — தத்தமக்கேற்ற ஆகுதிகளுடன் பெருமை பொருந்திய விவாகத்தைச் செய்தவர்கள், ஊர்குலாவும் மா மங்கலமே உலப்பு இன்றி மலிந்தது—ஊர்வலம் வருகின்ற பெரிய மங்கலக் காட்சியே குறைவின்றி (அந்நகரமெங்கும்) நிறைந்திருந்தது எ—று.

அன்றும் பின்னைய ஏகாரமும் அசைகள், முன்னைய ஏகாரம்—தேற்றம். க்ஷேமம் என்னும் வடசொல் ஏமமென வழங்கிற்று. பந்தல் பந்தரெனப் போலியாயிற்று. ஊடு ஏழனுருபின் பொருள்பட நின்றதோரிடைச்சொல். ஓமங்களின் என்பதில் ஐந்தனுருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வரும் மூன்றனுருபாகத் திரிக்கப்பட்டது. செய்தனர்—முற்றெச்சம். மங்கலம்—ஆகுபெயர்.

வீரமுரசு கொடைமுரசு மணமுரசு என்னுமூவகையுள் மணமுரசென்பது போதரப் பிறிதினியைபு நீக்கிய விசேடணம் புணர்த்தி 'ஏமங்குலவு முரசங்கள்'

எனவும், தங்கள் தங்கள் குலமுறைக்கியைந்த ஆகுதியுடனென்பது போதர 'தமக் கியன்றவோமங்களின்' எனவும், உறவினர் நண்பினர் முதலாயினோரனைவரும் பெருமகிழ்வுடன் கொண்டாடுதலின் 'மாமங்கலம்' எனவும் கூறினர்.

மணங்கள் எண்வகையின. அவையாவன:- பிரமம் தெய்வம் ஆரிடம் பிரசா பத்தியம் காந்தருவம் ஆசுரம் இராக்கதம் பைசாசம் என்பன. பிரமமாவது: வேத முறைப்படி பிரமசரிய விரதமனுட்டித்து முற்றிய வரனையழைத்து அலங்கரித்துக் கன்னியைக் கொடுத்தல். தெய்வமாவது: யாக கருமங்களை முறைப்படி நடப் பித்தவர்க்குக் கன்னியைக் கொடுத்தல். ஆரிடமாவது: பசு எருது என்னுமிவற் றுள் இவ்விரண்டையேனும் ஒவ்வொன்றையேனும் வாங்கிக்கொண்டு கன்னிகை யைக் கொடுத்தல். பிரசாபத்தியமாவது: தலைமகனினத்தார் வேண்டத் தலைமக ளினத்தார் உடன்பட்டுப் பொருள்பெறாது கன்னியைக் கொடுத்தல். காந்தருவ மாவது: கேட்பாருங் கொடுப்பாருமின்றித் தலைவனும் தலைவியுமாக ஒருப்பட் டுத் தம்முட் கூடுவது. ஆசுரமாவது: பெற்றோர்க்கு அல்லது சுற்றத்தார்க்கு அல் லது கன்னிகைக்கு வேண்டிய பொன்னைக்கொடுத்துக் கன்னிகையைக் கொள்வது. இராக்கதமாவது: பெண்ணும் பெண்ணின் இனத்தாருமுடன்படாதிருப்ப வலி திற்கொள்வது. பைசாசமாவது: துயிலும்போதும் கள்ளுண்டு களித்திருக்கும் போதும் தன்னொழுக்கத்தைப் பாதுகாக்க மறந்திருக்கும்போதும் கன்னிகையைக் கூடுவது. இவற்றுட் பிரமமுதனான்கும் உத்தம மணமும், காந்தருவம் மத்திம மணமும், ஆசுர முதலிய மூன்றும் அதம மணமும் ஆம். உத்தம மணங்களுள்ளும் பிரம மணமொன்றே மிகச் சிறந்தது. இது கன்னிகையைக் கொடுப்போனும், முன் பத்துத் தலைமுறையும், பின்பத்துத் தலைமுறையுமாகிய இருபத்தொரு தலைமுறை யாரையும் நற்கதியிற் சேர்ப்பது. (58)

மாகந் திகழு மகிலாவிகொள் மாட மீதிற்
பாகின் மொழியா ரிளமைந்தர்தம் பாலி னோச்சப்
போகுஞ் சிவிறிப் பனிநீர்புறஞ் சிந்த வென்று
மேகஞ் சிதறும் பெயலென்ன விளங்கும் வீதி.

இ—ள்: மாகம் திகழும் அகில் ஆவி கொள் மாட மீதில்—ஆகாயத்தை யளாவியுயர்ந்து விளங்குகின்ற அகிற்புகையையுடைய மேன்மாடங்களில், பாகு இன் மொழியார் இளம் மைந்தர் தம் பாலின் ஓச்ச—பால்போன்ற இன்சொற் களைப் பேசுகின்ற மங்கையர்கள் இளமைப்பருவத்தினையுடைய காளையர்மேல் (விளை யாட்டின்பொருட்டு) விசிறும்போது, போகும்—வெளிப்படுகின்ற, சிவிறி பனி நீர்—சிவிறியிலுள்ள பனிநீரானது, புறம் சிந்த—அம்மாடங்களின் வெளியே சிந்துத லால், என்றும்—எப்போதும், மேகம் சிதறும் பெயல் என்ன—மேகங்கள் சொரி யுந் திவலைகளைப்போல, வீதி—அந்நகரத்திலுள்ள வீதிகளில், விளங்கும் — தோன் றும் எ—று.

மாகந்திகழுமாடம் எனவும் மாடமீதில் ஓச்ச எனவும் இயையும். சிந்த என் னும் எச்சம் காரணப் பொருளதாய் விளங்கும் என்னும் வினைகொண்டது. சிவிறி— பனிநீர்த்துருத்தி.

அகிற்புகையென்றும் பனிநீரென்றுந் தோன்றாமையின் அவற்றை முறையே மேகங்களென்றும் மழைத்துளிகளென்றும் ஐயுறுதற்கேற்ப மிக உயர்ந்ததென்பார், 'மாகந்திகழும்—மாடம்' என்றார். (59)

வன்மா முலையேந் தியமங்கையர் மைந்த ராஞேர்
தொன்மாட மீதி லெறிந்தாடுபொற் சுண்ண மோடு
நன்மா மலர்த்தாது விசும்புற நண்ண மேகம்
பொன்மா முகிலாய்ப் பனிநீரிற் பொழியு மன்றே.

இ—ள்: வல் மா முலை ஏந்திய மங்கையர் மைந்தர் ஆஞேர்—சூதாடுகருவியை நிகர்த்த பெரிய தனங்களையுடைய மாதர்களும் காளையர்களும், தொல் மாடம் மீதில் எறிந்து ஆடு பொற்சுண்ணமோடு நல் மா மலர் தாது விசும்பு உற நண்ண—பழைய மேன்மாடங்களில் (ஒருவர்மேலொருவர்) வீசிவிளையாடிய பொற் சுண்ணத்தினுடனே நல்ல பெரிய மலர்களின் மகரந்தங்களானவை ஆகாயத்திற் புகுந்து நெருங்குதலால், மேகம் பொன் மா முகில் ஆய்—அங்குள்ள மேகங்கள் (இயற்கைநிறம் மாறிப்) பொன்னிறமுடைய பெரிய மேகங்களாகி, பனிநீரில் பொழியும்—(அவர்கள் வீசிய) பனிநீரினல் மழையைப் பெய்யும் எ-று.

மங்கையரும் மைந்தரும் வீசிவிளையாடிய பொற்சுண்ணமும் பூம்பராகமும் செறிந்து பற்றுதலால் மேகம் பொன்மேகமாயிற்று. அதன்மேல் அவர்கள் வீசிய பனிநீர்த் திவலைகள் பரந்து சிந்துதல் அம்மேகம் மழைபெய்வது போன்றது என்பது கருத்து.

அன்று ஏ அசைகள். ஆஞேர் என்பது எழுவாய் வேற்றுமையுணர்த்தவந்த சொல்லுருபு. உற என்னும் எச்சம் செய்தெனெச்சமாகத் திரிக்கப்பட்டது. நண்ண என்னும் எச்சம் ஆய் என்னும் பிறகருத்தா வினைகொண்டது. ஆய் என்னும் எச்சம் பொழியும் என்னும் தன்கருத்தாவினைகொண்டு முடிந்தது. மங்கையர் மைந்தராஞேர் எறிந்தாடு என்பதை ஏற்றவாறு வேறுபடுத்திப் பனிநீர்க்கும் ஒட்டுக.

முற்செய்யுளிற் கூறிய இலக்கணமுடையனவென்பார் 'தொன்மாடம்' எனவும், சுகந்தமலருட் சிறந்தனவென்பார் 'நன்மாமலர்' எனவும், மழைபெய்தற் கேற்ற கோலமின்றிச் சிதறிக்கிடந்த வெண்ணிற மேகங்கள் பொற்சுண்ணமும் மகரந்தமும் படலமாகப் பற்றுதலாற் கனங்கொண்டு இடைவெளி மாறி ஒன்ருய்த் தொடர்ந்து பொன்னிறத்துடன் விளங்குதலால் 'மேகம் பொன்மாமுகிலாய்' எனவும் கூறிஞர்,

இச்செய்யுளாலும் முற்செய்யுளாலும் மாடங்களினுயர்ச்சியும் அங்குள்ள ஆடவர்களதும் மகளிரதும் விளையாட்டின் சிறப்புங் குறிக்கப்பட்டன. (60)

தாராற் பொலிபொற் புயவீரர் தவாது செல்லுந்
தேரார்ப்பு நால்வாய்க் கரியார்ப்பும்வெஞ் சேனை யார்ப்பும்
ஏரார்ப்பு மிக்க பதிமானவ ரீண்டு மார்ப்புங்
காரார்ப்பும் வேலைக் கடலார்ப்புங் கடுத்த வன்றே.

இ—ள்: தாரால் பொலி பொன் புயவீரர் தவாது செல்லும் தேர் ஆர்ப்பும்—மாலைகளாற் பொலியப்பெற்ற அழகிய புயங்களையுடைய வீரர்கள் ஓயாது ஊர்ந்து செல்கின்ற தேர்களினெலியும், நால் வாய் கரி ஆர்ப்பும்—தூங்குகின்ற வாயினையுடைய யானைகளினெலியும், வெம் சேனை ஆர்ப்பும்—கொடிய சேனைகளினெலியும், ஏர் ஆர்ப்பு மிக்க பதி மானவர் ஈண்டும் ஆர்ப்பும்—அழகின் அமைதி மிகுந்த பல தேசங்களிலுமுள்ள மனிதர்கள் வந்து நெருங்குதலாலுண்டாகிய ஒலியும் (என்னுமிவைகள்), கார் ஆர்ப்பும் வேலை கடல் ஆர்ப்பும் கடுத்த—மேகத்தின் முழக்கத்தையும் சமுத்திரத்தினெலியையும் நிகர்த்துள்ளன எ—று.

அன்று ஏ அசைகள். நாலுதல்—தூங்குதல். ஏரார்ப்பு என்பதில் ஆர்ப்பு—கட்டுப்பாடு. வேலே கடல் என்பன ஒருபொருட் சொற்கள். வேலையைக்கரையெனினுமாம்.

எஞ்ஞான்றும் வெற்றிமாலையை யணிந்திருத்தலின் 'தாராற்பொலி பொற்புய வீரர்' எனவும், போவனவும் வருவனவுமாக இடையறுது சஞ்சரிப்பனவென்பார் 'தாவாது செல்லுந்தேர்' எனவும், உத்தமவிலக்கணமமைந்தனவென்பார் 'நால்வாய்க்கரி' எனவும், கோபக்குணத்தை இயல்பாயுடையனவாதலின் 'வெஞ்சேனை' எனவும், ஐம்பத்தாறு தேசங்களுட் சிறந்தது என்பது போதர 'ஏரார்ப்பு மிக்க பதி' எனவும் கூறினர். (61)

வானோக்கி நிற்கு முலகென்னவு மன்ன வன்செங்
கோனோக்கி நிற்குங் குடியென்னவுங் கோதி லும்பர்
ஆனோர்க்கு நாக ருலகோர்க்கு மவனி யோர்க்கும்
ஏனோர்க்கும் நாடும் நகராகி யிருந்த தவ்வூர்.

இ—ள்; வான் நோக்கி நிற்கும் உலகு என்னவும்—மழைவளத்தை நாடிநிற்கும் உயிர்களைப் போலவும், மன்னவன் செம் கோல் நோக்கி நிற்கும் குடி என்னவும்—அரசனது செங்கோன்மையை நாடிநிற்கும் பிரசைகளைப் போலவும், கோது இல் உம்பர் ஆனோர்க்கும் — குற்றமில்லாத தேவர்களுக்கும், நாகர் உலகோர்க்கும்—நாகலோகத்திலுள்ளவர்களுக்கும், அவனியோர்க்கும்—இப்பூவுலகத்திலுள்ளவர்களுக்கும், ஏனோர்க்கும்—மற்றைய உலகங்களிலுள்ளவர்களுக்கும், நாடும் நகர் ஆகி இருந்தது—விரும்பித் தேடப்படுகின்ற நகரமாயிருந்தது, அ ஊர்—அக்காஞ்சி நகரம் எ—று.

உயிர்கட்கு மழைவளமும் பிரசைகட்குச் செங்கோலும் இன்றியமையாமை போலத் தேவர்க்கும் நாகர்க்கும் மனிதர்க்கும் பிறர்க்கும் அக்காஞ்சிநகர் இன்றியமையாததாயிற்றென்பது கருத்து. மழைவளமில்வழி உயிர்கள் பசியாலிறந்துபடும்: செங்கோலில் வழிப் பிரசைகள் களவு பகை முதலியவற்றுனேருந் தீங்கைத் தீர்த்தற்குப் பற்றுக்கோடின்றி யலக்கணுறும்; காஞ்சிநகரில் வழித்தேவராதியோர் தமக்குநேரும் பாவமுதலிய குறைகளைத் தீர்த்தற்கும் வரங்களைப் பெறுதற்கும் ஏற்ற தலமின்றித் துயருழப்பர் என்க.

உயிர்கள் வானோக்கிநிற்றலையும் குடிகள் கோனோக்கி நிற்றலையும்

"வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்செங்
கோனோக்கி நிற்குங் குடி"

என்னுந் திருக்குறளாலுமுணர்க. வானினுயவுணவை வானென்றுங் கோலினுயவேமத்தைக் கோலென்றுங் கூறியது காரணகாரியவுபசாரம். நோக்கி நிற்றலாவது: உளதாய வழி நிலைபெறுதல். உலகு—ஆகுபெயர். செங்கோல்—செம்மையாகிய கோல். ஒருபாற்கோடாது செவ்வனே நிற்றலிற் செங்கோலெனப்பட்டது. இதனை வடநூலாருந் தண்டமென்பர். நாகருலகோரென்றது கீழுலக வாசிகளாகிய சர்ப்பர்களை. ஏனோரென்றது தபோலோக முதலிய பிறலோகங்களில் வசிக்கும் முனிவர் முதலாயினோரை. (62)

கோடு நெறியு மிகலும்மனக் கோட்ட மாய
கேடும் பிணியு முதலாகிய கேதம் யாவும்
நீடும் பரிவோ டுறைவாரிடை நீங்க லாலே
வீடந் நகரே யெனிலென்னின் விளம்ப வற்றே.

இ—ள் : கோடும் நெறியும் இகலு மனம் கோட்டம் ஆய கேடும் பிணியும் முதல் ஆகிய கேதம் யாவும்—துன்மார்க்கமும் பகையும் அழுக்காருகிய குற்றமும் நோயும் முதலாகப் பொருந்திய தீமைகளனைத்தும், நீடும் பரிவோடு உறைவார் இடை நீங்கலால்—மிக்க விருப்பத்துடன் வசிப்பவர்களிடத்துச் சாராதொழித லால், வீடு அ நகரே எனில்—முத்தித்தலம் அக்காஞ்சிபுரமேயென்று பெரியோர் கள் சொல்வார்களாஞல், என்னின் விளம்ப வற்ரூே—அந்நகரின் பெருமை என் ஞற் சொல்லக்கூடியதாகுமா? (ஆகாதே) எ—று.

ஏகாரங்களுள் முன்னையது அசை. பின்னையது பிரிநிலே. கோடும் நெறி — நேர்மையில்லாத நெறி. கேதம் யாவுமென்றது மனம் வாக்குக் காயமென்னும் முக்கரணங்களாலும் விளையுங் குற்றங்களுள் ஈண்டுக் கூறப்படாதனவற்றை. வீடு— முதனிலே திரிந்த தொழிற்பெயர்; விடுதலென்பது பொருள். இது வீட்டைத் தருந் தலத்தின்மேனிற்றலிஞலாகுபெயர். கோடுநெறி முதலியவனைத்தையும் நீக்குதற் கேற்ப 'வீடந்நகரே' என்ருர்.

காஞ்சிநகரில் வாழ்வோர்க்கு அக்குற்றமனைத்துமணுகாவென்பதை

''அக்காஞ்சி கலிநாசப் பொருட்டுநாம் படைத்து வைத்ததா தலாலே
யெக்காலு மந்நகரி னகத்துயரும் வினைத்துயரு மெய்தா வாகும்''

எனக் காஞ்சிப்புராணமுங் கூறும். இந்நகர் முத்தித்தலமென்பதை மேல் எழுபத் தைந்தாஞ் செய்யுளாலுமுணர்க. வற்று—அஃறிணை யொன்றன்பாற் படர்க்கைக் குறிப்புவினைமுற்று; வன்மையையுடைத்தென்பது பொருள், (63)

## வேறு

ஏமமே தருவாச் சினைகளு மனைத்தா விலைதளிர் செய்யபூந் துகிராக்
காமர்பூ மணியா வுதித்தொரு காஞ்சி கண்ணரோ ரைவர்முன் கண்டு
தாமினி தருளும் பொய்கையின்மருங்கே தன்னிழல் பிரிகிலா துறலாற்
பூமியெண் காஞ்சி மாபுர மெனும்பேர் புனைந்ததப் பொருவிலா நகரம்.

இ—ள் : தரு ஏமமே ஆ—மரம் பொன்னேயாகவும், சினைகளும் அனைத்து ஆ—கிளைகளும் அப்பொன்னேயாகவும், இலே தளிர் செய்ய பூ துகிர் ஆ—இலைக ளும் தழைகளும் சிவந்த பொலிவார்ந்த பவளமேயாகவும். காமர் பூ மணியா— அழகிய மலர்கள் நீலரத்தினமேயாகவும், ஒரு காஞ்சி உதித்து—ஒரு காஞ்சிமர மானது தோற்றி, ஓரைவர் கண்ணர் முன் இனிது கண்டு அருளும் பொய்கை யின் மருங்கு—ஐந்து விஷ்ணுக்கள் முற்காலத்தில் நன்ருகச் செய்தருளிய தடாகங் களின் பக்கத்தில், தன் நிழல் பிரிகிலாது உறலால்—தன்னுடைய நிழலானது இடம்விட்டுப் பிரியப்பெருது நிற்றலால், பூமி எண் காஞ்சி மா புரம் எனும் பேர் புனைந்தது—பூவுலகத்தார் மதிக்கின்ற மகத்தாகிய காஞ்சீபுரமென்னும் பெய ரைக்கொண்டது, அ பொரு இலா நகரம்—அந்த ஒப்பற்ற நகரம் எ—று.

காஞ்சிமரம் நிற்குங் காரணத்தாற் காஞ்சீபுரமெனப் பெயரெய்திற்றென்பது தாற்பரியம். இதனை,

''முழங்குமறை யாகமநூல் வடிவமாகி மூலமுதன் முழுவதுஞ்செங் கனக மாகிச்
செழுங்கனிபூத் தளிர்கணவ மணிக ளாகிச் சேர்ந்தவர்க்கு நாற்பயனு மளிப்ப தாகி
வழங்கிரவி மண்டலத்தின் காறு மோங்க வளர்ந்துநிழல் பிரியாத வண்மைத் தாய
தழங்குபுகழ்த் திருக்காஞ்சி நிலேபே றெய்துந் தன்மையிஞற் காஞ்சியெனும் பெயரிற் ருமால்''

எனக் காஞ்சிப்புராணங் கூறுதலாலுமுணர்க.

இப்பெயர்க்காரணம் ஷை புராணத்திற் பிறவாறுங் கூறப்பட்டுள்ளது. முன்னைய ஏகாரம் தேற்றம். ஏமமே என்பதிலுள்ள ஏகாரத்தை, பின்வரும் அனைத்துதுகிர் மணி என்பவற்றோடுந் தனித்தனியியைக்க. ஒன்று பலவடுக்கிய ஈறுதொக்க ஆக என்னும் வினையெச்சங்கள் உதித்து என்னுந் தன்கருத்தா வினைகொண்டன. உதித்து உறலால் புனைந்தது என இயையும். ஒரைவர்—ஒன்றுலுறழ்ந்த ஐவர். பூமி—ஆகுபெயர். பேர்—பெயரென்பதன் விகாரம். தாம்—அசை.

> நற்பாலன நல்லவர் பாலணுகிற்
> பொற்பூமண மும்பெறல் போலுமெனும்
> சொற்பாரி னிற்றீயது தூயவிதன்
> விற்பாய் மணமேதகு பொன்மலரே.

எனக் காஞ்சிப்புராணம் விசேடித்தலின் 'காமர்பூ' என்றார். தாவரவகையின் பாற்பட்ட பிறமரங்கள்போல வித்து வேர் முதலியவற்றினுற்பத்தியாகாது திருக்கைலாசகிரியிற் றேவியார் வளர்த்த மல்லிகைக் கொடியே தெய்வீகமான ஓர் காஞ்சிமரமாக உதித்ததெனக் காஞ்சிப்புராணங் கூறுதலின் ஏனைக் காஞ்சிமரங்கள்போல நீலமலருடைத்தன்றென்றுகொண்டு, மணி என்பதற்கு மாணிக்கமெனப் பொருள் கூறினுமாம்.

ஐந்துகண்ணராவர்: வாசுதேவர் நாராயணர் பிரத்தியும்நர் அநிருத்தர் சங்கர்ஷணர் என்பவர்கள், அவர்களமைத்த பொய்கைகளும் ஐந்து. அவையாவன: சூரியபுஷ்கரணி சந்திரபுஷ்கரணி அக்கினிபுஷ்கரணி சுவர்ணபுஷ்கரணி அமிர்த புஷ்கரணி என்பன. இவற்றை,

> " உரைக்கு மிரவி மதிகனலி சுவண மமிழ்த முறுபெயரான்
> வரப்புட் கரணித் தடமைந்தும் வாசுதேவ ஞரணனே
> பிரத்து மிநனே டநிருக்தன் சங்க ருடண னெனப்பீதாம்
> பரத்தன் பகுப்பி னைவர்தொடும் பஞ்ச தீர்த்தம்......"

எனக் காஞ்சிப்புராணங் கூறுதலானுமுணர்க.

சூரிய சந்திரர்களின் உதயாஸ்தமனங்களுக் கிடைப்பட்ட காலங்கடோறும் இடம்பெயர்ந்து அவரது கிரணங்கள் பரவுந் திசைக்கெதிரே தோன்றாது எஞ்ஞான்றும் மரத்தின் கீழிடத்திற்றானே சாயை நிற்றலின் ' தன்னிழல் பிரிகிலாதுறலால்' என்றார். இதனை,

> " உலகே துறினுங்கலை யோவியரு
> ணிலையே நிலையாக நிலைத்தவர்க
> ளலையாரது போலொளி யாங்குறினுஞ்
> சலியாதடி நின்றெளிர் தண்ணிழலே "

எனக் காஞ்சிப்புராணங் கூறுதலானுமுணர்க. (64)

> சுருதியா னுறங்கு மிராத்தொறு முடிவிற் றுஞ்சிய வூழிக டோறும்
> விரையவந் துலக மழித்திடுங் கடலவ் வியன்பதி யெல்லையுட் சிறிதும்
> வருவதை யஞ்சிப் புறந்தனிற் சூழ வந்தொரு சத்திகாத் திடலாற்
> பிரளய சித்தென் றொருதிரு நாமம் பெற்றதக் காஞ்சியம் பேரூர்.

இ—ள்: சுருதியான் உறங்கும் இராதொறும்—பிரமதேவர் நித்திரைசெய்கின்ற இராக்காலமாகிய பிரளயங்கடோறும், முடிவில் துஞ்சிய ஊழிகள் தோறும்—அவர்கள் வாழ்நாண்முடிவிலிறக்கின்ற கற்பங்கடோறும், விரையவந்து உலகம் அழித்திடும் கடல்—விரைந்துவந்து உலகங்களையழிக்கின்ற சமுத்திரமானது, அ வியன் பதி எல்லையுள் சிறிதும் வருவதை அஞ்சி புறம் தனில் சூழ—அந்தப் பெரிய காஞ்சிநகரின் எல்லையினுள் அற்பமாயினும் பிரவேசித்தற்குப் பயந்து

வெளியே வளைந்துநிற்கும்படி, ஒரு சத்தி வந்து காத்திடலால்—(காளியாகிய) ஒரு சத்தியானவள் வந்து காவல்செய்திருத்தலால், பிரளயசித்து என்று ஒரு திரு நாமம் பெற்றது—பிரளயசித்து என ஒரு சிறந்தபெயரைப் பெற்றது, அ காஞ்சி யம் பேர் ஊர்—அந்தக் காஞ்சிமாநகரம் எ—று.

பிரளயத்தாலழிவுறுவண்ணங் காளி காவல்செய்த காரணத்தாற் பிரளயசித் தெனப் பெயர்பெற்றதென்பது தாற்பரியம்.

முன்னொருழிகாலத்திலே பிரளயவெள்ளம் பெருக, விஷ்ணு பிரமா முதலிய தேவர்களும் முனிவர்களும் கண்டு நடுநடுங்கிக் காஞ்சீபுரத்தில் வந்து ஏகாம்பர நாதரைப் பணிந்து "பெருமானே! முழங்கியதிர்ந்து பெருகிவராநின்ற பிரளய வெள்ளத்தால் அடியேங்களழியாவண்ணம் அருள்செய்தருளுக" என்று பிரார்த் தித்தனர். அக்கடவுள் அக்கடல்களை அடக்கும்படி தமது சத்திகளுளொன்றாகிய காளியை ஏவினர். அக்காளி அக்கினிப்படையைக் கைக்கொண்டுசென்று பெருகி வரும் பிரளயக்கடலை அழிக்கநினைப்ப, அது பயந்தொடுங்கிப் புறத்தேநின்றது. அதனால் இப்பெயரெய்திற்று. இதனை,

செழுவண்டு முரன்று திளைப்பமதுப்
பொழியுந்தொடை வேய்ந்தெழில் பூத்தகுழன்
மழையுண்விழி மாதொளிர் காளிதனை
யெழுவேலை யடக்கென வேவினரே,

எனவும்,

முன்னுற்று முருக்க முயன்றருளும்
வன்னித்திரள் கால்படை மங்கையினைக்
கன்னிக்கடல் கண்டு கலங்கியவ
டன்னைத் தொழுதுய்ந்து தணிந்ததுவே

எனவும்,

எற்றித்திரை பாயிலயப் புனலை
வெற்றித்திறல் காட்டி விலக்குதலாற்
றெருத்துப்பொழில் சூழ்நகர் தானிலய
சித்துப்பெயர் வாய்ந்து திகழ்ந்ததுவே.

எனவும் காஞ்சிப்புராணங் கூறும். பிரளயசித்தெனினும் லயசித்தெனினுமொக்கும்,

சுருதியான்—வேதங்களை அறிந்தவன். சுருதி — கேட்கப்படுவது; எழுதாக் கேள்வியாதலின் வேதத்தை அங்ஙனங் கூறுவது. விரைய என்னுஞ் செயவெனெச் சம் செய்தெனெச்சமாகவும் வருவதை என்பதில் இரண்டனுருபு நான்கனுருபாக வும் திரிக்கப்பட்டன. சூழ என்னும் எச்சம் காரியப்பொருட்டு. அது காத்திட லால் என்னும் பிறகருத்தாவின் வினைகொண்டது. பிரளயம் என்பதில் பிர என் னும் உபசர்க்கம் மிகுதியையுணர்த்தும், லயம்—ஒடுக்கம். ளவொற்றுமைபற் றிப் பிரளயமென வழங்கிற்று. எல்லாமொடுங்குங் காலமென்பது பொருள். சித்—வென்றது; இது தமிழில் உகரவீறாக வழங்கிற்று. பிரமன் வாழ்நாளளவை முன் கடவுள் வாழ்த்தில் 18-ஆஞ் செய்யுளுரையிற் காண்க.

இறுதி செய்திடலே சீற்றம் இன்பமே யாண்மை யென்று
வறைதரு சத்தி நான்கா மரன்றனக் கையை காளி
முறைபுரி கவுரி யின்னோர் மும்மையும் பெற்றோ ரேனைப்
பெறலருஞ் சத்தி யானிப் பெற்றியு மறைகள் பேசும்.

என்றபடி சிவபெருமானது நால்வகைச் சத்திகளுட் காளியுமொன்றாதலின் 'ஒரு சத்தி' என்றார். (65)

கயிலையி லரனை யம்மைபூங் காவிற் கண்களை மூடலு முலகிற்
பயிலுறு கொடிய வினையிரு ளகலும் பான்மையால் வந்துமா நிழற்கீழ்
இயலொடும் பரமன் பூசனை யியற்றி யிரைத்தெழு கம்பைகண் டஞ்சிச்
செயன்முறை தழுவக் குழைந்தருள் செய்யச் சிவபுர மானதச் சீரூர்.

இ—ள்: அம்மை—உமாதேவியார், கயிலையில் பூ காவில் அரனை கண்களை மூடலும்—திருக்கைலாசகிரியிலுள்ள திருநந்தனவனத்திற் சிவபெருமானது திருக்கண்களிரண்டையும் (தமதிருகைகளாலும் விளையாட்டின் பொருட்டு) மூடியவுடன், உலகில் பயிலுறு கொடிய வினை இருள் அகலும் பான்மையால்—உலகங்களிற் பயின்ற தீவினையாகிய இருள் நீங்கும்படி, வந்து—(பூவுலகத்தில்) வந்து, மா நிழல் கீழ் இயலொடும் பரமன் பூசனை இயற்றி—காஞ்சிமாமர நீழலில் வேதாகம விதிப்படி சிவபூசையைச்செய்து, இரைத்து எழு கம்பை கண்டு அஞ்சி—(அவரது பூசாபத்தியைப் பரீக்ஷித்தற்பொருட்டுச் சிவபெருமானழைப்பக் கங்கை முதலிய நதிகளுடன்) முழங்கியெழுந்த கம்பைநதியைப் பார்த்துப் பயந்து, செயல் முறை தழுவ—அப்பொழுது செய்யவேண்டிய கிரமப்படி அப்பெருமானைத் தழுவ, குழைந்து அருள் செய்ய—(அச்சிவபெருமான்) திருமேனி குழைந்து கருணைபுரிதலால், சிவபுரம் ஆனது—சிவபுரம் என்னும் பெயரைப் பெற்றது. அ சீர் ஊர்—அந்தச் சிறந்த காஞ்சிநகரம் எ—று.

தேவியார் வழிபடக் கருணைசெய்துகொண்டு சிவபெருமான் வீற்றிருக்குங் காரணத்தாற் சிவபுரமெனப் பெயர்பெற்றதென்பது தாற்பரியம்.

அரனை என்பதிலுள்ள இரண்டனுருபு ஆறனுருபாகத் திரிக்கப்பட்டது. அம்பா என்னும் வடசொல் அம்மையென வழங்கிற்று; எல்லாவுலகங்களுக்குந் தாயென்பது பொருள். கொடியவினை—பாவம். இயல்—முறை. பரமன்—பரையென்னுஞ் சத்தியையுடையவன். அல்லது பரவுணர்வால் உணரப்படுபவன். பரவுணர்வாவது, வேதாந்த சித்தாந்தங்களின் உண்மையைத் தெளிதலாலுண்டாகும் ஞானம். கம்பா என்னும் வடமொழி ஈற்றுகாரமைகாரமாகிக் கம்பையென நின்றது. கம்—பா. கம் என்பது நீர் சிரம் உயிர் மோக்ஷம் எனவும் பா என்பது சுத்தப்படுத்துதல் காத்தல் பருகுதல் எனவும் பொருள்படுமாதலின், கம்பை என்பதன் பொருள் முறையே நீரினாற் சுத்தப்படுத்துவது, சிரசில் தொட்டவர்களைச் சுத்தப்படுத்துவது, பருகினோருயிரைக் காப்பது. மோக்ஷத்தை நுகர்விப்பது என்பவவாமெனக் காஞ்சிப்புராணங் கூறும். மூடலும் என்னும் எச்சம் பயிலுறு என்பதனோடியைந்தது. செய்ய என்னுமெச்சம் காரணப்பொருட்டாய் ஆனது என்னும் பிறகருத்தாவினைகொண்டு முடிந்தது.

அவ்விடத்தைவிட்டுத் தூரத்திலோடிய வழியே நதிப்பிரவாகத்திற்றுனமிழ்ந்தாது உய்திபெறுதல் கூடுமாகவும் அங்ஙனஞ் செய்தக்கால் தாம் தொடங்கிய பூசை பங்கப்படுமெனவும் பூசையையேற்றிருந்த பெருமானுரும் கங்கையாற்றின் வேகத்தினலலைக்கப்படுவரெனவும் எண்ணி அகன்று செல்லாது தாம் பூசித்த சிவலிங்கத் திருமேனியை இறுகத் தழுவியிருந்தனரென்பது தோன்ற 'செயன்முறை தழுவ' என்றார்.

விண்ணுறை மகவான் கரிப்ரி தவத்தால் வெற்பதாய்த் தன்னைமுன்றாங்கு
புண்ணிய கோடி யிபகிரி மிசையே பொருவிலா வேதியுத் தரத்தில்
அண்ணலங் கமலத் திசைமுகன் வேள்வி யாற்றலு மவற்கருள்செய்வான்
கண்ணன்வந் திடலால் விண்டுமா புரமாங் கட்டுரை பெற்றதக்காஞ்சி.

இ—ள்: விண் உற்ற மகவான் கரி புரி தவத்தால் வெற்பது ஆய் தன்னை முன் தாங்கு புண்ணியகோடி இபகிரி மிசை—சுவர்க்கலோகத்தில் வாழுகின்ற இந்திரனது ஐராவதயானை செய்துகொண்ட தவப்பயனால் மலைவடிவுகொண்டு தம்மை முற்காலத்திற்சுமந்த புண்ணியகோடியாகிய அத்திகிரியின்மேலுள்ள, பொரு இலா வேதி உத்தரத்தில்—ஒப்பில்லாத உத்தரவேதியின்கண், அண்ணல் அம்கமல திசை முகன் வேள்வி ஆற்றலும்—பெருமைபொருந்திய அழகியதாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவர் யாகஞ்செய்ய, கண்ணன் அவற்கு அருள் செய்வான் வந்திடலால்—விஷ்ணுமூர்த்தி அப்பிரமதேவர்க்குக் கருணைபுரியும்படி எழுந்தருளி வந்திருத்தலால், மா விண்டுபுரம் ஆம் கட்டுரை பெற்றது—பெருமை பொருந்திய விண்டுபுரமென்னுஞ்சிறந்த பெயரைப்பெற்றது, அ காஞ்சி—அந்தக் காஞ்சிபுரம் எ—று.

விஷ்ணுமூர்த்தி பிரமதேவரது யாகத்தில் வரங்கொடுக்குமாறு எழுந்தருளியிருத்தலால் விண்டுபுரமெனப் பெயர்பெற்றதென்பது தாற்பரியம்.

மகவான் நூறு யாகங்களையுடையவன். கரி—துதிக்கரத்தையுடையது. அது—பகுதிப்பொருள்விகுதி. புண்ணியகோடி—புண்ணிய தீர்த்தத்தின் கோடியிலுள்ளது. கோடி—நுனி. ஓர்புண்ணியஞ்செய்தவழிக் கோடிமடங்காய் மல்குதலின் இப்பெயராயிற்றெனினுமாம். இது விஷ்ணுமூர்த்தி சக்கரப்படையைப் பெறும்பொருட்டுப் பூசித்து அச்சக்கரத்துடன் வரதராசப்பெருமாளென்னும் பெயரையும் பெற்றதலம். உத்தரவேதி—வடக்கின்கணுள்ள வேதிகை. இது செய்யுளமைதிக்கேற்ப வேதியுத்தரமெனச்சொன்மாறி நின்றது. கிருஷ்ணன் விஷ்ணு என்னும் வடமொழிகள் முறையே கண்ணன் விண்டு என வழங்கின. ஏ—அசை.

முன்னொருகாலத்தில் முருகவேளுக்கும் இந்திரனுக்கும் போர்மூண்டவழி முருகவேளேவிய குலிசாயுதத்தால் மோதுண்ட ஐராவதயானை அவ்வூறுபாடு நீங்கும்பொருட்டுச் சிவபூசைசெய்துகொண்டு புண்ணியகோடியிலிருந்த விஷ்ணுவை மலையாய்ச்சுமந்துநின்றதனாற் புண்ணியகோடியை அத்திகிரியென வழங்குதலின் 'விண்ணுறைமகவான் கரிபுரிதவத்தால்வெற்பதாய்த்தன்னை முன்றாங்கு—புண்ணியகோடியிபகிரி' என்றார். இதனை,

"முன்னொரு நாளிற் செவ்வேன் முருகனும் விண்ணு டாளு
மன்னனு மூண்ட போரில் வலாரிதன் மீதி லோச்சு
மின்னவிர் குலிசத் தண்டின் வீறழித் துமையா ளீன்ற
பின்னவன் புடைத்தான் றன்கை பிடித்த வெங்குலிசத் தண்டால்"

எனவும்,

"வானவர்க் கரச னோடு மறுகி மாழாந்து மூர்ச்சித்
தீனமுற் றிரங்கும் வெள்ளை இபமொரு சிறுவன் கையால்
யானு மெம்மிறையும் பட்டே மின்னவ னூர்தி யாகி
லூன மொன்றுறுதென் றெண்ணியொப்பருங் காஞ்சி யெய்தி"

எனவும்,

"வம்பலர்ந் துலவும் வேக வதிப்புனற் றிருத்த மாடி
யம்பிகை பாகற் போற்றி யருள்பெறு நீல மேனி
யும்பனை மலையிற் போற்றி யவ்வர முற்ற தற்று
னம்புமக் கிரியை யத்தி கிரியென நவிலு வாரால்"

எனவும் காஞ்சிப்புராணங் கூறுதலானறிக.

பிரமதேவர் படைத்தற்றொழில் சித்திபெறுமாறு காஞ்சீபுரத்தில்வந்து புண்ணியகோடியின் கண்ணே யாகஞ்செய்யத்தொடங்க, அந்தயாகத்திற்குரியபரியை மாயாவியென்னுமவுணன் திருடிச்சென்று நன்னீர்க்கடலிலொளித்தனன். அதனாற்

பிரமதேவர் மனமாழ்கி மாமரநீழலில்வீற்றிருக்கின்ற ஏகாம்பரேசுரர் சந்நிதானத்திற் சென்றுகுறையிரப்ப, அப்பெருமான் 'பரியைமீட்டுக்கொடுத்து யாகத்தை நிறைவேற்றுவை; அந்தயாகத்தில் நமக்குக்கிடைக்கும் அவிப்பாகத்தையும் நீயே யேற்றுக்கொள்' என்று கட்டளையிட்டுத் திருமாலையேவினர். திருமால் அவுணனைத் தேடிக் கண்டு பொருது அவனுயிரைமாய்த்து யாகப்பரியைமீட்டுப் பிரமதேவர்க்குதவி யாகத்தை நிறைவேற்றி அருள்செய்தனர். ஆதலின் 'திசைமுகன்வேள்வி யாற்றலுமவற்கருள்செய்வான் கண்ணன்வந்திடலால்' என்றார். (67)

கார்த்திரு மேனித் தண்டுழாய் மௌலிக் கண்ணனுங் கமலமேலயனும்
ஆர்த்திடுந் தரங்கப் பகீரதி மிலைந்த வவிர்சடை யமலனுமாகும்
மூர்த்திக டத்த முலகமே போல முன்னியப் பதியமர் செயலாற்
சீர்த்திரி மூர்த்தி வாசமாகியபேர் சிறந்ததக் கச்சிமா நகரம்.

இ—ள்: கார் திரு மேனி தண் துழாய் மௌலி கண்ணனும் — கரிய திருமேனியையும் குளிர்ந்த துளசிமாலையை யணிந்த முடியையு முடைய விஷ்ணுமூர்த்தியும், கமல மேல் அயனும்—செந்தாமரை மலராசனத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவரும், ஆர்த்திடும் தரங்க பகீரதி மிலைந்த அவிர்சடை அமலனும் ஆகும் — ஒலிக்கின்ற திரைகளையுடைய கங்கைநதியை (சிறுதிவலையாகஅடக்கி) அணிந்த விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபெருமானும் ஆகிய, மூர்த்திகள்—மும்மூர்த்திகளும், தத்தம் உலகமே போல முன்னி அ பதி அமர் செயலால்—தங்கள் தங்கள் உலகங்களையேபோல நினைத்து அந்நகரத்தில் வாழ்ந்திருக்குந் தன்மையினால், சீர் திரி மூர்த்திவாசம் ஆகிய பேர் சிறந்தது—சிறப்பினையுடைய திரிமூர்த்திவாசமென்னும் பெயர் விளங்கப்பெற்றது. அ கச்சி மாநகரம்—அந்தப் பெரிய காஞ்சி நகரம் எ—று.

மும்மூர்த்திகளும் நிலைபெற்று வாழ்தலால் திரிமூர்த்திவாசமெனப் பெயர் பெற்றதென்பது தாற்பரியம்.

பாகீரதியென்னும் வடமொழி முதல் குறுகிப் பகீரதி எனவும் வழங்கப்படும். ஏ—தேற்றம், திரிமூர்த்திவாசம்—மும்மூர்த்திகளது இருப்பிடம். உலகத்தை யழிக்கும்படியெழுந்த நஞ்சை அடக்குமாறெதிர்த்துத் திருமேனி கறுத்தவராதலின் 'கார்த்திருமேனி' என்றார். (68)

தரணிகண் முழுதும் புரிதரும் விரிஞ்சன் றன்மனம் புனிதமாம் பொருட்டால்
திருமகள் கணவன் கமடமாய்ப் பூசை செய்திடு கச்சபா லயத்தில்
அரனடி பரவி யருச்சனை யியற்றி யங்கண்வீற் றிருந்திடு நெறியால்
வரமிகு பிரம புரமென வொருபேர் மன்னிய தன்னதோர் நகரம்.

இ—ள்: தரணிகள் முழுதும் புரிதரும் விரிஞ்சன்—உலகங்களெல்லாவற்றையும் படைத்த பிரமதேவர், தன் மனம் புனிதம் ஆம் பொருட்டால்—(பொய் கூறுதலாற் குற்றமடைந்த) தமது மனம் பரிசுத்தமுறும்படி, திருமகள் கணவன் கமடம் ஆய் பூசை செய்திடு கச்சபாலயத்தில் அரன் அடி பரவி அருச்சனை இயற்றி — இலக்குமிதேவிக்கு நாயகராகிய விஷ்ணுமூர்த்தி கூர்மவடிவங்கொண்டு பூசித்த கச்சபாலயத்தின்கண்ணே சிவபெருமானது திருவடிகளைத் தொழுது பூசித்து, அங்கண் வீற்றிருந்திடும் நெறியால்—அத்தலத்திலெழுந்தருளியிருந்த காரணத்தால்,

ஏனைய நூல்களின் முரணை யறுத்தற்குக் கருவி நூலாகிய வேதம் நிலை கெட, உண்மை தெளிந்து ஐயந்தீர்த்தற்கேற்ற பிறநூலின்றி மருண்டனரென்பது கருத்து.

ஏ அசை. முந்தொருகாலம் என்றது ஆதிகற்பத்தில் வந்த துவாபர யுகத்தை. 'வல்வினையதனுல்—சிந்திட' என இயையும். மிகவிரிந்தநூலென்பார் 'அந்தமின் மறை' என்றார். (1)

நெற்றியில் விழிகொண்ட நிமலன தருளாலே
அற்றமில் மறையெல்லா மாதியின் வரலாலே
மற்றத னியல்பெல்லா மயலற வேநாடித்
தெற்றென வெவராலுஞ் செப்புவ தரிதாமால்.

**இ—ள்:** அற்றம் இல் மறை எல்லாம்—குற்றமில்லாத வேதங்கள் யாவும், நெற்றியில் விழிகொண்ட நிமலனது அருளால் ஆதியின் வரலால்—நெற்றிக் கண்ணையுடைய மலரகிதராகிய சிவபெருமானது திருவருளால் முற்காலத்தில் தோன்றுதலால், அதன் இயல்பு எல்லாம் மயல் அறநாடி தெற்று என செப்புவது—அவ்வேதங்களின் தன்மை முழுவதையும் ஐயந்தீரத் தேர்ந்து தெளிவாகச் சொல்வது, எவராலும் அரிது ஆம்—எத்தகையினராலும் அருமையாகும் எ—று.

ஏகாரங்களும் மற்றும் ஆலும் அசைநிலைகள்.

சிவனருளிய வேதங்களிலுண்மையைப் பிறர்தேர்ந்து கூறுவது கூடாதென்பது கருத்து. ஆதி—சிருட்டியாரம்பம். உம்மை—உயர்வு சிறப்பு. (2)

ஆனதொர் பொழுதின்க ணமரரு முனிவோரும்
மாநில மிசைவைகும் மாக்களு மிறையுள்ள
ஞானம திலராகி நவின்மறை நெறிமாற்றித்
தீநெறி பலவாற்றிப் பனுவல்கள் சிலசெய்தார்.

**இ—ள்:** ஆனது ஓர் பொழுதின்கண்—அக்காலத்தில், அமரரும் முனிவோரும் மாநிலமிசை வைகும் மாக்களும்—தேவர்களும் முனிவர்களும் பெரிய பூவுலகத்தில் வசிக்கின்ற மனிதர்களும், இறை உள்ளம் ஞானமது இலர்ஆகி—சிறிதும் மனத்தில் நல்லறிவில்லாதவர்களாய், நவில்மறை நெறிமாற்றி—விதிக்கப்பட்ட வைதிகமார்க்கத்தை விலக்கி, பல தீநெறி ஆற்றி—விலக்கப்பட்ட பல தீய மார்க்கங்களை உண்டாக்கி, சில் பனுவல்கள் செய்தார்—(அவற்றிற்கேற்பச்) சில சமயநூல்களை இயற்றினார்கள் எ—று.

ஆனதொர் பொழுதென்றது முதலாஞ் செய்யுளிற் கூறிய காலத்தை, இறை என்பதில் இழிவுசிறப்பும்மை தொக்கது. (3)

அவனியி லறமெல்லா மருவினை யெனநீக்கிப்
பவநெறி யறமென்றே பற்பல ருஞ்செய்யப்
புவனம துண்டோனும் போதனு மதுகாணுச்
சிவனரு ளாலன்றித் தீர்கில திதுவென்றார்.

**இ—ள்:** அவனியில் பற்பலரும்—பூவுலகத்திற் பற்பல மனிதர்களும், அறம் எல்லாம் அருவினை என நீக்கி—புண்ணியங்களெல்லாங் கொடும்பாவமா

மென்றெண்ணிச் செய்யாது விடுத்து, பவ நெறியே அறம் என்று செய்ய—பாவமார்க்கங்களே தருமமாமென்று நம்பிச்செய்ய, புவனமது உண்டோனும் போதனும் அது காணு—பூவுலகத்தை யுண்டவராகிய திருமாலும் பிரமதேவரும் அத்தன்மையைத் தெரிந்து, இது சிவன் அருளால் அன்றி தீர்கிலது என்ருர்—இது சிவபெருமானது திருவருளாலன்றி மற்றென்றுலுந் தீராதென்று நிச்சயித்தார்கள் எ—று.

இதனைத் தீர்த்தல் தம்மாற்கூடாதென நிச்சயித்தனரென்பது குறிப்பு. பிரிநிலையேகாரம் பிரித்துக்கூட்டப்பட்டது. (4)

**வேறு**

இன்ன பான்மையை யெண்ணி யிருவரும்
பொன்னி ஞடு புரந்திடு மன்னனுந்
துன்னு தேவருஞ் சுற்றினர் வந்திடக்
கன்னி பாகன் கயிலையி லேகினர்.

**இ—ள்:** இருவரும் இன்னபான்மையை எண்ணி—(திருமாலும் பிரமதேவருமாகிய) இருவரும் இத்தன்மையைச் சிந்தித்து, பொன்னின் நாடு புரந்திடும் மனனனும் துன்னு தேவரும் சுற்றினர் வந்திட—சுவர்க்கலோகத்தையரசியல் செய்கின்ற இந்திரனும் நெருங்கிய மற்றைத் தேவர்களும் தம்மைச் சூழ்ந்து வர, கன்னிபாகன் கயிலையில் ஏகினர்—உமாதேவியை வாமபாகத்தி லுடைய சிவபெருமானது திருக்கைலாசமலையிற் போனர்கள் எ—று.

இன்னபான்மை என்றது சிவனருளாலன்றித் தீராமையை. பிரமதேவருந் திருமாலுந் திரிமூர்த்திகளுட் சேர்ந்த தேவத்தலைவராதலிற் றம்முட் சிந்தித்துப் பின்னர் இந்திரன் முதலாயினோர் பின்வரக் கயிலையை யடைந்தனரென்க.

அந்தில் செம்பொ னணிமணிக் கோயிலின்
முந்து கோபுர முற்கடை யிற்புகா
நந்தி தேவரை நண்பொடு கண்டுநீர்
எந்தை யார்க்கெம் வரவிசைப் பீரென்ருர்.

**இ—ள்:** அந்தில் செம்பொன் அணி மணி கோயிலின் முந்து கோபுரமுன் கடையில் புகா—அத்திருக் கைலாசகிரியிற் செம்பொன்னுற் செய்யப்பட்ட அழகிய இரத்தினமிழைக்கப்பெற்ற ஆலயத்தின் முன்னுள்ள திருக்கோபுரமாகிய முதல் வாயிலிற் புகுந்து, நந்திதேவரை நண்பொடுகண்டு—அங்குள்ள திருநந்தி தேவரை நண்பினுடன் தரிசித்து, நீர் எம்வரவு எந்தையார்க்கு இசைப்பீர் என்ருர்—எம்பெருமானே! தேவரீர் சிறியேங்களது வருகையை எங்கள் தலைவராகிய சிவபெருமானுக்குச் சொல்வீராக என்று கூறினர்கள் எ—று.

அந்தில்—அவ்விடத்து; அசைநிலையெனினுமாம். சிவபெருமானைத் தரிசித்தற்கும் அருள்பெறுதற்கும் உடனின்று உதவிபுரிய வேண்டுதலின், அத்திருநந்திதேவர் தம்மாட்டு நேசமுறுமாறு இன்சொற் கூறி இன்முகங் காட்டித் தரிசித்தனரென்க, (6)

தேவ தேவன் திருமுன்ன ரேகியே
காவல் நந்திக் கடவுள் பணிந்தெழீஇப்
பூவை வண்ணனும் போதனும் புங்கவர்
ஏவ ருஞ்செறிந் தெய்தின ரீண்டென்ருன்.

**இ—ள்:** காவல் நந்தி கடவுள்—முதல்வாயிலைக் காவல் செய்திருக்கின்ற திருநந்திதேவர், தேவதேவன் திருமுன்னர் ஏகி—தேவநாயகராகிய சிவபெருமானது சந்நிதானத்திற் போய், பணிந்து எழீஇ—வணங்கி எழுந்து, பூவை வண்ணனும் போதனும் புங்கவர் ஏவரும் செறிந்து ஈண்டு எய்தினர் என்ருன்—காயாம்பூவையொத்த [கருநிறமமைந்த] திருமேனியையுடைய திருமாலும் பிரமதேவரும் மற்றைய தேவர்கள் யாவரும் நெருங்கித் (தேவரீரைத் தரிசிக்கும் நோக்கமாக) இவ்விடத்து வந்தார்களென்று விண்ணப்பஞ் செய்தார் எ—று.

ஏ—அசை. எழீஇ—எழும்பி என்பதன் விகாரம். பூவை—ஆகுபெயர். புங்கவர்=உயர்வுடையோர். எவருமெனற்பாலது ஏவருமென முதனீண்டது. (7)

என்ற காலையில் யாரையு மிவ்விடைக்
கொன்றை சூடி கொணர்கெனச் செப்பலும்
நன்ற தேயென நந்தி வணங்கியே
சென்று மான்முதற் றேவரை யெய்தினன்.

**இ—ள்:** என்ற காலையில்—என்று திருநந்திதேவர் விண்ணப்பஞ் செய்த பொழுது, கொன்றைசூடி—கொன்றைமலர்மாலையை யணிந்த சிவபெருமான், யாரையும் இ இடை கொணர்க என செப்பலும்—அத்தேவரனைவரையும் இவ்விடத்து அழைத்து வருதியென்று கட்டளைசெய்ய, நந்தி—கேட்ட திருநந்திதேவர், அது நன்று என வணங்கி—அது நல்லதென்று கூறிப் பணிந்து, சென்று—(அவ்விடத்தை நீங்கிப்) போய், மால்முதல் தேவரை எய்தினன்—திருமால் முதலிய தேவர்களை அணுகினர் எ—று,

ஏகாரங்கள் - அசைகள், கொன்றை - ஆகுபெயர். கொணர்க என்னும் வியங்கோளீற்றகரந் தொக்கது. நன்று - உடன்பாட்டை யுணர்த்திநின்றது. (8)

செம்மை போகிய சிந்தை யரைக்கெழீஇ
எம்மை யாளுடை யானரு ளெய்தினன்
உம்மை யங்கு வரநுவன் றுனினி
வம்மி னீரென வல்லையிற் கூவினன்.

**இ—ள்:** செம்மை போகிய சிந்தையரை கெழீஇ—(அத்திருநந்திதேவர்) செப்பம்நீங்கிய மனத்தையுடைய (திருமால் முதலிய) தேவர்களையணுகி, எம்மை ஆள் உடையான் அருள் எய்தினன்—எங்களை அடிமையாகவுடைய சிவபெருமான் கருணைகூர்ந்தவராய், நும்மை அங்கு வர நுவன்ருன்—உங்களை அவ்விடத்து வரும்படி கட்டளைசெய்தார் (ஆதலால்), இனி நீர்வம்மின் என—இனி நீவிரனைவீரும் வாருங்களென்று, வல்லையில் கூவினன்—விரைவிலழைத்தார் எ—று.

கெழீஇ—கெழுமி என்பதன் விகாரம். எய்தினன் - முற்றெச்சம். நந்தி தேவர் தம்வரவை விண்ணப்பிக்கும்போது சிவபெருமான் யாது கட்டளை செய்வாரோ என்னும் ஐயத்தோடு நின்றனரென்பார் 'செம்மைபோக்கிய சிந்தையர்' என்றார். (9)

விளித்த காலை விழிவழி போதநீர்
துளிக்க நின்று தொழுது கவலொரீஇக்
களிக்கு நெஞ்சினர் கண்ணுத லெந்தைமுன்
அளித்தி யாலென் றவனுட னேகினார்.

இ—ள்: விளித்த காலை — அழைத்தபொழுது, விழி வழி போத நீர் துளிக்க நின்று தொழுது—அத்தேவர்கள் கண்களின் வழியே ஆனந்த பாஷ்பம் அரும்பநின்று கைதொழுது, கவல் ஒரீஇ களிக்கும் நெஞ்சினர்—(எண்ணிய கருமந் தவறாது முற்றுப்பெறுமென்னுமுறுதிப்பாட்டானே) கவலையை நீங்கி மகிழ்கின்றமனத்தையுடையராய், கண்ணுதல் எந்தை முன் அளித்தி என்று— நெற்றிக் கண்ணையுடைய எம்பரமபிதாவாகிய சிவபெருமானுக்குமுன்னே எங்களைக்கொண்டு செல்வீராக என்றுகூறி, அவனுடன் ஏகினார் — அந்தத் திருநந்தி தேவரோடு கூடச் சென்றார்கள் எ—று.

ஆல்—அசை. நெஞ்சினர்—முற்றெச்சம். (10)

புடைக டந்திடு பூதர்கள் போற்றுமத்
தடைக டந்து தடுப்பரும் வேனிலான்
படைக டந்தவர் பாற்படு மெண்ணிலாக்
கடைக டந்தபின் அண்ணலைக் கண்டனர்.

இ—ள்: புடைகள் தந்திடு பூதர்கள் போற்றும் அ தடை கடந்து—பக்கங்களிற் பொருந்திய பூதவீரர்கள் காக்கின்ற அந்த முதல்வாயிலைக்கடந்து, தடுப்ப அரும் வேனிலான் படை கடந்தவர் பால் படும் எண் இலா கடை கடந்து—(எத்தகைய துறவிகளாலுந்) தடுத்தற்கரிய மன்மதனது ஐங்கணைகளையும் வென்ற முனிசிரேட்டர்கள் தம்மிடத்து வசிக்கப்பெற்ற அளவிறந்த வாயில்களையுங் கடந்து, பின் அண்ணலை கண்டனர் - அதன்பின்னர்ச் சிவபெருமானைத் தரிசித்தார்கள் (அத்தேவர்கள்) எ—று.

ஐம்பொறிகளையுமடக்கியருந்தவம்புரியும் முனிகணத்தருள்ளுஞ் சிலர் சிற்சிலகாலங்களில் மதனவிகாரத்தான் மயங்குதல்உளதாயினும் இம்மலையில் வசிப்போர் ஒருகாலத்திலும் அவ்வாறு மனந்திறம்பாரென்பார் 'தடுப்பரும்வேனிலான் படைகடந்தவர்பாற்படு மெண்ணிலாக்கடை' என்றார். இத்தகைய பத்திலக்கமென்னுந் தொகைப்பட்ட முனிவர்கள் அத்திருக்கைலாசகிரியில் வசிக்கின்றனரெனமுதனூலுபதேச காண்டத்திற் கூறப்பட்டது.(11)

முன்ன ரெய்தித் தொழுது முறைமுறை
சென்னி தாழ விறைஞ்சினர் சேணிடைத்
துன்னு மாதரந் தூண்டவந் தண்மினார்
உன்னு மன்பின் உததியி னாழ்ந்துளார்.

இ—ள்: முன்னர் எய்தி தொழுது—சிவபெருமானது திருமுன்னிலையிற் சென்று கைதொழுது, முறைமுறை சென்னி தாழ இறைஞ்சினர்—முறை

முறையாகத் தலை பூமியிற்றாழும்படி வணங்கி, சேண் இடை துன்னும் ஆதரம் தூண்ட — தூரத்திலேநிறைந்த பேராவலானது தம்மைச் செலுத்த, உன்னும் அன்பின் உததியின் ஆழ்ந்துளார் வந்து அண்மினர்— (இடையறுது) சிந்திக்கின்ற பேரன்பாகிய கடலுளமிழ்ந்தினவர்களாய் வந்து அணுகினர்கள் எ—று.

இறைஞ்சினர் ஆழ்ந்துளார் என்பன முற்றெச்சங்கள். ஒருமுறை இரு முறை வணங்குதல் வழுவாதலால் மூன்று ஐந்து ஏழு ஒன்பதுமுதலாக விதிக்கப்பட்ட கணக்கமைய வணங்கினரென்பார் 'முறைமுறை சென்னி தாழ இறைஞ்சினர்' எனவும், ஆனந்தமேலீட்டினாலே பரவசராகிச் சிவபெருமான் மேற்கொண்ட பெருங்காதலே தம்மையுந்தச் சென்றணுகினரென்பார் 'துன்னுமாதரந்தூண்ட வந்தண்மினர்' எனவும் கூறினர். (12)

ஈர்க்கும் பாசத் திருவினை யின்றொடே
தீர்க்கின் றாமிவ ணென்னுஞ் செருக்கினல்
தூர்க்கின் றார்மலர் சோதிபொற் றாண்மிசைப்
போர்க்கின் றார்மெய்ப் பொடிப்பெனும் போர்வையே.

இ—ள்: ஈர்க்கும் பாசத்து இருவினை—(துன்மார்க்கத்திற் பிரவேசிக்குமாறு மனத்தை) இழுக்கின்ற பாசத்தொடர்பாலாகிய இருவினைகளையும், இன்றொடே இவண் தீர்க்கின்றாம் என்னும் செருக்கினல்—இற்றைத்தினத்தோடே இவ்விடத்து ஒழிக்கின்றோமென்னுந் தருக்கினல், சோதி பொன் தாள்மிசை மலர் தூர்க்கின்றார்—சோதிசொரூபராகிய சிவபெருமானது அழகிய திருவடிகளிற் புஷ்பங்களைச் சொரிகின்றவர்களாய், மெய் பொடிப்பு எனும் போர்வை போர்க்கின்றார்—சரீரத்திற் புளகமாகிய போர்வையைப் போர்க்கின்றார்கள் எ—று.

ஏகாரங்களிரண்டனுள் முன்னையது தேற்றம், பின்னையது அசை.

துறக்கவின்ப முதலியவற்றைப் பயப்பனவாய வேள்வி முதலிய சிவநல்வினைகளும் தீவினைகளும் முறையே பொன்விலங்கும் இரும்புவிலங்கும்போல நின்று முத்திநெறியிற்புகவிடாது பந்தமுறுத்தலின் 'ஈர்க்கும்பாசத்திருவினை' என்றார், இவ்விருவினைகளையுந் தீர்த்தல் எதுபோலுமெனில், ஓர் வைப்பாட்டியைக் காமித்து அவள் வீட்டிற் பன்னாளும், மனையாள்வீட்டிற் சின்னாளுமாக வாழ்பவனொருவன் வைப்பாட்டியுடன் கூடுதல் இல்லறத்திற் கிழுக்காமென்பதையுணர்ந்தவழி முன்னர் அவண்மேல் ஓரீயிருக்கப்பெறினும் பொருதோச்சும் நேசத்தைவிடுத்து அவளை ஈனர்பிடித் தீர்த்து வருத்தியபோதும் இரங்காது வெறுத்து மனையாட்டியோடு இல்லறம் நடாத்துவன். மேல்துறவறமே சிறந்ததென்பதை யுணர்ந்தவழித் தன் மனையாட்டியையும் வைப்பாட்டியைப்போல வெறுத்து நீக்குவன். பாவ புண்ணியங்களிரண்டையுஞ் செய்துவருவானும் அவ்வாறே, கருமகாண்டத்தை யுணர்ந்தவழிப்பாவத்தை வெறுத்து வேள்வி முதலிய புண்ணியங்களைச் செய்வன். ஞானகாண்டத்தை யுணர்ந்தவழி அப்புண்ணியங்களிலும் வெறுப்புற்று ஞானநிலையைக் கடைப்பிடிப்பன் என்க. (13)

நேய முந்த நெடும்பகல் நீங்கிய
தாயெ திர்ந்திடு கன்றின் தகைமையாய்த்
தூய வந்தனை யோடு தொழுமவர்
வாயின் வந்தன வந்தன போற்றினர்.

இ—ள்: நெடும்பகல் நீங்கிய தாய் — நெடுநாள்வரையும் பிரிந்திருந்த தாய்ப் பசுவை, நேயம் உந்த எதிர்ந்திடு கன்றின் தகைமை ஆய் —பேரன்பு தூண்ட நேர்பட்ட இளங்கன்றின்றன்மை பொருந்தி, தூய வந்தனையோடு தொழும் அவர் — தூய்மையாகிய வணக்கத்துடன் கைதொழுகின்ற அத் தேவர்கள் யாவரும், வாயின் வந்தன வந்தன போற்றினர் — தமது வாயில் வந்த வந்த பிரபாவங்களைக் கூறித் தோத்திரஞ் செய்தார்கள் எ—று.

தாயெதிர்ந்திடுகன்றின்றகைமையென்றது அடங்காத அன்புடைமையை. வந்தனையோடு தொழுமவர் போற்றினரெனவே முற்செய்யுள்களிற் கூறிய வாறு வணங்கி மலர்தூவியபின் கைகூப்பிநின்று தோத்திரஞ் செய்தனரென்பது பெற்றும். இன்னவை கூறுவோமென்றெண்ணிக் கூறுது அன்பின் மிகுதியால் நேர்ந்தவாறு துதித்தனராதலின் 'வாயில் வந்தன வந்தன போற்றினர்' என்றார். (14)

அண்ண லீசன் வடிவை யகந்தனில்
எண்ணி னெல்லையி லின்பம் பயக்குமால்
கண்ணி னேர்வரு காட்சிய ராயிடின்
ஒண்ணு மோவவர் தஞ்செய லோதவே.

இ—ள்: அண்ணல் ஈசன் வடிவை அகந்தனில் எண்ணின் — பெருமையிற் சிறந்தவராகிய சிவபெருமானது திருவுருவத்தை மனத்தில் நினைத்தாற்றானே, எல்லை இல் இன்பம் பயக்கும் — அது அளவிறந்த பேரின்பத்தைத்தரும், கண்ணில் நேர்வரு காட்சியர் ஆயிடின் — அத்திருவுருவம் தமது கண்களில் முற்படப் பெற்ற காட்சியை யுடையவரானல், அவர் தம் செயல் ஓத ஒண்ணுமோ — அவர்களது பேரானந்தச்செயல் எவராலாயினுஞ் சொல்ல முடியுமா? (முடியாதே) எ—று.

ஆல் ஏ அசைகள். சிவபிரானைப்பாவனையாற் சிந்திப்போர்க்கே பரமானந்தம் விளையுமாயின் நேரே தரிசிக்கப்பெற்றோர்க்கு எத்துணைப் பேரானந்தந் தோன்றுமென அவர்கொண்ட இன்பத்தின் பெருமையை விளக்கினரென்க. (15)

மேலை வானவர் வேந்தொடு மெம்பிரான்
சீலமேய திருமுன்பு மேவினர்
மாலு நான்முகத் தண்ணலும் வந்திரு
பாலு மாகிப் பரவின ரென்பவே.

இ—ள்: மேலை வானவர் — மேலுலகில் வசிக்கின்ற தேவர்கள், வேந்தொடும் எம்பிரான் சீலம் மேயதிருமுன்பு மேவினர் — தங்கள் தலைவனாகிய இந்திரனோடும் எமது கடவுளாகிய சிவபெருமானது பரிசுத்தமிகுந்த சந்நிதானத்தில் (துதித்து) நின்றார்கள், மாலும் நான்முகத்து அண்ணலும் வந்து இரு பாலும் ஆகிபரவினர் — விஷ்ணுமூர்த்தியும் நான்கு முகங்களையுடைய பிரமதேவரும் வந்து இருபுடையினும் நின்று துதித்தார்கள் எ—று.

இருபாலுமெனப் பொதுப்படக் கூறினரேனும் உரிமை பற்றிப் பிரமதேவர் வலப்பக்கத்தினும் விஷ்ணுமூர்த்தி இடப்பக்கத்தினும் நின்றனரென்க.

என்ப ஏ அசைகள். (16)

**வேறு**

அம்புயா சனமுடை யண்ண லாழியான்
உம்பரோ டித்திற முற்றுப் போற்றுழிச்
செம்பொனேர் முடிமிசைத் திங்கள் சேர்த்திய
எம்பிரா னருள்புரிந் தினைய கூறுவான்.

இ—ள்: அம்புய ஆசனம் உடை அண்ணல்—தாமரைமலராசனத்தை யுடைய பிரமதேவரும், ஆழியான்—சக்கராயுதத்தையுடைய விஷ்ணுமூர்த்தியும், உம்பரோடு இ திறம் உற்று போற்றுழி—(இந்திரன் முதலிய) தேவர்களுடன் இவ்வாறு நின்று துதிக்கும்பொழுது, செம் பொன் நேர் முடி மிசை திங்கள் சேர்த்திய எம்பிரான்—செம்பொன்னைப் போன்ற (சிவந்த) சடைமுடியின்மேற் பாலசந்திரனை யணிந்த எங்கள் கடவுளாகிய சிவபெருமான், அருள்புரிந்து இனைய கூறுவான்—அவர்க்குத் திருவருள்செய்து இவற்றைத் திருவாய்மலர்ந்தருளுவார் எ—று.

அம்புயாசனம் - வடநூன் முடிபு. இத்திறமுற்று என்றது முற்செய்யுளிற் சுட்டியவாறு நிற்றலை. 'செம்பொனேர் முடிமிசைத் திங்கள்சேர்த்திய எம்பிரான்' என்றதனுல் அடியார்க்குநேருங் குறைகளை நீக்கும் அருண்மூர்த்தியென்பது குறிக்கப்பட்டது. (17)

ஒன்றொரு குறைகளு முறுத பான்மையால்
நன்றுநும் மரசியல் நடந்த வோவெனுக்
குன்றவில் லுடையவோர் குழகன் செப்பலும்
நின்றமால் தொழுதிவை நெறியிற் கூறுவான்.

இ—ள்: ஒன்று ஒரு குறைகளும் உறுத பான்மையால்—ஒரு குறையும் நேரிடாவண்ணம், நும் அரசியல் நன்று நடந்தவோ எனு—நுமது அரசாட்சிகள் செவ்வனே நடைபெற்றனவா என்று, குன்ற வில் உடைய ஓர் குழகன் செப்பலும்—மேருமலையாகிய வில்லையுடைய ஒப்பற்ற அழகராகிய சிவபெருமான் (அறியாதார்போல) வினுவுதலும், நின்ற மால் தொழுது இவை நெறியில் கூறுவான்—பக்கத்தில் நின்ற திருமால் கைதொழுது இவ்வாசகங்களை முறைப்படி கூறுவாராயினர் எ—று.

நும்மரசியலென்றது, படைத்தன் முதலிய அதிகாரங்களை. சிவபெருமான் பொதுப்பட வினுவியவழியும் தலைமைபற்றித் திருமாலொருவரே விடைகூறினரென்க. தாஞ்செய்யும் விண்ணப்பத்தைப் பொருட்படுத்தி யருள்புரியுமாறு தாழ்ந்த வசனமாகக் கூறுவாரென்பார் 'நெறியிற் கூறுவான்' என்முர். (18)

ஆதியி லயன்படைப் பல்ல தென்னருண்
மேதியன் அடுதொழி லேலை விண்ணவர்
ஏதமில் செயன்முறை யாவுங் கண்ணுதல்
நாதநின் னருளினுல் நடந்த நன்றரோ.

இ—ள்: கண்ணுதல் நாத—நெற்றிக்கண்ணையுடைய தலைவரே!, ஆதியில் அயன் படைப்பு—முதலிற் பிரமதேவரது சிருட்டித் தொழிலும், அல்லது என் அருள்—அன்றியும் அடியேன்செய்யுந் திதித்தொழிலும், மேதியன் அடு தொழில்

—எருமைக்கடா வாகனத்தையுடைய கூற்றுவனது கொலைத் தொழிலும், ஏனைவிண்ணவர் ஏதம் இல் செயல் முறை யாவும்—(இந்திரன் முதலிய) மற்றைத் தேவர்களது குற்றமற்ற தொழின் முறைகளுமாகிய எல்லாம், நின் அருளினால் நன்று நடந்த—தேவரீரது கிருபையினால் இனிது நடைபெற்றன எ—று.

அரோ—அசை. (19)

கருமணி மிடறுடைக் கடவு ளின்னுநீ
அருளுவ தொன்றுள ததனைக் கூறுவன்
இருநில மேலவர் யாரும் நின்றனைப்
பரமென வுணர்கிலர் மாயைப் பான்மையால்.

**இ—ள்:** கரு மணி மிடறு உடை கடவுள்—(சரணடைந்தாரைக் காப்பதற் கோரிலச்சினையாக நஞ்சுண்டு) கறுத்த நீலரத்தினம் போலுந் திருக்கண்டத்தையுடைய இறைவரே!, இன்னும் நீ அருளுவது ஒன்று உளது—(முன்வேண்டிய காலங்களிலருள் புரிந்ததுபோல) இன்னும் தேவரீர் கிருபை செய்யவேண்டிய ஒருகருமமுள்ளது, அதனை கூறுவன்—அதனை யான் எடுத்துச் சொல்வேன் (கேட்டருள்க), இரு நிலமேலவர் யாரும்—பெரிய பூவுலகத்தின்கணுள்ளா ரனைவரும், மாயைப்பான்மையால் நின் தனை பரம் என உணர்கிலர்—அஞ்ஞான வசத்தால் தேவரீரைப் பரம்பொருளென்று தெளிகின்றிலர் எ—று.

கடவுள் - அண்மைவிளி. முற்காலங்களில் நேர்ந்த குறைகளை நீக்கியது போல் இக்குறையையும் நீக்குதிரென்பார், கருத்துடையடை புணர்த்தி 'கருமணி மிடறுடைக் கடவுள்' என்றார். மணிமிடறு - அழகிய மிடறெனினுமாம். (20)

நின்றன துரிமையை நிகழ்த்தி மேன்மையா
என்றனை யயன்றனை யெண்ணு வார்சிலர்
அன்றியு நின்னுடன் அநேகர் தம்மையும்
ஒன்றென வேநினைந் துரைக்கின் றார்சிலர்.

**இ—ள்:** நின்றனது உரிமையை நிகழ்த்தி—தேவரீரது இயல்புகளைச் சார்த்திக்கூறி, என் தனை அயன்தனை மேன்மையா எண்ணுவார் சிலர்—அடியேனையும் பிரமனையும் பரம்பொருளாக மதிப்பார்கள் சிலர், அன்றியும்—அதுவன்றியும், நின்னுடன் அனேகர் தம்மையும் ஒன்றே எனநினைந்து உரைக்கின்றார் சிலர்—தேவரீரோடு (சாமானியராகிய பிற தேவர்கள்) பலரையும் ஒன்றேயென்று கருதிக் கூறுகின்றார்கள் சிலர் எ—று.

நின்றனதுரிமை யென்றது சருவஞ்ஞதை முதலிய பதிக்குணங்களை. அவ்வையெல்லாம் ஏனையோர்மாட் டுளவெனக் கூறுவது கற்பிதமே என்பது தோன்ற 'நின்றன துரிமையை நிகழ்த்தி' என்றார். ஒன்றென நினைத்தலாவது அபேதமாக நினைத்தல், ஏகாரம் தேற்றம்; பிரிநிலையென்பாருமுளர்.

''என்றனை—எண்ணுவார் சிலர்'' என்றது வைணவரை. இவர்கள் திருமாலே கருத்தா, ஏனையோர் அவராலாக்கப்படுவோ ரென்பர். ''உந்தியால் அயனையீன் றங்கவனைக்கொண்டு உலகுண்டாக்கி-அந்தநல் லுலகழிக்க அரனையு மாக்குவித்துத் - தந்திடுஞ் சகத்தினுக்குத் திதிகர்த்தா தானேயாகி-வந்திடுந் தோற்றம் ஈறு நிலைமையும் பண்ணுமாயன்'' என்பதனாலறிக. 'அயன்றனை யெண்ணுவார்

சிலர்' என்றது இரணியகர்ப்பவாதிகளை. இவர்கள், ''ஹிரண்யகர்ப்பஸ்ஸம வர்த்ததாக்ரே பூதஸ்யஜாத: பதிரேகஆஸீத்। ஸதாதாரப்ருது வீந்த்யாமுதே மாம்கஸ்மை தேவாயஹவிஷாவிதேம:॥'' என்பது முதலிய சுருதிவாக்கியங் களை விசேடப் பிரமாணமாகக்கொண்டு பிரமாவே கருத்தாவென்பர். 'நின் னுடனநேகர் தம்மையு மொன்றெனவே நினைந்துரைக்கின்றார் சிலர்' என்றது அநேகேச்சுரவாதிகளை. இவர்கள், பலர்கூடி ஓரில் யியற்றுதல்போல உலகங்களையும் பலர்கூடி அமைத்தல் வேண்டுமென்பர். த்தைப் பல் லோர் கூடியியற்றுதல் கண்டாமத்தாற் - செல்லொத்த குழலாய் வையஞ் செய்தவர் பலரே யன்னார் - தொல்லைக்குளாதல் நீங்கித் துயரறல் முத்தி யென்பார்-அல்லுற்ற மனத்தாரான அநேகேசவாத ரன்றே'' என்பதனாலறிக. (21)

காலமுங் கருமமுங் கடந்த தோர்பொருள்
மூலமுண் டோவென மொழிகின் றார்சிலர்
மேலுமுண் டோசில விளம்ப விஞ்சையின்
பாலுறு முணர்ச்சியே பரமென் பார்சிலர்.

**இ—ள்:** காலமும் கருமமும் கடந்தது ஓர் மூலப்பொருள் உண்டோ என மொழிகின்றார் சிலர் — காலத்தையும் இருவினைகளையும் வென்ற வேறொரு முதற் பொருள் இருக்கின்றதா என்று கூறுகின்றார்கள் சிலர், விஞ்சையின்பால் உறும் உணர்ச்சியே பரம் — மாந்திரிகத்தின் வழிப்பட்ட அறிவே பரம்பொருளாகும், விளம்ப—இதனினுஞ் சிறந்தனவென்று சொல்வதற்கு, மேலும் சில உண்டோ என்பார் சிலர்—வேறுஞ் சில பொருள்களிருக்கின்றனவா என்று கூறுவார்கள் சிலர் எ—று.

ஓகாரங்கள் எதிர்மறைகள். ஏகாரம் பிரிநிலை.

காலத்தின் மேலாய பொருள் வேறில்லையென்பார் காலவாதிகள். இவர் கொள்கையை ''காலமெனுங் கடவுளினைக் கழியவுள தேதுமில்லை, ஆலநிழ லமர்ந்தவரும்அரிபிரமாதிய ரெவருஞ், சீலமுடைச் சிருட்டி முதற்றிகழ்வன வாகச் சுழற்றத், தூலமொடுசூக்குமமாய்த் தொடர்ந்து தொடர்ந்தேவரு மால்'' என்பதனாலுணர்க. கருமத்தின் மேலாயபொருள் வேறில்லையென்பார் கருமவாதிகள். இவர்கள் ஆன்மாக்களை மேலுலகினுங் கீழுலகினும் முறையே நியோகித்து நடத்துவன இருவினைகளென்றும் அவையே பரமென்றுங் கூறு வர். விஞ்சையின்பாலுறும் உணர்ச்சியே பரமென்பார் மந்திரவாதிகள். இவர் கொள்கையை ''மந்திரத்தா லழைத்திடவே வானவரும் வந்திடுவர், மந்திரத் தால் வசீகரண முதல்வலிகள் வந்தெய்து, மந்திரத்தா லாக்கி யழித்திடலு மாகியிடு, மந்திரத்தின் வலியேகாண் வானவரு மானவர்தாம்'' என்பதனா லுணர்க. (22)

ஆற்றுறு புனல்படிந் தழுக்கு நீக்கலார்
சேற்றிடை வீழ்ந்தென மறைகள் செப்பிய
நீற்றொடு கண்டிகை நீக்கி வன்மையால்
வீற்றொரு குறிகொடு மேவு வார்சிலர்.

**இ—ள்:** ஆற்று உறு புனல் படிந்து அழுக்கு நீக்கலார் சேற்றிடை வீழ்ந்து என—ஆற்றுநீரின் மூழ்கித் தம்மேனியிலுள்ள அழுக்கைப்போக்காதவர்களாய் (அவ்வழுக்கை மேலும் வருவிக்கின்ற) சேற்றுநீரில் விழுந்தாற்போல, மறைகள்

செப்பிய நீற்றொடு கண்டிகை நீக்கி—வேதங்கள் விதித்த திருநீற்றையும் உருத்திராக்கத்தையும் தரியாது கழித்து, வன்மையால் வீற்று ஒரு குறி கொடு மேவுவார் சிலர்—தறுகண்மையினால் வேறோர் சின்னத்தைத்தாங்கியிருப்பார்கள் சிலர் எ-று.

வீழ்ந்தாலென்னும் வினையெச்சத்தில் ஆல் விகுதி தொக்கது. ஒடு எண். ஆற்றுறுபுனலென்றது பெருநீரை. சேறென்றது சின்னீரை. வேதவிரோதமான சின்னமென்பார் 'வீற்றொருகுறி' எனவும், அதனைத் தரிப்பார்க்கு மலநீக்கமின்றென்பார் 'ஆற்றுறுபுனல் படிந்தழுக்கு நீக்கலார் சேற்றிடை வீழ்ந்தென - கொடு' எனவும் கூறினார்.

இச்செய்யுளிற் சுட்டிய குறி இன்னதென்பதை ''எண்டிகழ் மறையி றெல்லாமியம்பும் வெண்ணீற்றுமும்மைப்-புண்டரம் அக்க மாலை சிவலிங்கபூசை தம்மின் - விண்டிடா வயிரங்கொண்டு திகிரியான் வெந்த புண்ணைத் தண்டுசங்காழி சஞ்சக் குறிகளைத் தனுவிற் றாங்கி'' என்னுஞ் செய்யுளானுணர்க. இக்குறிதாங்குவோர் வைணவருளொரு சாரார்; இவர் பகுப்புக்களை சங்கரவிஜயத்தில் விரிவாகக் காண்க. (23)

காமமோ டுவகையுங் களிப்பு நல்கலால்
வாமமே பொருளென மதிக்கின் றார்சிலர்
தோமிலா மூவகைத் தொழிலும் வேள்வியும்
ஏமமார் பொருளென வியம்பு வார்சிலர்.

**இ—ள்:** காமமோடு உவகையும் களிப்பும் நல்கலால்—காமத்தையும் மகிழ்வையும் வெறியையுந் தருதலினால், வாமமே பொருள்என மதிக்கின்றார் சிலர்—வாமசமயமே சற்சமயமென்று கருதுகின்றார்கள் சிலர், தோம் இலா மூ வகை தொழிலும் வேள்வியுமே ஏமம் ஆர் பொருள் என இயம்புவார் சிலர்—குற்றமில்லாத மூன்று வகையினையுடைய தொழில்களும் யாகமுமே பேரின்பத்தைத் தருகின்ற பொருளென்று கூறுவார்கள் சிலர் எ—று.

ஒடு - எண். பிரிநிலையேகாரம் பின்றொடர்க்குங் கூட்டியுரைக்கப்பட்டது. மூவகைத் தொழிலென்றது - நித்திய நைமித்திக காமியங்களை. படைத்தன் முதலியவற்றையென்பர் சிலர்.

வாமசமயக் கோட்பாட்டை ''வலைபுலை வண்ணார் செம்மார் மற்றுமிப் படியில் வந்த, குலமதிற் றையலாரைக் குறித்துநா யகிதா னென்றே, அலமர அவரையர்ச்சித் தவரெழிற் சேடம் வாங்கித், தலையுறக் கொண்டங் குண்ணறலைவிசந் நிதியா மன்றே'' என்பதனாலும், தண்ணிய சுட்கச் சமயிகாளெவ்வுருவும், பெண்ணுருவிற் காணும் பிறப்பதெலாம் - உண்ணறவே, புத்தியுடன் முத்திப் பொருளுந் தரும்பிணமே, சத்தி யிலாததெலாந்தான்'' என்பதனாலு மறிக.

முத்தொழிலையும் வேள்வியையும் பரமென்போர் பூருவமீமாஞ்சகர். இவர் கொள்கையை ''நீதியானித்த கன்ம நிகழ்த்திடச் சுபத்தை நீங்கார் - தீதிலா விச்சா கன்மஞ் செந்தழ லோம்பிச் செய்ய - வேதுதான் வேண்டிற்றெல்லா மெய்தலாஞ் சோமயாக -மாதிதான் ஆசை வீசி யமைத்திட வீடதாமே'' என்பதனாலும், ''பசுப்படுத் தியாகம்பண்ணப் புண்ணிய மாவதென்று - வசிப்பில் நான்மறைகள் சொன்னவழக்கினால் வாய்மையாக - நசிப்பிலா மந்திரங்க ணவிற்றலி னின்பமாகும் - பசிப்புளா னொருவ னுண்ணப்பசியது தீர்ந்த பண்பே'' என்பதனாலுமறிக. (24)

உரையிசை யாதியா மொலிகள் யாவையும்
பிரமம தேயெனப் பேசு வார்சிலர்
அரிதுசெய் நோன்பினு லடைந்த சித்திகள்
பொருள்பிறி திலையெனப் புகல்கின் றார்சிலர்.

இ—ள்: உரை இசை ஆதி ஆம் ஒலிகள் யாவையுமே பிரமமது என பேசுவார் சிலர்—சொல் கீதம் முதலாகிய ஒலிகளனைத்துமே பிரமமென்று சொல்வார்கள் சிலர், அரிதுசெய் நோன்பினுல் அடைந்தசித்திகள் பொருள்—அருமையாக அநுட்டித்த தவத்தினுற் பெற்ற (அணிமா முதலிய) எண்வகைச் சித்திகளே சிறந்த பொருளாம், பிறிது இலை என புகல்கின்றார் சிலர்—இதனினுஞ் சிறந்த பொருள் வேறொன்றுமில்லை என்று சொல்கின்றார்கள் சிலர் எ—று.

பிரிநிலையேகாரம் பின்றொடர்க்குங் கூட்டி யுரைக்கப்பட்டது. அது-பகுதிப்பொருள் விகுதி.

'ஒலிகள் யாவையும் பிரமமதேயெனப் பேசுவார் சிலர்' என்றது சத்தப்பிரமவாதிகளை, "தருமொலி பிரமமதெனச் சமைந்திடு, மகமுறு மறிவிலி யகிலமூலமு, மிகுதரு மொலியல திலது வேறென, இகபர மதுவறியாம லோதுவான்" என்னுஞ் செய்யுளானுணர்க.

'சித்திகள் பொருள்பிறி திலையெனப் பேசுவார் சிலர்' என்றது சித்தவாதிகளை; இவர்கள் அவுடதாதிகளையுண்டு பத்தியயோகாதிக ளோடிருந்து உடலழியாமற் காத்து அணிமாவாதி சித்திகளைப் பெறுவதே முத்தியென்பர். "கோதறு செம்பு தன்னைக் குலவிய விரதஞ்சேர்ந்து, வேதகஞ் செய்யுமா போன் மெய்யெனுங் காயந் தன்னை, வேதக மருந்தாற் செய்து மேவுநன் முத்தி சித்தி, நாதனு யிருக்க நாத னுகவே நவிலு மன்றே" என்பதானுணர்க. (25)

பெருமைகொள் குலந்தொறும் பிறந்து செய்திடும்
விரதமுஞ் சீலமும் வினைகண் மாற்றிட
வருகலும் பிறவுமா யங்கம் விட்டுயிர்
பரவுதல் வீடெனப் பகரு வார்சிலர்.

இ—ள்: பெருமை கொள் குலம் தொறும் பிறந்து செய்திடும் விரதமும் சீலமும் வினைகள் மாற்றிட—உயர்குலங்கடோறுஞ் செனித்துச் செய்கின்ற (சுடுபாறையிற் கிடத்தல் முதலிய) தவங்களும் (கொல்லாமை முதலிய) ஒழுக்கங்களுந் தமக்குவரும் பாவங்களைப்போக்க, அருகலும் பிறவும் ஆய்—தேய்தலும் (வளர்தல் முதலிய) பிறவுமாகி, அங்கம்விட்டு உயிர் பரவுதல் வீடு என பகருவார் சிலர்—முடிவிற் சரீரத்தைவிட்டு ஆன்மாப் பரவுதலே முத்தியென்றும் கூறுவார்கள் சிலர் எ—று.

பிரிநிலை யேகாரம் தொக்கது. இச்செய்யுளிற் கூறியது அருகசமயத்தாரை. இவர்கள், அருகனென்றொரு கடவுள் அநாதியே யுள்ளவரெனவும் சீவனென்றொரு பதார்த்தம் அநாதியே குற்றமுடைத்தா யிருக்குமெனவும் அச்சீவன் சரீரந்தேயத்தேயும், வளர வளருமெனவும், தூலதேகமொன்றேயன்றிச் சூக்குமதேக முதலியன இல்லையெனவும், தூலதேகத்தைவிட்டு ஆன்மாப் பரவுதலே முத்தியெனவும் கூறுவர். (26)

அறிந்தறிந் துயிர்தொறு மதுவ தாகியே
பிறந்திறந் துணர்வெலாம் பெற்று நோன்பொடு
துறந்துகொன் றிட்டன துய்த்துக் கந்தமற்
றிறந்திடல் முத்தியா மென்கின் றார்சிலர்.

இ—ள்: அறிந்து அறிந்து—தெரிந்து தெரிந்து, உயிர்தொறும் அது அது ஆகியே பிறந்து—பலவகைப்பட்ட யோனிகடோறும் அவ்வவ் வான்மாக்களாகியே பிறந்து, இறந்து—மரணித்து, உணர்வு எலாம் பெற்று—(அவ்வவ் யோனிபேதத்திற்குரிய) அறிவு முழுவதையும் பெற்று, நோன்பொடு துறந்து—விரதநியமத்துடன் துறவறம்பூண்டு, கொன்று இட்டனதுய்த்து—பிறர் கொன்று தந்தனவற்றைப் புசித்து, கந்தம் அற்று இறந்திடல் முத்தி ஆம் என்கின்றார் சிலர்—பஞ்ச கந்தங்களுமொழிந்து இறத்தலே முத்தியாகுமென்று கூறுகின்றார்கள் சிலர் எ—று.

ஏகாரம் - தேற்றம். பிரிநிலையேகாரம் இச்செய்யுளினுந் தொக்கது. மானுடயோனியில் மானுடசென்மமும், மிருகயோனியில் மிருகசென்மமும், ஏனைய யோனிகளினுமிவை போலவே ஏற்றசென்மமுமாகப் பிறந்தென்பார் "உயிர்தொறுமதுவதாகியே பிறந்து' என்றார்.

இச்செய்யுளிற் கூறியது புத்தசமயத்தாரை. இவர்கள், உயிர்கட்கு அருள்செய்யும் பொருட்டுக் கடவுள் பலவகையோனிகடோறும் பிறப்பாரெனவும் அவ்வுயிர்கள் பஞ்ச கந்தங்களுடன்கூடி அறிவுகளைப் பெற்றிழப்பது பிறவித் துன்பமெனவும் அப்பஞ்ச கந்தங்களுங்கெட்டிறப்பது முத்தியெனவுங் கூறுவர். "அறந்திகழ் பிடக நன்னூலோதி யன்புடைய னாகிப், பிறங்குபல் யோனிதோறும் பிறந்துயிர்க் குறுதிசெய்து, மறந்தருகோறலாதி நால்வகை யொழித்து மாண்பு, சிறந்துள போதிநீழற் சேர்வனெம் இறைவனாவான்'' என்பதனாலும் "மேவிய கருவிற்சேரு முருவம்வேதனை குறிப்புப் பாவனை யுடன்விஞ் ஞானப் பஞ்சகந்தங்கள் கூடி, ஓவில்பல் லுணர்வுண்டாகி யொழிவது பிறவித்துன்ப, மாவது பொன்றக் கேடா யழிவதுமுத்தியென்றான்'' என்பதனாலுமறிக. (27)

நன்னல மாதரை நண்ணு மின்பமே
உன்னரு முத்தியென் றுட்கொள் வார்சிலர்
இன்னன துறைதொறு மெய்தி யாவருந்
துன்னரும் பிறவியுட் டுன்ப நீங்கலார்.

இ—ள்: நல் நல மாதரை நண்ணும் இன்பமே உன்னரும் முத்தி என்று உட்கொள்வார் சிலர்—பேரழகினையுடைய மங்கையரை (மதனாகம விதிப்படி) புணரும்போகமே நினைத்தற்கரிய மோட்சமென்று சிந்திக்கின்றார்கள் சிலர், இன்னன துறை தொறும் யாவரும் எய்தி - இன்னோரன்ன மார்க்கங்கள் தோறும் அனைவரும் புகுந்து, துன்னரும் பிறவியுள் துன்பம் நீங்கலார்—அடைதற்கரிய இம்மானுடப் பிறவியிற்றானே துன்பத்தை நீங்குகின்றிலர் எ—று.

நல்நலம் - நல்ல அழகு; எனவே பேரழகென்பது பெற்றாம். ஏ - பிரிநிலை. இன்ன அன்ன என்பது இன்னன எனவும், துன்ன அரும் என்பது துன்னரும் எனவுந் தொக்கன.

தாந்தாம் விரும்பிய மகளிரை யென்பார் 'நன்னல மாதரை' எனவும், தமது காமத்தை யொழித்தற் பொருட்டு அவரைக் கலத்தலாகிய சிற்றின் பத்தையே சிந்தையு மொழியுஞ் செல்லாநிலைய பேரின்பமுத்தி யென்று பிராந்திகொண்டு உலைவரென்பார் 'மாதரை நண்ணுமின்பமே யுன்னரு முத்தியென் றுட்கொள்வார்' எனவும், எண்பத்துநான்கு நூறாயிர யோனி பேதங்களிற் பிறந் திறந் துழலுமான்மா விசேடயோனியாகிய மானுடசன் மத்தில் வருவதும் அங்ஙனம் வந்தவழியும் சிவனைப் பூசித்தற்கேற்ற புண் ணிய பூமியினும் உயர்குலத்தினும் பிறப்பதும் பூருவசன்மங்களிலார்சித்த புண்ணியபலத்தாலன்றிப் பிறவாற்றான் அரிதாகலின் 'துன்னரும் பிறவி' எனவும், அத்தகைய பிறவியைப் பெற்றுஞ் சிவனைப் பூசித்து முத்திநெறி யைப் பெறமுயலாது வாழ்நாளை வீணாளாக்குகின்றனரென்பார். 'பிறவியுட் டுன்பநீங்கலார்' எனவும் கூறினர்.

மானுடராகப் பிறத்தலரிதென்பதை "அண்டசம் சுவேதசங்கள் உற் பிச்சம்சராயு சத்தோ, டெண்தரு நாலெண் பத்து நான்குநூ றாயிரத்தால், உண்டு பல்யோனி யெல்லாம் ஒழித்துமா னுடத்து தித்தல், கண்டிடிற் கட லைக் கையான் நீந்தினன் காரியங்காண்" என்னுஞ் சிவஞானசித்திச் செய்யு ளானும், அதனுள்ளும் புண்ணிய பூமியினும் உயர்குலத்தினும் பிறத்தலரி தென்பதை "நரர்பயில் தேசந்தன்னில் நான்மறை பயிலா நாட்டில், விரதவு லொழிந்து தோன்றல் மிக்கபுண்ணியந் தானாகுந், தரையினிற் கீழைவிட்டுத் தவஞ்செய்சா தியினில் வந்து, பரசமயங்கள் செல்லாப் பாக்கியம் பண் ணுணாதே" என்னும் ஷைநூற் செய்யுளானும், அப்பிறவி யெடுத்தலாற் பெறவேண்டிய பயன் சிவனைப் பூசித்தருள் பெறுதலே யென்பதை "ஒழி யாப் பிறவி யெடுத்தெடுத் தேங்கி உழன்ற நெஞ்சே, அழியாப் பிறவிக் கவுடதங் கேட்டி அநாதியனை, மழுமான் கரத்தனை மால்விடையானை மனத்தி லுன்னி, விழியாற் புனல்சிந்தி விம்மி யழுநன்மை வேண்டு மன்றே" என் னும் பட்டினத்தடிகள் திருவாக்கானும் உணர்க.

இச்செய்யுளிற் கூறியது உலோகாயதரை. இவர்கள், கடவுளும் மறு பிறப்புஞ் சுவர்க்க நரகங்களும் இல்லையென்றும் இம்மையி லனுபவிக்கப்படு மின்ப துன்பங்களே சுவர்க்க நரகங்களா மென்றுங் கூறுவர். "இறந்தார் பிறவார் இலதுவானீசன் அறம்பாவ மாயிழையார் கூடல் - சிறந்த - நலமார் சுவர்க்க நரகம் பிரிதல்-உலகாய தன்ற னுணர்வு" என்பதனானுமுணர்க. (28)

இறந்தன வரம்புல கெவரும் வேதநூல்
மறந்தனர் பவநெறி மல்கி நாடொறுஞ்
சிறந்தன வவையுயிர் செய்த தொல்வினை
அறிந்தரு ளையநீ யமைத்த வாயினும்.

இ—ள்: உலகு வரம்பு இறந்தன— மண்ணுலகத்தில் நூல்நியதிகள் கெட்டன, எவரும் வேதநூல் மறந்தனர்—அனைவரும் வேதசாஸ்திரத்தை மறந்துவிட்டார்கள், பவநெறி நாள்தொறும் மல்கி சிறந்தன—பாவமார்க் கங்கள் தினந்தோறும் விருத்தியாய்ச் சிறப்புற்றன, அவை உயிர் செய்த தொல்வினை—அச்செயல்கள் ஆன்மாக்கள் செய்த பழைய தீவினைப் பயனே யாம், ஐய—சுவாமீ!, நீ அமைத்த ஆயினும் அறிந்தருள்—(அவையெல்லாம்) தேவரீரால் அமைக்கப்பட்டனவேயாயினும் (சிறியேன் கூறவும்) அறிந்தரு ளுக எ—று.

வரம்பு—வருணாச்சிரமங்கட்கேற்ற ஒழுக்கத்தின் கட்டுப்பாடு. ஆன்மாக்கள் செய்த தீவினைகளை முற்றறிவானுணர்ந்து அவற்றிற்கேற்ப இச்செயல்களை யமைத்த ஆண்டவனாகிய தேவரீர் அறியாதார்போல் வினவியதனால் அடியேன் சிற்றறிவிற் றோன்றியவாறு கூறினன். அவற்றில் யாதுங்குறையுளதாயினும் பாலர்கூறும் மழலைமொழியைக் கேட்டுப் பெற்றார் மகிழ்வதுபோலக் கருணைகூர்ந்தருளுகவென்பார், 'அவையுயிர் செய்த தொல்வினையறிந்தருளையநீ யமைத்தவாயினும்' என்றார். (29)

அங்கவர் போதமுற் றாசொ ரீஇமனச்
சங்கையு மகன்றுநின் சரண மேயுறப்
புங்கவ சிறிதருள் புரிய வேண்டுமால்
எங்கடம் பொருட்டென இறைவன் கூறுவான்.

இ—ள்: புங்கவ—கடவுளே!, அவர் போதம் உற்று ஆசு ஒரீஇ—அம்மானுடர்கள் மெய்ஞ்ஞானத்தைப் பெற்று அஞ்ஞானத்தையொழித்து, மன சங்கையும் அகன்று—மனச்சந்தேகமும் நீங்கி, நின் சரணமே உற—தேவரீரது திருவடிகளையே யடையுமாறு, எங்கள் தம்பொருட்டு சிறிது அருள்புரிய வேண்டும்—அடியேங்கள் பொருட்டுச் சற்றே கருணை செய்யவேண்டும், என—என்று திருமால் விண்ணப்பஞ்செய்ய, இறைவன் கூறுவான்—தலைவராகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுவார் எ—று.

அங்கு ஆல் அசைகள். உம்மை - எச்சம். ஏ - பிரிநிலை. (30)

இனிதொரு திறமதற் கிசைத்து மாருயிர்
அனையவும் புரப்பவ னாத லாலவர்
வினையறு நெறிமையால் வேண்டு கிற்றிநின்
பனனுறு மெண்ணினை மறுத்தி மாசிலாய்.

இ—ள்; மாசு இலாய்—குற்றமற்ற திருமாலே!, ஆர் உயிர் அனையவும் புரப்பவன் ஆதலால்—நீ உலகில் நிறைந்த ஆன்மாக்களெல்லாவற்றையுங் காப்பவனாகையால், அவர்வினை அறும் நெறிமையால்வேண்டுகிற்றி—அந்த மானுடர்களது தீவினை நீங்கும் வகையாக நம்மைப் பிரார்த்திக்கின்றனை, அதற்கு இனிது ஒருதிறம் இசைத்தும்— அதற்குச் சிறந்த ஒருபாயத்தை யாஞ்சொல்வேம், நின்மனன் உறும் எண்ணினை மறுத்தி—உனது மனத்திற் பொருந்திய ஆலோசனையை ஒழிப்பாய் எ—று.

உன்றொழிற்கு வேண்டியதொன்றையே பிரார்த்தித்தனையாதலின் அதற்கு வேண்டிய உபாயத்தைக் கூறுதுமென்பது கருத்து.

இனிது - குறிப்புமுற்றுப் பெயரெச்சம், இசைத்தும் - எதிர்காலத்தன்மைப் பன்மைவினைமுற்று. மனம் என்பது மனன்எனப் போலியாயிற்று. (31)

காதலி னருளுமுன் கலையின் பன்மையிற்
கோதறு மோர்கலை கொண்டு நேமிசூழ்
மேதினி யதனிடை வியாதன் என்றிடு
போதக முனியெனப் போந்து வைகுதி.

இ—ள்: காதலின் அருளும் உன் கலையின் பன்மையில் கோது அறும் ஓர் கலைகொண்டு—விருப்பத்துடன் காவற்றொழில் செய்கின்ற உனது பல கலைகளுள்ளே குற்றமற்ற ஒரு கலையை வகித்து, நேமி சூழ் மேதினி அதனிடை—சமுத்திரஞ் சூழ்ந்த பூவுலகத்தில், வியாதன் என்றிடு போதக முனி என போந்து வைகுதி—வியாசனென்று சொல்லப்படுகின்ற ஞானத்தையுடைய முனிவனாக உதித்து வசிக்கக்கடவாய் எ–று.

மேதினி-மேதையையுடையது; மதுகைடவரென்னும் அசுரர்களது மேதை முற்காலத்திற் பரவப்பெறுதலால் இப்பெயர் வந்தது. உலகிற்பரந்த அஞ்ஞானங்களை யகற்றவல்ல முனியென்பார் 'போதகமுனி' என்றார். (32)

போந்தவ ணிருந்தபின் புகரி லாமறை
ஆய்ந்திடின் வந்திடு மவற்றை நால்வகை
வாய்ந்திட நல்கியே மரபி னோர்க்கெலாம்
ஈந்தனை யவரகத் திருளை நீத்தியால்.

இ—ள்: அவண் போந்து இருந்தபின்—நீ அங்ஙனம்போய்ப் பிறந்திருந்த பின்பு, ஆய்ந்திடின் புகர் இலா மறை வந்திடும்—சிந்தித்தாற் குற்றமற்ற வேதமுழுவதும் உன்னகத்தில் தெரியவரும், அவற்றை நால்வகை வாய்ந்திட நல்கி—அவ்வேதங்களை நான்குவகை பொருந்தப் பகுத்து, மரபினோர்க்கு எலாம் ஈந்தனை—ஓதற்கேற்ற சாதியார்க்கெல்லா முபதேசித்து, அவர் அகத்து இருளை நீத்தி — அவரது மனத்திலுள்ள அஞ்ஞானத்தைப் போக்குதி எ—று.

ஏ ஆல் அசைகள். ஈந்தனை - முற்றெச்சம். சற்குருவைச் சார்ந்து எண்ணில் காலங்கேட்டுத் தெளிந்தா லொப்பச் சிந்தித்தமாத்திரத்தே புலப்படுமென்பார். 'ஆய்ந்திடின் வந்திடும்' என்றார். மரபினோரென்றது அந்தணர் அரசர் வணிகர் என்னும் மூவருணத்தாருள் உரிய காலத்தி லுபநயனஞ் செய்யப்பெற்றோரை. ''அந்தணர் முன் மூவர்க்கு மாமறையு மாகமுஞ் - சந்தையுற வோதுமது சால்பு'' எனச் சைவசமய நெறியும் ''வேதியர்கண் முதன் மூவருமையோதி வீடுபேறடைக'' எனக் காஞ்சிப் புராணமுங் கூறும். ''செய்யா மொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த - பொய்யா மொழிக்கும் பொருளொன்றே - செய்யா - வதற்குரிய ரந்தணரே யாராயி னேனை - யிதற்குரிய ரல்லாதா ரில்'' எனத் திருவள்ளுமாலையும், இவ்வாறே வேறுஞ் சில நூல்களும் அந்தணரை மாத்திரங் கூறுகின்றனவேயெனின், அரசர்க்கும் வணிகர்க்கும் ஓதுவித்தற்கண்ணதிகார மின்மையின் அந்நூலார் அவரை விடுத்து அவ்விரு தொழிற்குமுரியராந் தலைமைபற்றி அந்தணரை மாத்திரந் தெரிந்து கூறினரென்க. (33)

அன்னதோர் மறையினை யறிந்து மையமா
உன்னிய நிலையினர் உள்ளந் தேறவும்
மன்னவ ரல்லவர் மரபிற் றேரவும்
இன்னமோர் மறையுள திதுவுங் கேண்மதி.

இ—ள்: அன்னது ஓர் மறையினை அறிந்தும் ஐயம் ஆ உன்னிய நிலையினர் உள்ளம் தேறவும்—அந்த வேதத்தை யோதி யுணர்ந்தும் அதன் பொருளிற் சந்தேகமுளதாக சிந்தித்தோரது மனந்தெளிதற்கும், மன்ன

வர் அல்லவர் மரபில் தேரவும்—அவ்வேதத்திற்கு அதிகாரிக ளல்லாத சூத்திரர் முறைப்படி ஆராய்தற்கும் (ஆக). இன்னம் ஓர்மறை உளது—இன்னுமொருவேதம் இருக்கின்றது, இதுவும் கேள்—இதனையும் யாங்கூறுதும் கேட்குதி எ—று.

மதி - முன்னிலையசை. உம்மை அறிந்து மென்பதிலுயர்வு சிறப்பு; இதுவு மென்பதினெச்சம். ஐயமாவுன்னுதல் - சந்தேகித்தல். முதன் மூவருணத்தாரும் வேதமோதல் போலவே நான்காம் வருணத்தார் புராணபடனஞ் செய்வது முறையாதலின் 'மன்னவரல்லவர் மரபிற்றேரவும்' எனவும், அவையும் வேதம்போற் சிறந்தன வென்பது தோன்ற 'இன்னமோர் மறையுளது' எனவுங் கூறினர்.

"வைதிக மறையைப் பின்னவர்க் குரைத்தலிருகையால் வன்றலை சொறிதல் - கையினுன் மெய்யினடிக்கடி புடைத்தல் கண்மயிர் பறித்திடன் மலநீ - ரெய்தி முன்னோக்கல் பிறர்மனை விழைதல் பகைவர்பாற் சேவை செய்திருத்தல் - பொய்தவ றுரைத்தன் மடிமையி னுழுகறீ தெனப் புகன்றனர் புலவோர்" எனக் காசிகாண்டமும், "நெறியினோர் போலக் கற்றோய் கலிங்க மெய்ந் நிலவச் சுற்றிக் - கறையெறி வெண்பல்லோடும் பின்னவர் காலையேகி - யறைபுனல் படிந்து நீதியந்தணர் தம்மை யெள்ளி - மறையினை மறையோர் தம்பாற் சுற்பர்மா நிரயமெய்த" எனக் கூர்மபுராணமும், "தெரிய வரு மறைப் பொருளைச் செவிப்புறத்திலுற நான்காம் - வருணமுடையவர் கேட்க லாகாதவாறேபோல்" என நைடதமும் கூறுதலாலும், வேதம் மிருதி முதலிய நூல்களும் அவ்வாறே விலக்குதலாலும் வேதமோதல் கேட்டல் பொருளாராய்தன் முதலியவற்றிற்கு நான்காம் வருணத்தார் உரியரல்லரென்க, *(34)*

ஏற்றம தாகிய மறைக்கும் யாமுனஞ்
சாற்றிய வாகமந் தனக்கு மாங்கது
வீற்றுற வருவது மன்று மேன்மையால்
ஆற்றவு நமதிய லறையும் நீரதே.

**இ—ள்:** ஏற்றமது ஆகிய மறைக்கும்—உயர்வுடைத்தாகிய வேதத்திற்கும், யாம் முனம் சாற்றிய ஆகமம் தனக்கும்—யாம் முற்காலத்தில் அருளிச்செய்த ஆகமத்திற்கும், அது வீற்று உற வருவதும் அன்று — அந்நூல் வேற்றுமை பொருந்தத் தோன்றுவதுமன்று, மேன்மையால் ஆற்றவும் நமது இயல்அறையும் நீரது— மேன்மையுடனே பெரும்பான்மையும் நமது பிரபாவத்தைக் கூறுந் தன்மையை யுடையது எ—று.

வருவது மென்பதிலும்மை எச்சம். ஆலுருபு உடனிகழ்ச்சிககண் வந்தது தன்னைப் பிரமாணமாகக்கொள்ளும் நூல்களனைத்திற்கும் முதனூலாய்ச் சுயம்பு எனப்படுதலின் 'ஏற்றமதாகியமறை' எனவும், மகாசங்கார முடிவிற் சாதாக்கிய தத்துவத்திலுள்ள பிரணவர் முதலிய பத்துச் சிவங்களுக்கும் ஈசுர தத்துவத்திலுள்ள மகாருத்திரர் முதலிய பதினெட்டுருத்திரர்களுக்குமாகச் சிவபேதம் உருத்திரபேதம் என்னும் பகுப்பமைய ஒவ்வொன் றுவ்வொருவர்க்காய் அசிரௌதமாக வாக்கிந்திரியமின்றி நிரதிகரண சிற்சத்தி பரிசத்தினு லனுக்கிரகிக்கப்படுதலின் 'யாமுனஞ் சாற்றிய வாகமந் தனக்கும்' எனவும், அவ்விருவகை நூல்களினின்றும் வேறுயெண்ணப்படினும் அவற்றின்சாரங்களையே கதாரூபமாகத் திரட்டிக் கூறுதல்பற்றி அபேதமாதலின் 'ஆங்கதுவீற்றுறவருவதுமன்று' எனவும், சிவாதிட்டான மாத்திரையால் திருமால் முத

லாயினோரைப் பரமெனக்கூறும் பாகஞ் சிறிதுஞ் சாமானியமுமாகச் சிவபிரானது சுயம்பிரகாச பரத்துவத்தைக் கூறும்பாகமே பெரிதும் விசேடமுமாகி நிலவுவதென்பார் 'மேன்மையா லாற்றவுநமதிய லறையுநீரது' எனவுங் கூறினார். (35)

என்பெய ரதற்கெனி லினிது தேர்ந்துளோர்
துன்பம தகற்றிடுந் தொல்பு ராணமாம்
ஒன்பதிற் றிருவகை உண்ட வற்றினை
அன்புடை நந்திமுன் னறியக் கூறினேம்.

**இ—ள்:** அதற்கு பெயர் என் எனில்—அதற்குப் பெயர் யாதெனில், இனிது தேர்ந்துளோர் துன்பமது அகற்றிடும் தொல் புராணம் ஆம் — நன்குணர்ந்தவர்களது கிலேசத்தைப் போக்குகின்ற பழைய புராணமென்பதாம், ஒன்பதிற்றிரு வகை உண்டு—அப்புராணம் பதினெட்டு வகுப்புள்ளது, அவற்றினை—அவ்வகை யனைத்தையும், அன்பு உடை நந்தி அறியமுன் கூறினேம்—பேரன்பினையுடைய நந்தியானவன் அறிந்துகொள்ளும்படி முற்காலத்திற் சொல்லினோம் எ—று.

நன்கு பயின்றார்க்கு இக பர மிரண்டினுஞ் சாதனமாய்ப் போக மோக்ஷங்களைக் கொடுத்தலின் 'இனிது தேர்ந்துளோர் துன்பம தகற்றிடும்-புராணம்' எனவும், அவற்றைக் கேட்டுக்கொள்ளுமாறு பிரார்த்தித்த நந்தி யென்பார் 'அன்புடை நந்தி' எனவும் கூறினார். (36)

ஆதியில் நந்திபா லளித்த தொன்மைசேர்
காதைகள் யாவையுங் கருணை யாலவன்
கோதற வுணர்சனற் குமாரர்க் கீந்தனன்
நீதியோ டவனிடை நிலத்திற் கேட்டியால்.

**இ—ள்:** ஆதியில் நந்தி பால் அளித்த தொன்மை சேர் காதைகள் யாவையும் — முற்காலத்தில் நந்திக்கு யா முபதேசித்த பழமை பொருந்திய புராணங்க ளனைத்தையும், அவன்—அந்த நந்தியானவன், கோது அற உணர் சனற்குமாரற்கு கருணையால் ஈந்தனன்—குற்றந்தீரக்கற்றுணர்ந்த சனற்குமார முனிவனுக்குக் கிருபையோடு உபதேசித்தான் (ஆதலின்), நிலத்தில் அவன் இடை நீதியோடு கேட்டி—பூவுலகத்தில் அச்சனற்குமார முனிவனிடத்தில் முறைமையுடன் அவற்றை நீ கேட்டுணர்தி எ—று.

ஆல் அசை. நந்திபால் - வேற்றுமைத் திரிபு. கருணையால் என்பதில் ஆல் உடனிகழ்ச்சிப் பொருட்டு. எல்லா நூல்களையும் ஐய முதலிய குற்றங்கணீங்கக் கேட்டுணர்ந்தவரென்பார். 'கோதறவுணர் சனற்குமாரன்' எனவும், அத்தகைய முனிவனை ஆசிரியனாகக் கோடலுனக் கிழுக்காகாது அவனிடம் மாணாக்கனாயமைந்து கேட்குதி என்பார் 'நீதியோடு - கேட்டி' எனவும் கூறினார். (37)

என்னலும் நன்றென இசைந்து தாழ்ந்தெழீஇ
முன்னவன் விடைகொடு முளரி யான்முதல்
துன்னிய வானவர் தொகையொ டேகியே
தன்னுல கத்தின்மால் சார்தன் மேயினான்.

இ—ள்: என்னலும்—என்று சிவபெருமானருளிச்செய்தலும், மால்—விஷ்ணுமூர்த்தி, நன்று என இசைந்து தாழ்ந்து எழீஇ—நல்லதென்று சம்மதித்து வணங்கியெழுந்து, முன்னவன் விடை கொடு—முதற் கடவுளாகிய அச்சிவபெருமானது அனுமதியைப் பெற்றுக்கொண்டு, முளரியான் முதல் துன்னிய வானவர் தொகையொடு ஏகி—பிரமா முதலாக நெருங்கிநின்ற தேவர்கூட்டத்துடன் மீண்டுபோய், தன் உலகத்தில் சார்தல் மேயினன்—தமது வைகுண்டலோகத்திற் பிரவேசித்தார் எ—று.

ஏ - அசை. (38)

சார்தலு மயன்றனைச் சதம கத்தனை
ஆர்தரு மமரரை யருளி னவ்வவர்
சேர்தரு புரந்தொறுஞ் செல்லற் கேவியே
கார்தரு மெய்யுடைக் கடவுள் வைகினன்.

இ—ள்: சார்தலும்—அவ்வாறு பிரவேசித்தவுடன், கார் தரு மெய் உடை கடவுள்—கரிய திருமேனியையுடைய விஷ்ணுமூர்த்தி, அயன் தனை—பிரமதேவரையும், சதமகத்தனை—நூறுயாகங்களையுடைய இந்திரனையும், ஆர் தரும் அமரரை—நிறைந்த தேவர்களையும், அவ்வவர் சேர்தரு புரம்தொறும் செல்லற்கு அருளின் ஏவி—அவரவர் வசிக்கின்ற நகரங்கடோறும் போகும் பொருட்டுக் கிருபையுடனனுப்பி, வைகினன்—அங்கு வீற்றிருந்தார் எ—று.

ஏ அசை. தழுவியும் இன்சொற்கூறியும் தலையசைத்தும் பிறவாறும் அவரவர் தகுதிக்கேற்ப உபசரித்துவிடுத்தனரென்பார் 'அருளின்-ஏவி' என்றார். (39)

திருவொடு மருவியோன் செறிவுற் றெங்கணும்
பரவுறு மியல்பெறு பகவ னாதலால்
தரணியி லருளினாற் றனது சத்தியில்
ஒருகலை தன்னுட னுதிக்க வுன்னியே.

இ—ள்: திருவொடு மருவியோன்—இலக்குமிதேவியுடன் கூடியிருக்கின்ற திருமால், எங்கணும் செறிவுற்று பரவுறும் இயல் பெறு பகவன் ஆதலால்—எல்லா விடங்களிலுஞ் செறிந்து பரவுந் தன்மையையுடைய கடவுளாதலின், தனது சத்தியில் ஒரு கலை தன் உடன் தரணியில் உதிக்க—தமது சத்திகளுள் ஒரு கலையோடு பூவுலகத்தில் அவதரிக்கும்படி, அருளினால் உன்னி—(ஆன்மாக்கள்மீதுகொண்ட) கருணையினாற்றிருவுளங்கொண்டு எ—று.

பகவனாதலால் உன்னி என இயையும். தொழிலியற்றற் கேற்பச் சத்தியுடன் கூடியிருப்பவரென்பார் 'திருவொடு மருவியோன்' எனவும், சர்வவியாபகமுடைமையால் விஷ்ணு என்னுங் காரணப்பெயர் பெற்ற கடவுளாதலின் 'செறிவுற் றெங்கணும் பரவுறுமியல் பெறுபகவன்' எனவும் பலகலைகள் பண்டு போற் காத்தற் றொழிலைச் செய்ய ஓர் கலையுடனுதிக்க நினைத்தென்பார் 'தமது சத்தியினொருகலை தன்னுட னுதிக்கவுன்னி' எனவுங் கூறினர். (40)

பங்கயத் தயன்வழிப் பராச ரப்பெயர்த்
துங்கநன் முனிபனித் தூவ லெல்லையிற்
கங்கையி லியோசன கந்தி யோடுற
அங்கவர் தம்மிடை அவத ரித்தனன்.

**இ—ள்:** பங்கயத்து அயன் வழி பராசர பெயர் துங்க நல் முனி—தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவரது சந்ததியிலுள்ள பராசரரென்னும் பெயரையுடைய மகிமை வாய்ந்த நல்ல முனிவர், பனித்தூவல் எல்லையில்—பனித்தூவலையுடைய காலத்தில், கங்கையில் இயோசனகந்தியோடு உற—கங்கைநதிக் கரையிற் பரிமளகந்தி யென்னுங் கன்னிகையுடன் சேர, 'அவர் தம் இடை அவதரித்தனன்—அவர்களிடத்திற் புத்திரராக அவதாரஞ் செய் [illegible]—று.

அங்கு - அசை. பங்கயம் - ஆகுபெயர். யோசனகந்தியைப் பரிமளகந்தி யெனவும் வழங்குப.

பிரமகுலதிலக ரென்பார் 'பங்கயத்தயன்வழி - முனி' எனவும், கலியுக தருமங்களையும் பற்பல சோதிட ரகசியங்களையும் நூல்களாக இயற்றிப் பரப்பித் தந்தையாதற்கேற்ற புகழ்வாய்ந்துடைய முனியென்பார் 'துங்கநன்முனி' எனவும், உலகத்திற்கு நன்மையுண்டாக்கு முத்தமகுமாரனைத் தோற்றுவித்தல் வேண்டுமென்று தாமெண்ணி யிருந்த சுபமுகூர்த்தஞ் சமீபித்தமையால் நதியைக் கடந்து செல்லாதுநின்று ஓடம்விடுப்பாளா யங்குநின்ற மற்சகந்தியென்னுங் கன்னிகையை மங்கைப் பருவ முடைய பரிமளகந்தியாக்கிச் சேர்ந்தனராதலின் 'பனித்தூவ லெல்லையிற் கங்கையிலி யோசனகந்தியோடுற' எனவும் கூறினர்.

பரிமளகந்தியின் வரலாறு மகாபாரதத்திற் கூறப்பட்டது. இவள் முன் பரதவரால் வளர்க்கப்பட்டு மற்சகந்தி யென்னும் பெயருடையவளாயிருந்து பராசர முனிவரால் ஒரு யோசனைகாறும் மணம்வீசும் பரிமளகந்தியாக்கப் பெற்றாளென்க. இதனை ''பரிதிதந்த மாரநதி மருங்கொரு பகற்பராசரன் மகப்பேறு, கருதிவந்துகண் டென்னையு மெனது மெய்க்ககமழ் புலவையு மாற்றிச், சுருதி வாய்மையின் யோசனைப் பரப்பெழு சுகந்தமு மெனக்கீந்து, வருதிநீ யெனப் பனியி னுன்மறைத்தொரு வண்டுறைக்குறை சேர்ந்தான்'' என்னும் மகாபாரதச் செய்யுளானுணர்க. (41)

மற்றவன் வதரிகா வனத்தில் வைகியே
அற்றமில் வாதரா யணனெ னும்பெயர்
பெற்றன னாகியெம் பிரான்ற னாணையாற்
கற்றிடா துணர்ந்தனன் கரையில் வேதமே.

**இ—ள்:** அவன் வதரிகா வனத்தில் வைகி—அக்குமாரர் வதரிகாச்சிரமத்திற் பலகாலமிருந்து, அற்றம் இல் வாதராயணன் எனும் பெயர் பெற்றனன் ஆகி—குற்றமில்லாத வாதராயணரென்னும் பெயரைப்பெற்று, எம்பிரான் தன் ஆணையால்—எமது கடவுளாகிய சிவபெருமானது கட்டளையினால் கரை இல் வேதம் கற்றிடாது உணர்ந்தனன் — கரையற்ற வேதக் கடலைப் பிறரிடமோதாது தாமாகவே யறிந்தார் எ—று.

ஏகாரங்கள் அசைகள். வதரிகா - இலந்தை; வதரமென்பதுமது. வாதரம்-இலந்தைவனம். அயனம் - இருக்கை. ஆகவே வாதராயணன் என்பதற்கு இலந்தைவனத்தை இருக்கையாக வுடையவரென்பது பொருள். 'கரையில்' என்னுமடைக்கேற்ப வேதத்தைக் கடலென்றும். (42)

மோனக முற்றிய முனிவர் மேலவன்
தானுணர் மறையெனுந் தரங்க வேலையில்
ஆனதோர் பொருளினை யறிஞர் பெற்றிடத்
தூநெறி கொண்டநாற் றுறைசெய் தானரோ.

இ—ள்: மோகனம் முற்றிய முனிவர் மேலவன்—மோனத்தன்மை சித்திக்கப்பெற்ற முனிசிரேட்டராகிய அவ்வாதராயணர், தான் உணர் மறை எனும் தரங்க வேலையில் ஆனது ஓர் பொருளினை—தாம் ஓதா துணர்ந்த வேதமென்கின்ற திரைபொருந்திய கடலிற்றோன்றிய சாரத்தை, அறிஞர் பெற்றிட—பேரறிவுடையோர் பெற்றுக்கொள்ளும்படி, தூ நெறி கொண்ட நால் துறை செய்தான்—தூய்மையான வழிபொருந்திய நான்கு வகுப்பாகச் செய்தார் எ—று.

தரங்கவேலை - பெருங்கடல். வேதக் கடலினுழ்ந்து தெரிந்தெடுத்த மெய்ப்பொருளாகிய கருத்தை அறிஞ ரெளிதி னுணர்தற்கேற்ற வழி முறையமைய நான்காக வகுத்தா ரென்பதாம். மோனகம் - மோனத்தன்மை.

அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பே சொரூப மென வும் ஏனைய உருவத் திருமேனி முதலியன வெல்லாந் தூலாருந்ததி நியாய மாய் அதனையுணர்தற் பொருட்டும் வழிபடுதற் பொருட்டுங்கொண்ட திரு மேனிகளா மெனவுமுணர்ந்து புறக்கரணமாகிய காயத்தொழிலையும், அகக் கரணமாகிய மனத்தொழிலையுங் கைவிட்டுச் சிரவணம மனனம் நிதித்தியா சனம் சமாதி என்னும் நால்வகை ஞானநிலைகளையுங் கடைப்பிடித் தொழு கிய ஞானியென்பார். 'மோனகமுற்றிய முனிவர் மேலவன்' என்றார். பொரு ளாழம் அரும்பொருட் கிடக்கையாதிய இயல்புகள் பொருந்துதலால் வேதத் தைக் கடலாக உருவகித்தார். (43)

கரையறு வேதமாங் கடலை நான்கவாய்ப்
பிரிநிலை யாக்கியே நிறுவு பெற்றியாற்
புரைதவிர் முனிவரன் புகழ்வி யாதனென்
றொருபெயர் பெற்றன னுலகம் போற்றவே.

இ—ள்: புரை தவிர் முனிவரன்—காமமுதலிய குற்றங்களற்ற அவ்வா தராயணமுனிவர், கரை அறு வேதம் ஆம கடலை—கரையில்லாத வேத மாகிய சமுத்திரத்தை, நான்க ஆய் பிரிநிலை ஆக்கி நிறுவு பெற்றியால்—நால்வகையினவாகப் பிரித்து நிறுத்திய காரணத்தால், உலகம் போற்ற—உலகத்தவர்கள் துதிக்கும்படி, புகழ் வியாதன் என்று ஒரு பெயர் பெற்ற னன்—புகழையுடைய வியாசரென்று ஒரு பெயரைப் பெற்றார் எ—று.

ஏகாரங்கள் - அசைகள். வியாதன் - வேதங்களை வெவ்வேறு கூறுக ளாய்ப் பிரித்தவர். வியாசனெனற்பாலது வியாதனெனவும் வழங்கிற்று. வி என்னு முபசர்க்கம் அஸ் என்னுந் தாதுவுடன் கூடியவழி வ்யஸ் என நிற்கும்; அஃதீண்டு வெவ்வேறு கூறாக்கி வைத்தலென்னும் பொருளில் வந் தது. ஆய் - செயவெனெச்சத் திரிபு,

மெய்ஞ்ஞானமுடைய முனியென்பார் 'புரைதவிர் முனிவரன்' எனவும், விபரீத ஞானத்தான் மருண்டு வேதவிருத்தமாகப் பற்பல சமய நூல்களை யியற்றி யிழுக்குற்றார்போலாது எத்துணை நுண்ணறிவாளி கடாமும்வழூஉத் தெரிதற் கிடமின்றென வகுத்து உலகினரெவரும் வியந்து புகழும்படி சிறப் புற்றனராதலின் 'புகழ்வியாத னென்றொரு பெயர்பெற்றனனுலகம்போற்ற' எனவும் கூறினர். (44)

விரவிய மறைதெரி வியாத னுமவன்
குரவனே யாஞ்சனற் குமாரன் றன்னிடை
இருவகை யொன்பதா யியல்பு ராணமும்
மரபொடு கேட்டவை மனத்துட் கொண்டபின்.

இ—ள்: விரவிய மறை தெரி வியாதன் ஆம் அவன்—வரம்பிகந்து கலந்த வேதங்களை ஓதாதுணர்ந்த வியாதராகிய அம்முனிவர், குரவனே ஆம் சனற்குமாரன் தன்னிடை—ஆசிரியரேயாகிய சனற்குமார முனிவரிடத்து, இரு வகை ஒன்பது ஆய் இயல் புராணமும் மரபொடு கேட்டு — பதினெண் வகையாகப் பொருந்திய புராணங்கள் முழுவதையும் முறைப்படி கேட்டு, அவை மனத்துள் கொண்டபின்—அவற்றைத் தம்முளத்தி லமைத்த பின்பு எ—று.

ஏகாரம் தேற்றம். உம்மை முற்று. இச்செய்யுளும் பிற்செய்யுளுங் குளகம். முறைபிறழ்ந்த வேதங்களை ஓதாதுணர்ந்தார்க்கு அதன்சாரமா யமைந்துள்ள புராணங்களை யுணர்தற்கோ ராசிரியர் வேண்டப்படா திருப்பவும் குருசீட பாரம்பரியத்தை உலகினுட்டுதற் பொருட்டே குரவனுகக்கொண்டு பாடங் கேட்டன ரென்பார். ' விரவிய மறைதெரி வியாதனுமவன் - சனற்குமாரன் றன்னிடை - கேட்டு' எனவும், சனற்குமார முனிவரும் இவர்க்குக் குரவராதற்கேற்ற தேவாம்சமுங் கல்வியறிவு முடையவ ரென்பார். ' குரவனேயாஞ் சனற்குமாரன் ' எனவும் கூறினர்.

சனற்குமாரரின் மகிமையை '' அருள்பெறு சனற்குமார னறுமுகன்கூறென் றுன்னைச், சுருதியிற் கிளந்தவாற்ற லறிவினிற் றுறைமுற்று, மிருளற வுணர்ந்தாய் '' என்னுங் காஞ்சிப் புராணச் செய்யுளானுணர்க. (45)

ஏத்திடு சுருதிக ளிசைக்கு மாண்பொருள்
மாத்திரைப் படாவெனு மாசில் காட்சியர்
பார்த்துணர் பான்மையாற் பலவ கைப்படச்
சூத்திர மானவுஞ் சொற்று வைகினுன்.

இ—ள்: ஏத்திடு சுருதிகள் இசைக்கும் மாண் பொருள் மாத்திரைப்படா எனு—யாவராலுத் துதிக்கப்படுகின்ற வேதங்கள் கூறுகின்ற மாட்சிமை பொருந்திய பொருளனைத்தும் அளவுபடாவென்று சிந்தித்து, மாசு இல் காட்சியர் பார்த்து உணர் பான்மையால்—குற்றமற்ற அறிவினையுடைய பெரியோர்கள் ஆராய்ந் துணருமாறு, பலவகைப்பட்ட சூத்திரம் ஆனவும் சொற்று வைகினுன்—பல வகுப்புப் பொருந்தச் சூத்திரங்களையுங் கூறி வசித்திருந்தார் எ—று.

பான்மையால்=ஆலீற்று வினையெச்சம். உம்மை - எச்சம். ஏத்திடு சுருதி என்பதற்குக் கடவுளைத் துதிக்கின்ற வேதங்களெனினுமாம்.

ஆழ்ந் துணரவேண்டிய பொருளென்பார். 'மாண்பொருள்' எனவும், அத்தகைய பொருளை எவருந் தெற்றென வுணர்தலரி தென்பார். 'மாத்திரைப்படா' எனவும், கபட முதலியவற்றை யொழித்த சிந்தைய ரென்பார். 'மாசில் காட்சியர்' எனவும், எளிதிற் பொருளுணர்தற் கேற்றவா றென்பார். 'பார்த்துணர் பான்மையால்' எனவும் கூறினர்.

சூத்திரம் என்றது வியாச சூத்திரத்தை. இது வேதாந்த சூத்திர மெனவும் பிரமசூத்திரமெனவும் உத்தரமீமாஞ்சையெனவும் பெயர்பெறும். இதற்குப் பலர் பாஷ்யஞ் செய்தனர். சங்கராசாரியர் நீலகண்டாசாரியர் இராமானுஜாசாரியர் மத்துவாசாரியர் என்னும் நால்வர் பாஷயங்களே பரந்து வழங்குகின்றன. இவற்றுட் சங்கரபாஷ்யத்தை அத்வைதிகளும் நீலகண்டபாஷ்யத்தைச் சைவவிசிட்டாத்வைதிகளும் இராமானுஜபாஷ்யத்தை வைஷ்ணவவிசிட்டாத்வைதிகளும் மாத்துவபாஷ்யத்தை மாத்துவர்களும் அனுசரிக்கின்றனர். (46)

மயலறு பயிலரே வைசம் பாயனர்
சயிமினி சுமந்துவாந் தவத்தர் நால்வர்க்கும்
வியலிருக் காதியாம் வேத நான்கையும்
உயர்வுறு தவத்தினன் முறையி னோதினன்.

**இ—ள்:** உயர்வு உறு தவத்தினன் — மகிமை பொருந்திய தவத்தை யுடைய வியாசமுனிவர், மயல் அறு பயிலரே வைசம்பாயனர் சயிமினி சுமந்து ஆம் தவத்தர் நால்வர்க்கும்—அறியாமை நீங்கப்பெற்ற பைலரும் வைசம்பாயனரும் சைமினியும் சுமந்துவுமாகிய நான்கு முனிவர்களுக்கும், வியல் இருக்கு ஆதி ஆம் வேதம் நான்கையும் முறையின் ஓதினன்—பெரிய இருக்கு முதலாகிய நான்கு வேதங்களையும் முறைப்படி உபதேசித்தார் எ—று.

முறை - நிரனிறை. உபதேசிக்கப்பட்டவற்றை யுள்ளவா றுளத்தமைத் துக்கொள்ளும் மதிநுட்ப முடையவ ரென்பார் 'மயலறு பயிலர்' என்றார். இவ்வடையை ஏனையோர்க்கு மொட்டுக. (47)

தோல்வரு மறைகளின் சூத்தி ரத்தையும்
மேல்வரு சயிமினி முதல மேதையர்
நால்வரு முணரிய நவின்று நல்கினன்
ஆல்வரு கடவுளை யனைய தன்மையான்.

**இ—ள்:** ஆல் வரு கடவுளை அனைய தன்மையான்—கல்லால விருட்ச நீழலிற் குருமூர்த்தியா யெழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தியைப் போன்ற இயல்பினையுடைய வியாசமுனிவர், தோல் வரும் மறைகளின் சூத்திரத்தையும்—பழமை பொருந்திய பிரமசூத்திரத்தையும், மேல் வரு சயிமினி முதல மேதையர் நால்வரும் உணரிய நவின்று நல்கினன்—மேன்மை பொருந்திய சைமினிமுனிவர் முதலாகிய பேரறிவாளிகள் நால்வரு மறியும்படி உபதேசித்தருளினர் எ—று.

தோல் நீட்டல்விகாரம். இழுமென் மொழியால் விழுமியது நுவற லெனப் பொருள் கொள்ளினுமாம். மேல்வரு என்பதற்கு முற்செய்யுளிற் கூறப்பட்டுப் போந்த எனப்பொருளுரைப்பினுமாம். இருக்கு முதலிய பெயர்களுடன் வியாதமுனிவரால் வகுக்கப்பட்டதாயினும், அது பண்டைக் காலத்திற் சிவனருளியதே பிறிதன்றென்பார். 'தோல்வரு மறை' எனவும், சனகாதி நால்வர்க்குந் தக்ஷிணாமூர்த்தி வேதாகமசாரங்களை ஐயமறத் தெருட்டியதுபோலவே தெருட்டினரென்பார் 'ஆல்வரு கடவுளையனைய தன்மையான் - நவின்று நல்கினன்' எனவுங் கூறினர். (48)

மெய்ம்முனி யனையரை விளித்து நீரினி
இம்மறை யியல்பினோ ரெவர்க்கு மீமென
அம்முறை நால்வரு மனைய வேதநூல்
செம்மையொ டளித்தனர் சிறந்து ளோர்க்கெலாம்.

**இ—ள்:** மெய் முனி அனையரை விளித்து—மெய்ம்மையினையுடைய வியாசமுனிவர் அந்த மாணாக்கர்களை யழைத்து, நீர் இனி இயல்பினோர் எவர்க்

கும் இ மறை ஈம் என—(முனிவிர்காள்!) நீவிர் இனித் தகுதியுடையோர் யாவர்க்கும் இந்த வேதங்களை யுபதேசியுங்களென்று கட்டளைசெய்ய, நால்வரும்—அந்த நான்கு முனிவர்களும், சிறந்துளோர்க்கு எலாம் அனைய வேத நூல் அம்முறை செம்மையொடு அளித்தனர்—தகுதியுடையோர்களுக் கெல்லாம் அந்த வேதநூலை அந்தப் பிரகாரம் செப்பமாக உபதேசித்தார்கள் எ—று

ஈயும் என்னும் முன்னிலையேவல் வினைமுற்று ஈமென நின்றது. களிப்பு கவலை ஆசை பயம் கோபம் என்பவற்றைத் தவிர்ந்த திரசித்தரே முனியெனப்படுவ ரென்பது நூற்றுணிபாதலின் அவ்விலக்கணமுடையரென்பது போதர 'மெய்ம்முனி' எனவும், முன்னர் முப்பத்து மூன்றாஞ் செய்யுளுரையில் நாமெடுத்துக் காட்டியாங்கு மரபும் நிலையுமுடையரென்பார். 'இயல்பினோர்' எனவும், ஆசிரியர் உபதேசித்தவாறே யென்பார். 'அம்முறை' எனவுங் கூறினர். தகுதியில்லார் வேதமோதினும் ஓதுவிக்கினும் மரணம் அல்லது தீராப்பகை யுண்டாமென்பது தருமநூற்றுணிபு. (49)

அன்னதோர் முனிவர னதற்குப் பின்னரே
பன்னருந் தொகையினாற் பதினெண் பான்மையாய்
முன்னுறு புராணநூல் முழுது முற்றிய
இன்னருள் நிலைமையா லெனக்கு நல்கினான்.

இ—ள்- அன்னது ஓர்முனிவரன்—அந்த வியாசமுனிவர், அதற்கு பின்னர்—அதன் பின்பு, பன்னரும் தொகையினால்—சொல்லுதற்கரிய கிரந்த சங்கியையுடன், பதினெண் பான்மை ஆய்—பதினெண் வகையாக, முன் உறு புராண நூல் முழுதும்—முன்னர்த் தோன்றிய புராணசாஸ்திர மனைத்தையும், முற்றிய இன் அருள் நிலைமையால் எனக்கு நல்கினான்—முதிர்ந்த இனிய காருண்ணியத்தோடும் எனக்குப் போதித்தருளினார் எ—று.

பன்ன என்பதினீற்றகரந் தொக்கது. பன்னருந்தொகை யென்றது நான்கிலக்கத் தெண்ணாயிர மென்னுங் கிரந்த சங்கியையை. மற்றைய மாணாக்கரிடத்து வைத்த அருளினுஞ் சிறந்த அருளென்பார் 'முற்றிய வின்னருள்' என்றார். (50)

வேதம துணர்தரு வியாத மாமுனி
காதல னுமெனைக் கருணை செய்திவை
ஓதுதி யாவரு முணர வென்றனன்
ஆதலி னுலகினி லவற்றைக் கூறினேன்.

இ—ள்: வேதமது உணர்தரு வியாத மா முனி — வேதத்தை யோதாதுணர்ந்த வியாதமாமுனிவர், காதலன் ஆம் எனை கருணைசெய்து—புத்திரனாகிய எனக்குத் திருவருள்புரிந்து, யாவரும் உணர இவை ஓதுதி என்றனன்—அனைவருமறியும்படி இப்புராணங்களைப் போதிப்பாயாக என்று பணித்தார், ஆதலின்—ஆதலினால், உலகினில் அவற்றை கூறினேன்—இப்பூவுலகத்தில் அவற்றைச் சொல்லினேன் எ—று.

எனை என்பதில் ஐயுருபு குவ்வுருபாகத் திரிக்கப்பட்டது, வித்தை கற்பித்தோனையும் பிதாவெனக் கோடன் மரபாகலின் அங்ஙனங்கொண் டொழுகினேனென்பது தோன்ற 'காதலனுமெனை' எனவும், அத்தகைய குருபத்திவிளை வை

வேய்ந்து கொள்வது வெள்ளெருக் கறுகுநீர் வியன்கொன்றை
பாந்தள் நொச்சியே மத்தமென் றினையன பலவுண்டால்
சாந்தம் வெண்பொடி சூலமான் மழுத்துடி தழலங்கை
ஏந்து கின்றது பாரிடஞ் சூழ்படை இறையோற்கே.

இ—ள்; இறையோற்கு — சிவபெருமானுக்கு, வேய்ந்து கொள்வது— புனைந்துகொள்ளும் பொருள்கள், வெள்ளெருக்கு — வெள்ளெருக்கம் பூவும், அறுகு—அறுகும், நீர்—கங்கையும், வியன் கொன்றை—சிறந்த கொன்றை மலரும், பாந்தள்—சர்ப்பங்களும், நொச்சி—நொச்சியும், மத்தம் என்று—ஊமத்தையுமென்று, இனையன பல உண்டு — இவைபோல்வன பல இருக்கின்றன, சாந்தம் வெண்பொடி—பூசுஞ் சந்தனம் வெள்ளிய சாம்பராம், அங்கை ஏந்துகின்றது — அகங்கையிற்றாங்குவன, சூலம் மான் மழு துடி தழல் — சூலமும் மானும் மழுவும் தமருகமும் அக்கினியுமாம், சூழ் படைபாரிடம்—சூழ்ந்துள்ள சேனை பூதங்களாம் எ—று. (16)

அன்னை தாதைகேள் வடிவொடு குணங்களி லனையானுக்
கின்ன வாகிய பலவள னுண்டவை எவையுந்தாம்
நின்ன வாகவோ தவம்புரிந் தெய்த்தனை நெடுந்தொல்சீர்
மன்னன் மாமகட் கியைவதே இத்துணை வழக்கென்றான்.

இ—ள்: அன்னை தாதை கேள் வடிவொடு குணங்கள் இல் அனையானுக்கு— தாயும் தந்தையும் சுற்றமும் உருவமும் குணங்களுமில்லாத அந்தச் சிவனுக்கு, இன்ன ஆகிய பல வளன் உண்டு—இவை போன்ற பலவளப்பங்கள் உள்ளன, அவை எவையும் நின்ன ஆகவோ தவம் புரிந்து எய்த்தனை—அவ்வளப்பங்களெல்லாம் உன்னுடையனவாதற்கா அருந்தவஞ்செய்து இளைப்புற்றாய்?,நெடும் தொல்சீர் மன்னன் மா மகட்கு—நெடிய பழைய கீர்த்தியையுடைய இராச குமாரியாகிய உனக்கு, இ துணை வழக்கு இயைவதே என்றான்—இத்தகைய இயல்பு இசைவதா? (இசையாதே!) என்று திருவாய்மலர்ந்தருளினார் (விருத்தப் பிராமண வேடங்கொண்ட சிவபிரான்) எ—று.

வளமென்பது வளனெனப் போலியாயிற்று. தாம் - அசை. எகாரம் - வினா. வடிவு அழகெனினுமாம். இன்னவாகிய பல்வளம் என்றதற்கு முயலகன் முதலியவற்றை யுரைக்க. 'அன்னை தாதைகேள் வடிவொடு குணங்களிலனையான்' என்பதை ''தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடி''என்னுந் திருவாசகத்தானும், ''வடிவனைத்துந் தந்தவடிவில்லாச் சுத்தவான் பொருளே'' எனவும், ''குலமி லான்குணங் குறியிலான் குறைவிலான் கொடிதாம் - புலமி லான்றனக் கென்னவோர் பற்றிலான் பொருந்து - மிலமி லான் மைந்தர் மனைவியில் லானென வனவன்சஞ் - சலமி லான்முத்தி தரும்பர சிவனெனத் தகுமே'' என்னுந் தாயுமானவர் திருவாக்கானு முணர்க.

தாய் தந்தை சுற்றம் வடிவம் நற்குணம் என்பவை மணமகனுக்கு வேண்டப்படுவனவாதலின், அவை யொன்று மில்லா ரென்பதை யுணர்த்தினார். சிவனை வரனாகக்கொண்டு மன்றலியற்றுழிப் புலித்தோலும் நரசிங்கத் தோலுமே மணச்சடங்கிற் கிடைக்கும் ஆடையாம், சர்ப்பமே காப்புநாணும் மங்கலநாணுமாம், கிழத்தன்மைமிக்க இடபமே வாகனமாம், உயர்ந்த பட்டாடையை யுடுத்துப் பட்டு நூலிழையாற் காப்புநாணும் மாற்றுயர்ந்த பொன்னால் மங்கலநாணுமணிந்து யானைமேலிவர்ந்து பரிசனர் சேவிக்க வீதி வலம் வருதற்குரிய இராச கன்னிகையாகிய உனக்கு இவையெல்லா மேற்

றனவா என முதனூற் கருத்தை யமைத்து அவ்வப் பொருள்களினியைபை ஊகித்துணர 'அவை யெவையுந்தா னின்னவாகவேோ தவம்புரிந் தெய்த்தலே நெடுந் தொல்சீர் மன்னன்மாமகட் கியைவதே யித்துணை வழக்கு என்றார்.(17)

## வேறு

புரங்கண்மூன் றினையு மட்ட புங்கவன் இனையகூற
வரங்கண்மே தகைய வெற்பின் மடமயில் கேட்ட லோடுங்
கரங்களாற் செவிகள் பொத்திக் கண்ணுதல் நாமம் போற்றி
இரங்கிவெஞ் சினத்த ளாகி இடருழந் தினைய சொல்வாள்.

இ—ள்: புரங்கள் மூன்றினையும் அட்ட புங்கவன் இனைய கூற—முப்புரங்களையுமெரித்தருளிய சிவபிரான் இவற்றைத் திருவாய்மலர்ந்தருள, வரங்கள் மே தகைய வெற்பில் மட மயில் கேட்டலோடும்—பெருமையிற் சிறந்த மடமையினையுடைய இமயமலையரசனது புதல்வியாகிய பார்ப்பதிதேவி கேட்டவுடன், கரங்களால் செவிகள் பொத்தி—இருகைகளினாலுங் காதுகளைமூடி, கண்ணுதல் நாமம் போற்றி—சிவநாமத்தையுச்சரித்து, இரங்கி—இரக்கங்கொண்டு, வெம் சினத்தள் ஆகி—கொடுங்கோபத்தையுடையவராய், இடர் உழந்து—துன்பப்பட்டு, இனைய சொல்வாள்—இவ்வாசகங்களைக் கூறுவார் எ—று.

சிவபிரானது திருவருட்சோதனையை அறிந்திலரென்பதை விளக்க, 'மடமயில்' என்றார். மயில் உவமவாகுபெயர். சிவநாமமுச்சரித்தது சிவதூஷணங்கேட்ட பாவந் தீர்தற்பொருட்டென்க. (18)

கேட்டியால் அந்தணாள கேடிலா வெம்பி ரான்றன்
மாட்டொரு சிறிது மன்பு மனத்திடை நிகழ்ந்த தில்லை
காட்டுறு புள்ளின் சூழல் கவருவான் புதன்மேற் கொண்ட
வேட்டுவன் இயல்போல் மேலோன் வேடநீ கொண்டதன்மை.

இ—ள்: அந்தணாள கேட்டி—வேதியனே! கேட்பாயாக, மனத்திடை—உன் மனத்தில், கேடு இலா எம் பிரான் தன் மாட்டு ஒரு சிறிதும் அன்பு நிகழ்ந்தது இல்லை—அழிவற்ற எங்கள் தலைவராகிய சிவபிரானிடத்து மிக அற்பமாயேனும் பத்திதோன்றவில்லை, நீ மேலோன் வேடம் கொண்ட தன்மை—நீ சிவனடியானுடைய வேடத்தைப் பூண்டிருக்குந்தன்மை, காட்டு உறு புள்ளின் சூழல் கவருவான் புதல் மேல் கொண்ட வேட்டுவன் இயல் போல்—காட்டிற் பொருந்திய பறவைக் கூட்டங்களை யகப்படுத்தும்படி சிறு தூறுகளை மேற்புனைந்திருக்கும் வேட்டுவனது தன்மைபோலும் எ—று.

கேடு முதனீண்டமுதனிலைத்தொழிற்பெயர். போல் என்னுமுதனிலை முற்றாய் முடிந்தது கொள்வாருங் கள்வருநேரென்னுந்திருக்குறளிற்போல. போன்ம் எனப் பிரித்துக்கூறினுமாம்.

வேடன் பறவைகளையகப்படுத்துமாறு புதலைமேற்புனைந்து மறைந்திருத்தல் போல, நீயும் என்போல்வாரை வஞ்சிக்குமாறு இவ்வேடம் பூண்டனையேயன்றி உண்மையிற் சிவபத்தனல்லனென்பதுகருத்து. (19)

நேசமி லாது தக்கன் நிமலனை யிழித்து நின்போற்
பேசிய திறனும் அன்னோன் பெற்றதுங் கேட்டி லாயோ
ஈசனை யிங்ஙன் என்முன் இகழ்ந்தனை இந்நாள் காறும்
ஆசறு மறைக ளேது மாய்ந்திலை போலு மன்றே.

இ—ள்: தக்கன்—தக்கனென்பான், நேசம்இலாது—பத்தியில்லாமல், நின்போல் நிமலனை இழித்துபேசிய திறனும்—உன்னைப்போலச் சிவபிரானையிகழ்ந்து பேசிய தன்மையையும், அன்னான் பெற்றதும் கேட்டிலையோ—அவனடைந்த தண்டனையையும் (நீயிதுகாறும்) கேள்வியுற்றிலாயா?, ஈசனை இங்ஙன் என் முன் இகழ்ந்தனை—சிவபிரானை இவ்விடத்து என்முன்னிலையில் நிந்தித்தாய், இ நாள் காறும் ஆசு அறும் மறைகள் ஏதும் ஆய்ந்திலை போலும்—இந்நாள்வரையுங் குற்றமற்ற வேதங்களைச்சிறிதும் ஆராய்ந்திலாய்போலும் எ—று.

சிவபிரானை யிகழ்ந்த தக்கன் தண்டிக்கப்பட்டதைக் கேள்வியுற்றிருப்பின் அத்தண்டனை யுண்டாமென்றஞ்சுவை, அவரது பிரபாவங்களை விளக்கும் வேதங்களை யோதி யுணர்ந்திருப்பின் நீ கூறியவெல்லாம் அவர்க்குப் புகழேயென்பதை நன்குணர்வை இவ்விரண்டு மின்மையாற்றான் இவ்வாறிகழ்ந்து கூறினை என்பது கருத்து.

திறம் திறனெனப்போலியாயிற்று. இங்ஙனம் என்பது இங்ஙனெனக்கடைக் குறையாயிற்று. (20)

முறைபடு சுருதி யெல்லா மொழியினும் அதுவே சார்வா
உறுகில ராகிப் பொல்லா வொழுக்கமே கொண்டு முக்கண்
இறைவனை யிகழ்ந்து முத்தி யெய்திடா துழல முன்னாள்
மறையவர் பெற்ற சாபம் நின்னையும் மயக்கு றாதோ.

இ—ள்: முறைபடு சுருதி எல்லாம் மொழியினும்—முறைமைபொருந்திய வேதங்களெல்லாவற்றையும் ஓதினும், அதுவே சார்வு ஆ உறுகிலர் ஆகி—அவ்வேத நெறியையே நன்மார்க்கமென்று கடைப்பிடியாதவர்களாய், பொல்லா ஒழுக்கமே கொண்டு—தீயவொழுக்கத்தையேயனுசரித்து, மு கண் இறைவனை இகழ்ந்து—மூன்று திருக்கண்களையுடைய சிவபிரானைநிந்தித்து, முத்தி எய்திடாது உழல—மோக்ஷமடையாமற் பிறந்திறந்துழலும்படி, முன் நாள் மறையவர் பெற்றசாபம்—முற்காலத்திற் சிலபிராமணர்கள்பெற்றுக்கொண்ட சாபமானது, நின்னையும் மயக்குறாதோ—உன்னையும் மயக்கமாட்டாதா? (மயக்குமே) எ—று.

உம்மை, முன்னையது உயர்வுசிறப்பு; பின்னையது எச்சம். ஏகாரங்கள் தேற்றம். பொல்லாவொழுக்க மென்றதீண்டு வைணவமதாசாரத்தை. கிரமமாயும் ஆதியந்தமாயும் ஓதினுமென்பார் 'முறைபடுசுருதியெல்லாமொழியினும்' என்றார். மறையவர் சாபம் பெற்றதைமேல் தக்ஷகாண்டத்து அனந்தன் சாபநீங்கு படலத்து 37ஞ் செய்யுளாலுணர்க. (21)

தாதையாய்த் தம்மை நல்கித் தந்தொழிற் குரிய னாகி
ஆதியாய்த் தங்கட் கின்றி யமைவுறாச் சிவனை நீங்கி
ஏதிலார் பக்கமாகி இல்லொழுக் கிறந்தார் போலும்
வேதியர் முறையே செய்தாய் வெறுப்பதென் நின்னை யானே.

இ—ள்: தாதை ஆய் தம்மை நல்கி—பரமபிதாவா யிருந்து தம்மைத் தோற்றுவித்து, தம் தொழிற்குஉரியன் ஆகி—தாங்களியற்றுகின்ற (வேள்வி முதலிய) தொழில்களுக்குரியவராய்,ஆதி ஆய்—முதற்கடவுளுமாகி, தங்கட்கு இன்றியமைவுறா சிவனை நீங்கி—தங்களுக்கு இன்றியமையாத சிவபிரானை விலக்கி, ஏதிலார் பக்கம் ஆகிஇல்லொழுக்கு இறந்தார்போலும் வேதியர் முறையேசெய்தாய்—அன்னிய புருடர்மாட்டு மனம்வைத்து இல்லறநெறிகோடிய கற்பின்மகளிர் போன்ற வைணவப் பிராமணர்களது முறைமையையே நீயுஞ் செய்தனை, நின்னை யான்வெறுப்பது என்—உன்னை யான் வெறுப்பது எவ்வாறு? எ—று.

முன்னைய ஏகாரம் தேற்றம். குலதெய்வமாதலின் 'தங்கட்கின்றியமைவுருச் சிவன்' என்றார். அத்தெய்வத்தைவிடுத்துப் பிறதெய்வத்தை முதலாகக்கொள்ளுதலின் அவர்க்கு ஏதிலார் பக்கமாகியில்லொழுக்கிறந்த மகளிரையுமுவமித்தார். ஏதிலார் பக்கமாகி என்பதை வேதியர்க்கடையாக்கி 'பிறதேவர்மேல் அன்புவைத்து' என உரைப்பாருமுளர். நல்கி என்பதுமுதலிய எச்சங்கள் 'இன்றியமைவுரு' என்னும் எதிர்மறைவினையோடியைந்தன. நின்குலவொழுகத்தையறியாதுபசரித்த என்னை வெறுப்பதன்றி உன்னைவெறுப்பது தகாதென்பார் 'வெறுப்பதெனின்னையானே, என்றார். (22)

ஆயினும் மறையோர் தம்மி னருமறை முறையே வேடம்
தூயன தாங்கி யெங்கோன் றொண்டுசெய் வோரு முண்டால்
நீயவர் தன்மைத் தாயும் நித்தனை யிகழ்ந்தா யென்னில்
தீயவ ருனைப்போ லில்லை அவுணர்தந் திறத்து மாதோ.

இ—ள்: ஆயினும்—அங்ஙனமாயினும், மறையோர் தம்மில்—வேதியர்களுள், அரு மறை முறையே தூயனவேடம் தாங்கி—அரிய வேதவிதிப்படியே புனிதமான வேடத்தைபூண்டு, எம் கோன்தொண்டு செய்வோரும் உண்டு—எங்கள் தலைவரா கிய சிவபிரானது பணிகளைச்செய்கின்ற மெய்யடியாருமுளர், நீ அவர் தன்மைத்து ஆயும்—நீ அந்தமெய்யடியாரது இயல்பைபொருந்தியிருந்தும், நித்தனை இகழ்ந்தாய் என்னில்—நித்தியராகிய சிவபிரானை நிந்தித்தனை ஆதலின், அவுணர்தம் திறத்தும் உனை போல் தீயவர் இல்லை—அசுரர்களுள்ளும் உன்னைப்போலக்கொடியவர்களில்லை எ—று.

கபடஞ்செய்தலை இயல்பாகவுடைய அசுரகுலத்தார்தாமும் உன்போற்கபட வேடம் பூண்டு சிவபிரானை நிந்தித்திலராதலின் நீ அவரினுங் கொடியை என்ப தாம். உம்மை, அவுணர்தந்திறத்தும் என்பதில் இழிவு சிறப்பு; தொண்டுசெய்வோ ரும் என்பதில் எச்சம்; தன்மைத்தாயும் என்பதில் உயர்வுசிறப்பு. (23)

வேண்டுதல் வேண்டி டாமை யில்லதோர் விமலன் றன்னை
ஈண்டுநீ யிகழ்ந்த வெல்லாம் யாரையு மளிக்கு மன்பு
பூண்டிடு குறிகாண் அற்றாற் புகழ்ச்சியா மன்றி முக்கண்
ஆண்டகை யியற்கை யெல்லா மார்கொலோ அறிய கிற்பார்.

இ—ள்: வேண்டுதல் வேண்டிடாமை இல்லது ஓர் விமலன் தன்னை—விருப்பும் வெறுப்புமில்லாத நிர்மலராகிய சிவபிரானை, ஈண்டு நீ இகழ்ந்த எல்லாம்—இவ் விடத்து நீ நிந்தித்துகூறிய இயல்புகள்யாவும், யாரையும் அளிக்கும் அன்பு பூண்டிடு குறி—நம்மனோரனைவரையுங் காக்கின்றகிருபையை மேற்கொண்டமுத்திரைகளாம், அற்றால் புகழ்ச்சி ஆம்—அவற்றால் (அவருக்குப்) புகழுண்டு, அன்றி—அங்ஙனமன்றி, மு கண் ஆண்டகை இயற்கை எல்லாம் அறியகிற்பார் ஆர்—மூன்றுதிருக்கண்களை யுடையசிவபிரானது தன்மைகளெல்லாவற்றையும் அறிய வல்லுநர் யாவர் (ஒருவரு மிலர்) எ—று.

ஆண்டகை-அன்மொழித்தொகை; ஆண்டன்மையினையுடையவன் என்பது பொ ருள். விருப்புவெறுப்பற்ற சிவபிரான் அவற்றைவிரும்பிகொண்டது தாமேபரமபதி யென்பதை எவருமுணர்ந்திடேறும் பொருட்டேயாதலின் அவை அவர்க்குப் புகழாம், எண்ணிறந்தகாலம் அருந்தவமியற்றிப்பக்குவமெய்தினோர்க்கும் உணர்தற்கரிய சிவ பிரானது பிரபாவமெல்லாம அவரையிகழ்ந்துதிரியும் வஞ்சகனாகிய உனக்குப்புலப் படா என்பதுகருத்து. (24)

போதனே முதலா வுள்ள புங்கவர் வழிபட் டேத்த
வேதமி லிறைமை யாற்ற லியாவையும் புரிந்த நாதன்
காதலும் வெறுப்பு மின்றிக் கருணைசெய் நிலைமையேகாண்
பேதைநீ யிகழ்ச்சி யேபோற் பேசிய தன்மை யெல்லாம்.

இ—ள்: போதனே முதல் ஆ உள்ள புங்கவர் வழிபட்டு ஏத்த—பிரமனே முதலாகவுள்ள தேவர்கள் யாவரும் வழிபாடுசெய்து துதிக்க,ஏதம் இல் இறைமை ஆற்றல் யாவையும் புரிந்தநாதன்—குற்றமற்ற அதிகாரத்தையும் வல்லமையையும் வேண்டிய பிறவற்றையுங் கொடுத்தருளிய சிவபிரான், காதலும் வெறுப்பும் இன்றி கருணைசெய் நிலைமையே—விருப்பும் வெறுப்புமின்றி ஆன்மாக்களுக்குத் திருவருள் செய்கின்ற இயல்பேயாம், பேதை நீ இகழ்ச்சியே போல் பேசிய தன்மை எல்லாம்—அறிவிலியாகிய நீ நிந்தையே போல எண்ணிக் கூறிய செயல்கள் யாவும் எ—று.

காண் - முன்னிலையசை. (25)

இம்முறை மறைக ளாதி இசைத்தன இனைய வெல்லாஞ்
செம்மைகொ ளுணர்வின் ஆன்றோர் தெளிகுவ ரிறையை யெள்ளும்
வெம்மைகொள் குணத்தாய் நிற்கு விளம்பொணு விளம்பிற் பாவம்
பொய்ம்மறை வேடத் தோடும் போதிநீ புறத்தி லென்றாள்.

இ—ள்: இ முறை மறைகள் ஆதி இசைத்தன — இவ்வாறு வேத முதலிய நூல்கள் கூறின, இனைய எல்லாம் செம்மை கொள் உணர்வின் ஆன்றோர் தெளிகுவர்—இவைகளனைத்தையும் தூய்மை பொருந்திய அறிவினையுடைய பெரியோர் உணர்வார்கள், இறையை எள்ளும் வெம்மை கொள் குணத்தாய் — சிவ பிரானை யிகழுகின்ற துர்க்குணனே!, நிற்கு விளம்ப ஒணு—உனக்கு விரித்துக் கூறுதல் தகாது, விளம்பில் பாவம்—அங்ஙனங் கூறினுற் பாவமுண்டாம், நீ பொய் மறை வேடத்தோடும் புறத்தில் போதி என்றாள்—நீ பொய்மையான வேதிய வடிவத்துடன் வெளியே போ என்று கூறினர் (பார்ப்பதிதேவியார்) எ—று. (26)

அறத்தினைப் புரிவாள் இவ்வா றறைதலும் அணங்கே ஈங்குன்
திறத்தினி லார்வஞ் செய்து சென்றவென் செயல்கே ளாது
புறத்திடைப் போதி யென்றி புரைவதோ புகுந்த பான்மை
மறைச்சடங் கியற்றி நின்னை வரைந்திடற் காகு மென்றான்.

இ—ள்; அறத்தினை புரிவாள் இவ்வாறு அறைதலும்—(காஞ்சீபுரத்தின்கண்ணே) முப்பத்திரண்டுதருமங்களையுஞ்செய்தருளிய உமாதேவியார் இவ்வாறு கூறுதலும், அணங்கே—(விருத்தவேதியராகிய சிவபிரான் அவரைநோக்கி) பெண்ணே!, உன் திறத்தினில் ஆர்வம் செய்து ஈங்கு சென்ற என்செயல் கேளாது—உன்மாட்டுக் காதல்கொண்டு இங்குவந்த எனது வரவை வினவாது, புறத்திடை போதி என்றி —வெளியிற் போவென்று கூறினை, புரைவதோ—இது தக்கதா?, புகுந்த பான்மை —யான்வந்தகாரணம் (யாதெனில்), மறைசடங்கு இயற்றி நின்னை வரைந்திடற்கு ஆகும் என்றான்—வேதவிதிப்படி கிரியைகளை நடாத்தி உன்னைப் பாணிக்கிரகணஞ் செய்தற்காமென்று திருவாய்மலர்ந்தருளினர். எ—று.

இங்கு ஈங்கு என முதனீண்டது, புரிவாள் - காலவழுவமைதி. (27)

வஞ்சக முதல்வன் சொற்ற வாசகம் இறைவி கேளா
அஞ்செவி பொத்தி யாற்ற தழுங்கிமெய் பதைப்ப விம்மி
எஞ்சலின் முதியோன் போகான் ஏகுவன் யானே யென்னுப்
பஞ்சடி சேப்ப ஆண்டோர் பாங்கரிற்படர்த லுற்றாள்.

இ—ள்: இறைவி — பார்ப்பதிதேவியார், வஞ்சக முதல்வன் சொற்றவாசகம் கேளா—கபட வேடங்கொண்ட சிவபிரான் திருவாய்மலர்ந்தருளிய வார்த்தையைக் கேட்டு, அம் செவி பொத்தி—அழகிய காதுகளைக் கைகளால்மூடி, ஆற்ருது அழுங்கி—பொருது வருந்தி, மெய் பதைப்ப விம்மி—சரீரம் பதற மனம் புழுங்கி, எஞ்சலில் முதியோன் போகான்—மிகவும் வார்த்திகனுகிய இவன் போகமாட்டான், யானே ஏகுவன் என்னு—யானே போவேனென்று கூறி, பஞ்சு அடி சேப்ப — செம்பஞ் சூட்டிய திருவடிகள் சிவப்பேற, ஆண்டு ஓர் பாங்கரில் படர்தலுற்ருள்—அவ்விடத் தில் ஒரு பக்கத்திற் போயினுர் எ—று.

எஞ்சலில்முதியோன்—குறைவில்லாத முதுமையையுடையோன். ஏகாரம்—பிரிநிலை. (28)

படர்ந்தனள் போத லோடும் பனிபடு மிமையம் வைகும்
மடந்தைதன் னியற்கை நோக்கி வரம்பிலா அருண்மீ தூர
அடைந்ததொல் பனவக்கோல மகன்றுமால் விடைமேல் கொண்டு
தொடர்ந்துபல் கணங்கள் போற்றத் தோற்றினன் ருெலைவி லாதோன்.

இ—ள்: படர்ந்தனள் போதலோடும்—இவ்வாறு நடந்துசெல்ல, தொலைவு இலாதோன்—அழிவில்லாத சிவபிரான், பனி படும் இமயம் வைகும் மடந்தை தன் இயற்கை நோக்கி—பனிபொருந்திய இமயமலையில் வீற்றிருக்கின்ற பார்ப் பதி தேவியின் தவநியமத்தைப்பார்த்து, வரம்பு இலா அருள் மீது ஊர—அளவற்றகிருபை மேன்மேலுங்கிளர, அடைந்த தொல் பனவ கோலம் அகன்று—தாங்கொண்டருளிய பழையவிருத்தப் பிராமணவேடத்தைநீங்கி, மால் விடைமேல் கொண்டு—பெருமைபொருந்திய இடபவாகனத்தின் மேலி வர்ந்தருளி, பல் கணங்கள் தொடர்ந்து போற்ற—பல பூதகணங்கள் பின் ருெடர்ந்து துதிக்க, தோன்றினன்—பிரசன்னராயினர் எ—று.

படர்ந்தனள் — முற்றெச்சம். மால்விடை—விஷ்ணுவாகிய இடபமெனினுமாம். (29)

தொலைவறு பகவன் வான்மீத் தோன்றலுந் துளங்கி நாணி
மலைமகள் கண்டு பல்கால் வணங்கியஞ் சலியாற் போற்றி
அலகிலா வுணர்வால் எட்டா வாதிநின் மாயை தேறேன்
புலனிலாச் சிறியேன் நின்னை யிகழ்ந்தவா பொறுத்தி யென்ருள்.

இ—ள்: தொலைவு அறு பகவன் வான் மீ தோன்றலும்—அழிவில்லாத சிவபெருமான் ஆகாயத்திலெழுந்தருள, மலைமகள் கண்டு—பார்ப்பதிதேவி தரிசித்து, துளங்கி நாணி—நடுங்கி வெட்கமுற்று, பல் கால் வணங்கி—பல முறை நமஸ்கரித்து, அஞ்சலியால் போற்றி—அஞ்சலியோடுநின்று துதித்து, அலகு இலா உணர்வால் எட்டா ஆதி—அளவிடப்படாத பேரறிவாலும் உணர்தற்கதீதமான முதற்கடவுளே!, புலன் இலா சிறியேன்—உய்த்துணர் வில்லாத சிறியேனுகியயான், நின் மாயை தேறேன்—தேவரீரதுமாயத்தை அறிந்திலேன் (ஆதலின்), நின்னை இகழ்ந்தவா பொறுத்தி என்ருள்— தேவரீ ரைநிந்தித்தமையைப் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார் எ—று.

அஞ்சலி—கைகுவித்தல். அஞ்சலியால் என்பதில் ஆலுருபு உடனிகழ்ச்சிப் பொருட்டு. போற்றி—என்ருள் என இயையும். இகழ்ந்தவாறு என்பதில் ஈற்றுயிர்மெய்யும் உணர்வாலென்பதில் உயர்வுசிறப்பும்மையுந்தொக்கன.

நற்றவ மடந்தை கேண்மோ நம்மிடத் தன்பால் நீமுன்
சொற்றன யாவு மீண்டே துதித்தன போலக் கொண்டாம்
குற்றமுண் டாயி னன்றே பொறுப்பது கொடிய நோன்பால்
மற்றினி வருந்தல் நாளை மணஞ்செய வருது மென்ருன்.

இ—ள்: நல் தவ மடந்தை கேள்—நல்ல தவத்தினையுடைய நங்கையே! கேட்பாயாக, நம்மிடத்து அன்பால் நீ முன் சொற்றன யாவும்—எம்மிடத் துவைத்த பேரன்பினுல் நீ முன்னர்க் கூறிய வாசகங்க ளெல்லாவற்றையும், ஈண்டு துதித்தன போல கொண்டாம்—இப்பொழுது துதிசெய்ததுபோலங்கீ கரித்தோம், குற்றம் உண்டாயின் அன்றே பொறுப்பது—குற்றமிருந்தாலன்றே பொறுக்கவேண்டியது? இனி கொடிய நோன்பால் வருந்தல்—இனிக்கொடிய தவத்தைச் செய்தலால் வருந்தற்க, நாளை மணம் செய வருதும் என்ருன்— நாளைக்குத்திருமணஞ் செய்யும்பொருட்டு வருவோம் என்று திருவாய்மலர்ந் தருளினுர் எ—று.

மோ-முன்னிலையசை. ஈண்டு என்னுமிடைச்சொல் காலத்தையுணர்த்தி நின்றது. (31)

சிறந்தநின் வதுவை முற்றச் செல்லுது மென்று தொல்லோன்
மறைந்தனன் போத லோடும் மலைமக ளுள்ளந் தன்னில்
நிறைந்திடு மகிழ்ச்சி கொண்டு நித்தனை நினைந்து போற்றி
உறைந்தனள் இதனை வேந்தற் குரைத்திடச் சிலவர் போனுர்.

இ—ள்: தொல்லோன்—பழையவராகிய சிவபிரான், சிறந்த நின் வதுவை முற்ற செல்லுதும் என்று—சிறப்புப்பொருந்திய உனது விவாகம் நிறை வேறும்படி (நாளை) வருவேமென்று திருவாய்மலர்ந்தருளி, மறைந்தனன் போதலோடும் — அந்தர்த்தானமாய்ச்செல்லுதலும், மலைமகள் — பார்ப்பதி தேவியார், உள்ளம் தன்னில் நிறைந்திடும் மகிழ்ச்சி கொண்டு—மனத்தில் நிறைந்த சந்தோஷத்தைக்கொண்டு, நித்தனை நினைந்து போற்றி உறைந் தனள்—நித்தியராகிய சிவபிரானைத்தியானித்துத் துதித்துக்கொண்டிருந்தார், இதனை வேந்தற்கு உரைத்திட சிலவர் போனுர்—இந்நிழ்ச்சியை மலையரச னுக்குக்கூறுமாறு சிலதோழியர்கள் சென்ருர்கள் எ—று. (32)

அண்ணல்வந் தருளிச் செய்கை அரசனுக்கு ரைத்த லோடும்
உண்ணிக ழயர்ச்சி நீங்கி யொல்லைதன் னில்லி னேடு
நண்ணினன் உமையைக் கொண்டுநலங்கொள்தன் நகரத்துய்த்தான்
கண்ணுத லிறைவன் அங்கட் செய்தன கழற லுற்றேன்.

இ—ள்: அண்ணல் வந்து அருளிச்செய்கை அரசனுக்கு உரைத்தலோடும்— சிவபிரானெழுந்தருளிவந்து திருவருள்செய்தமையைத் (தோழியர்) மலையரச னுக்குக் கூறுதலும், உள் நிகழ் அயர்ச்சி நீங்கி—(அவன்) தன் மனத்திற் பொருந்திய வருத்தம் நீங்கப்பெற்று, ஒல்லை தன் இல்லினேடு நண்ணினன்— விரைவில் தனது மனைவியாகிய மேனையுடன் (தவச்சாலையிற்) போய், உமையை கொண்டு நலம்கொள்தன் நகரத்து உய்த்தான்—பார்ப்பதிதேவியை யழைத் துக்கொண்டு சென்று நன்மைபொருந்திய தனது மாளிகையிற் சேர்த்தான், கண்ணுதல் இறைவன் அங்கண் செய்தன கழறலுற்றேன்—(இஃதித்துணை நிற்க இனி) நெற்றிக்கண்ணையுடைய சிவபிரான் அவ்விடத்துச் செய்த செயல்களை யான் சொல்லத் தொடங்குவேன் எ—று.

செய்தன - வினையாலணையும்பெயர். அங்கணென்றது கயிலையை. இது கவிக்கூற்று. உண்ணிகழயர்ச்சியென்றது நம்மகளிதுகாறுமருந்தவமியற்றியுஞ் சிவபிரானருள் செய்திலரேயென்னுங் கவலையை. (33)

தவங்காண்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 669

# 7. மணம்பேசு படலம்

ஏழுமுனிவர்களுஞ் சிவபிரானேவற்படி சென்று திருமணம் பேசியசரித்திரத்தைக் கூறுதலினிப் பெயர்பெற்றது.

## இப்படலப் பொழிப்பு.

சிவபிரான் தேவியின்றவத்தைப் பரீக்ஷித்தபின் திருக்கைலாசமலையின்கட் சென்று ஏழுமுனிவரையும் வருவித்து 'நீவிர் இமயமலையரசனிடத்துச்சென்று பார்ப்பதியை நமக்கு மணம்பேசிவருதிர்' என்று திருவாய்மலர்ந்தருளினர். முனிவர் அவ்வாறே சென்று அவனை வணங்கித் தாம் வந்த காரணத்தையுணர்த்தினர். மலையரசன் தன்மகளை மணமியற்றிக்கொடுக்க உடன்பட்டனன். அப்பொழுது அவன்மனைவியாகிய மேனை 'தக்கனென்பான் மகட்கொடுத்துப் பின்னர் அவராற் றண்டிக்கப்பட்டானாதலின் யான் இதற்கு அஞ்சுகின்றேன்' என்றனள். முனிவர் அதுகேட்டு அவளுக்குத் தேற்றமொழிகூறி உடன்படுத்திக்கயிலைசேர்ந்து அந்நிகழ்ச்சிகளைச்சிவபிரானுக்கு விண்ணப்பஞ்செய்து விடைபெற்றுத் தம்மிருப்பிடங்களுக்குப்போயினர் என்பதாம்.

பொருடரு மலைக்கொடி புரியும் நோன்புகண்
டருடனை நல்கிய வாதி நாயகன்
தெருடரு கயிலையிற் சேர்வுற் றேழ்வகை
இருடிகள் தங்களை இதயத் துன்னினான்.

**இ—ள்:** பொருள் தரும் மலை கொடி புரியும் நோன்பு கண்டு அருள் தனை நல்கிய ஆதி நாயகன்—சராசரப்பொருள் களனைத்தையு மீன்றருளிய இமயமலையரசனது மகளாகிய பார்ப்பதிதேவிசெய்த தவத்தைப் பரீக்ஷித்தறிந்து கிருபையைச்செய்தருளிய முதற்கடவுளாகியசிவபிரான், தெருள் தரு கயிலையில் சேர்வுற்று — மனத்தெளிவையுண்டாக்குகின்ற திருக்கைலாசமலையிற்போய், ஏழ் வகை இருடிகள் தங்களை இதயத்து உன்னினான்—சப்தரிஷிகளைத் திருவுள்ளத்திற் சிந்தித்தார் எ—று.

பொருடரு என்பதை மலைக்கடையாக்கி, மணிமுதலிய திரவியங்களைத் தருகின்றமலையெனவும் பொன்மயமானமலையெனவும் பொருள்கூறினுமாம். கொடி— உவமவாகுபெயர். கொடிபோன்ற இடையினையுடையா ளென்பது பொருள். சப்தரிஷிகள் யாவரென்பதை மேற்பாயிரப்படலத்துரைத்தனம். சிவபிரானைத் தன்னிடத்துடையதும் மெய்ஞ்ஞானியர் கட்புலத்திற்குத் தோன்றுவதும் அவரருள்பெறுதற்கேற்ற புண்ணியத்தானமும் ஆதலின் 'தெருடருகயிலை' என்றார். (1)

நினைதலுங் கண்ணுதல் நிமல னேழ்பெரு
முனிவரு மன்னதை முன்னி யுள்வெரீஇப்
பனிவரு மெய்யொடு படர்ந்து வல்லையில்
அனையனை இறைஞ்சிநின் றறைதல் மேயினார்.

இ—ள்: கண்ணுதல் நிமலன் நினைதலும்—நெற்றிக்கண்ணையுடைய மலர கிதராகியசிவபிரான் நினைத்தருளலும், ஏழ் பெரு முனிவரும் அன்னதைமுன்னி உள் வெரீ—பெருமை பொருந்திய சப்தரிஷிகளும் அத்தன்மையைச் சிந்தித்து மனம்பயந்து, பனிவரும் மெய்யொடுவல்லையில் படர்ந்து—நடுங்குகின்ற தேகத் தோடும் விரைவில்வந்து, அனையனை இறைஞ்சிநின்று அறைதல்மேயினர்—அச் சிவபெருமானை நமஸ்கரித்து நின்று விண்ணப்பிக்கத்தொடங்கினர்கள் எ—று.

முனி குலத்தினருட் சிறந்தாரென்பார் 'பெருமுனிவர்' எனவும், சிவ பிரான் நம்மைத் திருவுளம் பற்றியது யாதுகாரணம் பற்றியென்று ஆலோ சித்துக்கொண்டு போயின ரென்பார் 'உள்வெரீஇப் பனிவரு மெய்யொடு படர்ந்து' எனவுங் கூறினர். (2)

பங்கயன் மான்முதற் பகரும் பண்ணவர்
உங்குன தேவலுக் குரிய ராயுற
எங்களை யுன்னினை யாங்கள் செய்தவம்
அங்கவர் தவத்தினு மதிகம் போலுமால்.

இ—ள்: பங்கயன் மால் முதல் பகரும் பண்ணவர் உங்கு உனது ஏவ லுக்கு உரியர் ஆய் உற—பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும் முதலாகச் சொல் லப்படுகின்ற தேவத்தலைவர்கள் உவ்விடத்தில் தேவரீரது பணிக்கு ஏற்றவர் களாயிருக்கவும், எங்களை உன்னினை—(புழுத்த நாயினுங் கடையேமாகிய) சிறியேங்களைத் திருவுள்ளம் பற்றினீர் (ஆதலின்), யாங்கள் செய் தவம் அவர் தவத்தினும் அதிகம்போலும்—அடியேங்கள் செய்ததவம் அத்தேவர்களியற்றி யுள்ள தவத்தினுஞ் சிறந்ததுபோலும் எ—று.

அங்கு - அசை. உற என்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. (3)

எந்தையெம் பெருமநீ யெம்மை வம்மென
முந்துறு கருணையின் முன்னிற் றாதலின்
உய்ந்தனம் அடியரே முடைய தீப்பவஞ்
சிந்தினம் இனியொரு தீதுண் டாகுமோ.

இ—ள்: எந்தை எம் பெரும—எங்கள் பரமபிதாவே! எங்கள் கடவுளே!, நீ எம்மை வம் என முந்து உறு கருணையில் முன்னிற்று ஆதலின்—தேவரீர் சிறி யேங்களை வாருங்களென்று முதன்மை பொருந்திய கிருபையோடு திருவுள்ளம் பற்றினீராதலால், அடியரேம் உய்ந்தனம்—அடியேங்கள் உய்தி பெற்றோம், உடைய தீபவம் சிந்தினம்—(அன்றியும்) செய்துள்ள கொடிய பாவங்களை யொழித்தோம், இனி ஒரு தீது உண்டாகுமோ—இனி யாதேனுமொரு தீமை நேரிடுமா? (நேரிடாதே) எ—று.

முன்னிற்று - வினைமுற்றுத்தொழிற்பெயர். வம்மினென்னும் முன்னிலையே வல்வினைமுற்று விகுதி தொக்கு வம் என நின்றது. (4)

ஒருதலை யைந்தொழி லுலப்பு றுவகை
புரிதரு பகவநம் புன்மை நீக்குவான்
கருணையொ டுன்னினை கடிதிற் செய்பணி
அருளுதி யென்றனர் ஆற்றும் நோன்பினோர்.

இ—ள்: ஒருதலை ஐ தொழில் உலப்பு உறு வகை புரிதரு பகவ — ஓர் காலத்திற்றனே சிருட்டி முதலிய பஞ்சகிருத்தியங்களையுங் குறைவு படா வண்ணஞ் செய்தருளுகின்ற கடவுளே!, நம் புன்மை நீக்குவான் கருணை யொடு உன்னினை — எங்கள் பாவத்தை நீக்கியருளும் பொருட்டுக் கிருபை யுடன் திருவுள்ளம் பற்றினீர் ஆதலின், கடிதில் செய் பணி அருளுதிர் — விரைவில் யாங்கள் செய்யத்தக்க தொன்றைக் கூறியருளிதிர், என்றனர் — என்று விண்ணப்பஞ் செய்தார்கள், ஆற்றும் நோன்பினோர் — தவத்தைச் செய் கின்ற முனிவரெழுவரும் எ—று.

உலக மெங்கணுமுள்ள சீவராசிகளியற்றும் இருவினைகளை யெல்லாஞ் சிறிதுந் தவறுதுணர்ந்து அவ்வான்மாக்களின் வினைப்பயன்கட் கேற்பப் பிரமன் திருமால் உருத்திரன் மகேசுரன் சதாசிவன் என ஐவராய்நின்று பஞ்சகிருத் தியங்களை யியற்றி ஆட்கொள்ளு மிறைவரே யென்பார் 'ஒரு தலை யைந் தொழி லுலப்புறுவகை புரிதரு பகவ' எனவும், அத்தகைய தேவரீர் நமது தீவினை தொலையுங்காலம் அணுகியது தெரிந்து அருளுதற்கே இங்ஙனழைத்தீ ரென்பார். 'நம்புன்மை நீக்குவான் கருணையொ டுன்னினை' எனவும் கூறினர். (5)

**வேறு**

அமலனம் முனிவர் மாற்றங் கேட்டலு மவரை நோக்கி
இமையமே லிறைவன் றன்பா லேகியே எமக்கிவ் வைகல்
உமைதனை வதுவை நீரா லுதவுவான் வினவி வல்லே
நமதுமுன் வம்மி னென்ன நன்றருள் புரிந்தா னன்றே.

இ—ள்: அமலன் அ முனிவர் மாற்றம் கேட்டலும் — மலரகிதராகிய சிவ பெருமான் அந்தச் சப்தரிஷிகளுடைய வார்த்தையைச் செவிசாத்தியவுடன், அவரை நோக்கி—அவர்களைப் பார்த்தருளி, இமய மேல் இறைவன் தன் பால் ஏகி — (நீவிர்) இமயமலை யரசனிடத்திற் போய், எமக்கு உமை தனை வதுவை நீரால் இ வைகல் உதவுவான் வினவி—நமக்குப் பார்ப்பதிதேவியை விவாக முறைப்படி இற்றைத் தினத்திலே தரும்படி பேசி, வல்லே நமது முன் வம்மின் என்ன—விரைவில் எமக்கு முன்னாக வாருங்களென்று, நன்று அருள் புரிந்தான்—நன்றாகத் திருவாய்மலர்ந்தார் எ—று. (6)

நாயக னருளக் கேளா நன்றென இறைஞ்சி யேகி
ஏயதொன் முனிவர் யாரும் இமையமே லிறைமுன் நண்ண
ஆயவன் மனைவி யோடு மடைந்தெதிர் கொண்டு தாழ்ந்து
நேயமொ டருச்சித் தேத்தி நின்றிது புகலு கின்றான்.

இ—ள்: நாயகன் அருள — சிவபிரான் இவ்வாறு கருணை செய்ய, ஏய தொல்முனிவர் யாரும் கேளா—பழமை பொருந்திய முனிவரெழுவரும் கேட்டு, நன்று என இறைஞ்சி இமய மேல் ஏகி—இது நல்லதென்று வணங்கி இமய மலையிற் போய், இறை முன் நண்ண—அம்மலையரசனுக்கு முன்னாக அணுக, ஆயவன்—அவன், மனைவியோடும் எதிர்கொண்டு அடைந்து தாழ்ந்து—தேவி யாகிய மேனையுடன் எதிர்கொண்டு சென்று பணிந்து, நேயமொடு அருச் சித்து ஏத்தி நின்று—அன்பினுடன் பூசித்துத் துதித்து நின்று, இது புகலு கின்றான்—இவ்வாசகத்தைக் கூறுகின்றான் எ—று.

(7)

ஏயதொல்முனிவர் = தொன்மை ஏயமுனிவர்.

படியறு நுந்தாள் ஈண்டுப் படுதலால் இமைய மேருத்
தடவரை யதனில் தூய்தாய்த் தலைமையும் பெற்ற தன்றே
நெடியவென் பவமு மின்னேநீங்கின நீவி ரெல்லாம்
அடியனேன் றன்பால் வந்த நிமித்தமென் னறையு மென்றான்.

இ—ள்: படி அறும் நும் தாள் ஈண்டு படுதலால்—(முனிவிர்காள்!) ஒப்பற்ற உங்களுடைய திருவடிகள் இங்கே பட்டதனால், இமயம் மேரு தட வரை அதனில் தூய்து ஆய்—இவ்விமயமலை மேருவென்னும்பெயரையுடைய பெரியமலையினின்றும் பரிசுத்தமுடைத்தாய், தலைமையும் பெற்றது—முதன்மையையும் பெற்றுக்கொண்டது, நெடிய என் பவமும் இன்னே நீங்கின— நெடியனவாகிய எனதுபாவங்களும் இப்பொழுதே நீங்கின, நீவிர் எல்லாம் அடியனேன் தன் பால் வந்த நிமித்தம் என்— (இவைநிற்க) நீங்களெல் லீரும் அடியேனிடத்து வந்தகாரணம்யாது?, அறையும் என்றான்—அதனைக் கூறு திரென்று பிரார்த்தித்தான் எ—று.

பன்னெடுங்காலம் இடைவிடாது தொடர்ந்து வளர்ந்த என்பான் 'நெடிய' என்றான். உம்மைகள்எச்சத்தோடுயர்வு சிறப்பு. பவம் பிறவியெனினுமாம். (8)

அங்கது வினவு மெல்லை அருந்தவ ரகில மீன்ற
மங்கையை வதுவை செய்வான் மன்னுயிர்க் குயிராய் நின்ற
சங்கரன் நினைந்துன் னோடு சாற்றுதற் கெம்மை யுய்த்தான்
இங்கிதெம் வரலா றென்ன இசைவுகொண் டிறைவன் சொல்வான்.

இ—ள்: அது வினவும் எல்லை—(மலையரசன்) அதனை வினவும்போது, அரும் தவர்—அரிய தவத்தினையுடைய முனிவர்கள் எழுவரும் (அவனைநோக்கி), மன் உயிர்க்கு உயிர் ஆய் நின்ற சங்கரன்—நிலைபெற்ற ஆன்மாக்களுக்கெல்லாம் பரமான்மாவாக நின்ற சிவபெருமான், அகிலம் ஈன்ற மங்கையை வதுவை செய்வான் நினைந்து—சகலலோகங்களையும் பெற்றருளிய தாயாகிய பார்ப்பதி தேவியைத் திருமணஞ்செய்யும்படி திருவுளம்பற்றி, உன்னோடு சாற்றுதற்கு எம்மை உய்த்தான் — உன்னுடன் பேசும்படி எங்களை ஏவினார், இங்கிது எம் வரலாறு என்ன—இதுவே எங்கள் வருகையின் காரணமென்று கூற, இறைவன் இசைவு கொண்டு சொல்வான்—மலையரசன் அதற்குச் சம்மதமுற்றுப் பின் வருமாறுகூறுவான் எ—று. (9)

துன்னிய வுயிர்கள் யாவுந் தொல்லுல கனைத்து மீன்ற
கன்னிகை யுமையா டன்னைக் கடிமண முறையின் நல்கி
என்னையு மடிமை யாக ஈகுவன் இறைவற் கென்ன
மன்னவன் அயலே நின்ற மனைவியீ துரைக்க லுற்றாள்.

இ—ள்: மன்னவன்—மலையரசன், துன்னிய உயிர்கள் யாவும் தொல் உலகு அனைத்தும் ஈன்ற கன்னிகை உமையாள் தன்னை—நெருங்கிய ஆன்மாக்க ளெவற்றையும் பழைய உலகங்க ளெவற்றையும் பெற்றருளிய கன்னிகை யாகிய பார்ப்பதியை, இறைவற்கு கடி மண முறையில் நல்கி—சிவபிரானுக் குத் திருமண முறைப்படி கொடுத்து, என்னையும் அடிமைஆக ஈகுவன் என்ன—சிறியேனையும் அடிமையாகச் சமர்ப்பிப்பேனென்று கூற, அயலே நின்ற மனைவி ஈது உரைக்கலுற்றாள்—அவனது பக்கத்தில்நின்ற மனைவியாகிய மேனை யென்பாள் இதனைச் சொல்லத் தொடங்கினாள் எ—று.

என்னையும் என்பதில் உம்மை எச்சம். எல்லாச் சீவகோடிகளையும் அவற்றிற்கு வாழ்விடமாகிய எல்லா உலகங்களையும் ஈன்றும் கன்னிப்பிராயங் கழியாதாரென்பார் 'துன்னிய வுயிர்கள்யாவுந் தொல்லுல கனைத்து மீன்ற கன்னிகை' என்றான். இதனை ''பெற்றாள் சக தண்டங்க ளனைத்தும்மவை பெற்று-முற்றாமுகிழ்முலையாள்''என்னு மகாபாரதச் செய்யுளாலும், சிவஞ்சத்திதன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்று - முவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயிரெல்லா மீன்றும் - பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னி யாகும்'' என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தாலுமுணர்க. (10)

மலரயன் புதல்வன் றன்னோர் மடந்தையை மணத்தின் நல்க
அலைபுனற் சடிலத் தண்ணல் அவன்றலை கொண்டான் என்பர்
நிலைமையங் கதனை யுன்னி நெஞ்சக மஞ்சு மெங்கள்
குலமகள் தனைய வற்குக் கொடுத்திட லெவனோ வென்றாள்.

**இ—ள்:** மலர் அயன் புதல்வன் — தாமரைமலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவரது மகனாகிய தக்கன், தன் ஓர் மடந்தையை மணத்தில் நல்க—தனது ஒருமகளைத் திருமணமுறைப்படி கொடுக்க, அலை புனல்சடிலத்து அண்ணல் அவன்தலை கொண்டான் என்பர்—அலைகின்ற கங்கை நதியையணிந்த சடைமுடியையுடைய சிவபிரான் அவனது தலையைவெட்டினாரென்று (பலரும்) கூறுவார்கள், நிலைமை அதனை உன்னி நெஞ்சகம் அஞ்சும்—அத்தன்மையைச் சிந்தித்து என்மனம் பயப்படும் (ஆதலின்), எங்கள் குலமகள் தனை அவற்கு கொடுத்திடல் எவன் என்றாள் — எங்கள் அரிய மகளாகிய பார்ப்பதியை அவர்க்கு மணஞ்செய்து கொடுப்பது எவ்வாறு என்று வினவினாள் எ—று.

குலமகள்-குலத்தைவிளக்கவந்தமகள். மடந்தை ஈண்டுப்பருவங்குறியாது நின்றது. (11)

என்றலு மவளை நோக்கி எழுமுனி வோருஞ் சொல்வார்
ஒன்றுநீ யிரங்கல் வாழி யொப்பிலா முதல்வன் செய்கை
நன்றுதேர்ந் திலையால் தக்கன் நலத்தகும் அவியை மாற்றி
அன்றுதன் இகழ்த லாலே அவன்றலை முடிவு செய்தான்.

**இ—ள்:** என்றலும்—என்று கூறுதலும், அவளை நோக்கி எழு முனிவோரும் சொல்வார்—அந்த மேனையைப் பார்த்துச் சப்தரிஷிகளுஞ் சொல்வார்கள், ஒன்றும் நீ இரங்கல்—நீ சிறிதும் வருந்தற்க, ஒப்பு இலா முதல்வன் செய்கை நன்று தேர்ந்திலை—ஒப்பற்ற சிவபிரானது செயலை நன்றாக உணர்ந்திலாய், தக்கன் நலத்தகும் அவியை மாற்றி அன்று தன் இகழ்தலால்—தக்கனவன் நன்மை பொருந்திய அவிப்பாகத்தைக் கொடாதுநீக்கி அந்நாளிற்றம்மை நிந்தித்தலால், அவன் தலை முடிவுசெய்தான்—(அச்சிவபிரான்) அவனது தலையை வெட்டினார் எ—று.

வாழி-முன்னிலையசை. ஒன்று அற்பமென்னும்பொருளில் வந்தது. (12)

அடைந்துளோர்க் கருளுமாறும் அல்லவர் தமக்குத் தண்டம்
படுந்துணை தெரிந்து கூட்டும் பான்மையும் பரமன் செய்கை
மடந்தையித் தன்மை யாரும் மனப்படுத் துணர்வ ரீதே
திடம்பட வுணர்தி வேறு சிந்தனை செய்யே லென்றார்.

**இ—ள்:** அடைந்துளோர்க்கு அருளுமாறும்—தம்மைச் சார்ந்த சிட்டர்க்கு அருள்செய்யுந் தன்மையும், அல்லவர் தமக்கு படும் துணை தெரிந்து தண்டம் கூட்டும் பான்மையும் — சாராத துட்டர்க்கு அனுபவிக்க வேண்டிய கால வெல்லையைத் தெரிந்து (அதுகாறும்) தண்டனையைச் சேர்விக்குந் தன்மையும், பரமன் செய்கை — சிவபிரானது செயலாகும், மடந்தை — பெண்ணே!, இ தன்மை யாரும் மனப்படுத்து உணர்வர்—இத்தன்மையை எல்லோரும் மனத்தில் ஆராய்ந்து தெளிவார்கள், ஈதே திடம் பட உணர்தி—இதனையே உறுதியாக உணரக்கடவாய், வேறு சிந்தனை செய்யேல் — வேறொன்றையுஞ் சிந்தியாதே, என்றார்—என்று கூறினார்கள் (சப்தரிஷிகள்) எ—று.

ஏ - தேற்றம். சிவபிரான் சிட்டர்க்கு அருளையுந் துட்டர்க்குத் தண்டனையையுஞ் செய்தலை ''அறமலி யிதஞ்செய் வோருக் கனுக்கிரகத்தைச் செய்வன் - மறமலி யகிதஞ் செய்யி னிக்கிர கத்தை வைப்பன்'' என்னுஞ் சிவஞானசித்திச் செய்யுளானு முணாக. (13)

## வேறு

இயலுறு முனிவோர்கள் இவைமொழி தலுமோரா
மயலறு வரையண்ணல் வாய்மையி தெனலோடும்
அயலுறு மனைமேனை யஞ்சினள் அமலன்றன்
செயலிது வுணராதே செப்பினன் இவையென்றே.

**இ—ள்:** இயல் உறு முனிவோர்கள் இவை மொழிதலும்—தகுதி பொருந்திய ஏழு முனிவர்களும் இவ்வாசகத்தைக்கூற, மயல் அறு வரை அண்ணல் ஓரா — அறியாமை நீங்கிய இமயமலையரசன் கேட்டுணர்ந்து, இது வாய்மையெனலோடும்—இவர்கள் கூறியது சத்தியமேயென்று கூறுதலும், அயல்உறும் மனைமேனை — அவனருகில்நின்ற மனைவியாகிய மேனையானவள், அமலன் தன் செயல் இது உணராது இவை செப்பினன் என்று—மலரகிதராகிய சிவபிரானது செயல் இப்படிப்பட்டதென்பதை அறியாது இவற்றைக் கூறினேனென்று நினைந்து, அஞ்சினள்—பயந்தாள் எ—று. (14)

உண்ணலி வொடுமேனை உவர்மல ரடிதாழுஉப்
பெண்ணறி வெவையேனும் பேதைமை வழியன்றோ
அண்ணறன் அருணீர்மை யணுவது மறிகில்லேன்
புண்ணிய முனிவீரென் புன்மொழி பொறுமென்றாள்.

**இ—ள்:** மேனை—மேனாதேவி, உள் நலிவொடு—மன வருத்தத்தோடு, உவர் மலர் அடி தாழுஉ—அம் முனிவர்களது தாமரைமலர்போன்ற பாதங்களை வணங்கி, புண்ணிய முனிவீர்—புண்ணியத்தையுடைய முனிவிர்காள்!, பெண்ணறிவு எவையேனும் பேதைமை வழி அன்றோ—பெண்ணறிவு எவையாயினும் மடமையின்பாற்பட்டனவல்லவா?, அண்ணல் தன் அருள் நீர்மை அணுவதும் அறிகில்லேன்—யான் சிவபிரானது காருண்ணியத்தைச் சிறிதாயினும் அறியுமாற்றலில்லேன் ஆதலின், என் புன் மொழி பொறும் என்றாள்—எனது எளிய வசனத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தாள் எ—று.

''பேதைமையென்பது மாதர்க்கணிகலம்'' என ஔவையாரும் ''நுண்ணறிவுடையராகி நூலொடு பழகினும் பெண்ணறி வென்பதெல்லாம் பேதைமைத்து'' எனத் திருவிளையாடற் புராணமுங் கூறுதலாலும் பெண்ணறிவு பேதைமையின் பாற்பட்டமையையுணர்க. (15)

பணிவுட னிவைமேனை பகர்தலும் அவடன்பாற்
கணிதமி லருள்செய்யக் காவல னதுகாணு
இணைதவிர் முனிவீர்காள் இவளுரை கருதன்மின்
மணமியல் இறையோனை வரமொழி குதிரென்ருன்.

இ—ள்: மேனை பணிவுடன் இவைபகர்தலும்—மேனுதேவி வணக்கத்துடன் இவ்வார்த்தைகளைக்கூற, அவள் தன் பால் கணிதம் இல் அருள் செய்ய—(முனிவர்கள்) அவளிடத்து அளவிறந்த கிருபையைப்புரிய, காவலன் அது காணு—மலையரசன் அத் தன்மையைப்பார்த்து, இணை தவிர் முனிவீர்காள்—ஒப்பற்ற முனிவர்களே!, இவள் உரை கருதன்மின்—நீவிர் இவளது வார்த்தையைச் சிந்தியாதீர்கள், மணம் இயல் இறையோனை வர மொழிகுதிர் என்ருன்—திருமணத்தைவிரும்பிய சிவபிரானை இங்கே வரும்படி விண்ணப்பஞ் செய்யுங்களென்று கூறினுன் எ—று. (16)

பணிபடு வரையண்ணல் பகர்மொழி யதுகேளா
மனமிக மகிழ்வாகி மற்றவர் தமையங்கண்
இனிமையொ டுறநல்கி யெழுவரும் அவணீங்கித்
தனைநிகர் பிறிதில்லாத் தண்கயி லையில்வந்தார்.

இ—ள்: பணி படு வரை அண்ணல் பகர் மொழி அது எழுவரும் கேளா—இமயமலையரசன் கூறிய அந்தவார்த்தையை ஏழு முனிவர்களுங்கேட்டு, மனம் மிக மகிழ்வு ஆகி—மனத்தில் மிகச் சந்தோஷம் பொருந்தி, அவர்தமை அங்கண் இனிமையொடு உற நல்கி—அவர்களை அங்கே மங்கலத்தோடும் வாழ்ந்திருக்கும்படி ஆசீர்வதித்து, அவண் நீங்கி—அவ்விடத்தினின்றும் நீங்கி, தனை நிகர் பிறிது இல்லா தண் கயிலையில் வந்தார்—தன்னையொத்தது வேறில்லாத (சிறந்த) குளிர்ந்த திருக்கைலாசமலையில் வந்தார்கள் எ—று. (17)

வந்தெழு முனிவோரும் மாநக ரிடைசாரா
நந்திகண் முறையுய்ப்ப நாதனை நணுகுற்றே
அந்தமில் அளியோடு மவனடி தொழுதேத்தி
எந்தையை இதுகேளென் றியாவது முரைசெய்தார்.

இ—ள், எழு முனிவோரும் வந்து—சப்தரிஷிகளும் வந்து, மா நகர் இடை சாரா—பெரிய திருக்கோயிலையணுகி, நந்திகள் முறை உய்ப்ப நாதனை நணுகுற்று—திருநந்திதேவர் முறைப்படி உள்ளேவிடச் சிவபிரானையணுகி, அந்தம் இல் அளியோடும் அவன் அடி தொழுது ஏத்தி—அளவற்ற அன்புடன் அப்பெருமானது பாதங்களை வணங்கித் துதித்து, எந்தையை இது கேள் என்று யாவதும் உரை செய்தார்—எம்பரமபிதாவே இதனைக் கேட்டருளுதி ரென்று எல்லா நிகழ்ச்சிகளையும் விண்ணப்பஞ் செய்தார்கள் எ—று.

எந்தையை யென்பதில் ஐகாரம் சாரியை,சிவபிரானது அனுமதி பெற்றுள் விடுப்ப வென்பார் 'முறையுய்ப்ப' என்ருர். (18)

வரைமிசை யரசாள்வோன் மணவினை யிசைவெல்லாம்
உரைசெய வருள்செய்தே யும்பரின் முனிகாள்நீர்
புரிதரு செயலாற்றப் போகுதி ரெனலோடும்
அரனடி தொழுதேத்தி அவர்பதம் அணுகுற்ருர்.

இ—ள்: வரைமிசை அரசு ஆள்வோன் மணவினை இசைவு எல்லாம் உரைசெய—இமயமலையரசனது திருமணச் சம்மதம் முழுவதையும் (ஏழுமுனிவர்களும்) விண்ணப்பஞ்செய்ய, அருள் செய்து—(சிவபிரான்) கிருபைசெய்து, உம்பரில் முனிகாள்—தேவரிஷிகளே!, நீர் புரிதரு செயல் ஆற்ற போகுதிர் என லோடும்—நீவிர் செய்யுந்தொழில்களைச் செய்யும்பொருட்டுப் போங்களென்று திருவாய் மலர்ந்தருளுதலும், அவர்—அம்முனிவர்கள், அரன் அடி தொழுது ஏத்தி—அச்சிவபிரானது பாதங்களை வணங்கித்துதித்து, பதம் அணுகுற்றார்—தங்கள் பதவிகளை அடைந்தார்கள் எ—று. (19)

## வேறு

எங்குறை தீர்ந்ததென் றெழுத வத்தருந்
தங்கடம் பதத்திடைத் தணப்பின் றெய்தினார்
இங்கிது நின்றிட இமைய மேலிறை
அங்கினிச் செய்தவா றறியக் கூறுவாம்.

இ—ள்: எழு தவத்தரும்—ஏழுமுனிவர்களும், எம் குறை தீர்ந்தது என்று—எங்கள்குறை நிறைவேறிற்றென்றுகூறி, தங்கள் தம் பதத்திடை தணப்பு இன்று எய்தினார்—தங்கள் பதவிகளில் தவறாது போய்ச்சேர்ந்தார்கள், இது நின்றிட—இதுநிற்க, இனி—மேல், அங்கு இமய மேல் இறை செய்தவாறு அறிய கூறுவாம்—அவ்விடத்தே இமயமலையரசன் செய்தனவற்றை விளங்கக் கூறுவோம் எ—று.

குறையென்றது தமக்குவிதித்ததொண்டை. இன்றியென்னும் வினையெச்சத்தினிகரம் உகரமாகி இன்று எனநின்றது. (20

மணம்பேசுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 689.

# 8. வரைபுனைபடலம்



சிவபிரானது திருமணத்தின் பொருட்டு இமயமலையை அலங்கரித்தமையைக் கூறுதலாலிப்பெயர்பெற்றது.

## இப்படலப்பொழிப்பு.

இமயமலையரசன் தேவத்தச்சனை வருவித்து 'என் மகளாகிய பார்ப்பதியைச் சிவபிரானுக்குத் திருமணமியற்றுமாறு நிச்சயித்திருக்கின்றேனாதலின், அதற்கு வேண்டிய அலங்காரங்களைச் செய்குதி. என்று கூறினன், உடனே அவன் அம்மலையின்கண் பல கோபுரங்களையும் மண்டபங்களையும் மன்றுகளையும் மலர்ப் பந்தர்களையும் வீதிகளையும் சாலைகளையும் அரமனையினருகே பதினாயிரம் யோசனையளவினதாக ஓர் கோயிலையும், அக்கோயிலினடுவே ஓர் விவாகமண்டபத்தையும், அம்மண்டபத்தில் தம்பதிகளிருத்தற்கேற்ற ஓர் சிங்காசனத்தையும், ஏனையோரிருத்தற்கேற்ற பல ஆசனங்களையும், வேதிகைகளையும், வேண்டற் பாலன பிறவற்றையும் அணிபெறச்செய்தனன். மலையரசன் அவற்றையெல்லாங்கண்டு மிகச்சந்தோஷங்கொண்டு விஷ்ணு பிரமா முதலிய தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பிறர்க்கும் தூதரையேவி விவாக சோபனத்தை அறிவித்தனன். உடனே துர்க்கை, யாமளை, காளிகள், சப்தநதிகள், இலக்குமி, சரசுவதி, இந்திராணி, முனிபத்தினிகள் முதலாயினோர் அங்குவந்து பார்பதி தேவியை மணவணி செய்தனர். மேரு முதலிய மலையினங்களும் சமுத்திரங்களும் நாகராசர்களும் திசையானைகளும் வந்தன. அப்பொழுது மலையரசன் சுற்றத்தாரோடுந் திருக்கைலாசமலையிற்போய்ச் சிவபிரானைத் தரிசித்து 'பங்குனியுத்தரமாகிய இச்சுபதினத்தில் இப்போது நிகழுஞ் சுப முகூர்த்தத்திலே திருமணத்திற்கெழுந்தருளிவர வேண்டும்' என்று பிரார்த்தித்து அவர் சம்மதித்தபின் தன்னிருக்கை நோக்கி வந்தனன் என்பதாம்.

கண்ணுதல் உமைதவங் கண்டு நின்னையாம்
மண்ணவர் புகழ்வகை மணத்து மென்றதும்
விண்ணெழு முனிவரின் வினவி விட்டதும்
எண்ணினன் மகிழ்ந்தனன் இமையத் தண்ணலே.

**இ—ள்:** கண்ணுதல்—நெற்றிக் கண்ணையுடைய சிவபிரான், உமை தவம் கண்டு—உமாதேவியின் தவத்தைச் சோதித்து, மண்ணவர் புகழ்வகை யாம் நின்னை மணத்தும் என்றதும்—பூவுலகத்திலுள்ளார் புகழும்படி யாம் உன்னை மணஞ் செய்வோமென்று அருள்செய்தமையையும், விண் எழு முனிவரின் வினவி விட்டதும் எண்ணினன்—விண்ணுலகத்தில் வசிக்கின்ற சப்தரிஷிகளை மணம்பேசுமாறனுப்பியதையுஞ் சிந்தித்து, மகிழ்ந்தனன்—மனச் சந்தோஷங் கொண்டான், இமயத்து அண்ணல்—இமயமலையரசன் எ—று.

முனிவரின் - உருபுமயக்கம், வினவி செயவெனச்சத் திரிபு. (1)

கணிதமி லுயிரெலாங் கலந்து மற்றவை
உணர்வுதொ றிருந்தவற் கொருதன் கன்னியை
மணமுறை புரிதிறம் மதித்துத் தேவர்தம்
பணிபுரி தச்சனைப் பரிவொ டுன்னினான்.

இ—ள்: கணிதம் இல் உயிர் எலாம் கலந்து—அளவற்ற ஆன்மாக்களெவற்றினும் வியாபித்து, அவை உணர்வுதொறு இருந்தவற்கு—அவற்றின் அறிவுகடோறும் வியாபித்திருந்த சிவபிரானுக்கு, ஒருதன் கன்னியை முறை மணம்புரி திறம் மதித்து - ஒப்பற்ற தனது மகளை முறைப்படி திருமணஞ் செய்யச் சிந்தித்து, தேவர்தம் பணி புரி தச்சனை பரிவொடு உன்னினான் — தேவர்களுக்கு வேண்டிய ஏவல்களைச் செய்யும் விச்சுவகன்மாவை அன்புடன் சிந்தித்தான் எ—று. (2)

உன்னிய போதினி லும்பர் கம்மியன்
மன்னவன் எதிருற வந்து கைதொழு
தென்னைகொல் கருதினை யாதுசெய்பணி
அன்னதை மொழிகென அறைதல் மேயினான்.

இ—ள்: உன்னிய போதினில்—அவ்வாறு சிந்தித்தபொழுது, உம்பர் கம்மியன்—தேவத்தச்சன், மன்னவன் எதிருற வந்து — மலையரசனுக்கு முன்னாக வந்து, கை தொழுது—கைகுவித்து, என்னை கருதினை—யாது காரணமபற்றி (என்னைச்) சிந்தித்தீர், செய் பணி யாது—யான் செய்ய வேண்டிய ஏவல் யாது?, அன்னதை மொழிக என—அதனைச் சொல்லுக என்று வினவ, அறைதல் மேயினான்—(மலையரசன்) அதற்கு விடை கூறுவானாயினான் எ—று.

மொழிக என்னும் வியங்கோளீறு தொக்கது. (3)

என்னையாள் கண்ணுத லிறைவற் கியான்பெறும்
அன்னையாம் உமைதனை யளிப்பன் இவ்வரைக்
கன்னிமா நகரெலாங் கவின்சி றந்திடப்
பொன்னினா டாமெனப் புனைதி யாலென்றான்.

இ—ள்; என்னை ஆள் கண்ணுதல் இறைவற்கு — எங்களை அடிமைகொள்ளும் நெற்றிக் கண்ணையுடைய சிவபிரானுக்கு, யான் பெறும் அன்னை ஆம் உமைதனை அளிப்பன்—யான் பெற்ற சர்வலோக மாதாவாகிய பார்ப்பதி தேவியைத் திருமணஞ்செய்து கொடுக்க நிச்சயித்திருக்கின்றேன் (ஆதலின்), இவரை கன்னி மா நகர் எலாம்—இந்த மலையின்கணுள்ள புதிய பெரிய நகரமுழுமையும், கவின் சிறந்திட—முன்னையிலும் அழகுமிக, பொன்னின் நாடு ஆம் என புனைதி என்றான்—சுவர்க்கலோகம்போல அலங்கரிப்பாயென்றுகூறினான் எ—று.

அருந்தவத்தாற் பெற்ற மகளென்பான் 'யான்பெறு மன்னையா முமை' என்றான். (4)

அப்பொழு தத்தினில் அடுக்கல் மேலையோன்
செப்பிய வாசகஞ் செவிக்கொண் டுள்ளமேன்
மெய்ப்பெரு மகிழ்ச்சியை மேவி யந்நகர்
ஒப்பனை செய்திட வுன்னி னனரோ.

இ—ள்: அ பொழுதத்தினில்—அந்தச் சமயத்தில், அடுக்கல் மேலையோன் செப்பிய வாசகம் செவிக்கொண்டு — மலையரசன் கூறிய வார்த்தையைக் கேட்டு, உள்ள மேல் மெய் பெரு மகிழ்ச்சியை மேவி—மனத்தில் மெய்ம்மை

யான பேருவகையைக்கொண்டு, அ நகர் ஒப்பனை செய்திட உன்னினன் — அந்நகரத்தை அலங்கரிக்கும்படி (தேவத்தச்சன்) சிந்தித்தான் எ—று.

சிவபிரான் றிருமணத்தைக் கேட்டலால் மகிழ்ந்தனனென்க. ஒப்பனை - அலங்காரம். (5)

நீடுறு தருநிரை நிமிருங் கால்களாய்ப்
பாடுறு கழிகளாய்ப் பரம்பும் பல்பணை
மூடுற அதன்மிசை முகில்க ளெங்கணும்
பீடுறு பந்தர்போற் பிறங்கும் வெற்பின்மேல்.

இ—ள்; நீடுறு தரு நிரை நிமிரும் கால்கள் ஆய் — நெடிய மரநிரைகள் உயர்ந்த கால்களாகவும், பரம்பும் பல் பணை பாடு உறு கழிகள் ஆய்— பரந்த பல கிளைகள் குறுக்கே பொருந்திய கழிகளாகவும் (இருக்க), அதன் மிசை முகில்கள் மூடுற—அதன்மேல் மேகங்கள் (மூடிக்கொள்ள), எங்கணும் பீடு உறு பந்தர்போல் பிறங்கும் வெற்பின்மேல்—எல்லாவிடங்களும் பெருமை பொருந்தி பந்தரிட்டதுபோல விளங்குகின்ற அம்மலையின்மேல் எ—று. மூடு கருவியாக,[கிடுகு முதலியன ஆக]

எங்கணும் மூடுற என இயைத்துப்பொருள் கூறினுமாம். இது முதலிரு செய்யுட்கள் குளகம். (6)

மலையுறழ் கோபுர மன்றஞ் சூளிகை
நிலைகெழு செய்யதேர் நிழற்று மண்டபம்
பலவுடன் நறுமலர்ப் பந்தர் அன்னவை
தொலைவறும் ஆவணந் தோறும் நல்கினன்.

இ—ள்: மலை உறழ் கோபுரம்—மலையைப் போன்ற கோபுரங்களையும், மன்றம்—சபைகளையும், சூளிகை—சூளிகைகளையும், நிலை கெழு செய்ய தேர்—நிலையாயமைக்கப்பட்ட செப்பமாகிய தேர்களையும், நிழற்றும் மண்டபம் பல வுடன்—நிழலைச் செய்கின்ற பல மண்டபங்களையும், நறு மலர் பந்தர்—மணங் கமழுகின்ற பூம்பந்தர்களையும், அன்னவை—அவைபோன்ற பிறவற்றையும், தொலைவு அறும் ஆவணம் தோறும் நல்கினன்—முடிவில்லாத வீதிகடோறும் அமைத்தான் எ—று.

சூளிகை சிகரமுடையனவாகச் செய்யப்பட்ட மாளிகை. உடன் ஈண்டு எண்ணுப் பொருட்டு. விசாலத்தாலும் உயரத்தாலும் மிக்கனவாதலின் 'மலையுறழ் கோபுரம் என்றார். (7)

நீக்கமில் கதலிகை நெடிய கேதனம்
மேக்குயர் காவண மிசைத்தந் துள்ளிடை
ஆக்குறு கம்பல மணிசெய் தாயிடைத்
தூக்கினன் கவரியுஞ் சுடர்கொள் மாலையும்.

இ—ள்: நீக்கம் இல் கதலிகை—இடைவெளியின்றி நெருங்கிய சிறுகொடி களையும், நெடியகேதனம்—பெருங்கொடிகளையும், மேக்கு உயர் காவண மிசை தந்து—மேலாக உயர்ந்த பந்தரின்மீதமைத்து, உள் இடை ஆக்குறு கம்பலம் அணிசெய்து—அப்பந்தரினுள்ளே இணைக்கப்பட்ட மேற்கட்டியை அழகுறக் கட்டி, கவரியும் சுடர்கொள் மாலையும் ஆயிடை தூக்கினன்—சாமரங்களை யும் ஒளிபொருந்திய மாலைகளையும் அந்த மேற்கட்டியில் (இடையிடையே) நாற்றினன் எ—று.

சுடர்கொண்மாலை - மணிமுதலியவற்றாலான. மாலை. (8)

குரகத முகம்புரை குலைகள் தூங்கிய
மரகத வொளிபடு வாழை பூகநல்
நிரைகெழு தன்மையின் நிறுவிப் பூந்துணர்
விரைகெழு தோரணம் விசும்பின் நாற்றினன்.

இ—ள்: குரகத முகம் புரை குலைகள் தூங்கிய மரகத ஒளி படு வாழை—குதிரையின் முகம்போன்ற (வடிவமைந்த) குலைகள் தூங்கப்பெற்ற மரகத ரத்தினப் பிரகாசத்தையுடைய வாழைகளையும், பூகம்—கமுகுகளையும், நல் நிரை கெழு தன்மையில் நிறுவி—நல்ல நிரை பொருந்திய தன்மையாக நிறுத்தி, பூ துணர் விரை கெழு தோரணம் விசும்பில் நாற்றினன் — பூந் தாதுக்களின் நறுமணங் கமழப்பெற்ற தோரணங்களை மேலே தூக்கினன் எ—று.

குரகதம் - குளம்பினாற் செல்வது. வாழைக்குலைகள் வளைந்து சுற்றளவால் அடிவிரிந்து நுனியொடுங்கித் தோன்றலின் குதிரைமுகத்தை நிகர்க்குமென்க. சுகந்தமலராலாகிய தோரணமென்பார். 'பூந்துணர் விரைகெழு தோரணம்' என்றார். விசும்பு - ஈண்டு மேலிடம். (9)

ஒண்ணிதி இயக்கர்கோ னுறையு ளானதும்
விண்ணவர் தொழுதிட வீற்றி ருந்திடும்
அண்ணறன் கோயிலு மாக வீதிகள்
எண்ணருந் திருவுற எழில்ப டுத்தினன்.

இ—ள்; ஒள் நிதி இயக்கர்கோன் உறையுள் ஆனதும்—சிறந்த செல்வத்தையுடைய குபேரனது மாளிகையும், விண்ணவர் தொழுதிட வீற்றிருந் திடும் அண்ணல் தன் கோயிலும் ஆக—தேவர்கள் கைதொழும்படி வீற்றிருக் கின்ற இந்திரனது மாளிகையும்போல, எண் அரும் திரு உற—அளவிடுதற் கரிய வளங்கள் பொருந்த, வீதிகள் எழில் படுத்தினன்—வீதிகளை அலங்கரித் தான் எ—று. (10)

ஒருபுறத் தினைஇனி யுமைக்கு நல்குவோன்
இருபுறத் தினும்வரு மெண்ணில் தேவருந்
தருபுறப் பொருளெலாஞ் சாரச் சாலைகள்
திரிபுறத் திரிபுறச் செய்த மைத்தனன்.

இ—ள்: இனி உமைக்கு ஒரு புறத்தினை நல்குவோன் இரு புறத்தினும் வரும் எண் இல் தேவரும்—இனி உமாதேவியாருக்குத் தமது ஒரு பாகத்தைக் கொடுத்தருளுஞ் சிவபிரானது இரு புடைகளிலுஞ் செறிந்து வருகின்ற அள விறந்த தேவர்கள் யாவரும், தரு புறபொருள் எலாம் சார—கொணர்கின்ற பொருள் யாபும் அடங்குமாறு, திரிபுற திரிபுற சாலைகள் செய்து அமைத் தனன்—வெவ்வேறாகச் சாலைகளை வகுத்து அமைத்தான் எ—று.

உம்மைகள் - முற்று. புறப்பொருள் - வேறிடத்தினின்று வருவோர் திரு மணத்துக்காகக் கொடுக்கும் பொருள்கள். மணவாளரென்பது தோன்ற 'ஒருபுறத்தினையினி யுமைக்கு நல்குவோன்' எனவும், ஒவ்வோரினப்பொருளை ஒவ்வோர் சாலையிலமைத்து வைத்தற் கேற்றவாறென்பார் 'திரிபுறத்திரிபுற' எனவும் கூறினர். (11)

ஆயிரப் பத்தென அறையும் யோசனை
போயதோ ரளவையிற் புரிசை யொன்றினைக்
கோயிலி னொருபுடை குறிற்றிக் கோபுரம்
வாயில்கள் நான்கினு மரபின் நல்கினன்.

இ—ள்: ஆயிரப்பத்து என அறையும் யோசனை போயது ஓர் அளவையில்—பதினாயிரமென்று சொல்லப்படுகின்ற யோசனையமைந்த அளவாக, கோயிலின் ஒரு புடை புரிசை ஒன்றினை குயிற்றி—அரமனையினொரு பக்கத்தில் ஒருமதிலைச் செய்து, வாயில்கள் நான்கினும்—(அதனாற் றிசைகளினுமுள்ள) நான்கு வாயில்களினும், மரபின்—சிற்பநூன்முறைப்படி, கோபுரம் நல்கினான்—கோபுரங்களை யமைத்தான் எ—று.

ஆயிரப்பத்து - பதினாயிரம். அளவெனப் பொதுமையிற் கூறுதலின் நீட்சி அகற்சி இரண்டுங் கொள்க. (12)

அங்கதன் நடுவுற அகன்ப ரப்பினின்
மங்கல மணஞ்செய வதுவைச் சாலையைச்
செங்கன கத்தினால் திகழச் செய்தனன்
கங்கையஞ் சடையினன் கயிலைக் கோயில்போல்.

இ—ள்: அதன் நடு உற—அம்மதிலெல்லையினடுவிற் பொருந்த, அகன் பரப்பினில்—மிகுந்த விசாலமமைய, மங்கல மணம் செய—சுபகரமாகிய திருமணச்சடங்கை யியற்றுமாறு, செம்கனகத்தினால் திகழ—செம்பொன்னாற் பிரகாசிக்கும்படி, கங்கையம் சடையினன் கயிலை கோயில்போல்—கங்கை நதியை யணிந்த சடைமுடியையுடைய சிவபிரானது திருக்கைலாசகிரியின்கணுள்ள கோயிலைப்போல, வதுவைச்சாலையை செய்தனன்—விவாக மண்டபத்தை இயற்றினன் எ—று.

திருமணத்தைத் தரிசிக்க வந்தாரெல்லாம் அமைதற்கேற்றவாறு இடம்பெற வென்பார். 'அகன் பரப்பினில்' எனவும், நால்வகைப் பொன்களுட் சிறந்த சாம்பூநதமென்பார் 'செங்கனகம்' எனவும் கூறினர். நடுவுற பரப்பினில் மணஞ்செய திகழ போல் என்பன தனித்தனி செய்தனன் என்னு முற்றோடியைந்தன. (13)

சாலையின் நிலத்திடைச் சந்த மான்மதம்
மேலுறு நாவிநீர் விரவிப் பூசியே
கோலமென் மலர்கடூஉய்க் குறுகும் வானவர்க்
கேலுறு பலதவி சிருப்பச் செய்தனன்.

இ—ள்: சாலையின் நிலத்திடை — அத்திருமணச்சாலையின் நிலத்தின் கண்ணே, சந்தம்—சந்தனமும், மான்மதம்—கஸ்தூரியும், மேல் உறு நாவி—மேன்மை பொருந்திய புனுகும் ஆகிய இவற்றை, நீர் விரவி பூசி — பனி நீருடன் கலந்து மெழுகி, கோல மெல் மலர்கள் தூஉய்—அழகிய மெல்லிய புஷ்பங்களைத் தூவி, குறுகும் வானவர்க்கு ஏலுறு பல தவிசு இருப்ப செய்தனன் —வருந்தேவர்களுக்கு உயர்வு தாழ்வு முதலியவற்றிற் கேற்ற பலவிதமாகிய ஆசனங்களை இருக்கும்படி இயற்றினன் எ—று

மலர் தூவியது மங்கலத்திற்கும் மணம் வீசுதற்குமாமென்க. (14)

வானவில் மணிமுகில் வனச மாமலர்
நீனிறம் விரிதரு நெய்தல் சண்பகம்
ஏனைய நிறங்களால் எண்ணில் வேதிகை
ஆனவை புரிந்தனன் அயனும் நாணவே.

இ—ள்: வானவில் — இந்திர வில்லும், மணி முகில் — கரிய மேகமும் மாவனச மலர்—சிறந்த தாமரைப் பூவும், நீல் நிறம் விரிதரு நெய்தல்—கரு நிறம் மிக்க நெய்தற்பூவும், சண்பகம்—சண்பகப்பூவும், ஏனைய நிறங்களால்—பிறவுமாகிய இவற்றினிறங்களால், எண் இல் வேதிகை ஆனவை—அளவற்ற திண்ணைகளை, அயனும் நாண புரிந்தனன்—(படைத்தற்றொழிற் கிறைவராகிய) பிரமதேவரும் வெட்கமுறும்படி செய்தான் எ—று.

நீல் - கடைக்குறை. நெய்தல் சண்பகம் ஆகுபெயர்கள். உம்மை - உயர்வு சிறம்பு. (15)

கண்ணடி பூந்தொடை கவரி பஃறுகின்
மண்ணிய செழுமணி மாலை தூங்குறப்
பண்ணுறு வித்தனன் பரமன் பால்வரும்
விண்ணவர் விழியெலாம் விருந்து கொள்ளவே.

இ—ள்: கண்ணடி — கண்ணுடிகளையும், பூந்தொடை — பூமாலைகளையும் கவரி—சாமரங்களையும், பல் துகில் — பல வகையான வஸ்திரக் குஞ்சங்களையும், மண்ணிய செழு மணி மாலை—சாணை தீர்ந்த செழிய இரத்தினங்களாலாகிய மாலைகளையும், பரமன் பால் வரும் விண்ணவர் விழி எலாம் விருந்து கொள்ள—சிவபிரானது பக்கத்தில் வருகின்ற தேவர்களது கண்களெல்லாம் விருந்து கொள்ளும்படி, தூங்குற பண்ணுறுவித்தனன்—தூக்கினுன் எ—று.

கண்ணுடி என்பது தொடை நோக்கிக் கண்ணடியெனக் குறுகிற்று, முன்னெருபோதுங் கண்டறியாதனவும் பெருவனப்பினவுமாதலின் 'விழியெலாம் விருந்து கொள்ள' என்ருர். (16)

தேவரு முனிவருந் திருவ ஞர்களும்
பாவையின் உயிருறு பண்பி ஞக்கியே
மேவரு கவரிதார் வீணை யேந்தியே
ஏவலர் தொழின்முறை இயற்ற நல்கினுன்.

இ—ள்: தேவரும் — தேவர்களையும், முனிவரும் — முனிவர்களையும்- திரு அனுர்களும் — இலக்குமியைப்போன்ற பேரழகினையுடைய பெண்களையும், பாவையின் உயிர் உறு பண்பின் ஆக்கி — பிரதிமைகளால் உயிரோடிருக்குந் தன்மைபோ லுண்டாக்கி, மேவரு கவரி தார் வீணை ஏந்தி—தமது கையிற் பொருந்திய சாமரங்களையும் மாலைகளையும் வீணைகளையுந் தாங்கி, ஏவலர் தொழின்முறை இயற்ற நல்கினுன்—ஏவலாளர் செய்யுந் தொழில்களை முறையே செய்யுமாறு அமைத்தான் எ—று.

கவரிகளை வீசவும் மாலைகளை நாற்றவும் வீணைகளை யிசைக்கவுஞ் செய்தானென்றபடி. (17)

பெண்ணிய லாரெனப் பிறங்கும் பாவைகள்
தண்ணுமை முதலிய தாக்கித் தண்டியல்
பண்ணெடு களிநடம் பயிலு வித்தனன்
விண்ணவர் அரம்பையர் யாரும் வெஃகவே.

இ—ள்: பெண் இயலார் என பிறங்கும் பாவைகள்—பெண்களைப் போல விளங்குகின்ற பிரதிமைகள், தண்ணுமை முதலிய தாக்கி—மத்தள முதலிய வைகளை யடித்து, தண்டு இயல் பண்ணொடு—யாழிலுண்டாகின்ற இசையுடன் விண்ணவர் அரம்பையர் யாரும் வெஃக—தேவரும் அரம்பையரும் பிறரனை வரும் விரும்பும்படி, களி நடம் பயிலுவித்தனன்—களிப்பைத் தருகின்ற நட னத்தை யியற்றுமாறமைத்தான் எ—று.

பெண்ணியலார்—பெண்டன்மையை யுடையார், (18)

நெருங்கிய கிளிமயில் நேமி தண்புருப்
பொருங்கரி அரிபரி பொருநர் வானுளோர்
ஒருங்குடன் மணிகளா லோவி யப்பட
அருங்கடி யிருக்கையுள் அமர நல்கினன்.

இ—ள்: நெருங்கிய கிளி—செறிந்திருக்கின்ற கிளிகளையும், மயில்—மயில் களையும், நேமி — சக்கரவாகங்களையும், தண் புரு — குளிர்ந்த புருக்களையும், பொரும் கரி—(ஒன்றுடனொன்று) போரியற்றுகின்ற யானைகளையும், அரி—சிங் கங்களையும், பரி—குதிரைகளையும், பொருநர்—வீரர்களையும், வானுளோர்— தேவர்களையும், ஒருங்கு—தொகுதியாக, உடன்—உடனே, மணிகளால்—இரத் தினங்களால், ஓவியப்பட—சித்திரப்பட, அரும் கடி இருக்கையுள் அமர — அரிய விவாக மண்டபத்தி லமைந்திருக்கும்படி, நல்கினன் — அமைத்தான் எ—று.

ஒன்றுடனொன்று தொடர்புறவென்பார் 'ஒருங்கு' என்றார். ஒருங்கு உடன்மணிகளால் ஓவியப்பட அமர என்பன - தனித்தனி நல்கினனென்னும் முற்றோடியைந்தன. பொருநர் - கூத்தரெனினுமாம். (19)

குறைதவிர் நிலைமையாற் குயிற்றுஞ் சாலையுள்
நிறைதரு மிந்திர நீலத் தாலொரு
திறலரி யணையினைச் சிறப்பிற் செய்தனன்
இறைவனு மிறைவியும் இனிது மேவவே,

இ—ள்: குறை தவிர் நிலைமையால் குயிற்றும் சாலையுள் — (வேண்டிய வனப்புக்களிற் சிறிதுங்) குறைவில்லாதவாறமைத்த அத்திருமண மண்டபத் தில், இறைவனும் இறைவியும் இனிது மேவ — சிவபிரானும் பார்ப்பதிதேவி யும் நன்கு வீற்றிருக்கும்படி, சிறப்பில்—சிறப்பினுடன், ஒரு திறல் அரி அணை யினை—வலிய ஒரு சிங்காசனத்தை, நிறைதரும் இந்திர நீலத்தால்—நிறைந்த இந்திரநீலரத்தினங்களால், செய்தனன்—செய்தான் எ—று.

திறல் அரிக்கடை. இதுகாறுங் கூறிப்போந்தவற்றுடன் விரிவஞ்சிவிடுத்த பிறவிடைக்கணங்களு மொருங்கமைய வென்பார் 'குறைதவிர் நிலைமையால்' எனவும், பிறமணிகளுட் சிற்சில வேண்டு மிடங்களில் விராவவென்பது போதர 'நிறைதரு மிந்திர நீலத்தால்' எனவும், அவ்வவைக்கணுள்ள ஆசனங்க ளெவற்றினும் உயர்ச்சியும் அழகும் பொலிவும் மிகவென்பார் 'சிறப்பில்' எனவும் கூறினர். (20)

குண்டமும் வேதிகை வகையுங் கோதில்சீர்
மண்டல மானதும் வகுத்து வேள்விசெய்
பண்டம தானதும் படுத்திப் பண்ணவர்
எண்டொகை மங்கலம் இருத்தி னைரோ.

இ—ள்: குண்டமும்—ஓமகுண்டத்தையும், வேதிகை வகையும்—வேதிகையின் வகுப்புக்களையும், கோது இல் சீர் மண்டலம் ஆனதும் வகுத்து—குற்றமற்ற சிறப்புப் பொருந்திய மண்டலத்தையும் இயற்றி, வேள்வி செய்பண்டமது ஆனதும் படுத்தி—திருமணச்சடங்கு செய்தற்குரிய பொருள்களையும் வருவித்து, பண்ணவர் எண் தொகை மங்கலம் இருத்தினன்—தேவாட்ட மங்கலங்களையும் (இருத்தற்கேற்றவிடங்களில்) அமைத்தான் எ—று.

சிறிதும் பெரிதுமாய்ப் பல வகைப்படுதலின் 'வேதிகை வகை' என்றார். மண்டலம் என்றது நவக்கிரக மண்டல முதலியவற்றை. வேள்விசெய் பண்டம்: நெய் சமித்து தருப்பை முதலாயின. தேவாட்டமங்கலங்கள்: கண்ணடி, இடபம், தீபம், ஸ்ரீவற்சம், இரட்டைச்சாமரம், சங்கு, சுவத்திகம், பூரணகும்பம் என்பன. 'இதனை ''கண்ணடிவிடை கிளர்சுடர் சீவற்ச—நீள்விற் சாமரம் வலம்புரி சுவத்திக நிறைகுடமென வெட்டு-வாள்விட் டோங்கு மங்கலம்'' என்னுந் திருவிளையாடற்புராணச் செய்யுளானுமுணர்க. அட்டமங்கலம் தேவர்க்கும் அரசர்க்கும் பேதமுடையனவாதலின் இவை யாவையென்னுமைய நீக்குதற்கு 'பண்ணவரெண்டொகை மங்கலம்' என்றார். பண்டமதானது-தொகுதியொருமை. (21)

கண்டெறு கதிர்மதிக் காந்தங் காஞ்சனம்
ஒண்டுகிர் நித்தில மொளிறு வச்சிரம்
முண்டக வெயின்மணி முதல்வெ றுக்கையால்
மண்டப மெண்ணில மருங்கின் நல்கினன்.

இ—ள்: கண் தெறு கதிர் மதி காந்தம்—கண்களை ஒளிமழுக்குகின்ற சூரிய காந்தமும் சந்திரகாந்தமும், காஞ்சனம்—பொன்னும், ஒள் துகிர்—ஒளி பொருந்திய பவளமும், நித்திலம்—முத்தும், ஒளிறு வச்சிரம்—பிரகாசிக்கின்ற வைரரத்தினமும், முண்டக வெயில் மணி முதல் வெறுக்கையால்—பதுமராகரத்தினமும் முதலாகிய பொருள்களால், எண் இல மண்டபம் மருங்கில் நல்கினன்—அளவற்ற மண்டபங்களைப் (அத்திருமணச்சாலையின்) பக்கங்களிலமைத்தான் எ—று.

காந்தமென்பது கதிர் என்பதனேடுமொட்டிப் பொருள் கொள்ளப்பட்டது. வெம்மைமிக்க பேரொளியையுடைமையின் 'கண்டெறுகதிர்' என்றார்.

காவிகண் மலர்தரு கயங்க ளோர்பல
ஓவறு முற்பல வோடை யோர்பல
பூவியல் வாரிசப் பொய்கை யோர்பல
வாவிக ளோர்பல மருங்கில் ஆக்கினன்.

இ—ள்: காவிகள் மலர்தரு கயங்கள் ஓர் பல—கருங்குவளைக மலரப்பெற்ற தடாகங்கள் பலவற்றையும், ஓ அறும் உற்பல ஓடை ஓர் பல—(எக்காலத்திலும்) தவறாது மலர்கின்ற செங்கழுநீர்மலர் நிறைந்த தடாகங்கள் பலவற்றையும், வாரிச பூ இயல் பொய்கை ஓர் பல—தாமரை மலர் நிறைந்த தடாகங்கள் பலவற்றையும், வாவிகள் ஓர் பல—பல வாவிகளையும், மருங்கில் ஆக்கினன்—(அம்மண்டபங்களின்) பக்கத்தில் அமைத்தான் எ—று. (23)

பாசடை மரகதம் பளிங்கு வச்சிரங்
காசறு நன்மணி கனக மன்னதால்
தேசுறு நளிமலர் செறிந்த பூந்தடம்
வாசவன் கண்டுள மருளத் தந்தனன்.

இ—ள்: மரகதம் பாசடை—மரகதமணியாற் பசிய இலைகளும், பளிங்கு வச்சிரம் காசு அறு நல் மணி கனகம் அன்னதால் தேசு உறு நளி மலர்—படிகம் வைரம் குற்றமற்ற மாணிக்கம் பொன் ஆகியவற்றால் ஒளிபொருந்திய குளிர்ந்த பூக்களும், செறிந்த-நெருங்கப்பெற்ற, பூ தடம்—மலர்த்தடாகங்களை, வாசவன் கண்டு உளம் மருள தந்தனன்—இந்திரனுங்கண்டு மனமருளும்படி அமைத்தான் எ—று.

வாசவனுமென்பதிற் சிறப்பும்மைதொக்கது. குற்றம் பிறநிறச் சார்பு முதலியன. மதர்ப்புமிக்க இலையென்பார் 'பாசடை' எனவும், உடன்மலர்ந்தாலன்ன ஒளியுந்தட்பமும் வாய்ந்தனவென்பார் 'தேசுறுநளிமலர்' எனவும், அவை மணி மலராயினும் மதுமலரேயென மருளுறுவித்தலின் 'பூந்தடம்' எனவும், அவற்றை யுடைய மணித்தடங்களைப் பன்னாட் பயின்ற பண்பினனாகிய இந்திரனும் கண்ணுற்றக்கால் நீர்த்தடமேயென்று துணியநிற்றலின் 'வாசவன்கண்டுமருள' எனவும் கூறினர். இதனால் இத்தடாகங்கள் பொன்னகரிலுள்ள மலர்த் தடாகங்களினும் மாட்சிமையுடையனவென்பது போதருமெனக. (24)

கற்பகஞ் சந்தகில் கதலி பூகமே
பொற்புறு வருக்கைமாப் புன்னை யாதிய
பற்பல மணிகளாற் படுத்தி அன்னவை
நற்பயன் வழங்கவும் நல்கி னனரோ.

இ—ள்: கற்பகம்—கற்பகமும், சந்து—சந்தனமும், அகில்—அகிலும், கதலி—வாழையும், பூகம்—கமுகும், பொற்பு உறு வருக்கை—அழகுபொருந்திய பலாவும், மா—மாவும், புன்னை ஆகிய—புன்னையும் முதலாகிய மரங்களைப் பற்பல மணிகளால் படுத்தி—பலபல இரத்தினவகைகளாலியற்றி, அன்னவை நல் பயன் வழங்கவும் நல்கினன்—அவைகள் நல்ல பிரயோசனங்களைக் கொடுக்கவுஞ் செய்தான் எ—று.

உம்மை உயர்வுசிறப்பு. பயன்வழங்குதலாவது மலர்தல் காய்த்தல் பழுத்தல் முதலியன. (25)

இன்னவா றளப்பில இமைய வர்க்கெலாம்
முன்னுறு கம்மியன் முன்னிச் செய்தலும்
பொன்னியல் இமகிரிப் புரத்து மேவிய
மன்னவன் கண்டவை மகிழ்ச்சி எய்தினன்.

இ—ள்: இமையவர்க்கு எலாம் முன் உறு கம்மியன்—தேவரனைவர்க்கும் முற்படுகின்ற விச்சுவகன்மா, முன்னி—கருதி, இன்னவாறு அளப்பு இல செய்தலும்—இவ்வாறு பலவற்றையும் அமைத்தலும், பொன் இயல் இம கிரி புரத்து மேவிய மன்னவன்—பொன்னாலாகிய இமயமலையிலிலுள்ள (ஓஷதிப்பிரத்தமென்னும்) நகரத்திலிருந்த மலையரசன், அவை கண்டு—அவற்றைப்பார்த்து, மகிழ்ச்சி எய்தினன்—சந்தோஷங்கொண்டான் எ—று.

இமகிரி புரம் என்பன வடசொற்களாயினும் தமிழிலக்கணவிதிப்படி வல்லெழுத்துமிக்குப்புணர்ந்தன. தேவருள் யாவர் நினைப்பினும் உடனே அவர் முற்றோன்றி வேண்டியபணிகளைச் செய்துமுடிப்பவனென்பார் 'இமையவர்க்கெலா முன்னுறுகம்மியன்' எனவும், கைத்தொழிலின்றிச் சிந்தித்தமாத்திரையானே யென்பார் 'முன்னி' எனவும், முன்னரும் பெருவனப்புடைத்தென்பது தோன்ற அடைகொடுத்து 'பொன்னியலிமகிரிப்புரம்' எனவும் கூறினர். (26)

சீதரன் அயன்முதற் றேவர் மாத்தொகை
மாதவ முனிவரர் மடந்தை மாரொடு
காதலின் உமைமணங் காண வந்திடத்
தூதரை யெங்கணுந் தூண்டி னனரோ.

இ—ள்: சீதரன் அயன் முதல் தேவர் மா தொகை—விஷ்ணுமூர்த்தியும் பிரமாவு முதலாகிய தேவர் கூட்டத்தினரும், மா தவ முனிவரர்—சிறந்த தவத்தையுடைய முனி கணத்தினரும், மடந்தை மாரொடு—தங்கள் தங்கள் பத்தினிகளுடன், காதலின் உமை மணம் காண வந்திட—ஆவலோடும் உமாதேவியாரது திருமணத்தைத் தரிசிக்கவரும்பொருட்டு, எங்கணும் தூதரை தூண்டினன்—எவ்விடத்தும் தூதுவரையனுப்பியறிவித்தான் (மலையரசன்) எ—று.

தொகையென்பது முனிவர்க்குங் கூட்டியுரைக்கப்பட்டது. பிற்செய்யுளில் யாவருமென்பதுமிவ்வாறே. சீதரன்-இலக்குமியை மார்பிற்றரித்தவன். (27)

ஒற்றர்தம் முரைதெரிந் தும்பர் யாவருங்
குற்றமில் முனிவருங் குன்ற வில்லினல்
பற்றலர் புரமடு பரமற் போற்றியே
மற்றவன் றன்னொடு வருது மென்றனர்.

இ—ள்: உம்பர் யாவரும்—தேவரனைவரும், குற்றம் இல் முனிவரும்—காம முதலிய குற்றங்களில்லாத முனைவர்களனைவரும், ஒற்றர் தம் உரை தெரிந்து—தூதுவர் கூறிய வார்த்தையைக்கேட்டு, குன்ற வில்லினல் பற்றலர் புரம் அடு பரமன் போற்றி அவன்றன்னொடு வருதும் என்றனர்—மேருமலையாகிய வில்லினற் பகையரசரது முப்புரங்களையுமெரித்த சிவபிரானைத் துதித்து அவருடன் கூட வருவோமென்று கூறினர்கள் எ—று. (28)

வெற்றிகொள் வயப்புலி மிசையு யர்த்திடுங்
கொற்றவை யாமளை குழீஇய காளிகள்
சுற்றுறும் எழுநதி இமையத் தொல்கிரி
உற்றனர் தொழுதனர் உமைமுன் நண்ணினர்.

இ—ள்: வெற்றி கொள் வயப்புலி மிசை உயர்த்திடும் கொற்றவை—வெற்றியையுடைய சிங்கவாகனத்தின் மேலேறிச் செல்லுகின்ற துர்க்கையும், யாமளை—யாமளையும், குழீஇய காளிகள்—கூட்டமாகிய காளிகளும், சுற்றுறும் எழு நதி—சூழ்ந்துள்ள சப்தநதிகளும், இமய தொல் கிரி உற்றனர்—இமயமாகிய பழைய மலையில் வந்து, தொழுதனர் உமை முன் நண்ணினர்—கைகுவித்துக்கொண்டு பார்ப்பதியார்க்குமுன்னே சென்றார்கள் எ—று.

வயப்புலி-சிங்கம். எழுநதிகளாவன: கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை காவேரி, சிந்து, கோதாவரி என்பன. சிலநூல்கள் சிறிது பேதமாகவுங் கூறுகின்றன. (29)

செந்திரு நாமகள் சீர்பெ றுஞ்சசி
பந்தமில் தாபத பன்னி யாயுளார்
அந்தமில் அணங்கினர் யாரு மவ்வரை
வந்தனர் அவரவர் மகிழ்நர் ஏவலால்.

இ—ள்: செம் திரு—செந்நிறத்தையுடைய இலக்குமியும், நாமகள்—சரசுவதியும், சீர் பெறும் சசி—சிறப்புப் பொருந்திய இந்திராணியும், பந்தம் இல் தாபத பன்னி ஆய் உளார்—பற்றையொழித்த முனிவர்களது பத்தினிகளாயுள்ளவர்களும், அந்தம்இல் அணங்கினர் யாரும்—அளவிறந்த தேவப்பெண்களும் ஆகிய எல்லோரும், அவர் அவர் மகிழ்நர் ஏவலால் அ வரை வந்தனர்—தங்கள் தங்கள் கணவரது ஏவலின்படி அந்த இமயமலையில் வந்தார்கள் எ—று. (30)

பங்கய மிசைவரு பாவை யேமுதல்
நங்கையர் யாவரும் நற்ற வத்தினுல்
அங்கநொந் துறைதரும் அம்மை தாடொழா
மங்கல வதுவையின் வனப்புச் செய்தனர்.

இ—ள்: பங்கய மிசை வரு பாவையே முதல் நங்கையர் யாவரும்—செந்தாமரை மலரின்மேல் வீற்றிருக்கின்ற இலக்குமியே முதலாகிய மாதர்களனைவரும், நல் தவத்தினுல் அங்கம் நொந்து உறைதரும் அம்மை தாள் தொழா—நல்ல தவத்தைச் செய்தலினுற் சரீரமெலிந்திருக்கின்ற பார்ப்பதியாரின் திருவடிகளை வணங்கி, மங்கல வதுவையின் வனப்பு செய்தனர்—சுபகரமாகிய திருமணத்திற் கேற்ற அலங்காரத்தைச் செய்தார்கள் எ—று.

பாவை ஆகுபெயர். அழகிற் சிறந்தாளாதலின் இலக்குமியை முன்வைத்துத் தேற்றேகாரம்புணர்த்தி 'பங்கயமிசைவரு பாவையே முதனங்கையர் யாவரும்' எனவும், உணவொறுத்தலாதிய நியமந்தவருத தவமாதலின் 'நற்றவம்' எனவும், தம்மின் மேதக்கார்க்கணியியற்றுமித் தாழ்ந்து செய்வதே நலமாதலின் அங்ஙனஞ் செய்தனரென்பார் 'தாடொழா-வனப்புச் செய்தனர்' எனவும் கூறினுர். (31)

நெறிதரு தவத்துரு நீக்கிக் காமருக்
குறையுள தாகிய உமைதன் மெய்யினைக்
குறைதவிர் நிலைமையிற் கோலஞ் செய்தனர்
இறைவனை வழிபடும் இயல்பி னுரென.

இ—ள்: நெறி தரு தவத்து உரு நீக்கி—ஒழுக்கத்தையுடைய தபோவேடத்தையகற்றி, காமருக்கு உறையுளது ஆகிய உமை தன் மெய்யினை—அழகுக்கிருப்பிடமாகிய பார்ப்பதிதேவியாரது திருமேனியை, இறைவனை வழிபடும் இயல்பினுர் என—சிவபிரானைப் பூசிக்கின்ற இயற்கையினையுடையோர்போல, குறை தவிர் நிலைமையில் கோலம் செய்தனர்—குறைவில்லாவண்ணம் அலங்கரித்தார்கள் (அப்பெண்கள்) எ—று.

அது பகுதிப் பொருள்விகுதி. நீக்கிக் கோலஞ்செய்தனர் என இயையும். உணவொறுத்தலும் அணிகளை விரும்பாமையும் முதலாக வேண்டப்படும் ஒழுக்கங்களமைந்த தவமென்பார் 'நெறி தரு தவம்' எனவும், அத்தவ நிலையாலாய கூந்தற்சிக்காதியவற்றை நீக்கியென்பார் 'தவத்துருநீக்கி' எனவும், மேனிவாடி அணி முதலியன தவிர்ந்திருப்பினும் அழகிற் சிறிதுங் குறைவுபடாமையின் 'காமருக் குறையுளதாகிய மெய்' எனவும், அம்மேனிக்கு இயற்கையழகேயமையுமாகவும்

மணமுறைக்காகப் பின்னருமழகு செய்தனராதலின் 'காமருக்குறையுளதாகியவுமை தன் மெய்யினை-கோலஞ்செய்தனர்' எனவும், அணி முதலியவற்றானும் அவற்றை யணியும் வகையானுஞ் சிறிதுங் குறைவாராவண்ணமென்பார் 'குறைதவிர் நிலைமையில்' எனவும், சிவபூசை செய்வோர் சிவலிங்கப்பெருமானுக்கு முன்னர்ச்சாத்திய ஆடை முதலியவற்றைக் கழித்து விதிப்படியபிடேகமியற்றித் திருவொற்றுடை சாத்திப் புதுவஸ்திரந் தரித்து மேலும் வேண்டிய அணிகளையணிந்து அருச்சித்தல் போலத் தேவமாதர்களும் பார்ப்பதியாரது தவக்கோலத்தை நீக்கி மங்கலாபிடேகமியற்றிக் கூந்தலையொற்றிப் புத்தாடையுடுத்தி அணிகளையணிந்து முடிவிற் பணிந்தனராதலின் 'இறைவனை வழிபடுமியல்பினுரென' எனவும் கூறினர்.

மேதகு பொலஞ்சுடர் மேரு மந்தரம்
ஆதிய வாகிய அலகில் சுற்றமும்
ஓதருங் கடல்களும் உரக வேந்தரும்
மாதிர யானையும் பிறவும் வந்தவே.

இ—ள்: மேதகு பொலம் சுடர் மேரு மந்திரம் ஆதிய ஆகிய அலகு இல் சுற்றமும்—உயர்ச்சி பொருந்திய பொன்னொளியினையுடைய மேருமலையும் மந்தர மலையும் முதலியனவாகிய அளவிறந்த இனங்களும், ஓத அரும் கடல்களும்—சொல்லுதற்கரிய சமுத்திரங்களும், உரக வேந்தரும்—சர்ப்பராசர்களும், மாதிர யானையும்—திக்குயானைகளும், பிறவும் வந்த—ஏனையவைகளும் (திருமணக்காட்சியின் பொருட்டு அவ்விமய மலையில்) வந்தன எ—று.

மலைகளுட் சிறந்ததாதலின் 'மேதகுபொலஞ்சுடர்மேரு' எனவும், பெருங் கடல்களென்பார் 'ஓதருங்கடல்கள்' எனவும் கூறினர். உரகவேந்தரென்றது வாசுகி, அனந்தன், தக்ஷன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன், என்பவர்களை. பிற என்றது ஆதிகூர்ம முதலியவற்றை. மலைமுதலியன தத்தமக்குரிய தெய்வவடிவத்துடன் வந்தனவென்க. (33)

வேறு

ஈங்கிது காலை தன்னில் இமகிரி புரக்கு மன்னன்
பாங்குறு தமர்க ளோடும் பரிவொடுஞ் சென்று வெள்ளி
ஓங்கலில் நந்தி யுய்ப்ப உயிர்க்குயி ரான அண்ணல்
பூங்கழல் வணங்கி நின்றாங் கினையன புகல லுற்றான்.

இ—ள்: இது காலை தன்னில்—இச் சமயத்தில், இம கிரி புரக்கும் மன்னன்—இமயமலையரசன், பரிவொடும்—அன்புடன், பாங்கு உறு தமர்களோடும் வெள்ளி ஓங்கலில் சென்று—உரிமையான சுற்றத்தாரோடுந் திருக்கைலாச மலையிற்போய், நந்தி உய்ப்ப—திருநந்திதேவர் உள்ளேவிட, உயிர்க்கு உயிர் ஆன அண்ணல் பூ கழல் வணங்கி நின்று—ஆன்மாக்களுக்குப் பரமான்மாவாய் நிற்கின்ற சிவபிரானது தாமரைமலர்போலுந் திருவடிகளை நமஸ்கரித்து எழுந்து நின்று, இனையன புகலலுற்றான்—இவ்வாசகங்களை விண்ணப்பஞ் செய்யத் தொடங்கினான் எ—று.

சென்று வணங்கி என இயையும். மேருமுதலிய சிறந்த சுற்றத்தினரென்பார் 'பாங்குறுதமர்' என்றார். இதற்குப் பக்கத்தில் வந்துகூடிய சுற்றத்தினரெனப் பொருள் கூறினுமாம். (34)

ஆதியி னுலக மெல்லா மளித்திடு மன்னை தன்னைக்
காதலின் வதுவை செய்யக் கருதினை கணித நூலோர்
ஓதுபங் குனியின் திங்கள் உத்தரம் இன்றே யாகும்
ஈதுநன் முகூர்த்தம் எந்தாய் இமயமேல் வருதி யென்றான்.

இ—ள்: எந்தாய்—எம்பரமபிதாவே!, ஆதியின் உலகம் எல்லாம் அளித்திடும் அன்னை தன்னை காதலின் வதுவைசெய்ய கருதினை—முற்காலத்தில் எல்லா வுலகங்களையு மீன்றருளிய மாதாவாகிய பார்ப்பதியாரை விருப்பத்துடன் திருமணஞ் செய்யுமாறு திருவுள்ளம்பற்றினீர், கணித நூலோர் ஓது பங்குனியின் திங்கள் உத்தரம் இன்றே ஆகும்—சோதிட சாஸ்திரவிற்பன்னர் கூறிய பங்குனியுத்தரம் இற்றைத்தினமேயாம், ஈது நல் முகூர்த்தம்—இது சுபகூமுர்த்தம் (ஆதலின்), இமயமேல் வருதி என்றான்—இமயமலையின்மேல் எழுந்தருளிவருக என்று விண்ணப்பஞ் செய்தான் (மலையரசன்) எ—று.

இது ஈது என முதனீண்டது. மகளும் மருகனுமென்றெண்ணுது இறைவனுமிறைவியுமென்றே யெண்ணுதலின் சிவபிரானையும் தேவியையும் முறையே 'எந்தாய்' எனவும் 'அன்னை' எனவும், விருப்பு வெறுப்பற்றதேவரீர் இதனை விரும்பியதோர் திருவிளையாடலாமென்பான் 'காதலின் வதுவைசெய்யக் கருதினை' எனவும் மணம்பேசவந்த முனிவர்மாட்டு வினவியறிந்த சுபதினமென்பான் 'கணித நூலோரோது பங்குனியின் றிங்களுத்தரம்' எனவும், அத்தகைய இச் சுபதினத்திலும் இன்னே நிகழும் இலக்கினமே ஏழாமிடத் தூய்மை முதலிய குணநிறைந்ததென்பான் 'ஈதுநன்முகூர்த்தம்' எனவும், இச்சுபலக்கினங் கழியுமுன் எழுந்தருளிவருக என்பான் 'இமயமேல்வருதி' எனவும் கூறினுன். (35)

அல்லுறழ் கண்டத் தெந்தை யரசனை நோக்கி யின்னே
எல்லையில் கணங்கள் சூழ இமயமேல் வருதும் முன்னஞ்
செல்லுதி யென்ற லோடுந் திருவடி வணங்கிப் போற்றி
வல்லையின் மீண்டு போய்த்தன் வளநகர் இருக்கை புக்கான்.

இ—ள்: அல் உறழ் கண்டத்து எந்தை...நஞ்சார்ந்த கண்டத்தையுடைய எம் பரமபிதாவாகிய சிவபிரான், அரசனை நோக்கி—இமயமலையரசனைப்பார்த்தருளி, எல்லை இல் கணங்கள் சூழ இன்னே இமயமேல் வருதும்—அளவிறந்த கணத்தவர்கள்சூழ இப்பொழுதே இமயமலையின்மேல் யாம் வருவோம், முன்னம் செல்லுதி என்றலோடும்—நீ முந்திப்போவாயாக என்று திருவாய்மலர்ந்தருளியவுடன், திருவடி வணங்கி போற்றி—(அம்மலையரசன் அவரது) அழகிய பாதங்களை வணங்கித்துதித்து, வல்லையில் மீண்டு போய்—விரைவிற்றிரும்பிச் சென்று, தன் வள நகர் இருக்கை புக்கான்—தனது வளப்பம்பொருந்திய நகரத்திலுள்ள மாளிகையையடைந்தான் எ—று.

அல் ஆகுபெயர். அல்லுறழ்கண்டம்-இருள்போலுங் கரிய கண்டமெனினுமாம். நீ கூறிய முகூர்த்தங்கழியுமுன்னென்பார் 'இன்னே' எனவும், பணவெழுச்சியமையவென்பார் 'எல்லையில் கணங்கள்சூழ' எனவும், வரவெதிர்கொள்ளுதற்கும் பிறவற்றுக்குமாக முன் செல்லவேண்டியது அவசியமாதலின் 'முன்செல்லுதி' எனவும், அக் குறிப்பையுணர்ந்து வல்விரைந்து சென்றுஞதலின் 'வல்லையின் மீண்டுபோய்' எனவும் கூறினுர். (36)

வரைபுனைபடல முற்றிற்று.

ஆக விருத்தம் 725

# 9. கணங்கள் செல்படலம்



கணத்தவர்களனைவரும் கயிலையில் வருதலைக் கூறுதலினிப்பெயர்பெற்றது

## இப்படலப்பொழிப்பு

சிவபிரான் உருத்திரர்களையும் தேவர்களையும் பிறரையும் அழைக்கும்படி திருநந்தி தேவர்க்குப்பணிக்க, அவர் அனைவரையும் வரும்படி சிந்தித்தனர். உடனே அனைவரும் தங்கள் தங்கள் பரிசனங்களுடன் அங்கு வந்தனர். அப்பொழுது பிரமதேவர் மணக்கோலத்திற்கேற்ற கிரீடமுதலிய பல அணிகளைப் படைத்துச் சிவபிரானது திருமுன்னிலையில் வைத்து 'இவற்றைப்புனைந்தருளவேண்டும்' என்று பிரார்த்தித்தனர். சிவபிரான் அவற்றைத்திருக்கரத்தாற்றீண்டி அணிந்ததாகப் பாவித்து அருள்செய்து வேண்டிய மணவணிகள் யாவும் தம் மேனியிலமையுமாறு திருவுளம் பற்றினர். உடனே அவ்வாறமைந்தன. அதன்பின் திருமணத்திற்கெழுந்தருளினர் என்பதாம்.

அந்த வேலையிற் கயிலையில் எம்பிரா னருளால்
நந்தி தேவரை விளித்துநம் மணச்செயல் நாட
முந்து சீருடை யுருத்திர கணங்கள்மான் முதலோர்
இந்தி ராதியர் யாரையுந் தருதியென் றிசைத்தான்.

இ—ள்: அந்த வேலையில்—அச் சமயத்தில், கயிலையில்—திருக்கைலாசமலையில், எம்பிரான்—எமது கடவுளாகிய சிவபெருமான் அருளால், நந்திதேவரை விளித்து—கிருபையோடுந் திருநந்திதேவரையழைத்தருளி, நம் மணச் செயல் நாட—எமது திருமணச்செயலைக்காணுமாறு, முந்து சீர் உடை உருத்திரகணங்கள்—முதன்மை பொருந்திய சிறப்பினையுடைய உருத்திரகணத்தவர்களையும், மால் முதலோர்—திருமால் முதலிய தேவத்தலைவர்களையும், இந்திராதியர் யாரையும் தருதி என்று இசைத்தான்—இந்திரன் முதலியவர்களையும் முனிவர் முதலிய பிறரையும் அழைப்பாயென்று கட்டளையிட்டருளினர் எ—று,

வேலையில் கயிலையில் என்பன விளித்து என்பதனோடியைந்தன. அங்குவந்தாருட் சிறந்தாராதலின் 'முந்துசீருடையுருத்திரகணங்கள்' என்றார். (1)

இன்ன லின்பமின் றாகிய பரமனீ துரைப்ப
நன்ன யப்புட னிசைந்துபின் நந்தியெம் பெருமான்
அன்னர் யாவரும் மணப்பொருட் டுற்றிட அகத்துள்
உன்னல் செய்தனன் அவரெலா மவ்வகை யுணர்ந்தார்.

இ—ள்: இன்னல் இன்பம் இன்று ஆகிய பரமன் ஈது உரைப்ப—துக்கமுஞ் சுகமுமாகிய இரண்டுமில்லாத சிவபிரான் இவ்வாசகத்தைத் திருவாய்மலர்ந்தருள, நந்தியம் பெருமான்—கேட்ட திருநந்திதேவர், நல் நயப்புடன் இசைந்து—நல்ல விருப்பத்துடன் சம்மதித்து, பின்—பின்னர், அன்னர் யாவரும் மணம் பொருட்டு உற்றிட அகத்துள் உன்னல் செய்தனன்—அனைவருந் திருமணத்திற்கு வரும்படி தம் மனத்திற் சிந்தித்தார். அவர் எலாம் அ வகை உணர்ந்தார்—அவர்கள் யாவரும் அத்தன்மையை (திருநந்திதேவர் சிந்தித்ததை) அறிந்தார்கள் எ—று.

இன்று என்னும் வினைமுற்றுப்பெயர் இன்மை என்னும் பொருள்பட நின்றது. இன்னலின்பமின்றாகியபரமன் என்றதனால் நிர்விகாரியென்பது பெற்றும். அப்பெருமானது திருமணத்தைத் தரிசிக்க அனைவரும் ஆவலுற்றனராதலின் 'நன்னயப்புடனிசைந்து' என்றார்.

உலக முய்ந்திட வெம்பிரான் மணம்புரி யுண்மை
புலன தாதலும் அவனருண் முறையினைப் போற்றி
மலியும் விம்மிதம் பத்திமை பெருமிதம் மகிழ்ச்சி
பலவும் உந்திடக் கயிலையை முன்னியே படர்வார்.

இ—ள்: எம் பிரான்—எங்கள் கடவுளாகிய சிவபிரான், உலகம் உய்ந்திட மணம் புரி உண்மை புலனது ஆதலும் — உலகத்தாருய்யும் பொருட்டுத் திருமணஞ் செய்கின்ற உண்மையானது புலப்படுதலும், அவன் அருள் முறையினை போற்றி—அச்சிவபிரானது திருவருட்டிறத்தைத் துதித்து, மலியும் விம்மிதம் பத்திமை பெருமிதம் மகிழ்ச்சி பலவும் உந்திட—நிறைந்த ஆச்சரியம் அன்பு பெருமை உவகை ஆகிய இவையெல்லாம் முன்றள்ள, கயிலையை முன்னி படர்வார்—திருக்கைலாச மலையைக் குறித்துப் போவாராயினர் எ—று.

உலகம் ஆகுபெயர். பத்திமை என்பதில் மை பகுதிப்பொருள் விகுதி. இகல் பற்றிரண்டு மில்லாதவராகிய சிவபிரான் மணம்புரியத் திருவுளம் பற்றியது. ஆன்மாக்களெல்லாம் இன்ப நுகரும்பொருட்டேயாதலின் 'உலகமுய்ந்திட வெம்பிரான் மணம்புரியுண்மை' என்றார். முன்னொருகாலுங் காணாத அற்புதத் திருக்கோலத்தை யின்று காண்பேமே யெனக் கருதியவழி விம்மிதமும், அதனை நாயேங்கட்குக் காட்டுமாறு திருவுளம்பற்றினரேயெனக் கருதியவழிப் பத்தியும், அக்காட்சியை நாங்காணும்பேறு பெற்றேமே யெனக் கருதியவழிப் பெருமிதமும் மகிழ்ச்சியும் உளவாயினவென்க. (3)

பாலத் தீப்பொழி விழியுடைப் பஞ்சவத் திரனே
மூலத் தீப்புரை விடைப்பெருங் கேதுவே முதலாஞ்
சூலத் தீக்கரத் தாயிர கோடியோர் சூழக்
காலத் தீப்பெயர் உருத்திரன் வந்தனன் கடிதில்.

இ—ள், பால தீ பொழி விழி உடை பஞ்சவத்திரனே — நெற்றியில் அக்கினிப் பொறியைச் சிந்துகின்ற கண்ணையுடைய பஞ்சானனரும், மூலத்தீ புரை பெரும் விடைக்கேது ஏ முதல் ஆம்—வடவாமுகாக்கினியை நிகர்த்த பெரிய இடபகேதுவும் முதலாகிய, சூலதீ கரத்து ஆயிரகோடியோர் சூழ—சூலப்படையை யேந்திய அச்சத்தை விளைக்குங் கையையுடைய ஆயிரகோடி பரிசனர்கள் சூழ்ந்து வர காலத்தீ பெயர் உருத்திரன் கடிதில் வந்தனன் — காலாக்கினிருத்திரர் விரைவில் வந்தார் எ—று.

சிவசாரூப்பியமுடைய வென்பார் 'பாலத்தீப்பொழி விழியுடை' எனவும், பெருஞ்சீற்றமுடைய வென்பார். 'மூலத்தீப்புரை' எனவும், எதிர்ந்தாரை முருக்குங் குறிப்பின ரென்பார் 'சூலத்தீக்கரத்து' எனவும் கூறினர், (4)

சுழல லுற்றிடு சூறையும் வடவையுந் தொலைய
முழுது யிர்த்தொகை அலமர வுயிர்க்குமொய்ம் புடையோர்
எழுப திற்றிரு கோடிபா ரிடத்தொகை யீண்ட
மழுவ லத்தின னயகூர் மாண்டனும் வந்தான்.

இ—ள்: சுழலல் உற்றிடு சூறையும் வடவையும் தொலைய—சுழலுகின்ற பிர சண்டமாருதமும் வடவாமுகாக்கினியும் அழியவும், முழுது உயிர் தொகை அலமர—எல்லா ஆன்மாக்களும் நிலைபெயரவும், உயிர்க்கும் மொய்ம்பு உடையோர்—சுவாசம் விடுகின்ற வலிமையுடையவர்களாகிய, எழுபதிற்று இரு கோடி பாரிட தொகை ஈண்ட—எழுபத்திரண்டுகோடி பூதகணங்கள் சூழ, மழு வலத்தினன் ஆய கூர்மாண்டனும் வந்தான்—மழுப்படையை வலக்கரத்திலேந்திய கூர்மாண்ட ருத்திரரும் வந்தார் எ—று.

சூறை தொலைதலாவது சுவாசத்தின் வேகத்தினுற் றன்வேகமடங்கப் பெறுதல், உயிர்த்துழி யித்துணைத்தீங்காமேல் உருத்துழியென்னுமோ வென்பதை யூகித்துணர, 'சுழலலுற்றிடு * * * உயிர்க்கு மொய்ம்புடையோர்' எனவும், சிவசாரூப்பியமுடைய ரென்பது போதர 'மழுவலத்தினன்' எனவும் கூறினர். 'மழுவலத்தினன்' என்பதற்கு மழுவாற்கொண்ட வென்றியை யுடையனெனினுமாம். (5)

நீடு பாதலத் துறைபவர் நெற்றியங் கண்ணர்
பீடு தங்கிய பல்வகை நிறத்தவர் பெரியர்
கோடி கோடியா முருத்திர கணத்தவர் குழுவோடு
ஆட கேசனு முருத்திரன் கயிலையில் அடைந்தான்.

இ—ள்: நீடு பாதலத்து உறைபவர்—நெடிய பாதாளவுலகத்தில் வசிப்பவர்களும், நெற்றியம் கண்ணர்—நெற்றிக் கண்ணையுடையவர்களும், பீடு தங்கிய பல்வகை நிறத்தவர்—பெருமை பொருந்திய பலவகைப்பட்ட நிறங்களையுடையவர்களும், பெரியர்—பெரியவர்களுமாகிய, கோடி கோடி ஆம் உருத்திர கணத்தவர் குழுவோடு—கோடி கோடியென்னுங் கணக்கமைந்த உருத்திரகணத்தவரின் தொகுதியுடன், ஆடகேசன் ஆம் உருத்திரன் கயிலையில் அடைந்தான்—ஆடகேசரென்னும் பெயரையுடைய உருத்திரர் திருக்கைலாசமலையில் வந்தார் எ—று.

கண்ணுக்கணிபெறத்தோன்றும் பலநிறங்களையுடையரென்பார் 'பீடுதங்கிய பல்வகை நிறத்தவர்' என்றார், (6)

கோர மிக்குயர் நூறுபத் தாயிர கோடி
சார தத்தொகை சூழ்தரச் சதுர்முகன் முதலோர்
ஆரு மச்சுறச் சரபமாய் வந்தருள் புரிந்த
வீர பத்திர வுருத்திரன் வந்தனன் விரைவில்.

இ—ள்: கோரம் மிக்கு உயர் நூறு பத்து ஆயிர கோடி சாரத தொகை சூழ்தர—உக்கிர மிகப்பெற்றுச் சிறந்த பத்திலக்ககோடி பூதகணங்கள் சூழ்ந்துவர, சதுர்முகன் முதலோர் ஆரும் அச்சுற சரபம் ஆய் வந்து அருள் புரிந்த வீரபத்திர உருத்திரன்—நான்கு முகங்களையுடைய பிரமா முதலிய தேவர்களனைவரும் அஞ்சும்படி சரபப்பறவை வடிவுகொண்டு வந்து கருணைசெய்த வீரபத்திரருத்திரர், விரைவில் வந்தனன்—சீக்கிரத்தில் வந்தருளினர் எ—று.

சூழ்தர — வந்தனன் என இயையும். 'சரபமாய் வந்தருள்புரிந்த வீரபத்திர வுருத்திரன்' என்றதை ''நன்னுலிரண்டு திருவடியு நனிநீள் வாலு முகமிரண்டுங்—கொன்னுர் சிறகு முருத்திரமுங் கொடும்பே ரார்ப்பு மெதிர் தோற்றிச்—செந்நீர் பருகிச் செருக்குநர மடங்க லாவி செகுத்துரிகொண் — டொன்னுர்—குலங்கண்

முழுதழிக்கு முடையான் சரபத் திருவுருவம்'' என்னுங் காஞ்சிபுராணச் செய்யு ளானுமுணர்க. துட்ட நிக்கிரகத்தின் பொருட்டு உக்கிரமூர்த்தியாய்த் தோன்றி யும் சிட்டரைப் பரிபாலித்தாரென்பது போதர 'சதுர்முகன் முதலோராரு டைச் சுறச் சரபமாய் வந்தருள் புரிந்த' என்றார். (7)

விண்டு தாங்குறு முலகுயிர் முழுதுமோர் விரலிற்
கொண்டு தாங்குறு குறட்படை கோடிநூ றீண்டப்
பண்டு தாங்கலந் தரியரன் இருவரும் பயந்த
செண்டு தாங்குகைம் மேலையோன் மால்வரை சென்றான்.

இ—ள்: விண்டு தாங்குறும் உலகு உயிர் முழுதும்—விஷ்ணுமூர்த்தியினாற் பரி பாலிக்கப்படுகின்ற உலகங்களையும் ஆன்மாக்களையும் முற்றாக, ஓர் விரலில்கொண்டு தாங்குறு கோடி நூறு குறள் படை ஈண்ட — ஒரு விரலின்கண்ணே வைத்துச் சுமக்கவல்ல நூறுகோடி யென்னுந் தொகைப்பட்ட பூதசேனைகள் நெருங்க, அரி அரன் இருவரும் பண்டு கலந்து பயந்த — விஷ்ணுமூர்த்தியும் சிவபிரானுமாகிய இருவரும் முற்காலத்திற் கூடிப்பெற்ற, செண்டு தாங்கு கை மேலையோன்— செண்டையேந்திய திருக்கரத்தையுடைய தலைவராகிய மகாசாத்தர், மால் வரை சென்றான்—பெரிய திருக்கைலாசகிரியில் வந்தருளினார் எ—று.

ஈண்ட—சென்றான் என இயையும், திருமாலரிதிற்றாங்கு முலகுயிர்களை யெளி திற்றாங்கும் பேராற்றலுடையரென்பார். 'விண்டுதாங்குறு முலகுயிர் முழுதுமோர் விரலிற்கொண்டு தாங்குறு 'குறட்படை' என்றார். அரியரனிருவரும் பண்டு கலந்து பயந்தமையை மேல் அசுரகாண்டத்து மகாசாத்தாப் படலத்தானுணர்க. (8)

முந்தை நான்முகன் விதிபெறான் மயங்கலும் முக்கட்
டந்தை யேவலால் ஆங்கவன் நெற்றியந் தலத்தின்
வந்து தோன்றிநல் லருள்செய்து வாலுணர் வளித்த
ஐந்து மாறுமா முருத்திரர் தாமும்வந் தடைந்தார்.

இ—ள்: முந்தை — முன்னொரு காலத்தில், நான்முகன் விதி பெறான் மயங் கலும்—நான்கு முகங்களையுடைய பிரமதேவர் படைத்தற்றொழில் முற்றாது மயங்க, முக்கண் தந்தை ஏவலால் அவன் நெறியம் தலத்தின் வந்து தோன்றி — மூன்று திருக்கண்களையுடைய பரமபிதாவாகிய சிவபிரானது ஏவலின்படி அப்பிரமதேவ ரது நெற்றியினிடதது வந்தவதரித்து, நல் அருள் செய்து—அவர்க்கு நல்ல கிரு பையைப்புரிந்து, வால் உணர்வு அளித்த — தூய்மையான அறிவைக் கொடுத் தருளிய,ஐந்தும் ஆறும் ஆம் உருத்திரர் தாமும்—பதினோருருத்திரர்களும், வந்து அடைந்தார்—வந்து சேர்ந்தார்கள் எ—று.

முந்தை யென்பதில் ஐகாரம் சாரியை, பெறான்-முற்றெச்சம். பதினோருருத் திரராவர்:—மகாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமன், தேவதேவன்,பவோற்பவன், கபாலீசன் என்பவர்கள். இவர் வர லாற்றை மேல் அசுரகாண்டத்து உருத்திரர் கேள்விப் படலத்தாலுணர்க. (9)

இத்தி றத்தரா முருத்திரர் அல்லதை யேனை
மெத்து பல்புவ னங்களு மளித்தவண் மேவி
நித்தன் அன்புறும் உருத்திர கணங்களும் நெறிசேர்
புத்தி யட்டக முதல்வரும் வந்தனர் பொருப்பில்.

இ—ள்: இ திறத்தர் ஆம் உருத்திரர் அல்லதை — இத்தன்மையராகிய உருத்திரர்களையன்றி, ஏனை மெத்து பல் புவனங்களும் அளித்து அவண் மேவி நித்தன் அன்பு உறும் உருத்திரகணங்களும்—முற்கூறப்படாதெஞ்சிய மிகுந்த பல புவனங்களையுங் காத்து அவ்விடத்திற் பொருந்திச் சிவபத்திவாய்ந்த உருத்திரர் கூட்டத்தினரும், நெறி சேர் புத்தியட்டக முதல்வரும்—முறைமை பொருந்திய புத்தியட்டகத் தலைவர்களும் பொருப்பில் வந்தனர் — திருக்கைலாசமலையில் வந்தார்கள் எ—று.

அல்லதை என்பதில் ஐகாரம் சாரியை. புத்தியட்டகமாவன: — புத்திதத்துவத்திலுள்ள பைசாசம், இராக்ஷசம், யாக்ஷம், காந்தருவம், மாகேந்திரம், சௌமியம், பிராசேசுவரம்' பிராமம் என்னுஞ் சூக்குமபுவனமெட்டுமாம். இவற்றின்றலைவராவார்:—அனந்தன், சூக்குமன், சிவோத்தமன், ஏகநேத்திரன், ஏகருத்திரன், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டன், சிகண்டி என்பவர்கள். அணுசிருதை முதற் காலாக்கினியீருகிய இருநூற்றிருபத்துநான்கு புவனங்களுள் முற்கூறப்பட்ட உருத்திரர்சளது புவனங்களொழிந்த பிறவென்பார் 'ஏனை' என்றார். புவனங்களெல்லாவற்றையும் பரிபாலிப்பவர் உருத்திரரேயாகலின் 'ஏனைமெத்து பல்புவனங்களு மளித்தவண்மேவி நித்தனன்புறு முருத்திர கணங்கள்' என்றார். (10)

தொட்ட தெண்கடல் யாவையுந் துகளினுல் தூர்க்கும்
எட்டு நூறெனுங் கோடிபா ரிடத்தொகை யீண்டக்
கட்டு செஞ்சடைப் பவர்முத லாகவே கழறும்
அட்ட மூர்த்திகள் தாங்களும் ஒருங்குடன் அடைந்தார்.

இ—ள்: தொட்ட தெண் கடல் யாவையும் துகளினுல் தூர்க்கும் எட்டு நூறு எனும் கோடி பாரிட தொகை ஈண்ட—(சகரரால் முற்காலத்தில்) தோண்டப்பட்ட தெள்ளிய சமுத்திரங்களெல்லாவற்றையும் காற்றூளியினுற் றூர்க்கின்ற எண்ணூறுகோடி பூதகணங்கள் சூழ, கட்டு செம் சடை பவர் முதல் ஆக கழறும் அட்டமூர்த்திகள் தாங்களும்—கட்டப்பட்ட சிவந்த சடைமுடியை யுடைய பவர் முதலாகச் சொல்லப்படுகின்ற அட்டமூர்த்திபர்களும், ஒருங்கு உடன் அடைந்தார்—தொகுதியாக உடனே வந்தார்கள் எ—று.

அட்டமூர்த்திபராவார்:—பவன், உக்கிரன், சருவன், மகாதேவன், உருத்திரன், பீமன், பசுபதி, ஈசானன் என்பவர்கள். ஆழ்ந்த கடலென்பார், 'தொட்ட தெண்கடல்' எனவும், அதிர்ந்த நடையினவென்பார். 'கடல் யாவையுந் துகளினூற்றூர்க்கும் - பாரிடம்' எனவும் கூறினர். (11)

ஏறு கொண்டிடு தெழிப்பினர் எம்பிரான் விழிநீர்
நாறு கொண்டுள கலத்தொடு பொடிபுனை நலத்தோர்
நூறு கொண்டிடு கோடிபூ தத்தொடு நொடிப்பின்
வீறு கொண்டகுண் டோதரன் போந்தனன் வெற்பில்.

இ—ள்: ஏறு கொண்டிடு தெழிப்பினர் — இடியைப்போன்ற பேரொலியையுடையவர்களும், எம்பிரான் விழி நீர் நாறு கொண்டு உள கலத்தொடு பொடி புனை நலத்தோர் — எம்பெருமானுகிய சிவபிரானது கண்ணீரினின்றுந் தோற்றிய உருத்திராக்கத்தையும் திருவெண்ணீற்றையுமணிந்த சீலத்தினை யுடையவர்களுமாகிய, நூறு கொண்டிடு கோடி பூதத்தொடு—நூறுகோடியென்னுந் தொகைப்பட்ட பூதசேனைகளுடன், வீறுகொண்ட குண்டோதரன் — பெருமையையுடைய

குண்டோதரனென்னும் பூதசேனாதிபதி, நொடிப்பின் வெற்பில் போந்தனன் — விரைவிற் றிருக்கைலாசமலையில வந்தான் எ—று.

முன்னொரு காலத்தில் திரிபுரத்தசுரரால் வருந்திய தேவர்கள் சிவபிரானைச் சரணடைய அவர் அடைக்கலம் புகுந்த தேவர்களைக் காத்தல் வேண்டும் நம்மே லன்பு வைத்தொழுகும் அசுரரைக் கொல்லுதலுந் தவறாகும என்று சிந்தித்து மௌனமாகி ஆயிரந்தேவ வருடங்காறும் தமது மூன்று திருக்கண்களையும் மலர்த் திக்கொண்டிருந்தனர். அக்கண்களினின்றும் நீர் சிந்த அந்நீரில் உருத்திராக்கங்கள் தோன்றின என்க.

ஏறு - ஆண்சிங்கமெனினுமாம். பூதகணாதிபருட் சிறந்தவனும் சிவபிரான் றிருமுன்னிலையிற் குடைபிடித்தல் முதலிய தொண்டுகளைச் செய்பவனும் இடபத்தெழுந்தருளும்போது முதுகு வளைந்து கொடுத்து அவரது பாதவிந் நியாசத்தை யேற்பவனுமாதலின் அவனது வருகையை ஏனைப் பூதகணாதி பர்க்கு முன்வைத்து 'வீறுகொண்ட குண்டோதரன்' என விசேடித்துக் கூறி னார். குண்டோதரனைக் கும்போதரனெனவும் வழங்குப. (12)

அண்டம் யாவையும் உயிர்த்தொகை யனைத்தையும் அழித்துப்
பண்டு போலவே தந்திட வல்லதோர் பரிசு
கொண்ட சாரதர் நூற்றிரு கோடியோர் குழுமக்
கண்ட கன்னனும் பிஙுகியும் வந்தனர் கயிலை.

இ—ள்: அண்டம் யாவையும் உயிர் தொகை அனைத்தையும் — எல்லா வண்டங்களையும் (அவற்றில் வாழும்) எல்லா ஆன்மாக்களையும், அழித்து பண்டு போலவே தந்திட வல்லது ஓர் பரிசுகொண்ட—சங்கரித்து முன்போலப் படைக்கவல்ல தன்மையையுடைய, நூற்றிருகோடியோர் சாரதர் குழும — இருநூறுகோடி பூதர்கள் சூழ்ந்துவர, கண்ட கன்னனும் பிஙுகியும் கயிலை வந் தனர் — கண்ட கன்னனும் பிஙுகியுமாகிய பூதசேனாதிபதிகள் திருக்கைலாச மலையில் வந்தார்கள் எ—று.

அண்டங்களையும் உயிர்களையும் அழித்தலும் பின்னர்ப் பண்டுபோலாக் கலும் அருஞ் செயல்களாதலின் அவற்றை யெடுத்துக் கூறினார். ஆகவே, அப்பூதர்கள் எல்லாம் வல்லவரென்பது பெற்றும். ஏகாரம் தேற்றம் (13)

ஆன னங்களோ ராயிரம் இராயிரம் அங்கை
மேனி வந்தபொன் மால்வரை புரைநிற மேவித்
தானை வீரர்நூற் றைம்பது கோடியோர் சூழப்
பானு கம்பனுந் தலைவன்ஒண் கயிலையிற் படர்ந்தான்.

இ—ள்: ஓர் ஆயிரம் ஆனனங்கள் — ஆயிரம் முகங்களையும், இராயிரம் அம்கை—அழகிய இரண்டாயிரங் கைகளையும், மேல் நிவந்த பொன் மால் வரை புரை நிறம் மேவி—மேலோங்கிய பொன்னாலாகிய பெரிய மேருமலையை நிகர்த்த நிறத்தையும் பொருந்தி, நூற்றைம்பது கோடியோர் தானை வீரர் சார — நூற்றைம்பதுகோடி பூதசேனாவீரர்கள் சூழ, பானுகம்பன் ஆம் தலை வன்—பானுகம்பனென்னும் பூதசேனாதிபன், ஒண் கயிலையில் படர்ந்தான்— ஒளி பொருந்திய திருக்கைலாசகிரியில் வந்தான் எ—று.

மேவி வந்தான் என இயையும். (14)

தங்கள் சீர்த்தியே மதித்திடு கடவுளர் தலையும்
பங்கி யாகிய கேசமும் படைகளும் பறித்துத்
துங்க மெய்திய கணங்கள்பல் கோடியோர் சூழச்
சங்கு கன்னன்வந் திறுத்தனன் தடவரை தன்னில்.

இ—ள்: தங்கள் சீர்த்தியே மதித்திடு கடவுளர் தலையும் — தங்கள் கீர்த்தியையே சிறந்ததென்று சிந்தித்த தேவர்களது தலைகளையும். பங்கி ஆகிய கேசமும்—பங்கியென்னும் பெயரையுடைய சிகைகளையும், படைகளும்—படைக்கலங்களையும், பறித்து—கவர்ந்து, துங்கம் எய்திய—(அதனால்) உயர்ச்சியைப் பெற்ற, பல் கோடியோர் கணங்கள் சூழ—பலகோடி பூதசேனைகள் சுற்றிவர, சங்குகன்னனென்னும் பூதசேனுதிபன்—தட வரை தன்னில் வந்து இறுத்தனன்—விசாலித்த அந்தத் திருக்கைலாசமலையில் வந்து தங்கினுன் எ—று.

தருக்குற்ற வென்பார் 'தங்கள் சீர்த்தியே மதித்திடு' என்ருர். (15)

காள கண்டனுந் தண்டியும் நீலனுங் கரனும்
வாள்வ யம்பெறு விச்சுவ மாலியும் மற்றும்
ஆளி மொய்ம்பின ராயபல் பூதரும் அனந்தம்
நீளி ருங்கடற் ருனையோ டணைந்தனர் நெறியால்.

இ—ள்: காளகண்டனும்—காளகண்ட னென்பவனும். தண்டியும்—தண்டியென்பவனும், நீலனும் — நீலனென்பவனும், கரனும் — கரனென்பவனும், வாள் வயம் பெறு விச்சுவமாலியும்—வாட்போரில் வெற்றியைப்பெற்ற விச்சுவமாலி யென்பவனும், ஆளி மொய்ம்பினர் ஆய மற்றும் பல் பூதரும்—சிங்கத்தைப் போன்ற வலிமையை யுடையராகிய ஏனைய பலபூதர்களும், அனந்தம் நீள் இரும் கடல் தானையோடு—அளவிடப்படாத நெடிய பெரிய கடல் போன்ற சேனைகளோடு, நெறியால் அணைந்தனர்—முறைப்படி வந்தார்கள் எ—று.

வாள் - ஆகுபெயர். சேனுதிபரென்பார். 'ஆளிமொய்ம்பினர்' எனவும், முன்வரற்பாலார் முன்னும். பின்வரற்பாலார் பின்னுமாகவென்பார். 'நெறியால்' எனவும் கூறினர். (16)

கூற்றின் மொய்ம்பினைக் கடந்திடு சாரதக் குழுவோர்
நூற்று முப்பது கோடியோர் சூழ்ந்திட நொய்தின்
மாற்ற லார்புரம் அட்டவன் தாளிணை வழிபட்
டேற்ற மிக்கஈ சானன்அக் கயிலையில் இறுத்தான்.

இ—ள்: கூற்றின் மொய்ம்பினை கடந்திடு நூற்றுமுப்பது கோடியோர் சாரத குழுவோர் சூழ்ந்திட—யமனது வலிமையையும் வெல்லத்தக்க நூற்றுமுப்பதுகோடி பூதகணத்தவர்கள் சூழ்ந்துவர, மாற்றலார் புரம் அட்டவன் தாள் இணை வழிபட்டு ஏற்றம் மிக்க ஈசானன்—பகைவரது முப்புரங்களையுமழித்த சிவபிரானது இரண்டு திருவடிகளையும் பூசித்தலாலுயர்ச்சி பெற்ற ஈசானரென்பவர், நொய்தில்—விரைவாக, அ கயிலையில் இறுத்தான்—அந்தத் திருக்கைலாசமலையில் வந்துசேர்ந்தார் எ—று.

உயர்வுசிறப்பும்மை தொக்கது. நூற்றுமுப்பது மூவாயிரமெனினுமாம். சூழ்ந்திட இறுத்தான் என இயையும். தாளிணை பின்மொழி நிலையல். வழி பட்டு என்னும் எச்சம் ஏதுப்பொருளில்வந்தது. திசைக்காவலருள் இந்திர ஞதியரை முன்னர்க் கூருதிவரை முற்கூறிய காரணந்தோன்ற 'மாற்றலார் புரமட்டவன்ருளிணை வழிபட்டேற்றமிக்க வீசானன்' என்ருர். (17)

எகின மாகிய மால்அயன் வாசவன் இமையோர்
புகலு மாதிரங் காவலர் கதிர்மதி புறக்கோள்
மிகைய தாரகை அன்னைகள் வசுக்கள்வே றுள்ளார்
மகிழும் விஞ்சையர் முனிவரர் யாவரும் வந்தார்.

இ—ள்: எகினம் ஆகிய மால் அயன்—அன்னப்பறவை யுருக்கொண்ட திரு மாலும் பிரமதேவரும், வாசவன்—இந்திரனும், இமையோர்—தேவர்களும், புகலும் மாதிரம் காவலர்—(எவராலும்) வியந்து கூறப்படுகின்ற திக்குப் பாலகர்களும், கதிர்—சூரியனும், மதி—சந்திரனும், புறக்கோள்—(செவ்வாய் முதலிய) ஏனைய கிரகங்களும், மிகைய தாரகை—மிகுதியாயுள்ள நக்ஷத்திரங் களும், அன்னைகள்—சப்தமாதர்களும், வசுக்கள்—அட்டவசுக்களும், வேறு உள்ளார்—பிறரும், மகிழும் விஞ்சையர்—உவகையுற்ற வித்தியாதரர்களும், முனிவர்—முனிவர்களுமாகிய, யாவரும் வந்தார்—எல்லோரும் அங்கே வந் தார்கள் எ—று.

ஈசானரும் இந்திரனும் முன்கூறப்படுதலின் திக்குப்பாலகரென்றது ஏனை யோரை. முன்ஞெருகாலத்தில் வேதங்களை வெளிப்படுத்தற் பொருட்டுத் திரு மால் அன்னப்பறவை யுருக்கொண்டனர். இதனை 'அன்னமாயரு மறைகளறைந் தாய் நீ' என்னும் இராமாயணச் செய்யுளானுமுணர்க. அச்சுவினி முதலிய எல்லா நக்ஷத்திரங்களுமென்பார் 'மிகையதாரகை' என்ருர். விஞ்சையரு வகை யுற்றது திருமணக்கேள்வியாலென்க. சப்தமாதர்களாவார்:—பிராமி மாகேசுவரி,கௌமாரி,வைஷ்ணவி, வாராகி, இந்திராணி, சாமுண்டி என்பவர் கள். அட்டவசுக்களாவார்:—தரன், துருவன், சோமன்.ஆபன்,அனிலன், அன லன், பிரத்தியூஷன், பிரபாசன் என்பவர்கள். (18)

வாலி தாகிய மறைகள்ஆ கமங்கள்மந் திரங்கள்
ஞால மாதிய பூதங்கள் உலகங்கள் நகர்கள்
கால மானவை ஏனைய பொருளெலாங் கடவுட்
கோல மெய்திவந் திறுத்தன கயிலையிற் குறுகி.

இ—ள்: வாலிது ஆகிய மறைகள்—தூய்மையினையுடைய நால்வேதங்க ளும், ஆகமங்கள்—இருபத்தெட்டாகமங்களும், மந்திரங்கள்—சப்தகோடி மகா மந்திரங்களும், ஞாலம் ஆதிய பூதங்கள்—(பிருதுவி முதலிய) ஐத்து பூதங்க ளும், உலகங்கள்—பதினுன்குலகங்களும், நகர்கள்—(அவ்வுலகங்களிலுள்ள) நகரங்களும், காலம் ஆனவை—காலங்களும், ஏனைய பொருள் எலாம்—பிற பொருள்களும் ஆகிய எல்லாம், கடவுள் கோலம் எய்தி—தேவரூபத்தைக் கொண்டு, கயிலையில் குறுகி வந்து இறுத்தன—திருக்கைலாச மலையில் அணுகி லந்து தங்கின எ—று.

எல்லா நூற்கு முதனூலாதலின் 'வாலிதாகியமறை' என்ருர். மந்திரங்க ளென்றது நம: என்பது முதலிய சப்தபல்லவங்களையுடைய மகாமந்திரங்களை.

காலம் என்றது வருடம், அயனம், பக்ஷம், மாசம் முதலியவற்றை. எலாமென் பதை மறை முதலியவற்றிற்குந் தனித்தனியியைக்க. (19)

இந்த வாற்றினுற் கயிலேயில் யாவரும் யாவும்
வந்த தன்மையை நோக்கியே ஆற்றவு மகிழ்ந்து
நந்தி யுள்புகுந் தமலனுக் கித்திறம் நவில
முந்தை அன்னவர் யாரையுந் தருகென மொழிந்தான்.

இ—ள்: நந்தி—திருநந்திதேவர், இந்த ஆற்றினுல் கயிலேயில் யாவரும் யாவும் வந்த தன்மையை நோக்கி—இவ்வாறு திருக்கைலாசமலேயில் எல்லா வுயர்திணைப் பொருள்களும் எல்லாவஃறிணைப் பொருள்களும் வந்து சேர்ந்த தன்மையைப் பார்த்து, ஆற்றவும் மகிழ்ந்து—மிகவுஞ் சந்தோஷித்து, உள் புகுந்து—உட் சென்று, அமலனுக்கு இ திறம் நவில—சிவபிரானுக்கு இத் தன் மையை விண்ணப்பஞ்செய்ய, முந்தை — முதற்கடவுளாகிய சிவபிரான், அன்னவர் யாரையும் தருக என மொழிந்தான் — அவரனேவரையும் (ஈண்டு) அழைத்து வருவாயென்று திருவாய் மலர்ந்தருளினுர் எ—று. (20)

புராரி யித்திறம் மொழிதலுஞ் சிலாதனுர் புதல்வன்
ஓராய்மு தற்கடை குறுகியே உருத்திர கணங்கள்
முராரி யாதியாம் விண்ணவர் முனிவரெல் லோரும்
விராவு நீர்மையிற் சென்றிடக் கோயிலுள் விடுத்தான்.

இ—ள்: புராரி இ திறம் மொழிதலும்—முப்புரங்களேயு மெரித்தருளிய சிவ பிரான் இவ்வாறு திருவாய் மலர்ந்தருளுதலும், சிலாதனுர் புதல்வன்— சிலாத முனிவரது புத்திரராகிய திருநந்திதேவர், ஓராய் முதல் கடை குறுகி— அவ்விடத்தினின்று நீங்கி முதல்வாயிலில்வந்து, உருத்திர கணங்கள்—உருத் திர கணத்தவர்களும், முராரி ஆதி ஆம் விண்ணவர்—விஷ்ணுமூர்த்தி முத லாகிய தேவர்களும் முனிவர் எல்லோரும் —முனிவர்களுமாகிய அனேவரும் விராவும் நீர்மையில் சென்றிட—ஒருமித்த தன்மையாகப் போம்படி, கோயி லுள் விடுத்தான்—திருக்கோயிலினுள் அனுப்பினுர் எ—று.

சிலாதன்—கல்லேயுண்டவன். சிலா-கல், அதன்-உண்டவன், ஆர் உயர்வு பற்றி வந்தவிகுதி. முன்னெருகாலத்தில் திருமறைக்காடென்னுந் திருப்பதி யில் வேதியர் குலத்தில் ஒரு புத்திரர் தோன்றி வளர்ந்து ஐந்தாண்டு நிறைவே றும் பிராயத்தையடைந்தனர். ஒருநாள் ஒரு அந்தணர் பிக்ஷைக்குவர அப் புத்திரர் அவரது பிக்ஷான்னத்தில் ஒரு கல்லேயிட்டனர். அந்தணர் அதனே யுணராது பிக்ஷையேற்றுச் சென்று அந்தச் சிறு கல்லுடன் அவ்வன்னத்தை யுண்டனர். பின்னர் அப்புத்திரர் வளர்ந்து வேதமுதலிய நூல்களே நன்கு ணர்ந்து பெருந்தவமியற்றி அது காரணத்தாற் கோரதபசியென்னும் பெயர் பெற்று அட்டமாசித்திகளிலும் வல்லவராய் அவற்றின் வல்லமையால் யம புரத்தைப் பார்க்க விருப்புற்றுச் சென்று அங்குள்ள பல தண்டனேகளேயும் பார்த்து வருகையில் ஓர் பெரிய கல்மலே இருக்கக்கண்டு அங்குள்ள தண்டத் தலேவரைநோக்கி இப் பெரும்பாறையின் வரலாறென்னேயென்று வினுவினர். அவர்கள் ''ஐயரே! கோரதபசியென்னும் ஒருபாபி பிக்ஷையேற்கவந்த ஒரு அந்தணனது அன்னத்திற் கல்லெறிய அந்தணன் அதனே அறியாது புசித்த னன். அக்கல்லே இங்கு பெருமலேயாக வளருகின்றது. அக்கோரதபசி இறந்த

பின் இங்குவந்து இதனையுண்பான்'' என்றனர். அதுகேட்ட கோரதபசி தாம் இளமையிற் செய்ததீங்கு இவ்வாறு விளைந்ததேயென்று துக்கித்து அவர்களை நோக்கி "இப் பாவத்தைச் செய்தவன் இத் தீங்கினின்று நீங்குதற்கு வழி யாது?'' என்று வினவினர். அவர்கள் ''இவ்வளவினதாகிய ஒரு மலையைப் பூமி யிற் கரைத்துண்பானாயின் இது கரைந்துவிடும்'' என்றனர். கோரதபசி அங் குள்ள அற்புதங்களையெல்லாம் பார்த்து முடிந்தபின் பூமியில்வந்து ஒரு மலை யைக் குறிப்பிட்டுத் தினத்தோறும் இடித்து நீரிற் கரைத்துப் பருகி முடிந்த னர். யமபுரத்தில் அவர்க்காய் வளர்ந்த மலையுங் கரைந்தொழிந்தது. இது காரணத்தால் அவர்க்குச் சிலாதனென்னும் பெயருண்டாயது.

ஒராய்-ஒருவியென்பதன் விகாரம். முர அரி=முராரி; வடநூன் முடிபு. முரனென்னுமசுரனைக் கொன்றவன் என்பது பொருள். எல்லோருமென்றதனாற் பூதராதியரையுமமைக்க. வேறு வேறாய்க் குழீஇ நின்றாரெல்லா மொருங்கு குழீஇப் போயினரென்பார் விராவு நீர்மையிற் சென்றிட' என்றார். (21)

விடுத்த காலையில் அரியணை மீமிசை விளங்கிக்
கடுத்த யங்கிய கண்டன்வீற் றிருப்பது காணூஉ
அடுத்த வன்புடன் யாவரும் இறைஞ்சியே அவன்சீர்
எடுத்து நீடநின் றேத்தியே அணுகினர் இமைப்பில்.

இ—ள்: விடுத்த காலையில் — திருநந்திதேவர் உள்விடுத்தவுடன், கடு தயங்கிய கண்டன் அரி அணை மீமிசை விளங்கி வீற்றிருப்பது யாவரும் காணூஉ—நஞ்சார்ந்த திருமிடற்றையுடைய சிவபிரான் சிங்காசனத்தின்மேற் பிரகாசித்து எழுந்தருளியிருத்தலை அனைவருந் தரிசித்து, அடுத்த அன்புடன் இறைஞ்சி-தம்மகத்தில் விளைந்த அன்புடன் வணங்கி, அவன் சீர் எடுத்து நீட நின்று ஏத்தி—அவரது கீர்த்தியைத் தெரிந்து தூரத்தினின்று துதித்து இமைப்பில் அணுகினர்—விரைவிற் சமீபித்தார்கள் எ—று. (22)

நீண்ட சீருருத் திரர்தமை நிறைந்தபல் கணத்தை
ஈண்டு தேவரை முனிவரை வீற்றுவீற் றிசையா
ஆண்டு தன்விரற் சுட்டியே ஆதிநா யகற்குக்
காண்டல் செய்துநின் றேத்தினன் வேத்திரக் கரத்தோன்.

இ—ள்: நீண்ட சீர் உருத்திரர் தமை—மிகுந்த சிறப்பையுடைய உருத்தி ரர்களையும், நிறைந்த பல் கணத்தை—நிறைந்துள்ள பல பூதர்களையும், ஈண்டு தேவரை—நெருங்கிய தேவர்களையும் முனிவரை—முனிவர்களையும், வீற்று வீற்று இசையா—வெவ்வேறாக எடுத்துக்கூறி, ஆண்டு தன் விரல் சுட்டி— அவர் நிற்கு மிடத்துத் தமது விரலினாற் குறிப்பிட்டு, ஆதி நாயகற்கு காண் டல் செய்து நின்று—ஆதிகடவுளாகிய சிவபிரானுக்குக் காண்பித்து நின்று, ஏத்தினன் — துதித்தார், வேத்திர கரத்தோன் — பொற் பிரம்பையேந்திய கையையுடைய திருநந்திதேவர் எ—று.

அங்குவந்தாரனைவரினுஞ் சிறந்தாரென்பதுபோதர 'நீண்ட சீருருத்திரர்' என்றார். (23)

ஆர ழற்பெயர் அண்ணல்கூர் மாண்டன்ஆ டகத்தோன்
வீர பத்திரன் முதலுருத் திரகண மேத்தப்
பாரி டத்தவர் யாவரு மெம்பிரான் பாங்கிற்
சேர லுற்றுநின் றேத்தினர் பணிந்தசிந் தையராய்.

இ—ள்: ஆர் அழல் பெயர் அண்ணல் கூர்மாண்டன் ஆடகத்தோன் வீர பத்திரன் முதல் உருத்திரர்கள்—நிறைந்த அக்கினியின் பெயரையுடைய தலை வரும் கூர்மாண்டேசரும் ஆடகேசரும் வீரபத்திரருமுதலாகிய உருத்திரர்க ளும், மேதக்க பாரிடத்தவர்—மேன்மைமிக்க பூதர்களும், யாவரும்—பிறர னைவரும், எம்பிரான் பாங்கில் சேரலுற்று—எங்கள் தலைவராகிய சிவபிரா னது பக்கத்திற் சார்ந்து, பணிந்த சிந்தையராய் நின்று ஏத்தினர்—தாழ்ந்த மனத்தையுடையவர்களாய் நின்று துதித்தார்கள் எ—று.

ஆரழற் பெயரண்ணல் - காலாக்கினிருத்திரர். பூதகணுதிப ரென்பார் 'மேதக்க பாரிடத்தவர்' எனவும், அகந்தைநீங்கி யென்பார் 'பணிந்த சிந்தை யாய்' எனவும், கூறினர். 'உருத்திரர் கண்மேதக்க' என்பது அச்சுப்புத்த கங்களில் 'உருத்திர கணமேக்த' எனக் காணப்படுகின்றது. உருத்திர கண மும் பாரிடத்தவர் யாவருமேத்தினரென்னுது. உருத்திர கணமேத்தப் பாரி டத்தவர் யாவருமேத்தினர் என்றதும் பூதகணங்கண் மாத்திரம் எம்பிரான் பாங்கிற் சேர்ந்தனரெனக்கூறி அவரிற்சிறந்த உருத்திரராதியரை அங்ஙனங் கூறுதொழிந்ததும் பொருத்தமற்றனவாதலின் அப்பாடந்தவறுமென்க. (24)

அன்ன காலையில் நான்முகன் எம்பிரான் அணிவான்
உன்னி யேமுடி முதலிய பல்கல னுதவிப்
பொன்னி னுயதோர் பீடிகை யிற்கொடு போந்து
முன்ன ராகவைத் திறைஞ்சியே இத்திறம் மொழிவான்.

இ—ள்: அன்ன காலையில்—அச்சமயத்தில், நான்முகன்—நான்கு முகங்களை யுடைய பிரமதேவர், எம் பிரான் அணிவான் உன்னி—எக்கள் கடவுளாகிய சிவபிரானணிந்துகொள்ளும்படி சிந்தித்து, முடி முதலிய பல் கலன் உதவி—கிரீட முதலாகிய பல ஆபரணங்களைச் சிருட்டித்து, பொன்னின் ஆயது ஓர் பீடிகையில் கொடு போந்து—பொன்னாற்செய்யப்பட்ட ஒரு பாத்திரத் தில் வைத்துக்கொண்டுபோய், முன்னர் ஆக வைத்து—அப்பெருமானது திரு முன்னிலையில் வைத்து, இறைஞ்சி—வணங்கி, இ திறம் மொழிவான்—இவ் வாறு விண்ணப்பஞ் செய்வார் எ—று.

உன்னி உதவியென்பதையியைத்துச் சிந்தையானுதவியெனப் பொருள் கூறினுமாம். (25)

ஐய கேளுனக் கில்லையாற் பற்றிகல் அடியேம்
உய்யு மாறிவண் மணஞ்செய வுன்னினை உன்பால்
மையல் மாசுணப் பணியெலா மாற்றிமற் றிந்தச்
செய்ய பேரணி அணிந்தரு ளென்றுசெப் பினனே.

இ—ள்: ஐய கேள்—பெருமானே! கேட்டருள்க, உனக்கு பற்று இகல் இல்லை—தேவரீருக்கு விருப்பும் வெறுப்பும் இல்லை, அடியேம் உய்யுமாறு இவண் மணம் செய உன்னினை—அடியேங்களுய்யும்படி இப்பொழுது திருமணஞ் செய்ய நினைத்தருளினீர் (ஆதலின்), உன் பால் மையல் மாசுண பணி எலாம் மாற்றி—தேவரீரிடத்துள்ள மயக்கத்தைத் தருகின்ற சர்ப்பங்களாகிய ஆப

ரணங்களையெல்லாம் நீக்கி, மற்று இந்த செய்ய பேர் அணி அணிந்தருள் என்று செப்பினன்—இந்தச் செப்பமாகிய பெருமைபொருந்திய ஆபரணங்களை அணிந்தருள்க என்று பிரார்த்தித்தார் எ—று.

மணஞ்செய்ய முயன்றது சிறியேங்கள் வேண்டுகோட்காகவே, தேவரீர்க்காக வன்று. ஆதலின் இவ் வேண்டுகோளையு மேற்றருள்க வென்பது குறிப்பு.

மையலைத் தருவது கடித்துழியென்க. மற்று வினைமாற்று. சூரனாதிய ரைச் சங்கரிக்கவல்ல குமாரரைத் தோற்றுவித்தற் கேதுவாதலின் 'அடியே முய்யுமாறு' எனவும், அணிக்குதவாதன வென்பார் 'மையன் மாசுணப்பணி' எனவும், மணவணிக் கேற்ற வென்பார் 'செய்ய' எனவும் கூறினார். (26)

பங்க யாசனன் குறையிரந் தினையன பகர
அங்கண் மூரல்செய் தன்புடன் நீயளித் திடலால்
இங்கு நாமிவை அணிந்தென மகிழ்ந்தன மென்னாச்
செங்கை யாலணி கலத்தினைத் தொட்டருள் செய்தான்.

இ—ள்: பங்கய ஆசனன் குறையிரந்து இனையன பகர—தாமரை மலரை ஆசனமாகவுடைய பிரமதேவர் குறையிரந்து நின்று இவ்வாசகங்களை விண் ணப்பஞ்செய்ய, அங்கண் மூரல் செய்து—அப்பொழுது (சிவபிரான்) குறுநகை செய்து, நீ அன்புடன் அளித்திடலால் இங்கு நாம் இவை அணிந்து என மகிழ்ந்தனம் என்னா—பிரமனே! நீ பத்தியுடன் றருதலால் இப்பொழுது நாம் இவ்வணிகளை அணிந்தாற்போல உவகையுற்றேமென்று திருவாய் மலர்ந்த ருளி, செம் கையால் அணிகலத்தினை தொட்டு அருள் செய்தான்—சிவந்த திருக்கரங்களால் அவ்வாபரணங்களைத் தீண்டி அனுக்கிரகஞ் செய்தார் எ-று.

பங்கயாசனன்-வடநூன்முடிபு. அணிந்தாலென என்பதில் ஆல் விகுதி தொக்கது. குறையிரத்தல் குறையைத் தீர்க்குமாறு மெலிந்து நிற்றல். கண் ஈண்டுக் காலத்தையுணர்த்திற்று. இவற்றிலும் பன்மடங்கழகினவாகிய அணிகளை நினைக்கு முன்னமைக்கு மாற்றலுடையே மென்பதை நினையாது கொணர்ந்தனனே! இவனறிவிருந்தவாறென்னை யெனச் சிந்தித்துக் குறுநகை செய்தனர். அங்ஙனங் கொணர்ந்தது தாம் பேரணியுடன் செல்ல வேண்டுமென் னுங் காதலினாதலின் 'அன்புடனீயளித்திடலால்' என்றார். அதுபற்றி அவர் வேண்டுகோளை ஒருவாறு நிறைவேற்ற வேண்டுதலின் இவையணிந்தென மகிழ்ந்தன மென்னாச் செங்கையாலணிகலத்தினைத் தொட்டனர் என்க. அவ் வணிகளை வந்து நின்றார்க்கு வழங்குமாறு கட்டளையிட்டனரென முதனூலிற் கூறப்பட்டுள்ளது. (27)

பிரமன் அன்புகண் டிவ்வகை யருள்செய்த பின்னர்
ஒருதன் மெய்யணி பணிகளே யணிகளா யுறுவான்
திருவுளங்கொளா அவ்வகை யாகிய செகத்தை
அருள்பு ரிந்திடு பராபரற் கிச்செயல் அரிதோ.

இ—ள்! பிரமன் அன்பு கண்டு இவகை அருள் செய்த பின்னர்—பிரம தேவரது மெய்யன்பையுணர்ந்து இவ்வாறு திருவருள் செய்த பின்பு, ஒரு தன் மெய் அணி பணிகளே அணிகள் ஆய் உறுவான் திருவுளம் கொளா—ஒப்பற்ற

தமது திருமேனியிற் புனைந்த சர்ப்பங்களே ஆபரணங்களாகப் பொருந்தும்படி திருவுள்ளம் பற்ற, அ வகை ஆகிய—(அவைகள்) அவ்வாறேயாயின, செகத்தை அருள் புரிந்திடு பராபரற்கு இ செயல் அரிதோ — உலகமனைத்தையும் படைத்த இறைவருக்கு இச்செய்கை அரியதா? (அன்றே) எ—று.

எல்லாவுலகங்களையும் படைக்கும் இறைவர் இவ்வணிகளைப் படைப்ப தோரற்புதமாகா தென்றபடி. ஏ-தேற்றம். பராபரன்-பரைக்குப்பரன், (28)

கண்டி யாவரு மற்புத மடைந்துகை தொழலும்
வண்டு லாங்குழற் கவுரிபா லேகுவான் மனத்திற்
கொண்டு பாங்குறை தலைவருக் குணர்த்தியே குறிப்பாற்
பண்டு மாலயற் கரியவன் எழுந்தனன் படர.

**இ—ள்:** யாவரும் கண்டு—அச்செய்கையை அனைவரும் பார்த்து, அற்புதம் அடைந்து கைதொழலும்—அதிசயங்கொண்டு கை குவித்தலும், பண்டு மால் அயற்கு அரியவன்—முற்காலத்தில் விஷ்ணுமூர்த்திக்கும் பிரம தேவர்க்கும் அறிதற்கருமையாய் நின்ற சிவபிரான், வண்டு உலாம் குழல் கவுரிபால் ஏகுவான் மனத்தில் கொண்டு—வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய பார்ப்பதியாரிடத்துத் திருமணஞ் செய்யப் போம்படி திருவுளம்பற்றி, பாங்கு உறை தலைவருக்கு குறிப்பால் உணர்த்தி—பக்கத்தில் நிற்கின்ற தலைவர்களுக்குத் திருக்கண் குறிப்பினு லறிவித்து, படர எழுந்தனன்—செல்லும்படி யெழுந்தருளினர் எ—று.

அற்புதமென்னும் வடசொல் தகரவொற்று றகரவொற்றாகத் திரிந்தது. (29)

கணங்கள் செல்படல முற்றிற்று

ஆக விருத்தம் 754

# 10. திருக்கல்யாணப்படலம்

சிவபிரான் பார்ப்பதியாரைத் திருமணஞ்செய்த சரித்திரத்தைக் கூறுதலி னிப்பெயர்த்தாயிற்று,

## இப்படலப்பொழிப்பு

சிவபிரான் திருநந்திதேவர் முன்சென்று வழியொதுக்கத் தேவர்கள் துதிக் கத் தும்புரு நாரதரிசைபாடத் திருக்கோயிலினின்று வெளியேவந்து குண்டோதர னென்னும் பூதசேனுபதி முதுகு வளைந்துகொடுக்க அவனது தோளிற்றமது திரு வடியை வைத்து இடபவாகனத்திலிவர்ந்தருளினர். அந்நகரின் புறத்தே நின்ற பூதகணத்தினர் யாவருந் தரிசித்து நமஸ்கரித்து ஆரவாரித்தனர். விநாயகக் கடவுள் பூதசேனைகளுடன் முன்சென்றனர். சூரியனுஞ் சந்திரனுங் குடை பிடித் தனர். வாயுதேவன் சாமரமிரட்டினன். வருணன் விசிறி வீசினன். இந்திரன் ஆலவட்டமசைத்தான். பூதர்கள் பலவகை வாத்தியங்களையு மியம்பினர். உருத் திரர் முதலாக அங்கு வந்தார், அச் சிவபிரானது அனுமதிப்படி தத்தமக்குரிய வாகனங்களிலிவர்ந்து வந்து சூழ்ந்தனர். இவ்வாறே மணக்கோலத்துடன் இமயமலையிற் சென்று மலையரசனெதிர்கொண்டு அழைத்துச் செல்ல அரமனைக் கணித்தாகச் சென்று மங்கையர்கள் ஆராத்திரிகஞ் சுற்றியபின் மணச்சாலையின் முன்சென்று இடபவாகனத்தினின்று மிழிந்தருளினர். உடனே அவரைச் சூழ்ந்து வந்தோர்களும் தத்தம் வாகனங்களினீங்கினர். அப்பொழுது மேனை பல பெண் களுடன் வந்து காமதேனுப் பொழிந்த பாலினுல் அபிடேகமியற்றினள். பின் சிவபிரான் திருநந்திதேவரிட்ட பாதுகையிற் றிருவடிகளைச் சேர்த்திப் பிரம விஷ் ணுக்களிருபாலுங் கைகொடுத்துவரத் திருமணச்சாலையுட்சென்று தமக்கேற்ற வாறமைந்திருந்த இரத்தினசிங்காசனத்தில் வீற்றிருந்தனர். அவருடன் வந்த உருத்திரர் முதலியவர்களுந் தத்தமக்கேற்ற ஆசனங்களிலிருந்தனர். அப்பொழுது உலகத்திலுள்ளாரனைவரும் வந்திருக்கப் பெறுதலாற் பாரந் தாங்கலாற்ருது இமய மலை துளங்கப் பூமியின் வடபாகந் தாழ்ந்து தென்பாகம் உயர்ந்தது. அச்சமயத் திற் சிவபிரான் அகத்தியமுனிவரை அழைப்பித்துப் பொதியமலையிற் போயிருக்கு மாறனுப்பிப் பூமியைச் சமப்படுத்தினர். அதன்மேல் இலக்குமிதேவி திருக்கை பிடித்துவரப் பார்ப்பதியார் மணச்சாலைக்கெழுந்தருளி வந்து சிவபிரானது பாதங்களை வணங்கி அனுமதிப்படி அவரது பக்கத்தில் வீற்றிருந்தனர். அதன் பின் மலையரசன் தன் மகளைத் தத்தஞ்செய்து கொடுத்துக் காமதேனுப் பொழிந்த பால், வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழ முதலிய பொருள்களை நிவேதித்தான். பிரமதேவர் சிவபிரானிடத்து அனுமதிபெற்று ஆசாரியராயிருந்து விவாகச் சடங்கனைத்தையும் நடப்பித்தனர். மேல் அங்குள்ளாரனைவரும் முறைப்படி சிவபிரானையுந் தேவியாரையும் நமஸ்கரித்தனர். இமயமலையரசனுஞ் சுற்றத்தாருடன் அவரை நமஸ்கரித்துச் சிவ நிர்மாலியங்களையெல்லாம் அங்கு வந்தாரனைவர்க்கும் வழங்கினன். அப்பொழுது இரதிதேவி வந்து தன் கண வனை யெழுப்பித்தருமாறு குறையிரந்தனள். சிவபிரான் அவனை யெழுப்பி அவ ளுக்கு மாத்திரமுருவமாயும் ஏனையோர்க்கருவமாயுமிருக்கும்படி கட்டளையிட்டு விடைகொடுத்தனுப்பி உருத்திரர் முதலிய யாவருஞ் சூழ்ந்துவரத் திருக்கைலாச மலையிற் சென்று உடன் வந்தாரனைவரையுந் தம்மூர்க்குப் போகுமாறு விடை கொடுத்தனுப்பி முன்போல வீற்றிருந்தனர். அதன்மேல் உலகமெல்லாம் முன் போலப் போகமனுபவித்து இன்பமுற்றன என்பதாம்.

நாற்ற டம்புயக் கண்ணுதல் நந்தியம் பெருமான்
போற்றி முன்செல அமரரும் முனிவரும் புகழ
வேற்ற தும்புரு நாரதர் விஞ்சையர் யாரும்
பாற்றி யக்கமும் நீழலு மாமெனப் பாட.

இ-ள்: தடம் நால் புய கண்ணுதல் நந்தியம் பெருமான் போற்றி முன் செல—பெரிய நான்கு புயங்களையும் நெற்றிக்கண்ணையுமுடைய திருநந்திதேவர் துதித்து முன்னே நடக்க, அமரரும் முனிவரும் புகழ—தேவர்களும் முனிவர்களும் தமது மகத்துவங்களை யெடுத்துக்கூற, ஏற்ற தும்புரு நாரதர் விஞ்சையர் யாரும் பாற்றியக்கமும் நீழலும் ஆம் என பாட—தகுதி பொருந்திய தும்புருவும் நாரதரும் வித்தியாதரரும் பிறரும் பருந்தினியக்கத்தையும் நிழலையும் போலத் தொடர்புறப்பாட எ—று.

சிவசாரூப்பியமுடையரென்பதை யுணர்த்த நாற்புயங்களையும் நுதற் கண்ணையும் ஈண்டெடுத்துக் கூறினர். தட என்னுமுரிச்சொல்லைத் தொல்காப்பியர் முதலாயினோர் அகரவீறாயும் நிகண்டாசிரியர் மகரவீறாயும் வழங்கினர். நுதற் கண் என்பது கண்ணுதலென மொழிமாறி நிற்றலின் இலக்கணப்போலி. கண் பொருந்திய நெற்றியென விரிப்பர் சிலர், அஃதித்துணைச் சிறப்பினதன்று. அம் சாரியை, திரு நந்திதேவர் முன் சென்றமை வழியொதுக்குதற்கென்க. ஏற்ற என்னுமடையை ஏனையோர்க்குமொட்டுக. தேவகாயருட் சிறந்தமையானிங் ஙனம் விதந்தார். பருந்து மெல்லெனப் பலமுறை வட்டமிட்டு ஒவ்வோர் வட்டத்தினும் முறையே சிறிது சிறிதாக உயர்ந்துந் தாழ்ந்துஞ் செல்வது போலக் காலமுறைக்குஞ் சுரமுறைக்குமேற்ப மாத்திரை தவறுபடாது எடுத்தும் படுத்தும் இசைக்கப்படுதலின் மிடற்றிசை பாற்றியக்கத்தையும், அப்பருந்தை நீழல் ஒத்துத் தொடர்தல் போலத் தழீஇ நடத்தலின் யாழிசை நீழலையும் ஒக்குமென்க. இச் செய்யுளும் பிற் செய்யுளுங் குளகம். (1)

சொன்ம றைத்தொகை ஆகம முதலிய துதிப்பப்
பொன்மை பெற்றதன் கோநகர் நீங்கியே பொற்றாள்
வன்மை பெற்றகுண் டோதரன் மொய்ம்பிடை வைத்துச்
சின்ம யத்தனி மால்விடை ஏறினன் சிவனே.

இ—ள்: சொல் மறை தொகை ஆகமம் முதலிய துதிப்ப—ஓதப்படுகின்ற நான்கு வேதங்களும் இருபத்தெட்டாகமங்களு முதலாகிய நூல்கள் தோத்திரஞ் செய்ய, பொன்மை பெற்ற தன் கோ நகர் நீங்கி—பொன்னிறமமைந்த தமது திருக்கோயிலை நீங்கி, வன்மை பெற்ற குண்டோதரன் மொய்ம்பிடை பொன் தாள் வைத்து—வலிமையைப் பெற்ற குண்டோதரனென்னும் பூதசேனாதிபனுடைய தோளின்மேற் பொன் போன்ற ஒரு திருவடியைத் தூக்கிவைத்து, சின் மய தனிமால் விடை ஏறினன்—ஞானவடிவாகிய ஒப்பற்ற பெரிய இடப வாகனத்திலெழுந்தருளினர், சிவன்—சிவபிரான் எ—று.

முதலிய என்றதனாற் புராணங்களையும் மிருதிகளையும் பிறவற்றையுங் கொள்க. குண்ட-உதரன்=குண்டோதரன், குணசந்தி; குடம் போன்ற வயிற்றை யுடையவனென்பது பொருள். குண்டோதரனைக் கும்போதரனெனவும் வழங்குப. சித்மயம்-சின்மயம், வட நூன்முடிபு. முற்செய்யுளில் செல, புகழ, பாட என்னுமெச்சங்களும் இச் செய்யுளில் துதிப்ப என்னுமெச்சமும் ஏறினனென்னு முற்றோடு முடிந்தன.

எழுதாக் கேள்வியாதலின் 'சொன்மறை' என்றார். இதற்கு எவராலு முத னூலென விரைந்துரைக்கப்படுகின்ற மறையெனவும் சொற்களையுடைய மறை யெனவுமுரைப்பினுமாம். எவ்வொளியையுமடக்கி விளங்குந் திருக்கைலாச கிரியினடுவணிருந்துந் தன்னொளி குன்றாமையின் 'பொன்மை பெற்றதன் கோநகர்' எனவும், செந்நிறமுடைமையானும் பெறுதற்கருமையானும் 'பொற்றாள்' என வும், சிவபிரான் திருவடிவைத்திவர்ந்துழித் தளர்வற நிற்கும் பேராற்றலை அருந் தவஞ்செய்து பெற்றுடையனாதலின் 'வன்மை பெற்ற குண்டோதரன்' எனவும், தருமவடிவாதலின் 'சின்மயத்தனிமால்விடை' எனவும், தருமவடிவாதலின் 'சின் மயத்தனிமால்விடை' எனவும் விசேடித்தார். மால்விடையென்பதற்குத் திரு மாலாகிய இடபமெனக் கூறினுமாம். திருமால் இடபமாய்த் தாங்கிய சரித் திரத்தைக் காஞ்சிப்புராணத்திற் காண்க. (2)

விடையின் மீமிசைத் தோன்றியே யெம்பிரான் விளங்கப்
புடையின் வந்தவ ரல்லது திருநகர்ப் புறத்துக்
கடையின் நின்றவர் யாவருங் கண்டுகண் களியா
அடைய வேபணிந் தேத்தினர் அளக்கரின் ஆர்த்தார்.

இ—ள்: எம் பிரான் விடையின் மீமிசை தோன்றி விளங்க—எங்கள் தலை வராகிய சிவபிரான் இடபவாகனத்தின் மீதெழுந்தருளிக் காட்சிப்பட, புடை யின் வந்தவர் அல்லது திரு நகர் புறத்து கடையில் நின்றவர் யாவரும் கண்டு— பக்கத்தில் உடனின்று வந்தவர்களேயன்றிச் சிறந்த அந்நகரத்தின் புறத்தி லுள்ள வாயிலில் நின்றவர்களனைவருந் தரிசித்து, கண் களியா—நேத்திரானந்த முற்று, அடைய பணிந்து ஏத்தினர்—ஒருசேர வணங்கித் துதித்து, அளக்கரின் ஆர்த்தார்—கடல்போல ஆரவாரித்தார்கள் எ—று.

ஏத்தினர்-முற்றெச்சம். நகர்ப்புறத்து நின்றார்க்குப் பரிசனச் சூழ்வான் மறைக்கப்படாது தரிசனப்படவென்பார் 'விளங்க' என்றார். நகர்ப்புறத்துக் கடையினின்றோர் உட்புகுந்த உருத்திரர் பூதத்தலைவர் முதலியோரின் சேனை களும் பிறருமாம். (3)

நந்தி மேல்கொண்டு நந்திமே வுறுதலும் நந்தித்
தந்தி மாமுகத் தவுணர்கோன் அலரமத் தடிந்தோன்
ஐந்து நூற்றெழு கோடிபூ தப்படை யணுக
வந்து வந்தனை செய்துமுன் போயினன் மாதோ.

இ—ள்: நந்தி சிவபிரான், நந்திமேல் கொண்டு மேவுறுதலும்—இடப வாகனத்தின் மீதெழுந்தருளியிருத்தலும், மா தந்தி முகத்து அவுணர்கோன் நந்தி அலமர தடிந்தோன்—பெரிய யானை முகத்தையுடைய அசுரத் தலைவன் நிலைகெட்டுத் துன்பப்படும் வண்ணங் கொன்றவராகிய விநாயகக் கடவுள், ஐந்து நூற்று ஏழு கோடி பூத படை அணுக வந்து — ஐஞ்ஞூற்றேழு கோடி பூதசேனைகள்சூழ அங்ஙனம் வந்து, வந்தனை செய்து முன் போயினன்—வழி பாடு செய்து முன்சென்றார் எ—று.

நந்துதல் ஆக்கத்தையும் கேட்டையுமுணர்த்துமாயினுந் தகுதிநோக்கி ஈண் டுக் கெடுதலெனப் பொருள் கொள்ளப்பட்டது. வழியினேரும் விக்கினங்களைத் தீர்க்கவல்லரென்பது போதர 'நந்தித் தந்திமாமுகத்தவுணர்கோ னலமரத் தடிந்தோன்' எனவும், எக்கருமங்களினு முன்னிற்குமதிகாரத்தைச் சிவபிரா

னிடத்துப் பெற்றவாறே சென்றனராதலின் 'முன்போயினன்' எனவும் கூறினர். (4)

கதிருஞ் சோமனுங் கவிகையுஞ் சீகரம் காலும்
உததி யண்ணல்சாந் தாற்றியும் உம்பர்தங் கோமான்
புதிய கால்செயும் வட்டமு மெடுத்தனர் புடைபோய்
முதிரும் ஆர்வமோ டப்பணி புரிந்தனர் முறையால்.

இ—ள்: கதிரும் சோமனும் கவிகையும்—சூரியனுஞ் சந்திரனுங் குடையையும், கால் சீகரமும்—வாயுதேவன் சாமரத்தையும், உததி அண்ணல் சாந்தாற்றியும்—சமுத்திரராசனுகிய வருணன் சிற்றால வட்டத்தையும், உம்பர் தம் கோமான் புதிய கால் செயும் வட்டமும் எடுத்தனர்—தேவேந்திரன் புதிதாகிய பேரால வட்டத்தையுங் கைக்கொண்டு, புடை போய்—சிவபிரானது பக்கத்திற் சென்று, முதிரும் ஆர்வமோடு—மிகுந்த அன்புடன், முறையால் அப்பணி புரிந்தனர்—முறைப்படி அவ்வப்பணிகளைச் செய்தார்கள் எ—று.

கால்செயும் வட்டம்-காற்றையுண்டாக்கும் வட்டம். கவிகையை நிழற்றினர் சாமரத்தையுஞ் சிற்றாலவட்டத்தையும் வீசினர் பேராலவட்டத்தை அசைத்தனர் என்பார் 'அப்பணி புரிந்தனர் முறையால்' என்றார். அவ்வப்பணி அப் பணி யெனத் தொக்கது. (5)

பேரி கொக்கரை சல்லிகை கரடிகை பீலி
சாரி கைத்துடி தண்ணுமை கிடமுழாத் தடாரி
போரி யற்படு காகளம் வயிர்முதற் புகலுஞ்
சீரி யத்தொகை இயம்பினர் பாரிடத் திறலோர்.

இ—ள்: பேரி—பேரிகையும், கொக்கரை—கொக்கரையும், சல்லிகை—சல்லரியும், கரடிகை—கரடிகையும், பீலி—பீலியும், சாரிகை துடி—(இருபுறமும்) வட்டவடிவாயமைந்த உடுக்கும், தண்ணுமை—மத்தளமும், குடமுழா—குடமுழாவும், தடாரி—தடாரியும், போர் இயல் படு காகளம்—போர்க்குரிமை யாமியல்பினையுடைய காகளமும், வயிர் முதல் புகலும் சீர் இய தொகை—ஊதுகொம்பும் முதலாகச் சொல்லப்படுகின்ற சிறந்த வாத்திய பேதங்களை, பாரிட திறலோர் இயம்பினர்—பூதவீரர்கள் முழக்கினார்கள் எ—று. (6)

அத்தன் ஏவலால் உருத்திரர் குழுவுமா லயனும்
மெய்த்த வம்புரி முனிவரும் ஏனைவிண் ணவரும்
மொய்த்த தேரோடு மானமாப் புள்ளிவை முதலாந்
தத்த மூர்திமேல் கொண்டனர் செய்பணி தவாதோர்.

இ—ள்: உருத்திரர் குழுவும்—உருத்திர கணத்தவர்களும், மால் அயனும்—விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவரும், மெய் தவம் புரி முனிவரும் ஏனை விண்ணவரும்—மெய்ம்மையாகிய தவத்தைச் செய்கின்ற முனிவர்களும் ஏனைய [மாலயனல்லாத] தேவர்களும், அத்தன் ஏவலால்—சிவபிரானது ஏவலால்—சிவபிரானது ஏவலின்படி, செய் பணி தவாதோர்—தாந்தாஞ் செய்யுந் தொண்டுகளிற்றவறாதவர்களாய், மொய்த்த தேரொடு மானம் மா புள் இவை முதல் ஆம் தத்தம்

ஊர்திமேல் கொண்டனர்—கூட்டமாகிய தேரும் விமானமும் மிருகமும் பறவையு மென்னு மிவை முதவாகிய தங்கள் தங்கள் வாகனங்களிலேறினர்கள் எ—று.

மா: ஐராவத முதலியன. புள்: கருடன் அன்ன முதலியன. நீவிரனை வீரும் நும்வாகனங்களிலேறி வருதிரென்று சிவபிரான் பணித்தபின்னென்பார் 'அத்தனேவலால்' எனவும், குடை பிடித்தல், கவரிவீசன் முதலாகிய திருத் தொண்டுகளையெல்லாம் வாகனரூடரா யியற்றினராதலின் 'தத்தமூர்திமேல் கொண்டனர் செய்பணிதவத்தோர்' எனவும் கூறினர். அயனுமென்பதிலுள்ள எண்ணும்மை மாலுக்குங் கூட்டப்பட்டது. (7)

தாழ்ந்து தன்பணி புரியுமத் தலைவருந் தவத்தாற்
காழ்ந்த நெஞ்சுடைப் பூதரு மேனைய கணமுஞ்
சூழ்ந்து சென்றிடக் கயிலையை அகன்றுதொல் லுலகம்
வாழ்ந்தி டும்படி யேகினன் இமையமால் வரைமேல்.

இ—ள்: தாழ்ந்து தன் பணி புரியும் அ தலைவரும்—பணிந்து தமது திருத் தொண்டுகளைச் செய்கின்ற அந்தத் தலைவர்களும், தவத்தால் காழ்ந்த நெஞ்சு உடை பூதரும்—தவத்தில் நிலைப்பட்ட சித்தத்தையுடைய பூதர்களும் ஏனைய கணமும்—ஏனைய கூட்டத்தார்களும், சூழ்ந்து சென்றிட—தம்மைச் சூழ்ந்துவர, கயிலையை அகன்று—(சிவபிரான்) திருக்கைலாச மலையை நீங்கி, தொல் உலகம் வாழ்ந்திடும்படி—பழைய உலகத்திலுள்ளார் வாழும்படியாக, இமயமால் வரை மேல் ஏகினன்—இமயமாகிய பெரிய மலையின்மேற் சென்றருளினர் எ—று.

தவத்தாற் காழ்ந்த நெஞ்சென்றதில் மூன்றனுருபு எழனுருபாகத் திரிக்கப்பட்டது. வைரமான என்னும் பொருளதாய காழ்ந்த என்பது தாற்பரிய வலக்கணை யாய் நிலையையுணர்த்தியது. உலகம் ஆகுபெயர். சென்றிட-ஏகினன் என வியையும். அகன்றென்பது ஏகுதற்குத் துணைவினை. தன் மாணுக்கர் பயிலும் வண்ணம் நாடகனொருவன் நடித்துக்காட்டியாங்கு உலகத்தார் வேதவிதிப்படி மணமியற்றிச் சிற்றின்ப நுகரும் வண்ணந் திருமணமியற்றப் புகுந்தனராதலின் தொல்லுலகம் வாழ்ந்திடும்படியேகினன்' என்றார். முன்னர்க் கணங்கள் செல்பட லத்திலும் 'உலக முய்ந்திட வெம்பிரான் மணம்புரியுண்மை' என்றார். இவ்வுண் மையை 'தென்பாலுகந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன்-பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ-பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்-விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ' எனவும், 'மலையரையன் பொற் பாவை வாணுதலாள் பெண்டிருவை-யுலகறியத் தீவேட்டா னென்னுமது வென் னேடீ யுலகறியத் தீவேளா தொழிந்தனனே லுலகனைத்துங்-கலைநவின்ற பொருள் களெல்லாங் கலங்கிடுங்காண் சாழலோ' எனவும் வருந் திருவாசகங்களானு முணர்க. (8)

வார்ப்பெ ரும்பணை யாதிய வரம்பில்பல் லியத்தின்
ஆர்ப்பு மெங்கணும் வெள்ளிடை யின்றியே யகல்வான்
தூர்ப்பின் ஈண்டிய தானையின் ஓதையுஞ் சுரர்கண்
ஆர்ப்பும் வாழ்த்தொலி அரவமும் புணரியுண் டெழுமால்

இ—ள்: வார் பெரும் பணை ஆதிய வரம்பு இல் பல் இத்தின் ஆர்ப்பு—வாரிறுக்கிய பெரிய முரசு முதலாகிய அளவிறந்த பல வாத்தியங்களின் முழக்கமும், எங்கணும் வெள் இடை இன்றி அகல் வான் தூர்ப்பின் ஈண்டிய

வில் ஒரு பதம் தாங்கி—வருத்தத்தோடு ஒரு நாழிகையளவுஞ் சுமந்து, பேர்த்து ஒரு பதம் இட பெருது—மீட்டு ஒரு கால் தூக்கி வைக்கவும் இயலாமல், வல்லைபோய்—விரைந்து சென்று, ஆர்த்திடு கங்கையின் அகத்து உய்த்தான்—ஒலிக்கின்ற கங்கை நதியிலிட்டான் எ—று.

தன்னுற் சுமந்து கொள்வது கூடாதாயினும் கங்கை நதியை யணுகும் வரையும் ஒருவாறு சுமந்து செல்லவேண்டுமென்று கருதி விரைந்து சென்றுணுதலின் 'வல்லை போய்' எனவும், அங்ஙனஞ் சென்ற பின்னர் ஓரடிதானுந் தூக்கிவைத்தற்கேலாத பெருஞ் சிரமமுடையனுயினனென்பார் 'பேர்த்தொருபத மிடப்பெருது' எனவும் கூறினர். இடவுமென்பதிலிழிவு சிறப்பும்மை தொக்கது. (85)

கூர்சுடர்ப் பண்ணவன் கொடுவந் துய்த்திடும்
ஆர்சுடர்த் தொகுதிவந் தடைய மூவெயில்
ஊர்சுடச் சிவந்தகண் ணொருவன் துப்புறழ்
வார்சடைக் கரந்தென வறந்த கங்கைநீர்.

இ—ள்: கூர் சுடர் பண்ணவன் கொடுவந்து உய்த்திடும் ஆர் சுடர் தொகுதி வந்து அடைய—மிகுந்த ஒளியினையுடைய அக்கினிதேவன் கொண்டுவந்திட்ட நிறைந்த பொறிக் கூட்டங்கள் வந்துசேர, மூ எயில் ஊர் சுட சிவந்த கண் ஒருவன் துப்பு உறழ் வார் சடை கரந்து என—முப்புரங்களை யெரிக்கும் பொருட்டுச் சிவந்த கண்ணையுடைய ஒப்பற்ற சிவபிரானது பவளம் போன்ற நீண்ட சடையில் (முற் காலத்தில்) மறைந்தாற்போல, கங்கைநீர் வறந்த—கங்கை நதி வற்றியது எ—று.

எயில் ஊர் ஒரு பொருண் மொழிகள். கண் சிவத்தல் கோபக் குறியாதலின் 'மூவெயிலூர் சுடச் சிவந்தகண்' என்முர். ''சூரன் மாயச் சிறிது கடைக்கண் சிவந்த சேவகன்'' என்முர் பிரமோத்தர காண்டத்தாரும். சிவந்த சடையென்பார் 'துப் புறழ்-சடை' என்முர். பொறிக்குச் சடையுபமானமென்க. கங்கை சடையிற் கரந்த சரித்திரம் முன்னருரைக்கப்பட்டது. (86)

அரனருள் முறையினை யறிந்து கங்கைதன்
சிரமிசை யேந்தியே சென்றுேர் கன்னலிற்
சரவண மெனுந்தடந் தன்னிற் சேர்த்தனள்
மரையித ழாயிடை மல்குற் றுலென.

இ—ள்: கங்கை—கங்காதேவி, அரன் அருள் முறையினை அறிந்து—சிவபிரா னருளிச் செய்த முறையை யுணர்ந்து, தன் சிரமிசை ஏந்தி ஓர் கன்னலில் சென்று—தனது சிரசின் மேற்றுங்கி ஒரு நாழிகையளவிற்போய், மரை இதழ் ஆயிடை மல் குற்றுல் என—தாமரை மலரினிதழ்கள் அத் தடாகத்தே செறிந்தாற் போலிருக்கும் படி, சரவணம் எனும் தடம் தன்னில் சேர்த்தனன்—சரவணமென்னும் பெயரை யுடைய தடாகத்திற் புகுவித்தான் எ—று.

அரனருண் முறையென்றது-கங்கை சரவணத்திற் சேர்ப்பளெனச் சிவபிரான் வாயுதேவனுக்கும் அக்கினி தேவனுக்குங் கூறியதை. மரை-முதற்குறை. (87)

ஆவயின் காறும்வந் தரிய யன்முதல்
தேவர்கள் உவகையால் தெரிந்து சூழ்ந்தனர்
மேவர அணியதாம் விளைவு நாடியே
காவல்கொள் நிரப்புடைக் காத லோரென.

இ—ள்: அரி அயன் முதல் தேவர்கள்—விஷ்ணுமூர்த்தியும் பிரமாவு முதலிய தேவர்கள், ஆவயின் காறும் வந்து—அவ்விடம் வரையும் வந்து, உவகையால் தெரிந்து—(அந் நிகழ்ச்சிகளை) மகிழ்வோடுங் கண்டு, மேவர அணியது ஆம் விளைவு நாடி காவல் கொள் நிரப்பு உடை காதலோர் என—பயன்பெறுதற்குக் கால நெருங் கப் பெற்ற விளைவை நோக்கிக் காவல் செய்கின்ற வறுமையினையுடைய பேராசை யாளர் போல, சூழ்ந்தனர்—வளைந்து காத்தார்கள் எ—று.

பேராசையுடைய வறிஞர் விளைந்த தானிய முதலியவற்றைப் பெற்றுக் கொள் ளுங் காலம் வரை குறிக்கொண்டு காத்தல் போலத் தேவர்களும் முருகவேள் குழந்தை யுருவாய் வரும்வரை பொறிகளைக் குறிக்கொண்டு காத்தனரென்க. (88)

ஆரணன் விண்ணகம் அச்சு தன்புவி
வாரணன் முதலிய மாதி ரத்துளோர்
ஏரண வமரர்கள் எண்டிக் காதியே
சீரணி சரவணஞ் சேர்ந்து போற்றினார்.

இ—ள்: ஆரணன் விண்ணகம்—பிரமதேவர் ஆகாயத்தினும், அச்சுதன் புவி—விஷ்ணுமூர்த்தி பூமியினும், வாரணன் முதலிய மாதிரத்து உளோர்—இந்திரன் முத லிய திக்குப் பாலகர்களும், ஏர் அணவு அமரர்கள்—அழகு பொருந்திய ஏனைத் தேவர்களும், எண் திக்கு ஆகி—எட்டுத் திக்குகளினுமாகி, சீர் அணி சரவணம் சேர்ந்து போற்றினார்—சிறப்புப் பொருந்திய சரவண தடாகத்திற் பொருந்தியிருந்து காவல் செய்தார்கள் எ—று.

வாரணன்-வாரணத்தை யூர்தியாகவுடையவன். வாரணம்-ஐராவதயானை. (89)

வேறு

கங்கையு மொல்கப் புக்க கடுங்கனற் கடவுட் சோதி
அங்கிரு மூன்று முன்னர் அம்மைவாழ் இமையச் சாரற்
றங்கிய கமலம் பூத்த சரவணம் புகலும் முக்கட்
புங்கவன் அருளால் தொன்மை போன்றது வறத்த லின்றி.

இ—ள்: கங்கையும் ஒல்க புக்க கடும் கடவுள் கனல் சோதி இரு மூன்றும்—கங்கை நதியும் வற்றும்படி வந்த கடுமையாகிய தெய்வீகமமைந்த அக்கினிப் பொறி களாறும், முன்னர் அம்மை வாழ் இமய சாரல் தங்கிய கமலம் பூத்த சரவணம் புக லும்—முன்னரே பார்ப்பதிதேவி வாழ்ந்திருந்த இமயமலையின் சாரலிற் பொருந்திய தாமரை மலர்களலரப்பெற்ற சரவண தடாகத்திற் சேர்தலும், முக்கண் புங்கவன் அருளால்—மூன்று திருக்கண்களையுடைய சிவபிரானது கிருபையினால், வறத்தல் இன்றி தொன்மை போன்றது—(அந் நதியானது) வற்றுதலின்றிப் பழமை போலப் பெருகியது எ—று.

அங்கு-அசைநிலை. முன்னைய உம்மை உயர்வு சிறப்பு. (90)

விண்ணிடை யிழிந்த காலின் மேவரு கனலில் தோன்றும்
வண்ணவொண் கமலஞ் செய்ய முளரியை மாற தாகத்
தண்ணளி யோடு நல்கித் தரித்தெனச் சரவ ணப்பேர்க்
கண்ணகன் பொய்கை ஈசன் கட்டழல் மிசைக்கொண் டன்றே.

இ—ள்: விண்ணிடை இழிந்த காலின் மேவரு கனலில் தோன்றும் வண்ண ஒண் கமலம்—ஆகாயத்தினின்றுதித்த காற்றினின்றுந் தோன்றிய அக்கினியிலுற்பவித்த அழகிய ஒளி பொருந்திய நீரானது, மாறது ஆக—தோற்ற முறைக்கு விபரீதமாக, செய்ய முளரியை தண்ணளியோடு நல்கி தரித்து என—சிவந்த அக்கினியை இரக்கத்தினுடன் றோற்றுவித்துச் சுமந்து கொண்டாற்போல, கண் அகன் சரவண பேர் பொய்கை—இடமகன்ற சரவணமென்னும் பெயரையுடைய தடாகம், ஈசன் கண் தழல் மிசை கொண்டன்று—சிவபெருமானது நெற்றிக் கண்களினின்று தோன்றிய அக்கினியை மேலே தரித்துளது எ—று.

ஈண்டு கமலம்-நீர். முளரி-அக்கினி. தத்துவங்கடோன்றும் பொழுது, ஆகாச தத்துவத்தினின்று வாயு தத்துவமும், வாயு தத்துவத்தினின்று தேயுதத்துவமும், தேயு தத்துவத்தினின்று, அப்பு தத்துவமுந் தோன்றுதலியல்பாதலின் 'விண்ணிடையிழிந்த காலின் மேவரு கனலிற்றோன்றும் வண்ணவொண் கமலம்' என்றார். மாறென்றது தன் தோற்றுகைக்கு முதலாயிருக்கின்ற அக்கினியைத் தான் தோற்றுவித்தலே. அங்ஙனந் தோற்றுவித்துத் தரித்தவழி அவ்வக்கினி தன்னாலழிவுபடாதென்பார் 'தண்ணளியோடு' என்றார். (91)

அருவமு முருவு மாகி அநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலக முய்ய

இ—ள்: அருவமும் உருவும் ஆகி—உருவமற்றதும் உருவமுடையதுமாகியும், அனாதி ஆய்—தமக்கோர் முதலற்றதாகியும், பல ஆய்—பல பொருளாகியும், ஒன்றாய்—ஒரு பொருளாகியும், பிரமம் ஆய் நின்ற சோதி பிழம்பது ஓர் மேனி ஆக—பிரமமென்னும் பெயர்த்தாகியும் நின்ற சோதிப் பிழம்பே ஒரு திருமேனியாக, கருணை கூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டு—கிருபை மிக்க ஆறு திருமுகங்களையும் பன்னிரண்டு திருக்கரங்களையுங் கொண்டு, உலகம் உய்ய—உலகத்தாருய்யும்படி, ஆங்கு ஒரு திரு முருகன் வந்து உதித்தனன்—அவ்விடத்து ஒரு சிறந்த குமாரர் வந்து தோற்றியருளினார் எ—று.

சிவபிரான் மெய்ஞ்ஞானியர்களாலருவமாகவும் ஏனையோராலுருவமாகவும் பாவிக்கப்படுதலின் 'அருவமு முருவுமாகி' எனவும், எல்லாத் தத்துவங்களுந் தம்மிற்றோன்றத் தாம் அவற்றிற்கு முதலாகித் தமக்கு முதல் பிறிதொன்றிலதாய் நிற்றலின் 'அனாதியாய்' எனவும், ''ஏகம்ஸத்விப்ராபகுதாவதந்தி'' (ஒரு கடவுளையே அறிஞர் பலவாகக் கூறுகின்றனர்) என்றபடி பல பொருளாய் நிற்றலின் 'பலவாய்' எனவும், ''ஏகஏவருத்ர:'' (உருத்திரன் ஒருவரே) என்றபடி ஒன்றாய் நிற்றலின் 'ஒன்றாய்' எனவும், ''நிரஸ்த ஸமஸ்தோபப்லவ களங்க நிரதிசய ஜ்ஞானாநந்தாதி சக்தி மகிமாதி சயவத்வம்ஹிப்ர்ம்மத்வம்'' (எல்லாத் துயர்களையும் மலங்களையு நீங்கி மிக மேலாகிய ஞானம் ஆநந்தம் முதலிய சத்தி மகிமைகளை மிகுதியாக வுடைமையே பிரமத்துவமாம்.) எனப் பிரமசூத்திர பாஷ்யகர்த்தருரைத்த இலக்கணத்தையுடையவென்பார் 'பிரமமாய் நின்ற' எனவும், ''ஆதித்யேநயதாஹீநம் தமோபூதமிதம்ஜகத் சிவேநாபிவிநா தத்வத்தமோ பூதமிதம்ஜகத்'' (சூரியனில்லாதவழி உலகம் இருளாதல் போலச் சிவமில்லாத வழியும் இவ்வுலகம் இருண்மயமாம்) எனப் புராணங்கள் கூறுதலின் 'சோதிப்பிழம்பு' எனவும், அப் பிழம்பு ஐந்து திருமுகங்களும் பத்துத் திருக்கைகளுமமையச் சிவரூபமாயிருப்பது போலவே ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கைகளுமமையக் குமாரரூபமாய்த் தோன்றியதென்பார்

'சோதிப் பிழம்பதோர் மேனியாக... ஒரு திருமுருகன்... உதித்தனன்' எனவும் கூறி ஞர். சிவபிரானே குமாரக் கடவுளாயினரென்பதை ''செம்மைய ஞான சத்தித் திருவுருக் கொண்ட செம்மலெம்மின்வே றல்லன் யாமு மவனின்வே றல்லேங் கண்டீர்'' எனவும், ''உருவம் வேறன்றி யைந்து முகனறு முகனென் றேதுந்—திரு வுரு விரண்டன் மாட்டுஞ் சிவமெனும் யாமே மன்றப்—பொருவிலாருயிராய் நிற் பேம்'' எனவும் தணிகைப் புராணங் கூறுதலானுமறிக. உலகம் ஈண்டு உயிர்களின் மேற்று. (92)

தோன்றல்வந் திடலும் விண்பால் துந்துபி கறங்க லுற்ற
ஆன்றதொல் மறைக ளெல்லாம் ஆர்த்தன அயனும் மாலும்
வான்றிகழ் மகத்தின் தேவும் முனிவரும் மலர்கள் தூவி
ஏன்றெமை யருளு கென்றே ஏத்திசை யெடுத்துச் சூழ்ந்தார்.

இ—ள்: தோன்றல் வந்திடலும்—இவ்வாறு குமாரக்கடவுள் திருவவதாரஞ் செய்தலும், விண் பால் துந்துபி கறங்கலுற்ற—தேவதுந்துபிகள் முழங்கின, ஆன்ற தொல் மறைகள் எல்லாம் ஆர்த்தன—சிறந்த பழைய வேதங்களெல்லாம் ஆரவாரித் தன, அயனும் மாலும் வான் திகழ் மகத்தின் தேவும் முனிவரும்—பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும் சுவர்க்க லோகத்தில் விளங்குகின்ற யாகாதிபனுகிய இந்திரனும் முனிவர்களும், மலர்கள் தூவி ஏன்று—புஷ்பாஞ்சலி செய்து நின்று, எமை அருளுக என்று ஏத்திசை எடுத்து சூழ்ந்தார்—எம்மைக் காத்தருள்கவென்று துதிசெய்து வளைந்தார்கள் எ—று.

ஏலுதல்—பொருந்துதல். (93)

ஏவர்தம் பாலு மின்றி யெல்லைதீர் அமலற் குள்ள
மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்த தென்னப்
பூவியல் சரவ ணத்தண் பொய்கையில் வைகும் ஐயன்
ஆவிகள் அருளு மாற்றுல் அறுமுகங் கொண்டா னன்றே.

இ—ள்: ஏவர் தம் பாலும் இன்றி எல்லை தீர் அமலற்கு உள்ள மூவிரு குண னும்—மற்றெவரிடத்திலுமில்லாமற் பிரமாணுதீதராகிய சிவபிரானிடத்து மாத் திரமமைந்துள்ள ஆறு குணங்களும், சேய்க்கு முகங்கள் ஆய் வந்தது என்ன—குமா ரக்கடவுளுக்கு ஆறுமுகங்களாகப் பொருந்தினுற்போல, பூ இயல் தண் சரவண பொய்கையில் வைகும் ஐயன்—மலர்கள் பொருந்திய குளிர்ந்த சரவண தடாகத்தில் வீற்றிருக்கின்ற குமாரக்கடவுள், ஆவிகள் அருளும் ஆற்றுல் அறுமுகம் கொண் டான்—ஆன்மாக்களை இரட்சிக்கும் பொருட்டு ஆறு திருமுகங்களைக் கொண்டவ தரித்தார் எ—று.

ஏவர்தம்பாலுமின்றி யெல்லைதீரமலற்குள்ள மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங் களாய் வந்ததென்ன அறுமுகங் கொண்டானெனவே, இவ்வறு குணங்களையும் பிறர்க் குச் சார்த்திக் கூறுதல் தவறுமென்பதும், குமாரக்கடவுளுக்குச் சார்த்திக் கூறுதறவ றுகா தென்பதும் பெற்றும். ஆறு குணங்கள் முன்னர்க் கடவுள் வாழ்த்தின் மூன் றுஞ்செய்யுளினுரைக்கப்பட்டன. (94)

மல்லலம் புவனத் துள்ள மன்னுயிர்க் கணங்கட் கெல்லாம்
ஒல்லையின் மகிழ்ச்சி யெய்தி உவகையின் குறிப்புண் டான
தொல்லையில் அவுண ருகுஞ் சூரனே முதலா வுள்ள
எல்லவர் தமக்கும் மாயும் இருங்குறிப் புற்ற அந்நாள்.

இ—ள்: அ நாள்—(குமாரக்கடவுளவதரித்த)அத்தினத்தில், மல்லலம் புவனத்து உள்ள மன் உயிர் கணங்கட்கு எல்லாம்—வளப்பம் பொருந்திய உலகத்திலுள்ள நிலைபெற்ற ஆன்ம வர்க்கங்களனைத்திற்கும், ஒல்லையில் மகிழ்ச்சி எய்தி உவகையின் குறிப்பு உண்டான—விரைவில் மகிழ்ச்சி தோன்றி நன்னிமித்தங்களுண்டாயின, தொல்லையில் அவுணன் ஆகும் சூரன் முதல் ஆ உள்ள எல்லவர் தமக்கும்—பழமை பொருந்திய அசுரனாகிய சூரபன்மன் முதலாகவுள்ள அனைவர்க்கும், மாயும் இரும் குறிப்பு உற்ற—இறத்தற்கேற்ற பெரிய நிமித்தங்களுண்டாயின எ—று.

நன்னிமித்தம்-வலத்தோள் துடித்தல் முதலியன. துன்னிமித்தம்-இடத்தோள் துடித்தல் முதலியன. (95)

மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினால் அளக்கொ ணாமல்
நிறைவுடன் யாண்டு மாகி நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக வுருவாய்த் தோன்றி அருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதின் வீற்றிருந் தருளி னானே.

இ—ள்: மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினால் அளக்கொணாமல்—வேதாந்தத்தினாலும் வாக்கினாலும் மனத்தினாலும் அளவிடுதற்கதீதமாகி, நிறைவுடன் யாண்டும் ஆகி நின்றிடும் நிமல மூர்த்தி—நிறைந்து எங்குமாய் நின்ற நிமலராகிய சிவபிரான், அறுமுக உரு ஆய் தோன்றி—ஆறுமுகத் திருவுருவங் கொண்டெழுந்தருளி, அருளொடு—கிருபையினுடன், சரவணத்தின் வெறி கமழ் கமல போதின் வீற்றிருந்தருளினான்—சரவண தடாகத்திலுள்ள வாசனை கமழுகின்ற தாமரை மலரில் வீற்றிருந்தருளினார் எ—று. (96)

பாங்குறு தருச்சூழ் காலாப் பஃறழைச் சினைமென் கொம்பர்
நீங்கறப் புடைபோய் வானின் நிரந்தன பந்த ராகத்
தூங்கிய பழனுங் காயுந் துணர்களும் அகத்துட் டுன்ன
ஆங்கதன் நடுவட் பொய்கை அணிநிழல் அமர்ந்தான் ஐயன்.

இ—ள்: பாங்கு உறு தரு சூழ் கால் ஆ—(அப்பொய்கையின்) பக்கங்களிற் பொருந்திய மரங்கள், சூழ நாட்டிய தூண்களாகவும், நீங்கு அற படை போய் வானில் நிரந்தன பல் தழை சினை மென் கொம்பர் பந்தர் ஆக—இடைவெளியின்றிப் பக்க நோக்கி நீண்டு ஆகாயத்தில் நிரம்பியிருக்கின்ற பல தழைகள் பொருந்திய கிளைத்த மெல்லிய கொம்புகள் பந்தராகவுமமைய, தூங்கிய பழனும் காயும் துணர்களும் அகத்துள் துன்ன—தூங்குகின்ற பழங்களும் காய்களும் பூங்கொத்துக்களும் (அப்பந்தரை அலங்கரிப்பனவாய்) உள்ளே பொருந்த, ஐயன்—குமாரக் கடவுள், அதன் நடுவண்—அப் பந்தரினடுவே, பொய்கை அணி நிழல் அமர்ந்தான்—சரவண தடாகத்திலுள்ள அழகிய நிழலில் வீற்றிருந்தார் எ—று.

பாங்கென்றது கரையை. நீங்கு-முதனிலைத் தொழிற்பெயர். பந்தர் பழன் என்பன மொழியீற்றுப்போலி. கரையினிற்கின்ற மரங்கள் தடாகத்தின் மேல் வெளி முற்றினும் பரக்குமாறு பல தழைகளையுடைய கொம்பர்களைப் பரப்பிப் பழங்களும் காய்களும் பூங்கொத்துக்களும் உள்ளே தூங்க அமைதலின் பந்தர் போன்றன வென்க. (97)

முடிபொரு தசையும் நாகர் முதியகால் பலகை வையந்
தொடர்கரை மரனே வானந் தூங்குபன் ஞணந் தெண்ணீர்த்
தடமலர் பாய லாகச் சரவண மஞ்ச மீதில்
அடைதரு மைந்தன் மென்கால் அசைப்பவீற் றிருந்தா னன்றே.

இ—ள்: முடி பொருது அசையும் நாகர் முதிய கால் (ஆக)—தலையினுற் பாரத்தைச் சுமக்கலாற்ருமையா லசைகின்ற சர்ப்பங்கள் பழைய கால்களாகவும், வையம் பலகை (ஆக)—பூமி பலகையாகவும், கரை தொடர் மரனே வானம் தூங்கு பல் நாணம் (ஆக)—கரையின் கண்ணே நிரைபட்டு நிற்கின்ற மரங்களே ஆகாயத்திற் றூங்குகின்ற பல கயிறுகளாகவும், தெள் நீர் தட மலர் பாயல் ஆக—தெளிந்த நீர் பொருந்திய தடாகத்திலுள்ள தாமரை மலர் சயனமாகவும் பொருந்த, சரவண மஞ்சம் மீதின் அடைதரும் மைந்தன்—சரவணப் பொய்கையாகிய மஞ்சத்திலெழுந்தருளிய குமாரக்கடவுள், மென் கால் அசைப்ப வீற்றிருந்தான்—இளந் தென்றற் காற்றசைக்க வீற்றிருந்தருளினுர் எ—று.

மான்-மொழியீற்றுப்போலி. ஏகாரம்—தேற்றம். நாணமென்பதில் அம்-பகுதிப் பொருள் விகுதி. அட்டமா நாகங்களும் ஆதிசேடனும் தண்டாகிருதியாகப் பூமியின்கீழ் நிற்பனவாதலின் அவற்றைக் கால்களாகவும் அவற்றின் றலைமேற் பொறுத்துளதாதலிற் பூமியைப் பலகையாகவும் அப் பூமியினடுவணதாகிய சரவணப் பொய்கையின் மலர்ந்திருத்தலின் தாமரை மலரைச் சயனமாகவும் அணுகியும் அகன்றுமின்றி ஒன்ருேடொன்ருெத்த தூரத்தினவாய்க் கரையினிற்றலின் மரங்களை ஊஞ்சற் கயிருகவும் அவற்றையசைத்தலின் இளந் தென்றலை ஊஞ்சலாட்டுவாராகவும் வருணித்துக் கூறினர். பலகையுங்காலும் அசைதற்கேதுத் தோன்ற 'முடிபொருதசையுநாகர்' என்ருர். (98)

எண்பெரு நாகர் சேடன் ஏந்தெழில் அரிமா ஞகத்
தண்பொலி புனற்பூம் பொய்கை தவிசுரு வாக நாள்கோள்
விண்படர் விதான மாக வேலையந் தலைவன் காலை
ஒண்பகல் ஆடி காட்ட உமைமகன் அங்கண் உற்ருன்.

இ—ள்: எண் பெரும் நாகர் சேடன் ஏந்து எழில் அரிமான் ஆக—அட்டமா நாகங்களும் ஆதிசேடனுஞ் சுமக்கின்ற அழகிய சிங்கங்களாகவும், தண் பொலி புனல் பூம் பொய்கை தவிசு உரு ஆக—குளிர்ச்சி மிகுந்த நீரினையுடைய மலர்த் தடாகம் ஆசனமாகவும், நாள் கோள் விண் படர் விதானம் ஆக—நட்சத்திரங்களுங் கிரகங்களும் மேலே பரந்த விதானமாகவும் (அமைய), வேலையம் தலைவன் காலை ஒண் பகல் ஆடி காட்ட—சமுத்திரராசனுகிய வருணன் காலையில் ஒளி பொருந்திய சூரியனுகிய கண்ணுடியைக் காட்ட, உமை மகன் அங்கண் உற்ருன்—உமாதேவியாரது குமாரராகிய முருகக்கடவுள் அத்தடாகத்தில் வீற்றிருந்தார் எ—று.

கீழே சிங்கமும் மேலே தவிசும் பொருந்த விதான முதலிய அலங்காரமுள்ள இடத்திற் சிங்காசனமமைதலும் அவ்வாசனத்திலிருப்போர் தினந்தோறுங் கண்ணுடி பார்ப்பதும் இயல்பாதலானிங்ஙனம் வருணித்தார். (99)

தரணியின் நடுவண் வைகுஞ் சரவணப் பொய்கை தன்னில்
விரைசெறி கமலப் போதில் வீற்றிருந் தருளுஞ் செவ்வேள்
பெருவடி வமைந்த மாயன் பிறங்கிய மனத்தில் தண்ணெனன்
றெரிசுடர் விளக்கத் துச்சி இருந்திடும் ஈசன் போன்ருன்.

இ—ள்! தரணியில் நடுவண்வைகும் சரவண பொய்கை தன்னில்-பூமியினடுவே தங்கிய சரவண தடாகத்தில், விரை செறி கமல போதில் வீற்றிருந் தருளும் செவ்வேள்—வாசனை பொருந்திய தாமரை மலரின் மேலெழுந்தருளியிருந்த குமாரக்கடவுள், பெரு வடிவு அமைந்த மாயன் பிறங்கிய மனத்தில் தண்ணென்று எரி சுடர் விளக்கத்து உச்சி இருந்திடும் ஈசன் போன்றான்—திரிவிக்கிரம ரூபங்கொண்ட திருமாலினது பிரகாசிக்கின்ற இருதயத்தில் தண்மைபெற்றெரிகின்ற ஞானதீபத்தினுச்சியில் வீற்றிருக்கின்ற சிவபிரானையொத்தார் எ—று.

தரணிக்கு மாயனும், சரவணப் பொய்கைக்கு மனமும், கமலப் போதிற்கு ஞான தீபமும், செவ்வேளுக்குச் சிவனு முபமானமென்க. திருமால் திரிவிக்கிரமரூபங் கொண்டமை முன்னருரைக்கப்பட்டது. (100)

பெருந்தரை நடுவ ணாகிப் பிறங்கிய சரவ ணத்தில்
இருந்தனிக் கமல மொன்றில் குமரவேள் இருந்த பான்மை
திருந்துநல் லண்டப் புத்தேள் சிந்தையாம் புண்ட ரீக
புரந்தனில் விரும்பித் தாதை வைகிய இயற்கை போலும்.

இ—ள்: குமரவேள்—குமாரக்கடவுள், பெரும் தரை நடுவண் ஆகி பிறங்கிய சரவணத்தில்—பெரிய பூமியினடுவே பொருந்தி விளங்குகின்ற சரவண தடாகத்தில், இரும் தனி கமலம் ஒன்றில் இருந்த பான்மை—பெரிய ஒப்பற்ற ஓர் தாமரை மலரின் மேல் வீற்றிருந்த தன்மை, திருந்தும் நல் அண்ட புத்தேள் சிந்தை ஆம் புண்டரீக புரம் தனில்—சிறந்த நல்ல பிரமாண்டமாகிய விராட்புருடனது இருதய கமலத்தானமாகிய சிதம்பரத் தலத்தில், தாதை விரும்பி வைகிய இயற்கை போலும்—பிதாவாகிய சிவபிரான் விரும்பி வீற்றிருக்கின்ற தன்மையைப்போலும் எ—று.

விராட்புருடனுக்கு இருதயத்தானஞ் சிதம்பரமென்பதை ''திருவளரரூர்மூலந் திருவானைக் காவே நாபி-மருவளர் பொழில்சூழண்ணா மலைமணி பூர நீவி-ரிருவருங் கண்ட மன்ற மிதயமாம்'' என்னுந் திருவிளையாடற்புராணச் செய்யுளானும் ''விண்டலமே போற்றும் விராட்புருட ஹிதய-புண்டரிக மான புலியூரே'' என்னும் புலியூர் வெண்பாவானுமறிக. (101)

பாசிலை பரவித் துள்ளி படுவன உடுவைப் பாக
வீசுசை வலங்கா ராக வேறுசூழ் கமல மெல்லாம்
மாசறு பகலோ ராக அவற்றிடை மலர்ந்த கஞ்சந்
தேசுடை இரவி யாகச் சிவனெனச் சேய்அங் குற்றான்.

இ—ள்: பாசு இலை பரவி படுவன துள்ளி உடுவைப்பு ஆக—பசிய இலைகளிற் பரந்து தோன்றுவனவாகிய நீர்த்துளிகள் நட்சத்திர மண்டலமாகவும், வீசு சைவலம் கார் ஆக—அசைகின்ற பாசிகள் மேகமாகவும், வேறு சூழ் கமலம் எல்லாம் ஆசு அறு பகலோர் ஆக—வேறாகச் சூழ்ந்திருக்கின்ற தாமரை மலர்களெல்லாங் குற்றமற்ற சூரியர்களாகவும், அவற்றிடை மலர்ந்த கஞ்சம் தேசு உடை இரவி ஆக—அவற்றினடுவே மலர்ந்திருக்கின்ற தாமரை மலர் ஒளி பொருந்திய சிவ சூரியனாகவும் இருப்ப, சேய்—குமாரக்கடவுள், அங்கு—அத்தாமரை மலரில், சிவன் என உற்றான்—சிவபிரான் வீற்றிருப்பதுபோல வீற்றிருந்தார் எ—று.

தாமரையிலையிற்பட்ட நீர்த்துளிகள் அவ்விலையிற் பற்றாது வேறாகித் திரண்டு பலவிடங்களினும் பரவியிருத்தலின் நட்சத்திர மண்டலங்களாகவும், பாசிகள் கருநிறமுடையனவாய்ப் படர்ந்து நீரசையுந் தோறுமசைதலின் மேகமாகவும், தாமரை

மலர்கள் வட்ட வடிவினவாய் மலர்ந்து விளங்குதலின் சூரியர்களாகவும், அவற்றினடு விலுள்ள மலர் சிறப்பும் பொலிவு மிகவுடைத்தாதலின் சிவசூரியனுகவும் குமாரக் கடவுள் அத்தாமரை மலரினடுவே எழுந்தருளியிருத்தலின் சிவசூரியனுக்கு, மத்தியில் வீற்றிருக்கின்ற சிவபிரானுகவும் உவமிக்கப்பட்டமை காண்க. (102)

மாலயன் எழிலி மேலோன் வானவ ரேனோர் யாரும்
பாலுற மரனு மாவும் பறவையும் பிறவுஞ் சூழ
ஏலுறு குமரன் கஞ்சத் திருந்தது பரமன் ஆதிக்
காலையின் உயிர்கள் நல்கிக் கமலமேல் இருத்தல் போலும்.

இ—ள்: மால் அயன் எழிலி மேலோன் வானவர் ஏனோர் யாரும் பால் உற—விஷ்ணுமூர்த்தியும் பிரமதேவரும் மேகவாகனனுகிய இந்திரனும் இவரல்லாத தேவர்களும் முனிவர் முதலிய பிறரனைவரும் பக்கத்திலமைய, மரனும் மாவும் பறவையும் பிறவும் சூழ—விருக்ஷங்களும் மிருகங்களும் பறவைகளும் நீர்வாழ்வன முதலிய பிறபிராணிகளுஞ் சூழ்ந்திருப்ப, ஏல் உறு குமரன் கஞ்சத்து இருந்தது—இயல்புபொருந்திய குமாரக்கடவுள் தாமரைமலரில் வீற்றிருந்ததன்மை, பரமன்—சிவபிரான், ஆதி காலையின் உயிர்கள் நல்கி கமல மேல் இருத்தல் போலும்—சிருட்டியாரம்பத்தில் ஆன்மாக்களைப் படைத்துத் தாமரைமலரில் வீற்றிருந்த தன்மையை நிகர்க்கும் எ—று.

சிருட்டியாரம்ப காலத்திற் முமரை மலரில் வீற்றிருந்து சிவபிரான் சிருட்டிக்கும்போது தேவர் மக்கள் விலங்கு புள் ஊர்வன நீர்வாழ்வன தாவரம் எனப் பல பகுப்புக்களையுடைய சீவன்களெல்லாந் தோன்றிச் சூழுமாதலின் இவ்வாறு வருணித்தார். (103)

சலங்கிளர் தரங்கத் தெய்வச் சரவணக் கமலப் போதில்
நலங்கிளர் குமரன் சேர்தல் நான்முகற் சியைமேல் வீட்டிப்
புலங்கிளர் உயிர்கள் நல்கப் பொருந்துநற் பகலின் முன்னர்
இலங்கெழிற் பதும பீடத் தேறிய இயற்கை போலும்.

இ—ள்: சலம் கிளர் தரங்க தெய்வ சரவண கமல போதில்—நீர்மிகுந்த திரைமோதுகின்ற தெய்வீகமாகிய சரவண தடாகத்திலுள்ள தாமரை மலரின் கண்ணே, நலம் கிளர் குமரன் சேர்தல்—நன்மைமிக்க குமாரக்கடவுளெழுந்தருளியிருத்தல், நான்முகன் சிறைமேல் வீட்டி புலம் கிளர் உயிர்கள் நல்க பொருந்தும் நல் பகலின் முன்னர்—நான்கு முகங்களையுடைய பிரமதேவரைச் சிறையிலிட்டு அறிவினையுடைய ஆன்மாக்களைப் படைக்குமாறு தொடங்கும் நல்ல தினத்திற்கு முந்தியே, இலங்கு எழில் பதும பீடத்து ஏறிய இயற்கை போலும்—விளங்குகின்ற அழகினையுடைய தாமரை மலராசனத்திலெழுந்தருளியிருந்த தன்மையைப் போலும் எ—று.

பின்னர்ப் பதுமாசனத்திலெழுந்தருள வேண்டுதலின் முன்னர்த்தானே அவ்வாறெழுந்தருளி யிருந்தமைபோல் விளங்கினரென்பது கருத்து,

ஓரறிவு முதல் ஐயறிவீருகவுள்ள உயிர்களென்பார் 'புலங்கிளருயிர்கள்' என்ருர். அவற்றின்பேதங்களை ''புன்மரமுதலவுற்றறியுமோரறிவுயிர்'' ''முரணந்தாதி நாவறிவொடீரறிவுயிர்'' ''சிதலெறும்பாதி மூக்கறிவின் மூவறிவுயிர்'' ''தும்பி வண்டாதி கண்ணறிவினாலறிவுயிர்'' ''வானவர் மக்க ணரகர் விலங்குபுள்-ளாதி செவியறிவோ டையறி வுயிரே'' என்னும் நன்னூற் சூத்திரங்களானுணர்க. (104)

முண்டக மொன்றில் வைகு முருகனைச் சுற்றிச் செங்கேழ்
வண்டுளர் கமலக் காடு வான்புனற் றடத்தி னிற்ற
அண்டர்கள் முதல்வ வோர்பால் அன்றியெம் மெல்லாம் பீடங்
கொண்டருள் முறையி னென்று நோற்றிடுங் கொள்கைத் தன்றே.

இ—ள்: செம் கேழ் வண்டு உளர் கமல காடு—சிவந்த நிறத்தையுடைய வண்டுகளொலிக்கப் பெற்ற தாமரைமலர்க் கூட்டம், முண்டகம் ஒன்றில் வைகும் முருகனை சுற்றி—ஓர் தாமரை மலரில் வீற்றிருக்கின்ற குமாரக் கடவுளைச் சூழ்ந்து, வான் புனல் தடத்தில் நிற்றல்—பெரிய நீர் நிறைந்த தடாகத்தினிற்பது, அண்டர்கள் முதல்வ—தேவத்தலைவரே, ஓர்பால் அன்றி—ஓர் மலரின் மாத்திரம் வீற்றிருக்காது முறையின் எம் எல்லாம் பீடங்கொண்டு அருள் என்று நோற்றிடும் கொள்கைத்து—முறைப்படி சிறியேமனைவேமையும் இருக்கையாகக் கொண்டருளுகவென்று பிரார்த்தித்துத் தவமியற்றுந் தன்மை போலும் எ—று.

செங்கேழ்க்கமலம் என இயையும். நீர் மேனிற்றல் தவமியற்றுவார்க்குந் தாமரை மலர்க்கு மொக்குமாதலி னிவ்வாறுவமித்தார். (105)

அணங்குசெய் தோற்றத் துப்பின் அவிர்சுடர்க் குமரற் சூழ
மணங்கிளர் கமலக் காடு மலர்ந்தன அவனைச் சேர்வான்
தணங்கெழு புனலிற் புக்குத் தபனன்மேல் நாட்டஞ் சேர்த்தி
நுணங்கிடை மடவார் பல்லோர் நோற்றவண் நிற்றல் போலும்.

இ—ள்: அணங்கு செய் தோற்ற துப்பின் அவிர் சுடர் குமரன் சூழ—அழகைச் செய்கின்ற தோற்றத்தையும் பவளம்போல் விளங்குகின்ற சோதியையுமுடைய முருகக் கடவுளைச் சூழ்ந்து, மணம் கிளர் கமல காடு மலர்ந்தன—வாசனை மிகுந்த தாமரை மலர்க்கூட்டங்கள் அலர்ந்திருத்தல், நுணங்கு இடை மடவார் பல்லோர்—நுண்மையான இடையினையுடைய பல பெண்கள், தணம் கெழு புனலில் புக்கு—குளிர்ச்சிபொருந்திய நீரின் கண்ணே போய், தபனன் மேல் நாட்டம் சேர்த்தி—சூரியன்மேற் பார்வையை வைத்து, அவனை சேர்வான் அவண் நோற்று நிற்றல் போலும்—அக்குமாரக்கடவுளைச் சேருமாறு அத் தடாகத்தே தவஞ்செய்து நிற்பதுபோலும் எ—று.

மலர்ந்தன-வினைமுற்றுத் தொழிற்பெயர். தணம் என்பதில் அம்-பண்புப் பெயர்விகுதி. குமாரக்கடவுளைச் சேருமாறு விரும்பியது அழகும் நிறமுமுடைமை யானென்பது போதர அடைகொடுத்து 'அணங்குசெய்தோற்றத் துப்பி னவிர்சுடர்க் குமரன்' என்றார். தாமரைமலர் மகளிர் முகம்போறலானும் தடாகத்தினின்று நோற்பார் முகமல்லாதவுறுப்பு முற்றையும் நீருண் மறைத்து மேனோக்கி நிற்றலுண்மையானும் 'மடவார் பல்லோர் நோற்றுநிற்றல் போலும் என்றார். (106)

ஒண்ணகை யுயிர்க்குஞ் சங்க மொருசில கமலம் வைகத்
தண்ணுறு நறவைப் பஃறாட் டாமரை பரித்துச் சூழ்தல்
அண்ணலம் பொய்கை தற்சேர் அறுமுகப் பிள்ளை துய்ப்ப
எண்ணெயுஞ் சங்குஞ் சூழ இட்டது போலு மன்றே.

இ—ள்: ஒள் நகை உயிர்க்கும் சங்கம் ஒருசில கமலம் வைக—பேரொளியைப் பரப்புகின்ற சில சங்குகள் அத்தடாகத்து நீரிலிருக்க, பல் தாள் தாமரை தண் உறும் நறவை பரித்து சூழ்தல்—நாளத்தையுடைய பற்பல தாமரைமலர்கள் குளிர்ச்சிபொருந்திய தேனைத்தாங்கி (அவரைச்) சூழ்ந்து நிற்றல், அண்ணலம் பொய்கை—பெருமையினையுடைய சரவண தடாகம், தன்சேர் அறுமுக பிள்ளை துய்ப்ப—தன்னிடத்துவந்த ஆறு திருமுகங்களையுடைய முருகக் கடவுள் உண்ணும் பொருட்டு, வெண்ணெயும் சங்கும் சூழ விட்டது போலும்—வெண்ணெயையும் பாலடைச் சங்கையும் சூழ்ந்திருக்குமாறு விடுத்ததுபோலும் எ—று.

தன்னையணைந்த மகவுக்கு உவப்பான உணவைக் கொடுக்குமுறையானென்பார் 'தற்சேர்-பிள்ளை துய்ப்ப' எனவும், கொடுக்குங்காற் பலபாத்திரங்களில் வெண்ணெயும் பலசங்கும் வேண்டுமென்பது போதர 'அறுமுகப்பிள்ளை' எனவும் கூறினர். (107)

ஆரமும் வனசத் தோடும் அணிமக ரந்தச் சேறும்
வேரியம் பூந்தண் தேனும் முறைமுறை வீசிக் கையாற்
சேரவே கொண்டு மேலோன் திருவடி திளைப்ப உய்த்தல்
வாரியந் தடாகம் அன்பால் வழிபடும் வண்ணம் போலும்.

இ—ள்: ஆரமும்—முத்துக்களையும், வனச தோடும்—தாமரை மலரினிதழ்களையும், அணி மகரந்த சேறும்—அழகிய பூந்தாதின் குழம்பையும், வேரியம் பூதண் தேனும்—சுகந்தத்தையுடைய மலர்களிலுள்ள குளிர்ந்த தேனையும், முறை முறை வீசிக்கையால் சேர கொண்டு—முறைப்படி திரையாகிய கையினால் வாரிக்கொண்டு, மேலோன் திருவடி திளைப்ப உய்த்தல்—மேலவராகிய குமாரக்கடவுளது சிறந்த பாதங்களிற் பொருந்துமாறு வீசுதல், வாரியம் தடாகம் அன்பால் வழிபடும் வண்ணம் போலும்—நீரையுடைய அந்தச் சரவண தடாகமானது அன்பினுடன் பூசை செய்கின்ற தன்மையைப்போலும் எ—று.

வழிபாட்டிற்காம்போது ஆரம் சந்தனமென்க. அன்பால் என்பதில் ஆல்-உடனிகழ்ச்சிப்பொருட்டு. வழிபாடு செய்வோர் ஒவ்வோரினப் பொருளை ஒவ்வோர் முறை சாத்துதல் போலத் தடாகமும் ஒவ்வோரினப் பொருளை ஒவ்வோர் முறை வீசியதென்க. (108)

பங்கயச் செம்மற் போது பதனழிந் தவிழ்ந்து பாங்கர்
அங்குள இலைமேல் வீழ அவைபுறத் தசையும் நீர்மை
சங்கரன் குமரற் சூழச் சரவணம் பசும்பூந் தட்டில்
துங்கநல் விளக்க மாட்டித் திரைக்கையாற் சுலவல் போலும்.

இ—ள்: செம்மல் பங்கய போது—பழைய தாமரை மலர்கள், பதன் அழிந்து அவிழ்ந்து—பருவந்தப்பியுதிர்ந்து, பாங்கர் அங்கு உள இலைமேல் வீழ—பக்கத்தில் அவ்விடத்தேயுள்ள இலைகளின் மேல் விழ, அவை புறத்து அசையும் நீர்மை—அவ்விலைகள் புறத்தே யசையுந்தன்மை, சரவணம்—சரவண தடாகமானது, சங்கரன் குமரன் சூழ—சிவகுமாரராகிய முருகக்கடவுளை வளைய (நாற்புறங்களினும்), பசும் பூ தட்டில் துங்க நல் விளக்கம் மாட்டி—பச்சை நிறமான பூந்தட்டில் உயர்ச்சி பொருந்திய நல்ல தீபத்தையேற்றி, திரை கையால் சுலவல் போலும்—திரையாகிய கையினாற் சுற்றுதல்போலும் எ—று.

புறமென்றது அருகிலுள்ள இடங்களை. சங்கரன் குமரன்-ஆறும் வேற்றுமைத் தொகை. தாமரையிதழுக்குத் தீபமும் இலைகளுக்குத் தட்டமு முபமானமென்க. தீபத்தட்டஞ் சுற்றுதலுமோருபசரணையாதலினிவ்வாறு வருணித்தார். (109)

காசுறழ் பதுமப் போது களாசிய தாக மீச்செல்
பாசடை கவிகை யாகப் பலநனை விளக்க மாக
வீசிகள் கவரி யாக மிழற்றுபுள் ளியம தாக
மாசறு பொய்கை சேய்க்கு வளம்பட ஒழுகிற் றன்றே.

இ—ள்: காசு உறழ் பதும போது களாசியது ஆக—மாணிக்க ரத்தினத்தைப் போன்ற தாமரை மலர்கள் காளாஞ்சியாகவும், மீ செல் பாசு அடை கவிகை ஆக—மேலாக வளர்ந்திருக்கின்ற பசிய இலைகள் குடையாகவும், பல நனை விளக்கம் ஆக—பல அரும்புகள் தீபமாகவும், வீசிகள் கவரி ஆக—திரைகள் சாமரமாகவும், புள் மிழற்று இயமது ஆக—பறவைகளினொலி வாத்தியமாகவும் (அமைய), மாசு அறு பொய்கை—குற்றமற்ற சரவண தடாகமானது, சேய்க்கு வளம்பட ஒழுகிற்று—குமாரக்கடவுளுக்கு வளப்பம் பொருந்த ஒழுகிற்று எ—று.

செம்பொற் கோயிலிலரசிருப்போர்க் குளவாய உபசாரங்களெல்லாந் தடாகத்தில் வீற்றிருக்குங் குமாரக் கடவுட்குமமைந்திருந்தன வென்பது குறிப்பு.

அது பகுதிப் பொருள் விகுதி. செந்தாமரை மலரென்பார் 'காசுறழ் பதுமப் போது' எனவும், குடைகள் போல் மேற்கவிக்கப்பட்டன வென்பது தோன்ற 'மீச் செல் பாசடை' எனவும் விசேடித்தார். (110)

அழல்நிவந் தன்ன கஞ்சத் தகல்தடத் திரைகள் நாப்பண்
உழிபட ராது சூழ்போந் துலவுவ தானை நீரால்
விழுமிய குமரன் பொய்கை வெளியுரு தமர ரிட்ட
எழினிகள் புடையே மென்கால் எறிதலின் இரட்டல் போலும்.

இ—ள்: அழல் நிவந்து அன்ன கஞ்சத்து அகன் தட திரைகள்—அக்கினியானது கிளர்ந்தாற் போன்ற தாமரை மலர்களையுடைய அகன்ற சரவண தடாகத்திலெழுகின்ற அலைகள், நாப்பண் உழி படராது சூழ் போந்து தானை நீரால் உலவுவ—நடுவிடங்களிற் செல்லாது கரையோரங்களில் துகில் விரிப்புப் போல உலாவுதல், விழுமிய குமரன் பொய்கை வெளி உருது—மகிமையினையுடைய குமாரக்கடவுள் வீற்றிருக்கின்ற சரவண தடாகம் வெளியே தோன்று வண்ணம், அமரர் இட்ட எழினிகள்—தேவர்களிட்ட வஸ்திரம், மென்கால் எறிதலின்—மிருதுவான காற்று வீசுதலினுல், புடையே இரட்டல் போலும்—பக்கங்களிலசைதல் போலும் எ—று.

சரவணப் பொய்கையின் நாற்றிசைக் கரைகளினும் அலை வீசுதல் திரை வஸ்திர மிடப்பட்டுக் காற்றினுலசைவது போன்றிருந்ததென்பது கருத்து. (111)

கொன்படை சேவ லாகும் எகினமோர் கோடி ஈசன்
தன்பெருங் குமரற் சூழத் தடத்தினில் மிழற்றல் எந்தை
பொன்பிறழ் பதுமன் செய்கை புரியுநாள் ஊர்தி யாவல்
என்புடை யிருத்தி யென்றே தமித்தமி இரத்தல் போலும்.

இ—ள்: கொன் படை சேவல் ஆகும் எகினம் ஓர் கோடி—பெருமை பொருந்திய ஒரு கோடிக்கணக்கான ஆணன்னங்கள், ஈசன் தன் பெரும் குமரன் சூழ தடத்

தினில் மிழற்றல்—சிவபிரானது பெருமையமைந்த திருக்குமாரராகிய முருகக்கட வுளைச் சூழ்ந்து சரவண தடாகத்தினின்று மெல்லென ஒலித்தல், எந்தை பொன் பிறழ் பதுமன் செய்கை புரியும் நாள் ஊர்தி ஆவல்—எம்பெருமாஞகிய தேவரீர் பொன்போலச் சிவந்த நிறத்துடன் பிரகாசிக்கின்ற தாமரை மலராசனத்தில் வீற் றிருக்கின்ற பிரமதேவரது படைப்புத் தொழிலையியற்றுங் காலத்தில் (அடியேன்) வாகனமாவேன் (ஆதலின்), என் புடை இருத்தி என்று—என்மேல் எழுந்தருளுக வென்று, தமித்தமி இரத்தல் போலும்—தனித்தனியே பிரார்த்திப்பது போலும் எ-று.

ஓர் கோடியென்றது மிகுதிபற்றி, என்மேலிவர்தலிப் பொழுது வேண்டப்படா விடினும் பின்னரொரு தலையான் வேண்டப்படுமாதலின் அதற்காக இப்பொழுதே யிவர்ந்தருளுகவென்று வேண்டுதல் போலுமென்பார் "பதுமன் செய்கைபுரியுநாளூர் தியாவ-லென்புடையிருத்தி யென்றே தமித்தமியிரத்தல் போலும்" என்றார். (112)

வளஞ்செறி இனைய பாலால் வான்சர வணமாம் பொய்கைத்
தளஞ்செறி பதும மொன்றில் சராசரம் யாவுங் காப்பான்
உளஞ்செறி கருணை யெய்தி ஒப்பிலாக் குமர மூர்த்தி
இளஞ்சிறு மதலை போல இனிதுவீற் றிருந்தான் மன்னோ.

இ—ள்: ஒப்பு இலா குமரமூர்த்தி—சமானரஹிதராகிய குமாரக்கடவுள், வளம் செறி இனைய பாலால்—வளப்பமிக்க இத்தன்மைகளமைய, வான் சரவணம் ஆம் பொய்கை தளம் செறி பதுமம் ஒன்றில்—பெரிய சரவணமென்னும் பெயர்த்தாகிய தடாகத்தில் இதழ் நெருங்கப்பெற்ற ஓர் தாமரை மலரின்கண், சராசரம் யாவும் காப்பான் உளம் செறி கருணை எய்தி—இயங்கியற் பொருள் நிலையியற் பொருளாகிய இருவகையுயிர்களையும் இரட்சிக்கும்படி திருவுள்ளத்திற் றோன்றிய கிருபையைப் பொருந்தி, இளம் சிறு மதலை போல இனிது வீற்றிருந்தான்—பாலியப் பருவத்தை யுடைய சிறு குழந்தையைப் போலச் செவ்வனே யெழுந்தருளியிருந்தார் எ—று.

அப்பொய்கையிலுள்ள மலர்களனைத்தினுஞ் சிறந்ததென்பார் 'தளஞ் செறியது மம்' எனவும், தம்பயன் சிறிதுங் கருதாது ஆன்மாக்களுய்தற் பொருட்டே வீற்றிருந் தனரென்பார் 'சராசரம் யாவுங் காப்பானுளஞ் செறிகருணையெய்தி வீற்றிருந்தான்' எனவும் கூறினர். (113)

தீர்த்திகைக் கங்கை தன்னில் திகழ்சர வணத்தில் வந்த
மூர்த்திகைக் குழவி யேபோல் முதற்புரி யாடல் நோக்கி
ஆர்த்திகை யுருத உள்ளத் தரிமுதல் அமரர் யாருங்
கார்த்திகை தெரிவை மாரை விளித்திவை கழற லுற்றார்.

இ—ள்: ஆர்த்திகை உருத உள்ளத்து அரி முதல் அமரர் யாரும்—வருத்தம் பொருந்தப் பெருத (மகிழ்ந்த) மனத்தையுடைய திருமால் முதலாகிய தேவரனை வரும், கங்கை தீர்த்திகை தன்னில் திகழ் சரவணத்தில் வந்த மூர்த்தி கை குழவியே போல் முதல் புரி ஆடல் நோக்கி—கங்கை நதியிலும் விளங்குகின்ற சரவண தடா கத்திலுந் தோன்றியருளிய குமாரக்கடவுள் கைக்குழந்தையையே போல முதலிற் செய்கின்ற திருவிளையாடலைப் பார்த்து, கார்த்திகை தெரிவை மாரை விளித்து இவை கழறலுற்றார்—கார்த்திகைப் பெண்களையழைத்து இவ் வாசகங்களைச் சொல லத் தொடங்கினார்கள் எ—று.

குமாரக்கடவுள் பின்னரும் பற்பல திருவிளையாடல்களைச் செய்பவராதலின் 'முதற்புரியாடல்' என்றார். ஆர்த்திகையென்னும் வடமொழியிற் கை வடமொழி விதிப்படி பெண்பாலாய் வந்த பகுதிப் பொருள்விகுதி. (114)

சாற்றருஞ் சரவ ணத்தில் சண்முகத் தொரு வனுகி
வீற்றிருந் தருளு கின்ற விமலனேர் குழவி போலத்
தோற்றினன் அவனுக் குங்கள் துணைமுலை அமுத மூட்டிப்
போற்றுதிர் நாளு மென்ன நன்றெனப் புகன்று வந்தார்.

இ—ள்: சாற்றரும் சரவணத்தில் சண்முகத்து ஒருவன் ஆகி வீற்றிருந்தருளு கின்ற விமலன்—சொல்லுதற்கரிய சிறப்பையுடைய சரவண தடாகத்தில் ஆறு திரு முகங்களையுடைய ஒரு குமாரராகி எழுந்தருளியிருக்கின்ற நிருமலராகிய முருகக்கட வுள், ஓர் குழவி போல தோற்றினன்—ஒரு குழந்தையைப் போலுதித்தார் (ஆத லின்), அவனுக்கு உங்கள் துணை முலை அமுதம் ஊட்டி நாளும் போற்றுதிர் என்ன—அக் குமாரருக்கு உங்கள் இரண்டு தனங்களிலு மூறுகின்ற பாலையூட்டித் தினந் தோறும்வளர்ப்பீர்களென்று கூற, நன்று என புகன்று வந்தார்—(அம்மாதர்கள்) நல்ல தென்று கூறி அச்சரவணப் பொய்கையினிடத்து வந்தார்கள் எ—று. (115)

மறுவறும் ஆர லாகும் மாதர்மூ விருவர் தாமும்
நிறைதரு சரவ ணத்தின் நிமலனை அடைந்து போற்ற
உறுநர்கள் தமக்கு வேண்டிற் றுதவுவோன் ஆத லாலே
அறுமுக வொருவன் வேறய் அறுசிறார் உருவங் கொண்டான்.

இ—ள்: மறு அறும் ஆரல் ஆகும் மாதர் மூவிருவர் தாமும்—குற்றமற்ற கார்த்திகைப் பெண்களறுவரும், நிறைதரு சரவணத்தில் நிமலனை அடைந்து போற்ற-நிறைந்த சரவண தடாகத்தி லெழுந்தருளி யிருக்கின்ற மலரகிதராகிய குமாரக்கடவுளையடைந்து துதிக்க, அறுமுக ஒருவன்—ஆறு திருமுகங்களை யுடைய ஒப்பற்ற குமாரக்கடவுள், உறுநர்கள் தமக்கு வேண்டிற்று உதவுவோன் ஆதலால்—தம்மை யடைந்தவர்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுப்பவரா தலினல் (அவ்விறைமைக் குணத்திற்கேற்ப), வேறு ஆய் அறு சிறார் உருவம் கொண்டான்—வெவ்வேருக ஆறு குழந்தைகளின் வடிவத்தைக் கொண்டருளி ஞர் எ—று.

ஆறு பெண்களுமுவந்து போற்றுதற்காகவே ஆறுருக் கொண்டனரென்பது தோன்ற 'உறுநர்கடமக்கு வேண்டிற் றுதவுவோனுதலாலே-அறுசிறுருருவங் கொண்டான்' என்றார். அதற்கேற்பப் பிற்செய்யுளினும் 'அறுவரு மகிழ்ந்து' என்றார். (116)

ஆறுரு வாத லோடும் அறுவரும் மகிழ்ந்து வேறு
வேறுதா மெடுத்துத் தத்தம் வியத்தகு துணைமென் கொங்கை
ஊறுபா லமுதம் அன்னேற் குதவலும் முறுவல் செய்து
மாறிலா அருளால் ஆற்ற வருந்தினன் போல வுண்டான்.

இ—ள்: ஆறு உரு ஆதலோடும்—குமாரக்கடவுள் ஆறு குழந்தைகளின் வடி வத்தைக் கொண்டருளியவுடன், அறுவரும் மகிழ்ந்து—கார்த்திகைப் பெண்

களறுவரும் மனமகிழ்ந்து, வேறுவேறு எடுத்து—வெவ்வேருக எடுக்கி, தத்தம் வியத்தகு மென் துணை கொங்கை ஊறு பால் அமுதம் அன்னேற்கு உதவலும்—தங்கள் தங்களது பெருமை மிக்க மென்மையான இரண்டு தனங்களிலும் ஊறிய பாலாகிய அமிர்தத்தை அக் குமாரக்கடவுளுக்கு ஊட்ட, முறுவல் செய்து—(அவர்) புன்னகை செய்து, மாறு இலா அருளால்—ஒப்பில்லாத கருணையுடன், ஆற்ற வருந்தினன் போல உண்டான்—மிகப் பசியால் வருந்தியவர் போலப் பருகினர் எ—று.

ஒவ்வோர் மாதரும் ஒவ்வோர் குழந்தையாக எடுக்கியென்பார் 'வேறுவேறு தாமெடுத்து' எனவும், தாம் பெற்றிலராகவும் கண்ட மாத்திரத்தே அன்பின் மிகுதியாற் பால் சுரந்தமை தோன்ற 'வியத்தகு கொங்கை' என அடைகொடுத்துங் கூறினர். (117)

உண்டபின் அறுவ ராகும் ஒருபெரு முதல்வன் றன்னைத்
தண்டழை பொதுளும் நீபத் தண்ணிழற் பொய்கை தன்னில்
வண்டயி லுறுத கஞ்ச மாமலர்ப் பள்ளி சேர்த்திக்
கண்டுயில் செய்வித் தேத்தக் கருணையால் இனைய செய்வான்.

இ—ள்: உண்டபின்—பாலைப் பருகியபின்பு, அறுவர் ஆகும் ஒரு பெரும் முதல்வன் தன்னை—ஆறு குழந்தைகளாகிய ஒப்பற்ற பெருமை வாய்ந்த குமாரக் கடவுளை, தண் தழை பொதுளும் நீப தண் நிழல் பொய்கை தன்னில்—குளிர்ந்த தழைகள் செறியப் பெற்ற கடப்ப மரங்களின் குளிர்ந்த நிழல் பொருந்திய தடாகத்தில், வண்டு அயிலுருத கஞ்ச மா மலர் பள்ளி சேர்த்தி—வண்டுகள் தேனைப் பருகப்பெருத பெரிய தாமரை மலராகிய சேக்கையிற் கிடத்தி, கண்டுயில் செய்வித்து ஏத்த—நித்திரை செய்வித்துத் துதிக்க, கருணையால் இனைய செய்வான்—(அக் குமரக்கடவுள்) கிருபையோடு இத் திருவிளையாடல்களைச் செய்தருளுவார் எ—று.

புதுமலரென்பார் 'வண்டயிலுருத கஞ்சமாமலர்' என்றர். (118)

துயிலவோ ருருவம் துஞ்சித் துண்ணென எழுந்து மென்சொற்
பயிலவோ ருருவம் யாய்தன் பயோதரம் பவள வாய்வைத்
தயிலவோ ருருவம் நக்காங் கமரவோ ருருவம் ஆடல்
இயலவோ ருருவம் வாளா இரங்கவோ ருருவஞ் செய்தான்.

இ—ள்: ஓர் உருவம் துயில—ஒரு வடிவம் நித்திரை செய்யவும், ஓர் உருவம் துஞ்சி துண் என எழுந்து மென் சொல் பயில—ஒரு வடிவம் நித்திரைசெய்து விரைவிலெழும்பி மிருதுவான சொற்களைப் பேசவும், ஓர் உருவம் யாய் தன் பயோதரம் பவள வாய் வைத்து அயில—ஒரு வடிவம் தாயினது தனத்தைப் பவளம் போன்ற வாயின் கண்ணே வைத்துப் பருகவும், ஓர் உருவம் நக்காங்கு அமர—ஒரு வடிவம் சிரித்தவாறே யிருக்கவும், ஓர் உருவம் ஆடல் இயல—ஒரு வடிவம் விளையாட்டயரவும், ஓர் உருவம் வாளா இரங்க செய்தான்—ஒரு வடிவம் ஓயாது அழவும் செய்தருளினர் எ—று.

வாளாவிரங்க வென்பதற்குக் காரணமின்றி யழவுமென வுரைப்பினுமாம். (119)

ஒருருத் தவழ மெல்ல ஒருருத் தளர்ந்து செல்ல
ஒருரு நிற்றல் செல்லா தொய்யென எழுந்து வீழ
ஒருரு இருக்கப் பொய்கை ஒருரு வுழக்கிச் சூழ
ஒருருத் தாய்கண் வைக ஒருவனே புரித லுற்ருன்.

**இ—ள்:** ஓர் உரு தவழ—ஒரு வடிவம் தவழவும், ஓர் உரு மெல்ல தளர்ந்து செல்ல—ஒரு வடிவம் மெல்லவாகத் தளர்ந்து நடக்கவும், ஓர் உரு ஒய் என எழுந்து நிற்றல் செல்லாது வீழ—ஒரு வடிவம் விரைவிலெழும்பி நிற்கலாற்ருது விழவும், ஓர் உரு இருக்க...ஒரு வடிவம் இருக்கவும், ஓர் உரு பொய்கை உழக்கி சூழ—ஒரு வடிவஞ் சரவணவாவியைக் காலாலுழக்கிக் கொண்டு சுற்றிவரவும், ஓர் உரு தாய்கண் வைக—ஒரு வடிவம் தாயின் மடியிலிருக்கவும், ஒருவனே புரிதல் உற்ருன்—ஒரு கடவுளே செய்தருளினுர் எ—று. (120)

ஆடவோ ருருவம் செங்கை அறையவோ ருருவம் நின்று
பாடவோ ருருவம் நாடிப் பார்க்கவோ ருருவம் ஆங்கண்
ஓடவோ ருருவம் ஓர்பால் ஒளிக்கவோ ருருவம் யாண்டுந்
தேடவோ ருருவ மாகச் சிவன்மகன் புரித லுற்ருன்.

**இ—ள்;** ஓர் உருவம் ஆட—ஒரு வடிவம் கூத்தாடவும், ஓர் உருவம் செம் கை அறைய—ஒரு வடிவம் சிவந்த கைகளைக் கொட்டவும், ஓர் உருவம் நின்று பாட—ஒரு வடிவம் நின்று பாடல்களைப் பாடவும், ஓர் உருவம் நாடி பார்க்க—ஒரு வடிவம் விரும்பிப் பார்க்கவும், ஓர் உருவம் ஆங்கண் ஓட—ஒரு வடிவம் அவ்விடத்து ஓடவும், ஓர் உருவம் ஓர் பால் ஒளிக்க—ஒரு வடிவம் ஒரு பக்கத்திற் சென்ருெளிக்கவும், யாண்டும் தேடஓர் உருவம் ஆகு அ சிவன் மகன் புரிதலுற்ருன்—(பிரமனுந் திருமாலும்) எங்குந்தேட ஒரு சோதி வடிவத்தைக் கொண்ட அந்தச் சிவபிரானது குமாரராகிய முருகக்கடவுள் செய்தருளினுர் எ—று.

இதுகாறும் மூன்று செய்யுட்களால் திருவுருவங்களின் வளர்ச்சிக்கேற்பத் தொழினிகழ்ச்சிகளைப் பலவாறு கூறினர். (121)

இத்திறம் இருமூன் ருன யாக்கையுங் கணம தொன்றில்
பத்துநா ருய பேதப் படும்வகை பரமாய் நின்ற
உத்தம குமரன் ருன்எவ் வுயிர்தொறும் ஆடலேபோல்
வித்தக விளையாட் டின்ன மாயையால் விரைந்து செய்தான்.

**இ—ள்:** பரம் ஆய் நின்ற உத்தம குமரன்—பரம் பொருளாய் நின்ற உத்தமராகிய குமாரக்கடவுள், இருமூன்று ஆன யாக்கையும் கணமது ஒன்றில் இதிறம் பத்துநூறு ஆய பேத படும் வகை—ஆறு திருவுளங்களும் ஒரு கணப்பொழுதினுள் இவ்வாறே ஆயிரக்கணக்கான தொழிற்பேதத்தையடையுமாறு, தான் எவ் உயிர்தொறும் ஆடலே போல்—தாம் எல்லாவுயிர்களிலும் நின்று திருவிளையாடல் செய்வதையே போல, மாயையால்—மாயையினுல், வித்தக விளையாட்டு இன்ன—அற்புதமாகிய இன்னேரன்ன திருவிளையாடல்களை, விரைந்து செய்தான்—விரைவிற் செய்தருளினுர் எ—று.

உத்தமன்-விசேடமுடையவன். பேதப்படும்வகை-செய்தான் என இயையும். அனேகபேதமுறவென்பார் 'பத்து நூருய பேதப்படும் வகை' எனவும்,

பதியாகிய தாம் தமது மாயையினுற் பசுவர்க்கங்களை உண்ணின்றியக்குதல் போலவென்பார் 'எவ்வுயிர் தொறுமாடலேபோல்' எனவும் அங்ஙனஞ் செய்யுமிது எவராலும் வியக்கற்பாலதென்பார் 'வித்தக விளையாட்டு' எனவும், கணமதொன்றிற்பத்து நூருய பேதப்படுத்தற்கேற்ப 'விரைந்து' எனவும் கூறினுர். (122)

சிற்பர ஞகி வந்த செய்யவேள் ஆடற் றன்மை
பற்பல திறமும் நாடிப் பங்கயத் தயனு மாலுஞ்
சொற்படு மகத்தின் தேவும் முனிவருஞ் சுரரும் யாரும்
அற்புத மகிழ்ச்சி கொண்டாங் கின்னவா றறைத லுற்ருர்.

இ—ள்: பங்கயத்து அயனும் மாலும்—தாமரை மலராசனத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவரும் திருமாலும், சொல் படும் மகத்தின் தேவும் சுரரும் முனிவரும் யாரும்—புகழ்பெற்ற யாகாதிபஞகிய இந்திரனும் ஏனைய தேவர்களும் முனிவர்களுமாகிய அனைவரும், சிற்பரன் ஆகி வந்த செய்ய வேள் ஆடல் தன்மை பற்பல திறமும் நாடி—ஞான வடிவினராகித் தோன்றிய சிவந்த நிறத்தையுடைய குமாரக்கடவுளது திருவிளையாடலனைத்தையும் பார்த்து, அற்புத மகிழ்ச்சி கொண்டு—ஆச்சரியத்தோடு கூடிய சந்தோஷத்தைக் கொண்டு, இன்னவாறு அறைதலுற்ருர்—இவ்வாறு சொல்லத் தொடங்கினுர்கள் எ—று.

அற்புத மகிழ்ச்சி என்பதை உம்மைத் தொகையாக்கினுமாம். (123)

சேயிவன் ஒருவ னேபல் சிருருருக் கொண்டு நம்முன்
ஏயெனு மளவை தன்னில் எண்ணில்பே தத்த ஞகும்
ஆயினிக் குமரன் ஆடல் அறிவரி தெமக்கும் எல்லா
மாயமு மியற்ற வல்லன் வரம்பிலா அறிவன் மாதோ.

இ—ள்: சேய் இவன் ஒருவனே—இக் குமாரரொருவரே, பல் சிருர் உரு கொண்டு—பல குழந்தைகளின் வடிவங்களைக் கொண்டு, நம் முன்—எமக்கு முன்னே, ஏ எனும் அளவை தன்னில் எண் இல் பேதத்தன் ஆகும் ஆயின்—ஏ எனும் அளவை தன்னில் எண் இல் பேதத்தன் ஆகும் ஆயின்—ஏ என்றுச்சரிக்கின்ற காலவெல்லையினுள் (விரைவில்) அளவில்லாத வேறுபாடுகளையுடையவராகின்ருர்; ஆதலின், இ குமரன் ஆடல் எமக்கும் அறிவரிது—இந்தக் குமாரக் கடவுளது திருவிளையாடல் எம்மாலும் அறிதற்கரியது, எல்லா மாயமும் இயற்ற வல்லன்—அவர் எல்லா மாயங்களையுஞ் செய்ய வல்லவர், வரம்பு இலா அறிவன்—அளவிடப்படாத ஞானத்தையுடையவர் எ—று.

இறைமைக் குணமுடையரென்பது தாற்பரியம். ஆயின் ஆராயினெனினுமாம். ஏகாரம்-பிரிநிலை. முன்னைய உம்மை-உயர்வு சிறப்பு. (124)

கைப்பயில் குழவி போலக் காட்டிய கடவுள் செய்யும்
இப்பெரு மாயை போல யாவரும் புரிதல் தேற்ருர்
செப்பியென் வேறி யாமுஞ் செய்ததொன் றில்லை அன்னுன்
ஒப்பறு பரனே ஆம்என் றுரைசெய்து தொழுது நின்ருர்.

இ—ள்: கை பயில் குழவி போல காட்டிய கடவுள் செய்யும் இ பெரும் மாயை போல—கையின் கண்ணே பயிலப்பெரு நின்ற குழந்தையைப் போலத்

தோன்றிய குமாரக்கடவுள் செய்தருளுகின்ற இந்தப் பெரிய மாயத் தொழிலைப்போல, யாவரும் புரிதல் தேற்ருர்—எவராயினுஞ் செய்யமாட்டார்கள், வேறு செப்பி என்—பிறர் செய்யமாட்டாமையைக் கூறியென்னே?, யாம் செய்தது ஒன்றும் இல்லை—யாங்கள் (இவர் செய்தது போலச்) செய்த செயல் யாதொன்றுமில்லை, (ஆதலின்), அன்னுன் ஒப்பு அறு பரனே ஆம்—அவர் ஒப்பற்ற கடவுளேயாம், என்று உரைசெய்து தொழுது நின்ருர்—என்று கூறிக் கைதொழுது நின்ருர்கள் எ—று.

உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. மிகச் சிறுபிராயமான குழந்தையென்பார் 'கைப்பயில் குழவி' எனவும், அவரது இயற்கை வடிவம் இஃதன்றென்பார் 'குழவி போலக் காட்டிய கடவுள்' எனவும், பல அற்புதங்களைச் செய்ய வல்ல தலைவராகிய நாம் இவர் செய்த அற்புதம் போலச் சிறந்த அற்புதமொன்றையேனு மிதுகாறுஞ் செய்திலோமென்பார் 'யாமுஞ் செய்ததொன்றில்லை' எனவும் கூறினுர். (125)

அழலெனும் மீன வர்க்கத் தறுவருங் குமரன் ஆடல்
முழுவது நோக்கி நோக்கி முதிருமற் புதநீ ரெய்திக்
குழவிக ளென்றே உள்ளங் கோடல்விட் டகலா தஞ்சி
வழிபடு கடவு ளோரில் போற்றினர் மனங்கொள் அன்பால்.

**இ—ள்:** அழல் எனும் மீனவர்க்கத்து அறுவரும—அக்கினியென்று சொல்லப்படுகின்ற நக்ஷத்திரத்தின் வகுப்பிலுள்ள ஆறு பெண்களும், குமரன் ஆடல் முழுவதும் நோக்கி நோக்கி—குமாரக்கடவுளது திருவிளையாடலனைத்தையும் பார்த்துப் பார்த்து, முதிரும் அற்புத நீர் எய்தி—மிகுந்த ஆச்சரியத்தையடைந்து, குழவிகள் என்று உள்ளம் கோடல் விட்டு—குழந்தைகளென்று மனத்திற் சிந்திப்பதையொழித்து, அகலாது—அவரை விட்டுப் பிரியாமல், அஞ்சி—பயந்து, வழிபடு கடவுளோரில்—தாம் வழிபடுகின்ற தேவரைப்போல, மனம் கொள் அன்பால் போற்றினர்—மனத்திற் பொருந்திய அன்பினுடன் பேணினுர்கள் எ—று.

அக்கினி நக்ஷத்திரமென வழங்குதலாற் கார்த்திகை நக்ஷத்திரத்தை 'அழலெனுமீனம்' என்ருர். நோக்கி நோக்கியென்னுமடுக்கு ஒரு தொழில் பலகாலிகழ்தல் பற்றி வந்தது. கடவுளை வழிபடும்பொழுது இதனுல் நமக்கே பயனுண்டு கடவுட்கு யாதும் பயனின்றென்று கருதுவது போலக் கார்த்திகமாதரும் குழந்தையன்றென்பதை யுணர்ந்தபின் தாஞ் செய்யும் போஷணையாற் றமக்கே பயனென்று கருதிப் போற்றினராதலின் 'வழிபடு கடவுளோரிற் போற்றினர்' என்ருர். (126)

அம்புயம் உறழுஞ் செங்கேழ் அறுமுகம் படைத்த கோல
நம்பிதன் வரவு தன்னை நவின்றனம் இனிமேல் அங்கண்
எம்பெரு முதல்வி தன்பால் இலக்கத்தொன் பதின்மர் செவ்வேள்
தம்பிய ராகி வந்த தன்மையை விளம்ப லுற்ருும்.

**இ—ள்:** அம்புயம் உறழும் செம் கேழ் அறுமுகம் படைத்த கோல நம்பி தன் வரவு தன்னை நவின்றனம்—தாமரை மலரைப் போன்ற சிவந்த நிறத்தை

யும் ஆறு திருமுகங்களமைந்த வடிவத்தையுமுடைய குமாரக்கடவுளது திருவவதாரத்தைக் கூறினும், இனி மேல்—இனி, அங்கண்—அத்திருக்கைலாசமலையில், இலக்கத்தொன்பதின்மர்—இலக்கத்தொன்பது நந்திகண வீரர்கள், செவ்வேள் தம்பியர் ஆகி—குமாரக் கடவுளுக்குத் தம்பிமாராகி, எம்பெரு முதல்வி தன்பால் வந்த தன்மையை விளம்பலுற்றும்—பெருமை பொருந்திய எங்கள் தலைவியராகிய உமாதேவியாரிடத்து அவதரித்த தன்மையைச் சொல்லத் தொடங்குவோம் எ—று. (127)

திருவவதாரப்படலம் முற்றிற்று

ஆக திரு விருத்தம் 977

# துணைவர் வரு படலம்



குமாரக்கடவுளின் தம்பியர்கள் இலக்கத்தொன்பதின்மர் அவதரித்த சரித்திரத்தைக் கூறுதலினிப் பெயர்த்தாயிற்று.

## இப்படலப்பொழிப்பு.

அக்கினிப் பொறிகளின் வெப்பத்திற்காற்ரு தோடிய உமாதேவியார் சிவபிரான் தம்மையகற்றிப் புதல்வரை யுதிப்பித்தது தேவர் வேண்டுகோளாலென்பதைத் தெரிந்து அத் தேவர்களது பெண்களனைவரும் புதல்வரைப் பெருதவாறு சபித்து அக்கினிப் பொறியின் வெப்பம் நீங்கிய பின் சிவபிரானது வாமபாகத்தில் வந்து வீற்றிருந்தனர். அப்பொழுது அத் தேவியாரது வடிவம் சிலம்பினின்றுதிர்ந்த நவமணிகளிற் காணப்படச் சிவபிரான் அவற்றைச் சத்திகளாய் வருமாறு அருள் செய்தனர். உடனே நவசத்திகள் வந்து சிவபிரானைக் காமித்துக் கருப்பமெய்தினர். உமாதேவியார் அதுகண்டு சினந்து உரிய காலத்திற் பெருது இக் கருப்பத்தைப் பலகாலஞ் சுமந்துகொண்டிருங்களென்று சபித்தனர். சத்திகள் அது கேட்டு அஞ்சி மெய்வியர்த்தபொழுது அந்த வியர்ப்பினின்றும் இலக்க வீரருதித்தனர். பின்னர்ச் சத்தியர்களது கருப்பத்தில் நந்திகணத்தவரொன்பதின்மர் குழந்தைகளாகிச் சிவபிரானைக் குறித்து யோகசாதனை செய்துகொண்டு பலகாலமிருப்ப, அச்சத்தியர்கள் பாரந் தாங்கலாற்ருதவர்களாய்ச் சிவபிரானையுந் தேவியாரையும் வணங்கிக் குழந்தைகளைப் பெறுமாறு அருள்புரிகவென்று பிரார்த்தித்தனர். அப்பொழுது சிவபிரான் அவர்களுக் கருள்செய்யுமாறு பணிக்கத் தேவியார் புதல்வரைப் பெறும்படி அருள் செய்தனர். பின்னர் மாணிக்கவல்லி முதலிய ஒன்பது சத்திகளும் முறையே வீரவாகு முதலிய ஒன்பது வீரரையும் பெற்றனர். சிவபிரான் அவர்களுக்குத் தனித்தனி வாட்படை கொடுத்து இலக்க வீரர்களும் நீவிரும் நம் புதல்வனுக்குப் பரிசனமாதிரென்று அருள் செய்தனர். பின்னர் அவ்விலக்கத்தொன்பதின்மரு மொருமித்து அங்கே வசித்தனர். சத்தியரொன்பதின்மருந் தேவியார்க்குப் பணிசெய்திருந்தனர் என்பதாம்.

நஞ்ச யின்றவன் நெற்றிநாட் டத்திஞல் நல்கும்
வெஞ்சு டர்ப்பொறி வெம்மையை ஆற்றலள் விமலை
செஞ்சி லம்படி தாக்கலின் நவமணி சிதற
அஞ்சி யோடினள் இத்திற முணர்ந்தனள் அகத்துள்.

**இ—ள்:** விமலை—உமாதேவியார், நஞ்சு அயின்றவன் நெற்றி நாட்டத்திஞல் நல்கு வெம் சுடர் பொறி வெம்மையை ஆற்றலள்—நஞ்சையுண்டருளிய சிவபிரான் நெற்றிக் கண்ணினின்றுந் தோற்றுவித்த வெவ்விய அக்கினிப் பொறிகளாலுண்டான வெப்பத்தைத் தாங்கமாட்டாதவராய், செம் சிலம்பு அடி தாக்கலில் நவமணி சிதற அஞ்சி ஓடினள்—செவ்விய சிலம்புகள் கால்களிற்ருக்குதலால் நவரத்தினங்களுமுதிரப் பயந்தோடி, அகத்துள் இ திறம் உணர்ந்தனள்—தம் மனத்திலிவ்வாறு சிந்தித்தார் எ—று.

ஓடினள்-முற்றெச்சம். தெய்வத்தன்மை யுடையோராலுஞ் சகித்தற்கரிய பொறியென்பார் 'வெஞ்சுடர்ப்பொறி' என்ருர். (1)

மாய வன்முதல் அமரர்கள் ஈசனை வணங்கி
நீயோர் மைந்தனைத் தருகென நெற்றிநாட் டத்தால்
ஆய வன்சுடர் உதவியோர் மதலையாய் அமர்வான்
ஏயி னுன்சர வணத்தெனத் தெரிந்தனள் இறைவி.

இ—ள்: மாயவன் முதல் அமரர்கள்—திருமால் முதலாகிய தேவரனைவரும், ஈசனை வணங்கி—சிவபிரானை நமஸ்கரித்து, நீ ஓர் மைந்தனை தருக என—தேவரீர் தனியே ஒரு புதல்வரைத் தோற்றுவித்தருள்கவென்று பிரார்த்திக்க, ஆயவன்—அச்சிவபிரான், நெற்றி நாட்டத்தால் சுடர் உதவி—நெற்றிக் கண்களினின்றும் அக்கினிப் பொறிகளைத் தோற்றுவித்து, ஓர் மதலை ஆய் சரவணத்து அமர்வான் ஏயினுன் என—ஒரு குமாரராய்ச் சரவண தடாகத்திலிருக்கும்படி யனுப்பினு ரென்று, இறைவி தெரிந்தனள்—தலைவியாராகிய உமாதேவியார் அறிந்தார் எ—று. (2)

அன்ன தற்பினர் உமையவள் எனதுபால் அமலன்
தன்ன ருட்பெறு மதலைதோன் ருவகை தடுத்த
பொன்ன கர்க்கிறை விரிஞ்சன்மால் முதலபுத் தேளிர்
பன்னி யர்க்கெலாம் புதல்வரின் ருகெனப் பகர்ந்தாள்.

இ—ள்: அன்னதன் பின்னர்—அதன் பின்பு, உமையவள்—உமாதேவியார், அமலன் தன் அருள் பெறும் மதலை எனது பால் தோன்ருவகை தடுத்த பொன்ன கர்க்கு இறை விரிஞ்சன் மால் முதல் புத்தேளிர் பன்னியர்க்கு எலாம்—சிவபிரான் தமது கிருபையினுற் பெற்ற புதல்வன் என்னிடத்தே தோற்ருவண்ணந் தடை செய்த சுவர்க்கலோகாதிபனுகிய இந்திரன், பிரமா, விஷ்ணு முதலாகிய தேவர் களது மனைவியரனைவர்க்கும், புதல்வர் இன்று ஆக என பகர்ந்தாள்—புத்திரரில்லா தொழிகவென்று சபித்தார் எ—று.

பின்னர் என்பதில் னகரவொற்றும் ஆக என்பதிலீற்றுயிர் மெய்யுந் தொக் கன. குமாரக்கடவுள் உமாதேவியாரிடத்துதியாது சிவபிரானிடத்துதிக்குமாறு தேவர்கள் பிரார்த்தித்தமையை ''ஓர் குமரன்றனை-நீ தரல்வேண்டு நின்பானின் னையே நிகர்க்க'' என முன்னர்த் திருவவதாரப்படலத்துக் கூறுதலானறிக. (3)

இமைய மாமகள் இத்திறம் புகன்று மீண்டேகிச்
சமயம் யாவையும் நிறுவிய கண்ணுதற் றலைவன்
அமல மாந்திரு முன்னர்வந் தரிக்குமுன் னரிதாங்
கமல மார்அடி கண்டனள் பணிந்துகண் களித்தாள்.

இ—ள்: இமய மா மகள் இ திறம் புகன்று—இமயமலையரசனது சிறந்த புதல்வி யாராகிய உமாதேவியார் இவ்வாறு சபித்து, மீண்டு ஏகி—திரும்பிப்போய், சம யம் யாவையும் நிறுவிய கண்ணுதல் தலைவன் அமலம் ஆம் திரு முன்னர் வந்து—எல்லாச் சமயங்களையும் (அவரவர் வினைப்பயன்கட்கேற்ப உலகத்தில்) நிறுத்திய நெற்றிக்கண்ணையுடைய தலைவராகிய சிவபிரானது பரிசுத்தமமைந்த சந்நிதானத் தில் வந்து, அரிக்கும் உன்ன அரிது ஆம் கமலம் ஆர் அடி கண்டனள்—விஷ்ணு மூர்த்தியாலுந் தியானித்துணர்தற்கரிதான தாமரை மலர் போன்ற திருவடிகளைத் தரிசித்து, பணிந்து கண்களித்தாள்—வணங்கி நேத்திரானந்தமுற்ருர் எ—று.

உன்ன என்பதனீற்றகரந்தொக்கது. ஆர்-உவமவுருபு: சிவபிரான் சமயம் யாவையு நிறுவினரென்பதை "கருகிரு ணிறத்து மாயனு கமமே கமலம்வாழ் பிர மனு கமமே-யருகனு கமமே புத்தனு கமமே யறையுலோ காயத நூலே-மருவுசாங் கியமே தருக்கசாத் திரமீ மாஞ்சமே யிவைகளு மின்னு-மிருநிலத் துளபன் னூல் களுஞ் சுயமே யெம்பிரான் படைத்தனன் மாதோ" என்னுஞ் சூதசங்கிதைச் செய் யுளானுணர்க. (4)

உம்பர் யாவருங் குறையிரந் திடலுநீ யுதவுஞ்
செம்பொ றித்தொகை யாற்றலும் வெம்மையுந் தெரிந்து
வெம்பி முற்றுடல் பதைப்புற அகன்றிவண் மீண்டேன்
எம்பெ ருந்தகை அவ்வழல் நீக்கலா லென்றாள்.

இ—ள்: உம்பர் யாவரும் குறையிரந்திடலும் நீ உதவும் செம் பொறி தொகை ஆற்றலும் வெம்மையும் தெரிந்து—(அவ்வுமாதேவியார் சிவபிரானை நோக்கி இறைவரே!) தேவர்களனைவரும் பிரார்த்திக்கத் தேவரீர் தோற்றுவித்த செவ்விய அக்கினிப் பொறிக் கூட்டத்தினது வலிமையையும் வெப்பத்தையுங் கண்டு,முற்று உடல் வெம்பி பதைப்புற அகன்று-சரீர முழுதும் வெதும்பிப் பதைக்க ஓடிச் சென்று, எம் பெரும் தகை அ அழல் நீக்கலால் இவண் மீண்டேன்-எமது தலைவராகிய தேவரீர் அவ்வக்கினியை யகற்றுதலால் இவ்விடத்துத் திரும்பினேன், என்றாள்—என்று கூறியருளினார் எ—று.

பெருந்தகை-அன்மொழித்தொகை. (5)

கன்னி இங்ஙனம் பகர்தலுங் கருணைசெய் தருளித்
தன்னி டத்தினில் இருத்தினன் இருந்திடு தையல்
முன்னம் ஓடலிற் சிதறுநூ புரமணி முழுதும்
என்னை யாளுடை நாயகன் முன்னிலங் கினவால்.

இ—ள்: கன்னி இங்ஙனம் பகர்தலும்—உமாதேவியாரிவ்வாறு விண்ணப்பஞ் செய்ய, கருணைசெய்தருளி தன் இடத்தினில் இருத்தினன்—கிருபை செய்தருளித் தமது இடப்பாகத்தில் அவரையிருத்தினார், இருந்திடு தையல் முன்னம் ஓடலில் சிதறும் நூபுர மணி முழுதும்—அவ்வாறிருந்த உமாதேவியார் முன்னரே (அக் கினிப்பொறி தோன்றியபொழுது) பயந்தோடுதலாற் சிதறிய சிலம்பிலுள்ள இரத் தினங்களெல்லாம், என்னை ஆள் உடை நாயகன் முன் இலங்கின—எங்களை யடிமை யாகவுடைய தலைவராகிய சிவபிரானது திருமுன்னிலையில் விளங்கின எ—று (6)

தளிரின் மெல்லடிப் பரிபுர மாயின தணந்து
மிளிரு மந்நவ மணிகளின் ஆணையால் விமலை
ஒளிரு நல்லுருத் தோன்றின ஐம்முகத் தொருவன்
தெளிரு முச்சுடர் அகத்திடை யமர்ந்திடுஞ் செயல்போல்.

இ—ள்: ஐம் முகத்து ஒருவன் தெளிரும் மு சுடர் அகத்திடை அமர்ந்திடும் செயல் போல்—ஐந்து திருமுகங்களையுடைய ஒப்பற்ற சிவபிரான் பிரகாசிக்கின்ற சோமசூரியாக்கினி மண்டலங்களின் மத்தியத்திற் பரஞ்சோதியாய் வீற்றிருந்தரு ளுந் தன்மையைப்போல, தளிரில் மெல் அடி பரிபுரம் ஆயின தணந்து மிளிரும்

அ நவ மணிகளின்—மாந்தளிரைப் போன்ற மெல்லிய பாதங்களிலணிந்த சிலம்பு களினின்று முதிர்ந்து விளங்குகின்ற அந்த நவரத்தினங்களில், ஆணையால்—(சிவ பிரானது) கட்டளையினுல், விமலை ஒளிரும் நல் உரு தோன்றின—உமாதேவியாரது பிரகாசிக்கின்ற நல்ல சாயை தோன்றின எ—று.

''பரப்பியகா-லஞ்சநறுந் தூவி யனிச்சமசோ கங்கமலம்-பஞ்சிலவு மாந்தளி ரொப் பாம்'' என உபமான சங்கிரகங் கூறுதலின் தளிரை மாந்தளிரென்ருேம்; அசோகந்தளிரெனினுமாம். ஆயின-வினையாலணையும் பெயர். செயல்போல் தோன்றின என இயையும். (7)

**எண்ணி லாநவ மணிகளின் உமையுரு வெனைத்துங்**
**கண்ணி ஞற்றெரிந் தருளிஞல் வம்மெனக் கழற**
**அண்ண லோர்வகை மணிக்கொரு சத்திக ளாக**
**நண்ணி ஞர்நவ சத்திகள் அமரர்நற் றவத்தால்.**

இ—ள்: அண்ணல்—சிவபிரான், எண் இலா நவமணிகளின்—அளவிடப் படாத நவரத்தினங்களில், உமை உரு எனைத்தும் கண்ணிஞல் தெரிந்து—உமா தேவியாரது சாயையனைத்தையுங் கண்ணிஞற் பார்த்து, அருளிஞல் வம் என கழற—கிருபையோடும் வெளியே வருதிரென்று திருவாய் மலர்ந்தருள, ஓர் வகை மணிக்கு ஒரு சத்திகள் ஆக—ஒவ்வோர் சாதி ரத்தினங்களுக் கொவ்வொரு சத்தி யாக, நவ சத்திகள்—ஒன்பது சத்தியர்கள், அமரர் நல் தவத்தால் நண்ணிஞர்—தேவர்களியற்றிய நல்ல தவத்திஞற் ருேன்றிஞர்கள் எ—று.

அருளிஞல் கழற என வியையும். சூரஞதியரைச் சங்கரித்தற்குரிய படைவீர ரைப் பெறுபவராதலின் 'அமரர் நற்றவத்தால் நண்ணிஞர்' என்ருர். (8)

**பருப்ப தக்கொடி புரைநவ சத்திகள் பரமன்**
**திருப்ப தத்திடை வணங்கிநின் றவனிடைச் சிந்தை**
**விருப்பம் வைத்தலும் முனிவர்தம் மகளிர்போல் விரைவில்**
**கருப்ப முற்றனர் யாவதும் உமையவள் கண்டாள்.**

இ—ள்: பருப்பத கொடி புரை நவசத்திகள்—இமயமலையரசன் புதல்வியாரா கிய உமாதேவியாரைப் போன்ற ஒன்பது சத்தியர்களும், பரமன் திரு பதத்திடை வணங்கி நின்று—சிவபிரானது சிறந்த பாதங்களில் நமஸ்கரித்துநின்று, அவ ணிடை சிந்தை விருப்பம் வைத்தலும்—அச்சிவபிரானிடத்து மனவிருப்பம் வைத்தவுடன், முனிவர்தம் மகளிர் போல் விரைவில் கருப்பம் உற்றனர்—(தாருக வனத்து) முனிபத்தினிகளைப்போலச் சீக்கிரத்திற் கருப்பமாயினர், யாவதும் உமையவள் கண்டாள்—அந்நிகழ்ச்சிகளனைத்தையும் உமாதேவியார் பார்த்தருளி ஞர் எ—று.

தாருகவனத்து முனிபன்னியர் பிக்ஷாடனத் திருவுருவங்கொண்டருளிய சிவ பிரானைக் காமித்த மாத்திரத்தே கருப்பமெய்தியதுபோல நவசத்திகளும் சிவபி ரானைக் காமித்த மாத்திரத்தே கருப்ப மெய்தினராதலின் 'முனிவர்த மகளிர் போல் விரைவிற் கருப்பமுற்றனர்' என்ருர். (9)

**முனம்பு ரிந்துல களித்தவள் அனையர்பால் முதிருஞ்**
**சினம்பு ரிந்திவண் எமக்குமா ருகிய திறத்தால்**
**கனம்பு ரிந்தஇக் கருப்பமோ டிருத்திர் பல்காலம்**
**இனம்பு ரிந்தநீர் யாவரு மென்றுசூள் இசைத்தாள்**

இ—ள்: முனம் புரிந்து உலகு அளித்தவள்—முற்காலத்திலே விரும்பி உலகங்களைப் பெற்ற உமாதேவியார், அனையர்பால் முதிரும் சினம் புரிந்து—அச் சத்தியர்மாட்டு மிகவுங் கோபமுற்று, இனம் புரிந்த நீர் யாவரும்—கூட்டமாகிய நீவிரொன்பதின்மரும், இவண் எமக்கு மாறு ஆகிய திறத்தால்—இவ்விடத்து நமக்கு விரோதிகளான காரணத்தால், கனம் புரிந்த இ கருப்பமோடு பல்காலம் இருத்திர் என்று—பாரமாகிய இந்தக் கருப்பத்தைச் சுமந்துகொண்டு பலகாலமிருக்கக் கடவீர்களென்று, சூள் இசைத்தாள்—சாபவசனத்தைக் கூறினார் எ—று.

எமக்கு மாறாகிய திறமென்றது தமது தலைவரைக் காமித்துக் கருப்பமெய்தியதை. (10)

ஆவ தெல்லையில் நடுக்கமுற் றஞ்சியே அங்கண்
மேவு மாதர்மெய் வியர்த்தனர் அவ்வியர்ப் பதனில்
தேவ தேவன தருளினால் தினகரத் திரள்போல்
ஒவி லாவிறல் வீரர்கள் இலக்கர்வந் துதித்தார்.

இ—ள்: ஆவது எல்லையில்—அச்சமயத்தில், அங்கண் மேவும் மாதர் நடுக்கமுற்று அஞ்சி மெய் வியர்த்தனர்—அவ்விடத்துநின்ற சத்தியர்களொன்பதின்மரும் நடுங்கிப்பயந்து சரீரம் வெயர்க்கப்பெற்றார்கள், அ வியர்ப்பு அதனில்—அந்த வெயர்வையினின்றும், ஒ இலா விறல் வீரர்கள் இலக்கர்—ஒழிதலில்லாத வலிமையையுடைய இலக்கம் வீரர்கள், தேவதேவனது அருளினால்—தேவாதி தேவராகிய சிவபிரானது அனுக்கிரகத்தினால், தினகர திரள் போல் வந்து உதித்தார்—சூரியர்கூட்டம் உதயஞ்செய்தாற்போல் வந்து அவதரித்தார்கள் எ—று.

தேவதேவனதருளினால்—உதித்தார் என இயையும். பேரொளியோடு தோன்றினராதலின் 'தினகரத்திரள்போல் உதித்தார்' என்றார். (11)

வடுத்த னைப்பொருங் கண்ணினர் வியர்ப்பினில் வந்தாங்
கடுத்த மானவர் ஓரிலக் கத்தரும் அசனி
கடுத்த சொல்லினர் பொற்றுகி லுடையினர் கரத்தில்
எடுத்த வாளினர் பலகைய ராகிஈண் டினரால்.

இ—ள்: வடு தனை பொரும் கண்ணினர் வியர்ப்பினில் வந்து அடுத்த மானவர் ஓர் இலக்கத்தரும்—மாவடுப்பிளவை நிகர்த்த கண்ணினையுடைய நவசத்தியர்களது வெயர்வையிற்றோன்றி நெருங்கிய இலக்க வீரர்களும், அசனி கடுத்த சொல்லினர்—இடியைப்போன்ற வார்த்தையைப் பேசுகின்றவர்களும், பொன் துகில் உடையினர்—பீதாம்பரத்தை யுடுத்தவர்களும், கரத்தில் எடுத்த வாளினர் பலகையர் ஆகி—கையிலேந்திய வாட்படையையுடையவர்களும் பரிசையையுடையவர்களுமாய், ஈண்டினர்—நெருங்கினார்கள் எ—று.

கரத்திலெடுத்த என்பதைப் பலகையரென்பதனோடு மொட்டுக. வடு—ஆகுபெயர். (12)

அனையர் யாவரும் ஈசனை யடைந்தனர் அன்புற்
றினிய வாகிய அமலன்நா மங்களை யேத்தி
வனைக ருங்கழல் வணங்கிமுன் நிற்றலும் மற்றப்
புனித நாயகன் அவர்தமை நோக்கியே புகல்வான்.

பிரகாசத்தை நோக்கிய அற்பவுணர்ச்சியையுடைய பிராணிகளைப்போல மிகவும் மனம் பயப்பட, கண்கள் அலமர—கண்கள் சுழல, மயங்கி சொல்வார்—திகைத்து இவ்வாறு விண்ணப்பஞ் செய்வார்கள் எ—று.

தினகரன்-நாளைச் செய்பவன். சூரியோதயமே நாளினுதியந்தங்கட் கெல்லையாதலின் இப்பெயர் வழங்கிற்று. சில்லுணர்வுயிர்களென்றது புழு முதலிய வெயில் பொறாச் சீவராசிகளை. (101)

எல்லையில் ஒளிபெற் றன்றால் எந்தைநின் னுருவம் இன்னும்
ஒல்லுவ தன்றால் காண ஒளியிழந் துலைந்த கண்கள்
அல்லதும் பெருமை நோக்கி அஞ்சுதும் அடியம் உய்யத்
தொல்லையின் உருவங் கொண்டு தோன்றி யேஅளித்தி யென்றார்.

இ—ள்: எந்தை—எங்கள் கடவுளே!, நின் உருவம் எல்லை இல் ஒளி பெற்றன்று—தேவரீரது திருவுருவம் அளவிறந்த ஒளியைப் பெற்றது (ஆதலினால்), இன்னும் காண ஒல்லுவது அன்று—மேலுஞ் (சிறிதுபொழுது) பார்த்து நிற்க இயல்வதன்று, கண்கள் ஒளி இழந்து உலைந்த—எங்கள் கண்கள் ஒளியையிழந்து உலைவுபெற்றன, அல்லதும்—அன்றியும், பெருமை நோக்கி அஞ்சுதும்—வடிவப் பெருமையைப் பார்த்துப் பயப்படுகின்றோம், அடியம் உய்ய—அடியேங்களுய்யும் படி, தொல்லையின் உருவம் கொண்டு தோன்றி அளித்தி என்றான்—பழைய வடிவத்தைக் கொண்டு தோற்றிக் காத்தருள்க என்று வேண்டினார்கள் எ—று.

பெற்றன்று-பெறு எனும் பகுதி தன்னொற்றிரட்டி இறந்த காலங்காட்டி அன் சாரியையும் றுகர விகுதியும்பெற்று வந்த தெரிநிலை ஒன்றன்பால் வினைமுற்று. (102)

என்றிவை புகன்று வேண்ட எம்பிரான் அருளால் வான்போய்
நின்றபே ருருவந் தன்னை நீத்தறு முகத்தோ னாகித்
தொன்றுள வடிவத் தோடு தோன்றலுந் தொழுது போற்றிக்
குன்றிருஞ் சிறைகள் ஈர்ந்த கொற்றவன் கூற லுற்றான்.

இ—ள்: என்று இவை புகன்று வேண்ட—என்று இவ் வாசகங்களைக் கூறிப் பிரார்த்திக்க, எம்பிரான்—எங்கள் தலைவராகிய குமாரக்கடவுள், அருளால்—கிருபையோடு, வான் போய் நின்ற பேர் உருவம் தன்னை நீத்து—ஆகாயத்தின் மேலுயர்ந்து நின்ற பெரிய வடிவத்தை விடுத்து, அறுமுகத்தோன் ஆகி—ஆறு திருமுகங்களையுடையவராய், தொன்று உள வடிவத்தோடு தோன்றலும்—முன்னைய திருவுருவத்துடனெழுந்தருளுதலும், குன்று இரும் சிறைகள் ஈர்ந்த கொற்றவன்—மலைகளின் பெரிய சிறகுகளையரிந்த இந்திரன், தொழுது போற்றி கூறலுற்றான் — வணங்கித் துதித்து இவ்வாறு சொல்லத் தொடங்கினான் எ—று. (103)

தொன்னிலை தவாது வைகுஞ் சூரனே முதலா வுள்ள
ஒன்னலர் உயிரை மாற்றி உம்பரும் யானும் பாங்கர்
மன்னிநின் றேவல் செய்ய வானுயர் துறக்கம் நண்ணி
என்னர சியற்றி எந்தாய் இருத்திஎன் குறையீ தென்றான்.

இ—ள்: எந்தாய்—எங்கள் தலைவரே!, தொல் நிலை தவாது வைகும் சூரனே முதல் ஆ உள்ள ஒன்னலர் உயிரை மாற்றி—பழைய நிலையிற் குறைவுபடாது

வாழ்ந்திருக்கின்ற சூரபன்மனே முதலாகவுள்ள பகைவர்களது உயிரை யொழித்து, உம்பரும் யானும் பாங்கர் மன்னி நின்று ஏவல் செய்ய—தேவர்களும் யானும் பக்கத்திலமைந்து நின்று குற்றேவல்களைச் செய்ய, வான் உயர் துறக்கம் நண்ணி—ஆகாயத்திலுயர்ந்துள்ளதாகிய சுவர்க்கலோகத்தையடைந்து, என் அரசு இயற்றி இருத்தி—எனதரசாட்சியைச் செய்திருப்பீராக, என் குறை ஈது என்றான்—எனது வேண்டுகோளிதுவென்று கூறினான் எ—று.

பாங்கர்-பாங்கு என்பதனிறுதிப்போலி. (104)

இகமொடு பரமும் வீடும் ஏத்தினர்க் குலப்பு றாமல்
அகனம ரருளால் நல்கும் அறுமுகத் தவற்குத் தன்சீர்
மகபதி யளிப்பான் சொற்ற வாசகம் சுடரோன் றங்கிப்
பகவனுக் கொருவன் நல்கப் பராவிய போலு மாதோ.

இ—ள்: ஏத்தினர்க்கு—தம்மைத் துதித்த அன்பர்களுக்கு, அகன் அமர் அருளால்—தமது திருவுள்ளத்திற் பொருந்திய கருணையினால், இகமொடு பரமும் வீடும்—இம்மையின்பத்தையும் மறுமையின்பத்தையும் முத்தியையும், உலப்பு உறாமல் நல்கும்—குறையாது கொடுக்கின்ற, அறுமுகத்தவற்கு—ஆறு திருவதனங்களையுடைய குமாரக்கடவுளுக்கு, மகபதி—இந்திரன், தன் சீர் அளிப்பான் சொற்ற வாசகம்—தனது அரசியற் சிறப்பைக் கொடுக்கும்படி கூறிய வசனம், ஒருவன் அங்கிப்பகவனுக்கு சுடர் ஒன்று நல்க பராவிய போலும்—ஒருபுருடன் அக்கினிதேவனுக்கு ஒரு சோதியைக் கொடுத்தற்கு வேண்டிய தன்மையைப் போலும் எ—று.

சுடர் முழுதையுந் தன்னதாகவுடைய அக்கினி தேவனுக்கு ஒருவன் ஓர் சுடரையுதவுதலால் முன்னையின் மிக்க சிறப்புறாமைபோல, உலகமனைத்தையுமாளும் பரமபதியாகிய குமாரக்கடவுளுக்கும் இந்திரன் தனதுலகராச்சியத்தைக் கொடுத்தலால் முன்னையின் மிக்கதொரு சிறப்புவாராதென்பது கருத்து, உலப்புறாமை—தவறாது கொடுத்தல். அகன்—இறுதிப்போலி. பராவிய—பரவியது என்பதன் விகாரம். (105)

வானவர் கோனை நோக்கி வறிதுற நகைத்துச் செவ்வேள்
நீநமக் களித்த தொல்சீர் நினக்குநாம் அளித்தும் நீவிர்
சேனைக ளாக நாமே சேனையந் தலைவ னாகித்
தானவர் கிளையை யெல்லாம் வீட்டுதும் தளரேல் என்றான்.

இ—ள்: செவ்வேள்—குமாரக்கடவுள், வானவர் கோனை நோக்கி வறிது உற நகைத்து — தேவர்க்கரசனாகிய இந்திரனைப் பார்த்துக் குறுநகை செய்து, நீ நமக்கு அளித்த தொல் சீர் நினக்கு நாம் அளித்தும்—(இந்திரனே) நீ எமக்குத் தந்த பழைய சிறப்பை உனக்கு யாம் மீட்டுத் தந்தோம், நீவிர் சேனைகள் ஆக—நீங்கள் சேனைகளாயமைய, நாமே சேனையம் தலைவன் ஆகி—யாமே சேனைத்தலைவராகி' தானவர் கிளையை எல்லாம் வீட்டுதும்—அசுரர் கூட்டமெல்லாவற்றையுஞ் சங்கரிப்போம், தளரேல் என்றான்—வருந்தற்கவென்று கூறியருளினார் எ—று.

வறிது ஈண்டுச் சிறுமை. ''வறிது சிறிதாகும்'' என்றாராசிரியர் தொல்காப்பியனாரும். (106)

கோடலங் கண்ணி வேய்ந்த குமரவேள் இனைய கூற
ஆடியல் கடவுள் வெள்ளை அடற்களிற் றண்ணல் கேளா
வீடுற அவுண ரெல்லாம் வியன்முடி திருவி னோடுஞ்
சூடின னென்னப் போற்றிச் சுரரொடு மகிழ்ச்சி கொண்டான்.

இ—ள்: கோடலம் கண்ணி வேய்ந்த குமரவேள் இனைய கூற—காந்தண் மலர்மாலையையணிந்த குமாரக்கடவுள் இவ்வாசகங்களைக் கூறியருள, ஆடு இயல் கடவுள் அடல் வெள்ளை களிற்று அண்ணல் கேளா—(எதிர்த்தாரை) அழிக்குந்தன்மை பொருந்திய தெய்வீகமாகிய வலிய ஐராவத யானையை ஊர்தி யாகவுடைய இந்திரன் கேட்டு, சுரரொடு போற்றி—தேவர்களுடன் துதித்து, அவுணர் எல்லாம் வீடுற திருவினோடும் வியன்முடி சூடினன் என்ன மகிழ்ச்சி கொண்டான்—அசுரர் யாவருமிறக்கச் செல்வத்துடன் பெரிய முடியைச் சூடிய வன் போலப் பேருவகையுற்றான் எ—று.

முருகக் கடவுளருளிச் செய்தவாறு முடிப்பரெனத் துணிந்தனனாதலின் 'வியன் முடிசூடினனென்ன-மகிழ்ச்சி கொண்டான்' என்றார். (107)

அறுமுகத் தேவை நோக்கி அமரர்கோன் இந்த வண்டத்
துறைதரு வரைகள் நேமி உலகுயிர் பிறவும் நின்னால்
முறைபிறழ்ந் தனவால் இந்நாள் முன்புபோல் அவற்றை யெல்லாம்
நிறுவுதி யென்ன லோடும் நகைத்திவை நிகழ்த்த லுற்றான்.

இ—ள்: அமரர்கோன்—தேவேந்திரன், அறுமுக தேவை நோக்கி—ஆறு திருமுகங்களையுடைய குமாரக்கடவுளைப் பார்த்தருளி, இந்த அண்டத்து உறை தரு வரைகள்—இந்த வண்டத்திற் பொருந்திய மலைகளும் நேமி—கடல்களும், உலகு—உலகங்களும், உயிர்—ஆன்மாக்களும், பிறவும்—மற்றைய பொருள்களும், இ நாள்—இந்தத் தினத்தில், நின்னால் முறை பிறழ்ந்தன—தேவரீரது திருவிளை யாட்டினால் ஒழுங்கு தவறின (ஆதலின்), அவற்றை எல்லாம் முன்பு போல் நிறு வுதி என்னலோடும்—அவைகளையெல்லாம் முன்போல நிறுத்தியருளுகவென்று கூறுதலும், நகைத்து இவை நிகழ்த்தல் உற்றான்—சிரித்து இவ்வாசகங்களைக் கூறியருளுவார் எ—று.

நகைத்தது பண்டுபோனிறுவுதல் தமக்கெளிதாதலின். (108)

இன்னதோ ரண்டந் தன்னில் எம்மில்வே றுற்ற வெல்லாந்
தொன்னெறி யாக 'என்றோர் தூமொழி குமரன் கூற
முன்னுறு பெற்றித் தான முறையிறந் திருந்த தெல்லாம்
அந்நிலை எவரும் நோக்கி அற்புத மடைந்து நின்றார்.

இ—ள்: இன்னது ஓர் அண்டம் தன்னில் எம்மில் வேறு உற்ற எல்லாம் தொல் நெறி ஆக என்று—இந்த அண்டத்தில் எம்மால் வேறுபாடெய்திய எல் லாப் பொருள்களும் முன்னைய இயல்பினவாகுகவென்று, ஓர் தூ மொழி கும ரன் கூற—தூய்மையாகிய ஒரு வாசகத்தை முருகக்கடவுள் திருவாய்மலர்ந் தருள, முறை இறந்து இருந்த எல்லாம் முன் உறு பெற்றித்து ஆன—நிரை தவறியிருந்த பொருள்களெல்லாம் முன்னிருந்த இயல்பையுடையனவாயின, எவரும் அ நிலை நோக்கி அற்புதம் அடைந்து நின்றார்—யாவரும் அத் தன்மை யைப் பார்த்து ஆச்சரியமுற்று நின்றார்கள் எ—று.

உற்ற-விளையாலணையும் பெயர்; பெயரெச்சமெனினுமாம். பெற்றித்தான இருந்ததெல்லாம் என்பன-ஒருமை பன்மை மயக்கங்கள். எவருமென்றது தேவரை மாத்திரமன்று, அசுரர் மானுடர் முதலியோரையுமென்க. (109)

வேறு

நிற்கு மெல்லையின் நிலத்திடை யாகிப்
பொற்கெ னத்திகழ் பொருப்பிடை மேவுஞ்
சிற்கு ணக்குரிசில் சேவடி தாழூஉச்
சொற்க நாடுள சுரேசன் உரைப்பான்.

இ—ள்: நிற்கும் எல்லையில்—ஆச்சரியமுற்று நிற்கும்பொழுது, சொற்க நாடு உள சுர ஈசன்—சுவர்க்க லோகத்தில் வாழுகின்ற தேவர்க்கரசனுகிய இந்திரன், நிலத்திடை ஆகி பொற்கு என திகழ் பொருப்பு இடை மேவும் சித் குண குரிசில் சே அடி தாழூஉ—பூவுலகத்தினடுவணதாகிப் பொன்னிறமாய் விளங்குகின்ற மேருமலையினிற்கின்ற ஞானக்குணத்தையுடைய குமாரக்கடவுளது சிவந்த பாதங்களை வணங்கி, உரைப்பான்—இவ்வாறு கூறுவான் எ—று.

பொற்கு என்பதில் குவ்விகுதி பண்பையுணர்த்திற்று. தாழூஉ என்பதில் அளபெடை செய்யுளோசை குன்றுதவிடத்ததாதலால் இன்னிசை. இதனைச் சொல்லுடன் பிறந்த இயற்கையளபெடையென்றுங் கூறுவர் சிலர்; ஸ்வர்க்க மென்னும் வடமொழியின் றிரிபான சொர்க்கமென்பது எதுகைத் தொடையமைதி நோக்கி ரகரந் திரிந்து ககரங்கெட்டுச் சொற்கமென நின்றது. சுர-ஈசன்=சுரேசன்; குணசந்தி. (110)

ஆண்ட கைப்பகவ ஆரண மெய்ந்நூல்
பூண்ட நின்னடிகள் பூசனை யாற்ற
வேண்டு கின்றும்வினை யேம்அது செய்ய
ஈண்டு நின்னருளை ஈகுதி யென்றான்.

இ—ள்: ஆண் தகை பகவ — ஆண்டகைமையினையுடைய கடவுளே!, வினையேம்—பாவியேம், ஆரண மெய் நூல் பூண்ட நின் அடிகள் பூசனை ஆற்ற வேண்டுகின்றும்—வேதங்களாகிய உண்மை நூல்களை ஆபரணமாகத் தரித்துள்ள தேவரீரது திருவடிகளைப் பூசை செய்ய விரும்புகின்றோம், அது செய்ய—அதனையியற்றுமாறு, ஈண்டு நின் அருளை ஈகுதி என்றான்—இப்பொழுது தேவரீரது கருணையைச் செய்தருளவேண்டுமென்று வேண்டினன் எ—று.

ஆரணநூல் பூண்ட என்பதற்கு வேதநூலினுற் சுமக்கப்பெற்ற என்றும் அந் நூலடைந்து துதிக்கின்ற என்றும் பொருள் கூறல் பொருந்தும். கடவுள் வேதத்தை நூபுரமாகவும் பாதுகையாகவுமணிந்தவரென்பது நூற்கொள்கை. (111)

என்ன லுங்குகன் இசைந்து நடந்தே
பொன்னி னுலுயர் பொருப்பினை நீங்கித்
தன்ன தொண்கயிலை சார்ந்திடு ஞாங்கர்
மன்னி நின்றதொரு மால்வரை புக்கான்.

இ—ள்: என்னலும்—என்று இந்திரன் பிரார்த்திக்க, குகன் இசைந்து நடந்து—சுப்பிரமணியக்கடவுள் அதற்குடன்பட்டுச் சென்று, பொன்னினுல் உயர் பொருப்பினை நீங்கி—பொன்மயமாக வுயர்ந்துள்ள மேருமலையை நீங்கி, தன்னது ஒண் கயிலை சார்ந்திடு ஞாங்கர் மன்னி நின்றது ஒரு மால் வரை புக்கான்—தமது ஒளிபொருந்திய திருக்கைலாசகிரியின் பக்கத்திற் பொருந்தி நின்ற ஒரு பெரிய மலையிற் சென்றருளினுர் எ—று.

தன்னது எதுகை நோக்கிவந்த விரித்தல். கயிலை சார்ந்திடு ஞாங்கர்- கயிலையைச் சேர்ந்திருக்கும் அருகிடம். (112)

குன்றி ருஞ்சிறை குறைத்தவன் ஏனேர்
ஒன்றி யேதொழு துவப்புள மெய்தி
என்றும் நல்லிளைய ஞகிய எங்கோன்
பின்றொ டர்ந்தனர் பிறங்கலில் வந்தார்.

இ—ள்: குன்று இரும் சிறை குறைத்தவன் ஏனேர் ஒன்றி தொழுது—மலைகளினது பெரிய சிறகையரிந்த இந்திரனும் பிறரும் ஒருங்குகூடிக் கைதொழுது, உளம் உவப்பு எய்தி—மனத்தில் மகிழ்ச்சியைப் பெற்று, என்றும் நல் இளையன் ஆகிய எம் கோன் பின் தொடர்ந்தனர்—எப்போதும் நல்ல இளமைப் பிராயத்தையுடையராகிய சுப்பிரமணியக்கடவுளின் பின்தொடர்ந்து நடந்து, பிறங்கலில் வந்தார்—அம் மலையில் வந்தார்கள் எ—று.

எங்கோன்-எங்கள் தலைவன். என்றும் பரவிய வடிவினராய்க் குமாரக் கடவுளெனவும் முருகக்கடவுளெனவுந் திருநாமங்களைப் பெற்றமையின் 'என்று நல் லிளையன்' என்றுர். (113)

சூரல் பம்புதுறு கல்முழை கொண்ட
சாரல் வெற்பினிடை சண்முகன் மேவ
ஆரும் விண்ணவர் அவன்கழல் தன்னைச்
சீரி தர்ச்சனை செயற்கு முயன்றுர்.

இ—ள்: சண்முகன்—சுப்பிரமணியக்கடவுள், சூரல் பம்பு துறுகல் முழை கொண்ட சாரல் வெற்பின் இடை மேவ—பிரம்புகளடர்ந்துள்ள துறுகல்லா லாகிய முழைகளையுடைய சாரல் சூழ்ந்த அம்மலையினிடத்துச் சென்று தங்கியருள, விண்ணவர் ஆரும்—அதுகண்ட தேவரனைவரும், அவன் கழல் தன்னை சீரிது அர்ச்சனை செயற்கு முயன்றுர்—அக் கடவுளது பாதங்களைச் செவ்வனே புசை செய்ய முயன்றுர்கள் எ—று.

துறுகல்-பொற்றைக்கல். சூரல்பம்புவெற்பு துறுகன்முழை கொண்டவெற்பு எனத் தனித்தனியியையும். (114)

அந்த வேலையம ரர்க்கிறை தங்கண்
முந்து கம்மியனை முன்னுற அன்னுன்
வந்து கைதொழலும் மந்திர மொன்று
நந்த மாநகரின் நல்கிவ ணென்றுன்.

இ—ள்: அந்த வேலை—அப்பொழுது, அமரர்க்கு இறை—தேவர்க்கரசனுகிய இந்திரன், தங்கள் முந்து கம்மியனை முன்னுற—தங்கள் பழைய விச்சுவகன்மனை நினைக்க, அன்னுன் வந்து கைதொழலும்—அவன் வந்து கைகுவித்துத் தொழு

தலும், இவண்—இவ்விடத்து, நம் தம் மா நகரில்—எங்கள் பெரிய அமராவதி புரியைப் போலச் சிறப்புற, மந்திரம் ஒன்று நல்கு என்றான்—ஓர் கோயிலையமைப் பாயென்று கூறினான் எ—று.

கம்மியன்-கர்மம் என்னும் வடசொல்லின் திரிபாகிய கம்மம் என்பதனடி யாகப் பிறந்த பெயர். தொழில் செய்வோரென்பது பொருள். (115)

அருக்கர் தந்தொகை அனைத்தையு மொன்றா
உருக்கி யாற்றியென ஒண்மணி தன்னால்
திருக்கி ளர்ந்துலவு செய்யதொர் கோயில்
பொருக்கெ னப்புனைவர் கோன்புரி குற்றான்.

இ—ள்: அருக்கர் தம் தொகை அனைத்தையும் ஒன்றா உருக்கி ஆற்றி என—சூரியர்களது தொகுதி முழுவதையும் ஒன்றாகவுருக்கிச் செய்ததுபோல, திரு கிளர்ந்து உலவு செய்யது ஓர் கோயில்—அழகு மிகுந்து விளங்குகின்ற சிறந்த ஒரு திருக்கோயிலை, ஒள் மணி தன்னால்—ஒளி பொருந்திய இரத்தினங்களால், பொருக்கு என—விரைவாக, புனைவர்கோன் புரிகுற்றான்—தேவத்தச்சன் செய் தான் எ—று.

ஆற்றியென ஒண்மணிதன்னாற் புரிகுற்றான் என இயையும். பன்னிரு சூரிய ரும் அவரது பரிவார சூரியர்களுமடங்க 'அருக்கர் தந்தொகையனைத்தையும்' என் றார். கோயில்-இலக்கணப்போலி. பொருக்கு-விரைவுக் குறிப்பு. விகார வுவமை. (116)

குடங்கர் போல்மகு டங்கெழு வுற்ற
இடங்கொள் கோபுர விருக்கையின் நாப்பண்
கடங்க லுழ்ந்திடு கரிக்குரு குண்ணும்
மடங்கல் கொண்டதொர் மணித்தவி சீந்தான்.

இ—ள்: குடங்கர் போல் மகுடம் கெழுவுற்ற இடம் கொள் கோபுர இருக் கையின் நாப்பண்—குடங்களைப் போலச் சிகரங்கள் செறியப் பெற்ற விசாலமாகிய கோபுரத்தையுடைய அத் திருக்கோயிலினடுவே, கடம் கலுழ்திடு கரி குருகு உண் ணும் மடங்கல் கொண்டது ஓர் மணி தவிசு ஈந்தான்—மதத்தைப் பிலிற்றுகின்ற யானையின் மூளையையுண்ணுகின்ற சிங்கங்களாற்றாங்கப்பட்ட அழகிய ஓரா சனத்தை அமைத்தான் எ—று.

மகுடங்கெழுவுற்ற கோபுரம் என இயையும். (117)

ஈந்த வெல்லைதனில் இந்திரன் ஏவப்
போந்து வானெறி புகுந்திடு தூநீர்
சாந்த மாமலர் தழற்புகை யாதி
ஆய்ந்து தந்தனர்கள் அண்டர்கள் பல்லோர்.

இ—ள்: ஈந்த எல்லை தனில்—அவ்வாறமைத்துவடன், இந்திரன் ஏவ—இந் திரன் அனுப்ப, அண்டர்கள் பல்லோர் போந்து—பலதேவர்கள்போய், வான் நெறி புகுந்திடுதூநீர்—ஆகாயமார்க்கப் பாய்கின்ற பரிசுத்தமாகிய கங்கைநீரும், சாந்தம்—சந்தனமும், மாமலர்—சிறந்தபுஷ்பங்களும், தழல் புகைஆதி—தூபமு முதலிய உபகரணங்களை, ஆய்ந்து தந்தனர்கள்-சிறந்தனவாகத் தெரிந்து கொணர்ந் தார்கள் எ—று.

தழற்புகை இருபெயரொட்டு. ஆதி என்றதற்குத் தீபம் நைவேத்தியம் தாம்பூலம் முதலியவற்றையுரைக்க. (118)

## வேறு

அன்ன காலையில் அண்டர்கள் மேலையோன்
சென்னி யாறுடைத் தேவனை வந்தியா
உன்ன தாளருச் சித்தியா முய்ந்திட
இந்நி கேதனம் ஏகுதி நீயென்றான்.

இ—ள்: அன்னகாலையில்—அச்சமயத்தில், அண்டர்கள் மேலையோன்—தேவத் தலைவனாகிய இந்திரன், சென்னி ஆறு உடைதேவனை வந்தியா—ஆறுதிருத்தலைகளையுடைய முருகக்கடவுளை வணங்கி, உன்ன தாள் அருச்சித்து உய்ந்திட—நாங்கள் தேவரீருடைய திருவடிகளைப்பூசித்துய்யும்படி, நீ இ நிகேதனம் ஏகுதிஎன்றான்—தேவரீர் இந்தக்கோயிலிலெழுந்தருளுகவென்று வேண்டினான் எ—று.

மேலையோன் என்பதில் ஐகாரஞ்சாரியை. உன்ன என்பதில் அ-ஆறனுருபு. (119)

கூற்ற மன்னதுட் கொண்டுவிண் ணோரெலாம்
போற்ற மந்திரம் புக்கு நனந்தலை
ஏற்ற ரித்தொகை ஏந்தெழிற் பீடமேல்
வீற்றி ருந்தனன் வேதத்தின் மேலையோன்.

இ—ள்: வேதத்தின் மேலையோன்—வேதங்களுக்கதீதரான சுப்பிரமணியக் கடவுள், அன்னது கூற்றம் உட்கொண்டு—அவ் வார்த்தையைத் திருவுளம் பற்றி, விண்ணோர் எலாம் போற்ற மந்திரம் புக்கு—தேவரனைவருந் துதிக்க அத் திருக்கோயிலினுட் பிரவேசித்து, நனந்தலை—அதனடுவே, ஏற்று அரி தொகை ஏந்து எழில் பீடம் மேல் வீற்றிருந்தனன்—ஆண் சிங்கங்களாற் சுமக்கப்படுகின்ற அழகிய ஆசனத்தின் மேலெழுந்தருளியிருந்தார் எ—று. (120)

ஆன காலை அமரர்கள் வாசவன்
ஞான நாயக நாங்கள் உனக்கொரு
தானை யாகுந் தலைவனை நீயெனா
வான நீத்தத்து மஞ்சனம் ஆட்டினார்.

இ—ள்: ஆனகாலை—அப்பொழுது, அமரர்கள்—தேவர்களும், வாசவன்—இந்திரனும் (முருகக்கடவுளை நோக்கி), ஞானநாயக—ஞான முதல்வரே, நாங்கள் உனக்கு ஒரு தானை ஆகும்—யாங்கள் தேவரீருக்குச் சேனையாகவிருக்கின்றோம், நீ தலைவன் எனா—தேவரீர் சேனாதிபராமென்று கூறி, வான நீத்தத்து மஞ்சனம் ஆட்டினார்—ஆகாயக் கங்கையினீரினால் அபிடேகஞ்செய்தார்கள் எ—று.

வாசவன்-செல்வங்களையுடையவன். ஞான நாயகன்-இயற்கை ஞானத்தையுடைய தலைவன், அல்லது தத்துவ ஞானத்தாலுணரப்படுந் தலைவன். நாங்கள் தானையாகும் இடவழுவமைதி. ஈண்டு ஆகும் என்பதைக் கும் என்னுந் தன்மைப் பன்மை யெதிர்கால விகுதி பெற்று வந்த முற்றெனினுமாம். தலைவனை என்பதில் ஐ சாரியை. நீத்தம்-நீந்தப்படுவது; அம் செயப்படுபொருள் விகுதி. (121)

நொதுமல் பெற்றிடு நுண்டுகில் சூழ்ந்தனர்
முதிய சந்த முதலமட் டித்தனர்
கதிரும் நன்பொற் கலன்வகை சாத்தினர்
மதும லர்த்தொகை மாலிகை சூட்டினர்.

இ—ள்: நொதுமல் பெற்றிடும் நுண் துகில் சூழ்ந்தனர் — மிருதுத்தன்மையமைந்த நுட்பமான பட்டுவஸ்திரத்தைச் சாத்தினார்கள், முதிய சந்தம் முதல மட்டித்தனர்—முதிர்ந்த சந்தனத் தேய்வை முதலாகிய கந்தப் பொருள்களைத் திருமேனியிற் பூசினார்கள், கதிரும் நன் பொன் கலன் வகை சாத்தினர்—ஒளி செய்யும் நல்ல பொன்னாலாகிய ஆபரண வகைகளைத் தரித்தார்கள், மது மலர் தொகை மாலிகை சூட்டினர்—தேனிறைந்த மலர்க் கூட்டங்களாலாகிய மாலையைச் சூட்டினார்கள் எ—று.

சூழ்ந்தனர் முதலிய மூன்று முற்றுக்களை எச்சமாக்கிப் பொருள் கூறினுமாம். சந்தம்-ஆகுபெயர்; அதற்கு விசேடணமாகிய முதியவென்னும் பெயரெச்சம் ஆகுபெயர்ப் பொருளை விசேடியாது இயற் பெயர்ப் பொருளை விசேடித்து நின்றது. கதிரும்-எதிர்காலப் பெயரெச்சம். கலன் இறுதிப்போலி. (122)

ஐவ கைப்படும் ஆவியும் பாளிதம்
மெய்வி ளக்கமும் வேறுள பான்மையும்
எவ்வெ வர்க்கும் இறைவற்கு நல்கியே
செவ்வி தர்ச்சனை செய்தன ரென்பவே.

இ—ள்: ஐ வகை படும் ஆவியும்—ஐந்து வகைப்பட்ட தூபங்களையும், பாளித மெய் விளக்கமும்—மெய்மையாகிய கற்பூர தீபத்தையும், வேறு உள பான்மையும்—மற்றுமுள்ள உபசாரங்களையும், எவ்வெவர்க்கும் இறைவற்கு நல்கி—எத்தகை மேம்பட்டார்க்குந் தலைவராகிய குமாரக்கடவுளுக்குச் சமர்ப்பித்து, செவ்விது அர்ச்சனை செய்தனர்—நன்றாகப் பூசை செய்தார்கள் எ—று.

என்ப அசை; இதனை "கிளந்தவல்ல வேறுபிற தோன்றினுங்-கிளந்தவற்றியலானுணர்ந்தனர் கொளலே" எனத் தொல்காப்பியத்து இடையியலில் வரும் புறனடைச் சூத்திரத்தாற் கொள்க. ஐவகைத் தூபமாவன:— சந்தனம் அகில் பச்சைக் கர்ப்பூரம் குந்துருக்கம் குங்குலியம் என்னுமிவற்றாலாய ஐந்துமாம். இதனை மேல் தேவகிரிப்படலத்து இருபத்தொன்பதாஞ் செய்யுளினுங் காண்க. (123)

புரந்த ரன்முதற் புங்கவர் தம்முளத்
தரந்தை நீங்க அருச்சனை செய்துபின்
பரிந்து தாழ்ந்து பரவலும் ஆயிடைக்
கரந்து வள்ளல் கயிலையிற் போயினன்.

இ—ள்: புரந்தரன் முதல் புங்கவர்—இந்திரன் முதலிய தேவர்கள் யாவரும், தம் உளத்து அரந்தை நீங்க அருச்சனை செய்து—தமது மனத்தின் கணுள்ள துன்பந் தீருமாறு பூசை செய்து, பின்—அதன் பின்பு, பரிந்து தாழ்ந்து பரவலும்—அன்புகொண்டு வணங்கித் துதித்தலும், வள்ளல்—சுப்பிரமணியக்கடவுள், ஆயிடை கரந்து கயிலையில் போயினன்—அவ்விடத்தினின்றும் அந்தர்த்தானமாய்த் திருக்கைலாசகிரியிற் சென்றார் எ—று.

தம்முளத் தரந்தையென்றது சூரனுதியர் செய்யுமிடராற் குடிகொண்ட துக்கத்தை. (124)

வெற்பின் மிக்குயர் வெள்ளியம் பொற்றையில்
சிற்ப ரன்மறைந் தேகலுந் தேவரும்
பொற்பின் மேதகு பொன்னகர் அண்ணலும்
அற்பு தத்துடன் அவ்வரை நீங்கினர்.

**இ—ள்:** சிற்பரன்—ஞானவடிவினராகிய குமாரக்கடவுள், மறைந்து—அந்தர்த்தானமாய், வெற்பில் மிக்கு உயர் வெள்ளியம் பொற்றையில் ஏகலும்—மலைகளிற் சிறந்துள்ள திருக்கைலாசகிரியிற் சென்றருளியவுடன், தேவரும்—தேவர்களும், பொற்பில் மேதகு பொன்னகர் அண்ணலும்—அழகின் மேம்பட்ட சுவர்க்கலோகத்திற்கிறைவனுகிய இந்திரனும், அற்புதத்துடன் அ வரை நீங்கினர்—அதிசயத்துடன் அந்த மலையினின்று நீங்கிப் போனுர்கள் எ—று.

மேன்மையென்னும் பண்புப்பெயர் முதலெழுத்து மாத்திரமாய் மே என நின்றது. பூசை முற்றுங்காறும் வெளிப்பட்டிருந்தார் மேல் மறைந்தமையின் அற்புதமெய்தினர். (125)

ஈசன் மைந்தன் இளையன் இமையவர்
பூசை செய்யப் பொருந்தலின் அவ்வரை
மாசில் கந்த வரையென யாவரும்
பேச ஆங்கொர் பெயரினைப் பெற்றதே.

**இ—ள்:** ஈசன் மைந்தன் இளையன்—சிவபிரானது இளைய திருக்குமாரராகிய முருகக்கடவுள், இமையவர் பூசை செய்ய பொருந்தலின்—தேவர்கள் பூசிக்க எழுந்தருளியிருத்தலால், அ வரை—அந்த மலையானது, மாசு இல் கந்தவரை என யாவரும் பேச—குற்றமற்ற கந்தவெற்பென்று அனைவருஞ் சொல்லுமாறு, ஓர் பெயரினை பெற்றது—ஒரு நாமத்தைப் பெற்றது எ—று.

மைந்தனிளையன்=இளைய மைந்தன். ஆங்கு-அசை. (126)

ஆன கந்த வடுக்கலைத் தீர்ந்துபோய்
வான மன்னன் மனேவதி நண்ணினன்
ஏனை வானவர் யாவரும் அவ்வவர்
தான மெய்தினர் தொன்மையில் தங்கினுர்.

**இ—ள்:** வான மன்னன்—விண்ணுலகத்திற் கிறைவனுய இந்திரன், ஆன கந்த அடுக்கலை தீர்ந்துபோய் மனேவதி நண்ணினன்—அந்தக் கந்தவெற்பை நீங்கிப் போய் (மகாமேருமலையிலுள்ள) மனேவதி நகரையடைந்தான், ஏனை வானவர் யாவரும்—மற்றைய தேவரனைவரும், அவ்வவர் தானம் எய்தினர்—தத்தமிருக்கைகளையடைந்து, தொன்மையில் தங்கினுர்—முன்போல இருந்தார்கள் எ—று.

மனேவதி—மனத்தையுடையது. காண்போர் மனத்தைக் கவருங் கட்டழகினையுடையதென்பது கருத்து. இது மேருமலையிற் பிரமதேவர் வசிக்குந் தானம். (127)

உயவல் ஊர்திகொண் டொய்யென முன்னரே
கயிலை யங்கிரி ஏகிய கந்தவேள்
பயிலும் வீரரும் பாரிட மள்ளரும்
அயலின் மேவர ஆயிடை வைகினன்.

இ—ள்; உயவல் ஊர்தி கொண்டு—தமது நினைப்பையே வாகனமாகக் கொண்டு, ஒய்யென முன்னரே கயிலையம் கிரி ஏகிய கந்தவேள்—விரைவாகத் திருக்கைலாசகிரியிற் சென்றருளிய முருகக்கடவுள், பயிலும் வீரரும் பாரிட மள்ளரும் அயலின் மேவர—உடன் பயிலுகின்ற வீரர்களும் பூதத்தலைவர்களும் பக்கத்திற் பொருந்த, ஆயிடை வைகினன்—அவ்விடத்து வீற்றிருந்தார் எ—று.

நினைத்த மாத்திரத்திற் போயினராதலின் 'உயவலூர்திகொண்டொய் யென முன்னரே-கயிலையங்கிரியேகிய' என்றார். ஒய் என முன்னர்-ஒய் என்று உச்சரித்து முடித்தற்கிடையில்=விரைவில். (128)

திருவிளையாட்டுப்படலம் முற்றிற்று

ஆகத்திரு விருத்தம் 1179

# 15. தகரேறுபடலம்.



குமாரக்கடவுள் ஆட்டுக்கடா வாகனத்திலெழுந்தருளிய சரித்திரத்தைக் கூறுதலினிப்பெயர்த்தாயிற்று.

## இப்படலப்பொழிப்பு.

ஒருநாள் நாரதமுனிவர் ஒரு வேள்வியையியற்றினர். அவ் வேள்வித்தீயினின் றும் ஒரு ஆட்டுக்கடாத் தோன்றி அனைவரையும் அடர்த்தது. அது கண்டஞ்சிய முனிவர்களுந் தேவர்களும் குமாரக்கடவுளிடஞ் சென்று முறையிட, அவர் தமது துணைவரான வீரவாகுவையேவி அந்த ஆட்டுக்கடாவைக் கொணர்வித்து அவர் கள் கேள்விப்படி வாகனமாகக்கொண்டருளினர் என்பதாம்.

சூரன்முத லோருயிர் தொலைக்கவரு செவ்வேள்
ஆருமகிழ் வெள்ளியச லத்தின்அமர் போழ்தின்
மேருவி லுடைப்பரன் விரும்பஅகி லத்தே
நாரதனோர் வேள்வியை நடாத்தியிட லுற்றான்.

இ—ள்: சூரன் முதலோர் உயிர் தொலைக்க வரு செவ்வேள்—சூரபன்மன் முதலிய அசுரர்களது உயிரையளிக்கும் வண்ணந் திருவவதாரஞ் செய்த குமா ரக்கடவுள், ஆரும் மகிழ் வெள்ளி அசலத்தின் அமர் போழ்தில்—அனைவரும் மகிழ்தற்கேற்ற திருக்கைலாசமலையில் வீற்றிருக்கும்பொழுது, நாரதன்—நாரத முனிவர், மேரு வில் உடை பரன் விரும்ப—மகாமேருமலையை வில்லாகவுடைய சிவபிரான் மகிழுமாறு, அகிலத்தே—பூவுலகத்தில், ஓர் வேள்வியை நடாத்தி யிடல் உற்றான்—ஒரு யாகத்தையியற்றினார் எ—று.

யாரென்பதன் விகாரமாகிய ஆர் ஈண்டு எஞ்சாமையையுணர்த்திற்று. மகிழ் என்னுங் காலங்கரந்த பெயரெச்சம் வெள்ளியசலம் என்னும் ஏதுப் பெயர்கொண் டது. போழ்து-பொழுது என்பதன் விகாரம். போழ்தில் நடாத்தியிடலுற்றான் என இயையும். யாக முதலிய புண்ணிய கருமங்களைச் செய்தற்கேற்றது பூமியே யாதலின் அங்கு வந்தியற்றினர். நடாத்தி-நடத்தியென்பதன் நீட்டல்விகாரம். தத்தங் குறைகளைச் சிவபிரானிட முறையிட்டு அனைவருந் தீர்த்துக்கொள்ளுதற் கிடமாதலால் 'ஆருமகிழ் வெள்ளியசலம்' என்றார். (1)

மாமுனி வருஞ்சுரரும் மாநில வரைப்பில்
தோமறு தவத்தினுயர் தொல்லை மறையோரும்
ஏமமொடு சூழ்தர இயற்றிய மகத்தில்
தீமிசை யெழுந்ததொரு செக்கர்புரை செச்சை.

இ—ள்: மா முனிவரும்—சிறந்த முனிவர்களும், சுரரும்—தேவர்களும், மா நில வரைப்பில் தோம் அறு தவத்தின் உயர் தொல்லை மறையோரும்—பெரிய பூவுலகத்திற் குற்றமற்ற தவத்தினாற் சிறந்துள்ள பழைய பிராமணர்களும், ஏம

மொடு சூழ்தர—மகிழ்ச்சியுடன் சூழ்ந்திருக்க, இயற்றிய மகத்தில்—செய்த அந்த யாகத்தில், தீமிசை—ஓமாக்கினியின்றும், செக்கர் புரை ஒரு செச்சை எழுந்தது—செவ்வானத்தை நிகர்த்த (நிறத்தையுடைய) ஒரு ஆட்டுக்கடாத் தோன்றியது எ—று.

தவத்திற்குக் குற்றம் கூடாவொழுக்க முதலியன. தொன்மை அறிவு முதிர்ச்சி தொன்றுதொட்டு வருமொழுக்கம் முதலியன. தபோலோகத் திருடிகளென்பார் 'மாமுனிவர்' எனவும், பல நன்மைகள் சம்பவிக்குமென நம்பிச்சூழ வென்பார் 'ஏமம்மொடு சூழ்தர' எனவும் கூறினர். (2)

அங்கிதனில் வந்ததகர் ஆற்றுமகந் தன்னில்
நங்களின மேபலவும் நாளுமடு கின்றார்
இங்கிவரை யான்அடுவன் என்றிசைவு கொண்டே
வெங்கனலை யேந்துபரி மீதெழுதல் போலும்.

இ—ள்: அங்கிதனில் வந்த தகர்—அவ்வாறு வேள்வித் தீயினின்றெழுந்த ஆட்டுக்கடா, ஆற்றும் மகம் தன்னில் நங்கள் இனம் பலவுமே நாளும் அடுக்கின்றார்—செய்யப்படுகின்ற யாகத்தில் எங்களினமாகிய பல ஆடுகளையுமே எப்பொழுதும் இவர்கள் கொல்லுகின்றார்கள் (ஆதலின்), யான் இங்கு இவரை அடுவன் என்று இசைவு கொண்டு—யான் அவ் வைரந் தீருமாறு இப்பொழுது இவர்களை யழிப்பேனென்று மனந்துணிந்து, வெம் கனலை ஏந்து பரி—கொடிய அக்கினியைச் சுமக்கின்ற (வாகனமாகிய) ஆட்டுக்கடா, மீது எழுதல் போலும்—அவ் வக்கினியின் மேற் கிளம்புவது போலும் எ—று.

இனமேயென்பதில் ஏகாரம் பிரிநிலை. உம்மை பலவுமென்பதில் முற்று; நாளுமென்பதில் தொறுப் பொருளது. முக்காலத்தினு மொத்தியல்வதாகலின் அடுகின்றாரென நிகழ்காலத்தாற் கூறினர். அங்கிதனில் தகர்வருதல் கனலையேந்துபரி எழுதல்போலுமென்க. தற்குறிப்பேற்றவணி. (3)

மாருதமும் ஊழிதனில் வன்னியும் விசும்பில்
பேருமுரும் ஏறுமொரு பேருருவு கொண்டே
ஆருவது போல்விரைவும் அத்தொளியும் ஆர்ப்புஞ்
சேரவெழும் மேடம்அடு செய்கைநினைந் தன்றே.

இ—ள்: மாருதமும்—ஊழிக்காற்றும், ஊழிதனில் வன்னியும்—வடவாமுகாக்கினியும், விசும்பில் பேரும் உரும் ஏறும்—மேகத்திற்றேன்றும் இடியும் ஆகிய இவை மூன்றும், ஒரு பேர் உருவு கொண்டு ஆருவது போல்—ஒரு பெரிய வடிவத்தைக் கொண்டு வருவது போல, விரைவும் அத்து ஒளியும் ஆர்ப்பும் சேர எழும் மேடம்—வேகமும் சிவந்த நிறமும் பேரொலியும் பொருந்தத் தோன்றிய ஆட்டுக்கடாவானது, அடு செய்கை நினைந்தன்று—கொலைத் தொழிலைச் செய்ய நினைந்தது எ—று.

ஊழிதனில் என்பது தாப்பிசையாய் மாருதத்தோடுமியையும். வேகமும் செந்நிறமும் பேரொலியுமுடைமையால் முறையே மாருத முதலிய மூன்றுங் கூடிய உருவத்தையுவமித்தார். அபூதவுவமை. பேரும்-பெயருமென்பதன் விகாரம். பெரியதையுஞ் சிறந்ததையும் ஆணென வழங்கு மரபுபற்றி 'உருமேறு' என்றார். (4)

கல்லென மணித்தொகை களத்தினிடை தூங்கச்
சில்லரிபெய் கிங்கிணி சிலம்படி புலம்ப
வல்லைவரு கின்றதகர் கண்டுமகத் துள்ளோர்
எல்லவரும் அச்சமொமா டிரிந்தனர்கள் அன்றே.

இ—ள்: மணித்தொகை கல் என களத்தின் இடை தூங்க—சிறு மணிக்கூட்டங்கள் கல்லெனுங் குறிப்பொலியுண்டாகும்படி கழுத்திலசையவும், சில் அரி பெய் கிங்கிணி சிலம்பு அடிபுலம்ப —சில பருக்கைக் கற்களுள்ளிடப்பெற்ற கிங்கிணியும் சிலம்பும் கால்களிலமைந்து ஒலிக்கவும், வல்லை வருகின்ற தகர் — விரைந்தெழுந்து வருகின்ற ஆட்டுக்கடாவை, மகத்து உள்ளோர் எல்லவரும் கண்டு—யாகசாலையிலுள்ளோரனைவரும் பார்த்து, அச்சமொடு இரிந்தனர்கள்— பயத்துடன் ஓடினார்கள் எ—று.

நிரம்பாவண்ணம் இடர்ப்பட்டமையின் 'சில்லரிபெய் கிங்கிணி' என்றார். கிங்கிணி-அற்பமாக ஒலித்தலால் வந்த காரணப்பெயர். சிலம்பென்பதும் ஒலி பற்றி வந்த பெயரே; இதிற் கருத்தாப் பொருள் விகுதி புணர்ந்து கெட்டது. வல் லென்னும் விரைவுப் பொருளுணர்த்துமிடைச்சொல் ஐகாரச்சாரியை பெற்று வல்லை என நின்றது. அச்சமொடு என்பதில் ஒடு அடைமொழிப் பொருட்டு' பயமுடையாரென்பது கருத்து. (5)

இரிந்தவர்கள் யாவரையும் இப்புவியும் வானுந்
துரந்துசிலர் வீழ்ந்துதொலை வாகநனி தாக்கிப்
பரந்ததரை மால்வரைப் பராகமெழ ஓடித்
திரிந்துயிர் வருந்தஅடல் செய்தது செயிர்த்தே.

இ—ள்: இரிந்தவர்கள் யாவரையும்—(அவ்வாறு) அஞ்சியோடினோரெல் லோரையும், இ புவியும் வானும் துரந்து—இந்தப் பூமியிலும் ஆகாயத்திலுந் துரத்தி, சிலர் வீழ்ந்து தொலைவு ஆக நனி தாக்கி—அவருட் சிலர் கீழே விழுந்து அழியும்படி மிகவும் மோதி, பரந்த தரை மால்வரைபராகம்எழஓடிதிரிந்து—விசாலமாகியபூமியினும் பெரியமலைகளினுந்துகளெழும்படிஓடித்திரிந்து, செயிர்த்து— கோபித்து, உயிர் வருந்த அடல் செய்தது—ஆன்மாக்கள் வருந்தும்படி அழிவு செய்தது எ—று. (6)

எட்டுள திசைக்கரி இரிந்தலறி யேங்கக்
கிட்டியெதிர் தாக்குமதி கேழ்கிளரும் மானத்
தட்டிரவி தேரொடு தகர்ந்துமுரி வாக
முட்டும்அவர் தம்பரியை மொய்ம்பினொடு பாயும்.

இ—ள்: எட்டு உள திசைக்கரி இரிந்து அலறி ஏங்க கிட்டி எதிர் தாக்கும்— அட்டதிக்கு யானைகளும் பயந்தோடிக் கதறி ஏக்கமுறும்படி அணுகி எதிரே மோதும், மதி கேழ் கிளர் விமான தட்டு இரவி தேரொடு தகர்ந்து முரிவு ஆக முட்டும்—சந்திரனது நிறம் விளங்குகின்ற விமானத்தின் தட்டும் சூரியனது தேரும் உடைந்து சிதையும்படி தாக்கும், அவர் தம் பரியை மொய்ம்பினொடு பாயும்—அவர்களுடைய குதிரைகளின்மேல் வலிமையோடு பாயும் எ—று.

முன்னைய ஒடு எண். அவரென்றது சந்திரசூரியர்களை. சந்திரன்றேரை விமானமென வழங்குப; அது மூன்று சக்கரங்களையுடைத்தாய் முல்லைப்பூநிற மான பத்துக் குதிரைகள் பூட்டப் பெற்றுள்ளதென விஷ்ணுபுராணங்கூறும். (7)

இனையவகை யால்தகரி யாண்டுமுல வுற்றே
சினமொடுயிர் கட்கிறுதி செய்து பெயர்காலை
முனிவர்களும் நாரதனும் மொய்ம்புமிகு வானோர்
அனைவர்களும் ஓடினர் அருங்கயிலை புக்கார்.

இ—ள்: தகர்—ஆட்டுக்கடா, இனையவகையால் யாண்டும் உலவுற்று—இவ்வாறு எங்குமுலாவி, சினமொடு உயிர்கட்கு இறுதி செய்து பெயர் காலை—கோபத்துடன் ஆன்மாக்களுக்கு அழிவைச் செய்து திரியும்போது, முனிவர்களும்—அது கண்ட முனிவர்களும், நாரதனும்—நாரத முனிவரும், மொய்ம்பு மிகு வானோர் அனைவர்களும்—வலிமை மிக்குள்ள தேவர்களெல்லோரும், ஓடினர் அரும் கயிலை புக்கார்—ஓடி அரிய திருக்கைலாசமலையிற் போனார்கள் எ—று.

காலம்—காலையென ஈறுதிரிந்தது. முனிவர்கள் அனைவர்கள் என்பவற்றில் கள் விகுதிமேல் விகுதி. முனிவருள் நாரதருமமைவராயினும் யாகாதிபராதலின் வேறு கூறினர். (8)

ஊறுபுக அன்னவர் உலைந்துகயி லைக்கண்
ஏறிவரு காலையில் இலக்கமுட னொன்பான்
வீறுதிறல் வீரரொடு மேவியுல வுற்றே
ஆறுமுக வண்ணல்விளை யாடலது கண்டார்.

இ—ள்: ஊறுபுக—(ஆட்டுக்கடாவினால்) தீமை நேரிட, அன்னவர் உலைந்து கயிலைக்கண் ஏறி வரு காலையில்—அவரனைவருமலைந்து திருக்கைலாசகிரியில் ஏறி வருகின்றபொழுது, ஆறுமுக அண்ணல்—ஆறு திருமுகங்களையுடைய குமாரக்கடவுள், இலக்கமுடன் ஒன்பான் வீறு திறல் வீரரொடு மேவி உலவுற்று விளையாடல் அது கண்டார்—இலக்கத்தொன்பதென்னுந் தொகைப்பட்ட மிக்க வலிமையையுடைய வீரர்களுடன் கூடியுலாவி விளையாடுதலைத் தரிசித்தார்கள் எ—று.

ஊறு-உறு என்னும் பகுதியுடன் கருத்தாப் பொருள் விகுதி புணர்ந்து கெட்டு முதனீண்ட பெயர். உறுதல்-தடைநேர்தல். வீறு திறல்-வினைத்தொகை. (9)

ஈசனிடை நண்ணுகிலம் ஈண்டுகும ரேசன்
நேசமொடு நந்துயரம் நீக்கவெதிர் வந்தான்
ஆசிறுவன் அல்லன்இவன் அண்டர்பல ரோடும்
வாசவனை வென்றுயிரை மாற்றியெழு வித்தான்.

இ—ள்: ஈசனிடை நண்ணுகிலம்—யாம் சிவபிரானிடத்துச் செல்லோம். குமர ஈசன் நம் துயரம் நீக்க நேசமொடு ஈண்டு எதிர் வந்தான்—குமாரக்கடவுள் எமது துன்பத்தை நீக்குமாறு கருணையுடன் இங்கு முற்பட்டார், ஆ—ஆகா!, இவன் சிறுவன் அல்லன்—இவர் பாலரல்லர், அண்டர் பலரோடும் வாசவனை வென்று உயிரை மாற்றி எழுவித்தான்—பல தேவர்களுடன் இந்திரனை வெற்றி கொண்டு சங்கரித்துப் பின்னெழுப்பியவர் எ—று. (10)

எங்குறை முடித்திடல் இவற்கெளிது நாமிப்
புங்கவனொ டுற்றது புகன்றிடுது மென்னாத்
தங்களில் உணர்ந்துசுரர் தாபதர்கள் யாரும்
அங்கவன்முன் ஏகினர் அருந்துதிகள் செய்தே.

இ—ள்: எம் குறை முடித்திடல் இவற்கு எளிது—எமது துன்பத்தைத் தீர்த் தருளுதல் இவருக்கு இலகுவாகும் (ஆதலின்), நாம் இ புங்கவனொடு உற்றது புகன்றிடுதும் என்னு—யாங்கள் இக் கடவுளிடத்து நமக்கு நேர்ந்த துயரை முறை யிடுவோமென்று, சுரர் தாபதர்கள் யாரும்—தேவர்களும் முனிவர்களுமாகிய எல் லோரும், தங்களில் உணர்ந்து—தங்களுள் ஆலோசித்து, அரும் துதிகள் செய்து அவன் முன் ஏகினர்—சிறந்த தோத்திரங்களைக் கூறி அச் சுப்பிரமணியக் கட வுளுக்கு முன் சென்றனர் எ—று.

உற்றது-வினையாலணையும் பெயர். (11)

வந்துபுகழ் வானவரும் மாமுனிவர் தாமுந்
தந்திமுக வற்கிளவல் தன்னடி வணங்கக்
கந்தனவர் கொண்டதுயர் கண்டுமிக நீவிர்
நொந்தனிர் புகுந்தது நுவன் றிடுதி ரென்றான்.

இ—ள்: வந்து புகழ் வானவரும் மா முனிவர் தாமும்—இவ்வாறு வந்து துதித்த தேவர்களும் சிறந்த முனிவர்களும், தந்தி முகவற்கு இளவல் தன் அடி வணங்க—விநாயகக்கடவுளது தம்பியாகிய முருகக்கடவுளது திருவடிகளை நமஸ் கரிக்க, கந்தன்—முருகக்கடவுள், அவர் கொண்ட துயர் கண்டு—அந்தத் தேவ ராதியோரடைந்துள்ள துன்பத்தைப் பார்த்து, நீவிர் மிக நொந்தனிர்—நீங்கள் மிகவும் வருந்தினீர்கள், புகுந்தது நுவன்றிடுதிர் என்றான்—நுமக்கு நேர்ந்த இடரைக் கூறுதிரென்று அருளிச்செய்தார் எ—று. (12)

கேட்டிளை யோய்மறை கிளத்தும்ஒரு வேள்வி
வேட்டனமி யாங்களது வேலையிடை தன்னில்
மாட்டுகன லூடொரு மறித்தகர் எழுந்தே
ஈட்டமுறும் எம்மையட எண்ணியதை யன்றே.

இ—ள்: இளையோய் கேட்டி—குமாரக்கடவுளே! கேட்டருளுக, யாங்கள் மறை கிளத்தும் ஒரு வேள்வி வேட்டனம்—நாங்கள் வேதங்களாற் கூறப்படு கின்ற ஒரு யாகத்தைச் செய்தோம், அது வேலை இடை தன்னில்—அப்பொழுது, மாட்டு கனல் ஊடு ஒரு மறி தகர் எழுந்து—வளர்க்கப்பெற்ற யாகாக்கினியில் ஒராட்டுக்கடாத் தோன்றி, ஈட்டம் உறும் எம்மை அட எண்ணியது—கூட்ட மாகப் பொருந்திய எங்களைக் கொல்லக் கருதியது எ—று.

மறித்தகர்-இரு பெயரொட்டு. எண்ணியதை என்பதில் ஐகாரம் சாரியை. சிறிதுந் தவறுருவண்ணமியற்றினமென்பது தோன்ற 'மறைகிளத்துமொரு வேள்வி' எனவும், கண்டுழித் தானே வெருவியோடுதற்கேற்ற பெருங்குழுவாக நாமிருந்தும் அஞ்சாது துணிவுடைத்தாய் நம்மையழிக்கத் தலைப்பட்டதென்பது தோன்ற 'ஈட்டமுறு மெம்மையடவெண்ணியது' எனவும் கூறினர். (13)

ஆடெழு கிளர்ச்சியை அறிந்துமகம் விட்டே
ஓடியிவ னுற்றனம் உருத்தது துரந்தே
சாடியது சிற்சிலவர் தம்மையத னாலே
வீடியத ளப்பிலுயிர் விண்ணினொடு மண்மேல்.

இ—ள்: ஆடு எழு கிளர்ச்சியை அறிந்து—அந்த ஆட்டுக்கடா எழுகின்ற எழுச்சியை யாங்களுணர்ந்து, மகம் விட்டு இவண் ஓடி உற்றனம்—யாகத்தை யிடையில் விட்டு இவ்விடத்து ஓடிவந்தோம், அது உருத்து துரந்து—அந்த ஆடு கோபித்துத் துரத்தி, சிற்சிலர் தம்மை சாடியது—சிலசில பேர்களை அழித்தது, அதனுல்—அக் காரணத்தால், விண்ணினெடு மண் மேல்—ஆகாயவுலகத்திலும், பூவுலகத்திலும், அளப்பு இல் உயிர் வீடியது—அளவிறந்த பிராணிகள் இறந்தன எ—று,

விண் ஆகுபெயர். உயிரென்பது சாதியொருமையாதலால் வீடியது என்னும் ஒன்றன்பால் முற்றைக் கொண்டது. (14)

நீலவிட மன்றிது நிறங்குலவு செக்கர்க்
கோலவிட மேயுருவு கொண்டதய மேபோல்
ஓலமிட எங்குமுல வுற்றதுயி ரெல்லாங்
காலமுடி வெய்துமொரு கன்னல்முடி முன்னம்.

இ—ள்: இது நீல விடம் அன்று—இது கருநிறத்தையுடைய நஞ்சன்று, செக்கர் நிறம் குலவு கோல விடமே அயம் போல் உருவு கொண்டது—சிவந்த நிறம் பொருந்திய வடிவத்தையுடையதொரு நஞ்சே ஆடுபோல் வடிவு கொண்டு வந்து, ஓலமிட எங்கும் உலவுற்றது—கண்டோரோலமிடும்படி எவ்விடத்தினுமுலாவியது, உயிர் எல்லாம் ஒரு கன்னல் முடி மூன்னம் காலம் முடிவு எய்தும்—(இது இன்னுமுலாவுமேல்) ஆன்மாக்களெல்லாம் ஒரு நாழிகை முடிதற்கு முன் அழியும் எ—று.

செக்கர்க்கோலவிடம்-இல்பொருள். முன்னைய ஏகாரம் பிரிநிலை. கொண்டது-முற்றெச்சம். ஓலமிடுதல்-அச்சத்தாற் கதறுதல். காலமுடிவெய்தல்-வாழ்நாளின் முடிவைப் பெறுதல். (15)

சீற்றமொ டுயிர்க்கிறுதி செய்துலவு மேடத்
தாற்றலை அடக்கியெம தச்சமும் அகற்றி
ஏற்றகுறை வேள்வியையும் ஈறுபுரி வித்தே
போற்றுதி யெனத்தொழுது போற்றிசெய்யும் வேலை.

இ—ள்: சீற்றமொடு உயிர்க்கு இறுதி செய்து உலவும் மேடத்து ஆற்றலை அடக்கி—கோபத்துடன் ஆன்மாக்களுக்கு அழிவைச் செய்துலாவுகின்ற ஆட்டின் வலிமையையடக்கி, எமது அச்சமும் அகற்றி—எமது பயத்தையும் நீக்கி, ஏற்ற குறை வேள்வியையும் ஈறு புரிவித்து—ஏற்றுக்கொண்ட (தொடங்கிய) குறை யாகத்தைய முடிவுபெறச் செய்து, போற்றுதி—எங்களைக் காத்தருள்வீர், என—என்று, தொழுது போற்றி செயும் வேலை—தேவராதியோர் கைதொழுது துதிக்கும் பொழுது எ—று.

உம்மைகள் எச்சங்கள். இச் செய்யுளும் பிற்செய்யுளுங் குளகம். (16)

எஞ்சுமவர் தம்மைஇளை யோன்பரிவின் நோக்கி
அஞ்சல்விடு மின்களென அங்கைய தமைத்தே
தஞ்சமென வேபரவு தன்பரிச னத்துள்
மஞ்சுபெறு மேனிவிறல் வாகுவொடு சொல்வான்.

இ—ள்: இளையோன்—குமாரக்கடவுள், எஞ்சும் அவர் தம்மை பரிவில் நோக்கி—மனந்தளர்கின்ற அவர்களைக் கருணையுடன் பார்த்து, அஞ்சல் விடுமின்கள் என அங்கையது அமைத்து—பயத்தை யொழிப்பீரென்றருளிச் செய்து அழகியகையையமைத்து, தஞ்சம் என பரவு தன் பரிசனத்துள்—அடைக்கலமாகக் கொண்டு துதிக்கின்ற தமது பரிவாரங்களுள், மஞ்சு பெறு மேனி விறல்வாகுவொடு சொல்வான்—வலிமையார்ந்த சரீரத்தையுடைய வீரவாகு தேவர்க்கு இவ்வாறு அருளிச் செய்வார் எ—று.

மஞ்சு அழகெனினுமாம். (17)

மண்டுகனல் வந்திவர் மகந்தனை அழித்தே
அண்டமொடு பாருலவி யாருயிர்க டம்மை
உண்டுதிரி செச்சைதனை ஒல்லைகுறு குற்றே
கொண்டணைதி என்றுமை குமாரனுரை செய்தான்.

இ—ள்: மண்டு கனல் வந்து—மூண்டெரிகின்ற அக்கினியிற்றோன்றி, இவர் மகம் தனை அழித்து—இவர்களுடைய யாகத்தையழித்து, அண்டமொடு பார் உலவி—ஆகாயவுலகத்தினும் பூவுலகத்தினுமுலாவி, ஆர் உயிர்கள் தம்மை உண்டு திரி செச்சை தனை—நிறைந்த உயிர்களை அழித்துத் திரிகின்ற ஆட்டுக்கடாவை, ஒல்லை குறுகுற்று—விரைவிலணுகி, கொண்டு அணைதி என்று—அடக்கிக் கொணர்வாயென்று, உமை குமாரன் உரை செய்தான்—உமாதேவியாரது திருக்குமாரராகிய முருகக்கடவுள் அருளிச் செய்தார் எ—று.

பார் என்பது பார்க்கப்படுவதென்னுங் காரணம் பற்றிப் பூமிக்குப் பெயராயிற்று. எல்லாப் பொருள்களுங் காணப்படுதலால் லோகமென்னுஞ் சொல்லை வடநூலார் வழங்குவது போல. கருமையுடையதைக் காரென்றாற்போலப் பருமையுடையதைப் பாரென்றதெனினுமாம். உயிர்களை யுண்ணுதலாவது உடம்பினின்றொழித்தல். உமையம்மையாரது வயிற்றிற் பிறவாவிடினும் அவராற் பாலூட்டி வளர்க்கப்பட்டமையின் முருகக்கடவுளை 'உமைகுமாரன்' என்றார். (18)

வேறு

குன்றெழு கதிர்போல் மேனிக் குமரவேள் இனைய கூற
மன்றலந் தடந்தோள் வீர வாகுவாந் தனிப்பேர் பெற்றான்
நன்றென இசைந்து கந்தன் நாண்மலர்ப் பாதம் போற்றிச்
சென்றனன் கயிலை நீங்கிச் சினத்தகர் தேட லுற்றான்.

இ—ள்: குன்று எழு கதிர் போல் மேனி குமரவேள் இனைய கூற—உதயகிரியிற்றோன்றுகின்ற இளஞ் சூரியனை நிகர்த்த செந்நிறத் திருவுருவத்தையுடைய முருகக்கடவுள் இவற்றைத் திருவாய் மலர்ந்தருள, மன்றல் அம் தடம் தோள் வீரவாகு ஆம் தனி பேர் பெற்றான்—வாசனை பொருந்திய அழகிய விசாலித்த புயங்களையுடைய வீரவாகுதேவரென்னும் ஒப்பற்ற பெயரையுடையவர், நன்று என இசைந்து—நல்லதென்று சம்மதித்து, கந்தன் நாள் மலர் பாதம் போற்றி—முருகக்கடவுளது புதுமலர்போலுந் திருவடிகளை வணங்கி, கயிலை நீங்கி சென்றனன்—திருக்கைலாசமலையை நீங்கிப்போய், சின தகர் தேடலுற்றான்—கோபத்தையுடைய ஆட்டுக்கடாவைத் தேடத் தொடங்கினார் எ—று.

இனைய-குறிப்பு வினையாலணையும் பெயர். மலர் ஈண்டுத்தாமரை. (19)

மண்டல நேமி சூழும் மாநில முற்று நாடிக்
கண்டில ளுகிச் சென்றேழ் பிலத்தினுங் காண கில்லான்
அண்டர் தம் பதங்கள் நாடி அயன்பதம் முன்ன தாகத்
தண்டளிர் செக்கர் மேனித் தகர்செலுந் தன்மை கண்டான்.

இ—ள் மண்டல நேமி சூழும் மா நிலம் முற்றும் நாடி கண்டிலன் ஆகி—வட்ட வடிவாகிய சமுத்திரஞ் சூழ்ந்த பெரிய பூமி முழுவதினுந் தேடிக் காணப் பெருதவராய், ஏழ் பிலத்தினும் சென்று காணகில்லான்—எழுபாதல வுலகங்களினுஞ் சென்று தேடிக் காணப்பெருதவராய், அண்டர்தம் பதங்கள் நாடி—தேவர்களது உலகங்களிலுந் தேடி, அயன் பதம் முன்னதுஆக— பிரமதேவரது உலகத்திற்கு முன்னுக, தண் தளிர் செக்கர் மேனி தகர் செலும் தன்மை கண்டான்—இளந்தளிர் போன்ற சிவந்த வடிவத்தையுடைய ஆட்டுக்கடாப் போகுந் தன்மையைப் பார்த்தார் எ—று.

பிலத்தினும் என்பதிலும்மை முற்றுருமெடச்சம். (20)

ஆடலந் தொழில்மேல் கொண்டே அனைவரும் இரியச்செல்லும்
மேடமஞ் சுறவே ஆர்த்து விரைந்து போய் வீர வாகு
கோடவை பற்றி ஈர்த்துக் கொண்டுராய்க் கயிலை நண்ணி
ஏடுறு நீபத் தண்டார் இளையவன் முன்னர் உய்த்தான்.

இ—ள்: வீரவாகு—வீரவாகுதேவர், ஆடலம் தொழில் மேல் கொண்டு அனைவரும் இரிய செல்லும் மேடம் அஞ்சுற ஆர்த்து—போர்த்தொழிலை மேற்கொண்டு எல்லோரும் பயந்தோடும்படி நடக்கின்ற ஆட்டுக்கடாப் பயப்படும்படி ஆரவாரித்து, விரைந்து போய்—விரைவிற் கிட்டி, கோடு அவை பற்றி ஈர்த்து கொண்டு உராய் கயிலை நண்ணி—இரு கொம்புகளையும் பிடிததிழுத்துக் கொண்டு அவ்விடத்தை நீங்கித் திருக்கைலாசமலையையணுகி, ஏடு உறு நீப தண் தார் இளையவன் முன்னர் உய்த்தான்—இதழ் மிகுந்த குளிர்ந்த கடப்ப மலர் மாலையணிந்த குமாரக்கடவுளின் முன்விடுத்தார் எ—று.

கோடவை என்பதில் அவை-பகுதிப் பொருள்விகுதி. (21)

உய்த்தனன் வணங்கி நிற்ப உளமகிழ்ந் தருளித் தேவர்
மெய்த்தவர் தொகையை நோக்கி ஏழகம் மேவிற் றெம்பால்
எய்த்தினி வருந்து கில்லீர் யாருநீர் புவனி யேகி
முத்தழல் கொடுமுன் செய்த வேள்வியை முடித்தி ரென்ருன்.

இ—ள்: உய்த்தனன் வணங்கி நிற்ப— (வீரவாகுதேவர் ஆட்டுக்கடாவை) முன் விடுத்து நமஸ்கரித்து நிற்க, உளம் மகிழ்ந்து அருளி—குமாரக்கடவுள் மனமகிழ்ந்தருளி, தேவர் மெய் தவர் தொகையை நோக்கி—தேவர்களதும் மெய்ம்மையாகிய தவத்தையுடைய முனிவர்களதுங் கூட்டத்தைப் பார்த்து, ஏழகம் எம்பால் மேவிற்று—ஆட்டுக்கடா எம்மிடத்து வந்து சேர்ந்தது. நீர் யாரும் இனி எய்த்து வருந்துகில்லீர்—நீவிரனைவீரும் இனி மனஞ் சோர்ந்து வருந்தாதீர், புவனி ஏகி மு தழல் கொடு முன் செய்த வேள்வியை முடித்திர் என்ருன்—பூவுலகத்தையடைந்து மூன்று வகையான அக்கினியைக் கொண்டு முன் செய்யத் தொடங்கிய யாகத்தை நிறைவேற்றுங்களென்று கட்டளை செய்தார் எ—று.

வேடமாத்திரையாளுெழுகும் பொய்த்தவரை நீக்க 'மெய்த்தவர்' என்ளுர். முத்தழல்: ஆகவனீயம் காருகபத்தியம் தஷிணுக்கினி என்பன. இப்பிரிவுகள் இடவேறுபாட்டானும் மந்திரவேறுபாட்டானுஞ் செய்தொழில் வேறுபாட்டானுமாயினவென்க. கொடு என்பது கொண்டென்பதன் விகாரம். (22)

ஏர்தரு குமரப் புத்தேள் இவ்வகை இசைப்ப அன்னுேர்
கார்தரு கண்டத் தெந்தை காதல வேள்வித் தீயிற்
சேர்தரு தகரின் ஏற்றைச் சிறியரேம் உய்யு மாற்ருல்
ஊர்திய தாகக் கொண்டே ஊர்ந்திடல் வேண்டு மென்ருர்.

இ—ள்: ஏர் தரு குமர புத்தேள் இவகை இசைப்ப—அழகு பொருந்திய சுப்பிரமணியக்கடவுள் இவ்வாறு கூறியருள, அன்னுேர்—அவர்கள் (அவரை நோக்கி), கார் தரு கண்டத்து எந்தை காதல—நஞ்சுண்டமையாற் கருநிறம் பொருந்திய திருமிடற்றையுடைய சிவபிரானது குமாரரே!, சிறியரேம் உய்யும் ஆற்ருல்—சிறியேங்களுய்யும் வண்ணம், வேள்வி தீயில் சேர்தரு தகரின் ஏற்றை ஊர்தியது ஆக கொண்டு—யாகாக்கினியிற் ருேன்றிய ஆட்டுக்கடாவை வாகனமாகக் கொண்டு, ஊர்ந்திடல் வேண்டும் என்ருர்—நடாத்தியருளுதல் வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள் எ—று.

சிவபிரான் நஞ்சையடக்கித் தம்மைக காத்தவாறே கந்தவேளும் வேள்வித் தீயிற் ருேன்றியடர்ந்த ஆட்டுக்கடாவையடக்கிக் காத்தருளினரென்பதையுள்ளிட்டமையின் 'கார்தருகண்டத் தெந்தைகாதல' எனவும், நுமக்கூர்தி வேண்டற்பாலதன்ருயினும் விடுப்பின் மீண்டுமெம்மை யடர்க்குமாதலின் ஊர்தியாகக் கொண்டருளுதிரென்பார் 'சிறியரே முய்யுமாற்ருலூர்தியதாகக் கொண்டே யூர்ந்திடல் வேண்டும்' எனவும் கூறினர். (23)

என்னலுந் தகரை அற்றே யானமாக் கொள்வம் பார்மேல்
முன்னிய மகத்தை நீவிர் முடித்திரென் றருள யார்க்கும்
நன்னய மாடல் செய்யும் நாரதன் முதலோர் யாரும்
அன்னதோர் குமர னெந்தை அடிபணிந் தருளாற் போந்தார்.

இ—ள்: என்னலும்—என்று பிரார்த்தித்தலும், தகரை அற்றே யானம் ஆ கொள்வம்—(சுப்பிரமணியக்கடவுள் அவர்களை நோக்கி) ஆட்டுக்கிடாவை நீவிர் கூறியவாறே யாம் வாகனமாகக் கொள்வோம், பார்மேல்—பூவுலகத்தில், நீவிர் முன்னிய மகத்தை முடித்திர் என்று அருள—நீவிர் செய்யக் கருதிய யாகத்தை நிறைவேற்றுதிரென்று கருணை புரிய, யார்க்கும் நல் நயம் ஆடல் செய்யும் நாரதன் முதலோர் யாரும்—எவர்க்கும் நல்ல நீதிமொழிகளைச் சொல்லுகின்ற நாரதர் முதலாயினேரனைவரும், அன்னது ஓர் குமரன் எந்தை அடி பணிந்து—அந்தக் குமாரக்கடவுளது பாதங்களை வணங்கி, அருளால் போந்தார்—அவர் விடைகொடுத்தருளியவாறே சென்ருர்கள் எ—று.

அற்று-அசுரச் சுட்டடியாய்ப் பிறந்த ஒன்றற்பாற் குறிப்புவினையாலணையும் பெயர். கொள்வம்-தனித்தன்மைப் பன்மை; உயர்வு தோன்ற நின்றது. ஆடல் செய்தல்-சொல்லுதல். திரிலோக சஞ்சாரியாய் ஆங்காங்குள்ளார்க்கு வேண்டிய நன்மைகளைக் கூறுதலின் 'யார்க்கு நன்னயமாடல் செய்யு நாரதன்' என்ருர். (24)

நவையில்சீர் முனிவர் தேவர் நயப்பநா ரதனென் றுள்ளோன்
புவிதனில் வந்து முற்றப் புரிந்தனன் முன்னர் வேள்வி
அவர்புரி தவத்தின் நீரால் அன்றுதொட் டமலமூர்த்தி
உவகையால் அனைய மேடம் ஊர்ந்தனன் ஊர்தி யாக.

இ—ள்: நவை இல் சீர் முனிவர் தேவர் நயப்ப—குற்றமில்லாத சிறப்பை யுடைய முனிவர்களுந் தேவர்களும் விரும்ப, நாரதன் என்று உள்ளோன்—நாரதரென்று பெயர் பெற்ற முனிவர், புவிதனில் வந்து—பூமியிற் சென்று, முன்னர் வேள்வி முற்ற புரிந்தனன்—முன் செய்யத் தொடங்கிய யாகத்தை நிறைவேற்றச் செய்தார், அவர் புரி தவத்தின் நீரால்—அவர்களியற்றிய தவத்தின் விசேடத்தால், அன்று தொட்டு—அன்று முதலாக, அமல மூர்த்தி—மல ரகிதராகிய குமாரக்கடவுள், உவகையால்—மகிழ்ச்சியோடு, அனைய மேடம் ஊர்தியாக ஊர்ந்தனன்—அந்த ஆட்டுக்கடாவை வாகனமாகக் கொண்டு நடாத்தியருளினர் எ—று (25)

தகரேறு படலம் முற்றிற்று.

ஆகத் திரு விருத்தம் 1204

# 16. அயனைச்சிறைபுரிபடலம்



குமாரக்கடவுள் பிரமதேவரைச் சிறைசெய்த சரித்திரத்தைக் கூறுதலினிப் பெயர்த்தாயிற்று.

## இப்படலப்பொழிப்பு.

ஒருநாட் பிரமாமுதலிய தேவரனைவருந் திருக்கைலாச மலையிற்போய்ச் சிவபிரானைத் தரிசித்து மீண்டு செல்லும்போது பிரமதேவர் அங்கிருந்த முருகக் கடவுளை மதியாது சென்றனர். அதுகண்ட முருகக்கடவுள் அவருக்கு நல்லுணர்வை வருவிக்க நினைந்து பிரணவப்பொருளை வினவி அவர் விடைகூறலாற்றாது மயங்க 'நீ பிரணவப் பொருளையறியாது படைப்புத் தொழில் செய்வதெங்ஙனம்' என்றுகூறித் தலையிற் குட்டிச் சிறையிட்டுத் தாமே படைப்புத் தொழிலை நடாத்தினர் என்பதாம்.

மேடமூர்தி யாகவுய்த்து விண்ணுமண்ணும் முருகவேள்
ஆடல்செய் துலாவிவெள்ளி யசலமீதில் அமர்தரும்
நீடுநாளில் ஒருபகற்கண் நெறிகொள்வேதன் முதலினோர்
நாடியீசன் அடிவணங்க அவ்வரைக்கண் நண்ணினார்.

இ—ள்: முருகவேள் — குமாரக்கடவுள், மேடம் ஊர்தி ஆக உய்த்து — ஆட்டுக்கடாவை வாகனமாகக்கொண்டு நடத்தி, விண்ணும் மண்ணும் ஆடல் செய்து உலாவி —ஆகாயவுலகத்தினும் பூவுலகத்தினுந் திருவிளையாடல்செய் துலாவி, வெள்ளி அசலம் மீதில் அமர்தரும் நீடுநாளில்—திருக்கைலாசமலையில் வீற்றிருந்த பலநாட்களில், ஒரு பகற்கண் — ஒருநாள், நெறிகொள் வேதன் முதலியோர் - நல்லொழுக்கத்தையுடைய பிரமாமுதலிய தேவர்கள், ஈசன் அடி வணங்க நாடி — சிவபிரானது பாதங்களை வணங்குமாறு கருதி, அவ்வரைக்கண் நண்ணினார்—அந்தத் திருக்கைலாசமலையில் வந்தார்கள் எ—று. (1)

எனதியா னெனுஞ்செருக் கிகந்துதன் னுணர்ந்துளார்
மனாதிகொண்ட செய்கைதாங்கி மரபின்முத்தி வழிதரும்
அனாதியீசன் அடிவணங்கி அருளடைந்து மற்றவன்
தனாதுமன்றம் நீங்கிவாயில் சாருகின்ற வேலையில்.

இ—ள்: எனது யான் எனும் செருக்கு இகந்து — என்னுடையதென்றும் யானென்றுமெண்ணுதற்கேதுவாகிய மயக்கத்தை (நல்லாசிரியர்பாற் பெற்ற உறுதிமொழியானும் யோகப்பயிற்சியானும்) ஒழித்து, தன் உணர்ந்து உளார் மன ஆதி கொண்ட செய்கை தாங்கி— தம்மையுணர்ந்தவர்களாகிய தத்துவ ஞானிகளுடைய மன முதலிய கருவிகள் செய்யுந் தொழிலை (அவர் தொழிலாக்காது தந்தொழிலாக ஏற்றுக்கொண்டு, மரபில் முத்தி வழி தரும்— முறைப்படி (அவர்களுக்கு) மோக்ஷ நெறியைக் கொடுத்தருளுகின்ற, அனாதி

ஈசன் அடி வணங்கி—அனுதி கடவுளாகிய சிவபிரானது பாதங்களைப் பணிந்து. அருள் அடைந்து—அவரது கருணையைப் பெற்று, அவன் தனுது மன்றம் நீங்கி—அச் சிவபிரான் வீற்றிருக்கின்ற சபா மண்டபத்தை நீங்கி, வாயில் சாருகின்ற வேலையில்—வாயிலையடைகின்றபொழுது எ—று.

எனுது என்பதில் அது ஆறனுருபு. என்று கருதுதற்கேதுவாகிய செருக்கை. 'எனுஞ் செருக்கு' என்றது காரண காரிய உபசாரம். எனுதென்னுஞ் செருக்கை மமகாரம் புறப்பற்று எனவும், யானென்னுஞ் செருக்கை அகங் காரம் அகப்பற்று எனவும் வழங்குவர். தானெனச் சுட்டியது பதியை; ஆன் மாவையெனினுமாம். மனஸ் ஆதி என்னும் வடசொற்கள் தமிழில் மனுதி யென விகாரப்பட்டுத் தொடர்ந்து வழங்கின. இல்வாயென்பது முன் பின் னுக மாறி வாயிலென நின்றது. இதனை இலக்கணப் போலியென்பர். இல் லினது முன்னிடமென்பது பொருள்.

தன்னேடியையபில்லாத பொருளைத் தனதென்றும் தானல்லாத உடம் பைத் தானென்றும் மயங்கினுர்க்குப் பதியையுணர்தல் கூடாமையின் 'எனுதி யானெனுஞ் செருக்கிகந்து தன்னுணர்ந்துளார்' எனவும், அங்ஙனமுணர்ந் தாருடைய மனமொழி மெய்கள் செய்யுஞ் செயல்கள் பாசவறிவால் விளையா திருத்தலின் அவற்றைத் தஞ்செயலெனச் சிவபிரானேற்றுக் கொள்கின்ருரென் பார் 'மனுதி கொண்ட செய்கை தாங்கி' எனவும், அவ்வடியாரது பரிபாகத் திற்கேற்பக் குருலிங்க சங்கம வடிவுகளுளியைந்தவற்ருனெழுந்தருளி முத்தி கொடுக்கின்றனவென்பார் 'மரபின் முத்திநெறி தரும்' எனவும், தமக்கோர் முதலின்றித் தாமே முழு முதலாய் நிற்பவரென்பார் 'அனுதியீசன்' எனவும் கூறினர். அகங்காரமமகாரங்களை யொழித்தார்க்கே முத்தி சித்திக்குமென் பதை ''யானெனதென்னுஞ் செருக்கறுப்பான் வானேர்க்—குயர்ந்தவுலகம் புகும்'' என்னுந் திருக்குறளானும், மெய்ஞ்ஞானியர்களது திரிகரணச் செயல் களைச் சிவபிரான் தஞ்செயலாக ஏற்றுக்கொள்வரென்பதை ''சிவனுமிவன் செய்தியெலாமென் செய்தியென்றுஞ் செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்-பவமகலவுடனுகி நின்று கொள்வன்'' என்னுஞ் சிவஞான சித்தித் திருவிருத்தத்தானுமுணர்க. (2)

ஒன்பதோடி லக்கமான அனிகவீரர் உள்மகிழ்ந்
தன்பினேடு சூழ்ந்துபோற்ற அமலன் அம்பொனுலய
முன்புநீடு கோபுரத்துள் முழுமணித் தலத்தின்மேல்
இன்பொடாடி வைகினுன் இராறுதோள் படைத்துளான்.

இ—ள்: ஒன்பதோடு இலக்கம் ஆன அனிக வீரர் உள் மகிழ்ந்து அன் பினேடு சூழ்ந்து போற்ற—இலக்கத்தொன்பது சேனு வீரர்களும் மனமுவந்து அன்பினுடன் சூழ்ந்து துதிக்க, அமலன் அம் பொன் ஆலய முன்பு நீடு கோபுரத்துள் முழு மணி தலத்தின் மேல்-சிவபிரானது செம்பொன்னுலாகிய திருக்கோயிலின் முன்னுக உயர்ந்திருக்குங் கோபுரவாயிலின் கண்ணேயமைக் கப்பட்டுள்ள மாணிக்க நிலத்தின்மேல், இன்பொடு ஆடி வைகினுன்—ஆநந் தத்துடன் திருவிளையாடல் செய்திருந்தார், இராறு தோள் படைத்து உளான்— பன்னிரண்டு திருப்புயங்களைப் பொருந்தியுள்ள முருகக்கடவுள் எ—று.

முழுமணி-மாணிக்கம். போற்ற வைகினுன் என இயையும். (3)

அங்கண்வைகும் முருகன்நம்பன் அடிவணங்கி வந்திடும்
புங்கவர்க்குள் ஆதியாய போதினை நோக்குறு
இங்குநம்முன் வருதியா லெனவிளிப்ப ஏகியே
பங்கயா சனத்தினேன் பணிந்திடாது தொழுதலும்.

இ—ள்: அங்கண் வைகும் முருகன்—அவ்விடத்திலெழுந்தருளியிருக்கின்ற குமாரக்கடவுள். நம்பன் அடி வணங்கி வந்திடும் புங்கவர்க்குள் ஆதி ஆய போதினை நோக்குறு—சிவபிரானது திருவடிகளை நமஸ்கரித்து வெளியே வருகின்ற தேவர்களுட் சிறந்தவராகிய பிரமதேவரைப் பார்த்து, இங்கு நம் முன் வருதி என விளிப்ப—இவ்விடத்து எமக்கு முன்னே வருவாயாகவென்று அழைக்க, பங்கய ஆசனத்தினேன்—தாமரை மலரையாசனமாகவுடைய பிரமதேவர், ஏகி—முன் சென்று, பணிந்திடாது தொழுதலும்—அவரை வணங்காது கைதொழுது நிற்ப எ—று.

பிரமதேவர் சிவபிரானைத் தரிசிக்கச் செல்லும்போதே விளையாட்டினிமித்தம் அவருடைய நல்லறிவை முருகவேளபகரித்தனரெனவும் அதனால் உட்புகும் போதும் மீண்டு வரும்போதும் அவர் முருகவேளை வணங்காது போயினரெனவும் பின் முருகவேளழைத்தனரெனவும் முதனூல் கூறும். (4)

ஆதிதேவன் அருளுமைந்தன் அவனுளத்தை நோக்கியே
போதனே இருக்கெனப் புகன்றிருத்தி வைகலும்
ஏதுநீ புரிந்திடும் இயற்கையென்ன நான்முகன்
நாதனாணை யால்அனைத்தும் நான்படைப்பன் என்றனன்.

இ—ள்: ஆதிதேவன் அருளும் மைந்தன்—முதற் கடவுளாகிய சிவபிரான் பெற்ற குமாரராகிய முருகக்கடவுள், அவன் உளத்தை நோக்கி—அந்தப் பிரமதேவரது மனச்செருக்கையுணர்ந்து, போதனே இருக்க என புகன்று இருத்தி—பிரமனே! இருப்பாயாகவென்று சொல்லி இருக்கச் செய்து. நீ வைகலும் புரிந்திடும் இயற்கை ஏது என்ன—நீ தினந்தோறுஞ் செய்யுந் தொழில் யாதென்று வினவ, நான்முகன்—அது கேட்ட பிரமதேவர், நாதன் ஆணையால் அனைத்தும் நான் படைப்பன் என்றனன்—சிவபிரானது ஆஞ்ஞையினால் எல்லாப் பொருள்களையும் யான் சிருட்டிப்பேனென்று கூறினர் எ—று.

உளம்-ஆகுபெயர். இருக்க என்னும் வியங்கோளீற்றகரந்தொக்கது. தம்மின் மேம்பட்டார்க்கு முன் சென்றுழி வணங்காமையும் அவருடனுரையாடும்போது அவரைப் புகழாது தன்னை வெளிப்படையாயேனுங் குறிப்பாயேனும் புகழ்தலுந் தவறென்பது முற் செய்யுளாலுமிச் செய்யுளாலும் பெறப்பட்டது. (5)

### வேறு

முருக வேளது கேட்டலும் முறுவல்செய் தருளித்
தரணி வானுயிர் முழுவதுந் தருதியோ என்னில்
சுருதி யாவையும் போகுமோ மொழிகெனத் தொல்சீர்ப்
பிரமன் என்பவன் இத்திறம் பேசுதல் உற்றான்.

இ—ள்: முருகவேள் அது கேட்டலும் முறுவல் செய்தருளி—குமாரக்கடவுள் அவ்வார்த்தையைக் கேட்டவுடன் குறுநகை செய்தருளி, தரணி வான் உயிர் முழுவதும் தருதியே என்னில்—நீ பூவுலகத்திலும் ஆகாயவுலகத்திலு

முள்ள ஆன்மாக்களனைத்தையும் படைப்பாயேயானால், சுருதி யாவையும் போகுமோ—வேதங்களெல்லாமுனக்குத் தெரியவருமா?, மொழிக என—சொல் வாயென்று கூறியருள, தொல்சீர் பிரமன் என்பவன் இ திறம் பேசுதல் உற்ருன்—பழைய சிறப்பையுடைய பிரமதேவர் இவ்வாறு சொல்லத் தொடங்கினர் எ—று.

பிரமனது அறிவின்மையைக் கருதி அவரையவமதித்தல் காரணமாக நகை செய்தனர். ஏ-தேற்றம். மொழிக என்னும் வியங்கோளீற்றகரம் தொக்கது. என்பவன்-எழுவாய் வேற்றுமைச் சொல்லுருபு. (6)

ஐய கேள்எனை யாதிகா லந்தனில் அளித்த
மையு லாவரு களத்தினன் அளப்பிலா மறைகள்
செய்ய ஆகமம் பற்பல புரிந்ததிற் சிலயான்
உய்யு மாறருள் செய்தனன் அவையுணர்ந் துடையேன்.

**இ—ள்:** ஐய கேள்—தலைவரே! யான் சொல்வதைக் கேட்டருள்க, எனை ஆதிகாலம் தனில் படைத்த மை உலாவரு களத்தினன்—என்னை முற்காலத்திற் படைத்தருளிய கருமையார்ந்த கண்டத்தையுடைய சிவபிரான், அளப்பு இலா மறைகள் செய்ய ஆகமம் பற்பல புரிந்து—அளவில்லாத வேதங்களையுஞ் சிறந்த மிகப்பலவாகிய ஆகமங்களையுங் கூறி, அதில் சில யான் உய்யுமாறு அருள் செய்தனன்—அவற்றுட் சிலவற்றை நானீடேறும்படி அருளிச்செய்தார், அவை உணர்ந்துடையேன்—அவற்றை அறிந்துள்ளேன் எ—று.

ஆதிகாலம்-சிருட்டியாரம்ப காலம்.அவையுணர்ந்துடையேனெனக் கூறியதனுலும் பிரமதேவரது அகந்தை தோன்றிற்று. (7)

என்று நான்முகன் இசைத்தலும் அவற்றினுள் இருக்காம்
ஒன்று நீவிளம் புதியென முருகவேள் உரைப்ப
நன்றெ னுமறை எவற்றிற்கும் ஆதியின் நவில்வான்
நின்ற தோர்தனி மொழியைமுன் ஓதினன் நெறியால்.

**இ—ள்:** என்று நான்முகன் இசைத்தலும்—இவ்வாறு பிரமதேவர் கூறியவுடன், முருகவேள்—குமாரக்கடவுள், அவற்றினுள் இருக்கு ஆம் ஒன்று நீ விளம்புதி என உரைப்ப—அவ் வேதங்களுள் ஒரு இருக்கை நீ சொல்லுதியென்று கூற, நன்று எனு—(பிரமா) அது நன்றென்றுடன்பட்டு, மறை எவற்றிற்கும் ஆதியில் நவில்வான் நின்றது ஓர் தனி மொழியை—வேதங்களெல்லாவற்றிற்கும் முதலிற் சொல்லவேண்டி நின்ற ஒப்பற்ற தனிமொழியாகிய பிரணவத்தை, நெறியால்—முறைப்படி, முன் ஓதினன்—முதலிற் கூறினர் எ—று.

விதிப்படியமைந்த அக்ஷர சங்கியையும் பாதங்களையுமுடையதாய்ப் பொருண் முடிபுபெறும் வேதமந்திரங்களை இருக்கென வழங்கு, 'மறையெவற்றிற்கும மாதியி னவில்வானின்றது' என்றதனுல் பிரணவத்தின் சிறப்புணர்த்தப்பட்டது. நெறி-சுரமுறைக்கேற்ப உச்சரித்தல். அது சந்தோக பரிசிட்ட முதலிய நூல்களிற் கூறப்பட்டுள்ளது.

பிரணவத்தை முதலுச்சரிக்க வேண்டுமென்னும் நியதியை ''ஸர்வமந்த்ரப்ரயோகேஷு ஓமித்யாதௌப்ரயுஜ்யதே! தேநஸம்பரிபூர்ணுநி யதோக்தா

நிபவந்தி ஹி || [மந்திரங்களை யுச்சரிக்கும் பொழுது ஆதியிலும் அந்தத்திலும் பிரணவத்தை யுச்சரித்த வழியே அமைதி பெறுகின்றது'' ] என யாஞ்ஞவல்க்கியரும், யதோங்கார மகிர்த்வாது கிஞ்சிதாரப்யதே தத்வஜ்ரம்பவதி தஸ்மாத்வஜ்ரபயாத்பீத ஓங்காரம் பூர்வமாரபேத் || [பிரணவத்தை யுச்சரிக்காது தொடங்கப்பட்ட மந்திரம் வச்சிராயுதமாகும். ஆதலினதற்கஞ்சிப் பிரணவத்தை முதலுச்சரிக்கவேண்டும்.''] எனச் சந்தோக பரிசிட்டத்தாரும், ஓங்காரம் ஸ்வர்க்கத்வாரம் தஸ்மாத்ஸர்வேஷ்வேவகர்மஸு ஆதௌப்ரயுஞ்ஜீத (பிரணவம் மோக்ஷத்துக்கு வாயிலாம், ஆதலின் எல்லாக் கருமங்களிலும் அதனை முதலிற் பிரயோகிக்கவேண்டும்)'' என வியாசரும் கூறியுள்ளார். (8)

தாமரைத்தலை யிருந்தவன் குடிலைமுன் சாற்றி
மாமறைத்தலை யெடுத்தனன் பகர்தலும் வரம்பில்
காமர் பெற்றுடைக் குமரவேள் நிற்றிமுன் கழறும்
ஓமெனப்படும் மொழிப்பொருள் இயம்புகென் றுரைத்தான்.

இ—ள்: தாமரை தலை இருந்தவன்—தாமரை மலராசனத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவர், குடிலை முன் சாற்றி—பிரணவ மந்திரத்தை முதலுச்சரித்து, மாமறை தலை எடுத்தனன் பகர்தலும்—சிறந்த வேத மந்திரத்தின் முதலைச் சொல்லத் தொடங்குதலும், வரம்பு இல் காமர் பெற்று உடை குமர வேள்—அளவிடப்படாத அழகைப் பெற்றுள்ள குமாரக்கடவுள், நிற்றி—அவ்வளவில் நிற்பாய், முன் கழறும் ஓம் என படும் மொழி பொருள் இயம்புக என்று உரைத்தான்—முதலிலுச்சரித்த ஓமென்னும் பிரணவத்தின் பொருளைக் கூறுதியென்று வினவினர் எ—று. (9)

முகத்தி லொன்றதா அவ்வெழுத் துடையதோர் முருகன்
நகைத்து முன்னெழுத் தினுக்குரை பொருளென நவில
மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்
திகைத்தி ருந்தனன் கண்டிலன் அப்பொருட் டிறனே.

இ—ள்: முகத்தில் ஒன்றது ஆ, அ எழுத்து உடையது ஓர் முருகன் — ஆறுதிருமுகங்களுமொன்ருக அந்தப் பிரணவாக்ஷரத்தையுடைய குமாரக்கடவுள், நகைத்து—குறுநகைசெய்து, முன் எழுத்தினுக்கு பொருள் உரை என நவில — முதலிற்கூறிய எழுத்திற்குப் பொருளைச் சொல்லுதியென்று வினவ, மிகைத்த கண்களை விழித்தனன் — மிகுதியாயுள்ள கண்களை மருட்சியினுல் மலர்த்தி, வெள்கினன்—வெட்கங்கொண்டு, விக்கி — விக்கலுற்று, திகைத்து இருந்தனன் — பிரமித்திருந்தார், அ பொருள் திறன் கண்டிலன் — அந்தப்பிரணவத்தின் பொருட்பகுப்பை அறிந்திலார் எ—று.

பிரணவப்பொருள் தாமேயெனக்கூறினரென்று முதனூலிற் கூறப்பட்டது. நான்கு முகங்களினும் எட்டுக்கண்களுளவாதலின் 'மிகைத்தகண்கள்' என்ருர். விக்கல் - நாவெழாமை. விழித்தனன் வெள்கினன் - முற்றெச்சங்கள், பிரணவ மந்திரமாகிய ஓரெழுத்தும் பஞ்சாக்ஷரமாகிய ஐந்தெழுத்துமாக ஆறெழுத்துக்களும் முருகக் கடவுளுக்கு ஆறுமுகங்களாதலின் 'முகத்திலொன்றதாவவ்வெழுத் துடைய தோர்முருகன்' என்ருர். மேல் மகேந்திரகாண்டத்தும் 'ஓமெனப்படுங் குடிலையே யொப்பிலாமுருகன்-மாமுகத்துளொன்ரும்' என்ருர். (10)

இ—ள்: முற்று உணர்ந்திடு சுந்தரி என்பவள் — எல்லாவற்றையு மறிந்த சுந்தரவல்லியானவள், முருகன் சொற்ற தன்மையை உளம் கொடு— குமாரக் கடவுள் கூறிய வாசகத்தை மனத்திலமைத்து, நல்தொண்டை நாட்டில் உற்ற வள்ளியம் சிலம்பினை நோக்கி — நல்ல தொண்டைமண்டலத்திலுள்ள வள்ளி மலையைக்குறித்து, ஆங்கு உறையும் நல் தவ சிவமுனி மகள் ஆக நடந்தாள்— அங்கே வசிக்கின்ற நல்ல தவத்தையுடைய சிவமுனிவரது புதல்வியாகச் சென்றாள் எ—று.

முக்காலநிகழ்ச்சியையுணரவல்லவென்பார் 'முற்றுணர்ந்திடு' என்றார். எல்லாக் கலைகளையுமுணர்ந்தவென்பார் அங்ஙனங் கூறினரெனினுமாம். தனது தெய்வத்தன்மைக்குக் குறைவுண்டாகப் பூமியிற் பிறப்பினும் பின்னர்ப் பண்டையினும் பன்மடங்கு சிறப்பெய்துவேனென்பதை ஊகித்துணர்ந்தாளாதலால் இவ்வாறு விசேடித்தார். தொண்டைக்கொடியை அடையாளமாகப் பெற்ற தொண்டைமானென்பவனது நாடாதலாலும் தொண்டர்கள் பலர் வாழ்ந்த இடமாதலாலும் தொண்டைநாடென்னும் பெயர் வழங்கிற்று. வள்ளிக்கொடியை மிகுதியாகவுடைமையால் வள்ளிமலையென்னும் பெயர் வழங்கிற்று. சிவமுனி - சிவஞானத்தையுடைய முனிவன். (12)

இந்த வண்ணம்இவ் விருவர்க்கும் வரந்தனை ஈந்து
கந்த மால்வரை யேகியே கருணையோ டிருந்தான்
தந்தை யில்லதோர் தலைவனைத் தாதையாய்ப் பெற்று
முந்து பற்பகல் உலகெலாம் படைத்ததோர் முதல்வன்.

இ—ள்: தந்தை இல்லது ஓர் தலைவனை தாதை ஆய் பெற்று முந்து பல் பகல் உலகு எலாம் படைத்தது ஓர் முதல்வன் — தமக்குப்பிதாவில்லாத இறைவராகிய சிவபிரானைப் பிதாவாகக்கொண்டு முன் பலகாலம் உலகங்களெல்லாவற்றையும் படைத்துக்கொண்டிருந்த தலைவராகிய கந்தவேள், இந்த வண்ணம் இ இருவர்க்கும் வரம் தனை ஈந்து — இவ்வாறு இந்த இரு கன்னியர்க்கும் வரத்தைக்கொடுத்து, மால் கந்தவரை ஏகி — பெரிய கந்த வெற்பிற்போய், கருணையோடு இருந்தான் — அருள்செய்து வீற்றிருந்தார் எ—று. (13)

வேறு

இத்திறஞ் சிலபக லிருந்து பன்னிரு
கைத்தல முடையவன் கயிலை மேலுறை
அத்தனொ டன்னைதன் னடிப ணிந்திடச்
சித்தம துன்னினன் அருளின் செய்கையால்

இ—ள்: பன்னிரு கை தலம் உடையவன் — பன்னிரண்டு திருக்கரங்களையுடைய முருகக்கடவுள், இ திறம் சில பகல் இருந்து — இவ்வாறு சிலநாளாகக் கந்தவெற்பில் வீற்றிருந்து, அருளின் செய்கையால் — (ஆன்மாக்கண்மீது கொண்ட) கருணைத் திறத்தால் கயிலைமேல் உறை அத்தனொடு அன்னைதன் அடிபணிந்திட — திருக்கைலாசமலையில் வீற்றிருக்கின்ற தந்தை தாயர்களது பாதங்களை வணங்குமாறு, சித்தமது உன்னினன் — (பின்னொருநாளில்) திருவுளம்பற்றினர் எ—று.

கந்தவேள் தந்தை தாயாரைத் தரிசிக்க நினைந்தது அவரேவியபின் சூரனாதியரைச் சங்கரித்துப் பெரியோர்களைக் காத்தற்கேயாதலின் 'அருளின் செய்கையால் உன்னினன்' என்றார். (14)

எள்ளருந் தவிசினின் றிழிந்து வீரராய்
உள்ளுறும் பரிசனர் ஒருங்கு சென்றிடக்
கொள்ளையஞ் சாரதர் குழாமும் பாற்பட
வள்ளலங் கொருவியே வல்லை யேகினன்.

இ—ள்: வள்ளல்—சுப்பிரமணியக்கடவுள், எள்ள அரும் தவிசில் நின்று இழிந்து—இகழப்படுதலில்லாத (குற்றமற்ற) சிங்காசனத்தினின்றுமிறங்கி, வீரர் ஆய் உள்ளுறும் பரிசனர் ஒருங்கு சென்றிட—வீரமுடையவர்களாக மதிக்கப் படுகின்ற இலக்கத்தொன்பது பரிசனர்களுங் கூடி உடன்வர, கொள்ளையம் சாரதர் குழாமும் பால் பட—மிகுதியான பூதர் கூட்டமும் பக்கத்தில் வர, அங்கு ஒருவி—அவ்விடத்தினின்று நீங்கி, வல்லை ஏகினன்—விரைவிற் சென்றார் எ—று.

எள்ள என்னுஞ் செய்வினை செயப்பாட்டு வினைப் பொருளில் நின்றது. அருமை-ஈண்டு இன்மைப்பொருட்டு. உள்ளுறும் பரிசனரென்பதற்கு-பூதர் சூழ்வு புறத்ததாக உட்சூழ்ந்திருக்கின்ற பரிசனரெனினுமாம். (15)

ஏயென வெள்ளிவெற் பெய்தி யாங்ஙனங்
கோயிலின் அவைக்களங் குறுகிக் கந்தவேள்
தாயொடு தந்தையைத் தாழ்ந்து போற்றியே
ஆயவர் நடுவுற அருளின் வைகினன்.

இ—ள்: கந்தவேள்—முருகக்கடவுள், ஏ என வெள்ளிவெற்பு எய்தி—விரை விற்றிருக்கைலாசமலையிற் போய், ஆங்ஙனம்—அவ்விடத்தில், கோயிலின் அவை களம் குறுகி—திருக்கோயிலுள்ள சபாமண்டபத்தையணுகி, தாயொடு தந் தையை தாழ்ந்து போற்றி—மாதாவாகிய உமையம்மையாரையும் பிதாவாகிய சிவபிரானையும் வணங்கித் துதித்து, ஆயவர் நடு உற அருளின் வைகினன்—அவ் விருவர்க்கு நடுவே அவரது திருவருட்படி வீற்றிருந்தார் எ—று.

ஏ-விரைவுக் குறிப்பு. முன்னர்த் தமக்கும் அம்மையார்க்கும் நடுவிற் சிவ பிரான் குமாரக்கடவுளை யிருத்தினராதலின் ஈண்டும் அவ்வாறேயிருந்தன ரென்க. (16)

அண்ணலங் குமரவேள் அங்கண் வைகலும்
விண்ணவர் மகபதி மேலை நாண்முதல்
உண்ணிகழ் தங்குறை யுரைத்து நான்முகன்
கண்ணனை முன்கொடு கயிலை யெய்தினர்.

இ—ள்: அண்ணலம் குமரவேள் அங்கண் வைகலும்—பெருமையையுடைய குமரக்கடவுள் அங்கே வீற்றிருக்க, விண்ணவர்—தேவர்களும், மகபதி—இந்தி ரனும், மேலை நாள் முதல் உள் நிகழ் தம் குறை உரைத்து—பண்டைக்காலந் தொடங்கித் தம்மனத்திற் பொருந்திய குறையை முறையிட்டு, நான்முகன் கண்ணனை முன் கொடு—பிரமதேவரையும் விஷ்ணுமூர்த்தியையும் முன்னிட்டுக் கொண்டு, கயிலை எய்தினர்—திருக்கைலாசமலையை யடைந்தார்கள் எ—று.

திருக்கைலாசமலைக்குத் தம்முடன் வருமாறு வேண்டி அவரை உடன்படு வித்து அழைத்துக்கொண்டு சென்றாரென்பார் 'தங்குறையுரைத்து நான்முகன் கண்ணனை முன்கொடு கயிலையெய்தினர்' என்றார். (17)

அடைதரும் அவர்தமை அமலன் ஆலயம்
நடைமுறை போற்றிடும் நந்தி நின்மெனத்
தடைவினை புரிதலுந் தளர்ந்து பற்பகல்
நெடிதுறு துயரொடு நிற்றல் மேயினர்.

இ—ள்: அடைதரும் அவர் தமை—வந்த அத்தேவர்களை, அமலன் ஆலயம் நடைமுறை போற்றிடும் நந்தி—சிவ பிரானது திருக்கோயில் வாயிலை முறைப்படி காவல்செய்கின்ற திருநந்திதேவர், நின்ம் என தடைவினை புரிதலும்—நில்லுங்களென்று தடைசெய்தலும், தளர்ந்து — சோர்ந்து, நெடிது உறு துயரொடு — மிகுதியாகப் பொருந்திய துன்பத்துடன், பல் பகல் நிற்றல் மேயினர் — பல நாளாக நின்றார்கள் எ—று.

நில்லுமென்னும் ஏவற்பன்மைமுற்று ஈற்றுயிர்மெய்கெட லகரம் னகரமாய் நின்ம் என நின்றது. இதிலுள்ள மகரமெய் கால்மாத்திரையுடையதாய் மகரக் குறுக்கமெனப் பெயர் பெறும். புரிதலும் மேயினர் என இயையும். நந்தியந் தேவர் தடை செய்தமாத்திரத்தில் துயரம் முன்னையினு மதிகரித்ததாதலின் 'நெடிதுறு துயர்' என்றார். (18)

அளவறு பற்பகல் அங்கண் நின்றுளார்
வளனுறு சிலாதனன் மதலை முன்புதம்
உளமலி இன்னலை யுரைத்துப் போற்றலுந்
தளர்வினி விடுமின்என் றிதனைச் சாற்றினன்.

இ—ள்: அளவு அறு பல் பகல் அங்கண் நின்று உளார்—அளவிடப்படாத பல நாட்களாக அவ்விடத்துநின்ற தேவர்கள், வளன்உறு சிலாதன் நல்மதலை முன்பு— வளத்தையுடைய சிலாதமுனிவரது சிறந்த புதல்வராகிய திருநந்திதேவருக்கு முன், தம் உளம் மலி இன்னலை உரைத்து போற்றலும்—தங்கள் மனத்திற் பொருந்திய துன்பத்தைக்கூறி (உள்விடுக்குமாறு) பிரார்த்தித்தலும், இனி தளர்வு விடுமின் என்று—இனி மனவாட்டத்தை நீக்குங்களென்று கூறி, இதனை சாற்றினன்— (பின்னரும்) இவ்வாசகத்தைக் கூறினர் எ—று.

மிகப்பலநாளென்பார் 'அளவறுபற்பகல்' என்றார். வளம்-ஈண்டு அதிகார முதலியன. (19)

தங்குறை நெடும்புனற் சடில மேன்மதி
யங்குறை வைத்திடும் ஆதி முன்புபோய்
நுங்குறை புகன்றவன் நொய்தின் உய்ப்பனல்
இங்குறை வீரென இயம்பிப் போயினன்.

இ—ள்: உறை தங்கு நெடும் புனல் சடில மேல்—துளிகள்பொருந்திய நெடிய கங்கை நதியையணிந்த சடைமுடியின்மேல், குறை மதியம் வைத்திடும் ஆதி முன்பு போய்—பாலசந்திரனையணிந்த ஆதிகடவுளாகிய சிவபிரானுக்கு முன்னாக யான் சென்று, நும் குறை புகன்று—உங்கள் குறையைச் சொல்லி, அவண் நொய்தின் உய்ப்பன்—அவ்விடத்து விரைவிற் புகுவிப்பேன், இங்கு உறைவீர் என இயம்பி போயினன்—அதுகாறும் இவ்விடத்தேயிருங்களென்று கூறி உட்சென்றார் எ—று.

தேவர்குறையைத் தவருது தீர்ப்பாரென்பது போதரக் கருத்துடையடை புணர்த்தி 'புனற்சடிலமேன் மதியங் குறைவைத்திடுமாதி' என்ருர். (20)

போயினன் நந்தியம் புனிதன் கண்ணுதற்
றூயனை வணங்கினன் தொழுது வாசவன்
மாயவன் நான்முகன் வானு ளோரெலாங்
கோயிலின் முதற்கடை குறுகினு ரென்ருன்.

இ—ள்: நந்தியம் புனிதன்—பரிசுத்தராகிய திருநந்திதேவர், போயினன்—உட்சென்று, கண் நுதல் தூயனை வணங்கினன்—நெற்றிக்கண்ணையுடைய பரிசுத்தராகிய சிவபிரானை நமஸ்கரித்து, தொழுது—கைகூப்பி, வாசவன் மாயவன் நான்முகன் வான்உளோர்எலாம்—இந்திரனும் திருமாலும் பிரமதேவனும் ஏனைத் தேவர்களுமாகிய எல்லோரும், கோயிலின் முதல் கடை குறுகினுர் என்ருன்—இக்கோயிலின் முதல்வாயிலில் வந்துள்ளாரென்று விண்ணப்பஞ்செய்தார் எ—று.

அருளுடை யெம்பிரான் அனையர் யாரையுந்
தருதிநம் முன்னரே சார வென்றலும்
விரைவொடு மீண்டனன் மேலை யோர்களை
வருகென அருளினன் மாசில் காட்சியான்.

இ—ள்: அருள்உடை எம்பிரான் — கருணையையுடைய எங்கள் கடவுளாகிய சிவபிரான் (அதுகேட்டு), அனையர்யாரையும் நம்முன்னரே சாரதருதிஎன்றலும்—அவரனைவரையும் எமக்கு முன்வரும்படி கொணர்வாயாகவென்று கூறுதலும், மாசு இல் காட்சியான் — குற்றமற்ற அறிவினையுடைய திருநந்திதேவர், விரைவொடு மீண்டனன் விரைவிற்றிரும்பி வந்து, மேலையோர்களை வருக என அருளினன் — உள்ளே வாருங்களென்று சொல்லியருளினுர் எ—று.

முன்னர்த் தம்மால் வாயிலிற்றடை செய்யப்பட்டாரென்பார் 'மேலையோர்' என்ருர். (22)

விடைமுகன் உரைத்தசொல் வினவி யாவருங்
கடிதினி லேகியே கருணை வாரிதி
அடிமுறை வணங்கினர் அதற்குள் வாசவன்
இடருறு மனத்தினன் இனைய கூறுவான்.

இ—ள்: யாவரும்—எல்லாத்தேவர்களும், விடைமுகன் உரைத்த சொல் வினவி—இடபமுகத்தையுடைய திருநந்திதேவர் கூறிய வார்த்தையைக்கேட்டு, கடிதினில் ஏகி—விரைந்து உட்சென்று, கருணை வாரிதி அடி முறை வணங்கினர்—திருவருட்கடலாகிய சிவபிரானது பாதங்களை முறைப்படி பணிந்தார்கள், அதற்குள்—அவ்வாறு வணங்கி முடித்தற்குள், வாசவன்—இந்திரன், இடர் உறும் மனத்தினன் இனைய கூறுவான்—துன்பமிக்க மனத்தையுடயவனுய் இவ்வாறு முறையிடுவான் எ—று.

கடல் நீரானிரம்பியிருத்தல்போலக் கடவுள் கருணையானிரம்பி யிருத்தலின் 'கருணைவாரிதி' என்ருர். (23)

பரிந்துல கருள்புரி பரையொ டொன்றியே
இருந்தருள் முதல்வகேள் எண்ணி லாஉகம்
அருந்திறற் சூர்முதல் அவுணர் தங்களால்
வருந்தின மொடுங்கினம் வன்மை இன்றியே.

இ—ள்: பரிந்து உலகு அருள் புரி பரையொடு ஒன்றி இருந்து அருள் முதல்வ கேள்—அன்புகொண்டு உலகங்களைப் பெற்ற தேவியாருடன் கூடியிருந்து அருள் செய்கின்ற தலைவரே! கேட்டருள்க, அரும் திறல் சூர் முதல் அவுணர் தங்களால்—பிறராலடக்குதற்கரிய வலிமையுடைய சூரபன்மன் முதலாகிய அசுரர்களால், எண் இலா உகம் வருந்தினம்—அளவிறந்த யுகம் வரையும் வருத்தமுற்று, வன்மை இன்றி ஒடுங்கினம்—வலிமைகெட்டு வாடினேம் எ—று.

உகம்-யுகமென்னும் வடசொல்லின்றிரிபு. நெருப்புஞ்சூடும், சூரியனுமொளியும் பண்ணுமிசையும், நீருந்தண்மையும், பாலுஞ்சுவையும், பூவுமணமும் போல அபேதமாய் நிற்றலின் 'பரையொடொன்றியேயிருந்தருண்முதல்வ' என்றான். (24)

அந்தமில் அழகுடை அரம்பை மாதரும்
மைந்தனும் அளப்பிலா வானு ளோர்களும்
வெந்தொழில் அவுணர்கள் வேந்தன் மேவிய
சிந்துவின் நகரிடைச் சிறைக்கண் வைகினார்.

இ—ள்: அந்தம் இல் அழகு உடை அரம்பை மாதரும்—அளவிடப்படாத அழகையுடைய தேவப்பெண்களும், மைந்தனும்—என் புதல்வனாகிய சயந்தனும், அளப்பு இலா வான் உளோர்களும்—அளவிறந்த தேவர்களும், வெம் தொழில் அவுணர்கள் வேந்தன் மேவிய சிந்துவில் நகர் இடை—கொடுந்தொழிலையுடைய அசுரர்க்கரசனாகிய சூரபன்மனிருக்கின்ற கடனடுவிலுள்ள வீரமகேந்திரபுரத்தில், சிறைக்கண் வைகினார்—சிறையிலிருக்கின்றார்கள் எ—று. (25)

இழிந்திடும் அவுணரா லியாதொர் காலமும்
ஒழிந்திட லின்றியே உறைந்த சீரொடும்
அழிந்ததென் கடிநகர் அதனை யானிவண்
மொழிந்திடல் வேண்டுமோ உணர்தி முற்றுநீ.

இ—ள்: யாது ஓர் காலமும் ஒழிந்திடல் இன்றி உறைந்த சீரொடு—எக்காலத்தும் அழிதலின்றி நிலைபெற்ற சிறப்புடன், என் கடிநகர்—எனது சிறந்த நகரம், இழிந்திடும் அவுணரால் அழிந்தது—இழிவினையுடைய அசுரர்களால் அழிவுபெற்றது, அதனை யான் இவண் மொழிந்திடல் வேண்டுமோ—அதனை யானிங்கே விரித்துக் கூறவேண்டுமா? (வேண்டியதன்று), நீ முற்றும் உணர்தி—தேவரீர் எல்லாவற்றையுமறிவீர் எ—று.

யான்சொல்ல முந்தியே எல்லாநிகழ்ச்சிகளையுமறிவீரென்பது தாற்பரியம். (26)

முன்னுற யான்தவம் முயன்று செய்துழித்
துன்னினை நங்கணோர் தோன்ற லெய்துவான்
அன்னவ னைக்கொடே அவுணர்ச் செற்றுநும்
இன்னலை யகற்றுதும் என்றி எந்தைநீ.

இ—ள்: எந்தை—எமது தலைவரே! யான் முன்உற முயன்று தவம் செய்துழி—யான் முற்காலத்திற் பெருமுயற்சி கொண்டு தவத்தைச் செய்தபொழுது, நீ துன்னினை—தேவரீர் பிரசன்னமாய், நம்கண் ஓர் தோன்றல் எய்துவான்—எம்மிடத்து ஒரு புத்திரனவதரிப்பான், அன்னவனை கொடு அவுணர் செற்று நும் இன்னலை அகற்றுதும்—அவனைக்கொண்டு அசுரர்களை சங்கரித்து நுமக்கு நேர்ந்த துன்பத்தையொழிப்போம், என்றி—என்று அருள் செய்தீர் எ—று.

செய்த உழி என்பதில் அகரம் தொக்கது. துன்னினை முற்றெச்சம். பலகால மாக மெய்வருந்திச் செய்யவென்பார் 'முயன்றுசெய்துழி' என்றார். (27)

அப்படிக் குமரனும் அவத ரித்துளன்
இப்பகல் காறுமெம் மின்னல் தீர்த்திலை
முப்புவ னந்தொழு முதல்வ தீயரேந்
துப்புறு பவப்பயன் றொலைந்த தில்லையோ.

**இ—ள்:** அப்படி குமரனும் அவதரித்து உளன்—தேவரீரருளிச் செய்தவாறு குமரரும் உதித்துளார் (அங்ஙனமுதித்தும்), இ பகல் காறும் எம் இன்னல் தீர்த்திலை—இத்தினம் வரையும் எமது துன்பத்தையொழித்திலீர், மு புவனம் தொழும் முதல்வ—மூவுலகத்தாராலும் வணங்கப்படுந்தலைவரே!, தீயரேம் துப்பு உறு பவ பயன் தொலைந்தது இல்லையோ—பாவியேங்களது வலிமைமிக்க தீவினைப் பயன் இப்போதும் அழிந்திலதா? எ—று.

காறு-காலத்தின் அல்லது இடத்தினெல்லையைக் காட்டுமோரிடைச் சொல். குமாரனுமென்பதில் உம்மை எச்சம். முப்புவனமும் என்பதில் முற்றும்மை தொக்கது. "ஊழிற்பெருவலியாவுள மற்றொன்று-சூழினுந் தான்முந்துறும் என்றவாறு வினைப்பயன் தடுக்கவொண்ணுவலியுடைத்தாதலின் 'துப்புறுபவப்பயன்' என்றார். அனுபவிக்கப்படுகின்ற தீவினைபயனெனப் பொருள் கூறினுமாம். (28)

சூருடை வன்மையைத் தொலைக்கத் தக்கதோர்
பேருடை யாரிலை பின்னை யானினி
யாரொடு கூறுவன் ஆரை நோகுவன்
நீருடை முடியினோய் நினது முன்னலால்.

**இ—ள்:** நீர் உடை முடியினோய்—கங்கை நதியையணிந்த சடை முடியை யுடையவரே!, சூர் உடை வன்மையை தொலைக்க தக்கது ஓர் பேர் உடையார் இலை—சூரபன்மனது வலிமையையழிக்கத்தக்க பெருமையையுடையவர் இல்லை (ஆதலின்), நினது முன் அலால்-தேவரீரது திருமுன்னிலையிலன்றி, பின்னை ஆரொடு கூறுவன்—வேறு யாரிடத்துச் சொல்வேன், ஆரை நோகுவன்—யாரை (என் துன்பத்தைத் தீர்த்திலரென்று) குறை கூறுவேன் எ—று.

பெயர் யார் என்பன-பேர் ஆர் என் விகாரமாயின. பின்னை என்பதில் ஐகாரம் சாரியை. பின்-ஈண்டு வேறென்னும் பொருளில் வந்தது. நீருடை முடியினோய் எனக் கருத்துடையடை புணர்த்தியதனால் நீரே எமது துன்பத்தை மாற்றவல்லீரென்பது பெறப்படும். (29)

சீகர மறிகடற் சென்று நவ்விசேர்
காகம தென்னஉன் கயிலை யன்றியே
ஏகவோர் இடமிலை எமக்கு நீயலால்
சோகம தகற்றிடுந் துணைவர் இல்லையே,

**இ—ள்:** சீகரம் மறி கடல் சென்று நவ்வி சேர் காகமது என்ன—திரை மறியா நின்ற சமுத்திரத்திற் புகுந்து மரக்கல நுனியை யாதாரமாகவடைந்த காகம்போல, எமக்கு—எங்களுக்கு, உன் கயிலை அன்றி ஏக ஓர் இடம் இலை—தேவரீரது இந்தக் கைலாசகிரியேயன்றிச் சரண்புக வேறோரிடமுமில்லை, நீ அலால் சோகமது அகற்றிடும் துணைவர் இல்லை—தேவரீரேயன்றித் துன்பத்தை யொழிக்க வல்ல துணைவரும் வேறில்லை. எ—று.

இழிவு சிறப்பும்மையும் எச்சவும்மையுந் தொக்கன. பெருங்கடலினடுவிற் சென்றிளைத்து அங்கேயோடிவரும் மரக்கலத்தையணைந்த காகத்திற்கு அம் மரக் கலக் கூம்பேயன்றி வேறு ஆதாரமில்லாமை போல, பகைவரால் விளைந்த இடுக்கணுகிய கடலிலகப்பட்டு வருந்துகின்ற எமக்கும் தேவரீர் வாழுமிம்மலையே யன்றி வேறு புகலிடம் இன்றென்பது கருத்து. "நலத்தகு கண்ணுதனுதற் சேர்ந்தனர்-கலத்தலைய சுன்றிடாக் காகம்போலவே" எனத் திருவவதாரப்பட லத்திலும் இவ்வுவமை புணர்த்திக் கூறினர். "எங்குப் போயுய்கேனுன்னிணை யடியேயடையலலா-லெங்கும் போய்க் கரைகாணுதெறி கடல்வாய் மீண்டேயும்-வங்கத்தின் கூம்பேறு மாப்பறவை போன்றேனே" என்றார் பிறரும். (30)

ஏற்றெழு வன்னிமேல் இனிது துஞ்சலாந்
தோற்றிய வெவ்விட மெனினுந் துய்க்கலாம்
மாற்றலர் அலைத்திட வந்த வெந்துயர்
ஆற்றரி தாற்றரி தலம்இப் புன்மையே.

இ—ள்: ஏற்று எழு வன்னி மேல் இனிது துஞ்சல் ஆம்—கிளர்ந்தெரி கின்ற அக்கினியின்மேல் நன்ருகப் படுத்துறங்கலாம், தோற்றிய வெவ் விடம் எனினும் துய்க்கல் ஆம்—தோற்றப்பட்ட கொடிய நஞ்சையேனும் புசிக்கலாம், மாற்றலர் அலைத்திட வந்த வெம் துயர் ஆற்ற அரிது ஆற்ற அரிது—பகைவர் கள் வருத்துதலால் நேர்ந்த கொடுந் துன்பஞ் சகித்தற்கரிது சகித்தற்கரிது, இ புன்மை அலம்-இந்த எளிமை போதும் எ—று.

அக்கினியின் மேற்கிடத்தலாலும் நஞ்சையுண்பதாலும் விளையுந்துயரினும் பகைவரால் விளையுந்துயர் கொடிதென்பதுகுறிப்பு. அலைத்திட என்னும் எச்சம் ஏதுப்பொருட்டு. அலம் - வடசொல். உம்மை உயர்வு சிறப்பு. சேய்மையிற் றானே சுடத்தக்க பெருநெருப்பென்பார் 'ஏற்றெழுவன்னி' எனவும், கண்ணுக் குங் கருத்திற்கும் புலப்பட்ட விடமென்பார் 'தோற்றிய விடம்' எனவும் உண் டவுடன் கொல்லுந்தரத்ததென்பார் 'வெவ்விடம்' எனவும் கூறினர். (31)

தீதினை யகற்றவுந் திருவை நல்கவுந்
தாதையர் அல்லது தனயர்க் காருளர்
ஆதலின் எமையினி அளித்தி யாலென
ஓதினன் வணங்கினன் உம்பர் வேந்தனே.

இ—ள்: தனயர்க்கு—பிள்ளைகளுக்கு, தீதினை அகற்றவும் திருவை நல்கவும் —தீமையையொழிக்கவும் வளத்தைக்கொடுக்கவும், தாதையர் அல்லது ஆர் உளர்—தாய்தந்தையரேயன்றி வேறியாருளர், ஆதலின்—ஆதலால், எமை இனி அளித்தி—எங்களை இனிக்காத்தருள்க, என ஓதினன்—என்றுகூறி, வணங்கினன்—பணிந்தான், உம்பர் வேந்தன்—தேவர்க்கரசனுகிய இந்திரன் எ—று.

தாதையர் என்றது ஏகசேட பதத்துவந்துவமாதலின் தாய்தந்தையென்னு மிருவரையுமுணர்த்தும். நோய்முதலிய தீமைகளை நீக்கி மைந்தர்க்கு நன்மை புரிவது பெற்றோர் கடனுதல் போலச் சூரனுதியரால் நேர்ந்த இடரையொழித்து எமக்குப் பழைய வளத்தைத் தருவதுந் தேவரீர்கடனேயாம் என்பது கருத்து. (32)

அப்பொழு தரியயன் ஐய வெய்யசூர்
துப்புடன் உலகுயிர்த் தொகையை வாட்டுதல்
செப்பரி தின்னினிச் சிறிதுந் தாழ்க்கலை
இப்பொழு தருள்கென இயம்பி வேண்டினர்.

இ—ள்: அ பொழுது—அச்சமயத்தில், அரி அயன்—திருமாலும் பிரமதேவரும் (சிவபிரானை நோக்கி), ஐய — கடவுளே!, வெய்ய சூர் துப்பு உடன் உலகு உயிர் தொகையை வாட்டுதல் செப்ப அரிது — கொடியசூரபன்மன் வலிமையுடன் உலகத்திலுள்ள சீவராசிகளை வருத்துதல் சொல்லமுடியாது (ஆதலின்), இன்னினி சிறிதும் தாழ்கலை—இனிச் சற்றுயினுந் தாமதஞ் செய்யாமல், இப்பொழுது அருள்க என இயம்பி வேண்டினர்—இப்பொழுதே கருணைசெய்குதிரென்று கூறிப் பிரார்த்தித்தார்கள் எ—று.

இனியென்னுஞ்சொல் அடுக்கி இன்னினி எனத் தொக்கது. ''இன்னினியே செய்க வறவினை — இன்னினியே'' என நாலடியாரிலும் வருதல் காண்க. (33)

இகபரம் உதவுவோன் இவற்றைக் கேட்டலும்
மிகவருள் எய்தியே விடுமின் நீர்இனி
அகமெலி வுறலென அருளி ஆங்கமர்
குகன்முகம் நோக்கியே இனைய கூறுவான்.

இ—ள்: இக பரம் உதவுவோன் இவற்றை கேட்டலும் — இம்மை மறுமையின்பங்களை (வேண்டியாங்கு) கொடுப்பவராகிய சிவபிரான் இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன், மிக அருள் எய்தி—மிகக்கிருபைகூர்ந்து, நீர் இனி அகம் மெலிவு உறல் விடுமின் என அருளி — நீங்களினி மனவருத்தமுறுதலை நீக்குங்களென்றருள் செய்து, ஆங்கு அமர் குகன் முகம் நோக்கி—அவ்விடத்து வீற்றிருக்கின்ற சுப்பிரமணியக்கடவுளது முகத்தைப்பார்த்து, இனைய கூறுவான் — இவ்வாசகங்களைத் திருவாய்மலர்ந்தருளுவார் எ—று.

இகபரம் வடசொற்றொடர். தேவர்க்கருள் செய்யுமாறு திருவுளம்பற்றியதற்கேற்ப 'இகபரமுதவுவோன்' என்றார். (34)

## வேறு

பாரினை யலைத்துப் பல்லுயிர் தமக்கும் பருவரல் செய்துவிண்ண வர்தம்
ஊரினை முருக்கித் தீமையே இயற்றி யுலப்புறு வன்மைகொண் டுற்ற
சூரனை யவுணர் குழுவொடுந் தடிந்து சுருதியின் நெறி நிறீஇ மகவான்
பேரரச ளித்துச் சுரர்துயர் அகற்றிப் பெயர்தியென் றனன்எந்தைபெருமான்.

இ—ள்: பாரினை அலைத்து—பூவுலகத்தை வருத்தி, பல் உயிர் தமக்கும் பருவரல் செய்து — பல ஆன்மாக்களுக்குத் துன்பதையுண்டாக்கி, விண்ணவர் தம் ஊரினை முருக்கி—தேவர்களது சுவர்க்கலோகத்தையழித்து, தீமையே இயற்றி — தீவினையையே செய்து, உலப்பு உறு வன்மை கொண்டு உற்ற — அளவிடப்படாத வலிமைகொண்டிருக்கின்ற, சூரனை—சூரபன்மனை, அவுணர் குழுவொடும் தடிந்து — அசுரர்கூட்டத்தோடுஞ் சங்கரித்து, சுருதியின் நெறி நிறீ இ — வேத நெறியை நிலைபெறச்செய்து, மகவான் பேர் அரசு அளித்து — இந்திரனது சிறந்த அரசியலைக்கொடுத்து, சுரர் துயர் அகற்றி — தேவர்களது துன்பத்தை நீக்கி, பெயர்தி என்றனன் — மீண்டுவருவாயென்று கூறியருளினர், எந்தை பெருமான் — எங்களது பரமபிதாவாகிய சிவபிரான் எ—று.

பருவரல்-தொழிற்பெயர். பருவா பகுதி, சுருதியினெறி—வைதிகமார்க்கம். நிறீஇ-நிறுவியென்பதன் விகாரம். அலைத்து செய்து முருக்கி இயற்றி கொண்டு என்னுமெச்சங்கள் உற்றவென்னும் பெயரெச்சத்தோடியைந்தன. (35)

அருத்திகொள் குமரன் இனையசொல் வினவி அப்பணி புரிகுவனென்னப்
புரத்தினை யட்டகண்ணுதல் பின்னர்ப் பொள்ளென உள்ள மேற்பதினோர்
உருத்திரர் தமையும் உன்னலும் அன்னோர் உற்றிட இவன்கையிற் படையாய்
இருத்திரென் றவரைப் பலபடையாக்கி ஈந்தனன் எம்பிரான் கரத்தில்.

இ—ள்: அருத்தி கொள் குமரன் இனைய சொல் வினவி — அன்புடைய முருகக்கடவுள் இவ்வாசகத்தைக்கேட்டு, அ பணி புரிகுவன் என்ன—அந்தக் கட்டளையைச்செய்வேனென்று உடன்பட, புரத்தினை அட்ட கண் நுதல்—முப்புரங்களையெரித்த நெற்றிக்கண்ணையுடைய சிவபிரான், பின்னர் — அதன் பின்பு, பொள் என—விரைவாக, பதினோர் உருத்திரர் தமையும் உள்ள மேல் உன்னலும் — பதினொருருத்திரர்களையுந் திருவுள்ளத்தில் நினைத்தருளுதலும், அன்னோர் உற்றிட —அவர்கள் வந்துசேர, இவன் கையில் படை ஆய் இருத்திர் என்று— சிவபிரான் இவனது கைகளில் நீவிர் ஆயுதங்களாயிருங்களென்று கூறி, அவரை பல படை ஆக்கி —அவ்வுருத்திரர்களைப் பல ஆயுதங்களாகச்செய்து, எம்பிரான் கரத்தில் ஈந்தனன் — எமது தலைவராகிய குமாரக்கடவுளது திருக்கரங்களிற் கொடுத்தருளினர் எ—று.

அருத்திகொள் என்பதற்குச் சிவபிரான்மாட்டன்புடைய குமாரக்கடவுளென வும் சிவபிரானது அன்புக்கிடமாகிய குமாரக்கடவுளெனவும் பொருள் கூறலாம். அசுரரையழிப்பிக்க முயன்றதற்கேற்ப 'புரத்தினையட்டகண்ணுதல்' என்றார். எம்பிரான் ஈந்தனன் என இயைத்துப் பொருள் கூறினுமாம். பதினொருருத்திரர் யாவரென்பதை முன்னர்க் கணங்கள் செல்படலத்திற் காட்டினம். (36)

பொன்றிகழ் சடிலத்தண்ணல்தன் பெயரும்பொருவிலாஉருவமுந்தொன்னாள்
நன்றுபெற்றுடைய உருத்திரகணத்தோர் நவிலருந் தோமரங்கொடிவாள்
வன்றிறற் குலிசம் பகழியங்குசமும் மணிமலர்ப் பங்கயந் தண்டம்
வென்றிவின் மழுவு மாகிவீற்றிருந்தார் விறல்மிகும் அறுமுகன் கரத்தில்.

இ—ள்: பொன் திகழ் சடிலத்து அண்ணல் தன் பெயரும் பொரு இலா உருவமும் தொல் நாள் நன்று பெற்று உடைய உருத்திர கணத்தோர்— பொன்போல் விளங்குகின்ற சடைமுடியையுடைய சிவபிரானது திருநாமத்தையும் ஒப்பில்லாத சாரூப்பியத்தையும் முற்காலத்தில் நன்றாகப் பெற்றுள்ள உருத்திரர் கூட்டத்தவர்கள் பதினொருவரும், நவில் அரும் தோமரம்—சொல்லுதற்கரிய சிறப்பையுடைய தோமரமும், கொடி—கொடியும், வாள்—வாளும், வன் திறல் குலிசம்—மிக்க வலிமையையுடைய வச்சிரமும், பகழி—அம்பும், அங்குசமும்—அங்குசமும், மணி—மணியும், மலர் பங்கயம்—தாமரைப்பூவும், தண்டம்—தண்டும், வென்றி வில்—வெற்றியைத் தருகின்ற வில்லும், மழுவும் ஆகி—மழுவுமென்னும் படைக்கலங்களாகி, விறல் மிகும் அறுமுகன் கரத்தில் வீற்றிருந்தார்—வலிமை மிக்க சண்முகப்பெருமானது திருக்கரங்களிற்றங்கியிருந்தார்கள் எ—று.

பதினொருருத்திரர்களும் பதினொரு படைகளாயமைந்திருந்தனரென்பது கருத்து. தொன்னாளென்றது படைப்புக் காலத்தை. கொடி மணி பங்கயம் என்பன அவ்வவ்வடிவுடையனவாகச் செய்யப்பட்ட ஆயுதங்கள். (37)

ஆயதற் பின்னர் ஏவில்மூ தண்டத் தைம்பெரும் பூதமும் அடுவ
தேயபல் லுயிரும் ஒருதலை முடிப்ப தேவர்மேல் விடுகினும் அவர்தம்
மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி மன்னுயிர் உண்பதெப் படைக்கும்
நாயக மாவ தொருதனிச் சுடர்வேல் நல்கியே மதலைகைக் கொடுத்தான்.

இ—ள்: ஆயதன் பின்னர்—அதன்மேல், ஏவில்—செலுத்தினுல், முழு அண்டத்து ஐம் பெரும் பூதமும் அடுவது—பழைய அண்டகோளத்திலுள்ள பெரிய பஞ்சபூதங்களேயும் அழிக்க வல்லதும், ஏய பல் உயிரும் ஒரு தலே முடிப்பது—உலகத்திற் பொருந்திய எல்லாப் பிராணிகளேயும் ஒருங்கே அழிக்கவல்லதும், எவர் மேல் விடுக்கினும்—எந்த வீரர்மேற் செலுத்தினுலும், அவர் தம் மா இரும் திறலும் வரங்களும் சிந்தி மன் உயிர் உண்பது—அவர்களது மிகச் சிறந்த வலிமையையும் வரங்களேயுங் கெடுத்து நிலேபெற்ற உயிரைக் கொல்வதும். எ படைக்கும் நாயகம் ஆவது—எல்லாப் படைக்கலங்களுக்கும் அரசும் ஆகிய, ஒரு தனி சுடர் வேல்—ஒப்பற்ற ஒளி பொருந்திய ஒரு வேற்படையை, நல்கி—உண்டாக்கி, மதலே கைகொடுத்தான்—குமாரக்கடவுளது எஞ்சிய திருக் கரத்திற் கொடுத்தருளினர் எ—று.

ஏவின் என்பதை முடிப்பது என்பதனேடு கூட்டுக. ஆயதற் பின்னர்-நல்கி-கொடுத்தான் எனவியையும். திறல்-ஈண்டுத் தேகபலம், மனேபலம், ஆயுதபலம், சேனுபலம் முதலியன. உண்பது என்பது இலக்கணேயாற் கொல்லுதலே யுணர்த்தும். (38)

அன்னதற் பின்னர் எம்பிரான் றன்பா லாகிநின் றேவின புரிந்து
மன்னிய இலக்கத் தொன்பது வகைத்தா மைந்தரை நோக்கியே எவர்க்கும்
முன்னவனும்இக் குமரனே டேகி முடிக்குதிர் அவுணரை யென்னுத்
துன்னுபல் படையும் உதவியே சேய்க்குத் துணேப்படை யாகவே கொடுத்தான்

இ—ள்: அன்னதன் பின்னர்-அதன் பின்பு, எம்பிரான்—எங்கள் தலேவராகிய சிவபிரான், தன் பால் ஆகி நின்று ஏவின புரிந்து மன்னிய இலக்கத்து ஒன்பது வகைத்து ஆம் மைந்தரை நோக்கி—தமது பக்கத்திலமைந்து நின்று பணித்த தொழில்களேச் செய்த இலக்கத்தொன்பதென்னுந் தொகையினராகிய புதல்வர்களேப் பார்த்து, எவர்க்கும் முன்னவன் ஆம் இ குமரனேடு ஏகி—அனேவர்க்குந் தலேவராகிய இந்தக் குமாரக்கடவுளுடன் சென்று, அவுணரை முடிக்குதிர் என்னு—அசுரர்களேயழிப்பீர்களென்று கூறி, துன்னு பல் படையும் உதவி—நெருங்கிய பல படைக்கலங்களேயுங் கொடுத்து, சேய்க்கு துணேப்படை ஆக கொடுத்தான்—அவர்களேக் குமாரக்கடவுளுக்குத் துணேச் சேனேயாகக் கொடுத்தார் எ—று.

குமாரக்கடவுள் கயிலே சேர்ந்தபின் அவரது தம்பியரான இலக்கத்தொன்பதின்மர்களுஞ் சிவபிரானேப் புடைசூழ்ந்து ஏவல்செய்து நின்றனராதலின் 'தன்பாலாகி நின்றேவின புரிந்து மன்னிய-மைந்தர்' என்ருர். படையும் என்பதில் உம்மை முற்று. (39)

நாயகன் அதற்பின் அண்டவா பரணன் நந்தியுக் கிரனெடு சண்டன்
காயெரி விழியன் சிங்கனே முதலாங் கணப்பெருந் தலேவரை நோக்கி
ஆயிர விரட்டி பூதவெள் ளத்தோ டறுமுகன் சேனேயாய்ச் சென்மின்
நீயிரென் றருளி அவர்தமைக் குகற்கு நெடும்படைத் தலேவரா அளித்தான்.

இ—ள்: நாயகன்—சிவபிரான், அதன் பின்—அதன் பின்பு, அண்ட ஆபரணன்—அண்டாபரணனும், நந்தி—நந்தியும், உக்கிரனெடு—உக்கிரனும், சண்டன்—சண்டனும், காய் எரி விழியன்—அக்கினி நேத்திரனும், சிங்கன்—சிங்கனும், முதல் ஆம்—முதலாகிய, பெரும் கணத் தலேவரை நோக்கி—சிறந்த பூதத் தலேவர்கள் நூற்றெண்மரைப் பார்த்து, நீயிர்—நீங்கள், ஆயிர இரட்டி

பூதவெள்ளத்தோடு அறுமுகன் சேனை ஆ சென்மின்—இரண்டாயிர வெள்ளம் பூதர்களுடன் கந்தவேட்குச் சேனைகளாகப் போங்கள், என்று அருளி—என்று திருவாய்மலர்ந்தருளி, அவர்தமை குகற்கு நெடும் படைத் தலைவர் ஆ அளித்தான்—அவர்களை முருகக்கடவுளுக்குப் பெரிய சேனைத் தலைவர்களாகக் கொடுத்தார் எ—று.

காயெரிவிழியன்-சுடுகின்ற அக்கினியைக் காலுங் கண்களையுடையவன்; அக்கினிபோற் சிவந்த கண்களையுடையனெனினுமாம். (40)

ஐம்பெரும் பூத வன்மையும் அங்கண் அமர்தரும் பொருள்களின் வலியுஞ்
செம்பது மத்தோ னாதியாம் அமரர் திண்மையும் கொண்டதோர்செழுந்தேர்
வெம்பரி இலக்கம் பூண்டது மனத்தின் விரைந்துமுன் செல்வதொன் றதனை
எம்பெரு முதல்வன் சிந்தையா லுதவி யேறுவான் மைந்தனுக் களித்தான்.

இ—ள்: ஐம் பெரும் பூத வன்மையும்—பஞ்சமகாபூதங்களின் வலிமையையும், அங்கண் அமர்தரும் பொருள்களின் வலியும்—அப்பூதங்களிலுள்ள பொருள்களின் வலிமையையும், செம்பதுமத்தோன் ஆதி ஆம் அமரர் திண்மையும்—செந்தாமரை மலரில் வாழ்கின்ற பிரமா முதலிய தேவர்களது வலிமையையும், கொண்டது—உடையதும், வெம் பரி இலக்கம் பூண்டது—கொடிய இலக்கங் குதிரைகள் பூட்டப்பெற்றதும், மனத்தின் விரைந்து முன் செல்வது ஒன்று—மனோவேகம்போல் விரைந்து முந்திச் செல்வதும் ஆகிய, ஓர் செழும் தேர் அதனை—ஒப்பற்ற சிறந்த ஒரு தேரை, எம் பெரும் முதல்வன்—எமது சிறந்த தலைவரான சிவபிரான், சிந்தையால் உதவி—மனத்தாற் படைத்து, ஏறுவான்—ஏறிச் செல்லும் பொருட்டு, மைந்தனுக்கு அளித்தான்—குமாரக்கடவுளுக்குக் கொடுத்தருளினர் எ—று.

மனம்-ஆகுபெயர். நினைத்த மாத்திரத்தில் எங்குஞ் செல்லுதலால் மனோவேகஞ் சிறந்ததாக எடுத்துக் கூறப்பட்டது. மனோவேகம்போற் செல்லுதல் பற்றியே அத்தேர்க்கு மனோவேகப் பொற்றேரென்னும் பெயருமுள தாயிற்று. (41)

இவ்வகை யெல்லாம் விரைவுடன் உதவி யேகுதி நீயெனக் குமரன்
மைவிழி உமையோ டிறைவனைத் தொழுது வலங்கொடே மும்முறை வணங்கிச்
செவ்விதின் எழுந்து புகழ்ந்தனன் நிற்பத் திருவுளத் துவகையால் தழுவிக்
கைவரு கவானுய்த் துச்சிமேல் உயிர்த்துக் கருணைசெய் தமலைகைக் கொடுத்தான்

இ—ள்: இ வகை எல்லாம் விரைவுடன் உதவி—சிவபிரான் இவ்வாறு எல்லாப் பொருள்களையும் விரைவிற் கொடுத்து, நீ ஏகுதி என—நீ செல்வாயாகவென்று விடைகொடுக்க, குமரன்—முருகக்கடவுள், மை விழி உமையோடு இறைவனை தொழுது—மைதீட்டிய கண்களையுடைய உமாதேவியையுஞ் சிவபிரானையுங் கைகூப்பி, மும்முறை வலம்கொடு—மூன்றுமுறை பிரதக்ஷிணஞ் செய்து, வணங்கி—நமஸ்காரஞ் செய்து, செவ்விதின் எழுந்து புகழ்ந்தனன் நிற்ப—செப்பமாக எழும்பித் துதித்து நிற்க, திருவுளத்து உவகையால் தழுவி—சிவபிரான் தமது திருவுள்ளத்திற்றோன்றிய மகிழ்ச்சியோடுமணைத்து, கைவரு

கவான் உய்த்து—பயிலப் பெற்ற தமது மடியின் கண்ணே வைத்து, உச்சிமேல் உயிர்த்து—உச்சிமோந்து, கருணை செய்து—திருவருள் புரிந்து, அமலை கைகொடுத்தான்—உமாதேவியின் கையிற் கொடுத்தருளினர் எ—று.

குமாரக்கடவுள் நாடோறுமிருந்து பயின்றமடியென்பார் 'கைவருகவான்' என்றார். ஒழுக்கம் பொருந்திய மடியெனினுமாம். பகைவராற் பேதிக்கப் படாத இரத்தினமிழைத்த பொற்கவசத்தையும் எக்காலத்தும் அம்புகள் குறைவு படாத இரண்டு தூணிகளையும் தரவாரியென்னுமாயுதத்தையும் கொடுத்த தாக முதனூலிற் கூறப்பட்டுள்ளது. அதனை 'இவ்வகையெல்லாம்-உதவி' என்பதில் அமைத்துரைத்துக் கொள்க. (42)

கொடுத்தலும் வயின்வைத் தருளினற் புல்லிக் குமரவேள் சென்னிமோந் துன்பால்
அடுத்திடும் இலக்கத் தொன்பது வகையோர் அனிகமாய்ச் சூழ்ந்திடப் போந்து
கடக்கரும் ஆற்றல் அவுணர்தங் கிளையைக் காதியிக் கடவுளர் குறையை
முடித்தனை வருதி என்றருள் புரிந்தாள் மூவிரு சமயத்தின் முதல்வி.

இ—ள்: கொடுத்தலும்—சிவபிரான் கொடுத்தவுடன், மூ இரு சமயத்தின் முதல்வி—அறுவகை மதங்களையும் வளர்த்த தலைவியாராகிய உமாதேவியார், வயின் வைத்து—மடியிலிருத்தி, அருளினல் புல்லி—கிருபையுடன் தழுவி, குமரவேள் சென்னி மோந்து—அக் குமாரக்கடவுளது உச்சியை மோந்து, உன் பால் அடுத்திடும் இலக்கத்து ஒன்பது வகையோர் அனிகம் ஆய் சூழ்ந்திட— உன் பக்கத்திற் பொருந்திய இலக்கத்தொன்பது வீரர்களுஞ் சேனையாய்ச் சூழ்ந்துவர, போந்து—நீ போய், கடக்க அரும் ஆற்றல் அவுணர் தம் கிளையை காதி—பிறரால் வெல்லுதற்கரிய வலிமையையுடைய அசுரர் கூட்டத்தை யழித்து, இ கடவுளர் குறையை முடித்தனை வருதி—இந்தத் தேவர்களது குறையை நீக்கி வருவாய், என்று அருள் புரிந்தாள்—என்று திருவாய்மலர்ந் தருளினர் எ—று. (43)

அம்மையித் திறத்தால் அருள்புரிந் திடலும் அறுமுகன் தொழுதெழீஇயனையோர்
தம்விடை கொண்டு படர்ந்தனன் தானைத் தலைவராம் இலக்கமே லொன்பான்
மெய்ம்மைகொள் வீரர் யாவருங் கணங்கள் வியன்பெருந் தலைவரும் இருவர்
செம்மல ரடிகள் மும்முறை இறைஞ்சிச் சேரவே விடைகொடு சென்றார்.

இ—ள்: அம்மை இ திறத்தால் அருள் புரிந்திடலும்—உமாதேவியார் இவ்வாறு கருணை செய்தவுடன், அறுமுகன்—சண்முகப்பெருமான், தொழுது எழீஇ—வணங்கியெழுந்து, அனையோர் தம் விடை கொண்டு படர்ந்தனன்— அவ்வுமாமகேச்சுரர்களது அனுமதியைப் பெற்றுச் சென்றார் (அப்பொழுது), தானை தலைவர் ஆம் மெய்ம்மை கொள் இலக்கம் மேல் ஒப்பான் வீரர் யாவரும்—சேனைத் தலைவர்களாகிய மெய்ம்மை பொருந்திய இலக்கத்தொன்பது வீரர்களும், கணங்கள் வியன் பெரும் தலைவரும்—சிறந்த பெரிய பூதத் தலைவர்களும், இருவர் செம் மலர் அடிகள் மூம் முறை இறைஞ்சி—(சிவபிரானும் உமையம்மையாருமாகிய) இருவரதும் சிவந்த தாமரை மலர் போலும் பாதங்களை மூன்று முறை வணங்கி, சேர—ஒருங்கே, விடைகொடு—(அவர்களிடம்) அனுமதி பெற்றுக்கொண்டு, சென்றார்—உடன் போனார்கள் எ—று.

எதிர்த்தாரை அறநெறிகோடா தடர்த்து வெல்லும் ஆற்றலுடையரென் பார் 'மெய்ம்மைகொள் வீரர்' என்றார். (44)

நின்றிடும் அயன்மால் மகபதி எந்தாய் நீயெமை அளித்தனை நெஞ்சத்
தொன்றொரு குறையும் இல்லையால் இந்நாள் உய்ந்தனம் உய்ந்தன மென்று
பொன்றிகழ் மேனி உமையுடன் இறைவன் பொன்னடி பணிந்தெழ நுமக்கு
நன்றிசெய் குமரன் தன்னுடன் நீரும் நடமெனு விடையது புரிந்தான்.

இ—ள்: நின்றிடும் அயன் மால் மகபதி—(அப்பொழுது) அங்கு நின்ற பிரமதேவருந் திருமாலும் இந்திரனும், எந்தாய்—எம் பரமபிதாவே!, நீ எமை அளித்தனை—தேவரீர் எங்களைப் பாதுகாத்தருளினீர், நெஞ்சத்து ஒன்று ஒரு குறையும் இல்லை—எங்கள் மனத்தில் யாதொரு குறையுமில்லை, இ நாள் உய்ந் தனம் என்று—இற்றைத் தினத்திலுய்ந்தோம் உய்ந்தோம் என்று கூறி, பொன் திகழ் மேனி உமை உடன் இறைவன் பொன் அடி பணிந்து எழ—பொன்போல ஒளிருகின்ற திருமேனியையுடைய உமாதேவியாரதும் சிவபிரானதும் அழகிய திருவடிகளை வணங்கி எழும்ப, நுமக்கு நன்றி செய் குமரன் தன் உடன் நீரும் நடம் எனு விடை அது புரிந்தான்—(சிவபிரான்) உமக்கு நன்மையைச் செய் கின்ற குமரவேளுடன் நீங்களும் போங்களென்று அனுமதியைச் செய்தார் எ—று.

அளித்தனை உய்ந்தனம் என இறந்த காலத்தாற் கூறியது விரைவுந் தெளி வும் பற்றி. உய்ந்தனம் உய்ந்தனம்-உவகை பற்றி வந்த அடுக்கு. நடவுமென் னுஞ் செய்யுமென்முற்றில் ஈற்றுயிர்மெய் கெட்டது. (45)

விடைபெறு படலம் முற்றிற்று.

ஆகத்திரு விருத்தம் 1310

# 19. படையெழு படலம்

குமாரக்கடவுள் சூரபன்மனுதியோரைச் சங்கரிக்கும் பொருட்டுச் சேனையோடு புறப்பட்டுச் சென்றமையைக் கூறுதலினிப் பெயர்த்தாயிற்று.

## இப்படலப்பொழிப்பு.

திருமால் குமாரக்கடவுளுக்குத் தேர்ப்பாகனுகும்படி வாயுதேவனைப் பணிக்க அவன் அவ்வாறே யமைந்து தேரைச் செலுத்தினன். குமாரக்கடவுள் சிவபிரானுதவிய தேரின் மேலிவர்ந்து இலக்கத்தொன்பது வீரர்களுந் தேவர்களும் இரண்டாயிர வெள்ளம் பூதசேனைகளும் அவற்றின் றலைவர்களுமுடன்வர அசுரருடன் போர் செய்யுமாறு சென்றருளினர் என்பதாம்.

**கண்ணுதல் விடைபெற் றரியயன் மகவான் கடவுளர் தம்மொடு கடிதின்**
**அண்ணலங் குமரன் றன்னொடு சென்றே அயல்வரும் மருத்தினை நோக்கித்**
**தண்ணளி புரியும் அறுமுகத் தெந்தை தனிப்பெருந் தேர்மிசை நீபோய்ப்**
**பண்ணொடு முட்கோல் மத்திகை பரித்துப் பாகனுத் தூண்டெனப் பணித்தான்.**

**இ—ள்:** அரி—திருமால், கண் நுதல் விடை பெற்று—நெற்றிக்கண்ணையுடையராகிய சிவபிரானது அநுமதியைப் பெற்று, அயன் மகவான் கடவுளர் தம்மொடு—பிரமதேவரோடும் இந்திரனோடும் ஏனைய தேவர்களோடும், அண்ணலம் குமரன் றன்னொடு—பெருமையிற் சிறந்த முருகக் கடவுளோடும், கடிதின் சென்று—விரைவிற்போய், அயல் வரும் மருத்தினை நோக்கி—பக்கத்தில் வருகின்ற வாயுதேவனைப் பார்த்து, நீ—வாயுவே! நீ, தண்ணளி புரியும் அறுமுகத்து எந்தை தனி பெரும் தேர் மிசை போய்—அருளைச் செய்கின்ற ஆறு திருமுகங்களையுடைய எங்கள் பரமபதியாகிய முருகக்கடவுளது ஒப்பற்ற பெரிய தேரின் மேலேறி, பண்ணொடு முட்கோல் மத்திகை பரித்து, பண்ணமைதியுடன் முட்கோலையுஞ் சம்மட்டியையுங் கைக்கொண்டு, பாகன் ஆய் தூண்டு என பணித்தான்—சாரதியாய்ச் செலுத்துதியென்று கட்டளையிட்டார் எ—று.

முட்கோல்-இருப்புமுள்ளை நுனியிலுடைய தடி. பண்ணமைத்தல் செலுத்துதற்கு வேண்டியவாறு குதிரைகளை ஆயத்தப்படுத்துதல். (1)

மன்புரி திருமால் இனையன பணிப்ப மாருதன் இசைந்துவான் செல்லும்
பொன்பொலி தேரின் மீமிசைப் பாய்ந்து பொருக்கென மருத்துவர் நாற்பான்
ஒன்பது திறத்தார் புடைவரத் தூண்டி உவகையோ டறுமுகத் தொருவன்
முன்புற வுய்த்துத் தொழுது மற்றிதன்மேல் முருகநீ வருகென மொழிந்தான்.

**இ—ள்:** மன் புரி திருமால் இனையன பணிப்ப—காத்தற்றொழிலைச் செய்கின்ற விஷ்ணுமூர்த்தி இவ் வாசகங்களைக் கூற, மாருதன் இசைந்து—வாயுதேவனுடன்பட்டு, நாற்பான் ஒன்பது திறத்தார் மருத்துவர் புடைவர—நாற்பத்தொன்பது வகையினராகிய வாயுக்கள் தன் பக்கத்தில்வர, பொருக்கு என—விரைவில், வான் செல்லும் பொன் பொலி தேரின் மீமிசை பாய்ந்து—ஆகாய மார்க்கத்திற் செல்லுகின்ற பொன்னாலமைந்து விளங்குகின்ற தேரின்

மேற்றூவி, தூண்டி—அத் தேரைச் செலுத்தி, உவகையோடு—மகிழ்ச்சியுடன், அறுமுகத்து ஒருவன் முன்பு உற உய்த்து—ஆறு திருமுகங்களையுடைய ஒப்பற்ற குமாரக்கடவுளுக்கு முன்னாக விடுத்து, தொழுது—கைகுவித்து, முருக—குமாரக் கடவுளே!, நீ இதன் மேல் வருக என மொழிந்தான்—தேவரீர் இத் தேரின் மேலெழுந்தருளுகவென்று விண்ணப்பஞ் செய்தான் எ—று.

நாற்பத்தொன்பது வாயுக்களும் வாயு தேவனது பரிசனங்களென்க. (2)

மாருதன் இனைய புகன்றுகை தொழலும் மற்றவன் செயற்கையை நோக்கிப்
பேரருள் புரிந்து கதிரிளம் பரிதி பிறங்குசீர் உதயமால் வரைமேல்
சேருவ தென்னக் குமரவேள் அனைய செழுமணி இரதமேற் செல்லச்
சூரினி இறந்தான் என்றுவா சவனுஞ் சுரர்களும் ஆர்த்தனர் துள்ளி.

இ—ள்: மாருதன் இனைய புகன்று கை தொழலும்—வாயுதேவன் இவ் வார்த்தைகளைக் கூறிக் கைகூப்பி நிற்றலும், குமரவேள்—முருகக்கடவுள், அவன் செயற்கையை நோக்கி—அவ் வாயுதேவனது செயலைப் பார்த்து, பேர் அருள் புரிந்து—மிக்க கிருபையைச் செய்து, இளம் கதிர் பரிதி பிறங்கு சீர் உதய மால் வரை மேல் சேருவது என்ன—இளங் கிரணங்களையுடைய சூரியன் விளங்குகின்ற சிறப்பையுடைய பெரிய உதயமலையின் மேலுதிப்பதுபோல, அனைய செழு மணி இரதமேல் செல்ல - அத்தகைய செழுமையாகிய இரத்தினமழுத் தப்பெற்ற அந்தத் தேரின் மேலெழுந்தருள, வாசவனும் சுரர்களும்—இந்திரனும் மற்றைய தேவர்களும், இனி சூர் இறந்தான் என்று—இனிச் சூரபன்மனிறந் தானென்று கூறி, துள்ளி ஆர்த்தனர்—(மனமகிழ்ச்சியாற்) குதித்து ஆரவாரித் தார்கள் எ—று.

செயற்கையென்னுந் தொழிற் பெயரில் அல் சாரியை. செழுமணி மாணிக்க மெனினுமாம். இனி இறந்தான்-காலவழுவமைதி. இளங்கதிர் பரிதி செந் நிறத்துடன் உதயகிரியிலுதித்து இருளையழித்து ஒளிர்வது போலக் கந்தவேள் சிவந்த நிறத்துடன் மனோவேகப் பொற்றேரிலெழுந்தருளி அசுரரையழித்துக் கீர்த்தி பெறுதலின் 'கதிரிளம் பரிதி-உதயமால்வரை மேற் சேருவதென்ன-குமர வேள் இரதமேற் செல்ல' என்றார். (3)

### வேறு

ஓங்கு தேர்மிசைக் குமரவேள் மேவலும் உவப்பால்
ஆங்க வன்றன தருள்பெறுந் திறலினோர் அணுகிப்
பாங்கர் நண்ணினர் முனிவருந் தேவர்கள் பலரும்
நீங்க லின்றியே அவர்புடை சூழ்ந்தனர் நெறியால்.

இ—ள்: ஓங்கு தேர் மிசை குமரவேள் மேவலும்—உயர்ந்த அத் தேரின் மேற் குமாரக்கடவுளேறியவுடன், அவன் தனது அருள் பெறும் திறலினோர்—அந்தக் குமாரக்கடவுளது கருணையைப் பெற்ற இலக்கத்தொன்பது வீரர்களும், உவப்பால் அணுகி—மகிழ்ச்சியுடன் நெருங்கி, பாங்கர் நண்ணினர்—பக்கத்திற் சேர்ந்தார்கள், முனிவரும்—முனிவர்களும், தேவர்கள் பலரும்—பல தேவர் களும், நீங்கல் இன்றி—பிரியாது, நெறியால் அவர் புடை சூழ்ந்தனர்—முறைப்படி அவரது பக்கத்திற் சூழ்ந்தார்கள் எ—று.

ஆல்-ஒடுவுருபின் பொருளில் வந்தது. வீரர்க்குப் புறத்தே திருமால் முத லிய தேவர்களும் தேவர்க்குப் புறத்தே முனிவருஞ் சூழ்ந்து சென்றனரென முதனூல் கூறிய கருத்தையுள்ளிட்டு 'நெறியால்-சூழ்ந்தனர்' என்றார். (4)

இனந்த ஞேடவர் முருகனை அடைதலும் இருநீர்
புனைந்த சென்னியன் கயிலையில் இருந்தவெம் பூதர்
அனந்த வெள்ளத்கில் இராயிர மாகும்வெள் ளத்தர்
வனைந்த வார்கழற் றலைவர்தம் முரைகொடு வந்தார்.

இ—ள்: அவர் இனந்தஞேடு முருகனை அடைதலும்—அவர்களெல்லாங் கூட்டமாகக் குமாரக்கடவுளைச் சூழ்தலும், இரு நீர் புனைந்த சென்னியன் கயிலையில் இருந்த வெம் பூதர் அனந்த வெள்ளத்தில்—பெரிய கங்கை நதியை யணிந்த திருமுடியையுடைய சிவபிரானது திருக்கைலாச மலையிலிருந்த கொடிய அனேக வெள்ளம் பூதர்களுள், இராயிரம் ஆகும் வெள்ளத்தர்—இரண்டாயிர வெள்ளமென்னுந் தொகையினர், வனைந்த வார் கழல் தலைவர் தம் உரை கொடு வந்தார்—நீண்ட வீரக்கழலை யணிந்த சேனுதிபர்களது சொற்படி எழுந்து வந்தார்கள் எ—று.

வார்கழல் வனைந்த தலைவரெனற்பாலது வனைந்த வார்கழற்றலைவர் என வட சொன்னடையாய் வைக்கப்பட்டது. (5)

எழுவி யன்கதை நேமிவெஞ் சூலம்வாள் எறிவேல்
மழுமு தற்படை யாவையும் ஏந்திய வலியோர்
நிழன்ம திப்பிறை ஞெலிந்தென நிலாவுமிழ் எயிற்றர்
அழலு குத்திடும் விழியினர் அசனியின் அறைவார்

இ—ள்: எழு வியன் கதை நேமி வெம் சூலம் வாள் எறி வேல் மழு முதல் படை யாவையும் ஏந்திய வலியோர்—(அப்பூதர்கள்) எழுவும் பெரிய தண்டும் சக்கரமும் கொடிய சூலமும் வாளும் எறியீட்டியும் மழுவும் முதலாகிய படைக்கலங்களெல்லாவற்றையுந் தாங்கிய வீரர்கள், நிழல் மதி பிறை ஞெலிந்து என நிலா உமிழ் எயிற்றர்—சாயையினையுடைய இளம் பிறையைக் கடைந்து வைத்தாற்போல ஒளி வீசுகின்ற வக்கிர தந்தங்களையுடையவர்கள், அழல் உகுத்திடும் விழியினர்—அக்கினிப் பொறியைச் சிதறுகின்ற கண்களையுடையவர்கள், அசனியின் அறைவார்—இடியைப் போலப் பேசுகின்றவர்கள் எ—று.

நிழல் குளிர்ச்சியெனினுமாம். (6)

நெடியர் சிந்தினர் குறியினர் ஐம்பெரு நிறனும்
வடிவில் வீற்றுவீற் றெய்தினர் வார்சடைக் கற்றை
முடியர் குஞ்சியர் பலவத னத்தரோர் முகத்தர்
கொடிய ரென்னினும் அடைந்தவர்க் கருள்புரி குணத்தோர்.

இ—ள்: நெடியர்—சிலர் மிக நீண்ட வடிவத்தையுடையவர்கள், சிந்தினர்—சிலர் மிகக் குறிய வடிவத்தையுடையவர்கள், குறியினர்—சிலர் சமரூபத்தையுடையவர்கள், ஐம் பெரு நிறனும் வடிவில் வீற்று வீற்று எய்தினர்—ஐவகையினவாகிய சிறந்த நிறங்களெல்லாவற்றையும் சரீரத்தில் வெவ்வேறுகப் பொருந்தப் பெற்றவர்கள், வார் சடை கற்றை முடியர்—சிலர் நீண்ட சடைக் கற்றையாகிய முடியையுடையவர்கள், குஞ்சியர்—சிலர் குடுமியையுடையவர்கள், பல வதனத்தர்—சிலர் பல முகங்களையுடையவர்கள், ஓர் முகத்தர்—சிலர் ஒரு முகத்தையுடையவர்கள், கொடியர் என்னினும் அடைந்தவர்க்கு

அருள் புரி குணத்தோர்—கொடுந் தன்மையையுடையர்களாயினுந் தம்மைச் சரணடைந்தவர்களுக்கு அனுக்கிரகஞ் செய்கின்ற குணத்தையுடையவர்கள் எ—று.

குறியினர்-பல்வகையான அடையாளங்களையுடையவர்கள் எனினுமாம். ஐம்பெரு நிறமாவன:— வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை என்பன. முடி-முடிக்கபப்டுவது. (7)

நீறு கண்டிகை புனைதரும் யாக்கையர் நெடுநஞ்
சேறு கண்டனை அன்றிமற் றெவரையும் எண்ணார்
மாறு கொண்டவர் உயிர்ப்பலி நுங்குவோர் மறலி
வீறு கொண்டதொல் படைதனைப் படுத்திடு மேலோர்.

இ—ள்: நீறு கண்டிகை புனை தரும் யாக்கையர்—விபூதியையும் உருத்திராக்கத்தையுமணிந்த சரீரத்தையுடையவர்கள், நெடு நஞ்சு ஏறு கண்டனை அன்றி மற்று எவரையும் எண்ணார்—பெரிய ஆலகாலம் பொருந்திய திருமிடற்றையுடைய சிவபிரானையே யன்றிப் பிறரெவரையும் மதியாதவர்கள், மாறு கொண்டவர் உயிர் பலி நுங்குவோர்—எதிர்த்த பகைவரது உயிரைப் பலியாக உண்ணுகின்றவர்கள், மறலி வீறு கொண்ட தொல் படைதனை படுத்திடும் மேலோர்—யமனது மேன்மை பொருந்திய பழைய சேனைகளையழித்த மேன்மையுடையவர்கள் எ—று,

தேகம் (எலும்பு நரம்பு முதலிய எழுவகைத் தாதுக்களால்) யாக்கப்பட்டமையால் யாக்கையெனப் பெயர் பெற்றது. யா-பகுதி, கை தொழிற் பெயர் விகுதி, தொழிலாகு பெயர். ஐ-செயப்படு பொருள் விகுதியெனக் கொண்டால் கு-சாரியை. யமன் படையைப் படுத்தது சிவபிரான் யமனையுதைத்தபொழுதென்க. (8)

அண்டம் யாவையும் ஆண்டுறை உயிர்த்தொகை யனைத்தும்
உண்டு மிழ்ந்திட வல்லவர் அன்றியும் உதரச்
சண்ட அங்கியா லடுபவர் அட்டவை தம்மைப்
பண்டு போற்சிவன் அருளினல் வல்லையிற் படைப்போர்.

இ—ள்: அண்டம் யாவையும் ஆண்டு உறை உயிர் தொகை அனைத்தும் உண்டு உமிழ்ந்திட வல்லவர்—அண்டங்களெல்லாவற்றையும் அவ்வண்டங்களில் வசிக்கின்ற உயிர்க் கூட்டங்களெல்லாவற்றையும் ஒருங்கே தின்று பின்பு உமிழவல்லவர்கள், அன்றியும்—அல்லாமலும், உதர சண்ட அங்கியால் அடுபவர்—வயிற்றிலுள்ள கொடிய பசித் தீயினல் அவற்றைச் சீரணமாக்கவல்லவர்கள், அட்டவை தம்மை—அவ்வாறு அழிக்கப்பட்டவைகளை, சிவன் அருளினல் பண்டு போல் வல்லையில் படைப்போர்—சிவபிரானது அனுக்கிரகத்தினல் முன்போல விரைவிற் படைக்கவும் வல்லவர்கள் எ—று. (9)

முன்னை வைகலின் இறந்திடும் இந்திரன் முதலோர்
சென்னி மாலைகந் தரத்தினில் உரத்தினில் சிரத்தில்
கன்ன மீதினில் கரத்தினில் மருங்கினில் கழலில்
பொன்னின் மாமணிக் கலனெடும் விரவினர் புனைவார்.

இ—ள்: முன்னை வைகலின் இறந்திடும் இந்திரன் முதலோர் சென்னி மாலை—முற்காலத்திலிறந்த இந்திரன் முதலிய தேவர்களது தலை மாலைகளை. கந்தரத்தினில்—கழுத்திலும், உரத்தினில்—மார்பிலும், சிரத்தில் — தலையிலும். கன்னம் மீதினில்—காதுகளிலும், கரத்தினில்—கைகளிலும், மருங்கினில் — அரையிலும், கழலில்—கால்களிலும், பொன்னின் மா மணி கலனெடும் விரவினர் புனைவார்—பொன்னுலாகிய சிறந்த இரத்தினுபரணங்களுடன் கலந்து தரிப்பவர்கள் எ—று.

இப் பூதர்கள் இந்திரன் முதலிய தேவர்களினும் நீண்ட வாணுளுடையரென்பது இச் செய்யுளாற் பெறப்பட்டது. (10)

இந்த வண்ணமாஞ் சாரதப் படையினர் ஈண்டித்
தந்தம் வெஞ்சமர்த் தலைவர்க ளோடுசண் முகன்பால்
வந்து கைதொழு தேத்தியே இறுதி சேர்வைகல்
அந்த மில்புனல் அண்டம துடைந்தென ஆர்த்தார்.

இ—ள்: இந்த வண்ணம் ஆம் சாரத படையினர் ஈண்டி— இவ்வியல்பினையுடைய பூதசேனு வீரர்கள் நெருங்கி, தம் தம் வெம் சமர் தலைவர்களோடு— தங்கள் தங்களுக்குரிய கொடிய போரில் வல்ல அதிபர்களுடன், சண்முகன் பால் வந்து—ஆறுமுகப் பெருமானது பக்கத்தில் வந்து, கைதொழுது ஏத்தி— கைகுவித்துத் துதித்து, இறுதி சேர் வைகல் அந்தம் இல் அண்டமது உடைந்து என ஆர்த்தார்—ஊழிக் காலத்தில் அளவிறந்த அப்புவண்ட முடைந்தாற் போல (பேரொலியுண்டாக) ஆரவாரித்தார்கள் எ—று. (11)

ஆர்த்த சாரதர் எந்தைபா லாயினர் அதுகால்
பேர்த்தும் ஆயவர் இடித்தெனப் பூதரில் பெரியோர்
வார்த்த யங்கிய தண்ணுமை திமிலைவான் படகஞ்
சீர்த்த காகள முதலிய இயம்பினர் சிலரே.

இ—ள்: ஆர்த்த சாரதர் எந்தை பால் ஆயினர்—அவ்வாறு ஆரவாரித்த பூதர்கள் எம் பரமபிதாவாகிய குமாரக்கடவுளது பக்கத்திற் சூழ்ந்தார்கள், அதுகால்—அப்பொழுது, ஆயவர் பேர்த்தும் இடித்து என—அப் பூதர்கள் பின்னரும் முழங்கினுற்போல, பூதரில் பெரியோர் சிலர் — பூதர்களுட் சிறந்தவர்கள் சிலர், வார் தயங்கிய தண்ணுமை—வாருடன் விளங்குகின்ற மத்தளமும், திமிலை—திமிலையும், வான் படகம்—பெரிய படகமும், சீர்த்த காகளம் முதலிய இயம்பினர்—சிறந்த காகள முதலாகிய வாத்தியங்களையியம்பினுர்சள் எ—று.

காகளம் ஊதுவதும் ஏனையன முழக்குவனவுமாதலின் இயம்பினரெனப் பொது வினை கொடுத்து முடித்தார். வார்த் தயங்கிய என்பதில் தகரவொற்றுத் தொடை நோக்கி வந்த விரித்தல் விகாரம். 'ஆயவரிடித்தென-இயம்பினர்' என்றதனுல் வாத்தியவோசையும் பேரொலியாயிற்றென்பது போதரும். (12)

ஆன காலையில் அதுதெரிந் தறுமுகத் தொருவன்
வான ளாவிய புணரிகள் சூழ்ந்திட வயங்கும்
பானு நாயகன் வந்தெனப் பரந்துபா ரிடத்துச்
சேனை சூழ்தரக் கயிலைநீத் தவனிமேற் சென்ருன்.

**இ—ள்:** ஆன காலேயில்—அப்பொழுது, அறுமுகத்து ஒருவன்—ஆறு திருமுகங்களேயுடைய ஒப்பற்ற முருகக்கடவுள், அது தெரிந்து—அதனைப் பார்த்து, வயங்கும் பானு நாயகன்—விளங்குகின்ற சூரியபகவான், வான் அளாவிய புணரிகள் சூழ்ந்திட வந்து என — ஆகாயத்தையளாவியெழுந்த சமுத்திரங்கள் சூழ வந்தாற்போல, பாரிடத்து சேனை பரந்து சூழ்தர—பூதசேனைகள் பரம்பிச் சூழ, கயிலை நீத்து அவனி மேல் சென்றான் — திருக்கைலாசகிரியை நீங்கிப் பூவுலகத்தில் வந்தருளினர் எ—று.

பேரொலியுடைமையானும் மிகுதியானும் சேனை கடல் போன்றது. சிவந்த நிறமுடைமையால் முருகக்கடவுள் சூரியன் போன்றனரென்க. ஆகாயமார்க்கமாகச் செல்லுதற்கேற்ப 'வானளாவிய புணரி' என்றார். (13)

கொள்ளை வெஞ்சினச் சாரதர் இராயிரங் குணித்த
வெள்ளம் வந்திடக் கந்தவேள் அவனிமேல் மேவக்
கள்ள வான்படை அவுணர்கள் கலந்துசூழ்ந் தென்னப்
பொள்ளெ னத்துகள் எழுந்தது வளைந்தது புவியை.

**இ—ள்:** கொள்ளை வெம் சின சாரதர் இராயிரம் குணித்த வெள்ளம் வந்திட—மிகுந்த கொடிய கோபத்தையுடைய இரண்டாயிர் வெள்ளம் பூதர்கள் உடன் வர, கந்தவேள் அவனி மேல் மேவ—முருகக்கடவுள் பூவுலகத்திற் செல்ல, கள்ள வான் படை அவுணர்கள் கலந்து சூழ்ந்து என்ன—வஞ்சகத்தையுடைய பெரிய அசுர சேனைகள் எங்கும் விரவிச் சூழ்ந்தாற்போல, துகள் பொள் என எழுந்தது—தூளி விரைவாகக் கிளம்பி, புவியை வளைந்தது — பூமியைச் சூழ்ந்தது எ—று.

இராயிரங் குணித்த வெள்ளம்—இரண்டாயிரமென்று கணக்கிடப்பட்ட வெள்ளம். எழுந்தது—முற்றெச்சம். (14)

எழுத ருந்துகள் மாதிர வரைப்பெலாம் ஏகி
ஒழியும் வான்பதஞ் சென்றதால் ஆங்கவை யுறுதல்
குழுவின் மல்கிய சாரதர் ஆர்ப்புமுன் குறுகி
மொழிதல் போன்றன விண்ணுளோர் இமைப்பில்கண் மூட.

**இ—ள்:** எழுதரும் துகள்—மேற்கிளம்பிய தூளி, மாதிர வரைப்பு எலாம் ஏகி—திக்கினெல்லேகளெங்குஞ் சென்று, ஒழியும் வான்பதம் சென்றது—எஞ்சிய தேவருலகத்துஞ் சென்றது, குழுவில் மல்கிய சாரதர் ஆர்ப்பு—கூட்டமாகப் பொருந்திய பூதர்களது ஒலிகள், முன் குறுகி—அத்துளிகளின் முன்சென்று, விண் உளோர் இமைப்பு இல்கண் மூட—தேவர்கள் இமைத்தலில்லாத கண்களை மூடுமாறு, அவை உறுதல் மொழிதல் போன்றன—அப்பூழியின் வருகையைச் சொல்வன போன்றன எ—று.

எச்சவும்மை தொக்கது. பூதர் பேரொலி செய்தனரென்பதும் கண்ணிமையாத தேவர்களும் அது கேட்ட அச்சத்தாற் கண்ணிமைத்தனரென்பதும் பிற்கூற்றின் கருத்து. (15)

கழிய டைத்திடு நேமிகள் பலவொடு ககன
வழிய டைத்திடு பூழியும் ஒலியும்மன் னுயிர்கள்
விழிய டைத்தன நாசியை யடைத்தன விளம்பு
மொழிய டைத்தன அடைத்தன கேள்வியின் மூலம்.

இ—ள்: கழி அடைத்திடு நேமிகள் பலவொடு ககன வழி அடைத்திடு பூழியும் ஒலியும்—கழி நிலங்களாற் சூழப் பெற்றிருக்கின்ற சமுத்திரங்கள் பல வற்றையும் ஆகாய மார்க்கத்தையும் அடைத்த தூளியும் ஓசையும், மன் உயிர்கள் விழி அடைத்தன—(உலகத்திற்) பொருந்திய பிராணிகளது கண்களை யடைத்தன, நாசியை அடைத்தன—மூக்கையுமடைத்தன, விளம்பும் மொழி அடைத்தன—பேசுகின்ற பேச்சையும் அடைத்தன, கேள்வியின் மூலம் அடைத்தன—செவித் துவாரங்களையுமடைத்தன எ—று.

தூளி கடலையும் ஆகாய மார்க்கத்தையும் நாசியையும் காதையும் மூடிச் செறிந்தது கண்ணை மூடச் செய்தது, வாயைப் பேசாமற் றடுத்தது, எனவும், ஒலி கடலொலியையும் வாய்ப் பேச்சையும் அடக்கிற்று, ஆகாயத்தினும் நாசியினும் நிரம்பிற்று. கண்ணைப் பயத்தினல் மூடுவித்தது காதைச் செவிடுபடுத்திற்று எனவும் ஏற்றவாறுரைத்துக் கொள்க. தூளியும் ஒலியும் எங்கும் பரந்தனவென்பது தாற்பரியம். (16)

பேரி டங்களாந் தனுவுடைப் பூதர்கள் பெயரப்
பாரி டங்கள்தாம் இடம்பெறு ஆதலிற் பல்லோர்
காரி டங்கொளும் வான்வழிச் சென்றனர் கண்டோர்
ஓரி டங்களும் வெள்ளிடை இலதென வுரைப்ப.

இ—ள்: பேர் இடங்கள் ஆம் தனு உடை பூதர்கள் பெயர—மிக்க விசாலமான சரீரத்தையுடைய பூதர்கள் செல்லுதற்கு, பார் இடங்கள் தாம் இடம் பெறு ஆதலில்—பூவுலகம் விசாலம் போதாமையால், பல்லோர்—பல பூதர்கள், ஓர் இடங்களும் வெள் இடை இலது என கண்டோர் உரைப்ப—ஓரிடத்திலும் வெற்றிடமில்லையென்று கண்டோர் சொல்லுமாறு, கார் இடம் கொளும் வான் வழி சென்றனர்—மேகங்கள் சஞ்சரிக்கின்ற ஆகாயமார்க்கமாகவுஞ் சென்றூர்கள் எ—று. (17)

அவனி வானெலாம் பூழியால் மறைத்தலும் அதனைச்
சிவன்ம கன்றன தொளியிஞல் அகற்றினன் செல்வான்
கவன வாம்பரி இரதமேற் பனிபடுங் காலைத்
தவன நாயகன் அதுதடிந் தேகுதன் மையைப் போல்.

இ—ள்: அவனி வான் எலாம் பூழியால் மறைத்தலும்—மண்ணுலகம் விண்ணுலக முழுவதையுந் தூளியால் மறைக்க, சிவன் மகன் தனது ஒளியினல் அதனை அகற்றினன் செல்வான்—சிவபிரானது குமாரராகிய முருகக்கடவுள் தமது திருமேனிப் பிரகாசத்தால் அம் மறைப்பை நீக்கிப் போவார், கவன வாம் பரி—இரத மேல் பனி படும் காலை—வேகம் பொருந்திய தாவிச் செல்லுகின்ற குதிரை பூண்ட தனது தேரின்மேற் பனித்திவலைகள் படும்பொழுது, தவன நாயகன் அது தடிந்து ஏகு தன்மையை போல்—சூரியபகவான் அதனை விலக்கிச் செல்லுமியல்பைப் போல எ—று.

தன்மையைப்போல்—செல்வான் என இயையும். தவனன்—தபனன் என்பதன் விகாரம். பனிப்படலத்தாற் சூரியன் மறைக்கப்படாமைபோல முருகவேள் தூளிப்படலத்தான் மறைக்கப்படாது சென்றூரென்பது கருத்து. (18)

படையெழுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 1328.

# 20. தாரகன் வதைப்படலம்

முருகக்கடவுள் தாரகாசுரனைக் கொன்ற சரித்திரத்தைக் கூறுதலின் இப்பெயர்த்தாயிற்று.

## இப்படலப்பொழிப்பு.

முருகக்கடவுள் கிரவுஞ்சமலையையணுகி வீரவாகுவை நோக்கி 'ஆயிர வெள்ளமென்னுந் தொகையமைந்த பூதர்களும் அவர்க்குரிய தலைவர்களும் இலக்கத் தெண்மரும் உடன்வரப்போய் இம் மலையில் மாயாபுரியிலுள்ள அசுரரோடு போரியற்றுதி' என்று அருளிச் செய்து அவர்களுக்கு வேண்டிய தேர்களைத் தேவத்தச்சனுலியற்றுவித்துதவ வீரவாகுதேவர் அவ்வாறே அவர் களுடன் சென்று மாயமாபுரியை வளைந்தனர். தாரகாசுரனும் சேனைகளுடன் யுத்த சன்னத்தனுய் வந்தெதிர்த்தனன். அப்பொழுது அசுரசேனைகளும் பூத சேனைகளும் எதிர்த்துப்பொர இரு பகுதியினும் பற்பலர் மாண்டனர். அது கண்ட தாரகாசுரன் ஓர் தண்டாயுதத்தைக் கொண்டு தேரினின்றுமிழிந்து பூதர் களையும் பூதசேனுதிபர்களையுந் தாக்கப் பற்பலரிறந்தனர்; எஞ்சினேர் பின் னிட்டனர். பின் இலக்க வீரர்கள் எதிர்த்துப் போரியற்றத் தாரகாசுரன் தன் துதிக்கையினுல் அவர்களை வாரிக் கடலிலெறிந்தனன். அதன்மேல் வீர கேசரியென்பவரெதிர்க்க அவரையும் தண்டத்தாற் புடைத்து வீழ்த்தினன். மேல் வீரவாகுதேவரெதிர்த்துப் பொரத் தாரகன் ஒரு சூலப்படையையேவி அறிவு மயங்கச் செய்தனன். அப்பொழுது அவரது தம்பிமாருட் பொரா தெஞ்சி நின்ற எழுவரும் பொருது தோற்றனர். பின் வீரவாகு தேவரறிவு தெளிந்து பொருதனர். தாரகன் எதிர்நின்று பொருது பற்பல தேவப் படை களைச் செலுத்தியும் இவரை வெல்வதரிதானமையால் அளவிறந்த மாய வடி வங்களைக் கொள்ள வீரவாகுதேவர் வீரபத்திரப் படைக்கலத்தைக் கையி லெடுத்தனர். உடனே அவனது மாயையெல்லாமழிந்தன. அதன்மேல் தார கன் வேறேர் சூழ்ச்சியை நினைத்துத் தேரினின்றுமிறங்கிக் கிரவுஞ்ச மலையி லோடினன். வீரவாகுதேவர் தோற்றேடுபவன்மேற் படையேவுதல் தக்கதன் றென்று வீரபத்திரப் படையைத் தூணியில் வைத்து விட்டு அவனைப் பற்று மாறு பின்சென்று கிரவுஞ்ச மலையில் தாரகனுட் சென்ற வாயிலாற் புகுந்து மீண்டு வருதற்கியலாதவராய் அம் மலையின் மாயையினுல் மயங்கினர். நெடு நேரங் கழிந்தும் அவர் மீளாமையால் அவர் தம்பியராகிய இலக்கத்தெண் மரும் பூத வீரர்களும் அவரைத் தேடிப்போய் அவர் போலவே மயங்கினர். தாரகாசுரன் அவர்களெல்லோருமிறந்தனரென்று துணிந்து வெளியே வந்து, தேரிலேறி அங்கு நின்ற பூதர்மேற் பாணங்களையேவினன். அப்பொழுது நாரதமுனிவர் முருகக்கடவுளின் முன் சென்று இந் நிகழ்ச்சியை யறிவிக்க அவர் விரைந்து தேரைச் செலுத்துவித்துத் தாரகனிற்கும் போர்க்களத்தை யணுகினர். அப்பொழுது பூதசேனைகளுடன் அசுரசேனை யுத்தஞ் செய்து தோற்க, தாரகன் பாணங்களைச் செலுத்திப் பூதர்களையடர்த்துக் குமாரக் கடவுளுக்கெதிரே சென்று சிறிது நேரம் போர் செய்து துதிக்கையுங் கோடும் வெட்டுப்பட்டுப் பின் அவரேவிய பாணங்கள் நெற்றியிலழுந்துதலால் மயங்கி விழுந்தனன். அப்பொழுது அவனைச் சூழ்ந்து நின்ற அசுரர்கள் பொருது

அழிந்தனர். பின்பு தாரகாசுரன் மயக்கந் தீர்ந்து பல தேவப்படைகளைச் செலுத்தினன். அவை குமாரக்கடவுளுக்கு ஊறு செய்யாது அவரைத் துதித்துப் பக்கத்தினின்றன. பின் சிவப்படைக்கலத்தைச் செலுத்தினன். குமாரக்கடவுள் அப் படைக்கலத்தைத் தமது கையாற் பற்றினார். அதன் மேல் தாரகன் இவனை இனி மாயத்தாலன்றி வெல்வதரிதென்று கிரவுஞ்ச மலையுந் தானுமாகப் பற்பல மாயைகளைச் செய்யக் குமாரக்கடவுள் வேற்படையையேவித் தாரகனைக் கொன்று கிரவுஞ்ச மலையைப் பிளந்து வீரர்களையும் மீட்டுத் தாம் பற்றிய சிவப்படைக்கலத்தை வீரவாகு தேவர்க்குக் கொடுத்து இறந்த பூதர்களையெழுப்பிக் கொண்டு போர்க்களத்தை நீங்கி அப்பாற் சென்றார் என்பதாம்.

வெம்மை தீர்ந்திடும் அப்பெரு நெறியிடை விரைந்து
செம்மை சேர்தரு குமரவேள் படையொடு செல்ல
அம்ம சேர்ந்தது தாரகற் குறையுளாய் அடைந்தோர்
தம்மை வாட்டியே அமர்கிர வுஞ்சமாஞ் சைலம்.

**இ—ள்;** செம்மை சேர் தரு குமரவேள்—செந்நிறம் பொருந்திய குமாரக்கடவுள், வெம்மை தீர்ந்திடும் அ பெரும் நெறி இடை—தீமையில்லாத அந்தப் பெரிய வழியில், படையொடு விரைந்து செல்ல—சேனைகளுடன் விரைவிற் செல்லும் பொழுது அடைந்தோர் தம்மை வாட்டி தாரகற்கு உறையுள் ஆய் அமர் கிரவுஞ்சம் ஆம் சயிலம்—தன்னிடத்து வந்தவர்களை வருத்திக்கொண்டு தாரகாசுரனுக்கிருப்பிடமாயிருக்கின்ற கிரவுஞ்ச மலையானது, சேர்ந்தது—அணுகிற்று எ—று.

வெம்மை வெப்பமுமாம்; செம்மை நற்குணமுமாம். அப்பெருநெறி திருக்கைலாசகிரியினின்றும் பூவுலகத்தில் தென்கடலிலுள்ள மகேந்திரபுரியை நோக்கிச் செல்லும் நீண்டவழி. அம்ம-உரையசை. சேர்ந்தது-சேர்தற்குரியதல்லாத தன் மேற் சேர்தலையேற்றிச் சொன்ன மரபு வழுவமைதி. (1)

விண்டு லாய்நிமிர் கிரவுஞ்ச கிரியினை விண்ணோர்
கண்டு ளம்பதை பதைத்தனர் மகபதி கலக்கங்
கொண்டு நின்றனன் நாரதன் அணுகியே குமரன்
புண்டரீகநேர் பதந்தொழு தின்னன புகல்வான்.

**இ—ள்:** விண்டு உலாய் நிமிர் கிரவுஞ்சகிரியினை—ஆகாயத்தையளாவியுயர்ந்த கிரவுஞ்சமலையை, விண்ணோர் கண்டு உளம் பதைபதைத்தனர்—தேவர்கள் பார்த்து மனம் நடுநடுங்கப் பெற்றார்கள், மகபதி கலக்கம் கொண்டு நின்றனன்—இந்திரன் மனக்கலக்கமுற்று நின்றான், நாரதன் அணுகி—அப்பொழுது நாரதமுனிவர் சமீபித்து, குமரன் புண்டரீகம் நேர் பதம் தொழுது இன்னன புகல்வான்—குமாரக்கடவுளது தாமரை மலர் போலுந் திருவடிகளை வணங்கி இவற்றைக் கூறுவார் எ—று.

பதைபதைத்தல்-இரட்டைக்கிளவி. (2)

தூய நான்மறை அந்தணர் முனிவர்இச் சுரத்திற்
போயபு வெல்லையின் நெறியதாய் வரவரப் புணர்த்து
மாய்வு செய்துபின் குறுமுனி சூளின்இவ் வடிவாய்
ஏய தொல்பெயர்க் கிரவுஞ்ச மால்வரை இதுகாண்.

இ—ள்: தூய் நால் மறை அந்தணர் முனிவர் இ சுரத்தில் போய எல்லேயில்—பரிசுத்தமாகிய நான்கு வேதங்களேயுமறிந்த பிராமணர்களும் முனிவர்களும் இந்த அருநெறியில் வந்தபொழுது, நெறியது ஆய் வர வர புணர்த்து—வழிகளாகத் தோன்றி அவ்வழியில் அவர்கள் வருந்தோறும் மாயம் புரிந்து, மாய்வு செய்து—அழிவு செய்து, பின்—சில காலங்களின் பின், குறுமுனி சூளின் இ வடிவு ஆய் ஏய—அகத்திய முனிவரது சாபத்தினுல் இந்த மலேயுருவாயமைந்த, தொல் கிரவுஞ்ச பெயர் மால்வரை இது—பழைய கிரவுஞ்சமென்னும் பெயர் பெற்ற பெரியமலே இதுவேயாம், காண்—கண்டருள்க எ—று.

காண் முன்னிலேயசையுமாம். கிரவுஞ்சனென்னுமசுரன் மாயையால் ஒரு மலே வடிவு கொண்டு முனிவர் முதலியவர்களங்கு வரும்போது வழிகளேக் காண்பித்து அவ்வழியாலவர்கள் உட்புகுந்தவுடன் வழியில்லாதபடி செய்து அவர்களே வருத்தி வந்தான். அங்ஙனஞ் செய்து வருங்காலத்தில் விந்தமலேயின் செருக்கையொழிக்கும் பொருட்டு அகத்தியமுனிவர் மேருமலேயினின்று தென்றிசை நோக்கிவர, அவன் அவரையும் வஞ்சிக்கத் தொடங்கினன். அவர் தமது கையிலுள்ள பிரம தண்டத்தாற் குத்திப் பல துவாரங்களேச் செய்து 'நீ மலேவடிவத்தோடு அசுரர்க்கிருப்பிடமாய்ப் பல காலமிருந்து தேவர் முனிவர் முதலாயினேர்க்குத் தீங்குசெய்து பின் சுப்பிரமணியக்கடவுளது வேற்படையாலழிவாய்' என்று சபிக்க, அச்சாபப்படியே அவ்வசுரன் மலேயாயிருந்தனன். இதன் விரிவை மேல் அசுரகாண்டத்திற் கிரவுஞ்சப் படலத்திற் காண்க. அருநெறியாவது காடு மலே முதலியவற்றையுடையதாய்ச் சஞ்சரித்தற்கியலாமலிருக்கும் மார்க்கம். (3)

நேரில் இக்கிரிக் கொருபுடை மாயநீள் நகரில்
சூரெ னப்படும் அவுணனுக் கிளவலாந் துணேவன்
போரில் அச்சுதன் நேமியை அணியதாப் புனேந்தோன்
தார கப்பெயர் வெய்யவன் வைகினன் சயத்தால்.

இ—ள்: நேர் இல் இ கிரிக்கு ஒரு புடை—ஒப்பில்லாத இந்த மலேயின் ஒரு பக்கத்திலுள்ள, மாய நீள் நகரில்—நீண்ட மாயமாபுரியில், சூர் என படும் அவுணனுக்கு இளவல் ஆம் துணேவன்—சூரபன்மனென்னுமசுரனுக்கு இளேய சகோதரனும், போரில் அச்சுதன் நேமியை அணியது ஆ புனேந்தோன்—யுத்தத்தில் திருமாலின் சக்கரப் படையைத் தனக்கு ஆபரணமாகத் தரித்தவனுமாகிய, தாரக பெயர் வெய்யவன்—தாரகனென்னும் பெயரையுடைய கொடிய அசுரன், சயத்தால் வைகினன்—வெற்றியோடு தங்கியுள்ளான் எ—று.

சயத்தால் என்பதில் ஆல் ஒடுப்பொருளில் வந்தது. சூரபன்மன் தம்பியரோடு சென்று திக்கு விசயஞ் செய்த நாளில் திருமால் தாரகனுடனெதிர்த்துப் போர் செய்து சக்கராயுதத்தையேவ, அது அவனது கழுத்திற் சேர்ந்து அவனேயழிக்க வலியின்றி ஆபரணம் போலத் தங்கிற்று. இச் சரித்திரத்தை மேல் அசுரகாண்டத்தில் திக்கு விசயப்படலத்திற் காண்க. (4)

இன்ன வன்றனே அடுதியேல் எளிதுகாண் இனேயோன்
முன்ன வன்றனே வென்றிட லெனமுனி மொழிய
மின்னு தண்சுடர் வேலவன் அவற்றினே வினவி
அன்ன வன்றனே முடிக்குதும் இவணெனு அறைந்தான்.

இ—ள்: இன்னவன் தனை அடுதியேல்—இத் தாரகாசுரனை அழிப்பீரே யானால், இனையோன் முன்னவன் தனை வென்றிடல் எளிது காண்—இவனது தமையனாகிய சூரபன்மனை வெற்றிகொள்ளுதல் இலகுவாம், என முனி மொழிய—என்று நாரதமுனிவர் கூற, மின்னு தண் சுடர் வேலவன்—விளங்கு கின்ற குளிர்ந்த ஒளியினையுடைய வேலாயுதத்தையேந்திய முருகக்கடவுள், அவற்றினை வினவி—அவ் வாசகங்களைக் கேட்டு, அன்னவன் தனை இவண் முடிக் குதும் என அறைந்தான்—அவ்வசுரனை இவ்விடத்து அழிப்போமென்று சொல்லியருளினார் எ—று. (5)

## வேறு

சிறந்திடு முருகவேள் இனைய செப்பலும்
நிறைந்திடும் அமரரும் இறையும் நெஞ்சினில்
உறைந்திடு கவலொரீஇ உவகை எய்தினார்
இறந்தனன் தாரகன் இன்றேடேயென.

இ—ள்: சிறந்திடும் முருகவேள் இனைய செப்பலும்—எவரினும் மேம்பட்ட குமாரக்கடவுள் இச் சொற்களைக் கூறியவளவில், நிறைந்திடும் அமரரும் இறையும்—நிறைந்த தேவர்களும் அரசனாகிய இந்திரனும், நெஞ்சினில் உறைந் திடு கவல் ஒரீஇ—மனத்திற் பொருந்திய கவலையை நீங்கி, தாரகன் இன் றேடே இறந்தனன் என உவ்கை எய்தினார்—தாரகாசுரன் இற்றைத் தினத் திறந்தானென்று கூறி மகிழ்ச்சியடைந்தார்கள் எ—று.

கவல்-முதனிலைத் தொழிற்பெயர். ஒரீஇ—ஒருவி என்பதன் விகாரம். இறந்தனன்—விரைவுந் தெளிவும் பற்றிய காலவழுவமைதி. இன்றேடே என் பதில் மூன்றனுருபு இடப்பொருளில் வந்ததனால் உருபுமயக்கம். (6)

ஐயர்கள் பெருமகிழ் வடைய ஆறிரு
கையுடை முருகன்அக் காலை தன்புடை
மெய்யருள் எய்திய வீர வாகுவாந்
துய்யனை நோக்கியே இனைய சொல்லுவான்·

இ—ள்: ஐயர்கள் பெரு மகிழ்வு அடைய—தேவர்கள் மிக்க மகிழ்ச்சியை யடைய, ஆறு இரு கை உடை முருகன்—பன்னிரண்டு திருக்கரங்களையுடைய முருகக்கடவுள், அ காலை—அப்பொழுது, தன் புடை—தம் பக்கத்திலுள்ள, மெய் அருள் எய்திய வீரவாகு ஆம் துய்யனை நோக்கி—உண்மையான கருணை யைப் பெற்ற வீரவாகுவென்னும் பெயரையுடைய பரிசுத்தரைப் பார்த்து, இனைய சொல்லுவான்—இவ் வார்த்தைகளைக் கூறியருளுவார் எ—று.

மெய்யருளெய்திய என்பதற்கு ஆன்மாக்களிடத்து உண்மையாகிய கரு ணையை வைத்துள்ள எனக் கூறினுமாம். வீரவாகுவாந் துய்யன் என்பது துய்யனும் வீரவாகு என மாற்றிக் கொள்ளப்படும். (7)

உற்றவக் கிரிகிர வுஞ்ச மாகுமால்
மற்றத னுருபுடை மாய நொச்சியுட்
செற்றிய அசுரர்தஞ் சேனை தன்னுடன்
அற்றமில் தாரகன் அமர்தல் மேயினான்.

இ—ள்: உற்ற அ கிரி கிரவுஞ்சம் ஆகும்—நேர்பட்டுள்ள அந்தமலை கிர வுஞ்சமென்னும் பெயரையுடைத்தாம், அதன் ஒரு புடை—அம்மலையினொரு பக்கத்தில், மாய நொச்சியுள்—மாயமாபுரியில், செற்றிய அசுரர் தம் சேனை தன் உடன்—நெருங்கிய அசுரசேனைகளுடன், அற்றம் இல் தாரகன் அமர்தல் மேயினன்—சோர்வில்லாத தாரகாசுரன் இருக்கின்றான் எ—று.

மாயநொச்சி-மாயமமைந்த நகர். நொச்சி-மதில்; இலக்கணையாய் நகர்க் காயிற்று. (8)

ஏயநின் துணைவர்கள் இலக்கத் தெண்மர்கள்
ஆயிர வெள்ளமாம் அடல்கொள் பூதர்கள்
சாய்வறு தலைவர்கள் தம்மொ டேகியே
நீயவன் பதியினை வளைத்தி நேரிலாய்

இ—ள்: நேர் இலாய்—ஒப்பில்லாதவனே!, ஏய நின் துணைவர்கள் இலக் கத்து எண்மர்கள் (தம்மொடு)—பொருந்திய உனது தம்பியர்களாகிய இலக் கத்தெட்டு வீரர்களுடனும், ஆயிர வெள்ளம் ஆம் அடல் வெம் பூதர்கள் (தம்மொடு)-ஆயிர வெள்ளமென்னுங் கணக்கமைந்த வலிய கொடிய பூதர் களோடும், சாய்வு அறு தலைவர்கள் தம்மொடு—பின்னிடுதலில்லாத பூதத் தலைவர்களோடும், நீ ஏகி—நீ போய், அவன் பதியினை வளைத்தி—அத்தாரகா சுரனது நகரத்தை வளைப்பாயாக எ—று.

வளைத்தல்-முற்றுகையிடுதல். (9)

தடுத்தெதிர் மலைந்திடும் அவுணர் தானையைப்
படுத்தனை தாரகப் பதகன் எய்துமேல்
அடுத்தமர் இயற்றுதி அரிய தேலியாம்
முடித்திட வருகுதும் முந்துபோ வென்றான்.

இ—ள்: தடுத்து எதிர் மலைந்திடும் அவுணர் தானையை படுத்தனை—தடை செய்து எதிர்த்துப் போர் செய்யும் அசுர சேனைகளையழித்து, தாரக பதகன் எய்துமேல்—தாரகாசுரனாகிய பாதகன் வரின், அடுத்து அமர் இயற்றுதி— நெருங்கி அவனோடும் போர் செய்வாய், முடித்திட அரியதேல் யாம் வருகு தும்—அவனை யழித்தலரிதாயின் யாம் வருவோம், முந்து போ என்றான்—முன் செல்வாயென்று கூறியருளினார் எ—று.

படுத்தனை. முற்றெச்சம். பாதகன் என்பது பதகன் எனக் குறுகிற்று. பாதகம்-தீவினை. அரிய தேலியா முடித்திட வருகுதும் என்றதனால் உன்னால் அவனையழித்தலரிதென்பதுணர்த்தப்பட்டது. (10)

நலமிகு குமரவேள் நவில இன்னணம்
வலமிகு சிறப்புடை வாகு நன்றெனாத்
தலைமிசை கூப்பிய கரத்தன் தாழ்ந்துமுன்
நிலமிசை இறைஞ்சினன் நேர்ந்து நிற்பவே.

இ—ள்: நலம் மிகு குமரவேள் இன்னணம் நவில—நற்குணங்கள் மிகுந்த குமாரக்கடவுள் இவ்வாறு திருவாய் மலர்ந்தருள, வலம் மிகு சிறப்பு உடை வாகு—வீரவாகுதேவர், நன்று எனா—நல்லதென்று கூறித், தலைமிசை கூப்பிய

கரத்தன்—சிரமேற் கூப்பிய கையையுடையவராய், முன்—திருமுன்னிலேயில், நில மிசை தாழ்ந்து இறைஞ்சினன்—பூமியில் விழுந்து வணங்கி, நேர்ந்து நிற்ப—(போர்க்குச் செல்ல) உடன்பட்டு நிற்க எ—று.

நலம்-அழகெனினுமாம். வலமிகு சிறப்புடை வாகு-வீரவாகுவென்னும் பெயர்க்குப் பரியாய நாமமாய் நின்றது. வலிமை மிகுந்த சிறப்பமைந்த புயங் களேயுடையவரென்பது பொருள். வலம்-பலமென்னும் வடசொல்லின்றிரிபு. (11)

ஏந்தலந் துணைவராம் இலக்கத் தெண்மரை
ஆய்ந்திடு பூதரை யாதி நோக்கியே
வாய்ந்திடு பெருந்திறல் வாகு தன்னுடன்
போந்திடும் அவுணரைப் பொரவென் றேவினுன்.

இ—ள்: முதல்வராகிய சுப்பிரமணியக்கடவுள், ஏந்தல் அம் துணைவர் ஆம் இலக்கத்து எண்மரை—உயர்ச்சியையுடைய தம்பியராகிய இலக்கத்தெட்டு வீரர்களேயும், ஆய்ந்திடு பூதரை சிறந்தவராகத் தெரிவு செய்யப்பட்ட பூதர் களேயும், நோக்கி—பார்த்து, அவுணரை பொர—அசுரருடன் போரியற்றுமாறு, வாய்ந்திடு பெரும் திறல் வாகு தன் உடன்—வீரவாகுவினுடன், போந்திடும் என்று ஏவினுன்—போங்களென்று கூறித் தூண்டினுர் எ—று.

பெருந்திறல் வாய்ந்திடுவாகு என்பது வட சொன்னடையாய் வாய்ந்திடு பெருந்திறல்வாகு என நின்றது. பெரிய வலிமை வாய்ந்த புயங்களேயுடைய னென்பது பொருள். (12)

ஏவலும் அனேயவர் யாரும் எம்பிரான்
பூவடி வணங்கியே போதற் குன்னலும்
ஆவியுள் ஆவியாம் அமலன் பாங்குறுந்
தேவர்கள் கம்மியற் கிதனேச் செப்புவான்.

இ—ள்: ஏவலும்—தூண்டுதலும், அனேயவர் யாரும்—அவரனேவரும், எம் பிரான் பூ அடி வணங்கி—எங்கள் கடவுளாகிய குமரவேளது தாமரை மலர் போன்ற திருவடிகளேப் பணிந்து, போதற்கு உன்னலும்—போர்க்குச் செல்ல நினேத்தலும், ஆவியுள் ஆவி ஆம் அமலன்—சீவான்மாக்களுட் பரமான் மாவாக வீற்றிருக்கின்ற குமாரக்கடவுள், பாங்கு உறும் தேவர்கள் கம்மியற்கு இதனே செப்புவான்—தம் பக்கத்தினிற்கின்ற தேவத்தச்சனுக்கு இக் கட்டளே யைக் கூறுவார் எ—று.

உடலினுள் நிற்குமுயிர்க்கு அவ்வுடலின் குணமாகிய கருமை, செம்மை, குறுமை, நெடுமை முதலியன பற்றுமை போல ஆன்மாக்களுட் பரமான் மாவாக நிற்குங் கடவுளுக்கும் உயிரைப் பந்தித்தனவாகிய மல முதலியவை பற்றுவென்பார் 'ஆவியுளாவியாமமலன்' எனவும், குமாரக்கடவுளது கட் டளேயையெதிர்நோக்கி நின்ற கம்மியனென்பார் 'பாங்குறுந் தேவர்கள் கம் மியன்' எனவும் கூறினுர். (13)

மேதகு பெருந்திறல் வீர வாகுவை
ஆதியர் தமக்கெலாம் அளிக்கும் பான்மையால்
ஏதமி லாதபல் லிரதம் நல்கென
ஓதினன் உலகெலாம் உதவுந் தொன்மையோன்.

**இ—ள்:** உலகு எலாம் உதவும் தொன்மையோன்—உலகங்களெல்லா வற்றையும் படைத்த பழையவராகிய குமாரக்கடவுள், மேதகு பெரும் திறல் வீரவாகுவை ஆதியர் தமக்கு எலாம் அளிக்கும் பான்மையால்—சிறந்த பெரு வலியினையுடைய வீரவாகு முதலாயினோர்க்கெல்லாங் கொடுக்கும்படி, ஏதம் இலாத பல் இரதம் நல்கு என ஓதினன்—குற்றமில்லாத பல தேர்களை யமைப்பாயாகவென்று கட்டளையிட்டருளினர் எ—று.

ஏதம்-சிற்ப நூலில் விதிக்கப்படுங் குற்றங்கள். வீரவாகுவையாதியர் தமக்கெலாமளிக்கும் பான்மையால்-நல்கு என்றதனால் அவரவர் தகுதிக்கேற் பப் படைக்குதியென்றாரென்பது பெறப்படும். ஒப்புயர்வற்ற முழுமுதற் கட வுளாகிய சிவபிரானுக்குரிய படைத்தன் முதலாகிய தொழில்களெல்லாம் அவரது குமாரராகிய முருகக்கடவுளுக்கு மேற்குமெனக் கொள்ளுதலின் 'உல கெலாமுதவுந் தொன்மையோன்' என்றார். முன்னர் அயனைச் சிறைபுரி பட லத்திலும் 'விதிமுதலுரைக்குஞ் செயலினுக்கெலாமாதியாய் வைகிய செவ்வேள்' என்றார். அன்றி, பிரமனைச் சிறை செய்த காலத்திற் படைத்தற்றொழிலியற் றுதலின் அங்ஙனங் கூறினரெனினுமாம். உலகமெல்லாவற்றையும் படைத்த கடவுள் வீரர்க்கு வேண்டிய தேரைப் படைப்பது அருமையன்றாகவும் தம் பணி செய்ய நின்ற தேவத்தச்சன் மேல்வைத்த கருணையாலங்ஙனங் கூறின ரென்பது தோன்றவே 'உலகெலாமுதவுந் தொன்மையோன்-ஓதினன்' என் றார். (14)

அத்திறங் கேட்டதோர் அமரர் கம்மியன்
ஒத்ததோர் மாத்திரை ஒடுங்கு முன்னரே
சித்திர வயப்பரி சீயங் கூளிகள்
இத்திறம் பூண்டபல் லிரதம் நல்கினான்.

**இ—ள்:** அ திறம் கேட்டது ஓர் அமரர் கம்மியன்—அக் கட்டளையைக் கேட்ட தேவத்தச்சன், ஒத்தது ஓர் மாத்திரை ஒடுங்கும் முன்னர்—அளவா னொத்த ஒரு மாத்திரைப் பொழுது கழிவதற்குள், சித்திர வய பரி சீயம் கூளிகள் இ திறம் பூண்ட பல் இரதம் நல்கினான்—அழகிய வலிய குதிரைகளும் சிங்கங்களும் பேய்களும் என்னும் இவ்வகைகள் பூட்டப்பட்ட பல தேர்களை அமைத்தான் எ—று.

மாத்திரை கண்ணிமைப்பொழுது. கைந்நொடிப் பொழுதுமாம். வயம்-வெற்றியுமாம். கையாற் செய்து முடிக்காது மனத்தாற் படைத்தனனென் பது தோன்ற 'ஒத்ததோர் மாத்திரை யொடுங்கு முன்னரே-நல்கினான்' என் றார். (15)

**வேறு**

அன்ன தேர்த்தொகை அதனை எம்பிரான்
மின்னு காலவேல் வீர வாகுவும்
பின்னர் எண்மரும் பிறரும் சாரத
மன்ன ரும்பெற வழங்கி னனரோ.

**இ—ள்:** எம் பிரான்—எமது தலைவராகிய முருகக்கடவுள், மின்னு கால வேல் வீரவாகுவும் பின்னர் எண்மரும் பிறரும் சாரத மன்னரும் பெற—ஒளிருகின்ற யமனைப் போன்ற (கொலைத் தொழிலிற் சிறந்த) வேற்படையை

யேந்திய வீரவாகுதேவரும் அவரது தம்பியாரான எட்டு வீரர்களும் மற்றைய (இலக்க) வீரர்களும் பூதத் தலைவர்களும் பெற்றுக்கொள்ளும்படி, அன்ன தேர் தொகை அதனை வழங்கினான்—அந்தத் தேர்க் கூட்டங்களைக் கொடுத்தருளினார் எ—று. (16)

பாகர் தூண்டிடப் படருந் தேர்கள்மேல்
வாகை சேர்தரும் வாகு வேமுதல்
ஆகி னோர்அடைந் தம்பொன் மால்வரைத்
தோகை மைந்தனைத் தொழுது போற்றினார்.

இ—ள்: வாகை சேர்தரும் வாகுவே முதல் ஆகினோர்—வீரவாகு முதலிய வீரர்கள், பாகர் தூண்டிட படரும் தேர்கள் மேல் அடைந்து—சாரதிகள் செலுத்தச் செல்கின்ற தேர்களின் மேலேறி, அம் பொன் மால் வரை தோகை மைந்தனை தொழுது போற்றினார் — செம்பொன்னாலமைந்த பெரிய இமயமலையின் புதல்வியான உமாதேவியாரது குமாரராகிய முருகக்கடவுளைத் தொழுது துதித்தார்கள் எ—று.

இமயமலை பனிப்படலத்தான் மறைக்கப்பட்டு வெண்ணிறமாகத் தோன்றினும் உண்மையிற் பொன்னிறமாதலின் 'அம் பொன்மால்வரை' என்றார். தோகை-ஆகுபெயர். (17)

தொழுது வள்ளலைச் சூழ்ந்து மும்முறை
விழுமி தாகிய விடைபெற் றேகினார்
பழுதில் நீத்தமோர் பத்து நூறெனக்
குழுமிப் பாரிடங் குலவிச் செல்லவே.

இ—ள்: வள்ளலை தொழுது—அவ் வீரர்கள் முருகக்கடவுளைக் கைதொழுது, மும் முறை சூழ்ந்து—மூன்று முறை வலம் வந்து, விழுமிது ஆகிய விடை பெற்று—சிறந்த அனுமதியைப் பெற்று, பாரிடம் பழுது இல் ஓர் பத்து நூறு நீத்தம் என குழுமி குலவி செல்ல—பூதசேனை குற்றமற்ற ஆயிர வெள்ளமென்னுங் கணக்காகக் கூடி ஊக்கங்கொண்டு உடன் செல்ல, ஏகினார்—சென்றார்கள் எ—று.

விழுமிது-விழுமம் என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். (18)

பாய பூதர்தம் படைக்கு வேந்தராய்
ஏயி னார்க்குவீ றிலக்கத் தெண்மராய்
மேயி னார்க்கெலாம் வீர வாகுவோர்
நாய கம்பெறீஇ நடுவட் போயினான்.

இ—ள்: வீரவாகு—வீரவாகுதேவர், பாய பூதர் தம் படைக்கு (எலாம்)—பரந்த பூதசேனைகளெவற்றிற்கும், வேந்தர் ஆய் ஏயினார்க்கு (எலாம்)—அச் சேனைக்குத் தலைவர்களாயுள்ளோரனைவர்க்கும், வீறு இலக்கத்து எண்மர் ஆய் மேயினார்க்கு எலாம்—பெருமை பெற்ற இலக்கத்தெட்டென்னுந் தொகையினராயுள்ள வீரரனைவர்க்கும், ஓர் நாயகம் பெறீஇ—ஒரு தலைவாராந் தன்மையைப் பெற்று, நடுவண் போயினான்—அவர்களுக்கு நடுவே சென்றார் எ—று.

பெறீஇ-பெற்று என்பதன் விகாரம். (19)

அமர்வி ளைக்கமுந் தவனை யேவியே
தமர வேலையில் தானை சூழ்தர
இமைய வர்க்கிறை ஏனை யோர்தொழக்
குமர வேள்கடைக் கூழை யேகினன்.

இ—ள்: குமரவேள்—குமாரக்கடவுள், அமர் விளைக்க முந்து அவனை ஏவி—போரைச் செய்யும்படி முன்னே அவ் வீரவாகுவை அனுப்பி, தமர வேலையில் தானை சூழ்தர—ஒலியையுடைய கடல் போலச் சேனைகள் சூழ்ந்து வரவும், இமையவர்க்கு இறை ஏனையோர் தொழ—தேவர்க்கரசனுகிய இந்திரனும் மற்றைய தேவர்களுங் கைதொழுது வரவும், கடைக்கூழை ஏகினன்—பின்னணியிற் சென்றார் எ—று. (20)

**வேறு**

பிற்பட எம்பிரான் பெயர ஏவலால்
முற்படு வீரனை முயங்கிப் பாரிடச்
சொற்படை படர்வன தூமந் தன்னொடு
சிற்பரன் நகையழல் புரத்துச் சென்றபோல்.

இ—ள்: எம் பிரான் பிற்பட பெயர—எங்கள் தலைவராகிய குமாரக்கடவுள் பின்செல்ல, ஏவலால் முற்படு வீரனை முயங்கி—அவரது கட்டளையினுல் முந்திச் செல்லுகின்ற வீரவாகுதேவரைச் சூழ்ந்து, சொல் பாரிட படை படர்வன—புகழ்பெற்ற பூதசேனைகள் செல்லுவன. சிற்பரன் நகை அழல் தூமம் தன்னொடு புரத்து சென்ற போல்—ஞானரூபராகிய சிவபிரானது புன்சிரிப்பினின்று தோன்றிய அக்கினியானது புகையுடன் முப்புரங்களிற் சென்ற தன்மையைப் போல எ—று.

சென்றபோல்-படர்வன என இயையும். வீரவாகுதேவர் குமாரக்கடவுளாலேவப்பட்டுப் பூதசேனைகள் சூழ முன் செல்லுதல், அக்கினி சிவபிரானது கண்களினின்று தோன்றிப் புகைப்படலஞ் சூழத் திரிபுரத்தையழிக்குமாறு சென்றதுபோலும் என்பது கருத்து. சிவபிரான் செந்நிறமுடையவரும் அசுரரை ஒருங்கேயழிக்கச் சென்றவருமாதலால் முருகக்கடவுளுக்கும், நகைத்தீ அவராற் செலுத்தப்பட்டு முன் சென்றமையானும் பகைவரையடர்த்தலாலும் செந்நிறமுடைமையாலும் வீரவாகுவுக்கும் உவமையாயிற்று. புகை கருநிறமுடைத்தாய் அவ்வக்கினியைச் சூழ்ந்து சென்றமையாற் பூதசேனைக்குவமையாயிற்று. (21)

அரிநிரை பூண்டதேர் அலகை பூண்டதேர்
பரிநிரை பூண்டதேர் படைக்குள் ஏகுவ
விரிகடல் வரைப்பினில் மேக ராசியுங்
கிரியுறழ் கலங்களுங் கெழுமிச் செல்வபோல்.

இ—ள்: மேகராசியும் கிரி உறழ் கலங்களும்—மேகக் கூட்டங்களும் மலை போன்ற மரக்கலங்களும், விரி கடல் வரைப்பினில் கெழுமி செல்வ போல்—பரந்த கடலினெல்லையில் நெருங்கிப் போவனபோல, அரி நிரை பூண்ட தேர்—சிங்கக் கூட்டங்கள் பூட்டப்பெற்ற தேர்களும், அலகை பூண்ட தேர்—பேய்கள் பூட்டப்பெற்ற தேர்களும், பரி நிரை பூண்ட தேர்—குதிரைக் கூட்டங்கள் பூட்டப்பெற்ற தேர்களும், படைக்குள் ஏகுவ—அப்பூதசேனைகளுட் செல்வன எ—று.

சேனைக்குக் கடலும் தேர்களுக்கு மேகங்களும் மரக்கலங்களும் உவமையென்க. (22)

இடையகல் இரதமோ டிரதந் தாக்கிய
படையொடு படைவகை செறிந்த பல்வகைக்
கொடியொடு கொடிநிரை துதைந்த கூளியர்
அடுசமர் பயின்றிடும் அமைதி போலவே.

**இ—ள்:** கூளியர் அடு சமர் பயின்றிடும் அமைதி போல—படைவீரர்கள் கொலைத் தொழில் பொருந்திய போரைச் செய்யுந் தன்மையைப்போல, இடை அகல் இரதமோடு இரதம் தாக்கிய—இடமகன்ற தேர்களோடு தேர்கள் தாக்கின, படையொடு படைவகை செறிந்த—ஆயுதவகைகளோடு ஆயுத வகைகள் முட்டின. பல் வகை கொடியோடு கொடி நிரை துதைந்த—பல வகையான கொடிகளோடு கொடி நிரைகள் செறிந்தன எ—று.

பெருந்தேரென்பார் 'இடையகலிரதம்' எனவும், எய்வன எறிவன வெட்டுவன குத்துவன எல்லாவற்றையுமடக்குதற்கு 'படைவகை' எனவும் ஒரு வீரரோடு மற்றொரு வீரர் போரியற்றும்போது தேர்களும் படைகளும் கொடிகளுந் தாக்குதல்போல மிக நெருக்குண்டு தாக்கினவாதலின் 'கூளியரடு சமர் பயின்றிடுமமைதிபோல' எனவும் கூறினர். கூளியர் பூதரென்பர் சிலர்; அவரை விதந்தோதற்குக் காரணமின்மையின் படை வீரரெனப் பொதுப்படக் கூறுவதே சிறப்பென்க. (23)

சங்கொடு பணைதுடி தடாரி காகளம்
பங்கமில் தண்ணுமை யாதிப் பல்லியம்
எங்கணும் இயம்பின எழுந்து பூழிபோய்ச்
செங்கம லத்தவன் பதத்தைச் செம்மிற்றே.

**இ—ள்:** சங்கொடு—சங்கும், பணை—முரசும், துடி—உடுக்கும், தடாரி—பேரிகையும், காகளம்—ஊது குழலும், பங்கம் இல் தண்ணுமை—குற்றமில்லாத மத்தளமும், ஆதி பல் இயம்—முதலாகிய பல வாத்தியங்கள், எங்கணும் இயம்பின—எல்லாவிடங்களினுமொலித்தன, பூழி எழுந்து போய்—தூளியானது கிளம்பிச் சென்று, செம் கமலத்தவன் பதத்தை செம்மிற்று—செந்தாமரை மலராசனராகிய பிரமதேவரது உலகத்தை மூடியது எ—று.

மேலேழுலகங்களுள்ளுமேலதாகிய சத்தியலோகத்தை மூடிற்றெனவே அதன் கீழுள்ள மற்றையுலகங்களையுமூடிற்றென்பது சொல்லாதே விளங்கும். (24)

சாற்றுமிவ் வியல்புறத் தானை வீரருஞ்
சீற்றவெம் பூதருஞ் செல்ல வாகையான்
கோற்றொழில் அகற்றிய கோட்டு மாமுகன்
போற்றிய மாயமா புரியைச் சேர்ந்தனன்.

**இ—ள்:** சாற்றும் இ இயல்பு உற—முன் சொல்லிய இத்தன்மைகள் பொருந்த, தானை வீரரும் சீற்ற வெம் பூதரும் செல்ல—சேனை வீரர்களும் கோபத்தையுடைய கொடிய பூதர்களுமுடன் வர, வாகையான்—வீரவாகு தேவர், கோல் தொழில் அகற்றிய கோட்டு மாமுகன் போற்றிய மாயமா புரியை சேர்ந்தனன்—செங்கோன்மையை விலக்கிய யானை முகத்தையுடைய தாரகாசுரனு லரசியற்றப்பட்ட மாயமாபுரியை யடைந்தார் எ—று.

கோற்றெழில்-ஒருபாற் கோடாது நடக்குந் தொழில். கோட்டுமா-தந்தத்தையுடைய மிருகம்=யானை. கோற்றெழிலகற்றிய என்பது தாரகனுக்கடை. (25)

### வேறு

சேர்ந்திடு மெல்லை பூதர் சேனைபோய் நகரம் புக்கு
நேர்ந்திடும் அவுண ரோடு நின்றமர் விளைத்து நின்றார்
ஓர்ந்தனர் அதனைத் தூத ரோடித்தங் கோயில் புக்குச்
சார்ந்திடு திருவில் வைகுந் தாரகற் றொழுது சொல்வார்.

**இ—ள்:** சேர்ந்திடும் எல்லை—இவ்வாறடைந்தவுடன், பூதர் சேனை போய் நகரம் புக்கு—பூதசேனைவீரர் சென்று அம் மாயமாபுரியினுட் புகுந்து, நேர்ந்திடும் அவுணரோடு நின்று அமர் விளைத்து நின்றார்—எதிர்ப்பட்ட அசுரர்களோடு நிலைத்துப் போர் செய்து நின்றார்கள், தூதர் அதனை ஓர்ந்தனர்—அங்குள்ள தூதுவர்கள் அதனையறிந்து, ஓடி தம் கோயில் புக்கு—ஓடிப்போய்த் தமது அரசவையிற் புகுந்து, சார்ந்திடு திருவில் வைகும் தாரகன் தொழுது சொல்வார்—தன்னைச் சேர்ந்த செல்வச் சிறப்புடன் வீற்றிருக்கின்ற தாரகாசுரனை வணங்கிச் சொல்வார்கள் எ—று.

பூதர்சேனை என்பதைச் சேனைப் பூதரென மாற்றி நின்றார் என்னும் வினைமுற்றிற்கு எழுவாயாக்குக. திருவில்வைகல் பரிசனர்சூழ இராசோபசாரத்துடனிருத்தல். (26)

எந்தைமற் றிதுகேள் நும்முன் இமையவர் தொகையை யிட்ட
வெந்துயர்ச் சிறையை நீக்க விரிசடைக் கடவுள் மைந்தன்
கந்தனென் றொருவன் வந்தான் அவுணரைக் கடக்கு மென்னு
அந்தர நெறிசெல் விண்ணோர் அறைந்திடக் கேட்டு மன்றே.

**இ—ள்:** எந்தை இது கேள்—எமது அரசனே! இவ் வசனத்தைக் கேட்டருளுக, நும் முன் இமையவர் தொகையை இட்ட வெம் துயர் சிறையை நீக்க—உமது தமையனாகிய சூரபன்மன் தேவர் கூட்டத்திற்குச் செய்த கொடுந் துன்பத்தை விளக்குஞ் சிறையை நீக்கும்படி, விரி சடை கடவுள் மைந்தன்—பரந்த சடையையுடைய சிவபிரானது குமாரராகிய, கந்தன் என்று ஒருவன்—முருகவேளென்னும் ஒருவர், வந்தான்—அவதரித்திருக்கின்றார், அவுணரை கடக்கும் என்னு—அவர் அசுரரை வெல்வாரென்று, அந்தர நெறி செல் விண்ணோர் அறைந்திட கேட்டும்—ஆகாய மார்க்கத்திற் செல்லுகின்ற தேவர்கள் பேசக் கேள்வியுற்றோம் எ—று.

ஐவகைத் தந்தையருள் அரசனுமடங்குதல் பற்றி எந்தையென விளித்தனர். முன்—முன் பிறந்தானைக் குறித்தலின் ஈண்டுக் காலவாகுபெயர். கேட்டும்-தன்மைப் பன்மை முற்று. (27)

என்னிவர் மாற்ற மென்னு யாந்தெரி குற்றே மாக
அன்னவர் இயம்பி யாங்கே ஆயிரத் திரட்டி யென்னப்
பன்னுறு பூத வெள்ளம் படர்ந்திடக் குமரன் போந்தான்
முன்னுறு தூசி நந்தம் முதுநகர் அலைத்த தென்றார்.

இ—ள்: யாம்—நாங்கள், இவர் மாற்றம் என் என்று தெரி குற்றேம் ஆக—இத் தேவர்களது வார்த்தையென்னையென்று ஆராய்ந்துகொண்டிருக்க, அன்னவர் இயம்பியாங்கே—அத் தேவர்கள் கூறியவாறே, ஆயிரத்து இரட்டி என்ன பன்னூறு பூத வெள்ளம் படர்ந்திட—இரண்டாயிர வெள்ளமென்று சொல்லப்படுகின்ற பூதசேனை உடன்வர, குமரன் போந்தான்—அப்பாலகன் வந்தான், முன் உறு தூசி நம் தம் முது நகர் அலைத்தது என்றார்—முந்திவந்த தூசிப்படை எங்கள் பழைய நகரத்தை அலைவுசெய்தது என்று கூறினர் கள் எ—று.

முன்னொரு காலத்திலும் பகைவரால் வளையப்படாதிருந்த நகரென்பார் 'முது நகர்' என்றார். (28)

என்றலும் வடவைத் தீயில் இழுதெனும் அளக்கர் வீழத்
துன்றிய எழுச்சி மானத் துண்ணெனச் செற்றந் தூண்ட
மின்றிகழ் அரிமான் ஏற்று வியன்றவி சிருக்கை நீங்கிக்
குன்றுறழ் மகுடம் அண்ட கோளகை தொடவெ ழுந்தான்.

இ—ள்: என்றலும்—என்று தூதர்கள் கூறியவுடன், வடவை தீயில் இழுது எனும் அளக்கர் வீழ துன்றிய எழுச்சி மான—வடவாமுகாக்கினியில் நெய்க் கடல் விழும்போது பொருந்திய கிளர்ச்சியைப் போலாக, துண் என செற்றம் தூண்ட—விரைவிற் கோபமானது உந்த, மின் திகழ் வியன் அரிமான் ஏற்று தவிசு இருக்கை நீங்கி—ஒளி விளங்குகின்ற பெரிய சிங்காசனத்திலிருத்தலை விட்டு, குன்று உறழ் மகுடம் அண்ட கோளகை தொட எழுந்தான்—மலை போன்ற கிரீடம் அண்ட முகட்டைத் தொடும்படியெழும்பினன் எ—று.

அக்கினியைக் கிளர்ந்தெரியச் செய்வதாகிய நெய்யை மற்றைய அக்கினி களினும் மிகப்பெரிதும் அழற்சியுடையதுமாகிய வடவாமுகாக்கினியின் மேல் அதிகமாகப் பெய்தால் உடனே அவ்வக்கினி எத்துணைச் சீற்றத்துடன் எழுமோ அத்துணைப்பெருஞ் சீற்றத்துடனெழுந்தனனென்பார் வடவைத் தீயி னிழு தெனுமளக்கர்வீழத் துன்றியவெழுச்சிமானத் துண்ணெனச் செற்றந்தூண்ட - எழுந்தான் என்றார். (29)

எழுந்துதன் மருங்கு நின்ற ஒற்றரை நோக்கி இந்தச்
செழுந்திரு நகர்மேல் வந்த சேனையை முளிபுற் கானில்
கொழுந்தழல் புகுந்த தென்னக் கொல்வன்நந் தானைமுற்றும்
உழுந்துருள் கின்ற முன்னர் ஒல்லைதந் திடுதி ரென்றான்.

இ—ள்: எழுந்து — எழும்பி, தன்மருங்கு நின்ற ஒற்றலரைநோக்கி—தனது பக்கத்தினின்ற தூதுவர்களைப்பார்த்து, இந்த செழும் திரு நகர் மேல் வந்த சேனையை —இந்த வளப்பமிக்க சிறந்தநகரத்திற் போர்க்குவந்தசேனையை, முளி புல்கானில் கொழு தழல் புகுந்தது என்ன கொல்வன் — காய்ந்த புற்காட்டிற் பெருந்தீப்பற்றினாற்போலக் கொல்வேன், உழுந்து உருள்கின்ற முன்னர் — (கண்ணாடியிலிட்ட) உழுந்து உருள்கின்ற காலவெல்லைக்குள், ஒல்லை - விரை வாக, நம் தானைமுற்றுந் தந்திடுதிர் — எமது சேனை முழுவதையும் வருவியுங் கள், என்றான் — என்று கூறினன் எ—று. (30)

அன்னபணி முறைபுரிவான் ஒற்றுவர்கள் போயிடலும் அவுணன் நின்ற
கொன்னுறுவேற் பரிசனரைக் கொடுவருதிர் இரதமெனக் கூறலோடும்
முன்னமொரு நொடிவரையில் தந்திடலும் அதனிடையே மொய்ம்பிற் புக்குப்
பின்னர்வரும் அமைச்சர்கள்தந் தொகைபரவ மதர்ப்பினொடு பெயர்த லுற்றான்.

இ—ள்: அன்ன பணி முறை புரிவான் ஒற்றுவர்கள் போயிடலும் — அந்த ஏவன்முறையைச்செய்யும்படி தூதுவர்கள் சென்றவுடன், அவுணன் — தாரகாசுரன், நின்ற கொன் உறு வேல் பரிசனரை — அங்குநின்ற அச்சத்தை விளைவிக்கின்ற வேற்படையையேந்திய பரிசனர்களைப்பார்த்து, இரதம் கொடுவருதிர் என கூறலோடும் — தேரைக்கொண்டு வாருங்களென்று கூற, ஒரு நொடி வரையில் முன்னம் தந்திடலும் — அவர்கள் ஒருநொடிப் பொழுதினுள் முன்னிலையிற் கொணர்தலும், அதன் இடையே மொய்ம்பில் புக்கு — தாரகாசுரன் அத்தேரின் மேல் வலிமையுடனேறி, பின்னர்வரும் அமைச்சர்கள் தம் தொகை பரவ — பின்னேவருகின்ற மந்திரிமார்களின்றொகுதி துதிக்க, மதர்ப்பினொடு பெயர்தலுற்றான் — செருக்கினுடன் போர்க்குச் சென்றான் எ—று.

பணிமுறை - முறைமையாகிய ஏவல். கொன்னுறுவேல் - என்பதிற் பிறவினை விகுதிதொக்கது. பரிசனர் - சூழ்ந்துநிற்குஞ்சனங்கள். (31)

வீடுவான் போலுமினித் தாரகனென் றவன்சீர்த்தி விரைவில் வந்து
கூடியே புரள்வதுவும் அரற்றுவதுங் காப்பதுமாங் கொள்கைத் தென்ன
நீடுசா மரத்தொகுதி பலவிரட்ட வெள்ளொலியல் நிமிர்ந்து வீசப்
பீடுசேர் தவளமதிக் குடைநிழற்ற வலம்புரிகள் பெரிதும் ஆர்ப்ப.

இ—ள்: இனி தாரகன் வீடுவான் போலும் என்று — இனித் தாரகாசுரனிறப்பான்போலுமென்று கருதி, அவன் சீர்த்தி—அவன் கீர்த்திகள், விரைவில் வந்து கூடி — விரைவாகவந்து சேர்ந்து, புரள்வதும் அரற்றுவதும் காப்பதும் ஆம் கொள்கைத்து என்ன—புரளுவதும் புலம்புவதும் அவனைக்காப்பதுமாகிய தன்மை போல, நீடு பல சாமர தொகுதி இரட்ட — நீண்ட பல சாமரக் கூட்டங்கள் வீசவும், வெள் ஒலியல் நிமிர்ந்து வீச — வெண்ணிறமான வஸ்திரத் தூக்கங்கள் உயர்ந்து வீசவும், பீடு சேர் தவளமதி குடை நிழற்ற — பெருமை பொருந்திய வெண்ணிறமான சந்திரவட்டக்குடை நிழலைச் செய்யவும், வலம்புரிகள் பெரிதும் ஆர்ப்ப — வலம்புரிச்சங்குகள் மிக ஒலிக்கவும் எ—று.

போலும்-ஒப்பில் போலி. சாமரம்-சமரமென்னுமானின் வால்மயிரினாற் செய்யப்பட்ட இராசசின்னம். வலம்புரி-வலமாய் உட்சுழிந்திருக்குஞ் சங்கு. இது இடம்புரிச் சங்கினும் ஆயிரமடங்கு சிறந்தது. வெண்சாமரங்களும் வெள்ளாடைத் தூக்கங்களும் வீசுதலைப் புரள்வதாகவும் வெண்சங்குகளொலிப்பதை அரற்றுவதாகவும் வெண்குடை நிழற்றுதலைக் காப்பதாகவும் வருணித்தார். தற்குறிப் பேற்றவணி. கீர்த்தியை வெண்ணிறமாகக் கூறுதல் கவி மரபு. இது முதலாறு கவிகள் குளகம். இரட்ட வீச நிழற்ற ஆர்ப்ப என்ற எச்சங்கள் முப்பத்தேழாஞ் செய்யுளில் ஏகியது என்பதனோடியையும். அடுத்த நான்கு கவிகளில் இதுபோலுள்ள செயவெனச்சங்களுமிப்படியே. (32)

ஈமத்தே நடம்புரியுங் கண்ணுதலோன் எடாதசிலை யென்ன மாலோன்
மாமத்தே யெனக்கிடந்த முழுவயிரத் தண்டமொன்று வயிரக் கண்டைத்
தாமத்தோர் பெறுகின்ற மடங்கல்பல ஈர்த்துவருஞ் சகடத்தின்கால்
சேமத்தோர் மிசைப்போத ஏனையபல் படைக்கலமுஞ் செறிந்து நண்ண.

இ—ள்: ஈமத்தே நடம் புரியும் கண் நுதலோன் எடாத சிலை என்ன— மாயானத்திலே திருநிருத்தஞ் செய்தருளுகின்ற சிவபிரானெடுத்து வளையாத மேருமலையொன்றுண்டேல் அதனைப் போலவும், மாலோன் மா மத்தே என— திருமால் பாற்கடலைக் கடைந்தபோது கொண்ட பெரிய மத்தாகிய மந்தர மலையைப் போலவும், கிடந்த முழு வயிர தண்டம் ஒன்று—இருந்த முழுதாகிய வைரித்த ஒரு தண்டாயுதம், வயிர கண்டை தாமத்து ஏர் பெறுகின்ற மடங்கல் பல ஈர்த்து வரும் சகட திண் கால் சேம தேர் மிசை போத — வைரரத்தினம் பதித்த மணிமாலைகளினழகைப் பொருந்திய பல சிங்கங்களிழுத்துச் செல்லுகின்ற உருளைகளையும் வலிய கால்களையுமுடைய ஒரு சேமத் தேரிலேற்றப்பட்டு வரவும், ஏனைய பல் படைக்கலமும் செறிந்து நண்ண—மற்றைய பல ஆயுதங்களும் (பல சேமத் தேர்களில்) நெருங்கி வரவும் எ—று.

சிவபிரான் சர்வ சங்கார காலத்தில் எல்லாப் பிராணிகளுமழியப்பெற்ற உலகமாகிய மயானத்தினின்று ஆநந்த தாண்டவஞ் செய்தருளுவர். இதனை ''கடல்விட நுகர்ந்த தொல்லைக் கடவுள் பின் னழிக்குங் காலை-யுடலுயி ரகிலம் யாவு மொடுக்கிய விடம தன்றே-சுடலைய தாகு மந்தச் சுடலைகா ணனைய சோதி-நடநவில் கின்ற வெல்லை'' என மேல் தக்ஷகாண்டத்துத் ததீசியுத்தரப் படலத்து வருஞ் செய்யுளானுமுணர்க. பாற்கடலைக் கடையும் பொழுது மந்தரமலையை மத்தாகக் கொள்ளும்படி கட்டளையிட்டவரும் தேவர்க்கு மசுரர்க்கு மிடைப் புகுந்து கடை கயிறு பிடித்தவருந் திருமாலாதலால் மந்தரம் 'மாலோன் மாமத்து' எனப்பட்டது. வயிரமென்னுஞ் சொல்லிரண்டினுள் முன்னையது வைரமென்னும் வட சொல்லின் முதற்போலி. பின்னையது வச்சிரம் என்னும் வடசொல்லின்றிரிபு. கால்-ஏர்க்காலும் சுற்றி நாட்டிய கால்களுமாம். சேமத்தேர்-சமயத்திலுதவும்படி துணைக் காவலாக அமைக்கப்பட்டுள்ள தேர். 'தண்டமொன்று போத' என இயையும். பருமையினலும் வலியினலும் தனக்கிலக்காகும் பகைவரின்றி யெண்ணிறந்த காலம் வைக்கப்பட்ட விடத்தே கிடந்தமையானும் மேருமலையையும் மந்தரமலையையுமுவமித்தார். அத்தண்டு ஏற்றுதற்கேற்ற வலியுடைய சேமத்தேரென்பார் 'சகடத் திண்காற் சேமத்தேர்' எனவும், அத் தேரில் அத் தண்டையேற்றிய வழியும் இழுத்துச் செல்லுதற்கு வல்ல சிங்கங்களென்பார் 'வயிரக் கண்டைத் தாமத் தேர் பெறுகின்ற மடங்கல்' எனவும், அத் தண்டம் அத் தேர்க்குப் பெரும் பாரமானமையின் பிற படைகளைப் பிற தேர்களிலேற்றினரென்பது போதர 'தண்டமொன்று-தேர்மிசைப் போத' எனவும் கூறினர். (33)

ஒற்றர்கூ வியவேலை ஏற்றெழுந்த அவுணர்கடல் ஒருங்கு செல்லக்
கொற்றமால் கரிபரிதேர் இனத்தினெடு வந்தீண்டக் குழவித் திங்கட்
கற்றைவார் சடைக்கடவுள் வாங்கியபொன் மால்வரையைக் காவ லாகச்
சுற்றுமால் வரையென்னப் படைத்தலைவர் பஃறேரில் துவன்றிச் சூழ.

இ—ள்: ஒற்றர் கூவிய வேலை ஏற்று எழுந்த அவுணர் கடல் ஒருங்கு செல்ல—தூதுவர்களழைத்தபொழுது உடன்பட்டுப் புறப்பட்ட அசுரசேன சமுத்திரம் ஒன்று சேர்ந்து வரவும், கொற்ற மால் கரி பரி தேர் இனத்தினெடு வந்து ஈண்ட—வெற்றி பொருந்திய பெரிய யானையும் குதிரையும் தேரும் கூட்டமாக வந்து நெருங்கவும், குழவி திங்கள் கற்றை வார் சடை கடவுள் வாங்கிய பொன் மால் வரையை காவல் ஆக சுற்றும் மால் வரை என்ன—பாலச்சந்திரனை யணிந்த அடர்ந்த நீண்ட சடையையுடைய சிவபிரான் வளைத்த பொன் மயமான பெரிய மேருமலையைக் காவலாகச் சூழுகின்ற

சிறந்த குலாசலங்களைப்போல, படைத்தலைவர் பல் தேரில் துவன்றி சூழ— சேனைத்தலைவர்கள் பல தேர்களில் நெருங்கிச் சூழ்ந்து வரவும் எ—று.

அவுணர் கடல்-உருவகம். தாரகாசுரன் நடுவில் உயர்ந்த தேரினும் படைத் தலைவர் அவனைச் சூழ்ந்து சிறிது தாழ்ந்த தேரினுஞ் செல்லுதலின் 'பொன் மால் வரையைக் காவலாகச்-சுற்றுமால்வரை யெனப் படைத்தலைவர் பஃறே ரிற்றுவன்றிச் சூழ' என்றார். (34)

மொய்யமர்செய் கோலமொடு முப்புரமேல் நடந்தருளும்முக்கண் மூர்த்தி
பையரவின் தலைத்துஞ்சுங் கணைதூண்ட மூண்டதழல் பதகரானோர்
மெய்யுடலம் முழுதுநுங்கத் தலைகொள்ளப் பெருந்தூம மிசைக்கொண் டென்னச்
செய்யமுடி அவுணர்பெருங் கடலினிடை யெழும்பூழி சேட்சென் றோங்க.

**இ—ள்:** மொய் அமர் செய் கோலமொடு முப்புரமேல் நடந்தருளும் முக்கண் மூர்த்தி—வலிய போரைச் செய்தற்குரிய கோலத்துடன் திரிபுரத்தசுரர் மேற் சென்றருளிய மூன்று திருக்கண்களையுடைய சிவபிரான், பை அரவின் தலை துஞ்சும் கணை தூண்ட—படம் பொருந்திய அனந்தனென்னுஞ் சர்ப்பத் தின் மேலறி துயில் செய்கின்ற திருமாலாகிய பாணத்தைச் செலுத்தியபோது, மூண்ட தழல்—எழுந்த அக்கினியானது, பதகர் ஆனோர் மெய் உடலம் முழு தும் நுங்கி தலைக்கொள்ள—பாவியர்களாகிய அசுரரது சரீர முழுவதையும் விழுங்கிப் பரவ, பெரும் தூமம் மிசைகொண்டு என்ன—பெரும் புகை யானது மேலெழுந்தாற் போல, செய்ய முடி அவுணர் பெரும் கடலின் இடை எழும் பூழி—சிவந்த மயிர்முடியையுடைய அசுரர்களாகிய பெரிய சமுத்திரத்திற்றோன்றிய தூளி, சேண் சென்று ஓங்க—ஆகாயத்திலெழுந்து பரக்கவும் எ—று.

மெய், உடலம்-ஒருபொருட் சொற்கள். உடலம் என்பதில் அம்-சாரியை. பெருந் தொகுதியாதலின் 'அவுணர் பெருங்கடல்' என்றார். அசுரர்க்குத் திரி புரத்தசுரரும் செம்பங்கிக்கு அக்கினியும் பூழிக்குப் புகையும் உவமை யென்க. (35)

கார்க்குன்றம் அன்னதிறல் கரிமீதும் பரிமீதுங் கடிதில் தூண்டுந்
தேர்க்குன்றம் அதன்மீதும் வயவர்கள்தங் கரங்களினுஞ் செறிபதாகை
ஆர்க்கின்ற துயர்ந்தோங்கி அசைகின்ற தெம்மருங்கும் அம்பொன் நாட்டில்
தூர்க்கின்ற பூழியினைத் துடைக்கின்ற பரிசேபோல் துவன்றித் தோன்ற.

**இ—ள்:** கார் குன்றம் அன்ன திறல் கரி மீதும்—கரு நிறமுடைய மலை போன்ற வலிய யானைகளின் மேலும், பரி மீதும்—குதிரைகளின் மேலும், கடி தில் தூண்டும் தேர் குன்றம் அதன் மீதும்—விரைவாகச் செலுத்தப்படுகின்ற தேர்களாகிய மலைகளின் மேலும், வயவர்கள் தம் கரங்களினும்—காலாள் வீரர்களது கைகளிலும், செறி பாதகை—நெருங்கிய கொடிகள், ஆர்க்கின்றது— ஒலி விளைக்கின்றனவாய், உயர்ந்து ஓங்கி அசைகின்றது—மிகவுயர்ந்து அசை கின்ற தன்மை, அம் பொன் நாட்டில் எ மருங்கும் தூர்க்கின்ற பூழியினை துடைக்கின்ற பரிசேபோல் துவன்றி தோன்ற—அழகிய சுவர்க்கலோகத்தில் எவ்விடங்களையும் மூடுகின்ற தூளியைத் துடைக்குந் தன்மையையேபோல நெருங்கிக் காணப்படவும் எ—று.

கார்க்குன்றமென்பதற்கு மேகங்கள் படியப்பெற்ற மலையெனவும் பொருள் கூறலாம். தேர்க்குன்றம்-ரூபகம். பதாகை சாதியொருமையாதலின் ஆர்க்கின்றது என்னும் ஒருமை வினையைக் கொண்டது. (36)

வாகையுள பல்லியமும் இயம்பத்தன் நகர்நீங்கி மன்னர் மன்னன்
ஏகியதோர் படிநோக்கி உவரிமிசைக் கங்கைகள்வந் தெய்துமாபோல்
சாகையுள பன்மரனும் பல்படையும் குன்றுகளுந் தடக்கை யேந்திச்
சேகுடைய பெருஞ்சீற்றப் பூதர்படை யார்த்தெதிர்ந்து சென்ற தன்றே.

இ—ள்: வாகை உள பல் இயமும் இயம்ப—வெற்றிக்கறிகுறியாயுள்ள வாத்திய வகைகளெல்லாமொலிக்கவும், மன்னர் மன்னன்—அரசர்க்கரசனாகிய தாரகாசுரன், தன் நகர் நீங்கி ஏகியது ஓர் படி நோக்கி—தனது நகரத்தை விட்டு வெளியே வந்த தன்மையைப் பார்த்து, சேகு உடைய பெரும் சீற்ற பூதர் படை—வைரமமைந்த பெருங் கோபத்தையுடைய பூதசேனை, சாகை உள பல் மரனும் பல் படையும் குன்றுகளும் தட கை ஏந்தி—கிளைகளையுடைய பல மரங்களையும் பல ஆயுதங்களையும் பல மலைகளையும் விசாலித்த கைகளிற் றாங்கி, உவரி மிசை கங்கைகள் வந்து எய்துமா போல்—உவர்ச் சமுத்திரத் திற் கங்கை நதிகள் வந்து சேருமாறுபோல, ஆர்த்து எதிர்ந்து சென்றது—ஆரவாரித்து எதிர்த்துச் சென்றது எ—று.

தாரகன் சேனைக்கு உவர்க்கடலையுவமை கூறியதால் அவனது சேனையின் பெருக்கமும் இழிவும், கங்கையைப் பூதர்சேனைக் குவமை கூறியதனால் அச் சேனையின் சுருக்கமும் உயர்வுந் தோன்றின. கங்கை நதி பல கிளைகளாகப் பிரிந்து கடலிற் பாய்தலால் 'கங்கைகள் வந்தெய்துமாபோல்' என்றார். மரன்-இறுதிப்போலி. எய்துமாறென்பதில் ஈற்றுயிர் மெய்குறைந்தது. (37)

எல்லோருந் தொழுதகைய குமரனடி இணைவழுத்தி இகல்வெம்பூதர்
கல்லோடு மரனோடுங் கதையோடுங் கணிச்சியொடுங் கழுமுள் வீச
வில்லோடுங் கணையோடும் வேலோடும் நேமியொடும் மிக்க எல்லாம்
அல்லோடும் புரையுமனத் தவுணர்படை எதிர்சிதறி அமர்செய் திட்டார்.

இ—ள்: இகல் வெம்பூதர்—வலிமையையுடைய கொடிய பூதர்கள் எல்லோரும் தொழுதகைய குமரன் அடி இணை வழுத்தி—யாவரும் வணங்கத்தக்க தன்மையையுடைய முருகக்கடவுளது இரண்டு திருவடிகளையுந் துதித்து, கல்லோடும் மரனோடும் கதையோடும் கணிச்சியொடும் கழுமுள் வீச—மலைகளையும் மரங்களையும் தண்டுகளையும் மழுக்களையும் சூலங்களையுஞ் செலுத்த, அல்லோடும் புரையும் மனத்து அவுணர் படை—இருளையொத்த வஞ்சக மனத்தையுடைய அசுர சேனா வீரர்கள், வில் ஒடும் கணையோடும் வேலோடும் நேமியொடும் மிக்க எல்லாம்—விற்களினின்று செல்லுகின்ற பாணங்களையும் வேல்களையும் சக்கரங்களையும் மற்றைய எல்லாப்படைகளையும், எதிர் சிதறி—எதிரே செலுத்தி, அமர் செய்திட்டார்—போரைச் செய்தார்கள் எ—று. (38)

### வேறு

எண்ணுறு படைகள் இவ்வா றெதிர்தழீஇ அடரும் வேலை
விண்ணுறு பூழி யென்னும் விரிதரு புகைமீச் செல்ல
மண்ணுறு குருதி யான வன்னியை மாற்று வார்போல்
கண்ணுறும் இமையோர் கண்கள் கடிப்புனல் கான்ற அன்றே.

இ—ள்: எண் உறு படைகள்—மதிக்கத்தக்க சேனைகள், இவ்வாறு எதிர் தழீஇ அடரும் வேலை—இப்படியெதிர்த்துச்சென்று நெருங்கும்பொழுது, விண் உறு பூழி என்னும் விரிதரு புகை மீசெல்ல—ஆகாயத்திற்சென்ற தூளியாகிய பரந்தபுகை மேற்கிளர, மண் உறு குருதி ஆன வன்னியை மாற்றுவார் போல்—பூமியிற்பரந்த இரத்தவெள்ளமாகிய அக்கினியைத்தணிப்பவர்போல, கண் உறும் இமையோர் கண்கள் கடி புனல் கான்ற—போரைப் பார்த்து நின்ற தேவர்களது கண்கள் மிக்க நீரைச்சிந்தின எ—று.

எளிதிற்றூளிபடிந்து வருத்தத்தக்கனவென்பதுபோதர 'இமையோர்கண்கள்' என்றார். இமையோர் இமைத்தலில்லாதவர். நெருப்பு நன்றாகப்பற்றுமுன் புகையெழுதலும் பின் அஃதெழாமையும்போல இரத்தவெள்ளம் பரவுதற்குமுன் பூழியெழுதலும் பின் அஃதெழாமையுமுண்மையாயினும், புகையெழுதல் நெருப்பைக் காணுதற்கறிகுறியாதல்போலப் பூழியெழுந்தது போர்நிகழ்ந்து இரத்தப்பெருக்குண்டாதற்கறிகுறியாதலானும் புகை படிந்துழிப்போலப் பூழி பட்டவுடனும் கண்கள் நீர் சிந்துதலானும் நிறவியைபானும், பூழியைப் புகையாகவும் இரத்தத்தை அக்கினியாகவும் உருவகித்தார். கான்றவெனற்பாலது முதல் சினையியைபுபற்றிச் சினைவினையாக முடிக்கப்பட்டது. (39)

இரிந்திட லின்றி நேர்வந் தேற்றமர் புரித லாலே
சொரிந்திடு குருதி பொங்கத் தோளொடு சென்னி துள்ளச்
சரிந்திடுங் குடர்கள் சிந்தத் தானவர் பல்லோர் மாயப்
பொருந்திறல் வயத்தால் மேலாம் பூதருஞ் சிலவர் பட்டார்.

இ—ள்: இரிந்திடல் இன்றி நேர் வந்து ஏற்று அமர் புரிதலால்—பின்னிட்டோடுதலின்றி முன்வந்து எதிர்த்துப் போர்செய்தலால், சொரிந்திடு குருதி பொங்க—சிந்திய இரத்தம் பெருகவும், தோளோடு சென்னி துள்ள—புயங்களுந் தலைகளும் துணிபட்டுத் துடிக்கவும், சரிந்திடும் குடர்கள் சிந்த—சரிந்த குடல்கள் சிதறவும், தானவர் பல்லோர் மாய—பல அசுரர்களிறக்க, பொரும் திறல் வயத்தால் மேல் ஆம் பூதரும் சிலவர் பட்டார்—போர் செய்யும் வலிமையினாலும் வெற்றியினாலும் மேம்பட்டவர்களாகிய பூதர்களுள்ளுஞ் சிலரிறந்தார்கள் எ—று.

குடர்-இறுதிப்போலி. சிலவர் என்பதில் அகரம் சாரியை. புரிதலால் மாய பட்டார் என இயையும். பூதர் பலர் படாமைக்குக் காரணந் தோன்ற 'பொருந்திறல் வயத்தான் மேலாம் பூதர்' என்றார். உம்மை-எச்சம். (40)

தேருடைத் தெறிந்து பாய்மாத் திறத்தினைச் சிதைத்து நீக்கி
ஆருடைத் திகிரிச் சில்லி அங்கையால் எடுத்துச் சுற்றிப்
போருடைத் திறலோர் தம்பால் பொம்மென நடாத்தும் பொற்பால்
காருடைப் பூதர் சில்லோர் கண்ணனே போன்றார் அன்றே.

இ—ள்: தேர் உடைத்து எறிந்து—தேர்களைத் தகர்த்தெறிந்து, பாய்மா திறத்தினை சிதைத்து நீக்கி—குதிரைக் கூட்டங்களை யழித்துத் தள்ளி, ஆர் உடை திகிரி சில்லி அங்கையால் எடுத்து சுற்றி—கதிர்களையுடைய வட்டித்த உருளைகளை அகங்கையாலெடுத்துச் சுழற்றி, போர் உடை திறலோர் தம் பால் பொம் என நடாத்தும் பொற்பால்—போர் செய்யுந் தன்மையினையுடைய வீரர்கள் மீது விரைவிலெறிகின்ற சிறப்பினால், கார் உடை பூதர் சில்லோர்—கரு நிறத்தையுடைய சில பூதர்கள், கண்ணனே போன்றார்—கிருஷ்ணமூர்த்தியையே நிகர்த்தார்கள் எ—று.

பாய்மா-பாய்கின்ற மிருகம்-குதிரை. ஆர் ஆரமென்னும் வடசொல்லின் விகாரம். ''ஆரே கூர்மையாத்தியுமாகும் - தேராழியகத்திற் செறியுறுப்பு மாகும்'' என்ற திவாகரத்தால் ஆரென்பது தேர்ச்சக்கரத்தினுள் முனைபெறச் செலுத்தப்பட்ட கதிர்களை யுணர்த்துதலறிக. நடாத்தும்-நடத்தும் என்பதன் விகாரம். கண்ணனேயென்பதில் ஏ-பிரிநிலை. கருநிறமுடைமையாலும் வண்டி வடிவமாய் வந்த சகடாசுரனையும் குதிரை வடிவமாய் வந்த கேசியென்னு மசுரனையுமழித்தமையாலும் சிசுபாலன்மீது சக்கரத்தைச் செலுத்துதலாலுங் கிருஷ்ணமூர்த்தியை யுவமை கூறினார்.

கண்ணன் தேருடைத் தெறிந்த கதை :— நந்தகோபன் மனையிற் பள்ளி கொண்டிருந்த கிருஷ்ணமூர்த்தி கஞ்சனுலேவப்பட்ட ஒரு அசுரன் ஓர் சகடத் திலாவேசித்துத் தன்னைக் கொல்ல முயல்வதையறிந்து அச் சகடத்தை யழித் தனர் என்பதாம்.

கண்ணன் பாய்மாச் சிதைத்து நீக்கிய கதை :— கஞ்சனுலேவப்பட்ட கேசியென்னுமசுரன் குதிரையினுருவத்தோடு ஆய்ப்பாடிக்கு வந்து ஆயர் களஞ்சியோடும் படி கனைத்துக் கிருஷ்ணமூர்த்தியின் மேற் பாய்தற்கு முயல, அவர் தமது கையை நீட்டி அம் மாயக் குதிரையின் வாயிலடித்துப் பற்களை யுதிர்த்து உதட்டைப் பிளந்து அதனுடம்பை யிருபிளவாக வகிர்ந்து தள்ளினர் என்பதாம். (41)

தேர்பரித் தெழுந்து மண்ணில் செல்லுறுப் பவளச் செங்கால்
கார்பரித் தன்ன தோகைக் கவனவாம் புரவி யீட்டம்
போர்பரித் தொழுகு சீற்றப் பூதர்கள் புடைத்துச் சிந்திப்
பார்ப்பரித் திடவே செய்தார் படிமகள் இடும்பை தீர்ப்பார்.

இ—ள்: தேர் பரித்து எழுந்து மண்ணில் செல்லுரு பவள செம் கால்—தேர்களைத் தாங்கிக்கொண்டு உயர்ந்து பூமியில் மிதிக்காது பாய்கின்ற பவளம்போற் சிவந்த கால்களையும், கார் பரித்து அன்ன தோகை—மேகத்தைச் சுமந்து கொண்டிருந்தாற் போன்ற வாலையுமுடைய, கவன வாம் புரவி ஈட்டம்—வேகம் பொருந்திய தாவிச் செல்லுகின்ற குதிரைக் கூட்டங்களை, படிமகள் இடும்பை தீர்ப்பார்—பூமிதேவியின் துன்பத்தை நீக்குபவராகிய, போர் பரித்து ஒழுகு சீற்ற பூதர்கள் — யுத்தஞ் செய்தலை மேற்கொண்டொழுகுகின்ற கோபத்தையுடைய பூதர்கள், புடைத்து சிந்தி—அடித்துத் தள்ளி, பார் பரித்திட செய்தார்—பூமி சுமக்கும்படி செய்தார்கள் எ—று.

கால் சிவந்தும் வால் கறுத்துமிருத்தல் குதிரைக்கு நல்லிலக்கணங்களென்க. வாவுமென்னுஞ் செய்யுமெனெச்சம் ஈற்றுயிர் மெய் கெட்டது. பாவியர் மிகுந்து வாழ்தல் பூமிக்குப் பாரமும் அவரழிதல் பார நீக்கமுமாதலின் அசுரர் சேனையைக் கொல்லும் பூதரை 'படிமகளிடும்பை தீர்ப்பார்' என்றார். படிமகளிடும்பை தீர்ப்பார் பார்பரித்திடவே செய்தார் என்பன ஒன்றோடொன்று முரணுகத் தோன்றிக் கருத்தை நோக்குமிடத்து அம் முரணழிதலின் முரண் விளைந்தழிவணி. இதனை விரோதாலங்காரமென்பார் தண்டியாசிரியர். (42)

வாலுடைக் களிற்றின் ஈட்டம் வாரியே கரத்தா லெற்றிக்
காலுடைத் திகிரித் திண்டேர் கழல்களால் உருட்டிக் காமர்
பாலுடைப் புரவித் தானை பதங்களால் உழக்கிச் சென்றார்
வேலுடைத் தடக்கை அண்ணல் விடுத்தருள் வீர வீரர்.

இ—ள்: வேல் உடை தட கை அண்ணல் விடுத்து அருள் வீரவீரர்—வேலாயுதத்தையேந்திய விசாலித்தகையையுடைய குமாரக்கடவுளாற் போருக்கேவியருளப்பட்ட சிறந்தவீரர்களாகிய பூதர்கள், வால்உடை களிற்றின் ஈட்டம் கரத்தால் வாரி எற்றி—வாலினையுடைய யானைக்கூட்டங்களைக் கைகளாலள்ளிமோதியும், கால் உடை திகிரி திண் தேர் கழல்களால் உருட்டி—கால்களையுடைய உருளைகளமைந்த வலியதேர்களைக்கால்களாலுருட்டியும், காமர் பால் உடை புரவி சேனை பதங்களால் உழக்கி சென்றார்—அழகியவெண்ணிறத்தையுடைய குதிரைச் சேனைகளைக் கால்களாலுழக்கியும் நடந்தார்கள் எ—று.

வீரவீரர் - வீரருட்சிறந்தவீரர். (43)

வாருறு புரசை பூண்ட வன்களிற் றொருத்தல் யாவுஞ்
சூருறு நிலைய வாகித் துஞ்சிய தொகுதி சூழப்
பேருறு குருதி நீத்தம் பிறங்கழற் கதிர்கா ணாது
காருற வூர்கோள் தோன்றுங் காட்சியை யொத்த தன்றே.

இ—ள்: வார் உறு புரசை பூண்ட வன் களிற்று ஒருத்தல் யாவும்—நீண்ட கழுத்திடு கயிற்றைத் தரித்த வலிய ஆண்யானைகளெல்லாம், சூர் உறு நிலைய ஆகி துஞ்சிய தொகுதி சூழ—அச்சத்தைவிளைக்குமியல்பினவாகி இறந்துவிழுந்த பிணக்கூட்டங்களை வளைந்து, பேரு றுகுருதி நீத்தம்—இழிகின்ற இரத்த நீரானது, பிறங்கு அழல் கதிர் காணாது கார் உற—விளங்குகின்ற சுடுகிரணங்களையுடைய சூரியன் காணப்பெறுவண்ணம் மேகம் மூடிக்கொள்ள, ஊர்கோள் தோன்றும் காட்சியை ஒத்தது—பரிவேடந்தோன்றுந் தன்மையை நிகர்த்தது எ—று.

யாவும் துஞ்சிய என இயையும். மேகங்கள் சூரியனை மறைத்திருக்கப் பரிவேடங் காணப்படுவதுபோல, யானையினுடல்களைச் சூழ்ந்து இரத்தவெள்ளம் பெருகிற் றென்பது கருத்து. (44)

கண்ணெதிர் நின்று போர்செய் கார்கெழும் அவுணர்ப் பற்றித்
துண்ணெனப் பூதர் வீசத் துளங்கிய கலன்க ளோடும்
விண்ணிடை யிறந்து நொய்தின் வீழ்வது விசும்பில் தப்பி
மண்ணிடை மின்னு வோடும் வருமுகில் போன்ற தன்றே.

இ—ள்: பூதர்—பூதவீரர்கள், கண் எதிர் நின்று போர் செய் கார் கெழும் அவுணர் பற்றி—கண்ணுக்கெதிரே நின்று போரைச் செய்கின்ற கருநிறமிக்க அசுரர்களைப்பிடித்து, துண் என விண் இடை வீச—விரைவாக ஆகாயத்திலெறிய, இறந்து—அவ்வசுரர்கள் உயிர்பிரிந்து, துளங்கிய கலன்களோடும் நொய்தின் வீழ்வது—விளங்குகின்ற ஆபரணங்களுடன் விரைவாகப் பூமியில் விழுதல், விசும்பில் தப்பி—ஆகாயத்தினின்றுந் தவறி, மின்னுவோடும்—மின்னலுடன், மண் இடை வரும் முகில் போன்றது—பூமியில் வந்து விழுகின்ற மேகத்தை நிகர்த்தது எ—று.

கருநிறமுள்ள அவுணர் பூதர்களாலெறியப்பட்டு இறந்து ஆபரணங்களுடன் விழுதல் மேகங்கள் மின்னலுடன் பூமியில் விழுதல் போலுமென்பது கருத்து. மின்னு என்பதில் உகரம் சாரியை. மாயையான் மறையாது நின்று பொருத வென்பார் 'கண்ணெதிர்நின்றுபோர்செய்' என்றார். வீச - வீழ்வது போன்றது என இயையும். (45)

ஆயிர வெள்ள மாகுங் கணவரும் ஆங்க ணுள்ள
பாயிருங் குன்ற மெல்லாம் பன்முறை பறித்து வீசி
மாயிருந் தகுவர் தானை வரம்பில படுத்து நின்றார்
ஏயென வுலகைச் சிந்தும் இறுதிநாள் எழிலி போல்வார்.

இ—ள்: ஆயிர வெள்ளம் ஆகும் கணவரும்—ஆயிரவெள்ளமெனுந் தொகையமைந்த பூதரனைவரும், ஆங்கண் உள்ள பாய் இரும் குன்றம் எல்லாம் பல் முறை பறித்து வீசி—அவ்விடத்திருக்கின்ற பரந்த பெரிய மலைகளையெல்லாம் பல முறை பிடுங்கியெறிந்து, மா இரும் தகுவர் தானை வரம்பு இல படுத்து—மிகப்பெரிய அசுரசேனைகளுள் அளவிறந்தனவற்றையழித்து, ஏ என உலகை சிந்தும் இறுதி நாள் எழிலி போல்வார் நின்றார்—விரைவாக உலகத்தையழிக்கின்ற ஊழிகாலத்து மேகங்களைப்போன்று நின்றார்கள் எ—று.

ஊழிகாலத்து மேகங்கள் கன்மழையையிடைவிடாது சொரிந்து உலகத்தையழித்தல் போலப் பூதரும் மலைகளை மழைபோல இடைவிடாது சொரிந்து அசுரரை யழித்தனரென்பது கருத்து. பாய்தல்-பரவுதல். மா இரு என்பது உரிச்சொற் புணர்ச்சியாதலால் வகரவுடம்படு மெய் பெறாது யகரம் பெற்று முடிந்தது. (46)

நிணங்கவர் ஞமலி யோர்சார் ஞெரேலெனக் குரைப்பப் புள்ளின்
கணங்களும் அலகை தானுங் கறங்கிடக் கானத் தோங்கிப்
பிணங்களின் அடுக்கல் ஈண்டிப் பேரமர் விலக்கி யார்க்கும்
அணங்குறு நிலைய வாகி அடுத்தன நடுவண் அம்மா.

இ—ள்: நிணம் கவர் ஞமலி ஓர் சார் ஞெரேல் என குரைப்ப—தசையைக் கவருகின்ற நாய்கள் ஒரு பக்கத்தில் ஞெரேலென்னுமோசையுடன் குரைக்கவும், புள்ளின் கணங்களும் அலகை தானும் கறங்கிட—பறவைக் கூட்டங்களும் பேய்க் கூட்டங்களும் உலாவவும், பிணங்களின் அடுக்கல் ஈண்டி—பிண மலைகள் நெருங்கி, ககனத்து ஓங்கி—ஆகாயமளவு முயர்ந்து, பேர் அமர் விலக்கி—நிகழ்கின்ற பெரிய போரைத் தடுத்து, யார்க்கும் அணங்கு உறும் நிலைய ஆகி—எவர்க்குமச்சத்தை விளைக்குமியல்பினவாய், நடுவண் அடுத்தன—இரு திறத்தாருக்குமிடையிலே பொருந்தின எ—று.

ஞெரேல்-விரைவுக் குறிப்புமாம். ஒருவரோடொருவர் எதிர்த்துப் பகைமை பூண்டு பொரும் பொழுது அவர்க்கிடையே மலைபோலத் தோன்றி ஒருவரையொருவர் காணவொட்டாது தடுத்து நிற்றலால் 'பேரமர் விலக்கி' என்றார். உறும்-பிறவினை விகுதி தொக்க பெயரெச்சம். (47)

தரைத்தடஞ் சிலைய தாகத் தறுகண்வெம் பூதரானோர்
வரைத்துணை அன்ன தாளே வலிகெழு குழவி யாகத்
திரைத்திழி குருதி நீராத் தீர்ந்திடு திறலோர் யாக்கை
அரைத்தென நடப்ப ஏற்றார் அவுணரும் அடுபோர் செய்வார்.

இ—ள்: தறுகண் வெம் பூதர் ஆனோர்—அஞ்சாத்தன்மையையுடைய கொடிய பூதர்கள், தரை தடம் (ஏ) சிலையது ஆக—பூமியே அம்மியாகவும், வரை துணை அன்ன தாளே வலி கெழு குழவி ஆக—இரண்டு மலைகள் போன்ற கால்களே வலிமை பொருந்திய குழவியாகவும், திரைத்து இழி குருதி (ஏ) நீர் ஆ—பெருகிப் பாய்கின்ற இரத்தமே நீராகவும், தீர்ந்திடு திறலோர்

யாக்கை அரைத்து என நடப்ப—இறந்த அசுர வீரர்களுடைய சரீரத்தை அரைத்தாற்போல நடக்க, அவுணரும் அடு போர் செய்வார் ஏற்ருர்—அசுரர்களுங் கொலைத் தொழின் மிக்க போரைச் செய்பவர்களாயெதிர்த்தார்கள் எ—று.

பிரிநிலை யேகாரம் ஒவ்வொன்றுக்குங் கூட்டப்பட்டது. அரைத்தற் கருவியாதற்கேற்ப 'வரைத்துணையன்னதாள்' எனவும், முன்னையின் மிக்க அபிமானங் கொண்டு பொருதனராதலின் 'அடுவோர்' எனவும் விசேடித்தார். தம்முளியைபுடையனவாகத் தெரிந்து உருவகஞ் செய்தலால் இது இயைபுருவகம். (48)

தத்துறு புரவித் திண்டேர்த் தானவர் நிகளத் தந்தி
பத்துநா ருென்றில் வீழப் பழுமரப் பணைகொண் டெற்றி
முத்தலை யெஃகம் வீசி முசலத்திற் புடைத்து மொய்ம்பால்
குத்திநின் றுழக்கிப் பாய்ந்து கொன்றனர் பூத வீரர்.

இ—ள்: பூதவீரர்—பூதசேனுவீரர்கள், தத்து உறு புரவி திண் தேர் தானவர் நிகள தந்தி —தாவிச்செல்லுகின்ற குதிரைகள் பூண்ட வலிய தேரையுடைய அசுரர்களது விலங்கு பூட்டப்படுகின்ற யானைகள், ஒன்றில் பத்து நூறு வீழ— ஓரடியில் ஆயிரக்கணக்காக விழும்படி, பழு மர பணை கொண்டு எற்றி—பெருத்த மரங்களின் கிளைகளாலடித்தும், முத்தலை எஃகம் வீசி—மூன்றுதலைகளையுடைய சூலப்படைகளைச் செலுத்தியும், முசலத்தில் புடைத்து—இருப்புலக்கைளாலடித்தும், மொய்ம்பால் குத்தி—கைகளாற் குத்தியும், நின்று உழக்கி—நின்றுதுவைத்தும், பாய்ந்து—மேலே பாய்ந்தும், கொன்றனர்—கொன்ருர்கள் எ—று.

பத்துநூறு - எண்ணையுணர்த்தாது மிகுதியையுணர்த்தி நின்றது. பழுமரம் - முதிர்ந்தமரம். மொய்ம்பு - இலக்கணையாற் கையைக்குறித்தது; வலிமையோடு எனக்கூறினுமாம். ''தத்துறு'' இதற்கு வேறும் பொருளுண்டு. (49)

விழுந்தன படிவம் யாண்டும் விரிந்தன கவந்த மேன்மேல்
எழுந்தன குருதித் தாரை ஈர்த்தன நீத்த மாக
அழுந்திய இறந்தோர் யாக்கை ஆர்த்தன பறவை செய்ய
கொழுந்தசை மிசைந்து நின்று குரவையாட் டயர்ந்த கூளி.

இ—ள்: படிவம் யாண்டும் விழுந்தன—உயிர்பிரிந்த உடல்கள் எவ்விடங்களினும் விழுந்தன, கவந்தம் விரிந்தன—உடற்குறைகள் பரந்தன, குருதி தாரை மேல் மேல் எழுந்தன—இரத்ததாரைகள் பின்னும் பின்னுங் கிளர்ந்து, நீத்தம் ஆக—வெள்ளமாய்ப்பெருகி, அழுந்திய இறந்தோர் யாக்கை ஈர்த்தன—அழுந்திக்கிடந்த இறந்தவர்களது சரீரங்களை இழுத்தன, பறவை ஆர்த்தன—பக்ஷிக் கூட்டங்களொலித்தன, கூளி செய்ய கொழும் தசை மிசைந்து நின்று குரவையாட்டு அயர்ந்த—பேய்கள் செந்நிறமுள்ள கொழுத்த ஊனைப் புசித்து நின்று குரவைக்கூத்தாடின எ—று.

கவந்தம் - கபந்தமென்னும் வடசொல்லின்றிரிபு. தாரை - தொடர்பாய்ச் சிந்து மொழுக்கு. ஆக - எச்சத்திரிபு. குரவை - கைகோத்தாடல். கோபவேசத்தோடு போர்செய்துநின்ற வீரரது உடல்கள் தலையற்றபின்னுந் தமது ஊக்கங் குறையாது மேலெழுந்து நின்று கூத்தாடுவன. அன்றியும் ''பேரொத்தவாயிரம் பேர்மடிந்தாற் பிறக்குங்கவந்த - நேரொத்தவாடும்'' எனவும், ''ஆனையாயிரந்

தேர்பதி னுயிரமடர்பரி யொருகோடி - சேனைகாவலராயிரம் பேர்படிற் செழுங்கு வந்தமொன்றாடும்'' எனவும் ''அனேகமாயிரம் பேர்படக்கவந்தமொன்றாடும்'' எனவும் கூறியவாறு இறந்தசேனைகளின்றொகைக்கேற்ற தொகையமைந்த கவந்தங்கள் ஆடினவெனினுமாம். தசை - சதை என்றதன் எழுத்துநிலைமாறிய இலக்கணப்போலி. அயர்தல் - செய்தல். (50)

கண்டனன் இனைய தன்மை தாரகன் கடிய சீற்றங்
கொண்டனன் வையம் நீங்கிக் குவலய மிசைக்குப் புற்றுத்
தண்டமொன் றெடுத்துப் பூதப் படையினைத் தரையில் வீட்டி
அண்டமுங் குலுங்க ஆர்த்திட் டடிகளால் உழக்கிச் சென்றான்.

இ—ள்: தாரகன் இனைய தன்மை கண்டனன்—தாரகாசுரன் இத்தன்மையைப் பார்த்து, கடிய சீற்றம் கொண்டனன்—கடுங் கோபத்தைக் கொண்டு, வையம் நீங்கி—தேரினின்றும் நீங்கி, குலவிய மிசை குப்புற்று—பூமியிற் குதித்து, தண்டம் ஒன்று எடுத்து—ஒரு தண்டாயுதத்தைக் கையிலெடுத்து பூதப்படையினை தரையில் வீட்டி—பூதசேனைகளை யடித்துப் பூமியில் விழுத்தி, அண்டமும் குலுங்க ஆர்த்திட்டு—அண்டகோளங்களும் நடுங்கும்படி ஆரவாரித்து, அடிகளால் உழக்கி சென்றான்—கால்களாலுழக்கிக் கொண்டு போனான் எ—று.

இனையதன்மை-தன் பக்கத்தாருட் பெரும்பாலார் மாண்டமை. குவலயம்-வடசொல். கு-பூமி. வலயம்-மண்டலம். (51)

அல்லெனப் பட்டமேனி அவுணர்கட் கரசன் கையிற்
கல்லெனப் பட்ட தண்டாற் புடைத்தலுங் கரங்கள் சென்னி
பல்லெனப் பட்ட சிந்திப் பாய்புனல் ஒழுக்கிற் சாய்ந்த
புல்லெனப் பட்ட தம்மா பூதர்தஞ் சேனை யெல்லாம்.

இ—ள்: அல் என பட்ட மேனி அவுணர்கட்கு அரசன்—இருள் போன்ற கரிய சரீரத்தையுடைய அசுரர்க்கரசனாகிய தாரகன், கையில் கல் என பட்ட தண்டால் புடைத்தலும்—தன் கையிலுள்ள மலைபோன்ற தண்டாயுதத்தாலடித்தலும், பூதர் தம் சேனை எல்லாம்—பூதசேனை முழுதும், கரங்கள் சென்னி பல் என பட்ட சிந்தி—கைகளுந் தலைகளும் பற்களுமாகிய இவ்வுறுப்புக்கள் சிதறப்பெற்று, பாய் புனல் ஒழுக்கில் சாய்ந்த புல் என பட்ட—வேகமாய்ப் பாய்கின்ற நீரோட்டத்தாற் றலைசாய்ந்த புற்கள் போலாயின எ—று.

அம்மா-வியப்பிடைச்சொல். முன்னர் அசுரரோடு மிக்க வீரத்துடன் பொருது நின்ற பூதரனைவருந் தாரகனொருவனால் இங்ஙனமாக்கப்பட்டது வியப்பாமென்க. நீரோட்டத்தாற் சாய்ந்த புற்கள் அந்நீர் பாய்ந்து முடிந்த பின்னெழுதல் போலத் தாரகனுலழிந்து விழுந்த பூதர்கள் அவனிறந்தபின் மீண்டுமெழுதலின் 'பாய் புனலொழுக்கிற் சாய்ந்த புல்லெனப்பட்ட' என்றார். (52)

பிடித்திடு வயிரத் தண்டம் பெருங்கடற் பூத வெள்ளம்
முடித்திடல் புகலோ அன்றால் தாரக மொய்ம்பின் மேலோன்
அடித்திடுங் காலை கீண்ட தம்புவி அடிப்பான் ஓங்கி
எடுத்திடுங் காலை கீண்ட தெண்டிசை அண்டச் சூழல்

**இ—ள்:** தாரக மொய்ம்பின் மேலோன் அடித்திடும் காலே—வலிமையின் மேம்பட்ட தாரகாசுரன் அடித்தபொழுது, அம்புவி கீண்டது—அழகிய பூவுலகங் கிழிந்தது, அடிப்பான் ஓங்கி எடுத்திடும் காலே—அடிக்கும்படி உயர்த்தித் தூக்கிய பொழுது, எண் திசை அண்ட சூழல் கீண்டது—எட்டுத்திக்குகளிலுமுள்ள அண்ட கடாகம் பிளவுபட்டது (ஆதலின்), பிடித்திடு வயிர தண்டம்—அவன் கையிலெடுத்த வைரித்த தண்டாயுதம், பெரும் கடல் பூத வெள்ளம் முடித்திடல் புகழோ—பெரிய கடல் போன்ற பூதசேனுவெள்ளத்தை யழிப்பது ஒரு கீர்த்தியாகுமா?, அன்று—ஆகாது எ—று.

புகழோ என்பதில் ஓகாரமே எதிர்மறையை விளக்கப் பின்னரும் அன்று என்றது வற்புறுத்தற் பொருட்டென்க. "முனிவர் சொற் பொய்க்குமோ பொய்யாதே" என்றிவ்வாறு பிறருங் கூறியுள்ளார். (53)

தாரிடங் கொண்ட மார்பத் தாரகன் வயிரத் தண்டம்
போரிடங் கொண்டோர் சென்னி புயமுரங் கரங்கள் சிந்திக்
காருடங் கண்ட பாந்தட் கணமெனத் துடிப்ப வீட்டிப்
பாரிடந் தன்னே யெல்லாம் பாரிடம் ஆக்கிற் றம்மா.

**இ—ள்:** தார் இடம் கொண்ட மார்ப தாரகன் வயிர தண்டம்—மாலையைத் தன்னிடத்திற்றுங்கிய மார்பையுடைய தாரகாசுரனது வைரித்த தண்டாயுதமானது, போர் இடம் கொண்டோர் சென்னி புயம் உரம் கரங்கள்—போர்க்களத்தினின்ற பூதர்களது தலைகளேயும் தோள்களேயும் மார்புகளேயும் கைகளேயும், சிந்தி—சிதைத்து, காருடம் கண்ட பாந்தள் கணம் என துடிப்ப வீட்டி—கருடனது தோற்றத்தைக் கண்ட சர்ப்பக் கூட்டங்களேப் போலத் துடிக்கும்படி விழுத்தி, பாரிடம் தன்னே எல்லாம் பார் இடம் ஆக்கிற்று—அப் பூத கணங்களேயெல்லாம் பூமியிற் கிடக்கும்படி விழுத்தியது எ—று.

காருடம்-கருட சம்பந்தமானது; தத்திதாந்தம். அம்மா-வியப்பிடைச் சொல். பாரிடத்தைப் பாரிடமாக்கிற்றெனப் பொருத்தமில்லாததோர் பொருடோன்றி அப்பொருள் முரண் பாரிடம் என்றதன் சிலேடைக் கருத்தை நோக்குமிடத்து நீங்குதலால் முரண் விளேந்தழிவணி. முன்னர்ப் பாரிடமென்று பெயர் பெற்றிருந் பூதகணத்தைப் பின்னர்ப் பூமியிற் கிடத்தலாற் பாரிடமென்னும் பெயர் பெறச் செய்ததென நிருத்தியலங்காரத்தின் போக்குத் தோன்ற உரை கூறினுமமையும். (54)

அன்றரி விடுத்த ஆழி ஆரமா வணிந்த தீயோன்
கொன்றனன் அனிக மென்னுங் கொள்கையும் அவன்மேற் செல்லும்
வன்றிறல் தம்பால் இல்லா வண்ணமும் மதித்து நோக்கி
நின்றிலர் பூதர் வேந்தர் நெஞ்சழிந் துடைந்து போனுர்.

**இ—ள்:** அன்று அரி விடுத்த ஆழி ஆரம் ஆ அணிந்த தீயோன்—முற்காலத்திலே திருமால் செலுத்திய சக்கராயுதத்தைப் பதக்கமாகத் தரித்த கொடிய தாரகாசுரன், அனிகம் கொன்றனன் என்னும் கொள்கையும்—தமது சேனேகளேக் கொன்றுனென்னுந் தன்மையையும், அவன் மேல் செல்லும் வன் திறல் தம் பால் இல்லா வண்ணமும்—அவன் மேற் போர்க்குச் செல்லுதற்கேற்ற பெரு

வலி தம்மாட்டிலதாய தன்மையையும், மதித்து நோக்கி—சிந்தித்துப் பார்த்து, பூதர் வேந்தர்—பூதசேனைத் தலைவர்கள், நெஞ்சு அழிந்து—மனநிலை குலைந்து, நின்றிலர் உடைந்து போனார்—முன்னிற்காது தோற்றோடினார்கள் எ—று.

நெஞ்சு-ஆகுபெயர். (55)

திண்கண நிரையின் வேந்தர் சிந்துழிச் சீற்றந் தூண்ட
எண்கண மாகி யுள்ள இலக்கருஞ் சிலைகா லூன்றி
மண்கலை முழவம் விம்ம வயிரெழுந் திசைப்ப வாங்கி
ஒண்கலை மாரி தூவி அவுணனை ஒல்லை சூழ்ந்தார்.

இ—ள்: திண் கண நிரையின் வேந்தர் சிந்துழி—வலிய பூதகணத் தலைவர்கள் இரிந்தோடும்பொழுது, எண் கணம் ஆகி உள்ள இலக்கரும்—மதிக்கத் தக்க கூட்டமாகியுள்ள இலக்க வீரர்களும், சீற்றம் தூண்ட—கோபம் உந்த, மண் கலை முழவம் விம்ம—மார்ச்சனை மண் பூசிய முரச வாத்தியமொலிக்க, வயிர் எழுந்து இசைப்ப—ஊது கொம்புகள் பேரொலி செய்ய, சிலை கால் ஊன்றி வாங்கி—வில்லைக் கால் விரலால் மிதித்து வளைத்து, ஒண் கலைமாரி தூவி—ஒளி பொருந்திய அம்பு மழையைச் சொரிந்து கொண்டு, அவுணனை ஒல்லை சூழ்ந்தார்—தாரகாசுரனை விரைவில் வளைந்தார்கள் எ—று.

வில்லின் ஒரு கோடியை இடக்கால் விரலாலூன்றி மற்றொரு கோடியை இடக் கையாற் பிடித்திழுத்து வளைத்தலியல்பென்க. (56)

சூழ்ந்தனர் துரந்த வாளி தோன்முகத் தவுணன் யாக்கை
போழ்ந்தில ஊறதேனும் புணர்த்தில புன்மை யாகித்
தாழ்ந்திடு நிரப்பின் மேலோன் ஒருமகன் தலைமை தாங்கி
வாழ்ந்தவர் தமக்குச் சொல்லுஞ் சொல்லென வறிது மீண்ட.

இ—ள்: சூழ்ந்தனர் துரந்த வாளி—இவ்வாறு இலக்க வீரர்கள் சூழ்ந்து நின்று செலுத்திய பாணங்கள், தோல் முகத்து அவுணன் யாக்கை போழ்ந்தில—யானை முகத்தையுடைய தாரகாசுரனது சரீரத்தைப் பிளவாதனவாய், ஊறது ஏனும் புணர்த்தில—ஊறுபாட்டைத் தானுஞ் செய்யாதனவாய், புன்மை ஆகி—எளிமைப்பட்டு, தாழ்ந்திடு நிரப்பின் மேலோன் ஒரு மகன்—கீழ்மையைத் தருகின்ற வறுமையை மிகவுடையவனாகிய ஒரு மனிதன், தலைமை தாங்கி வாழ்ந்தவர் தமக்கு சொல்லும் சொல் என—தலைமை பூண்டு வாழுகின்ற செல்வர்களுக்குச் சொல்லுஞ் சொற்போல, வறிது மீண்ட—பயன்பெறாது திரும்பின எ—று.

வறிஞர் கூறியன நன்மொழியாயினும் செல்வராற் பொருட்படுத்தப் படாமைபோல இலக்கரேவிய பாணங்கள் கூர்மையுடையவாயினுந் தாரகனாற் பொருட்படுத்தப்பட்டிலஎன்பது கருத்து. "நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல் கூர்ந்தார்—சொற் பொருள் சோர்வு படும்" எனுந் திருக்குறள் ஈண்டுய்த் துணர்தற்பாலது. ஊறு புணர்த்தல்—அடையாளப்படுத்தல். எல்லாப் பொருள்களும் நிரம்பியிருத்தலைக் குறிக்கும் நிரப்பு என்னுஞ் சொல் எதிர்மறையிலக் கணையாய்ச் செல்வஞ் சிறிதுமில்லாமையைக் குறித்தது. (57)

தரைபடப் புகழ்வைத் துள்ள தாரகன் தடமார் பத்தைப்
புரைபடச் செய்தி டாது பொள்ளெனப் பட்டு மீண்டு
நிரைபடத் திறலோர் உய்த்த நெடுங்கணை யான வெல்லாம்
வரைபடச் சிதறுங் கல்லின் மாரிபோல் ஆன வன்றே.

**இ—ள்:** திறலோர் நிரை பட உய்த்த நெடும் கணை ஆன எல்லாம்—இலக்க வீரர்கள் நிரையாகச் செலுத்திய நெடிய பாணங்களெல்லாம் தரை பட புகழ் வைத்து உள்ள தாரகன் தட மார்பத்தை புரை பட செய்திடாது—உலக மெங்கும் பரவும்படி கீர்த்தியை நாட்டியுள்ள தாரகாசுரனது விசாலித்த நெஞ்சைத் துளைபடுத்தாமல், பொள் என பட்டு மீண்டு—விரைவிற் பட்டுத் திரும்பி, வரை பட சிதறும் கல்லின் மாரி போல் ஆன—மலையிற் பட்டுச் சிதறுங் கன் மழை போலச் சிதறின எ—று.

ஏனைய இடங்களை யழிக்கவல்ல கன்மழை மலையின் மேற்பட்ட வழி யாதோ ரூறுஞ் செய்யாது அயலிற் சிதறிக் கிடத்தல் போல, ஏனைய வீரரையழிக்க வல்ல பாணங்கள் தாரகன் மேலேவப்பட்ட வழிச் சிறிதுமூறு செய்யாது அயலில் வீழ்ந்து கிடந்தன என்பது கருத்து. (58)

விடுகணை மாரி யாவும் மீண்டிட வெகுண்டு விண்ணோர்
படைமுறை வழங்கி நிற்பப் பதகன்மேல் அவைகள் எய்தா
உடையதம் வலியுஞ்சிந்தி ஒல்லென மறிந்து செல்லக்
கடவுளர் அதனை நோக்கிக் கரங்குலைத் திரங்க லுற்றார்.

**இ—ள்:** விடு கணை மாரி யாவும் மீண்டிட—இலக்க வீரர்கள் செலுத்திய அம்பு மழை முழுவதும் ஊறு செய்யாது திரும்ப, வெகுண்டு—அவர்கள் கோபித்து, விண்ணோர் படை முறை வழங்கி நிற்ப—தேவப் படைக்கலங்களை முறைப்படி பிரயோகித்து நிற்க, அவைகள் பதகன் மேல் எய்தா—அந்தப் படைகள் பாதகனாகிய தாரகாசுரன் மேற்பட்டு, தம் உடைய வலியும் சிந்தி—தமது வலிமையுங் கெட்டு, ஒல் என மறிந்து செல்ல—விரைவாகத் திரும்பிப் போக, கடவுளர் அதனை நோக்கி—தேவர்கள் அத்தன்மையைப் பார்த்து, கரம் குலைத்து இரங்கலுற்றார்—கைகுலைத்து வருந்தினார்கள் எ—று.

மழை போலப் பெருந் தொகையாகச் செலுத்துதலின் கணையை மாரியாக உருவகித்தார். தம் பக்கத்தாராகிய இலக்க வீரர்க்குத் தோல்வி நேரிடுதலால் தேவர் கைகுலைத் திரங்கினரென்க. வலியும் என்பதில் உம்மை-மாற்றான் வலியைச் சிந்தாமையை விளக்கி நின்றது. (59)

மற்றது காலை தன்னில் வலியினால் வயிரத் தண்டஞ்
சுற்றினன் தற்சூழ் கின்ற சுடர்மணிக் கடுமான் தேர்கள்
எற்றினன் புழைக்கை நீட்டி இலக்கர்தந் தொகையும் வாரிப்
பொற்றனு வோடும் வீழப் புணரியின் மீது விட்டான்.

**இ—ள்:** அது காலை தன்னில்—அப்பொழுது, வலியினான்—வலிமையையுடைய தாரகாசுரன், வயிர தண்டம் சுற்றினன்—வைரித்த தனது தண்டாயுதத்தைச் சுழற்றி, தன் சூழ்கின்ற சுடர் மணி கடு மான் தேர்கள் எற்றினன்—தன்னை வளைகின்ற ஒளி பொருந்திய இரத்தினமழுத்தப் பெற்ற வேகம் பொருந்திய குதிரை பூண்ட தேர்களை அடித்து, புழைக்கை நீட்டி இலக்கர் தம்

தொகையும் வாரி—துதிக்கையை நீட்டி இலக்க வீரர்களது தொகுதி முழுவதையுமள்ளி, பொன் தனுவோடும் வீழ புணரியின் மீது விட்டான்—அழகிய விற்களுடன் விழும்படி சமுத்திரத்திலெறிந்தான் எ—று.

புணரி-நதிகளோடு புணருந் தன்மையையுடையது. நதிகளாகிய பெண்கட்குக் கடலைக் கணவனென்பது மரபு. (60)

துளும்பிய அளக்கர் தன்னில் சூழுற நின்ற தெங்கின்
வளம்படு பழுக்காய் வர்க்கம் மாருதம் எறியச் சிந்திக்
குளம்புகு தன்மை யென்ன வீழ்தரு கொற்ற வீரர்
இளம்பிறை புரையும் வில்லோ டெழுந்தொரு புடையிற் போனார்.

இ—ள்: சூழுற நின்ற தெங்கின் வளம் படு பழு காய் வர்க்கம்—சுற்றி நிற்கின்ற தென்னை மரங்களின் செழிப்பமைந்த பழுத்த காய்களின்றொகுதி, மாருதம் எறிய சிந்தி குளம் புகு தன்மை என்ன—காற்று வீசும்பொழுது உதிர்ந்து குளத்தில் விழுகின்ற தன்மையைப் போல, துளும்பிய அளக்கர் தன்னில் வீழ்தரு கொற்ற வீரர்—அலை வீசப் பெற்ற கடலில் விழுந்த வெற்றியை யுடைய வீரர்கள், இளம் பிறை புரையும் வில்லோடு—இளம்பிறையை யொத்த விற்களுடன், எழுந்து—அக் கடலினின்று மெழும்பி, ஒரு புடையில் போனார்—ஒரு பக்கத்திற் போனார்கள் எ—று.

தென்னை மரங்களிலுள்ள பழுத்த காய்கள் காற்று வீசும்போதுதிர்ந்து குளத்தில் விழுவது போலத் தேர்களினின்ற வீரர்கள் அத் தாரகாசுரன் துதிக்கையாலள்ளி வீசும்போது கடலில் வீழ்ந்தனரென்க. அளக்கர் தன்னில் வீழ்தரு என இயையும். பழு-முதனிலைத் தொழிற் பெயர். (61)

கொற்றவில் உழவன் வீர கோளரி யதனை நோக்கிச்
செற்றமோ டேகிச் செவ்வேள் சேவடி மனத்துட் கொண்டு
பற்றிய தனுவை வாங்கிப் பகழிநூ றுய்த்துத் தீயோன்
பொற்றட மவுலி தள்ளிப் புணரியும் நாண ஆர்த்தான்.

இ—ள்: கொற்ற வில் உழவன் வீரகோளரி அதனை நோக்கி—வெற்றியையுடைய வில் வீரராகிய வீரகேசரி யென்பவர் அத் தன்மையைப் பார்த்து, செற்றமொடு ஏகி—கோபத்தோடு சென்று, செவ்வேள் சே அடி மனத்துள் கொண்டு—முருகக் கடவுளது சிவந்த திருவடிகளை மனத்திற்றியானித்துக் கொண்டு, பற்றிய தனுவை வாங்கி—கையிலெடுத்த வில்லை வளைத்து, நூறு பகழி உய்த்து—நூறு பாணங்களைச் செலுத்தி, தீயோன் பொன் தடமவுலி தள்ளி—கொடியவனாகிய தாரகாசுரனது பொன்னாலாகிய பெரிய கிரீடத்தைக் கீழே விழுத்தி, புணரியும் நாண ஆர்த்தான்—கடலும் வெட்கமுறும்படி ஆரவாரித்தார் எ—று.

வில்லுழவன்-விற் போரிற் பயிற்சியுடையவன். வீர கோளரி-பகை வீரராகிய யானைகளுக்குச் சிங்கம் போல்வான். செவ்வேள் சேவடி மனத்துட் கொண்டது தாம் வெற்றிபெறுதற் பொருட்டென்க. (62)

ஆர்த்திடு மோதை கேளா அண்டர்கள் அனையன் மீது
தூர்த்தனர் மலரின் மாரி தோன்முகன் அதனைக் காணு
வேர்த்தனன் மான முற்முன் வீரகே சரிமேல் அங்கைத்
தார்த்தடந் தண்டம் உய்த்துத் தனதுமான் தேரிற் சென்முன்.

**இ—ள்:** ஆர்த்திடும் ஓதை கேளா—ஆரவாரித்த ஒலியைக் கேட்டு, அண்டர்கள்—தேவர்கள், அனையன் மீது மலரின் மாரி தூர்த்தனர்—அந்த வீரகேசரியின் மேற் பூமழையைச் சொரிந்தார்கள், தோன் முகன் அதனை காணு—யானை முகத்தையுடைய தாரகாசுரன் அத் தன்மையைப் பார்த்து, வேர்த்தனன் மானம் உற்முன்—கோபித்து அபிமானங் கொண்டவனுய், அங்கை தார் தடம் தண்டம் வீரகேசரி மேல் உய்த்து—அகங்கையிற் பொருந்திய மாலை தூங்கப் பெற்ற விசாலித்த தண்டாயுதத்தை வீரகேசரியின் மேற் செலுத்தி, தனது மான் தேரில் சென்முன்—தன்னுடைய குதிரை பூண்ட தேரிலேறினுன் எ—று.

மலர் மாரி சொரிந்தது தங்கள் மாற்றுனுக்கு மகுட பங்கம் நேர்ந்த மகிழ்வாலென்க. (63)

## வேறு

சென்றோர் மாமுடி புனைவுழித் தண்டமத் திறலோன்
மன்றல் மார்பகம் படுதலும் வீழ்ந்தனன் மயங்கி
வென்றி மொய்ம்புடை ஆண்டகை யதுகண்டு வெகுண்டு
குன்றம் அன்னதோள் தாரக ஞெடுபொரக் குறித்தான்.

**இ—ள்:** சென்று ஓர் மா முடி புனைவுழி—தாரகாசுரன் தேரிலேறி ஒரு பெரிய கிரீடத்தைத் தரிக்கின்ற சமயத்தில், தண்டம்—தண்டாயுதம், அ திறலோன் மன்றல் மார்பு அகம் படுதலும்—அவ் வீரகேசரியினது வாசனை பொருந்திய மார்பிற் படுதலும், மயங்கி வீழ்ந்தனன்—மயங்கி விழுந்தார், வென்றி மொய்ம்பு உடை ஆண்தகை—வீரவாகுதேவர், அதுகண்டு வெகுண்டு—அதனைப் பார்த்துக் கோபித்து, குன்றம் அன்ன தாள் தாரகனெடு பொர குறித்தான்—மலையைப் போன்ற புயங்களையுடைய தாரகாசுரனேடு போர் செய்ய நினைத்தார் எ—று.

வென்றி மொய்ம்புடையாண்டகை-வெற்றி பொருந்திய புயங்களையுடைய ஆண்டகை. ஆண்டகை-ஆண்மைக் குணங்களையுடையவன். (64)

## வேறு

குறித்தேவிறல் புயன்தாரகக் கொடியோன் எதிர் குறுகி
வெறித்தேன்மலர்த் தொடைதூங்குதன் விறற்கார் முகங் குனியாப்
பொறித்தேயுறு கனல்வாளிகள் பொழிந்தேயவன் புரத்தில்
செறித்தேயுற வளைத்தான் ஒரு சிலைதானவர் தலைவன்.

**இ—ள்:** விறல் புயன்—வீரவாகுதேவர், குறித்து—அங்ஙனம் நினைத்து, தாரக கொடியோன் எதிர் குறுகி—தாரகாசுரனுகிய பாவிக்குமுன் சமீபித்து, வெறி தேன் மலர் தொடை தூங்கு தன் விறல் கார்முகம் குனியா—வாசனையையுந் தேனையுமுடைய பூமாலை தூங்கப்பெற்ற தமது வலிய வில்லை வளைத்து,

பொறித்தே உறு கனல் வாளிகள் பொழிந்து—அக்கினிப் பொறியைக் கான்று கொண்டேயிருக்கின்ற சுடு சரங்களைச் சொரிந்து, அவன் புரத்தில் செறித்து உற—அத் தாரகாசுரனது சரீரத்திலழுத்தி நிற்க, தானவர் தலைவன்—அசுரர்க் கரசனாகிய தாரகன், ஒரு சிலை வளைத்தான்— ஒரு வில்லை வளைத்தான் எ—று.

கார்முக மென்னும் வடசொல் போர்த்தொழில் செய்தற்குச் சிறந்ததெனப் பொருள்படும். பொறித்தே யென்பதில் ஏகாரம் இடைவிடாமையைக் குறித்தது. (65)

பொழிந்தான்சர மழைநம்மவன் புரமேலது பொழுதின்
இழிந்தான்சிலை யுயர்ந்தான்கணை ஈரேழுதொட் டிறுப்ப
அழிந்தாயெனை எதிர்ந்தாய்இதற் கையமிலை யென்னு
மொழிந்தான்ஒரு சூலந்தனை மொய்ம்பிற்செல வுய்த்தான்.

இ—ள்: நம்மவன் புரமேல் சர மழை பொழிந்தான்—(இவ்வாறு வில்லை வளைத்த தாரகாசுரன்) எம்மவராகிய வீரவாகுதேவரது சரீரத்திற்படும்படி பாணமழையைச் சொரிந்தான், அது பொழுதில்—அப்பொழுது, உயர்ந்தான்—மேம்பாடுடையவராகிய வீரவாகுதேவர், ஈரேழு கணை தொட்டு—பதினான்கு பாணங்களைச் செலுத்தி, இழிந்தான் சிலை இறுப்ப—இழிவுடையனாகிய தாரகாசுரனது வில்லை வெட்ட, எனை எதிர்ந்தாய்—(தாரகாசுரன் அவரை நோக்கி) நீ என்னை எதிர்த்தாய் (ஆதலின்), அழிந்தாய்—இறந்தாய், இதற்கு ஐயம் இல்லை என்னு—இதற்குச் சந்தேகமில்லையென்று, மொழிந்தான்—சொல்லி, ஒரு சூலம் தனை மொய்ம்பில் செல உய்த்தான்—ஒரு சூலப்படையை வலிமையோடு தாக்கும்படி விடுத்தான் எ—று.

ஆசிரியர், சுப்பிரமணியக்கடவுளின் மேலிடை விடாத பத்தியுடையராதலின் அவரது தம்பியராகிய வீரவாகுதேவரை 'நம்மவன்' என்றார். அழிந்தாய்-விரைவுந் தெளிவும் பற்றி எதிர்காலம், இறந்த காலமான வழுவமைதி. ஐயம் மிலை-விரித்தல் விகாரம். மொய்ம்பிற் செல என்பதற்கு தோளின் மேற்பாய எனல் பொருந்தாது, மேற் செய்யுளில் 'மார்புற' என்றதனால். (66)

பொருமூவிலை வேலங்கவன் பொன்மார்புறப் பொருமிப்
பெருமோகமோ டேநின்றிடப் பின்னங்கது காணு
உருமேறென அதிர்தாரக னுடனேயவன் துணையாய்
வருமூவரும் ஒருநால்வரும் மாறுற்றமர் இழைத்தார்.

இ—ள்: பொரு மூ இலை வேல் அவன் பொன் மார்பு உற—போரிற் சிறந்த முக்கவர் பொருந்திய சூலப்படை அவ் வீரவாகுதேவரது அழகிய மார்பி லழுந்திய பொழுது, பொருமி—அவர் வருந்தி, பெரு மோகமொடு நின்றிட—மிகுந்த மயக்கத்தோடு நிற்க, பின்—அதன் பின்பு, அவன் துணை ஆய் வரும் மூவரும் ஒரு நால்வரும்—அவருக்குத் தம்பியாயுள்ள எழுவரும், அது காணு—அத் தன்மையைப் பார்த்து, உரும் ஏறு என அதிர் தாரகன் உடன்—பேரிடி போல முழங்கி வருகின்ற தாரகாசுரனுடன், மாறு உற்று அமர் இழைத்தார்—எதிர்த்துப் போரைச் செய்தார்கள் எ—று.

பின் உடனென்னும் பொருளைக் குறித்தது. மூவருமொரு நால்வருமென்றது-வீரவாகுதேவரின் தம்பியரெண்மருள் முன்பொருது தோற்ற வீரகேசரி யொழிந்த எழுவரையென்க. உருமேறு-சிறந்த இடி. (67)

அமர்செய்திடும் எழுவீரரும் அவுணன்றனக் குடையக்
குமரன்பதந் தலைகொண்டிடுங் கோமானது காணு
எமர்மற்றிவர் எல்லோர்களும் இரிந்தார்பொரு தென்னுச்
சமர்முற்றிட வருதாரகத் தகுவன்முனம் அடைந்தான்.

இ—ள்: அமர் செய்திடும் எழு வீரரும் அவுணன் தனக்கு உடைய—போர் செய்த ஏழு வீரர்களும் அத் தாரகாசுரனுக்குத் தோற்க, குமரன் பதம் தலை கொண்டிடும் கோமான்—முருகக்கடவுளது திருவடிகளைச் சிரமேற் கொள்ளுகின்ற தலைவராகிய வீரவாகுதேவர், அது காணு—அதனைப் பார்த்து, எமர் இவர் எல்லோர்களும் பொருது இரிந்தார் என்னு—எம்மவராகிய இவர்களெல்லோரும் இவ்வசுரனோடு போர் செய்து தோற்றார்களென்று நினைத்து, சமர் முற்றிட வரு தாரக தகுவன் முனம் அடைந்தான்—போரை முடிக்கும்படி வருகின்ற தாரகாசுரனுக்கு முன் போனுர் எ—று.

எமர் யாமென்பதனடியாகப் பிறந்த பலர்பாற் கிளைப்பெயர். (68)

ஒருகார்முகம் இருகால்வளை வுறவேகுனித் துகுதேன்
அருகாதொழு கியதன்மையின் அவிர்நாணுெலி யெடுப்பத்
திருகாநெடு வரையானவுந் தெருவந்தன அவுணர்
இருகாதையும் நனிபொத்தினர் ஏங்குற்றனர் இரிவார்.

இ—ள்: இரு கால் வளைவுற ஒரு கார்முகம் குனித்து—இரண்டு நுனிகளும் வளையும்படி ஒரு வில்லை வளைத்து, உகு தேன் அருகாது ஒழுகிய தன்மையின் அவிர் நாண் ஒலி எடுப்ப—ஊற்றிய தேன் இடைவிடாமற் சிந்திய தன்மையைப் போல விளங்குகின்ற நாணோசையைச் செய்ய, திருகா நெடு வரை ஆனவும் தெருமந்தன—சலனமில்லாத பெரிய மலைகளுஞ் சுழன்றன, அவுணர்—அசுரர்கள், இரு காதையும் நனி பொத்தினர் ஏங்குற்றனர் இரிவார்—தமதிரண்டு காதுகளையும் மிக மூடிக்கொண்டு திகைப்படைந்து அஞ்சியோடுவாரயினர் எ—று.

இடைவிடாதொழுகுந் தேன்றாரை வடிவத்தால் வில் நாணுக்குவமையென்க. திருகா என்பதைச் செய்யாவென் வாய்பாட்டு வினையெச்சமாகக் கொண்டு நெடிய மலைகளும் நிலைகெட்டுச் சுழன்றன எனப் பொருள் கூறினுமாம். (69)

நாண்கொண்டிடும் ஒலிகேட்டலும் நடுங்காவெரு வுற்றார்
பூண்கொண்டிடு சிலைவாங்கலும் மகிழ்வுற்றிடு புலவோர்
சேண்கொண்டிடும் முகில்வேண்டினர் அதுவந்திடச் சிறந்தே
மாண்கொண்டதன் உருமுச்செல மயங்கித்தளர் வதுபோல்.

இ—ள்: சேண் கொண்டிடும் முகில் வேண்டினர்—ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற மேகத்தின் வருகையை (மழையின் பொருட்டு) விரும்பியவர்கள், அது வந்திட சிறந்து மாண் கொண்டு—அம்மேகம் வந்தபொழுது சிறப்புற்று மாட்சிமையெய்தி, அதன் உருமு செல மயங்கி தளர்வது போல்—அம்மேகத்தினின்று தோன்றுமிடியானது வர அதனுல் மயக்கங்கொண்டு தளர்ச்சியடைதல்போல, பூண் கொண்டிடு சிலை வாங்கலும் மகிழ்வு உற்றிடு புலவோர்—குதை பொருந்

தியவில்லை வளைத்தவுடன் மன மகிழ்ந்த தேவர்கள், நாண் கொண்டிடும் ஒலி கேட்டலும் நடுங்கா வெருவுற்றார்—நாணினின்றுண்டான ஓசையைக் கேட்ட வுடன் நடுங்கிப் பயந்தார்கள் எ—று.

வெப்ப நீங்குதற் பொருட்டு மேகத்தின் வரவை யெதிர்பார்த்திருந்த மானுடர் அம் மேகங்கள் மழைக் கோலங் கொண்டுவர மகிழ்ந்திருந்து சிறிது நேரத்தில் அம்மேகத்தினின்றுந் தோன்றிய இடியைக் கேட்டு அச்சங்கொண்டு தளர்தல் போல, அசுரரிறக்கும் பொருட்டுப் போர் தொடங்குதலையெதிர்பார்த் திருந்த தேவர்கள், வீரவாகுதேவர் வில்வளைத்தவுடன் மகிழ்ந்து சிறிது நேரத் துள் அவர் செய்த நாணோசையால் அச்சமெய்தித் தளர்ந்தனரென்க. உருமு என்பதில் உகரம்-சாரியை. (70)

## வேறு

மேதா வியர்கள் பரவுந்திறல் வீரவாகு
மாதாரு வன்ன சிலைதன்னை வளைத்து வாகைத்
தாதார் பிணையல் புனைதாரகன் றன்னை நோக்கித்
தீதாம் அழல்போல் வெகுண்டேயிது செப்பு கின்றான்.

**இ—ள்:** மேதாவியர்கள் பரவும் திறல் வீரவாகு—அறிவுடையோராற் றுதிக்கப்படுகின்ற வலிமையையுடைய வீரவாகுதேவர், மா தாரு அன்ன சிலை தன்னை வளைத்து—பெரிய மரம் போன்ற வில்லை வளைத்து, தாது ஆர் வாகை பிணையல் புனை தாரகன் தன்னை நோக்கி—பராகம் நிறைந்த வாகைப் பூமாலை யைச் சூடிய தாரகாசுரனைப் பார்த்து, தீது ஆம் அழல் போல் வெகுண்டு— அழற்சியையுடைய அக்கினியைப் போலக் கோபித்து, இது செப்புகின்றான்— இவ் வார்த்தையைக் கூறுகிறார் எ—று.

மேதாவி என்னும் வடசொற்கு அறிவுடையானென்பது பொருள். மேதா அறிவு. முருகவேளேவிய படைவீரருள் வீரவாகு வொழிந்த அனைவரையும் வென்று நிற்றலின் 'வாகைத்தாதார் பிணையல் புனை தாரகன்' எனவும், அது பற்றி வீரவாகுதேவர் பெருங்கோபமுற்றாரென்பார் 'தீதாமழல்போல் வெகுண்டு' எனவும் கூறினர். வாகை மாலை வெற்றியுடையராற் சூடப்படுவ தென்க. (71)

பொன்றா வலிகொண் டமராடிய பூதர் தம்மை
வன்றாழ் சிலைகொண் டிடுவீரரை வன்மை தன்னால்
வென்றா மெனவுன் னினைபோலும் விரைந்து நின்னைக்
கொன்றாவி உண்பன் எனலுங்கொடி யோன்உ ரைப்பான்.

**இ—ள்:** பொன்றா வலி கொண்டு அமர் ஆடிய பூதர் தம்மை—அழியாத வலிமையையுடையராய் நின்று போரியற்றிய பூதர்களையும், வன் தாழ் சிலை கொண்டிடு வீரரை—வலிய நீண்ட வில்லையுடைய இலக்கத்தெட்டு வீரர்களை யும், வன்மை தன்னால் வென்றாம் என உன்னினை போலும்—வலிமையினால் வெற்றி கொண்டோமென்று நினைத்தாய் போலும், விரைந்து நின்னை கொன்று ஆவி உண்பன்—விரைவிலுன்னைக் கொன்று உயிர் குடிப்பேன், எனலும்—என்று கூறுதலும், கொடியோன் உரைப்பான்—தீயவனாகிய தாரகாசுரன் அதற்கு எதிர் கூறுவான் எ—று.

உன்னால் வெல்லப்பட்டார் போலென்னை யெண்ணற்க வென்பது குறிப்பு. உண்ணப்படாத உயிரை உண்ணப்படுவதாகக் கூறியது மரபுவழுவமைதி. ''உண்டற்குரிய வல்லாப் பொருளை — யுண்டன போலக்கூறலு மரபே'' என்றார் தொல்காப்பியனுர். (72)

மாயன் றனைவென் றவன்நேமியை மாசில் கண்டத்
தேயும் படியே புனைந்தேன்வலி எண்ணு ருதே
நீயிங் கடுவா மெனக்கூறினை நீடு மாற்றஞ்
சீயந் தனையும் நரிவெல்வது திண்ண மாமோ.

இ—ள்: மாயன் தனை வென்று—திருமாலையும் வெற்றிகொண்டு, அவன் நேமியை மாசு இல் கண்டத்து ஏயும்படி புனைந்தேன் வலி எண்ணுருது—அவரது சக்கரப்படையைக் குற்றமற்ற கழுத்திற் பதக்கமாகப் பொருந்தும்படி தரித்துள்ள எனது வலிமையைப் பொருட்படுத்தாமல், நீ இங்கு அடுவாம் என நீடு மாற்றம் கூறினை—நீ இவ்விடத்து என்னையழிப்போ மென்று நெடிய வசனத்தைச் சொன்னுய், சீயந்தனை நரி வெல்வதும் திண்ணம் ஆமோ—சிங்கத்தை நரி வெல்வதும் நிச்சயமாகுமா? (ஆகாதே) எ—று.

சிறப்பும்மை தொக்கது. மாசில் கண்டம்-நல்லிலக்கணமுடைய கழுத்து. நீடு மாற்றம்-பெருவலி படைத்துள்ளார் பேசுதற் கேற்ற வார்த்தை. சீயந்தனையும் என்ற உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. அவ்வும்மை இயலாத காரியமென்பதை வற்புறுத்திற்று. யானை முதலிய பெரிய மிருகங்களையெல்லாம் வெல்வதாகிய சிங்கத்தை நரி வெல்வது ஒருகாலுங் கூடாமைபோல, அசுரரை வெல்லுதலால் தைத்தியாரியென்னும் பெயர் பெற்ற திருமாலையும் வென்ற என்னை நீ வெல்வது ஒருகாலுங் கூடாதென்பது கருத்து. வேற்றுப் பொருள் வைப்பணி. (73)

சாருங் குறள்வெம் படையாவையுஞ் சாய்ந்த வீரர்
ஆருந் தொலைவுற் றனர்நீயும் அயர்ந்து நின்ருய்
வீரம் புகல்வாய் விளிகின்ற விளக்கம் நேர்வாய்
பாரென் வலியால் உனதாவி படுப்ப னென்ருன்.

இ—ள்: சாரும் வெம் குறள் படை யாவையும் சாய்ந்த—அணுகி நின்ற கொடிய பூதசேனை முழுதும் பின்னிட்டன, வீரர் ஆரும் தொலைவு உற்றனர்—(உன்னுடன் வந்த) வீரரனைவருந் தோற்ருர்கள், நீயும் அயர்ந்து நின்ருய்—நீயும் (என் சூலப்படையாலிதுகாறுஞ்) சோர்ந்து நின்ருய், வீரம் புகல்வாய்—(அங்ஙனம் நின்றும்) வீரம் பேசுகின்ருய், விளிகின்ற விளக்கம் நேர்வாய்—தணிகின்ற தீபத்தைப் போல்வாய், என் வலியால் உனது ஆவி படுப்பன்—எனதுவலிமையாலுன்னுடைய உயிரையழிப்பேன், பார் என்ருன்—இதனைச் சிறிது நேரத்துட் காணுதியென்று தாரகாசுரன் வீரங் கூறினன் எ—று.

தீபம் தணியுஞ் சமயத்திற் பிரகாசமா யெரிதல் போல நீயும் இறக்குஞ் சமயத்தில் வீரம் பேசுகின்ருயென்பது குறிப்பு. விளக்கம்-பொருள்களை விளங்கச் செய்வது: அம் கருத்தாப் பொருள் விகுதி. (74)

என்னுந் துணையிற் சரமாயிரம் ஏந்தல் உய்ப்பத்
தன்னங் கையிலோர் சிலைவாங்கினன் தார கப்பேர்
மன்னன் கடிது கணையாயிரம் மாறு தூண்டிச்
சின்னம் புரிந்து கணைநூறு செலுத்தி ஞனல்.

இ—ள்: என்னும் துணையில்—என்று தாரகாசுரன் கூறியவுடன், ஏந்தல்—வீரவாகுதேவர், ஆயிரம் சரம் உய்ப்ப—ஆயிரம் பாணங்களைச் செலுத்த, தாரக பேர் மன்னன்—தாரகனென்னும் பெயரையுடைய அசுரத் தலைவன், தன் அம் கையில் ஓர் சிலை வாங்கினன்—தனது அகங் கையில் ஒரு வில்லையெடுத்து வளைத்து, கடிது ஆயிரம் கணை மாறு தூண்டி—விரைவில் ஆயிரம் பாணங்களை எதிராகச் செலுத்தி, சின்னம் புரிந்து—தன் மேல்வரும் ஆயிரம் பாணங்களையும் வெட்டி, நூறு கணை செலுத்திஞன்—பின்னும் நூறு பாணங்களையேவிஞன் எ—று.

வீரவாகுதேவர் செலுத்திய பாணங்கள் தன் மேனியிற்பட முன்னரென்பார் 'கடிது' என்ருர். (75)

எவ்வக் கொடியோன் தொடுவாளியை ஏந்தல் காணு
அவ்வக் கணைகள் விடுத்தேயவை முற்று மாற்றக்
கைவிற் கொருவன் இவனுகுமிக் காளை தன்னைத்
தெய்வப் படையால் முடிப்பேனெனச் சிந்தை செய்தான்.

இ—ள்: ஏந்தல்—வீரவாகுதேவர், எவ்வ கொடியோன் தொடு வாளியை காணு—குற்றம் நிறைந்த கொடியவனுகிய தாரகாசுரன் செலுத்திய பாணங்களைக் கண்டு, அ அ கணைகள் விடுத்து அவை முற்றும் மாற்ற—அவ்வவற்றிற் கேற்ற அம்புகளைச் செலுத்தி அவற்றையெல்லாமழிக்க, இவன் கை விற்கு ஒருவன் ஆகும்—இவன் கையிலேந்திய வில்லின் போரில் ஒரு சிறந்த வீரனும் (ஆதலின்), இ காளை—இந்த வீரனை, தெய்வ படையால் முடிப்பேன் என சிந்தை செய்தான்—இனித் தெய்வப் படைக்கலங்களாலழிப்பேனென்று நினைத்தான் எ—று.

விற்கு-உருபு மயக்கம். ஏனைப் படைகளான் முடித்தலரிதாதலின் தெய்வப் படையான் முடிப்பேனென்று சிந்தித்தனனென்க. (76)

### வேறு

வெங்கனற்படை தாரகன்விட வீரவாகு வெகுண்டுபின்
செங்கனற்படை யேவியன்னது சிந்தவேவரு ணப்படை
அங்கணுய்த்திட அவுணர்கோமகன் அடுபுனற்கிறை படையினைத்
துங்கமுற்றிய வீரனுய்த்தது துண்டமாம்வகை கண்டனன்.

இ—ள்: தாரகன்—அங்ஙனமெண்ணிய தாரகாசுரன், வெம் கனல் படை விட—கொடியஅக்கினிப் படைக்கலத்தைச் செலுத்த, வீரவாகு வெகுண்டு—வீரவாகுதேவர் (அதுகண்டு) கோபித்து, பின்—உடனே, செம் கனல் படை ஏவி—சிவந்த அக்கினிப் படைக்கலத்தைத் தாமுஞ் செலுத்தி, அன்னது சிந்த—அவ னேவிய படையை அழிக்க, அங்கண்—அப்பொழுது, அவுணர் கோமகன்—அசுரத்தலைவனுகிய தாரகன், வருணப்படை உய்த்திட—வருணப் படைக்கலத்

தைச் செலுத்த, துங்கம் முற்றிய வீரன்—உயர்ச்சி மிகுந்த வீரவாகுதேவர், அடு புனற்கு இறை படையினை உய்த்து—முடிவு காலத்தில் எல்லாவற்றையு மழிக்கின்ற சமுத்திரராசனாகிய வருணனது படைக்கலத்தைச் செலுத்தி, அது துண்டம் ஆம் வகை கண்டனன்—அதனைத் துணிபடும்படி செய்தார் எ—று. (77)

இரவிதன்படை அவுணன்விட்டனன் இவனுமப்படை யேவியே
விரைவிலன்னது தொலைவுகண்டனன் வீரமேதகு தாரகன்
உரமிகுந்தனி ஊதைவெம்படை யுந்தினான் அது கந்தவேள்
அருள்மிகுந்தனி யடியன்மாற்றினன் அனையதொல்படை தனைவிடா.

இ—ள்: அவுணன் இரவிதன் படை விட்டனன்—தாரகாசுரன் பின் சூரியப் படைக்கலத்தைச் செலுத்தினான், இவனும் அ படை ஏவி விரைவில் அன்னது தொலைவு கண்டனன்—இந்த வீரவாகு தேவரும் அந்தச் சூரியப் படைக்கலத்தைச் செலுத்திச் சீக்கிரத்தில் அப் படைக்கலத்தையழித்தார், வீரம் மேதகு தாரகன் உரம் மிகும் தனி ஊதை வெம் படை உந்தினான்—வீரத்தினாற் சிறந்த தாரகாசுரன் வலிமை மிகுந்த ஒப்பற்ற கொடிய வாயுப் படைக்கலத்தைச் செலுத்தினான், கந்தவேள் அருள் மிகும் தனி அடியன்—குமாரக்கடவுளின் கருணை மிகப் பெற்ற ஒப்பற்ற அடியவராகிய வீரவாகுதேவர், அனைய தொல் படை தனை விடா—அந்தப் பழைய வாயுப் படைக்கலத்தைச் செலுத்தி, அது மாற்றினன்—அவனேவிய படைக்கலத்தை விலக்கினார் எ—று. (78)

அனிலவெம்படை வீறழிந்திட அவுணர்கோமகன் அம்புயன்
தனதுதொல்படை ஏவினானது தணிவில்செற்றமொ டேகலும்
வனைகருங்கழல் வீரவாகுவும் மற்றவன் படை தூண்டியே
நினையுமுன்னது தொலைவுசெய்தனன் நிகரில்வானவர் புகழவே.

இ—ள்: அனில வெம் படை வீறு அழிந்திட—கொடிய வாயுப்படைக்கலம் வலிமை கெட, அவுணர் கோமகன்—அசுரத் தலைவனாகிய தாரகாசுரன் (அது கண்டு), அம்புயன் தனது தொல் படை ஏவினான்—பிரமதேவரது பழைய படையைச் செலுத்தினான், அது தணிவு இல் செற்றமொடு ஏகலும்—அப்படை அடங்காத கோபத்துடன்வர, வனை கரும் கழல் வீரவாகுவும்—அலங்கரிக்கப் பட்ட பெரிய வீரக்கழலையுடைய வீரவாகுதேவரும், நினையும் முன்—ஒன்றை மனத்தினால் நினைக்கும் பொழுதிற்குள் (மிக விரைவில்), அவன் படை தூண்டி—அந்தப் பிரமதேவரது படைக்கலத்தைச் செலுத்தி. நிகர் இல் வானவர் புகழ்—ஒப்பில்லாத தேவர்கள் துதிக்க, அது தொலைவு செய்தனன்—அவனேவிய படைக்கலத்தையழித்தார் எ—று. (79)

ஆயதன்மைகள் கண்டுதாரகன் அற்புதத்தின னாகியே
மேயவானவர் படைகள் யாவையும் வீரன்மற்றிவன் வென்றனன்
மாயநீர்மையின்இங்கி வன்றிறல் வன்மைகொள்ளுதும் இனியெனாத்
தீயபுந்தியில் இனையவாறு தெரிந்துசிந்தனை செய்துமேல்.

இ—ள்: தாரகன்—தாரகாசுரன், ஆய தன்மைகள் கண்டு—அந் நிகழ்ச்சிகளைப் பார்த்து, அற்புதத்தினன் ஆகி—அதிசயமுடையவனாய், இவன் வீரன்—இந்த வீரன், மேய வானவர் படைகள் யாவையும் வென்றனன்—எம்மிடத்

திற் பொருந்திய தேவப் படைக்கலங்களெல்லாவற்றையும் வெற்றிகொண்டான் (ஆதலின்) இனிமேல், மாய நீர்மையின் இவன் திறல் வன்மை கொள்ளுதும்—மாயத் தன்மையினுலிவனது வலிமையை அடக்குவோம், எனு—என்று, இனையவாறு — இவ்வாறு, தீய புந்தியில் தெரிந்து சிந்தனை செய்து — தனது கொடிய மனத்தில் ஆலோசித்து நினைத்து, மேல்—பின்பு எ—று.

இது முதன் மூன்று செய்யுட்கள் குளகம், திறல் வன்மை-ஒரு பொருட் பன்மொழி. (80)

தொல்லைமாயையின் விஞ்சைதன்னை நவின்றுளங்கொடு துண்ணென
மல்லன்மேவரு தாரகாசுரன் வடிவமெண்ணில தாங்கியே
எல்லைதீர்தரு படைவழங்கினன் எங்குமாகி இருட்குழாம்
ஒல்லைவந்து பரந்தபோல் அவன் ஒருவன் நின்றமர் புரியவே.

இ—ள்: மல்லல் மேவரு தாரகாசுரன்—வலிமை பொருந்திய தாரகாசுரன், தொல்லை மாயையின் விஞ்சை தன்னை நவின்று உளம் கொடு—முன் தான் பயின்ற பழைய மாயவித்தைக்கேற்ற மந்திரத்தைச் செபித்துத் தியானித்து, துண் என—திடீரென்று, எண் இல் வடிவம் தாங்கி—அளவிறந்த மாய ரூபங்களைக் கொண்டு, எல்லை தீர்தரு படை வழங்கினன்—அளவிறந்த ஆயுதங்களைச் செலுத்தி, இருட் குழாம் ஒல்லை வந்து பரந்த போல்—இருட் கூட்டம் விரைவில் வந்து பரந்த தன்மையைப் போல, அவன் ஒருவன் எங்கும் ஆகி நின்று அமர் புரிய—அவனொருவன் எவ்விடங்களிலுமாய் நின்று போரைச் செய்ய எ—று.

விஞ்சை-வித்தையென்னும் வட சொல்லின் விகாரம். தாரகன் கருநிறமுடையனுதலால் அவன் பல வடிவமாய் நின்றதற்கு இருட் குழாம் பரவுதலையுவமை கூறினுர். அமர் புரிய என்றது மேற் செய்யுளில் கண்டு என்பதனோடியையும். (31)

கண்டுமற்றது வானுளோர்கள் கலங்கியேங்கினர் முன்னரே
விண்டுநீளிடை நின்றபூதர் வெருண்டுபின்னரும் ஓடினுர்
மண்டுபேரமர் செய்தயர்ந்திடு மானவீரரும் அச்சமேல்
கொண்டுநின்றனர் முறுவல்செய்தனர் குணலையிட்டனர் அவுணரே.

இ—ள்: அது கண்டு—அதனைப் பார்த்து, வான் உளோர்கள் கலங்கி ஏங்கினர்—தேவர்கள் மனங் கலங்கித் திகைத்தார்கள், முன்னரே விண்டு நீள் இடை நின்ற பூதர்—அதற்கு முந்தியே நிலை குலைந்து நெடுந் தூரத்திற் போய் நின்ற பூதர்கள், வெருண்டு பின்னரும் ஓடினுர்—வெருட்சி கொண்டு பின்னுமோடினுர்கள், மண்டு பேர் அமர் செய்து அயர்ந்திடும் மான வீரரும்—நெருங்கிய பெரிய போரைச் செய்திளைத்த மதிப்பினையுடைய இலக்கத்தெட்டு வீரர்களும், அச்சம் மேல் கொண்டு நின்றனர்—பய மிகப் பெற்று நின்முர்கள், அவுணர்—அசுரர்கள், முறுவல் செய்தனர் குணலையிட்டனர்—சிரித்துக் கொக்கரித்தார்கள் எ—று.

குணலை வீராவேசத்தாற் கொக்கரித்தாடுங் கூத்து. இது குணலம் குணலை எனவும் வழங்கும். அது கண்டு என்பதை ஒவ்வொரு வாக்கியங்கட்குமியைக்க. கொள்ளென்னும் வினைப்பகுதி மேலென்னுமுபசருக்கத்தோடு கூடி அதிகப்படுதலென்னும் பொருளில் வந்தது. (83)

### வேறு

தார கப்பெயர் அவுணர்கோன் மாயையின் சமரும்
ஆரும் அச்சுறு கின்றதும் ஆடல்மொய்ம் புடையோன்
பேர ழற்பொறி கதுவுற நோக்கியே பிறங்கும்
வீர பத்திரன் நெடுபடை எடுத்தனன் விடுவான்.

**இ—ள்:** ஆடல் மொய்ம்பு உடையோன்—வீரவாகுதேவர், தாரக பெயர் அவுணர் கோன் மாயையின் சமரும்—தாரகனென்னும் பெயரையுடைய அசுரத் தலைவனது மாயப் போரையும், ஆரும் அச்சுறுகின்றதும்—அதனாலெல்லோரும் அச்சமடைகின்ற தன்மையையும், பேர் அழல் பொறி கதுவுற நோக்கி—பெரிய நெருப்புப்பொறிகள் சிதறப்பார்த்து, பிறங்கும் நெடும் வீரபத்திரன் படை—விளங்குகின்ற நெடிய வீரபத்திரப்படைக்கலத்தை, விடுவான் எடுத்தனன்—அவன்மேற் பிரயோகிக்கும் பொருட்டுக் கையிலெடுத்தார் எ—று.

கடுங்கோபத்துடன் பார்த்தென்பார் 'பேரழற்பொறிகதுவுறநோக்கி' என்றார். (83)

துங்க வுக்கிரச் சிம்புள்மாப் படையினைத் தூயோன்
செங்கை பற்றலும் அன்னது தாரகன் செயலால்
அங்கண் நின்றிடு மாயைகண் டச்சமுற் றழுங்கிப்
பொங்கு பானுமுன் இருளென முடிந்ததப் பொழுதே.

**இ—ள்:** தூயோன்—தூய்மையுடைய வீரவாகுதேவர், துங்க உக்கிரசிம்புள் மா படையினை செம் கை பற்றலும்—மிகுந்த உக்கிரத்தையுடைய சரபவடிவங் கொண்ட வீரபத்திரது பெரிய படையையேவுமாறு சிவந்தகையிலெடுத்தலும், அன்னது—அந்தப்படையை, தாரகன் செயலால் அங்கண் நின்றிடும் மாயை கண்டு—தாரகாசுரனதுசெய்கையினால் அவ்விடத்திற்றோன்றிநின்ற மாயையானது பார்த்து, அச்சம் உற்று அழுங்கி—பயந்து வருந்தி, பொங்கு பானு முன் இருள் என—விளங்குகின்ற சூரியனது முன்னிலையில் இருளழிவதுபோல, அப்பொழுதே, முடிந்தது—அக்கணத்திற்றானேயழிந்தது எ—று.

தாரகன்கொண்ட மாயரூபங்களைத் தொலைக்கவல்லபடையென்பதுபோதர 'துங்கவுக்கிரச்சிம்புண்மாப்படை' எனவும், உதயசூரியனென்பார் 'பொங்குபானு' எனவும் கூறினார். (84)

தன்பு ணர்ப்புறு மாயைதான் உடைதலுந் தமியாய்
முன்பு நின்றதோர் தாரகன் மொய்ம்புளான் றன்னைப்
பின்பு மாயையிற் படுத்தவோர் சூழ்ச்சியைப் பிடித்து
மின்பொ லிந்ததன் தேரைவிட் டோடினன் விரைவில்.

**இ—ள்:** தன் புணர்ப்பு உறும் மாயை உடைதலும்—தனது உபாயத் தாற்றோன்றிய மாயை அழிந்தவுடன், தமி ஆய் முன்பு நின்றது ஓர் தாரகன்—தனித்து முன்னாகநின்றதாரகாசுரன், மொய்ம்பு உளான் தன்னை பின்பும் மாயையில் படுத்த ஓர் சூழ்ச்சியை பிடித்து—தன்னின்மிக்க வலியுடையவராகிய வீரவாகுதேவரைப் பின்னும் மாயத்திலகப்படுத்துதற்கு ஒருபாயத்தைக்கடைப்

பிடித்து, மின்பொலிந்த தன்தேரை விட்டு—ஒளிமிகுந்த தனது தேரைவிட்டி றங்கி, விரைவில் ஓடினன்—சீக்கிரத்திற் பின்காட்டியோடினுன். எ—று.

தானும் முந்திய ஒரும் அசைகள். (85)

தார கன்றொலைந் தேடலுந் தனக்கிணை யில்லோன்
போர ழிந்துவென் னிட்டவன் றன்மிசைப் புத்தேள்
வீர வெம்படை விடுப்பது வீரமன் றென்னுச்
சீரி தாகிய தூணியுள் அன்னதைச் செறித்தான்.

இ—ள்: தாரகன் தொலைந்து ஓடலும் — தாரகாசுரன்றோற்றோடுதலும், தனக்கு இணை இல்லோன்—தனக்கு நிகராஞேர் பிறரில்லாத வீரவாகுதேவர், போர் அழிந்து வென் இட்டவன் தன் மிசை புத்தேள் வீர வெம் படை விடுப் பது வீரம் அன்று என்னு—போரி லேதோற்றுப் புறங்காட்டிய இவன்மீது தெய் வத் தன்மையமைந்த கொடிய வீரபத்திரப் படையைப் பிரயோகிப்பது வீர மாகாதென்று சிந்தித்து, அன்னதை சீரிது ஆகிய தூணியுள் செறித்தான்— அப்படைக் கலத்தைச் சிறப்புடைத்தான தமது அம்புக் கூட்டினுட் செரு கினுர் எ—று. (86)

அற்ற போர்வலித் தாரகன் பின்விரைந் தணுகிப்
பற்றி நாண்கொடு புயந்தனைப் பிணித்தெனைப் பணித்த
கொற்ற வேலன்முன் உய்க்குவன் யானெனக் குறித்து
மற்ற வன்றனைத் தொடர்ந்தனன் நெடுந்திறல் வாகு.

இ—ள்: யான்—நான், போர் வலி அற்ற தாரகன் பின் விரைந்து அணுகி— போரியற்றும் வலிமை நீங்கப்பெற்ற தாரகாசுரனுக்குப் பின் விரைவிற் போய், பற்றி—அவனைப் பிடித்து, நாண் கொடு புயம் தனை பிணித்து—கயிற்றினுற் கைகளைக் கட்டி, எனை பணித்த கொற்ற வேலன் முன் உய்க்குவன்—என்னைப் போரியற்றுமாறு கட்டளையிட்ட வெற்றி பொருந்திய வேலாயுதத்தையேந்திய முருகக்கடவுளது திருமுன்னிலையிற் கொண்டுபோய் விடுவேன், என குறித்து— என்று சிந்தித்து, நெடும் திறல் வாகு—வீரவாகுதேவர், அவன் தனை தொடர்ந் தனன்—அத் தாரகாசுரனைப் பின்றொடர்ந்தார் எ—று.

அற்றபோர் வலித்தாரகன்-வடமொழி நடை. புயம்-இலக்கணை, யாக்கையை யுணர்த்திற்று. நெடுந்திறல் வாகு-மிக்க வலிமையார்ந்த புயங்களையுடைய வன். (87)

வேழ மாமுகற் கிளவலை யுன்னியே வீரன்
ஆழி மால்கட லாமென ஆர்த்துவை தணுகச்
சூழு மாயையின் இருக்கையாந் தொல்கிர வுஞ்சப்
பாழி யொன்றுசென் றொளித்தனன் தாரகப் பதகன்.

இ—ள்: வீரன்—வீரவாகுதேவர், மா வேழமுகற்கு இளவலை உன்னி—சிறந்த யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளது தம்பியாகிய முருகக் கடவுளைத் தியானித்து, ஆழி மால் கடல் ஆம் என ஆர்த்து வைது அணுக—ஆழமாகிய பெரிய கடலைப்போல ஆரவாரித்து நிந்தித்துக் கிட்டும்பொழுது, தாரக பதகன்—

பாதகனுகிய தாரகாசுரன், சூழும் மாயையின் இருக்கை ஆம் தொல் கிரவுஞ்ச பாழி ஒன்று சென்று ஒளித்தனன்—ஆலோசித்துச் செய்யப்படுகின்ற மாயை களுக்கிருப்பிடமாகிய பழைய கிரவுஞ்ச மலையிலுள்ள ஒரு குகையினுட்போய் மறைந்தான் எ—று.

சூழு மாயை-பகைவரைச் சூழ்ந்து வருத்துகின்ற மாயையெனினுமாம். (88)

முன்ன மாங்கவன் போகிய பூழையுள் முடுகிப்
பொன்னின் வாகையந் தோளுடை யாண்டகை புகலும்
அன்ன தோர்வரை யகமெலாம் ஆயிரங் கதிரின்
மன்ன னேகுரு இருள்நிலம் போன்றுவை கியதே.

இ—ள்: பொன்னின் வாகையம் தோள் உடை ஆண்டகை—பொன்போல் விளங்குகின்ற வீரமார்ந்த புயங்களையுடைய அவ் வீரர், அவன் முன்னம் போகிய பூழையுள் முடுகி புகலும்—அத் தாரகாசுரன் முந்திப் புகுந்த குகை யினுள்ளே விரைவிற் புகுதலும், அன்னது ஓர் வரை அகம் எலாம்—அந்த மலையின் உள்ளிட முழுதும், ஆயிரம் கதிரின் மன்னன் ஏகுரு இருள் நிலம் போன்று வைகியது—ஆயிரங் கிரணங்களையுடைய சூரிய பகவான் சஞ்சரிக்கப் பெருத இருளுலகம் போன்றிருந்தது எ—று.

இருணிலமென்றது பாதலலோகத்தை. (89)

நீளு மாலிருள் படர்தலுஞ் சில்லிடை நெறியால்
தாளி னொற்றியே படர்ந்தனன் தாரகற் காணுன்

நீளு மாலிருள் படர்தலுஞ் சில்லிடை நெறியால்
தாளி னொற்றியே படர்ந்தனன் தாரகற் காணுன்
ஆளி மொய்ம்புடை மேலையோன் அடுக்கலின் புணர்ப்பான்
மீளு கின்றதோர் நெறியையுங் கண்டிலன் வெகுண்டான்.

இ—ள்: நீளும் மால் இருள் படர்தலும்—மிகுந்த பேரிருள் மூடுதலும், ஆளி மொய்ம்பு உடை மேலையோன்—சிங்கத்தின் வலி போன்ற வலியமைந்த புயங்களையுடைய பழைய அவ் வீரர், நெறியால்—முன் காணப்பட்ட வழி யினுல், தாளின் ஒற்றி சில் இடை படர்ந்தனன்—கால்களினுற் றடவிக்கொண்டு சிறிது தூரம்போய், தாரகன் காணுன்—தாரகாசுரனைக் காணப்பெருதவராய், அடுக்கலின் புணர்ப்பால் மீளுகின்றது ஓர் நெறியையும் கண்டிலன்—அம்மலையின் மாயத்தினுல் திரும்பி வருதற்குரிய வழியையுங் காணுதவராய், வெகுண்டான்—கோபங்கொண்டார் எ—று. (90)

செற்ற மிக்கவன் மாயைஇவ் வரையெனச் சிந்தித்
துற்ற காலையில் அவுணனு கியகிர வுஞ்சப்
பொற்றை அன்னது கண்டுமோ கத்துயில் புரிந்து
மற்ற வன்றன துணர்வினை மையல்செய் ததுவே.

இ—ள்: செற்றம் மிக்கவன்—கோபமிகுந் வீரவாகுதேவர், இ வரை மாயை என சிந்தித்து உற்ற காலையில்—இந்த மலை மாயமுடைத்தென்று சிந்தித்திருந்த பொழுது, அவுணன் ஆகிய கிரவுஞ்ச பொற்றை—அசுரனுகிய அந்தக் கிரவுஞ்ச மலை, அன்னது கண்டு—அதனைப் பார்த்து, மோகத் துயில் புரிந்து—மயக்க நித் திரையுண்டாக்கி, அவன் தனது உணர்வினை மையல் செய்தது—அவரது அறிவை மயக்கியது எ—று.

கிரவுஞ்சனென்னு மசுரனே அகத்திய முனிவர் சாபத்தால் மலையாயினனு தலின் 'அவுணனுகிய கிரவுஞ்சப் பொற்றை' என்ருர். (91)

இயலி சைத்தமிழ் முனிவரன் இசைத்தசூள் இசைவால்
வியலு டைத்திறல் வாகுவை யவ்வரை மிகவும்
மயலு டைப்பெரு மாயம தியற்றலுந் மயங்கித்
துயில லுற்றனன் தொல்லையின் உணர்வெலாந் துறந்தே.

இ—ள்: இயல் இசை தமிழ் முனிவரன் இசைத்த சூள் இசைவால்—இயற்றமிழையும் இசைத் தமிழையும் வளர்த்த அகத்திய முனிவர் கூறிய சாப மொழி பொருந்துதலால், அ வரை—அந்தக் கிரவுஞ்சமலை, வியல் உடை திறல் வாகுவை—பெருமையினையுடைய வீரவாகுதேவருக்கு, மிகவும் மயல் உடை பெரு மாயமது இயற்றலும்—மிகுதியாக மயக்கத்தை விளைக்கின்ற பெரிய மாயத்தைச் செய்ய, தொல்லையில் உணர்வு எலாம் துறந்து—பழைய அறிவு முழுவதையு மிழந்து, மயங்கி துயிலல் உற்றனன்—மதிமயங்கி நித்திரையா யினர் எ—று.

முத்தமிழ்களுள் முன்னைய இரண்டுங் கூறப்படவே உப லக்கணத்தாற் பின்னையதாகிய நாடகத் தமிழுமமையும். இசையில் நாடக மடங்குமென்பாரு முளர். முன்னொரு காலத்தில் அகத்தியனார் தென்றிசையிலுள்ள பொதியமலை யில் வந்திருந்து பேரகத்தியமுஞ் சிற்றகத்தியமுமாகிய இலக்கண நூல்களை யியற்றி அவற்றைத் தமது முதன் மாணுக்கராகிய தொல்காப்பியர் முதற் பன்னிருவர்க்குங் கற்பித்துத் தமிழ்ப் பாஷையைத் தழைத்தோங்கச் செய்தன ராதலின் அவரை 'இயலிசைத் தமிழ் முனிவரன்' என்றார். அகத்திய முனிவர் சாபத்தால் மாயஞ் செய்தலை மேல் அசுரகாண்டத்திற் கிரவுஞ்சப் படலத்தில் ''மாற்படு நமது பாணி வலிகெழு தண்டா லுன்றன்-பாற்படு புழைகள் யாவும் பற்பல மாயைக் கெல்லா-மேற்புடையிருக்கையாக'' எனக் கூறுதலா லுணர்க. (92)

அம்ம லைக்கணே முன்னவன் உறங்கலும் அனைய
செம்ம லுக்கிளை யோர்இரு நால்வருஞ் சிறந்த
தம்மி னத்தரோர் இலக்கருஞ் சாரதர் பலரும்
விம்ம லுற்றனர் சிறையிலாப் பறவையின் மெலிந்தார்.

இ—ள்: முன்னவன் அ மலைக்கண் உறங்கலும்—மூத்தவராகிய வீரவாகு தேவர் அந்தக் கிரவுஞ்ச மலையில் மோக நித்திரை செய்தலும், அனைய செம் மலுக்கு இளையோர் இரு நால்வரும்—அந்த வீரரது தம்பியர்களெண்மரும், சிறந்த தம் இனத்தர் ஓர் இலக்கரும்—சிறப்புற்ற அவர்களது இனத்தவராகிய இலக்க வீரர்களும், சாரதர் பலரும்—பூத வீரர்கள் பலரும், விம்மல் உற்றனர்—மனப்பீடை கொண்டு, சிறை இலா பறவையில் மெலிந்தார்—சிறகிழந்த பக்ஷி களைப் போல வாடினார்கள் எ—று.

பறவைக்குச் சிறகு இன்றியமையாமை போல வீரர்க்கும் வீரவாகுதேவர் இன்றியமையாமையின் 'சிறையிலாப் பறவையின் மெலிந்தார்' என்றார். (93)

உடைந்து போயின தாரகன் றன்னைநம் முரவோன்
தொடர்ந்து சென்றனன் மீண்டிலன் அவனொடுந் துன்னி
அடைந்து வெற்பினில் போர்புரி வான்கொலோ அங்கட்
படர்ந்து நாடுதும் யாமுமென் றெண்ணினர் பலரும்.

இ—ள்: நம் உரவோன்—எங்கள் தலைவராகிய வீரவாகுதேவர், உடைந்து போயின தாரகன் தன்னை தொடர்ந்து சென்றனன்—தோற்றோடிய தாரகாசுரனைப் பின்றொடர்ந்து போனார், மீண்டிலன்—இதுகாறுந் திரும்பி வந்திலார், அவனொடும் துன்னி அடைந்து வெற்பினில் போர் புரிவான் கொலோ—அவ்வசுரனுடனே யெதிர்த்து நின்று கிரவுஞ்ச மலையிற் போர் செய்கின்றாரோ?, யாமும் அங்கண் படர்ந்து நாடுதும்—நாமுமவ்விடத்துப் போயறிவோம், என்று பலரும் எண்ணினர்—என்றிவ்வாறு யாவரும் ஆலோசித்தார்கள் எ—று.

உரவோன்-வலியுடையவன். உரம்-வலி. (94)

எண்ணி யேயிசைந் திளையரோ ரெண்மரும் இலக்கம்
நண்ணும் வீரரும் பாரிடந் தன்னுள்நா யகரும்
அண்ணல் வான்படை ஏந்தியே யாயிடை யகன்று
விண்ணு லாவுறு கிரவுஞ்சம் எய்தினர் விரைவில்.

இ—ள்: எண்ணி இசைந்து—இவ்வாறு நினைத்து ஒருப்பட்டு, இளையர் ஓர் எண்மரும்—வீரவாகுவின் தம்பியரெண்மரும், இலக்கம் நண்ணும் வீரரும்—இலக்கமென்னுந் தொகையமைந்த வீரர்களும், பாரிடம் தன்னுள் நாயகரும்—பூதகணத்தவர்களுட் டலைவர்களும், அண்ணல் வான் படை ஏந்தி — சிறந்த பெரிய படைக்கலங்களைக் கையிலெடுத்துக் கொண்டு, ஆயிடை அகன்று—அவ்விடத்தினின்றும் நீங்கி, விரைவில்—சீக்கிரத்தில், விண் உலாவுறு கிரவுஞ்சம் எய்தினர் — ஆகாயத்தையளாவிய (உயர்ந்த) கிரவுஞ்சமலையையடைந்தார்கள் எ—று.

வீரவாகுதேவர் போர் செய்கின்றாரோ என்றையுறுதலின் சிறந்த படைகளைக் கைக்கொண்டு சென்றனரென்க. (95)

ஆய வெற்பினில் வீரவா குப்பெயர் அடலோன்
போய பூழையுள் மற்றவர் யாவரும் புகலுந்
தீய தொல்வரை முன்னவற் கிழைத்திடு திறம்போல்
மாயம் எண்ணில புரிதலும் மயங்கியே வதிந்தார்.

இ—ள்: ஆய வெற்பினில்—அந்தக் கிரவுஞ்ச மலையில், வீரவாகு பெயர் அடலோன் போய பூழையுள்—வீரவாகுவென்னும் பெயரையுடைய வீரர் முன் சென்ற குகையினுள், அவர் யாவரும் புகலும்—அவர்களெல்லோரும் போக, தீய தொல் வரை—கொடிய பழைய அம்மலை, முன்னவற்கு இழைத்திடு திறம் போல்—தலைவராகிய வீரவாகுதேவர்க்குச் செய்த தன்மை போலவே, எண் இல மாயை புரிதலும்—அளவிறந்த மாயங்களைச் செய்தலும், மயங்கி வதிந்தார்—அவர்கள் மயக்கமடைந்திருந்தார்கள் எ—று.

முன்னவன்-முன் புகுந்தவனெனினுமாம். (96)

வெற்றி வீரவா குப்பெயர் அண்ணலும் வீரர்
மற்றி யாவரு மயங்கலுந் தாரகன் வாரா
உற்று நோக்கிநம் மாயையால் இவரெலா மொருங்கே
இற்று ளாரென மகிழ்ந்துமால் வரைமிசை எழுந்தான்.

இ—ள்: வெற்றி வீரவாகு பெயர் அண்ணலும்—வெற்றியினையுடைய வீர வாகுவென்னும் பெயரையுடைய தலைவரும், மற்று வீரர் யாவரும்—ஏனைய வீர ரனைவரும், மயங்கலும்—மயங்கிக் கிடக்க, தாரகன் வாரா—தாரகாசுரன் அங்கு வந்து, உற்று நோக்கி—அவர்களையுற்றுப் பார்த்து, இவர் எலாம் நம் மாயை யால் ஒருங்கே இற்றுளார் என மகிழ்ந்து—இவர்களெல்லோரும் எமது மாயத் தினால் ஒருங்கேயிறந்தார்களென்று சிந்தித்து மன மகிழ்ச்சி கொண்டு, மால் வரை மிசை எழுந்தான்—பெரிய அந்த மலையின்மேல் வெளிப்பட்டான் எ—று.

கிரவுஞ்ச மலையையு முளப்படுத்தி 'நம்மாயையால்' என்றான். (97)

அண்ட மீமிசை நின்றவா னவர்கள்இவ் வனைத்துங்
கண்டு கட்புனல் பனிவர அரற்றியே கலங்கிக்
கொண்ட துன்பொடு பதைபதைத் தோடினர் கூளித்
தண்டம் யாவையும் வெருவின தலைவர்இன் மையினால்.

இ—ள்: அண்டம் மீமிசை நின்ற வானவர்கள்—ஆகாயத்தின் மேனின்ற தேவர்கள், இவ்வனைத்தும் கண்டு—இவைகளெல்லாவற்றையும் பார்த்து, கண் புனல் பனி வர அரற்றி—கண்ணீர் துளிக்கப் புலம்பி, கலங்கி—மனங் கலங்கி, கொண்ட துன்பொடு பதைபதைத்து ஓடினர்—அடைந்த துன்பத்துடன் மிக நடுங்கி ஓடினார்கள், கூளி தண்டம் யாவையும்—பூதசேனையெல்லாம், தலைவர் இன்மையினால் வெருவின—தமக்குரிய தலைவர்களொருவருமில்லாமையாற் பயந் தன எ—று.

இவ்-வகர மெய்யீற்றுப் பலவின்பாற் சுட்டுப்பெயர். இங்ஙனங் கொள்ளாது இ அனைத்துமென வகுப்பினுமாம். பனிவரல்-துளித்தல். (95)

மலையின் மீமிசை யெழுதரு தாரகன் மற்றோர்
தலைமை யாகிய விரதமேல் கொண்டுதா னவர்கள்
பலரும் வந்துவந் தார்த்தனர் சூழ்தரப் பைம்பொற்
சிலைய தொன்றினை வாங்கியே செருநிலஞ் சென்றான்.

இ—ள்: மலையின் மீமிசை எழுதரு தாரகன்—கிரவுஞ்ச மலையின் மேல் வெளிப்பட்டு வந்த தாரகாசுரன், தலைமை ஆகிய மற்று ஓர் இரதம் மேல் கொண்டு—சிறப்புடைத்தான வேறொரு தேரின்மேலேறி, தானவர்கள் பலரும் வந்து வந்து ஆர்த்தனர் சூழ்தர—அசுரர்கள் பலரும் வந்து வந்து ஆரவாரஞ் செய்து தன்னைச் சூழ, பைம் பொன் சிலையது ஒன்றினை வாங்கி—செம்பொன் மயமான ஒரு வில்லை வளைத்துக் கொண்டு, செரு நிலம் சென்றான்—போர்க் களத்தையடைந்தான் எ—று.

வந்து வந்து என்பதை வந்து உவந்து என வகுப்பினுமாம். முன் ஏறி நிற் கப் பெறுததேரென்பார் 'மற்றோரிரதம்' என்றார். (99)

நீடு தன்சிலை நாணொலி கொண்டுநீள் சரங்கள்
கோடி கோடிமற் றொருதொடை யாகவே கொளுவி
ஆடல் சேர்தரு பூதர்மேற் பொழிதலும் அலமந்
தோட லுற்றனர் திசையினும் விண்ணினும் உலைந்தே.

**இ—ள்:** நீடு தன் சிலை நாண் ஒலி கொண்டு—(அங்ஙனஞ் சென்ற தாரகன்) நெடிய தனது வில்லில் நாணேசையையுண்டாக்கி, நீள் சரங்கள் கோடி கோடி ஒரு தொடை ஆக கொளுவி—நெடிய பாணங்களைக் கோடி கோடியென்னுந் தொகை ஒவ்வொரு தொடையினுமமையத் தொடுத்து, ஆடல் சேர்தரு பூதர் மேல் பொழிதலும்—வலிமை பொருந்திய பூதர்களின் மேற் சொரிய, அலமந்து—அவரனைவரும் மனஞ் சுழன்று, திசையினும் விண்ணினும் உலைந்து ஓடலுற்றனர்—திக்குகளினும் ஆகாயத்தினும் நிலை குலைந்து ஓடினர்கள் எ—று.

கோடி கோடி-கோடியானுறழ்ந்த கோடி; ஈண்டு மிகுதியையுணர்த்திற்று. மற்று-வினை மாற்று. (100)

ஆன காலையின் நாரதன் இனையகண் டழுங்கி
மேனி துண்ணென வியர்ப்புற வழிக்கொடு விரைந்து
போன விண்ணவர் தம்மொடு சென்றுபுத் தேளிர்
சேனை காவலன் நின்றதோர் கடைக்கூழை சேர்ந்தான்.

**இ—ள்:** ஆன காலையில்—அப்பொழுது, நாரதன்—நாரதமுனிவர், இனைய கண்டு அழுங்கி—இத் தன்மைகளைப் பார்த்து வருந்தி, மேனி துண் என—சரீரம் நடுங்க, வியர்ப்பு உற—வியர்வை கொள்ள, விரைந்து வழிக்கொடு போன விண்ணவர் தம்மொடு சென்று—விரைவாக ஓடிப்போன தேவர்களுடன் போய், புத்தேளிர் சேனை காவலன் நின்றது ஓர் கடை கூழை சேர்ந்தான்—தேவசேனாதிபதியாகிய முருகக்கடவுள் நின்றருளிய பின்னணியடைந்தார் எ—று.

வழிக்கொளல்-செல்லுதல். (101)

அரிது மாதவம் புரிதரு நாரதன் அடலின்
விரவு மாயிரம் பூதவெள் ளத்தொடு மேவுங்
கருணை சேரறு முகத்தனைக் கண்டுகண் களித்துச்
சுரர்க ளோடுபோய் இறைஞ்சியே இனையன சொல்வான்.

**இ—ள்:** அரிது மா தவம் புரிதரும் நாரதன்—அரிதாகப் பெருந்தவத்தைச் செய்கின்ற நாரதமுனிவர், அடலின் விரவும் ஆயிரம் பூத வெள்ளத்தொடு மேவும் கருணை சேர் அறுமுகத்தனை கண்டு—வலிமையோடு செறிந்துள்ள ஆயிர வெள்ளமென்னுந் தொகையாகிய பூதசேனையோடு நின்ற கிருபை மிகுந்த ஆறு திரு முகங்களையுடைய முருகக்கடவுளைத் தரிசித்து, கண் களித்து—நேத்திரானந்தமுற்று, சுரர்களோடு போய் இறைஞ்சி—தேவர்களோடு சென்று வணங்கி, இனையன சொல்வான்—இவ் வார்த்தைகளைக் கூறுவார் எ—று.

அரிது புரிதல்-உணவொறுத்தலாதியவற்றாற் சாரீரத்தைவாட்டிச் செய்தல். (102)

ஐய நின்படை வீரர்கள் பெருஞ்சம ராடி
வெய்ய தானவர் தானைகள் வரவர வீட்டிச்
செய்ய தந்திரத் தலைவரை அமைச்சரைச் செற்றுப்
பொய்யின் மொய்ம்புடைத் தாரகன் தன்னொடும் பொருதார்.

**இ—ள்:** ஐய—கடவுளே!, நின் படை வீரர்கள்—தேவரீரது சேனைவீரர்கள், பெரும் சமர் ஆடி—பெரியபோரைச்செய்து, வெய்ய தானவர் தானைகள் வர

வர வீட்டி—கொடிய அசுரசேனைகள் வருந்தோறும் அழித்து, செய்ய தந்திரத் தலைவரை அமைச்சரை செற்று—சிறந்த சேனைத்தலைவரையும் மந்திரிமாரையுங் கொன்று, பொய் இல் மொய்ம்பு உடை தாரகன் தன்னொடும் பொருதார்—பொய்படுதலில்லாத வலிமையுடைய தாரகாசுரனோடும் போர்செய்தார்கள் எ—று. (103)

தலைக்க ணாகிய வீரனுந் தம்பியர் பிறரும்
இலக்க வீரரும் பாரிடத் தலைவர்கள் யாரும்
புலைக்கொ டுந்தொழில் தாரகன் றன்னொடும் பொரத்தன்
மலைக்கண் உய்த்தனன் அவர்தமைச் சூழ்ச்சியின் வலியால்.

இ—ள்: தலைக்கண் ஆகிய வீரனும்—முன்பிறந்தவராகிய வீரவாகுதேவரும், தம்பியர் பிறரும்—மற்றைய தம்பிமாரெண்மரும், இலக்க வீரரும்—இலக்கமென்னுந்தொகையான வீரர்களும், பாரிட தலைவர்கள் யாரும்—பூதத்தலைவர்களனைவரும், புலை கொடும் தொழில் தாரகன் தன்னொடும் பொர—இழிவான தீச் செயல்களையுடைய தாரகாசுரனோடு போர் செய்ய. சூழ்ச்சியின் வலியால் அவர் தமை தன் மலைக்கண் உய்த்தனன்—அவன் தனது உபாயத்தின் வன்மையால் அவர்களைத் தனது கிரவுஞ்சமலையினுட் புகுவித்தான் எ—று.

புலை-புன்மை; ஐ விகுதி பெற்ற பண்புப் பெயர். (104)

உய்த்த காலையில் அவுணனா கியகிர வுஞ்சம்
மெத்து மாயைகள் அனையவர்க் கிழைத்தலும் வெருவிப்
பித்த ராமென மயங்கினர் போலுமால் பின்னர்
இத்தி றந்தனை உணர்ந்தனன் தாரக னென்போன்.

இ—ள்: உய்த்த காலையில்—உட்புகுவித்த பொழுது, அவுணன் ஆகிய கிரவுஞ்சம்—அசுரனாகிய கிரவுஞ்சமலை, அனையவர்க்கு மெத்தும் மாயைகள் இழைத்தலும்—அவர்களுக்கு மிகுந்த மாயங்களைச் செய்ய, வெருவி—அவர்களெல்லோரும் பயந்து, பித்தர் ஆம் என மயங்கினர் போலும்—பைத்தியங் கொண்டவர்கள் போல் மயங்கினார்கள் போலும், பின்னர்—அதன் பின்பு, தாரகன் என்போன்—தாரகனென்று சொல்லப்படுகின்ற அசுரன், இ திறம் தனை உணர்ந்தனன்—இத் தன்மையையறிந்தான் எ—று.

இயற்கை யறிவை யிழப்பது பித்தரியல்பாதலால் அவரையுவமை கூறினார். (105)

தெரிந்து தாரகன் மகிழ்வொடு பறந்தலை சென்று
துரந்து நம்பெருந் தானையைக் கணைமழை சொரிய
முரிந்து போயின நிகழ்ச்சியீ துயிர்த்தொகை முற்றும்
இருந்த நாயக அறிதியே யாவையும் என்றான்.

இ—ள்: தாரகன் தெரிந்து—தாரகாசுரன் இந் நிகழ்ச்சிகளையறிந்து, மகிழ்வொடு பறந்தலை சென்று—மகிழ்ச்சியுடன் போர்க்களத்தையடைந்து, நம் பெருந்தானையை துரந்து கணைமழை சொரிய—நமது பூதசேனைகளைத் துரத்தி அம்பு மழைகளைச் சொரிய, முரிந்து போயின—அச் சேனை முழுவதுங் குலைந்தோடின, நிகழ்ச்சி ஈது—நடந்த செயலிதுவே, உயிர் தொகை முற்றும் இருந்த

நாயக—ஆன்ம வர்க்கங்களெல்லாவற்றிலும் பரமான்மாவாக வியாபித்திருக்கின்ற கடவுளே!, யாவையும் அறிதியே—இவைகளெல்லாவற்றையுந் தேவரீரறிவீரன்றோ?, என்றான்—என்று நாரதமுனிவர் விண்ணப்பஞ் செய்தார் எ—று.

முற்றறிவுடைய தேவரீர் யாங் கூறினவற்றையேயன்றிக் கூறாது விடுத்தனவற்றையுமறிவீரென்பார் 'உயிர்த்தொகை முற்றுமிருந்த நாயக வறிதியே யாவையும்' என்றார். அறிந்து அதற்கேற்ற பரிகாரஞ் செய்குதிரென்பது குறிப்பு. (106)

என்ற காலையில் நாரதன் உள்ளமும் இமையோர்
நின்று தாமயர் கின்றதும் அமரர்கோன் நெஞ்சில்
துன்று சோகமும் நான்முக னாதியோர் துயரும்
ஒன்ற நோக்கியே அறுமுகப் பண்ணவன் உரைப்பான்.

இ—ள்; என்ற காலையில்—என்றுவிண்ணப்பஞ் செய்த பொழுது, அறுமுக பண்ணவன்—ஆறு திருமுகங்களையுடைய சுப்பிரமணியக்கடவுள், நாரதன் உள்ளமும்—நாரத முனிவரது மனக்கருத்தையும், இமையோர் நின்று அயர்கின்றதும்—தேவர்கள் (தமது திருமுன்னிலையினின்று) வருந்துகின்றதையும், அமரர்கோன் நெஞ்சில் துன்று சோகமும்—தேவர்க்கரசனாகிய இந்திரனது மனத்திற் பொருந்திய துயரத்தையும், நான்முகன் ஆதியோர் துயரும்—பிரமா முதலிய தேவர்களது துன்பத்தையும், ஒன்ற நோக்கி—ஒருங்கே பார்த்து, உரைப்பான்—இவ்வாறு திருவாய் மலர்ந்தருளுவார் எ—று.

உள்ளம்-ஆகுபெயர். தாம் அசை நிலை. 'ஒன்ற நோக்கி-உரைப்பான்' எனவே அவர் மனமுவக்குமாறு திருவாய் மலர்வாரென்பது பெற்றாம். (107)

### வேறு

ஆருமிது கேண்மினம ராடுகளன் ஏகித்
தாரகனை வேல்கொடு தடிந்தவுணர் வைகும்
ஓரரண மானகிர வுஞ்சகிரி செற்றே
வீரர்தமை யோரிறையின் மீட்டிடுவன் என்றான்.

இ—ள்: ஆரும் இது கேண்மின்—நீவிரனைவீரும் இவ் வாசகத்தைக் கேளுங்கள், அமர் அடு களன் ஏகி—யாமிப்பொழுது போர்க்களத்திற் போய், தாரகனை வேல் கொடு தடிந்து—தாரகாசுரனை வேற்படையாற் கொன்று, அவுணர் வைகும் ஓர் அரணம் ஆன கிரவுஞ்ச கிரி செற்று—அசுரர்களிருக்கின்ற ஒரு கோட்டையாயுள்ள கிரவுஞ்சமலையையுமழித்து, வீரர்தமை ஓர் இறையில் மீட்டிடுவன் என்றான்—வீரவாகு முதலிய வீரர்களை ஒரு மாத்திரைப் பொழுதினுள் மீட்பேமென்று கூறியருளினர் எ—று.

ஆரும் கேண்மின்-முன்னிலையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி. அமராடு களன்-போர் செய்கின்ற இடம். களன்-இறுதிப்போலி. (108)

எந்தையிவை கூறுதலும் யாருமவை தேர்ந்து
சிந்தையுறு கின்றதுயர் செற்றுமுடி வில்லா
அந்தமில் மகிழ்ச்சியுடன் ஆடியிசை பாடிக்
கந்தனடி வந்தனை புரிந்தனர் களிப்பால்.

இ—ள்: எந்தை இவை கூறுதலும்-எங்கள் பரமபிதாவாகிய சுப்பிரமணியக் கடவுள் இவ்வாசகங்களைத் திருவாய்மலர்ந்தருளுதலும், யாரும் அவைதேர்ந்து—அங்குநின்றோரனைவரும் அவற்றைக்கேட்டுணர்ந்து, சிந்தை உறுகின்ற துயர் செற்று—மனத்திற் பொருந்திய துன்பங்களையொழித்து, முடிவுஇல்லா அந்தம் இல் மகிழ்ச்சியுடன் ஆடி இசைபாடி—அழிவில்லாத அளவற்ற சந்தோஷத்தோடு கூத்தாடித் தோத்திரங்களைக்கூறி, களிப்பால்—பேரானந்தத்தோடும், கந்தன் அடி வந்தனை புரிந்தனர்—சுப்பிரமணியக்கடவுளது பாதங்களை வணங்கினார்கள் எ—று.

வந்தனை வந்தனமென்னும் வடசொல்லின்றிரிபு. (109)

கந்தமுரு கேசனது காலைமுது பாகாய்
வந்ததொரு வந்தினை மகிழ்ச்சியொடு நோக்கிச்
சிந்தைதனில் முந்தும்வகை தேரதனை வல்லே
உந்துதி விரைந்தென உரைத்தருள லோடும்.

இ—ள்: கந்தமுருகேசன்—கந்தனெனுந் திருநாமத்தையுடைய முருகக்கடவுள், அதுகாலை—அப்பொழுது, முது பாகு ஆய் வந்தது ஒரு வந்தினை மகிழ்ச்சியொடு நோக்கி—பழைய சாரதியாயமைந்த வாயுதேவனைச் சந்தோஷத்தோடு பார்த்து, சிந்தைதனில் முந்தும் வகை—மனத்தினும் முற்பட்டுச் செல்லும்படி, தேர் அதனை—நமது தேரை, வல்லே உந்துதி—விரைவிற் செலுத்துவாய், என உரைத்தருளலோடும்—என்று கூறியருளியவுடன் எ—று.

முருகன்+ஈசன் என்பது நிலைமொழியீற்று னகரம்கெட்டுக் குமரேசனென்னும் வடமொழிபோலக் குணசந்திபெற்றது. பாகு என்னும் உகரவீற்றுப் பண்புப்பெயர் பண்பையுணர்த்தாது பண்புடைப்பொருளையுணர்த்திநின்றது. மனம் எத்துணைத் தூரத்திலுள்ள பொருளையும் நினைத்தவுடன் சார்தலால் வேகத்திற்குச் சிறந்ததாக எடுத்துக் காட்டப்பட்டது. தேர்செலுத்துந்தன்மையை நன்கு பயின்ற பாகனென்பார் 'முதுபாகு' என்றார். இச்செய்யுளும் பிற்செய்யுளுங் குளகம். (110)

என்னையினி தென்றுதொழு தேழெழுவ கைத்தாந்
தன்னினம தாகியவர் தாங்கள்புடை போதக்
கொன்னுனைய தாமுளவு கோல்கயிறு பற்றித்
துன்னுபரி மான்நிரைகள் தூண்டிமிக ஆர்த்தான்.

இ—ள்: என்னை இனிது என்று தொழுது—(வாயுதேவன்) என்தலைவரே! (தேவரீர்கூறியது) நன்றென்று கூறிக் கைதொழுது, ஏழ் எழு வகைத்து ஆம் தன் இனமது ஆகியவர் தாங்கள் புடை போத—நாற்பத்தொன்பது வகையினையுடைய தன்னினத்தவர்கள் பக்கத்திற் சூழ்ந்துவர, கொன் நுனையது ஆம்முளவு கோல் கயிறு பற்றி—அச்சத்தைதருகின்ற நுனியையுடையதாகிய முட்கோலையுங் கசைக்கயிற்றையும்பிடித்து, துன்னு பரி மா நிரைகள் தூண்டி—நெருங்கிய குதிரை நிரைகளைச்செலுத்தி, மிக ஆர்த்தான்—மிக ஆரவாரித்தான் எ—று.

என்னையென்னுஞ்சொல் இப்பொருளதாதலை ''என்னைமுன்னில்லன்மின்'' என்னுந் திருக்குறளானுமுணர்க; இது ஈண்டு அண்மைவிளி. என்ன எனப்பாடமோதி, என்றுசொல்ல எனப்பொருள்கூறுதல், முற்செய்யுளில் 'எனவுரைத்தருளலோடும்' என்றதோடு கூறியதுகூறலாம். கொல்—நுனையது எனச்சொல்வகுத்து

வருந்துகின்ற நுனியையுடையவெனவும் பொருள் கூறலாம். முளவு என்பதில் அகரமுமுகரமுஞ்சாரியைகள். மிகவுங்கூர்மையுடையதென்பார் 'கொன்னுனையது' எனவும், இலக்கங் குதிரைகள் பூட்டப்பட்டதாதலின்'துன்னுபரிமாநிரைகடுண்டி' எனவும் கூறினர். (111)

வேறு

ஆன காலேதனில் அண்டமும் வையந்
தானும் அங்குள தடங்கிரி யாவும்
ஏனை மாகடலும் எண்டிசை யுள்ள
மான வேழமும் நடுங்கின மன்னோ.

இ—ள்: ஆன காலே தனில்—அச்சமயத்தில், அண்டமும்—ஆகாயவுலகமும், வையம் தானும்—பூவுலகமும், அங்கு உள தடம் கிரியாவும்—அந்நிலவுலகத்திலுள்ள பெரிய மலைகளனைத்தும், ஏனை மா கடலும்—மற்றைய பெரிய சமுத்திரங்களும், எண்திசை உள்ள மான வேழமும்—எட்டுத்திக்குகளிலுமுள்ள மதிக்கத்தகுந்த யானைகளும், நடுங்கின—நடுக்கமுற்றன எ—று.

மலைமுதலியவற்றிற்கு வேற்றினமாந்தன்மையையுடைமையின் 'ஏனைமா கடல்' என்றார். நடுங்கியது தேரோடுமதிர்ச்சியினலென்க. (112)

வாவு கின்றபல மாநிரை தூண்டத்
தேவர் தங்கள்சிறை தீரிய செல்வோன்
மேவு தொல்லிரதம் விண்ணெறி கொண்டே
ஏவ ரும்புகழ ஏகிய தன்றே.

இ—ள்: வாவுகின்ற பல மா நிரை தூண்ட—தாவிச் செல்லுகின்ற பல வகையான குதிரை நிரைகளைச் செலுத்த, தேவர் தங்கள் சிறை தீரிய செல்வோன் மேவு தொல் இரதம்—தேவர்களது சிறை நீங்கும் பொருட்டுச் செல்லுகின்ற சுப்பிரமணியக்கடவுளேறி யருளிய பழைய தேரானது, ஏவரும் புகழ—யாவரும் வியக்கும்படி, விண் நெறி கொண்டு ஏகியது—ஆகாயமார்க்கமாகப் போயிற்று எ—று.

தூண்ட-ஏகியது என இயையும். (113)

ஆதி யங்குமரன் அவ்வழி பொற்றேர்
மீது செல்லுதலும் விண்முகில் பல்வே
றோதும் வண்ணமுடன் உற்றென வானில்
பூத சேனைபுடை போயின அன்றே.

இ—ள்: ஆதியம் குமரன்—முதல்வராகிய குமாரக்கடவுள், அவ்வழி பொன் தேர் மீது செல்லுதலும்—அந்த ஆகாய மார்க்கமாக மனோவேகப் பொற்றேரின் மேற் போதலும், விண் முகில் பல்வேறு ஓதும் வண்ணம் உடன் உற்று என—ஆகாயத்திலுள்ள மேகங்கள் பல வேறு வகையாகச் சொல்லப்படுகின்ற நிறங்களுடன் சென்றாற்போல, பூதசேனை—பூதசேனைகள், வானில்—ஆகாய மார்க்கமாக, புடை போயின—அவரது பக்கங்களிற் சென்றன எ—று.

ஆகாயத்தில் பல நிறமுடைய பூதர் விரவிச் செறிந்து செல்வது பல நிறம் விரவப் பெற்று மேகஞ் செல்வது போலுமென்க. பூதர் பல நிறமுடையரென்பதை ''ஐம்பெரு நிறனும் வடிவில் வீற்று வீற்றெய்தினர்'' என முன்னர்ப் படையெழு படலத்திற் கூறுதலானுமுணர்க. செல்லுதலும்-போயின என இயையும். (114)

போர ழிந்துபுற கிட்டெதிர் பூதர்
ஆரும் நேர்ந்துதொழு தாற்றலொ டெய்த
நார ணன்றனது நன்மரு காஞேன்
தார கன்திகழ் சமர்க்களம் உற்ருன்.

இ—ள்: போர் அழிந்து புறகிட்டு எதிர் பூதர் ஆரும்—போரிலே தோற்றுப் புறங்காட்டியோடி முற்பட்ட பூதரனைவரும், நேர்ந்து தொழுது—அணுகிக் கைதொழுது, ஆற்றலொடு எய்த—வலிமை பெற்று உடன்வர, நாரணன் தனது நல் மருகு ஆஞேன்—திருமாலினது நல்ல மருகராகிய முருகக்கடவுள், தார கன் திகழ் சமர்க்களம் உற்ருன்—தாரகாசுரன் விளங்கிநிற்கின்ற போர்க்களத்தை யடைந்தருளினுர் எ—று.

வீரவாகு முதலிய தலைவர்களை யிழந்தமையாற் பூதர்கள் அஞ்சி வலி குன்றி யிரிந்து அவரினுஞ் சிறந்த தலைவராகிய குமாரக்கடவுளையெதிர்ப்பட்ட பொழுது வலி பெற்றனரென்க. உமையம்மையார் திருமாலுக்குடன் பிறந்தவராக வழங் குதலாலும் திருமாலின் புதல்வியரை முருகக்கடவுள் மணம் புரிதலாலும் முரு கக்கடவுளை 'நாரணன் றனது நன்மருகாஞேன்' என்ருர். தாரகன் எதிருன்றி நிற்க வல்லாரின்மையாற் போரொழிந்து தனியே நிற்றலின் 'தாரகன்றிகழ் சமர்க்களம்' என்ருர். மருகு-உகர வீற்றுப் பண்புப் பெயர், பண்பியையுணர்த்தி நின்றது. (115)

கவன மோடுபடர் காலினு முந்திச்
சிவன்ம கன்றனது சேனைய தாஞேர்
உவரி யாமென உறுந்திறம் நோக்கி
அவுணர் தானையை அணிந்தெதிர் சென்ருர்.

இ—ள்: சிவன் மகன் தனது சேனையது ஆஞேர்—சிவபிரானது திருக்குமார ராகிய முருகக்கடவுளது சேனையாகவுள்ள பூதர்கள், கவனமோடு படர்காலினும் முந்தி—வேகத்தோடு செல்லுகின்ற காற்றினும் விரைந்து, உவரி ஆம் என உறும் திறம் நோக்கி—கடல் போலப் பரந்து வருந் தன்மையைப் பார்த்து, அவு ணர்—அசுரர்கள், தானையை அணிந்து எதிர் சென்ருர்—தங்கள் சேனைகளை யணி வகுத்துக்கொண்டு எதிரே போனுர்கள் எ—று. (116)

சகந்து திக்கவரு சாரதர் தாமும்
அகந்தை யுற்றஅவு ணத்தொகை யோரும்
இகந்த வன்மையொ டெதிர்ந்திகல் எய்தி
வெகுண்டு பேரமர் விளைத்திட லுற்ருர்.

இ—ள்: சகம் துதிக்க வரு சாரதர் தாமும்—உலகத்தாரனைவரும் புகழும் படி வருகின்ற பூதர்களும், அகந்தை உற்ற அவுண தொகையோரும்—அகங் காரம் பொருந்திய அசுரர் கூட்டத்தினரும், இகந்த வன்மையொடு எதிர்ந்து—அளவிறந்த வலிமையோடும் எதிர்த்து, இகல் எய்தி—மாறுபாடு கொண்டு, வெகுண்டு பேர் அமர் விளைத்திடல் உற்ருர்—கோபித்துப் பெரிய போரைச் செய்யத் தொடங்கினுர்கள் எ—று. (117)

இகந்த வன்மை-பெருவலி.

கரங்கொள் நேமிகள் கணிச்சிகள் தீவாய்ச்
சரங்க ளாதியன தானவர் விட்டார்
உரங்கொள் மால்வரைகள் ஓங்குமெ ழுக்கள்
மரங்கள் விட்டனர் மறங்கெழு பூதர்.

இ—ள்: தானவர்—அசுரர்கள், கரம் கொள் நேமிகள்—கையிலேந்திய சக்கரங்களும், கணிச்சிகள்—மழுப்படைகளும், தீ வாய் சரங்கள் ஆதியன—கொடிய முடியினையுடைய அம்புகளும் முதலாகிய படைகளை, விட்டார்—பூதர் மேலேவினார்கள், மறம் கெழு பூதர்—வலிமை மிக்க பூதர்கள், உரம் கொள் மால் வரைகள்—வலிமை பொருந்திய பெரிய மலைகளையும் ஓங்கும் எழுக்கள்—உயர்ந்த எழுப்படைகளையும், மரங்கள்—மரங்களையும், விட்டனர்—அசுரர் மேலேவினார்கள் எ—று.

தீ வாய்-தீயைக்காலும் வாயெனினுமாம். (118)

முரிந்த தேர்நிரை முடிந்தன மாக்கள்
நெரிந்த தானவர் நெடுந்தலை சோரி
சொரிந்த பூதர்மெய் துணிந்தன வானில்
திரிந்த பாறுகள் செறிந்தன வன்றே.

இ—ள்: தேர் நிரை முரிந்த—(இவ்வாறு இரு திறத்தாரும் எதிர்த்துப் பொருத பொழுது) தேர்க்கூட்டங்கள் முரிந்தன, மாக்கள் முடிந்தன—குதிரைகளழிந்தன, தானவர் நெடும் தலை நெரிந்த—அசுரர்களது நெடிய தலைகள் நெரிபட்டன, சோரி சொரிந்த—இரத்த நீர்கள் சிந்தின, பூதர் மெய் துணிந்தன—பூதர்களது சரீரம் வெட்டுப்பட்டன, வானில் திரிந்த பாறுகள் செறிந்தன—ஆகாயத்திலுலாவிய பருந்துகள் (தசையை விரும்பி வந்து) நெருங்கின எ—று. (119)

நிறங்கொள் செங்குருதி நீத்தம தாகிக்
கறங்கி யோடின கவந்தமோர் கோடி
மறங்கொ டாடுவ வயின்தொறு மாகிப்
பிறங்கு கின்றன பிணங்கெழு குன்றம்.

இ—ள்: செம் நிறம் கொள் குருதி நீத்தமது ஆகி கறங்கி ஓடின—சிவந்த நிறத்தையுடைய இரத்தங்கள் வெள்ளமாகி யிரைந்து பாய்ந்தன, ஓர் கோடி கவந்தம் மறம் கொடு ஆடுவ—கோடிக் கணக்கான உடற் குறைகள் வீராவேசங் கொண்டு கூத்தாடுவன, பிணம் கெழு குன்றம் வயின் தொறும் ஆகி பிறங்குகின்றன—பிண மலைகள் இடந்தோறும் பொருத்தி (மிகச் சேய்மையில் நிற்பார்க்கும்) காணப்படுகின்றன எ—று. (120)

அனைய வாறிவர் அருஞ்சம ராற்றப்
புனையுல் வாகையுள பூதர்கள் தம்மால்
வினையம் வல்லவுணர் வெவ்வலி சிந்தி
இனைத லோடுமிரி குற்றனர் அன்றே.

இ—ள்: அனையவாறு இவர் அரும் சமர் ஆற்ற—அவ்வாறு இவ்விரு திறத்தாரும் பெரும் போரைச் செய்ய, வினையம் வல் அவுணர்—உபாய புத்தியில்

வல்ல அசுரர்கள், வாகை புனையல் உள பூதர்கள் தம்மால்—வெற்றி மாலையைத் தரித்துள்ள பூதர்களால், வெவ் வலி சிந்தி—கொடிய வலிமையழிந்து, இனைதலோடும் இரி குற்றனர்—வருத்தத்தோடு அஞ்சியோடினுர்கள் எ—று.

பிறருடன் பொருத காலங்களிற் புறங்காட்டாதாரென்பார் 'வினையம் வல்லவுணர்' எனவும், அவரை வெல்லுதற்கேற்ற வீரமுடையரென்பார் 'புனையல் வாகையுள பூதர்கள்' எனவும் அடை புணர்த்திக் கூறினுர். (121)

தன்ப டைத்தொலைவு தாரகன் நோக்கிக்
கொன்ப டைத்தகுனி விற்குனி வித்தே
மின்ப டைத்தபல வெங்கணை தூவி
வன்ப டைக்கணம் வருந்த நடந்தான்.

இ—ள்: தாரகன்—தாரகாசுரன், தன் படை தொலைவு நோக்கி—தனது சேனைகளின் தோல்வியைப் பார்த்து, கொன் படைத்த குனி வில் குனிவித்து—பெருமை பொருந்திய வளையுமியல்பினையுடைய வில்லை வளைத்து, மின் படைத்த பல வெம் கணை தூவி—ஒளி பொருந்திய கொடிய பல பாணங்களைச் செலுத்தி, வன் படை கணம் வருந்த நடந்தான்—வலிய பூதசேனு சமூகம் வருந்தும்படியுலாவினுன் எ—று.

கொன்-அச்சந்தருந் தன்மையுமாம். (122)

நடந்தெ திர்ந்தகண நாதரை யெல்லாந்
தொடர்ந்து பல்கணை சொரிந்து துரந்தே
இடந்தி கழ்ந்தஇம யத்திறை நல்கும்
மடந்தை தந்ததிரு மைந்தன்முன் உற்றுன்

இ—ள்: நடந்து—இவ்வாறுலாவி, எதிர்ந்த கணநாதரை எலாம் தொடர்ந்து—முற்பட்ட பூதத் தலைவர்களையெல்லா மெதிர்த்து, பல் கணை சொரிந்து துரந்து—பல பாணங்களைச் செலுத்திப் புறங்காட்டுவித்து, இடம் திகழ்ந்த இமயத்து இறை நல்கும் மடந்தை தந்த திரு மைந்தன் முன் உற்றுன்—சிவபிரானது இடப் பாகத்தில் விளங்குகின்ற இமயமலையரசன் பெற்ற புதல்வியாகிய உமாதேவியார் பெற்ற திருக்குமாரராகிய முருகக்கடவுளுக்கெதிரே சென்றுன் எ—று.

இடந் திகழ்ந்த மடந்தையென இடையும். இடம் விசாலமெனக் கொண்டு இமயத்திற் கடையாக்கினுமாம். முருகக்கடவுள் கட்புலப்படத்தக்க தூரத்தே சென்றுனென்க. அவரைச் சமீபித்தது பின் 1253ஆஞ் செய்யுளிற் கூறப்படுதலால். (123)

உற்ற காலைதனில் ஒற்றரை நோக்கிச்
சற்று நீதியறு தாரக வெய்யோன்
செற்றம் என்னுமழல் சிந்தையின் மூள
மற்றி வன்கொல்அரன் மாமகன் என்றுன்.

இ—ள்: உற்ற காலை தனில்—அவ்வாறு சென்ற பொழுது, சற்றும் நீதி அறு தாரக வெய்யோன்—சிறிதாயினும் நீதியில்லாத கொடியவனுகிய தாரகாசுரன், செற்றம் என்னும் அழல் சிந்தையில் மூள—கோபமென்னுமக்கினி தன்

மனத்திற் பற்ற, ஒற்றரை நோக்கி—தூதுவர்களைப் பார்த்து, அரன் மாமகன் இவன் கொல் என்றான்—சிவபிரானது சிறந்த புதல்வன் இவனோவென்று வினவினான் எ—று.

வணங்குதற்கேற்ற கடவுளையும் பொரத் துணிந்தனனாதலின் 'சற்று நீதி யறு தாரக வெய்யோன்' என்றார். (124)

என்ன லுங்குமரன் இங்கிவ னேயாம்
மன்ன என்றிடலும் மற்றவன் ஏறுந்
துன்னு தேர்கடிது தூண்டி எவர்க்கும்
முன்ன வன்மதலை முன்னுற வந்தான்.

இ—ள்: என்னலும்—என்று வினவியவுடன், மன்ன—(தூதுவர்கள் தாரகனை நோக்கி) அரசனே!, குமரன் இவனே ஆம் என்றிடலும்—சிவகுமாரன் இவனேயாமென்று கூறுதலும், அவன்—அந்தத் தாரகாசுரன், ஏறும் துன்னு தேர் கடிது தூண்டி—தானேறிய சிறந்த தேரை விரைவிற் செலுத்துவித்து, எவர்க்கும் முன்னவன் மதலை முன் உற வந்தான்—அனைவர்க்கும் முதற் கடவுளாகிய சிவபிரானது திருக்குமாரரான முருகக்கடவுளது திருமுன்னிலையில் வந்தான் எ—று.

தூண்டுவித்தெனற்பாலது தூண்டியென நின்றது. (125)

### வேறு

முழுமதி யன்னஆறு முகங்களும் முந்நான் காகும்
விழிகளின் அருளும் வேலும் வேறுள படையின் சீரும்
அழகிய கரமீ ராறும் அணிமணித் தண்டை யார்க்குஞ்
செழுமல ரடியுங் கண்டான் அவன்தவஞ் செப்பற் பாற்றோ.

இ—ள்: முழு மதி அன்ன ஆறு முகங்களும்—பூரண சந்திரனைப் போன்ற ஆறு திருமுகங்களையும், முந் நான்கு ஆகும் விழிகளின் அருளும்—பன்னிரண்டென்னுந் தொகையினவாகிய திருக்கண்களின் கருணையையும், வேலும்—வேலாயுதத்தையும், வேறு உள படையின் சீரும்—மற்றுமுள்ள படைக்கலங்களின் சிறப்பையும், அழகிய கரம் ஈராறும்—அழகார்ந்த பன்னிரண்டு திருக்கரங்களையும், அணி மணி தண்டை ஆர்க்கும் செழு மலர் அடியும்—அழகிய இரத்தினங்களழுத்தப் பெற்ற தண்டை யென்னு மாபரண மொலிக்கின்ற செழிப்பான தாமரை மலர் போன்ற பாதங்களையும், கண்டான்—(தாரகாசுரன்) தரிசித்தான் (ஆதலின்), அவன் தவம் செப்பல் பாற்றோ—அவன் செய்த தவம் (இத்துணைத் தென எம்மாற் சொல்லுந் தரத்தினதா? அன்று எ—று.

தண்மை பொலிவு வசீகரம் முதலியவற்றைக் குறைவறவுடைமையால் 'முழு மதியன்ன-முகங்கள்' எனவும், எப்பொழுதுங் கருணை செய்யுங் குறிப்புடையனவாதலின் 'முந் நான்காகும் விழிகளினருள்' எனவும், படைகட்கெல்லாம் நாயகமாய் விளங்குதலின் ஏனைப் படைகளிற் பிரித்து 'வேலும்' எனவும், ஏற்ற ஏற்றவாறு சிறப்புற அமைந்திருத்தலின் 'வேறுள படையின் சீரும்' எனவும், அது பற்றியே 'அழகிய கரமீராறும்' எனவும், வேத மயமாகிய தண்டையென்னும் அணியானது அத்துவிதப் பேரானந்தம் பெறுதற்கிதுவே யிடமென்பதை எவரு முணருமாறு ஆர்த்துக் கொண்டிருத்தலின் 'அணிமணித் தண்டையார்க்கும்-அடி' எனவும், எண்ணிறந்த பாதகங்களையெல்லா மியற்றிய அவ்

வசுரன் சிவஞானிகனாற் பல கால முயன்றுங் காண்டற்கரிய திருவுருவத்தை யெளிதிற் கண்டானுதலின் 'அவன் றவஞ் செப்பற்பாற்றே' எனவும் கூறினர். இவ்வசுரர்கள் இப் பிறப்பிற் பல பாதகங்களைச் செய்தவராயினும் முற்பிறப்பிற் சுப்பிரமணியக் கடவுளில் மிகுந்த பத்தியுடையராயொழுகித் தேவர் சூழ்ச்சியால் அசுரராய்ப் பிறந்தனரென்று மயூரகிரிப் புராணத்துக் கூறப்படுஞ் சரித்திரம் ஈண்டுய்த்துணர்தற்பாலது. வேறுள படை-குலிச முதலியன; அவற்றை விடைபெறு படலத்து முப்பத்தேழாஞ் செய்யுளிற் காண்க. (126)

தற்பம துடைய சிந்தைத் தாரகன் இனைய வாற்றால்
சிற்பர மூர்த்தி கொண்ட திருவுரு வனைத்தும் நோக்கி
அற்புத மெய்தி நம்மேல் அமர்செய வந்தா னென்றால்
கற்பனை கடந்த ஆதிக் கடவுளே இவன்கொ லென்றான்.

இ—ள்: தற்பமது உடைய சிந்தை தாரகன்—செருக்கு நிறைந்த மனத்தையுடைய தாரகாசுரன், இனையவாற்றால்—இங்ஙனமாக, சிற்பர மூர்த்தி கொண்ட திருஉரு அனைத்தும் நோக்கி—ஞான முதல்வராகிய முருகக்கடவுள் கொண்ட திருக்கோல முழுவதையும் பார்த்து, அற்புதம் எய்தி-ஆச்சரியமுற்று, இவன் நம் மேல் அமர் செய வந்தான் என்றால்—இவர் எம்மேற் போர் செய்ய வந்தாரென்றால், கற்பனை கடந்த ஆதி கடவுளே கொல் என்றான்—கற்பனையைக் கடந்த முதற் கடவுளே போலுமென்று எண்ணினன் எ—று.

தர்ப்பம் சித்பரன் அத்புதம் என்னும் வட சொற்கள் முறையே தற்பம் சிற்பரன் அற்புதம் எனத் திரிந்தன. 'சிற்பர மூர்த்தி கொண்ட திருவுரு' என்றதற்கு இயல்பில் தமக்கெனவோருருவமின்றி அகண்டாகாரமாய் நிற்குங் கடவுள் ஆன்மாக்களுய்தி பெறுதற் பொருட்டுக் கொண்டருளிய திருவுருவமென்பது கருத்து. கற்பனை-பாவனை. கடவுளே யன்றிப் பிறரெவருந் தம்மையெதிர்க்கத் தக்காரல்லரெனக் கருதினனுதலின் 'நம் மேலமர் செயவந்தானென்றாற்-கற்பனை கடந்த வாதிக் கடவுளே' என்றான். (127)

இந்தவா றுன்னிப் பின்னர் யார்க்குமே லாகும் ஈசன்
தந்ததோர் வரமும் வீரத் தன்மையும் வன்மைப் பாடும்
முந்துதாம் பெற்ற சீரும் முழுவதும் நினைந்து சீறிக்
கந்தவேள் தன்னை நோக்கி இனையன கழற லுற்றான்.

இ—ள்: இந்தவாறு உன்னி—இப்படி நினைத்து, பின்னர்—அதன் பின்பு, யார்க்கும் மேல் ஆகும் ஈசன் தந்தது ஓர் வரமும்—எத்துணை மேம்பாடுடையார்க்கும் மேலவராகிய சிவபிரான் தமக்குத் தந்த ஒப்பற்ற வரங்களும், வீரத் தன்மையும்—பராக்கிரமத்தினியல்பும், வன்மைப்பாடும்—வலிமையும், முந்து தாம் பெற்ற சீரும்—முன்னே தாங்கள் பெற்ற கீர்த்தியும், முழுவதும் நினைந்து—ஆகிய இவையெல்லாவற்றையும் நினைத்து, சீறி—கோபித்து, கந்தவேள் தன்னை நோக்கி—முருகக் கடவுளைப் பார்த்து, இனையன கழறல் உற்றான்—இவ்வார்த்தைகளைச் சொல்வானாயினன் எ—று.

முன்னர்க் கடவுளென்றெண்ணியதற்கு மாறாகத் தன் பெருமைகளைச் சிந்தித்தனனென்பது தோன்ற 'பின்னர்-நினைந்து' என்றார். வரம்-அழிவின்றி வாழ்தல் முதலியன. வீரத் தன்மை-பின்னிடாது ஊக்கத்துடன் பொருஞ் சாமர்த்தியம். வன்மை-தேகபலம். சீர்-திக்கு விசயம் தேவரைச் சிறை செய்தல் முதலியன. (128)

நாரணன் றனக்கு மற்றை நான்முகன் றனக்கும் வெள்ளை
வாரணன் றனக்கு மல்லால் மதிமுடி அமல னுக்குந்
தாரணி தனில்எ மக்குஞ் சமரினை இழைப்ப இங்கோர்
காரண மில்லை மைந்தா வந்ததென் கழறு கென்றான்.

**இ—ள்:** நாரணன் தனக்கும்—திருமாலுக்கும், மற்றை நான்முகன் தனக்கும்—மற்றொரு மூர்த்தியாகிய பிரமதேவருக்கும், வெள்ளை வாரணன் தனக்கும் அல்லால்—ஐராவத யானையை ஊர்தியாகவுடைய இந்திரனுக்குமேயன்றி, மதி முடி அமலனுக்கும் தாரணி தனில் எமக்கும் சமரினை இழைப்ப இங்கு ஓர் காரணம் இல்லை—சந்திரனை யணிந்த சடை முடியையுடைய சிவபிரானுக்கும் நில வுலகத்திலுள்ள எங்களுக்கும் போர் செய்தற்கு இங்கே ஒரு காரணமுமில்லை, மைந்தா—பாலகனே!, வந்தது என்—நீ வந்த காரணமென்னை?, கழறுக என்றான்—சொல்லுதியென்று கூறினான் எ—று.

பிரமவிஷ்ணுக்களையும் இந்திரனையும் முன் வென்றேமாதலால் அவர் எம் மேற் போர் செய்ய வருதற்குக் காரணமுண்டு. சிவபிரான் எம்மை யெதிர்த்துப் போர் செய்ய உன்னையேவுதற்குக் காரணமில்லையே என்று கூறினனென்க. 'மைந்தா' என்றதனால் என்னுடனெதிர்க்கத் தக்காயல்லையென்று குறிப்பித் தனன். கழறுக என்னும் வியங்கோளீறு தொக்கது. (129)

அறவினை புரிந்தே யார்க்கும் அருளொடு தண்டஞ் செய்யும்
இறையவ னாகும் ஈசன் இமையவர் தம்மை நீங்கள்
சிறையிடை வைத்த தன்மை திருவுளங் கொண்டு நுந்தம்
விறலொடு வன்மை சிந்த விடுத்தனன் எம்மை யென்றான்.

**இ—ள்:** அறவினை புரிந்து யார்க்கும் அருளொடு தண்டம் செய்யும் இறையவன் ஆகும் ஈசன்—தரும நீதிகளை வகுத்து எல்லாப் பிராணிகளுக்கும் அனுக்கிரகத்தையும் நிக்கிரகத்தையுஞ் செய்கின்ற தலைவராகிய சிவபிரான், நீங்கள் இமையவர் தம்மை சிறையிடை வைத்த தன்மை திருவுளம் கொண்டு—நீவிர் தேவர்களைச் சிறையில் வைத்த தன்மையைச் சிந்தித்து, நும் தம் விறலொடு வன்மை சிந்த—உங்கள் வீரத்தையும் வலிமையையுமழிக்கும்படி, எம்மை விடுத்தனன் என்றான்—எம்மையனுப்பினாரென்று (முருகக்கடவுள் தாரகாசுரனை நோக்கிக்) கூறியருளினார் எ—று.

தாம் வகுத்த தரும வழியினொழுகினார்க்கு அருளையும் அங்ஙனமொழுகாதார்க்குத் தண்டத்தையுஞ் செய்பவரென்பார் 'அறவினை புரிந்தே யார்க்குமருளொடு தண்டஞ்செய்யு மிறையவன்' என்றார். இதனால் நீவிர் தேவரைச் சிறையிட்டது தரும நெறிக்கு விரோதமென்பதும் அது பற்றியே நும்மை யழிக்குமாறு நம்மை யேவினர், நும்மேற் பகைமை பூண்டன்று என்பதும் சுப்பிரமணியக் கடவுளாற் றாரகனுக் குணர்த்தப்பட்டமை போதரும். (130)

### வேறு

கூரிய வேற்படைக் குமர நாயகன்
பேரருள் நிலைமையால் இனைய பேசலும்
போரினை இழைத்திடும் பூட்கை மாமுகத்
தாரக னென்பவன் சாற்றல் மேயினான்.

**இ—ள்:** சூரிய வேற்படை குமர நாயகன்—கூர்மை பொருந்திய வேலாயுதத்தை யேந்திய குமாரக்கடவுள், பேர் அருள் நிலைமையால் இனைய பேசலும்—மிக்க கருணைத் திறத்தினுல் இவ் வாசகங்களைக் கூறுதலும், போரினை இழைத்திடு மா பூட்கை முக தாரகன் என்பவன்—போர் செய்யும் விருப்பமுடைய பெரிய யானை முகத்தினனுகிய தாரகனென்னும் அசுரன், சாற்றல் மேயினுன்—இவ்வாறு சொல்லத் தொடங்கினுன் எ—று.

பூட்கைமா-உட்டுளை பொருந்திய துதிக்கையை யுடைய விலங்கு. தேவர் சிறையை நீக்கிய வழிப் போரைச் செய்யாது நிறுத்துங் கருத்தமையக் கூறினராதலின் 'பேரருணிலைமையாலினைய பேசலும்' எனவும், தாரகன் அதனைக் கேட்டும் அங்ஙனஞ் செய்யாது போர் செய்தலையே துணிந்தனனுதலின் 'போரினையிழைத்திடும்-தாரகன்' எனவும், அங்ஙனந் துணிந்தது இழிதகவாமென்பது தோன்ற 'பூட்கை மாமுகத் தாரகன்' எனவும் கூறினுர். (131)

செந்திருத் திகழுமார் புடைய செங்கணுன்
சுந்தரக் கலுழன்மேல் தோன்றிப் போர்செய்தே
அந்தரக் கதிர்புரை ஆழி உய்த்ததென்
கந்தரத் தணிந்தது காண்கி லாய்கொலோ.

**இ—ள்:** செம் திரு திகழும் மார்பு உடைய செம் கணுன்—சிவந்த நிறத்தையுடைய இலக்குமி (வீற்றிருந்து) விளங்கப்பெற்ற நெஞ்சினையுடைய திருமால், சுந்தர கலுழன் மேல் தோன்றி போர் செய்து—அழகிய கருட வாகனத்திலேறி என்னுடன் போரைச் செய்து, உய்த்தது—செலுத்தியதாகிய, அந்தர கதிர் புரை ஆழி—ஆகாயத்தில் விளங்குகின்ற சூரியனைப் போன்ற சக்கராயுதத்தை, என் கந்தரத்து அணிந்தது காண்கிலாய் கொல்—எனது கழுத்தில் ஆபரணமாக யான் தரித்திருத்தலைப் பார்த்திலாய் போலும் எ—று.

பார்த்திருந்தால் என்னுடன் போர் புரியத் துணியாயென்பது உட்கோள். செங்கணுன்–செந்தாமரைக் கண்ணையுடையவன். கலுழன்-கருடனென்னும் வடசொல்லின் விகாரம். கந்தரம்-தலையைத் தரித்திருப்பது. கம்-தலை, தரம்-தரித்திருப்பது. (132)

இன்றுகா றெம்முடன் இகலிப் போர்செயச்
சென்றுளார் யாவருஞ் சிறிது போழ்தினுட்
பொன்றுவார் இரிந்தனர் போவ ரல்லது
வென்றுளார் இலையது வினவ லாய்கொலோ.

**இ—ள்:** இன்று காறு எம்முடன் இகலி போர் செய சென்றுளார் யாவரும்-இற்றைத் தினம் வரையும் எங்களுடன் பகைத்துப் போர் செய்ய வந்தவர்களெல்லோரும், சிறிது போழ்தினுள் பொன்றுவார்—சிறிது நேரத்தினுளிறப்பார்கள், இரிந்தனர் போவர்—அல்லது அஞ்சியோடுவார்கள், அல்லது—இவ்விரண்டு தன்மையுளொன்றை யெய்திஞேரேயன்றி, வென்றுளார் இலை—வெற்றி கொண்டவர்களில்லை, அது வினவலாய் கொல்—அத் தன்மையை நீ கேள்விப் பட்டிலாய் போலும் எ—று.

கேள்விப்பட்டாயேல் இங்ஙனந் துணியாயென்பது குறிப்பு. பொன்றுவார் போவர் என்பவற்றில் வகர விடை நிலை தன்மையை யுணர்த்திற்று. (133)

முட்டிவெஞ் சமரினை முயல முன்னம்நீ
விட்டிடு தலைவரை வென்று வெற்பினில்
பட்டிட இயற்றினன் பலக ணங்களை
அட்டனன் அவற்றினை அறிந்தி லாய்கொலோ.

இ—ள்: முட்டி வெம் சமரினை முயல முன்னம் நீ விட்டிடு தலைவரை—எதிர்த்துக் கொடிய போரைச் செய்யுமாறு முன்னே நீயேவிய படைத் தலைவர்களை வென்று—வெற்றி கொண்டு, வெற்பினில் பட்டிட இயற்றினன்—கிரவுஞ்சமலையிலகப்படும்படி யான் செய்தேன், பல கணங்களை அட்டனன்—பல பூதங்களைக் கொன்றேன், அவற்றினை அறிந்திலாய் கொல்—அந்த நிகழ்ச்சிகளை நீயறிந்திலாய் போலும் எ—று.

அறிந்தாயேலிங்ஙன மெதிர்க்கமாட்டாயென்பது குறிப்பு. (134)

ஆகையால் எம்முடன் அமரி யற்றியே
சோகம தடையலை சூல பாணிபால்
ஏகுதி பாலநீ என்று கூறலும்
வாகையங் குமரவேள் மரபிற் கூறுவான்.

இ—ள்: ஆகையால்—ஆதலினால், எம்முடன் அமர் இயற்றி சோகமது அடையலை—எம்மோடு போரைச் செய்து துன்பமடையாதே, பால நீ - குழந்தையே! நீ, சூலபாணி பால் ஏகுதி என்று கூறலும்—உனது தந்தையாகிய சிவபிரானிடத்துச் செல்லுதியென்று தாரகன் சொல்லுதலும், வாகையம் குமரவேள்—வெற்றியையுடைய முருகக்கடவுள், மரபில் கூறுவான்—முறைப்படி எதிர்மொழி கூறுவார் எ—று.

சூலபாணி-சூலத்தையேந்திய கையையுடையவன். வடமொழியன்மொழித் தொகை. தாரகனது வீரவாதமழிதற்கேற்றவாறென்பார் 'மரபில்' என்றார். (135)

தாரணி மறையவன் ததீசி தன்மிசை
நாரணன் விடுத்ததோர் நலங்கொள் ஆழிதன்
கூரினை இழந்துபோய்க் குலாலன் சக்கர
நீர்மைய தானது வினவ லாய்கொல்நீ.

இ—ள்: நாரணன்—திருமால், தாரணி மறையவன் ததீசி தன் மிசை விடுத்தது ஓர் நலம் கொள் ஆழி—பூவுலகத்திலுள்ள அந்தணனாகிய ததீசியென்பான் மேற் செலுத்திய ஒப்பற்ற சிறப்பினையுடைய சக்கரம், போய்—சென்று, தன் கூரினை இழந்து—தனது கூர்மையை யிழந்து, குலாலன் சக்கர நீர்மையது ஆனது—குயவனது (மட்கலம் வனைதற்குக் கருவியாயுள்ள) சக்கரத்தின் றன்மையையடைந்ததை, நீ வினவிலாய் கொல்—நீ கேட்டிலாயா? எ—று.

கேட்டிருப்பாயேல் சக்கரம் உன்னைக் கொல்லாமையைப் பெரும் புகழாக மதியாயென்பது குறிப்பு. கொல்லுதற்காயினும் ஊறு செய்தற்காயினுங் கருவியாகாமை பற்றிக் குலாலன் சக்கரத்தை யுவமை கூறினார். (136)

சூற்புயல் மேனியான் துங்கச் செங்கையின்
பாற்படு திகிரிபோற் பழியில் துஞ்சுமோ
வேற்புறு படைக்கெலாம் இறைவ னாகுநம்
வேற்படை நின்னுயிர் விரைவின் உண்ணுமால்.

இ—ள்: ஏற்பு உறு படைக்கு எலாம் இறைவன் ஆகும் நம் வேற்படை—சிறந்த படைக்கலங்களுக்கெல்லாம் நாயகமாயிருக்கின்ற நமது வேலாயுதம், சூல் புயல் மேனியான் துங்க செம் கையின் பால் படு திகிரி போல் பழியில் துஞ்சுமோ—கருக் கொண்ட மேகம் போன்ற கரிய வடிவத்தையுடைய திருமாலினது சிறந்த சிவந்த கையிற் பெருந்திய சக்கரம் போலப் பழி பெற்று உன் கழுத்திற் றங்கிக் கிடக்குமா? (கிடவாது), நின் உயிர் விரைவின் உண்ணும்—உனது உயிரை விரைவிற் கவரும் எ—று.

பழியிற்றுஞ்சுதல்-நிந்தனையி லழுந்துதலெனினுமாம். வேற்படையை இறைவனென்று உயர்திணையாற் கூறியது உயர்வு பற்றி வந்த திணை வழுவமைதி. 'யானையுளரசன்' என்றாற்போல. (137)

உங்கள்பே ராற்றல்இவ் வுலகை வென்றன
இங்குநாம் வருதலும் இமைப்பின் மாய்ந்தன
அங்கண்மா ஞாலமுண் டமரும் ஆரிருள்
பொங்குபே ரொளிவர விளிந்து போனபோல்.

இ—ள்: அம் கண் மா ஞாலம் உண்டு அமரும் ஆர் இருள்—அழகிய இடமகன்ற பெரிய பூவுலகத்தை மூடியிருக்கின்ற நிறைந்த இருள், பொங்கு பேர் ஒளி வர விளிந்து போன போல்—மிகுந்த பெரிய சூரியப்பிரகாச முண்டாக அழிந்த தன்மையைப் போல, இ உலகை வென்றன உங்கள் பேர் ஆற்றல்—இவ்வுலக முழுதையும் வெற்றி கொண்டனவாகிய உங்கள் பெரிய வல்லமையெல்லாம், நாம் இங்கு வருதலும் இமைப்பில் மாய்ந்தன—நாம் இவ்விடத்தில் வருதலால் ஒரு மாத்திரைப் பொழுதினுளழிந்தன எ—று.

இமைப்பில் மாய்ந்தன என்றது முன்னிகழ்ந்த போரிற் பற்பல சேனைகளையும் தலைவர்களையும் இழந்து ஆற்றல் குன்றி நிற்றலை; விரைவுந் தெளிவும் பற்றி எதிர்காலத்துக்கு இறந்த காலம் வந்த வழுவமைதியாகவுங் கொள்ளலாம். உண்ணுதல்-இலக்கணை. (138)

ஈட்டிய மாயைகள் எவையுந் தன்வழிக்
காட்டிய கிரியையுங் கள்வ நின்னையுந்
தீட்டிய வேல்கொடு செற்றுச் சேனையை
மீட்டிடு கின்றனன் விரைவி னுலென்றான்.

இ—ள்: கள்வ — வஞ்சகனே, ஈட்டிய மாயைகள் எவையும் தன் வழி காட்டிய கிரியையும்—தொகுக்கப்பட்ட மாயங்களெல்லாவற்றையுந் தன்னிடத்தே காண்பித்த கிரவுஞ்சமலையையும், நின்னையும்—உன்னையும். தீட்டிய வேல் கொடு செற்று—கூரிய வேலாயுதத்தாலழித்து, விரைவினுல் சேனையை மீட்டிடுகின்றனன் என்றான்—சீக்கிரத்திற் சேனைகளை மீட்டுகின்றேமென்று கூறியருளினார் எ—று.

மீட்டிடுகின்றனன்-விரைவுந் தெளிவும் பற்றி எதிர்காலத்துக்கு நிகழ்காலம் வந்தவழுவமைதி. விரைவினுல்—உருபு மயக்கம். (139)

என்றலுஞ் சீறியே இகலித் தாரகன்
குன்றுறழ் தன்சிலை குனியக் கோட்டியே
மின்றிகழ் நாணொலி எடுப்ப விண்மிசைச்
சென்றிடும் அமரருந் தியக்க மெய்தினர்.

**இ—ள்:** என்றலும்—என்று முருகக்கடவுள் கூறியவுடன், தாரகன்—தாரகாசுரன், சீறி இகலி—கோபித்து மாறுகொண்டு, குன்று உறழ் தன் சிலை குனிய கோட்டி—மலையையொத்த தனது வில்லை வளையும்படி வளைத்து, மின் திகழ் நாண் ஒலி எடுப்ப—மின்னல் போல விளங்குகின்ற நாணினேசையைச் செய்ய, விண் மிசை சென்றிடும் அமரரும் தியக்கம் எய்தினர்—ஆகாயத்திற் செல்லுகின்ற தேவர்களுந் திகைப்படைந்தார்கள் எ—று.

மிசை-ஏழனுருபு. உம்மை-உயர்வு சிறப்பு. பருமையினுலும் வலியினுலும் வில்லிற்கு மலை உவமையாயிற்று. அமரர் விண்மிசைச் செல்லுதல் போர் நிகழ்ச்சியைப் பார்த்தற்கென்க. அஃதவர்க்கியல்பெனினுமாம், நாணைத் தெறித்து ஒலி பிறப்பிக்கும்போது மின்னல் போலுமென்க. (140)

எய்திய காலையில் எந்தை கந்தவேள்
கைதனில் இருந்ததோர் கார்மு கந்தனை
மொய்தனில் வாங்கிநாண் முழக்கங் கோடலும்
ஐதென உலகெலாம் அழுங்கிற் றென்பவே.

**இ—ள்:** எய்திய காலையில்—அங்ஙனந் திகைப்படைந்த பொழுது, எந்தை கந்தவேள்—எம் பரமபிதாவாகிய சுப்பிரமணியக்கடவுள், கை தனில் இருந்தது ஓர் கார்முகம்தனை மொய்தனில் வாங்கி—தமது கையிலிருந்த ஒரு வில்லை வலிமையோடு வளைத்து, நாண் முழக்கம் கோடலும்—நாணெலி செய்ய, உலகு எலாம் ஐது என அழுங்கிற்று—உலகங்களெல்லாம் விரைவில் வருந்தின எ—று.

ஐது-விரைவுக் குறிப்பு. உலகு-ஆகுபெயர். இவ்வோசையுண்டாயதற்குக் காரணம் யாதென்றுய்த்துணராது கேட்டவுடன் வருந்தினவாதலின் 'ஐதென. அழுங்கிற்று' என்றார். உலகெலாமழுங்கிற்று-பன்மையிெருமை மயங்கிய வழுவமைதி. (141)

நாரியின் பேரொலி நாதன் கோடலும்
ஆரணன் முதலினேர் தாமும் அஞ்சினர்
பேருல கெங்கணும் பேதுற் றேங்கின
தாரக முதல்வனுந் தலைது ளக்கினன்.

**இ—ள்:** நாதன்—முருகக்கடவுள், நாரியின் பேரொலி கோடலும்—வில் நாணினது பெரிய ஓசையுயைண்டாக்குதலும், ஆரணன் முதலினேர் தாமும் அஞ்சினர்—பிரமா முதலிய தேவர்களும் பயந்தார்கள், பேர் உலகு எங்கணும் பேதுற்று ஏங்கின—பெரிய உலகத்தின் எல்லாவிடங்களினுமுள்ள பிராணிகளெல்லாம் மதிமயங்கி யேங்கின, தாரக முதல்வனும் தலை துளக்கினன்—தாரகாசுரனுகிய தலைவனுந் தலையசைத்தான் எ—று.

தலையசைத்தது தன்னுடனெதிர் நின்று போர் செய்ய வல்லானென்பது கருதி; அஞ்சியென்பாருமுளர். (142)

துளக்கிய தாரக சூரன் கைத்தலங்
கொளற்குரி வில்லுமிழ் கொள்கைத் தாலென
வளக்கதிர் நுனைகெழு வயிர வான்கணை
அளக்கரும் எண்ணில ஆர்த்துத் தூண்டினன்.

இ—ள்: துளக்கிய தாரக சூரன்—அங்ஙனந் தலையசைத்த தாரகாசுரனாகிய வீரன், கை தலம் கொளற்கு உரி வில் உமிழ் கொள்கைத்து என—கையிலேந்து தற்கேற்ற வில்லானது (கைம் முயற்சியின்றித்தானே) அம்புகளைச் சொரியு மியல்பினதென்று கண்டோர் சொல்லுமாறு, வள கதிர் நுனை கெழு வயிர வான் கணை—மிக்க ஒளி பொருந்திய முனையையுடைய வைரித்த பெரிய அம்பு களை, அளக்க அரும் எண்ணில—அளவிடுதற்கரிய பல தொகையாக, ஆர்த்து தூண்டினான்-ஆரவாரித்துச் செலுத்தினான் எ—று.

அம்புகளைக் கையிலெடுத்தலும் வில்லிற் றொடுத்தலும் நாணையிழுத்து விடுத்தலுந் தோன்றாது வில்லினின்றுமம்புகள் வெளிப்படுதன் மாத்திரமே தோன்றுமாறு அத்துணை விரைவிற் செலுத்தினனென்பார் 'கைத்தலங் கொளற் குரிவில்லுமிழ் கொள்கைத்தாலென-தூண்டினான்' என்றார். எண்ணில-அள வில்லாதன; ஈண்டுப் பலவென்னும் பொருளை மாத்திரந் தந்து நின்றது. (143)

ஆயதோர் காலையில் ஆறு மாமுகன்
மீயுயர் சிலைதனில் விரைவில் ஆயிரஞ்
சாயகந் தூண்டியே தார காசுரன்
ஏயின பகழிக ளியாவுஞ் சிந்தினான்.

இ—ள்: ஆயது ஓர் காலையில்—அச் சமயத்தில், ஆறு மா முகன்—ஆறு திரு முகங்களையுடைய முருகக்கடவுள், மீ உயர் சிலைதனின்-மிக உயர்ந்த தமது வில்லி னின்றும், விரைவில்—சீக்கிரத்தில், ஆயிரம் சாயகம் தூண்டி—ஆயிரம் பாணங் களைச் செலுத்தி, தாரகாசுரன் ஏயின பகழிகள் யாவும் சிந்தினான்—தாரகா சுரன் தம்மேற் பிரயோகித்த அம்புகளையெல்லா மழித்தார் எ—று.

மிக நீண்ட வில்லென்பார் 'மீயுயர்சிலை' என்றார். (144)

சிந்திய காலையில் செயிர்த்துத் தாரகன்
உந்தினன் பின்னரும் ஓராயி ரங்கணை
கந்தனும் அனையது கண்டு வல்லையில்
ஐந்திரு பகழிதொட் டவற்றை நீக்கினான்.

இ—ள்: சிந்திய காலையில்—அழித்த பொழுது, தாரகன் செயிர்த்து—தார காசுரன் கோபித்து, பின்னரும் ஓராயிரம் கணை உந்தினன்—பின்பும் ஆயிரமம்பு களைச் செலுத்தினான், கந்தனும் அனையது கண்டு—முருகக்கடவுளும் அத் தன்மை யைப் பார்த்து, வல்லையில் ஐந்து இரு பகழி தொட்டு—விரைவிற் பத்தம்புகளைச் செலுத்தி, அவற்றை நீக்கினான்—அவனேவிய அம்புகளை விலக்கினார் எ—று.

ஐந்திருபகழி-பண்புத் தொகைப் பன்மொழித்தொடர், (145)

மீட்டுமத் தாரகன் விசிகம் வெஞ்சிலை
பூட்டிய வாங்கலும் புராரி காதலன்
ஈட்டமொ டொருகணை யேவி ஆங்கவன்
தோட்டுணை வில்லினைத் துண்ட மாக்கினான்.

இ—ள்: அ தாரகன்—அந்தத் தாரகாசுரன். மீட்டும்—பின்பும், வெம் சிலை பூட்டிய விசிகம் வாங்கலும்—கொடிய வில்லிற் றொடுத்தற் பொருட்டு அம் பைத் தூணியினின்றெடுத்தலும், புராரி காதலன்—சிவகுமாரராகிய முருகக் கடவுள் ஈட்டமொடு ஒரு கணை ஏவி—வலிமையுட னோரம்பைப் பிரயோகித்து,

அவன் தோள் துணை வில்லினை துண்டம் ஆக்கினான்—அந்தத் தாரகனது தோளள வாயிருக்கின்ற வில்லை வெட்டினார் எ—று.

புராரி-முப்புரங்களையு மழித்தவன். புரம்-முப்புரங்கள். அரி-பகைவன். ஈடு என்னும் நெடிற்றொடர் தன்னொற்றிரட்டி அம் சாரியை பெற்று ஈட்டம் என நின்றது; வேடு-வேட்டம் என்றாற்போல. விற்களைத் தோளளவாக வளைத்த லியல்பாதலின் 'தோட்டுணைவில்' என்றார். (146)

**வேறு**

அங்கோர் சிலையைக் குனித்தானது காலை தன்னில்
எங்கோ முதல்வன் ஒருபாணியின் ஏந்து வில்லில்
செங்கோல் வகையா யிரம்பூட்டினன் செல்ல உய்த்தான்
வெங்கோல் நடாத்தி வருதாரக வெய்யன் மீதில்.

**இ—ள்:** அங்கு—அப்பொழுது, ஓர் சிலையை குனித்தான்—தாரகாசுரன் ஒரு வில்லையெடுத்து வளைத்தான், அது காலை தன்னில்—அச் சமயத்தில், எம் கோ முதல்வன்—எமது சிறந்த தலைவராகிய முருகக்கடவுள், ஒரு பாணியில் ஏந்து வில் லில்—ஒரு திருக்கரத்திற் பிடித்துள்ள வில்லில், செம் கோல் வகை ஆயிரம் பூட்டினன்—செம்மையாகிய ஆயிர மம்புகளைத் தொடுத்து, வெம் கோல் நடாத்தி வரு தாரக வெய்யன் மீதில் செல்ல உய்த்தான்—கொடுங்கோலை நடாத்தி வரு கின்ற கொடியவனாகிய தாரகாசுரன் மேற் செல்லும்படி செலுத்தினார் எ—று.

செங்கோல் வெங்கோல் என்பன சொல்லான் முரண்டொடை. (147)

சேரார் பரவுந் திறல்வேலவன் செய்கை நோக்கித்
தாரார் முடித்தா ரகவீரன் தனது வில்லில்
ஓரா யிரம்வா ளிகள்பூட்டினன் ஒல்லை உய்த்து
நேராய் விரவுங் கணையாவையும் நீறு செய்தான்.

**இ—ள்:** சேரார் பரவும் திறல் வேலவன் செய்கை நோக்கி—பகைவர்களா லுந் துதிக்கப்படுகின்ற பெரு வலியினையுடைய வேலாயுதத்தைத் தாங்கிய முரு கக் கடவுளது செயலைப் பார்த்து, தார் ஆர் முடி தாரக வீரன்—மாலை பொருந் திய கிரீடத்தையுடைய தாரகாசுரனாகிய வீரன், தனது வில்லில் ஓராயிரம் வாளி கள் பூட்டினன்—தன்னுடைய வில்லில் ஆயிர மம்புகளைத் தொடுத்து, ஒல்லை உய்த்து—விரைவிற் செலுத்தி, நேர் ஆய் விரவும் கணை யாவையும் நீறு செய் தான்—தனக்கெதிரே வந்த அம்புகளெல்லாவற்றையும் பொடிபடுத் தினான் எ—று. (148)

வெய்யான் அநந்தங் கணைதூண்ட விமலன் நல்குந்
துய்யான் அவைகள் அறுத்துக் கணைகோடி தூண்டி
மையார் அவுணர் புகழ்தாரக மான வேழம்
எய்யாகும் வண்ணஞ் செறித்தானவன் யாக்கை யெங்கும்.

**இ—ள்:** வெய்யான் அநந்தம் கணை தூண்ட—கொடியவனாகிய தாரகா சுரன் பின்னுமளவிறந்த பாணங்களைச் செலுத்த, விமலன் நல்கும் துய்யான்— சிவபிரானாற் றோற்றுவிக்கப்பட்ட பரிசுத்தராகிய குமாரக்கடவுள், அவைகள் அறுத்து—(தாமேவிய பாணங்களால்) அவற்றைத் துணித்து, கோடி கணை

தூண்டி—பின்னும் கோடி பாணங்களைச் செலுத்தி, மை ஆர் அவுணர் புகழ் தாரக மான வேழம் எய் ஆகும் வண்ணம்—குற்றம் நிறைந்த அசுரர்களாற்றுதிக் கப்படுகின்ற தாரகாசுரனுகிய மதிக்கத் தகுந்த யானையானது முட்பன்றி போலா கும்படி, அவன் யாக்கை எங்கும் செறித்தான்—அவனது சரீரமுழுவதிலுமழுத் தினர் எ—று.

முட்பன்றியின் சரீர முழுவதினும் முட்கள் செறிந்திருத்தல் போலத் தார கனது வடிவ முழுவதினுங் கூரிய அம்புகள் செறிந்திருக்கும்படி அழுத்தினு ரென்க. யானை முகமுமுடையவனுதலின் தாரகனை வேழமென்றார். (149)

ஒருகோடி வாளி உறலோடும் உருத்து நீசன்
இருகோடி வாளி விடஅன்னதை ஏவின் நீக்கி
முருகோ டியதார் அசுரேசன் முகங்கொள் கையும்
பொருகோடும் வீழ விடுத்தான்இரு புங்க வாளி.

இ—ள்: ஒரு கோடி வாளி உறலோடும்—குமாரக்கடவுள் செலுத்திய கோடி யம்புகளும் தன் மேனியெங்கும் பட்டவுடன், நீசன்—இழிஞனுகிய தாரகாசுரன், உருத்து—கோபித்து, இரு கோடி வாளி விட—இரண்டு கோடியம்புகளைச் செலுத்த, அன்னதை ஏவில் நீக்கி—அவற்றைக் குமாரக்கடவுள் எதிரம்பெய்து விலக்கி, முருகு ஓடிய தார் அசுரேசன் முகம் கொள் கையும் பொரு கோடும் வீழ—வாசனை பொருந்திய மலர் மாலையைத் தரித்த அசுரத் தலைவனுகிய தார கனது துதிக்கையும் போர் செய்ய வல்ல தந்தங்களுந் துணிபட்டு விழும்படி, இரு புங்க வாளி விடுத்தான்—உயர்ச்சி பொருந்திய இரண்டு பாணங்களைச் செலுத் தினர் எ—று.

புங்கம்-அம்பின் குதையுமாம். அன்னது-சாதியொருமை. (150)

வந்தங் கிரண்டு சரமும்பட மாயை மைந்தன்
தந்தங்கள் கையோ டிறலோடுந் தளர்ச்சி யெய்தி
முந்துங் கணைஆ யிரந்தன்னை முனிந்து தூண்டிக்
கந்தன் தடந்தேர்த் துவசந்துகள் கண்டு நின்றான்.

இ—ள் அங்கு இரண்டு சரமும் வந்து பட—அப்பொழுது இரண்டு பாணங் களும் வந்து பட்டதனுல், தந்தங்கள் கையோடு இறலோடும்—கோடுகளுந் துதிக் கையும் வெட்டுப்படுதலும், மாயை மைந்தன்—மாயவளது புதல்வனுகிய தார காசுரன், தளர்ச்சி எய்தி—சோர்வடைந்து, முனிந்து—கோபித்து, முந்தும் கணை ஆயிரம் தன்னை தூண்டி—விரைந்து செல்லுகின்ற ஆயிரமம்புகளைச் செலுத்தி, கந்தன் தடம் தேர் துவசம் துகள் கண்டு நின்றான்—முருகக்கடவுளது விசா லித்த தேரிற் கட்டப்பட்ட கொடியைப் பொடியாக்கி நின்றான் எ—று.

அங்கு-என்பதற்குத் தந்தங்களுங் கையுமாகிய அவ்விடங்களிலெனினுமாம். பட என்னு மெச்சமேதுப் பொருட்டு, முந்துங்கணை-சிறந்த பாணமெனினு மாம். (151)

மல்லற் கொடியிற் றதுகண்டு மறங்கொள் வெய்யோன்
வில்லைக் கணைநான் கிரண்டால் நிலமீது வீட்டித்
தொல்லைக் கனலின் கணையாயிரந் தூண்டி யன்னோன்
செல்லுற்ற திண்டேர் பரிபாகொடு சிந்தி நின்றான்.

இ—ள்: மல்லல் கொடி இற்றது கண்டு—வளப்பம் பொருந்திய தேர்த் துவசம் வெட்டுப்பட்டதை முருகக்கடவுள் பார்த்து, மறம் கொள் வெய்யோன் வில்லை கணை நான்கு இரண்டால் நிலமீது வீட்டி—அஞ்சாத் தன்மையையுடைய கொடிய தாரகாசுரனது வில்லை எட்டுப் பாணங்களால் வெட்டிப் பூமியில் விழுத்தி, தொல்லை கனலின் கணை ஆயிரம் தூண்டி—பழைய ஆயிரஞ் சுடு சரங்களைச் செலுத்தி, அன்னோன் செல்லுற்ற திண் தேர் பரி பாகொடு சிந்தி நின்றுன்—அவ் வசுரனேறி வந்த வலிய தேரையும் தேரிற் பூட்டிய குதிரைகளையுஞ் சாரதியையும் அழித்து நின்றார் எ—று.

கணை நான்கிரண்டால்-நான்கிரண்டு கணையால். (152)

வேறங் கொருதேர்மிசை யேறியொர் வில்லை வாங்கி
நூறைந் திருதீ விசிகந்தனை நொய்தின் ஏவி
மாறின்றி வைகும் பரமன்வடி வான செவ்வேள்
ஏறுந் தடந்தேர் வலவன்புயத் தெய்த உய்த்தான்.

இ—ள்: அங்கு—அப்பொழுது, வேறு ஒரு தேர்மிசை ஏறி—வேறொரு தேரின் மேல் தாரகாசுரனேறி, ஓர் வில்லை வாங்கி—ஒரு வில்லை வளைத்து, நூறு ஐந்து இரு தீ விசிகம் தனை நொய்தின் ஏவி—கொடிய ஆயிரம் பாணங்களை விரைவிற் செலுத்தி, மாறு இன்றி வைகும் பரமன் வடிவு ஆன செவ்வேள் ஏறும் தடம் தேர் வலவன் புயத்து எய்த உய்த்தான்—ஒப்பின்றியிருக்கின்ற சிவபிரானது சொரூபமாகிய குமாரக்கடவுளேறி வருகின்ற பெரிய தேரின் சாரதியாகிய வாயு தேவனது தோள்களிலழுந்தும்படி செலுத்தினான் எ—று.

வலவன்-வல்லவன்; பாகனுக்குக் காரண விடுகுறியாய் வழங்கிற்று. சிவபிரானுங் குமாரக்கடவுளும் வேறாகாமை பற்றி 'பரமன் வடிவான செவ்வேள்' என்றார். (153)

வென்றோர் புகழுங் குமரன்வியன் தேர்க டாவிச்
சென்றோன் வருத்தந் தெரிந்தாயிரந் தீய வாளி
வன்றோல் முகத்தா ரகன்நெற்றியுள் மன்ன வுய்ப்பப்
பொன்றோய் தனது தடந்தேரில் புலம்பி வீழ்ந்தான்.

இ—ள்: வென்றோர் புகழும் குமரன்—வீரர்களாற் றுதிக்கப்படுகின்ற முருகக் கடவுள், வியன் தேர் கடாவி சென்றோன் வருத்தம் தெரிந்து—பெரிய தேரைச் செலுத்தி வந்த வாயுதேவனுக்கு நேர்ந்த துன்பத்தைப் பார்த்து, வன் தோல் முக தாரகன் நெற்றியுள் மன்ன—வலிய யானை முகத்தையுடைய தாரகாசுரனது நெற்றியிலழுந்துமாறு, ஆயிரம் தீய வாளி உய்ப்ப—கொடிய ஆயிரமம்புகளைச் செலுத்த, புலம்பி—(தாரகன் அவைகளழுந்துதலாற்) புலம்பி, பொன் தோய் தனது தடம் தேரில் வீழ்ந்தான்—அழகு பொருந்திய தனது தேரில் விழுந்தான் எ—று.

வென்றோர்-ஐம்புலன்களை வென்ற தத்துவ ஞானிகளெனினுமாம். (154)

வீழுற் றிடலும் விழுசெம்புனல் வெள்ள மிக்கே
தாழுற்ற பாரிற் புகுந்தேபுடை சார்த லுற்ற
பாழிக் கடலிற் பரிமாமுகம் பட்ட செந்தீச்
சூழிக் களிற்றின் வதனத்தினுந் தோன்று மென்ன.

இ—ள்: வீழுற்றிடலும்—தாரகாசுரன் விழுந்த பொழுது, பாழி கடலில் பரிமா முகம் பட்ட செம் தீ சூழி களிற்றின் வதனத்தினும் தோன்றும் என்ன—

பெரிய சமுத்திரத்திற் குதிரை முகத்தினின்று முன்றேன்றிய சிவந்த அக்கினி (இப்பொழுது) முகபடாத்தையுடைய யானையின் முகத்திலுந் தோன்றுகின்ற தென்று கண்டோர் கருதும்படி, விழு செம் புனல் வெள்ளம் மிக்கு—இழிகின்ற இரத்த வெள்ளம் பெருகி, தாழ் உற்ற பாரில் புகுந்து—கீழுள்ள பூமியிற் பாய்ந்து, புடை சார்தல் உற்ற—பக்கங்களிற் பரவியது எ—று.

தாரகனது முகத்தினின்றுமிழிகின்ற இரத்த வெள்ளம் வடவாமுகாக்கினி போற் செந்நிற முடைத்தாய்ப் பரவிற்றென்பது தாற்பரியம். அதனை, குதிரை முகத்துத் தீ யானை முகத்திலுந் தோன்றிற்றெனும்படி யென்று வருணித்தது தற்குறிப்பேற்றம். உற்ற-உற்றது என்பதன் விகாரம். (155)

மன்னு கியதா ரகன்அங்கண் மயங்கி வீழ
அன்னுன் றனது படைவீரர் அதனை நோக்கிக்
கொன்னுர் சினங்கொண் டடுபோரைக் குறித்து நம்பன்
தொன்னுள் உதவுந் திறல்மைந்தனைச் சூழ்ந்து கொண்டார்.

இ—ள்: மன் ஆகிய தாரகன் அங்கண் மயங்கி வீழ—தலைவனுகிய தாரகாசுரன் அவ்விடத்தில் மூர்ச்சையாகி விழ, அன்னுன் தனது படை வீரர் அதனை நோக்கி—அவனது சேனை வீரர்கள் அத் தன்மையைப் பார்த்து, கொன் ஆர் சினம் கொண்டு—அச்சத்தை விளைக்கின்ற கோபத்தைக் கொண்டு, அடு போரை குறித்து—கொலைத் தொழின் மிக்க போரைச் செய்யக் கருதி, நம்பன் தொல் நாள் உதவும் திறல் மைந்தனை சூழ்ந்து கொண்டார்—சிவபிரான் முற்காலத்திற் றந்தருளிய வலிய குமாரக் கடவுளை வளைந்துகொண்டார்கள் எ—று.

நமது தலைவனை வருத்தினனுதலின் இவனை எவ்வாற்றுனுந் தவருது கொல்ல வேண்டுமென்றெண்ணி யென்பார் 'அடுபோரைக் குறித்து' என்றுர். (156)

சூலந் திகிரிப் படைதோமரந் துய்ய பிண்டி
பாலஞ் சுடர்வேல் எழுநாஞ்சில் பகழி தண்டம்
ஆலங் கணையங் குலிசாயுத மாதி யாக
வேலும் படைகள் பொழிந்தார்த்தனர் எங்கும் ஈண்டி.

இ—ள்: சூலம்—சூலப்படையும், திகிரி படை—சக்கராயுதமும், தோமரம்—தோமராயுதமும், துய்ய பிண்டி பாலம்—சிறந்த பிண்டி பாலமும், சுடர்வேல்—ஒளியையுடைய வேற்படையும், எழு—எழுப்படையும், நாஞ்சில்—கலப்பைப் படையும், பகழி—அம்பும், தண்டம்—தண்டும், ஆலம்—மழுவும், கணையம்—வளை தடியும், குலிசாயுதம்—வச்சிராயுதமும், ஆதி ஆக—முதலாக, ஏலும் படைகள் பொழிந்து—பொருந்திய ஆயுதங்களைச் சொரிந்து, எங்கும் ஈண்டி ஆர்த்தனர்—எவ்விடங்களினும் நெருங்கி ஆரவாரித்தார்கள் எ—று.

பொழிதல்-மிகுதியாக ஏவுதல். (157)

கறுத்தான் அவர்தஞ் செயல்கண்டுதன் கார்மு கத்தை
நிறுத்தா வளையாக் கணைமாமழை நீட வுய்த்து
மறுத்தா னுடைய கொடுந்தானவர் வாகை சிந்தி
அறுத்தான் விடுதொல்படை யாவையும் ஆடல் வேலோன்.

இ—ள்: ஆடல் வேலோன்—வெற்றியைத் தரும் வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள், அவர்தம் செயல் கண்டு கறுத்தான்—அவ்வசுரர்களது செய்கை

யைப் பார்த்துக் கோபமுற்று, தன் கார் முகத்தை நிறுத்தா வளையா—தமது வில்லை நிறுத்தி வளைத்து' கணை மா மழை நீட உய்த்து—பெரிய அம்பு மழையை மிகுதியாகச் சொரிந்து, மறு தான் உடைய கொடும் தானவர் வாகை சிந்தி—குற்றத்தையே யுடைய கொடிய அசுரர்களது வீரத்தைப் போக்கி, விடு தொல் படை யாவையும் அறுத்தான்—அவர்கள் தம்மேலேவிய பழைய ஆயுதங்களை யெல்லாந் துணித்தார் எ—று.

கறுப்பு-கோபம்: ''கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள'' என்னுந் தொல் காப்பிய உரிச் சொல்லியற் சூத்திரத்தாலறிக. கறுத்தான்-முற்றெச்சம். தான் பிரி நிலைப் பொருடந்து நின்றது. (158)

வெய்தாகிய தீங்கணை மாரி விசாகன் மீட்டும்
பெய்தான் அவுணர் முடிதன்னைப் பிறங்கு மார்பைத்
துய்தா னுறும்வா யினையங்கையைத் தோளைத் தாளைக்
கொய்தான் குருதிக் கடலெங்கணுங் கொண்டதன்றே.

இ—ள்: விசாகன்—முருகக்கடவுள், மீட்டும்—பின்னரும், வெய்து ஆகிய தீ கணை மாரி பெய்தான்—மிகக் கொடியதாகிய பாண மழையைச் சொரிந்து, அவுணர் முடி தன்னை—அசுரர்களது தலைகளையும், பிறங்கும் மார்பை—விளங்குகின்ற மார்புகளையும், துய் உறும் வாயினை—உணவையுண்ணுகின்ற வாய்களையும், அம் கையை—அகங்கைகளையும், தோளை—புயங்களையும், தாளை—கால்களையும் கொய் தான்—துணித்தார், குருதி கடல் எங்கணும் கொண்டது—அதனால் இரத்தவெள்ள மெவ்விடங்களினும் பரவிற்று எ—று.

தான்-அசை. துய்-முதனிலைத் தொழிற் பெயர். விசாகன் என்பது விசாக நாளிற் பிறந்தவனெனவும் மயிலாகிய பறவையிலிவர்ந்து செல்பவனெனவும் பொருள்படும். (159)

வில்லோர் பரவுந் திறல்வேலவன் வெய்யகோலால்
அல்லோ டியதீ மனத்தானவர் ஆயிரோரில்
பல்லோர் இறந்தார் குருதிக் கடல்பாய்ந்து நீந்திச்
சில்லோர் கள்தத்தம் உயிர்கொண்டு சிதைந்து போனார்.

இ—ள்: வில்லோர் பரவும் திறல் வேலவன் வெய்ய கோலால்—வில்வீரர் களாற் புகழப்படுகின்ற வலிமையினையுடைய முருகக்கடவுளேவிய கொடியபாணங் களால், அல் ஓடிய தீ மன தானவர் ஆயிரோரில் பல்லோர் இறந்தார்—அஞ் ஞானவிருள்பரவிய கொடியமனத்தையுடைய அசுரர்களாயுள்ளவர்களுட்பலரிறந் தார்கள், சில்லோர்கள்—சில அசுரர்கள், குருதி கடல் பாய்ந்து நீந்தி—இரத்த வெள்ளத்திற்பாய்ந்துநீந்தி, தத்தம் உயிர் கொண்டு சிதைந்து போனார்—தாங்கள் தங்களுயிரைப் பாதுகாத்துக்கொண்டு குலைந்தோடினார்கள் எ—று.

கள்-விகுதிமேல்விகுதி. (160)

மைக்கார் சிவந்த தெனுந்தாரகன் மையல்நீங்கி
அக்காலை தன்னில் எழுந்தே அயல்போற்றி நின்று
தொக்கார் தமையாரையுங் காண்கிலன் துன்பமெய்தி
நக்கான் அவர்தஞ் செயல்கண்டு நவிறல் உற்றான்.

**இ—ள்:** அ காலேதன்னில்—அப்பொழுது, மை கார் சிவந்தது எனும் தாரகன்—கரியமேகம் செந்நிறமடைந்தாற்போலக்கிடந்த தாரகாசுரன், மையல் நீங்கி எழுந்து—மயக்கநீங்கியெழும்பி, அயல் போற்றி தொக்கு நின்ருர் தமை யாரையும் காண்கிலன்—தன்பக்கத்திற் காவல்செய்து தொகுதியாக நின்ரேரெவரையுங் காணப்பெருதவனுய், துன்பம் எய்தி—துயரமுற்று' அவர்தம் செயல் கண்டு நக்கான்—அவர்களது செய்கையைப்பார்த்துச் சிரித்து, நவிறல் உற்ருன்—சொல்லத்தொடங்கினுன் எ—று.

கருநிறமான மேனிமுழுதும் இரத்தவெள்ளத்திற்ரேய்ந்தமைபற்றி 'மைக் கார் சிவந்ததெனுந்தாரகன்' என்ருர். நின்றுதொக்கார்—தொக்குநின்ருர். அவர் தஞ்செயல் என்றது-முருகக்கடவுளோடு பொருதுமாண்டமையை. (161)

### வேறு

செய்ய வார்சடை ஈசன் நல்கிய சிறுவன் இங்கொரு வன்பொரக்
கையி ழந்துமு கத்தினூடு கவின்கொள் கோடுமி ழந்தனன்
மைய லெய்தி விழுந்த னன்பொரும் வலிய தானையும் மாண்டன
ஐய வீங்கொரு தமியன் நின்றனன் அழகிதாலென தாண்மையே.

**இ—ள்:** இங்கு—இவ்விடத்தில், செய்ய வார் சடை ஈசன் நல்கிய சிறுவன் ஒருவன் பொர—சிவந்த நீண்டசடைமுடியையுடைய சிவபிரான்பெற்ற ஒருபாலகன் வந்து போர்செய்ய, கை இழந்து—துதிக்கையிழந்து, முகத்தின் ஊடு கவின் கொள் கோடும் இழந்தனன்—முகத்திலுள்ள அழகுபொருந்திய தந்தங்களையுமிழந்தேனுகி, மையல் எய்தி விழுந்தனன்—மயங்கிவிழுந்தேன், பொரும் வலிய தானையும் மாண்டன—போர்செய்த வலிய சேனைகளுமிறந்தன, ஐய—ஐயோ, ஈங்கு ஒருதமியன் நின்றனன்—இவ்விடத்து யாஞெருவனே தப்பிநின்றேன், எனது ஆண்மை அழகிது—என்னுடைய வீரம் நன்ருயிருக்கின்றது எ—று.

ஊடு-ஏழனுருபு. அழகிது குறிப்பால் அழகன்றென்பதைக்குறிக்கும். உம்மைகள் எச்சங்கள். (162)

தாவில் வெஞ்சிலை வன்மை கொண்டு சரங்கள் எண்ணில தூண்டியே
மேவ லானிவன் உயிர்கு டிப்பதும் வெல்லு கின்றதும் அரியதால்
தேவர் மாப்படை தொடுவ னிங்கினி யென்று சிந்தனை செய்துபின்
ஏவ ரும்புகழ் தார காசுரன் இனைய செய்கை இயற்றினுன்.

**இ—ள்:** தா இல் வெம் சிலை வன்மை கொண்டு சரங்கள் எண் இல தூண்டி—குற்றமற்ற கொடிய விற்போர்ச்சாமர்த்தியத்தினுல் அளவிறந்த பாணங்களைச் செலுத்தி, மேவலான் இவன் உயிர் குடிப்பதும் வெல்லுகின்றதும் அரியது—இந்தப்பகைவனது உயிரைக்கவர்வதும் வெல்வதும் அருமையாம் (ஆதலின்), இனி தேவர் மா படை தொடுவன் என்று சிந்தனை செய்து—இனிப்பெரிய தேவப் படைக்கலங்களைச் செலுத்துவேனென்று நினைத்து, பின்—அதன்பின்பு, ஏவரும் புகழ் தாரகாசுரன்—யாவராலும் புகழப்பெற்ற தாரகாசுரன், இனைய செய்கை இயற்றினுன்—இச்செயலைச்செய்தான் எ—று.

உயிர்குடிப்பதும் அரியது வெல்லுகின்றதும் அரியது எனத்தனித்தனி கூட்டியுரைக்க. ஒருமைச்சொல்லை வாக்கியபேதமாக இங்ஙனங்கூட்டிமுடித்தலைப் பிரத்தியேக பந்தான்வயமென்பர் வடநூலார். ''நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும் — வித்தகர்க் கல்லா லரிது'' என்னுந் திருக்குறளினுமிங்ஙனம் வந்தமை காண்க. (163)

### வேறு

அடலரி நான்முக ஞதி வானவப்
படையினை யாவையும் பவஞ்செய் தாரகன்
விடவிட வந்தவை வெருவி மேலையோன்
புடைதனில் ஒடுங்கியே போற்றி நின்றவே.

இ—ள்: பவம் செய் தாரகன்—பாவத்தைச் செய்கின்ற தாரகாசுரன், அடல் அரி நான்முகன் ஆதி வானவ படையினை யாவையும் விடவிட—வலிய திருமாலும் பிரமதேவருமுதலாகிய தேவர்களது படைக்கலங்களெல்லாவற்றையுஞ் செலுத்தச் செலுத்த, அவை வந்து—அவைகள்வந்து, வெருவி—அஞ்சி, மேலையோன் புடைதனில் ஒடுங்கி போற்றி நின்ற—எவரினும் மேலவராகிய முருகக் கடவுளது பக்கத்தில் அடங்கித் துதித்து நின்றன எ—று.

படையினையாவையும்=படையாவையினையும்; விடவிட என்னுமடுக்குப்பன்மைபற்றி வந்தது. (164)

செங்கண்மா லயன்முதற் றேவர் மாப்படை
துங்கமொ டேகியே துளங்கி வேலுடைப்
புங்கவன் பாங்கரிற் போற்றி நிற்றலும்
அங்கது கண்டனன் அவுணர் மன்னவன்.

இ—ள்: செம் கண் மால் அயன் முதல் தேவர் மா படை—சிவந்த கண்ணையுடையதிருமாலும் பிரமதேவரு முதலியதேவர்களது சிறந்த படைக்கலங்கள், துங்கமொடு ஏகி—மேன்மையோடு சென்று, துளங்கி—நடுங்கி, வேல் உடை புங்கவன் பாங்கரில் போற்றி நிற்றலும்—வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளின் பக்கத்திற் றுதித்துக்கொண்டுநிற்க, அவுணர் மன்னவன்—அசுரத்தலைவனுகிய தாரகாசுரன், அது கண்டனன்—அத்தன்மையைப் பார்த்தான் எ—று.

செங்கண்-தாமரைக்கண். ஏவும்பொழுது பகையைவெல்லுதற்கேற்ற உக்கிரத்துடன்போய் முருகக்கடவுளையணுகும்பொழுது அஞ்சி நடுங்கினவாதலின் 'துங்கமொடேகியே துளங்கி' என்முர். (165)

ஒருவினன் அகந்தையை உள்ள மோரிறை
வெருவினன் விம்மிதம் மிகவு மெய்தினுன்
எரிகலுழ் விழியினன் இவனை வென்றிடல்
அரியது போலுமென் றகத்தில் உன்னினுன்.

இ—ள்: அகந்தையை ஒருவினன்—செருக்கை நீங்கி, உள்ளம் ஓர் இறை வெருவினன்—மனம் ஒரு சிறிது அஞ்சி, மிகவும் விம்மிதம் எய்தினுன்—மிகவும் ஆச்சரியமுற்று, எரி கலுழ் விழியினன்—அக்கினியைச் சொரியுங் கண்களையுடையனுய், இவனை வென்றிடல் அரியது போலும் என்று அகத்தில் உன்னினுன்—இவனை வெற்றிகொள்வது அரிது போலுமென்று தன் மனத்தில் நினைத்தான் எ—று.

இப்பாலகனுடைய வீரத்திற்கு நமது வீரந்தாழ்ந்ததே யென்றெண்ணுதலால் அகந்தையை யொருவினன், இவன் நம்முயிரைச் சிதைக்க வல்லனென்

றெண்ணுதலால் வெருவினன், இளங் குழவியாகிய இவன் மாட்டு இத்துணைப் பேராற்ற லிருந்தவாறென்னையென்றெண்ணுதலால் விம்மிதமெய்தினன், இந் நாள்காறும் எவர்க்குந் தோலாத யான் இன்று இப் பாலகனுக்குத் தோற்பதா வென்று அபிமானந் தோன்றுதலால் எரிகலுழ் விழியினனுயினன், தேவப்படை களு மூறு செய்திலவாதலின் இவனை வெல்லுதலரிய தென்றுன்னினன் என்க. அருமை - இயலாமை. போலும்-ஒப்பில் போலி. (166)

பாங்கரின் மாதுடைப் பரமன் தொல்படை
ஈங்கினி விடுதுமென் றெண்ணி யப்படை
வாங்கினன் அருச்சனை மனத்தி னுற்றினன்
ஓங்கிருஞ் சினமுடன் ஒல்லை யேவினன்.

இ—ள்: பாங்கரில் மாது உடை பரமன் தொல் படை இனி விடுதும் என்று எண்ணி — வாம பாகத்தில் உமாதேவியாரையுடைய சிவபிரானது பழைய படைக்கலத்தை இனிச் செலுத்துவோமென்று நினைத்து, அ படை வாங் கினன்—அந்தப் படைக்கலத்தையெடுத்து, மனத்தின் அருச்சனை ஆற்றினன்— மனத்தாற் பூசை செய்து, ஓங்கு இரும் சினமுடன் ஒல்லை ஏவினன்—மிக்க பெருங் கோபத்துடன் விரைவிற் செலுத்தினன் எ—று.

மனத்தின் அருச்சனையாற்றுதல்-மானத பூசை செய்தல். (167)

சங்கரன் தொல்படை தறுகண் ஆலமும்
புங்கவர் படைகளும் பூத ராசியும்
அங்கத நிரைகளும் அளப்பில் சூலமும்
வெங்கனல் ஈட்டமும் விதித்துச் சென்றதே.

இ—ள்: சங்கரன் தொல் படை—பழைய அந்தச் சிவப் படைக்கலம், தறு கண் ஆலமும்—கொடிய நஞ்சையும், புங்கவர் படைகளும்—தேவப் படைக்கலங் களையும், பூத ராசியும்—பூத கணங்களையும், அங்கத நிரைகளும்—சர்ப்பக் கூட் டங்களையும், அளப்பு இல் சூலமும்—அளவிறந்த சூலப் படைகளையும், வெம் கனல் ஈட்டமும்—கொடிய அக்கினிக் கூட்டங்களையும், விதித்து—படைத்துக் கொண்டு, சென்றது—போனது எ—று. (168)

கலைகுலாம் பிறைமுடிக் கடவுள் மாப்படை
அலகிலா உயிர்களும் அண்டம் யாவையும்
உலைகுறு தலமர வுருத்துச் சேறலும்
இலைகுலாம் அயிலுடை எந்தை நோக்கினன்.

இ—ள்: கலை குலாம் பிறைமுடி கடவுள் மா படை—ஒரு கலையாகிய இளஞ் சந்திரனை யணிந்த சடை முடியையுடைய சிவபிரானது சிறந்த படைக்கலம், அலகு இலா உயிர்களும் அண்டம் யாவையும் உலைகுறுது அலமர உருத்து சேற லும்—அளவிறந்த ஆன்மாக்களும் எல்லாவண்டங்களும் அழிவடையாது வருந் தும்படி உக்கிரகங் கொண்டு வருதலும், இலை குலாம் அயில் உடை எந்தை நோக்கினன்—இலை வடிவமைந்த வேலாயுதத்தைத் தரித்த எங்கள் பரமபிதா வாகிய முருகக்கடவுள் அதனைக் கண்டார் எ—று.

(169)

கலை-சந்திரபிம்பத்தின் பதினறிலொருபாகம்.

கந்தவேள் அனையது கண்டு தந்தையைச்
சிந்தையில் உன்னியோர் செங்கை நீட்டியே
அந்தவெம் படையினை அருளிற் பற்றினன்
தந்தவன் வாங்கிய தன்மை யென்னவே.

இ—ள்: கந்தவேள் அனையது கண்டு—முருகக்கடவுள் அத் தன்மையைப் பார்த்து, தந்தையை சிந்தையில் உன்னி—தமது பிதாவாகிய சிவபிரானை மனத் திற்றியானித்து, ஓர் செம் கை நீட்டி—சிவந்த ஒரு திருக்கரத்தை நீட்டி, தந்த வன் வாங்கிய தன்மை என்ன—கொடுத்தவரே மீட்டுமேற்ற தன்மையைப் போல, அந்த வெம் படையினை அருளில் பற்றினன்—அந்தக் கொடிய படைக் கலத்தைக் கருணையுடன் பிடித்தார் எ—று.

யாதேனுமொரு பொருளைக் கொடுத்தவனேற்றுக் கொள்ளுங்கால் தன் பொருளேயென்று கருதி வாங்குதல் போல மாற்றானேவிய படை யென்றஞ்சாது தந்தை படையே யென்றெண்ணி இன்முகத்தோடுமேற்றனராதலின் 'தந்த வன் வாங்கிய தன்மை யென்ன-அருளிற் பற்றினன்' என்றார், சிவபிரானுக்கும் முருகக்கடவுளுக்கும் பேதமின்மை இதனாலும் விளங்கும். (170)

நெற்றியில் விழியுடை நிமலன் காதலன்
பற்றிய படையினைப் பாணி சேர்த்தினன்
மற்றது தாரக வலியன் கண்ணுறீஇ
இற்றது நந்திரு இனியென் றேங்கினன்.

இ—ள்: நெற்றியில் விழி உடை நிமலன் காதலன்—நெற்றிக்கண்ணை யுடைய சிவபிரானது குமாரராகிய முருகக்கடவுள், பற்றிய படையினை பாணி சேர்த்தினன்—பிடித்த படைக்கலத்தைக் கையில் வைத்துக் கொண்டார், தாரக வலியன் அது கண்ணுறீஇ—வலியவனாகிய தாரகாசுரன் அதனைப் பார்த்து, இனி நம் திரு இற்றது என்று ஏங்கினன்—இனி நமது செல்வமழிந்த தென்று ஏக்கங் கொண்டான் எ—று.

கண்ணுறீஇ-கண்ணுற்று என்பதன் விகாரம். இனி இற்றது-துணிவு பற்றி எதிர்காலத்தை யிறந்தகாலமாகக் கூறிய வழுவமைதி. சிவப்படையின் மேலான படை வேறின்மையின் ஏங்கினனென்க. (171)

தேவர்கள் தேவனார் தெய்வத் தொல்படை
ஏவினன் அதனையும் எதிர்ந்து பற்றினன்
மூவிரு முகமுடை முதல்வன் வன்மையை
நாவினி லொருவரால் நவிறற் பாலதோ.

இ—ள்: தேவர்கள் தேவனார் தெய்வ தொல் படை ஏவினன்—தேவாதி தேவராகிய சிவபிரானது தெய்வீகமாகிய பழைய படைக்கலத்தைப் பிரயோகித் தேன், அதனையும் எதிர்ந்து பற்றினன்—அப் படைக்கலத்தையும் எதிர் நின்று பிடித்துக் கொண்டான், மூ இரு முகம் உடை முதல்வன் வன்மை—ஆறு முகங் களையுடைய தலைவனாகிய இவனது வலிமை, நாவினில்—நாக்கினால், ஒருவரால் நவிறற்பாலதோ—ஒருவராற் சொல்லி முடிக்கத்தக்கதா? (சொல்லி முடித்த லியலாது) எ—று.

உம்மை - உயர்வு சிறப்பு; ஐ - சாரியை; (172)

ஆயினும் அரன்மகன் அறத்தின் போரலால்
தீயதோர் கைதவச் செருவ துன்னலான்
மாயைகள் ஆற்றியே மறைந்து நின்றுநான்
ஏயென இயற்றுவன் அமரென் றெண்ணினுன்.

**இ—ள்:** ஆயினும்—அங்ஙனமாஞலும், அரன் மகன்—இச் சிவகுமாரன், அறத்தின் போர் அலால் தீயது ஓர் கைதவ செருவது உன்னலான்—தருமநெறிக் கிணங்கிய போரையே யன்றிக் கொடியதாகிய வஞ்சகப் போரைச் செய்தற்குச் சிந்திக்க மாட்டான் (ஆதலினுல்). நான்—யான், மாயைகள் ஆற்றி மறைந்து நின்று—மாயங்களை யுண்டாக்கி ஒளித்து நின்று, ஏ என அமர் இயற்றுவன் என்று எண்ணினுன்—விரைவிற் போர் செய்வேனென்று கருதினுன் எ—று.

தந்தை வகுத்த அறநெறியை மைந்தன் விலக்கானென்பது தோன்ற 'அரன் மகனறத்தின் போரலாற்றீய தோர் கைதவச் செருவதுன்னலான்' என்றுர். (173)

கையனும் இவ்வகை கருத்தி லுன்னியே
ஒய்யென வேகிர வுஞ்ச வெற்பின்முன்
வையமோ டேகிநீ வல்ல மாயைகள்
செய்குதி செய்குதி யென்று செப்பினுன்.

**இ—ள்:** கையன் இவகை கருத்தில் உன்னி—வஞ்சகனுகிய தாரகாசுரன் இவ்வாறு மனத்தில் நினைத்து, ஒய் என—விரைவாக, கிரவுஞ்ச வெற்பின் முன் வையமொடு ஏகி—கிரவுஞ்சமலையின் முன் தேருடன் சென்று, நீ வல்ல மாயைகள் செய்குதி செய்குதி என்று செப்பினுன்—நீ செய்ய வல்ல மாயங்களையெல்லாஞ் செய்வாய் செய்வாயென்று கூறினுன் எ—று.

உம்மை-அசைநிலை. அடுக்கு சினமும் விரைவும் பற்றி வந்தது. (174)

### வேறு

செப்பிய இறுவரை கிரவுஞ்சந் திகழ்வுறு மாயையின் நிகழ்வுன்னி
முப்புர வகைபல வெனநிற்ப முரணுறு தாரக முதல்வன்றுன்
அப்புர நிருதர்க ளெனநின்றுன் அகல்வரை பலபல முகிலாக
ஒப்பறு சூரன திளையோனும் உருமென அவையிடை உலவுற்றுன்.

**இ—ள்:** செப்பிய இறுவரை—இவ்வாறு சொன்ன சொற்கள் முடிந்தவுடன், கிரவுஞ்சம்—கிரவுஞ்சமலை, திகழ்வுறும் மாயையின் நிகழ்வு உன்னி—சிறந்த மாயங்களைச் செய்ய நினைத்து, முப்புர வகை பல என நிற்ப—முப்புரங்களின் வகையான பல நகரங்களாய் நிற்க, முரண் உறு தாரக முதல்வன்—வலிமை மிக்க தலைவனுகிய தாரகாசுரன், அ புர நிருதர்கள் என நின்றுன்—அந்தப் புரங்களில் வசிக்கின்ற அசுரர்களைப் போலத் தோற்றி நின்றுன், அகல் வரை பல பல முகில் ஆக—பின்னும் அகன்ற கிரவுஞ்சமலை பல பல மேகங்களாகி நிற்ப, ஒப்பு அறு சூரனது இளையோனும் உரும் என அவையிடை உலவுற்றுன்—நிகரற்ற சூரபன் மனது தம்பியாகிய தாரகனும் இடியைப் போல அம் மேகங்களிலுலாவினுன் எ—று.

மலை முப்புரங்களும் அசுரன் அசுரருமாக முருகக்கடவுள் அவற்றைத் திரிபுராந்தக ரூபங் கொண்டு புன்னகையாலழித்தனரெனவும், அதன்மேல் தாரகன்

பிற வடிவங்களாக முருகக்கடவுளும் அவற்றிற்கேற்ற ஏற்ற உபாயங்களா லவற்றை யழித்தனரெனவும், மேலும் பல மாய ரூபங்களைக் கொள்ளவே வேற் படையையேவினரெனவும் முதனூல் கூறும். (175)

வேலைக ளுருவினை வரைகொள்ள விசயம துடையதொ ரசுரேசன்
காலம திறுதியில் உலகுண்ணுங் கனையொலி அனலிக ளெனநின்றான்
சீலமின் முதுகிரி நெடுநேமித் திருவரை சூழ்தரும் இருளாக
மால்கரி முகமுள அவுணன்றான் வரையறு பாரிட நிரையானான்.

இ—ள்: வரை—கிரவுஞ்சமலை, வேலைகள் உருவினை கொள்ள—சமுத்திரங் களின் வடிவத்தை யெடுத்துவர, விசயமது உடையது ஓர் அசுரேசன்—வெற் றியையுடைய அசுரத் தலைவனாகிய தாரகன், காலமது இறுதியில் உலகு உண்ணும் கனை ஒலி அனலிகள் என நின்றான்—ஊழிக் காலத்தில் எல்லாவுலகங்களையுமழிக் கின்ற பேரொலியையுடைய வடவாமுகாக்கினிகள் போல வடிவு கொண்டு அச் சமுத்திரங்களுள் நின்றான், சீலம் இல் முது கிரி—ஒழுக்கமில்லாத பழைய கிர வுஞ்சமலை, நெடு நேமி திரு வரை சூழ்தரும் இருள் ஆக—நெடிய அழகிய சக் கரவாளமலையை வளைந்துள்ள இருள் போலாக, மால் கரி முகம் உள அவுணன்— பெரிய யானை முகத்தையுடைய தாரகாசுரன், வரை அறு பாரிட நிரை ஆனான்— (அவ்விருளிற் சஞ்சரிக்கின்ற) அளவிறந்த பூதகணங்கள் போல் வடிவு கொண்டு நின்றான் எ—று. (176)

இந்திரன் முதலுள சுரர்வைகும் ஏழுட னொருதிசை வேழம்போல்
அந்தநெ டுங்கிரி வரலோடும் அருகினில் உறுகுல கிரியாகித்
தந்தியின் முகமுள அவுணன்றான் சடசட முதிரொலி யுடன்வந்தான்
முந்திய தந்தம துருமாறி முறைமுறை நின்றதொர் திறனேபோல்.

இ—ள்: அந்த நெடும் கிரி—நெடிய அந்தக் கிரவுஞ்சமலை, இந்திரன் முதல் உள சுரர் வைகும் ஏழுடன் ஒரு திசை வேழம் போல் வரலோடும்—இந்திரன் முதலாகவுள்ள தேவர்கள் வாழ்கின்ற எண்டிசைகளினுமுள்ள எட்டியானைகளை யும் போல வருதலும், தந்தியின் முகம் உள அவுணன்—யானை முகத்தையுடைய தாரகாசுரன், அருகினில் உறு குலகிரி ஆகி—பக்கங்களிற் பொருந்திய குலா சலங்களாய், சட சட முதிர் ஒலி உடன் வந்தான் — சட சடவென்னுமனுகர ணம் பொருந்திய ஓசையுடன் வந்தான், முந்திய தம் தமது உரு மாறி முறை முறை நின்றது ஓர் திறனே போல்—பழைய தங்கள் தங்கள் வடிவு மாறி முறை முறையாக நின்ற தன்மையையே போல எ—று.

சட சட—ஈரடுக்கொலிக் குறிப்பு. அசுரன் யானை முகவுரு மாறி மலையாகவும் கிரவுஞ்சமலை மலையுருமாறி யானையாகவும் நிற்றலின் 'தந்தமதுருமாறி முறை முறை நின்றதொர் திறனே போல்' என்றார். (177)

வாயுவின் உருவென மலைசெல்ல மதகரி முகமுள பதகன்றான்
தேயுவின் உருவென வரலுற்றான் திரியவும் நெடுவரை விரைவோடுங்
காய்கனல் உகுஞெகி ழிகளாகிக் ககனம திடையுற மிடைகாலை
ஆயிர கோடிவெய் யவரேபோல் அலமர லுற்றனன் அறமில்லான்.

இ—ள்; மலை வாயுவின் உரு என செல்ல—கிரவுஞ்சமலை காற்றின் வடிவு கொண்டுவர, மதகரி முகம் உள பதகன் — மதம் பொருந்திய யானையின்

முகத்தையுடைய பாதகனுகிய தாரகாசுரன், தேயுவின் உரு என வரல் உற்ருன்—(அவ் வாயுவின் சகாயனுகிய) அக்கினியின் வடிவமாய் வந்தான், திரியவும்—பின்னும், நெடு வரை—நெடிய கிரவுஞ்சமலை, விரைவோடும்—சீக்கிரத்தில், காய் கனல் உகும் ஞெகிழிகள் ஆகி—சுடுகின்ற நெருப்புப் பொறிகளைச் சிந்துங் கொள்ளிகளாகி, ககனமது இடை உற மிடை காலை—ஆகாயத்திற் பொருந்தச் செறிந்த பொழுது, அறம் இல்லான்—தருமநெறியில்லாதவனுகிய தாரகாசுரன், ஆயிர கோடி வெய்யவரே போல் அலமரல் உற்றனன்—ஆயிர கோடி சூரியர்களைப் போல வடிவங்கொண்டு திரிந்தான் எ—று. (178)

அவ்வகை தாரகன் வரையோடும் அளவறு மாயையின் வடிவெய்தி
எவ்விடை யுஞ்செறி தரலோடும் எம்பெரு மானவன் இவைகாணுத்
தெவ்வலி கொண்டுறும் இவனுவி சிந்துவன் என்றுள மிசைகொண்டே
கைவரு வேற்படை தனைநோக்கி இனையன சிலமொழி கழறுற்ருன்.

இ—ள்: அவ்வகை—அவ்வாருக, தாரகன்—தாரகாசுரன், வரையோடும்—கிரவுஞ்சமலையுடன், அளவு அறும் மாயையின் வடிவு எய்தி—அளவிறந்த மாய ரூபங்களைக் கொண்டு, எ இடையும் செறிதரலோடும்—எல்லாவிடங்களினும் நெருங்கி நின்ற பொழுது, எம் பெருமான் அவன் இவை காணு—எங்கள் தலைவராகிய அம் முருகக்கடவுள் இவற்றைப் பார்த்து, தெவ் வலி கொண்டு உறும் இவன் ஆவி சிந்துவன் என்று உளம் மிசை கொண்டு—பகை முகத்தில் வலி பெற்று நிற்கின்ற இவனது உயிரை யழிப்பேமென்று மனத்திலெண்ணி, கை வரு வேற்படை தனை நோக்கி—தமது திருக்கரத்திற் பொருந்திய வேலாயுதத்தைப் பார்த்து, இனையன சில மொழி கழறுற்ருன்—இத் தன்மையான சில வார்த்தைகளைக் கூறத் தொடங்கினுர் எ—று. (179)

தாரகன் என்பதோர் பேரோனைச் சஞ்சல முறுகிர வுஞ்சத்தை
ஓரிறை செல்லுமுன் உடல்கீறி உள்ளுயி ருண்டுபு றத்தேகிப்
பாரிடர் தம்மை இலக்கத்தொன் பதின்மர்க ளாக உரைக்கின்ற
வீரரை மீட்டிவண் வருகென்றே வேற்படை தன்னை விடுத்திட்டான்.

இ—ள் தாரகன் என்பது ஓர் பேரோனை—தாரகனென்னும் பெயரையுடைய அசுரனையும், சஞ்சலம் உறு கிரவுஞ்சத்தை—நிலை பெயர்தலையுடைய கிரவுஞ்ச மலையையும், ஓர் இறை செல்லுமுன் உடல் கீறி—ஒரு கணப்பொழுது முடியு முன் உடம்பைப் பிளந்து, உள் உயிர் உண்டு புறத்து ஏகி—உள்ளிருக்கின்ற ஆன்மாவைக் கவர்ந்து கொண்டு வெளியே சென்று, பாரிடர் தம்மை—பூத வீரர்களையும், இலக்கத்து ஒன்பதின்மர்கள் ஆக உரைக்கின்ற வீரரை—இலக்கத்தொன்பதென்னுந் தொகையினராகச் சொல்லப்படுகின்ற வீரர்களையும், மீட்டு—மயக்கந் தெளிவித்து மீளச் செய்து, இவண் வருக என்று—இவ்விடத்து வருவாயாகவென்று கூறி, வேற்படை தன்னை விடுத்திட்டான்—வேலாயுதத்தைச் செலுத்தினுர் எ—று. (180)

சேயவன் விட்டிடு தனிவைவேல் செருமுயல் தாரகன் வரையோடும்
ஆயிடை செய்த புணர்ப்பெல்லாம் அகிலமும் அழிதரு பொழுதின்கண்
மாயையி னுகிய வுலகெங்கும் மலிதரு முயிர்களும் மதிசூடுந்
தூயவன் விழியழல் சுடுமாபோல் துண்ணென அட்டது சுரர்போற்ற.

இ—ள்: சேயவன் விட்டிடு தனி வை வேல்—குமாரக்கடவுள் செலுத்திய ஒப்பற்ற கூரிய வேலாயுதம், செரு முயல் தாரகன் வரையோடும் அ இடை செய்த புணர்ப்பு எல்லாம்—போர்த் தொழிலே முயலுகின்ற தாரகாசுரன் கிரவுஞ்சமலையினுடன் அவ்விடத்திற் செய்த மாயைகளெல்லாவற்றையும், அகிலமும் அழிதரு பொழுதின்கண் மாயையின் ஆகிய உலகு எங்கும் மலிதரும் உயிர்களும் மதி சூடும் தூயவன் விழி அழல் சுடுமாபோல்—சர்வசங்கார காலத்தில் மாயையினுலாகிய உலக முழுவதையும் அவ் வுலகங்களினிறைந்த ஆன்மாக்கள் முழுவதையும் பிறையை யணிந்த பரிசுத்தராகிய சிவபிரானது நுதற் கண்ணிற் றேன்றிய அக்கினி எரிக்குந் தன்மைபோல, சுரர் போற்ற—தேவர்கள் துதிக்க, துண் என அட்டது—விரைவிலழித்தது எ—று.

புணர்ப்பெல்லாம் அட்டது என வியையும். சுடுமாறு என்பது ஈற்றுயிர் மெய் குறைந்து நின்றது. பிரபஞ்ச முழுவதும் மாயத் தோற்றமாதலின் அவை யழிதல் அசுரர் மாயமழிதற்குவமையாயிற்று. (181)

### வேறு

அரண்டரு கழற்கால் ஐயன் அறுமுகத் தெழுந்த சீற்றந்
திரண்டொரு வடிவின் வேருய்ச் சென்றதே யெனவு நான்கு
முரண்டரு தடந்தோள் அண்ணல் முத்தலே படைத்த சூலம்
இரண்டொரு படையாய் வந்த தென்னவும் ஏகிற் றவ்வேல்.

இ—ள்: அரண் தரு கழல் கால் ஐயன் அறுமுகத்து எழுந்த சீற்றம் வேறு ஆய் ஒரு வடிவின் திரண்டு சென்றதே எனவும்—அடியார்க்கு அடைக்கலமாகிய வீரக்கழலேயணிந்த பாதங்களேயுடைய குமாரக்கடவுளது ஆறுமுகங்களினின்றுந் தோன்றிய கோபம் வேறுபட்டு ஒருருவமாகத் திரண்டு போன தன்மையைப் போலவும், நான்கு முரண் தரு தட தோள் அண்ணல் மு தலே படைத்த சூலம் இரண்டு ஒரு படை ஆய் வந்தது என்னவும்—வலிமை பொருந்திய விசாலித்த நான்கென்னுந் தொகைப் பட்ட புயங்களேயுடைய சிவபிரானது முக்கவர் பொருந்திய சூலப்படைகளிரண்டு (முத் தலேகளும் இரு பக்கங்களினும் குறுக்கே பொருந்துமாறு) ஒரு ஆயுத வடிவாயமைந்து சென்ருற் போலவும், அ வேல் ஏகிற்று—அந்த வேலாயுதஞ் சென்றது எ—று.

அரண்டரு என்பதைக் கழற்கடையாகக் கொள்ளின் காலுக்குப் பாதுகாப்பைச் செய்கின்ற எனவுரைக்க. வேற்படை ஒவ்வொரு பக்கத்துக்கும் மும்மூன்று முனேகளாக இரு பக்கத்தும் ஆறுமுனேகளேயுடைமையால், அறுமுகத் தெழுந்த சீற்றம் ஒன்ருன வடிவத்தையும் முத்தலேச் சூலமிரண்டொன்ருன வடிவத்தையுமுவமித்தார். (182)

முடித்திடல் அரிய மாய மூரிநீர்க் கடலே வற்றக்
குடித்திடு கின்ற செவ்வேற் கூற்றம்வந் திடுத லோடுந்
தடித்திடும் எயிற்றுப் பேழ்வாய்த் தாரகன் இதனேப் பற்றி
ஒடித்திடு கிற்பேன் என்னு ஒல்லென உருத்து வந்தான்.

இ—ள்: முடித்திடல் அரிய மாய மூரி நீர் கடலே வற்ற குடித்திடுகின்ற செவ் வேல் கூற்றம் வந்திடுதலோடும்—எவராலுமழித்தற்கரிய மாயமாகிய வலிய நீர் நிறைந்த சமுத்திரத்தை வற்றும்படி பருகுகின்ற சிவந்த வேலாயுத

மாகிய யமன் எதிரே வருதலும், தடித்திடும் எயிற்று பேழ் வாய் தாரகன்—பருத்த பற்களையும் திறந்த வாயையுமுடைய தாரகாசுரன், இதனை பற்றி ஒடித்திடுகிற்பேன் என்று— இவ் வேலாயுதத்தைப் பிடித்து முரித்து விடுவேனென்று சிந்தித்து, உருத்து—கோபித்து, ஒல் என வந்தான்—விரைவில் எதிரே வந்தான் எ—று.

நீர்க்கடல் - சாதியடை, மாயக்கடலை வற்றக் குடித்தல்=மாய ரூபங்களை யெல்லா மொழித்தல். தவறுதழித்தல் பற்றி வேலைக் கூற்றமென்றார். கில் - ஆற்றலிடை நிலை. (183)

அச்சமொர் சிறிது மில்லா அவுணர்கோன் உவணன் மேற்செல்
நச்சர வென்னச் சீறி நணுகலும் அவன்மார் பென்னும்
வச்சிர வரையின் மீது வானுரு மேறுற் றென்னச்
செச்சையந் தெரியல் வீரன் செலுத்தும்வேல் பட்ட தன்றே.

இ—ள்: ஓர் சிறிதும் அச்சம் இல்லா அவுணர் கோன்—சிறிதும் பயமில்லாத அசுரத் தலைவனாகிய தாரகன், உவண மேல் செல் நச்சு அரவு என்ன சீறி நணுகலும்—கருடன் மீதெதிர்த்துச் செல்லுகின்ற விஷ சர்ப்பத்தைப் போலக்கோபித்துச் சமீபித்தலும், அவன் மார்பு என்னும் வச்சிர வரையின்மீது—அவனுடைய நெஞ்சாகிய வைர மலையின் மேல், வான் உருமேறு உற்று என்ன—பெரிய இடி விழுந்தாற் போல, செச்சையம் தெரியல் வீரன் செலுத்தும் வேல் பட்டது—வெட்சிமலர் மாலையையணிந்த வீரராகிய முருகக்கடவுளேவிய வேலாயுதந் தாக்கியது எ—று.

ஒரு என்பதன் விகாரமாகிய ஓர் என்பது அற்பத்தை யுணர்த்திற்று. நணுகலும்-பட்டது என இயையும். தன்னை யழிப்பதாகிய வேற்படையை அழிக்கக் கருதிச் சேறலின் 'உவணமேற் செல்நச்சரவென்ன - நணுகலும்' எனவும், பிற ஆயுத வகைகளாலழியாமை பற்றித் தாரகன் மார்பை 'வச்சிரவரை' எனவும், அதனை வேற்படை பிளத்தலின் 'உருமேறுற்றென்ன-பட்டது' எனவும் கூறினார். (184)

தாரகன் மார்ப மென்னுந் தடம்பெரு வரையைக் கீண்டு
சீரிய கிரவுஞ் சத்திற் சேர்ந்துபட் டுருவிச் சென்று
வீரமும் புகழுங் கொண்டு விளங்கிய தென்ன அங்கட்
சோரியுந் துகளும் ஆடித் துண்ணென மீண்ட தன்றே.

இ—ள்: தாரகன் மார்பம் என்னும் தடம் பெருவரையை கீண்டு—தாரகாசுரனுடைய நெஞ்சாகிய மிகப் பெரிய மலையைக் கிழித்து, சீரிய கிரவுஞ்சத்தில் சேர்ந்து பட்டு—சிறந்த கிரவுஞ்சமலையிற் போய்த் தாக்கி, உருவி சென்று—ஊடுருவிப் போய், வீரமும் புகழும் கொண்டு விளங்கியது என்ன—வீரத்தையுங் கீர்த்தியையுங் கவர்ந்து விளங்கிய தன்மை போல, அங்கண் சோரியும் துகளும் ஆடி—அவ்விடங்களிலுள்ள இரத்தத்திலுந் தூளியிலும் படிந்து, துண் என மீண்டது—விரைவாகத் திரும்பியது எ—று.

தட பெரு ஒரு பொருட் பன்மொழிகள். வீரத்தைச் செந் நிறமாகவும் புகழை வெண்ணிறமாகவும் கூறுவது கவி வழக்கம். உபமானத்துக் கேற்பத் துகளை வெண்ணிற மென்க. சோரி தாரகனது நெஞ்சினும் துகள் கிரவுஞ்ச மலையினுந் தோன்றின. (185)

மீண்டிடு சீற்ற வைவ்வேல் வெற்பினுள் துஞ்சு கின்ற
ஆண்டகை வீரர் தம்மை ஆயிடை யெழுப்பி வான்போய்
மாண்டகு கங்கை தோய்ந்து வாலிய வடிவாய் ஐயன்
தூண்டிய கரத்தில் வந்து தொன்மைபோல் இருந்த தம்மா.

இ—ள்: மீண்டிடு சீற்ற வை வேல்—திரும்புகின்ற கோபத்தையுடைய கூரிய வேற்படையானது, வெற்பினுள் துஞ்சுகின்ற ஆண்டகை வீரர் தம்மை ஆயிடை எழுப்பி—கிரவுஞ்சமலையினுள் மயங்கிக் கிடக்கின்ற ஆண்டகைமையை யுடைய வீரர்களை அப்பொழுது மயக்க நீங்கி யெழுந்திருக்கச் செய்து, வான் போய்—ஆகாயத்திற் சென்று, மாண் தகு கங்கை தோய்ந்து—மாட்சிமை மிக்க தேவ கங்கையில் மூழ்கி, வாலிய வடிவு ஆய்—தூய்மை பொருந்திய உருவத்தை யுடையதாய், ஐயன் தூண்டிய கரத்தில் வந்து—முருகக்கடவுள் முன் எந்தத் திருக்கரத்தா லேவினரோ அந்தத் திருக்கரத்திற் சேர்ந்து, தொன்மை போல் இருந்தது—முன்போலிருந்தது எ—று.

முன்னர்ச் சோரியுந் துகளு மாடி மாசெய்துதலின் பின்னர்க் கங்கையிற் றோய்ந்து தூய்மை யெய்திய தென்க. (186)

தண்டம தியற்றுங் கூர்வேல் தாரக் வவுணன் மார்பும்
பண்டுள வரையும் பட்டுப் பறிந்தபே ரோசை கேளா
விண்டது ஞால மென்பார் வெடித்தது மேரு வென்பார்
அண்டம துடைந்த தென்பா ராயினர் அகிலத் துள்ளோர்.

இ—ள்: தண்டமது இயற்றும் கூர் வேல்—துட்டர்க்குத் தண்டனையைச் செய்கின்ற கூரிய வேற்படை, தாரக அவுணன் மார்பும் பண்டு உள வரையும் பட்டு—தாரகாசுரனது நெஞ்சினும் பழமையாயுள்ள கிரவுஞ்ச மலையிலுந் தாக்கி, பறிந்த பேர் ஓசை கேளா—பிளந்து சென்றதனாலாகிய பேரோசையைக் கேட்டு, அகிலத்து உள்ளோர்—உலகத்திலுள்ளவர்கள், ஞாலம் விண்டது என்பார்—பூமி பிளந்ததென்று சொல்பவர்களும், மேரு வெடித்தது என்பார்—மேருமலை வெடித்ததென்று சொல்பவர்களும், அண்டமது உடைந்தது என்பார் ஆயினர்—அண்டமுடைந்ததென்று சொல்பவர்களுமானார்கள் எ—று.

தாரகன் மார்புங் கிரவுஞ்சமலையும் பிளவுபட்டவோசையென்பதை யுணராது பலரும் பலவாறு கூறினரென்க. (187)

வடித்ததை யன்ன கூர்வேல் மார்பையூ டறுத்துச் செல்லத்
தடித்திடு கின்ற யாக்கைத் தாரகன் அநந்த கோடி
இடித்தொகை யென்ன ஆர்த்திட் டிம்மென எழுந்து துள்ளிப்
படித்தலந் தன்னில் வீழ்ந்து பதைபதைத் தாவி விட்டான்.

இ—ள்: வடித்ததை அன்ன கூர் வேல்—உடனே அராவிக் கூர் செய்தாற் போன்ற கூரிய வேற்படை, மார்பை ஊடறுத்து செல்ல—தன்னெஞ்சை யூடுருவிப் போக, தடித்திடுகின்ற யாக்கை தாரகன்—பெருத்த சரீரத்தையுடைய தாரகாசுரன், அநந்தகோடி இடி தொகை என்ன ஆர்த்திட்டு—அநேககோடி இடிக் கூட்டங்களைப் போலச் சத்தமிட்டு, இம் என எழுந்து துள்ளி—விரைவி

லெழும்பிக் குதித்து, படித்தலம் தன்னில் வீழ்ந்து பதை பதைத்து—பூமியில் விழுந்து துடி துடித்து, ஆவி விட்டான்—உயிரை நீங்கினுன் எ—று,

பதை பதைத்து-இரட்டைக் கிளவி. முருகக்கடவுளது வேல் இயற்கையிற் கூர்மையுடைத்தாதலின் 'வடித்ததை யன்ன கூர்வேல்' என்ருர். (188)

தடவரை யனைய மொய்ம்பில் தாரகன் வேலாற் பட்டுப்
புடவியில் வீழா நின்ருன் பொள்ளென வானில் துள்ளிக்
கடலுடைந் தென்ன ஆர்க்குங் காலையில் கலக்க மெய்தி
உடுகணம் உதிர்ந்த தஞ்சி யோடினன் இரவி யென்போன்.

இ—ள்: தட வரை அனைய மொய்ம்பில் தாரகன்—பெரிய மலையைப் போன்ற புயங்களையுடைய தாரகாசுரன், வேலால் பட்டு புடவியில் வீழா நின்ருன்—வேலாயுதத்தினுலழிந்து பூமியில் விழுபவனுய், பொள் என வானில் துள்ளி—விரைவில் ஆகாயத்திலெழும்பி, கடல் உடைந்து என்ன ஆர்க்கும் காலையில்—சமுத்திரமுடைந்தாற் போல ஆரவாரிக்கும் பொழுது, உடு கணம் கலக்கம் எய்தி உதிர்ந்தது—நக்ஷத்திரக் கூட்டம் நிலை கலங்கிச் சிதறிற்று, இரவி என்போன் அஞ்சி ஓடினன்—சூரியனெனப்படுவோன் பயந்தோடினுன் எ—று.

மொய்ம்பு-வலியுமாம். வீழா நின்ருன்-முற்றெச்சம். உடுகணம்.வடசொற் ருெடர். (189)

தளர்ந்திடல் இல்லா வீரத் தாரகன் பட்டு வானில்
கிளர்ந்தனன் வீழு மெல்லைக் கீழுறு பிலமும் பாரும்
பிளந்தன வரைகள் யாவும் பிதிர்ந்தன அதிர்ந்த தண்டம்
உளந்தடு மாறி யோலிட் டோடின திசையில் யானை.

இ—ள்: தளர்ந்திடல் இல்லா வீர தாரகன் பட்டு—சோர்வடைதலில்லாத வீரத்தையுடைய தாரகாசுரனிறந்து, வானில் கிளர்ந்தனன் வீழும் எல்லை—ஆகாயத்திற் கிளம்பி விழுந்தபொழுது, கீழ் உறு பிலமும் பாரும் பிளந்தன—கீழுள்ள பாதலவுலகமும் பூவுலகமும் பிளவுபட்டன, வரைகள் யாவும் பிதிர்ந்தன—மலைகளெல்லா முதிர்ந்தன, அண்டம் அதிர்ந்தது—அண்டகோளம் நடுங்கிற்று, திசையில் யானை உளம் தடுமாறி ஒலிட்டு ஓடின—திக்கு யானைகள் மனங் கலங்கி வீரிட்டு ஓடின எ—று. (190)

தண்ணளி சிறிது மில்லாத் தாரகன் கிளர்ந்து வான்போய்
மண்ணிடை மறிந்த தன்மை வன்சிறை இழந்த நாளில்
திண்ணிய மேரு இன்னுஞ் செல்லலாங் கொல்லென் றுன்னி
விண்ணிடை யெழுந்து வல்லே வீழ்ந்ததே போலும் அன்றே.

இ—ள்: சிறிதும் தண்ணளி இல்லா தாரகன்—சற்ருயினுமிரக்கமில்லாத தாரகாசுரன், கிளர்ந்து வான் போய் மண் இடை மறிந்த தன்மை—கிளம்பி ஆகாயத்திற் போய் பூமியில் விழுந்த தன்மை, வன் சிறை இழந்த நாளில்—வலிய சிறகுகளையிழந்த காலத்தில், திண்ணிய மேரு—வலிய மேருமலை, இன்னும் செல்லல் ஆம் கொல் என்று உன்னி-பின்னும் பறந்து செல்லலாமோ வென்று நினைத்து, விண் இடை எழுந்து—ஆகாயத்திற் கிளம்பி, வல்லே வீழ்ந்ததே போலும்—(பறக்கமாட்டாமையால்) விரைவில் விழுந்ததையே போலும் எ—று.

இவ்வுவமை தாரகனது சரீரத்தின் பெருமையையுந் திண்மையையு முணர்த்திற்று. (191)

வெற்றிய தாகுங் கூர்வேல் வெற்பினை அட்டகாலைச்
செற்றிய பூழி யீட்டஞ் சிதறிய பொறிக ளெங்கும்
பற்றிய புகையும் வந்து பரந்தன கரந்த தண்டம்
வற்றிய கடல்கள் வானிற் கங்கையும் வறந்த தன்றே.

இ—ள்: வெற்றியது ஆகும் கூர் வேல் வெற்பினை அட்டகாலை—வெற்றியையுடைத்தாகிய கூரிய வேலாயுதம் கிரவுஞ்ச கிரியைப் பிளந்தபொழுது, பூழி ஈட்டம் செற்றிய—தூளிக் கூட்டங்கள் நெருங்கின, சிதறிய பொறிகள் எங்கும் பற்றிய—சிதறிய தீப்பொறிகளெங்கும் மூண்டன, புகையும் வந்து பரந்தன—புகையுந் தோன்றிப் பரவியது, அண்டம் கரந்தது—அவற்றால் ஆகாயம் மறைந்தது, கடல்கள் வற்றிய—சமுத்திரங்கள் வற்றின, வானில் கங்கையும் வறந்தது—ஆகாயத்திலுள்ள கங்கை நதியும் வற்றியது எ—று.

கங்கையுமென்ற உம்மை எச்சத்தோடுயர்வு சிறப்பு. (192)

சிறந்திடு மாய வெற்பைத் திருக்கைவேல் பொடித்த காலைப்
பிறந்திடு கின்ற தீயைத் தீயெனப் பேச லாமோ
அறிந்தவர் தெரியிற் குன்றம் அவுணனா கையினான் மெய்யில்
உறைந்திடு குருதி துள்ளி உகுத்தவா றாகு மன்றே.

இ—ள்: திரு கைவேல் சிறந்திடும் மாய வெற்பை பொடித்த காலை—முருகக்கடவுளினது திருக்கரத்தினின்று சென்ற வேல் சிறந்த மாயங்களில் வல்ல கிரவுஞ்சமலையைத் துகள் படுத்திய பொழுது, பிறந்திடுகின்ற தீயை தீ என பேசல் ஆமோ—தோற்றிய அக்கினியை அக்கினி என்று சொல்வது தகுமா? (தகாது), அறிந்தவர் தெரியில்—அறிவுடையோ ராராயுமிடத்து, குன்றம் அவுணன் ஆகையினால்—கிரவுஞ்சமலை முன் அசுரனாயிருந்ததனால், மெய்யில் உறைந்திடு குருதி துள்ளி உகுத்தவாறு ஆகும்—அவனது உடலிற் பொருந்திய இரத்தம் மேலெழுந்து சிந்திய தன்மையேயாம் எ—று.

செந்தீயைச் செந்நீராகக் கூறினார்; தற்குறிப்பேற்றம். (193)

யானுற்ற குன்றந் தன்னை யெறிந்தனன் என்று செவ்வேள்
தானுற்ற நதியை வந்து தடிந்ததே என்ன வெற்பில்
ஊனுற்ற நெடுவேல் பாய உதித்திடும் பொறியின் ஈட்டம்
வானுற்ற கங்கை புக்கு வறந்திடு வித்த தன்றே.

இ—ள்: ஊன் உற்ற நெடுவேல் வெற்பில் பாய உதித்திடும் பொறியின் ஈட்டம்—தசை தோயப் பெற்ற நெடிய வேற்படை கிரவுஞ்சமலையிற் பட்டவுடன் றோன்றிய அக்கினிப் பொறிகளின் கூட்டம், யான் உற்ற குன்றம் தன்னை செவ்வேள் எறிந்தனன் என்று—நான் றோன்றுதற்கிடமாகிய கிரவுஞ்சமலையைக் குமாரக்கடவுள் பிளந்தாரென்றெண்ணி, தான் உற்ற நதியை வந்து தடிந்ததே என்ன—அக் குமாரக்கடவுள் தோன்றுதற்கிடமாகிய கங்கையை யணுகிப் பருகியதையே போல, வான் உற்ற கங்கை புக்கு வறந்திடுவித்தது—ஆகாயவுலகத்திலுள்ள கங்கை நதியிற் போய் அதனை வற்றச் செய்தது எ—று.

அக்கினிப் பொறிகளின் வெப்பத்தால் வற்றியதைத் தனக்குச் செய்த தீங்கிற்கு மாறு செய்யவெண்ணி வற்றச் செய்ததாகக் கூறியது தற்குறிப்பேற்றம். (194)

திறலுடை நெடுவேல் அட்ட சிலம்பினில் சிதறித் தோன்றும்
பொறிகளுந் துகளும் ஆர்ப்பும் பொள்ளெனச் செறிந்த தன்மை
மறிகடல் முழுதும் அங்கண் வடவையும் அடைந்தொன் றாகி
இறுதியில் உலகங் கொள்ள எழுந்தது போலும் மாதோ.

இ—ள்: திறல் உடை நெடு வேல் அட்ட சிலம்பினில் சிதறி தோன்றும் பொறிகளும்—வலிமையையுடைய நெடிய வேற்படை பிளந் தழித்த கிரவுஞ்ச மலையிற் பரந்து காணப்படுகின்ற அக்கினிப் பொறிகளும், துகளும்—தூளிகளும், ஆர்ப்பும்—ஆரவாரமும், பொள் என செறிந்த தன்மை—திடீரெனப் பரம்பிய தன்மை, இறுதியில்—ஊழிக் காலத்தில், மறி கடல் முழுதும் அங்கண் வடவையும் அடைந்து ஒன்று ஆகி—அலை புரளுகின்ற எல்லாச் சமுத்திரங்களும் அச் சமுத்திரங்களிலுள்ள வடவா முகாக்கினியுஞ் சேர்ந்து ஒன்றுபட்டு, உலகம் கொள்ள எழுந்தது போலும்—உலகங்களை யழிக்கும்படி கிளர்ந்த தன்மையை நிகர்க்கும் எ—று.

ஊழிக் காலத்தில் உலக மெவற்றையுமழிக்கும்படி திடீரெனத் தோன்றுதல் போல் ஈண்டுந் தோன்றின வென்க. பொறிகளுக்கு வடவையும் துகளின் றொகுதிக்குக் கடலும் பிளவுபட்ட போதுண்டான ஓசைக்குத் கடல் பெருகு மோசையு முவமையென்க. (195)

தந்தியின் வதனங் கொண்ட தாரக வவுணன் மார்பில்
சிந்துறு குருதிச் செந்நீர் திரைபொரு தலைத்து வீசி
அந்தமில் நீத்த மாகி அயிற்படை அட்ட குன்றில்
வந்திடு பூழை புக்கு மறிகடல் மடுத்த தன்றே.

இ—ள்: தந்தியின் வதனம் கொண்ட தாரக அவுணன் மார்பில் சிந்துறு குருதி செம் நீர்—யானை முகத்தையுடைய தாரகாசுரனது நெஞ்சினின்றுஞ் சிந்தியு சிவந்த இரத்த நீர், திரை பொருது அலைத்து வீசி—திரைமோதி அலைத்து வீசி, அந்தம் இல் நீத்தம் ஆகி—அளவிறந்த வெள்ளமாகி, அயில் படை அட்ட குன்றில் வந்திடு பூழை புக்கு—வேற்படை பிளந்த கிரவுஞ்ச கிரியிலுண்டாகிய துவாரத்தாற் போய், மறி கடல் மடுத்தது—திரை மறிகின்ற சமுத்திரத்தை நிறைந்தது எ—று.

அலைத்தல்-பக்கத்திலுள்ள பொருள்களை நிலைபெயர்த்தல். வீசுதல்-அவற்றைத் தூரத்திலெறிதல். குருதி செந்நீர் ஒரு பொருட் கிளவிகளெனினுமாம், மேக தூதமென்னும் நூல் கிரவுஞ்சமலையில் வடக்குத் தெற்காக ஓர் பிளவுள்ள தென்று கூறுதலால் அதுவே வேற்படையாற் பிளக்கப்பட்ட பிளவு போலும். அந்த மார்க்கமாகவே இரத்த நீர் கடலிற் பாய்ந்த தென்க. (196)

விட்டவேல் மீண்டு கந்த வேள்கரத் திருப்பத் தீயோன்
பட்டதும் வெற்பு மாய்ந்த பான்மையும் அவுணர் யாருங்
கெட்டது நோக்கி மாலுங் கேழ்கிளர் கமலத் தேவும்
முட்டிலா மகத்தின் வேந்தும் முனிவருஞ் சுரரும் ஆர்த்தார்.

இ—ள்: விட்ட வேல் மீண்டு—முருகக்கடவுளேவிய வேலாயுதந் திரும்பி வந்து, கந்த வேள் கரத்து இருப்ப—குமாரக்கடவுளது திருக்கையிலிருக்க, தீயோன் பட்டதும்—கொடிய தாரகாசுரன் இறந்த தன்மையையும், வெற்பு மாய்ந்த பான்மையும்—கிரவுஞ்சமலை பிளவுபட்ட தன்மையையும், அவுணர் யாரும் கெட்டதும் — அசுரர்களெல்லோருமழிந்த தன்மையையும், நோக்கி—பார்த்து, மாலும்—திருமாலும், தேம் கிளர் கமல தேவும்—நிறம் விளங்குகின்ற செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவரும், முட்டு இலா மகத்தின் வேந்தும்—குறைவில்லாத யாகங்களுக்கதிபனாகிய இந்திரனும், சுரரும்—மற்றைத் தேவர்களும், முனிவரும்—முனிவர்களும், ஆர்த்தார்—ஆரவாரித்தார்கள் எ—று.

முட்டு-மகத்திற்கடையாகக் கொள்ளின் மந்திரலோபம் திரவியலோபம் கிரியாலோப முதலியன; இந்திரனுக் கடையாகக் கொள்ளின் மனத்துயர். (197)

ஆடினர் குமரற் போற்றி அங்கைக ளுச்சி மீது
சூடினர் தண்பூ மாரி தூர்த்தனர் அவனைச் சூழ்ந்து
பாடினர் தொழுது முன்னம் பன்முறை பணிந்து நின்றார்
நீடிய வுவகை யென்னும் நெடுங்கடல் ஆழும் நீரார்.

இ—ள்: நீடிய உவகை என்னும் நெடும் கடல் ஆழும் நீரார்—(அவர்கள்) பெருகிய மகிழ்ச்சியாகிய நெடிய கடலி லமிழ்ந்தியுவர்களாய், ஆடினர்—கூத்தாடி, குமரன் போற்றி—முருகக்கடவுளைத் துதித்து, அங்கைகள் உச்சி மீது சூடினர்—அகங்கைகளைச் சிரமேற் குவித்து, தண் பூமாரி தூர்த்தனர்—குளிர்ந்த புஷ்ப மழையைச் சொரிந்து, அவனை சூழ்ந்து—அம் முருகக்கடவுளை வலம் வந்து, பாடினர்—கீதம் பாடி, தொழுது—அஞ்சலி செய்து, முன்னம் பல் முறை பணிந்து நின்றார்—திருமுன்னிலையிற் பல்முறை வணங்கி நின்றார்கள் எ—று. (198)

ஆங்கது காலை தன்னில் அளப்பிலா மாயை வல்ல
ஓங்கல திறப்ப அங்கண் உறங்கிய வீர ரெல்லாந்
தீங்குறு மையல் நீங்கிக் கதுமெனச் சென்று செவ்வேள்
பூங்கழல் வணங்கி நின்று போற்றியே புடையின் நின்றார்.

இ—ள்: அது காலை தன்னில்—அப்பொழுது, அளப்பு இலா மாயை வல்ல ஓங்கலது இறப்ப—அளவிடுதற்கரிய மாயங்களில் வல்ல கிரவுஞ்சமலை அழிய, அங் கண் உறங்கிய வீரர் எல்லாம்—அம் மலையில் மயங்கிக் கிடந்த வீரர்களனைவரும், தீங்கு உறும் மையல் நீங்கி—தீமையைத் தருகின்ற மயக்கத்தினின்று நீங்கி, கதும் என சென்று—விரைவாகப் போய், செவ்வேள் பூ கழல் வணங்கி—முருகக்கடவுளது பொலிவுஆர்ந்த பாதங்களைப் பணிந்து, நின்று போற்றி—எழுந்து நின்று துதித்து, புடையில் நின்றார்—அவரது பக்கத்திற்போய் நின்றார்கள் எ—று. (199)

வாருறு கழற்கால் வீர வாகுவே முதலா வுள்ள
வீரர்கள் தம்மை யெல்லாம் வேலுடைக் கடவுள் நோக்கித்
தாரகன் வரையுட் பட்டுத் தகுமுணர் வின்றி நீவிர்
ஆருறொந் தீர்கள் போலும் மாயையு டழுந்தி யென்றான்.

இ—ள்: வேல் உடை கடவுள்—வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள், வார் உறு கழல் கால் வீரவாகுவே முதல் ஆ உள்ள வீரர்கள் தம்மை எல்லாம் நோக்கி—வார் பொருந்திய வீரக்கழலே யணிந்த பாதங்களையுடைய வீரவாகுவையே முதலாகவுடைய வீரர்களையெல்லாம் பார்த்து, நீவிர் ஆரும்—நீங்களெல்லாம், தாரகன் வரை உள் பட்டு—தாரகாசுரனது கிரவுஞ்சமலையினுள்ளகப்பட்டு, மாயை ஊடு அழுந்தி—மாயத்திற் சிக்கி, தகும் உணர்வு இன்றி—நல்லறிவில்லாமல், நொந்தீர்கள் போலும் என்றான்—வருந்தினீர்கள் போலுமென்று கூறியருளினார் எ—று.

போலும்-ஒப்பில் போலி. (200)

செய்யவன் இனைய வாறு சீரருள் புரிய வீரர்
ஐயநின் னருளுண் டாக அடியம்ஊ றடைவ துண்டோ
மையலோ டுறங்கு வார்போல் மருவுமின் புற்ற தன்றி
வெய்யதோர் கிரிமா யத்தால் மெலிந்திலம் இறையு மென்றார்.

இ—ள்: செய்யவன் இனையவாறு சீர் அருள் புரிய—சிவந்த நிறத்தையுடைய முருகக்கடவுள் இவ்வாறு சிறந்த அருண் மொழியைக் கூற, வீரர்—(வீரவாகு முதலிய) வீரரனைவரும். ஐய—கடவுளே! நின் அருள் உண்டு ஆக அடியம் ஊறு அடைவது உண்டோ—தேவரீரது அனுக்கிரகமுளதாயிருக்கத் தமியேங்கள் ஊறு அடைவது உண்டோ?, மையலோடு உறங்குவார் போல் மருவும் இன்பு உற்றது அன்றி—மயக்கத்தோடு நித்திரை செய்பவர் போலப் பொருந்திய இன்பத்தையடைந்திருந்ததேயல்லாமல், வெய்யது ஓர் கிரி மாயத்தால் இறையும் மெலிந்திலம்—கொடிய கிரவுஞ்சமலையின் மாயத்தினாற் சிறிதேனுந் துயரடைந்திலோம், என்றார்—என்று விண்ணப்பஞ் செய்தார்கள் எ—று.

புரிய என்றார் என இயையும். (201)

என்றலும் வீர மொய்ம்பின் ஏந்தலை விளித்துச் செவ்வேள்
வென்றிகொள் சூரன் பின்னோன் விட்டிடத் தான்முற் கொண்ட
வன்றிறற் படையின் வேந்தை மற்றவன் கரத்தின் நல்கி
நன்றிது போற்று கென்றே நவின்றுநல் லருள்பு ரிந்தான்.

இ—ள்: என்றலும்—என்று வீரர்கள் கூறியவுடன், செவ்வேள்—முருகக்கடவுள், வீர மொய்ம்பின் ஏந்தலை விளித்து—வீரவாகு தேவரை யழைத்து, வென்றி கொள் சூரன் பின்னோன் விட்டிட தான் முன் கொண்ட வன் திறல் படையின் வேந்தை அவன் கரத்தில் நல்கி—வெற்றியையுடைய சூரபன்மனது தம்பியாகிய தாரகாசுரனேவத் தாம் முன்னர்ப் பற்றிய மிக்க வலிமையினையுடைய சிவப் படையை அவரது கையிற் கொடுத்து, நன்று இது போற்றுக என்று நவின்று—நன்றாக இதனைப் பாதுகாத்துக் கொள்ளென்று கூறி, நல் அருள் புரிந்தான்—சிறந்த கருணையைச் செய்தார் எ—று.

வீரமொய்ம்பினேந்தல்-வீரமார்ந்த புயங்களையுடைய தலைவன்.

தாரகன் போரில் துஞ்சுஞ் சாரதர் தம்மை யெல்லாம்
ஆருநீர் எழுதிர் என்னு அவரெலாம் எழவே செய்து
பாரிட வனிகஞ் சூழப் பண்ணவர் பரவல் செய்யச்
சீரிய வயவர் ஈண்டச் செருநிலம் அகன்றுன் செவ்வேள்.

**இ—ள்:** செவ்வேள்—முருகக்கடவுள், தாரகன் போரில் துஞ்சும் சாரதர் தம்மை எல்லாம்—தாரகாசுரனோடு நிகழ்ந்த யுத்தத்திலிறந்த பூதர்களனைவரையும், நீர் ஆரும் எழுதிர் என்னு—நீவிரனைவீரும் எழும்புதிரென்று கூறி, அவர் எலாம் எழ செய்து—அவரனைவருமுயிர் பெற்றெழும்படி செய்து, பாரிட அனிகம் சூழ—பூதசேனைகள் புடை சூழவும், பண்ணவர் பரவல் செய்ய—தேவர்கள் துதிக்கவும், சீரிய வயவர் ஈண்ட—சிறந்த இலக்கத்தொன்பது வீரர்கள் நெருங்கி வரவும், செருநிலம் அகன்றுன்—போர்க்களத்தை நீங்கிப் போனுர் எ—று. (203)

தாரகன் வதைப் படலம் முற்றிற்று.

**ஆகத்திரு விருத்தம் 1531**

# 21. தேவகிரிப் படலம்



முருகக்கடவுள்போய்த் தேவகிரியில்வீற்றிருந்த சரித்திரத்தைக்கூறுதலின் இப்பெயர்த்தாயிற்று,

## இப்படலப்பொழிப்பு.

முருகக்கடவுள் தேவர்முதலாயினோர் புடைசூழ்ந்துவரப் போர்க்களத்தைநீங்சித் தென்றிசைநோக்கி நடந்து தேவகிரியையடைந்து அங்கே தேவதச்சனுலோர் நகரமமைப்பித்து அதனுள் தமக்காக்வியற்றப்பட்டிருந்த திருக்கோயிலிற்புகுந்து தேவர்களும் முனிவர்களும் பூசிக்க அருள்செய்து வீற்றிருந்தனர் என்பதாம்.

மாகவந் தங்கள் கூளி வாய்ப்பறை* மிழற்ற ஆடும்
ஆகவந் துங்கு மெல்லை யகன்றுசெங் கதிர்வேல் அண்ணல்
சோகவந் தங்கொண் டுள்ள சுரருடன் அணிகஞ் சுற்றி
ஏகவந் தங்கண் நின்ற இமகிரி யெல்லை தீர்ந்தான்.

இ—ள். செம் கதிர் வேல் அண்ணல்—செவ்வொளியையுடைய வேலாயுதத்தைத்தாங்கிய முருகக்கடவுள், கூளி வாய் பறை மிழற்ற மா கவந்தங்கள் ஆடும் ஆகவம் தங்கும் எல்லை அகன்று—பேய்கள் வாயாகிய பறைகளையியம்பப்பெரிய பெரிய உடற்குறைகள் கூத்தாடுகின்ற போர்க்களத்தை நீங்கி. சோக அந்தங் கொண்டு உள்ள சுரர் உடன் அணிகம் சுற்றி ஏக வந்து—துன்பத்தின் முடிவைப் பெற்றுள்ள தேவர்களும் சேனைகளுஞ் சூழ்ந்துவரப்போய், அங்கண் நின்ற இமகிரி எல்லை தீர்ந்தான் — அம்மார்க்கத்திலுள்ள இமயமலையினெல்லையைக் கடந்தார் எ—று.

ஆகவந்தங்குமெல்லை—போர்நிகழ்ந்த இடம், சோகாந்தம் எனத் தீர்க்கசந்தியாய் முடிதற்கேற்ற சோக அந்தம் என்னும் வடசொற்கள் தமிழிலக்கண விதிப்படி லகரவுடம்படு மெய்பெற்றுச் சோகவந்தமெனப் புணர்ந்தன. அசுரர்க் கழிவு நேர்ந்தமை கருதி அகமகிழ்ந்தாராதலால் 'சோகவந்தங்கொண்டுள்ளசுரர்' எனவும், இமயமலையில் ஓஷதிப்பிரஸ்தமென்னும் நகரத்திற்சென்று மலையரசனைக் கண்டு பேசி அப்பாற்சென்றனரென முதனூல் கூறுவதற்கமைய 'இமகிரியெல்லை தீர்ந்தான் எவைும் கூறினர், (1)

அரியயன் மகத்தின் தேவன் அமரர்கள் இலக்கத் தொன்பான்
பொருதிறல் வயவரேனைப் பூதர்கள் யாரும் போற்றத்
திருநெடு வேலோன் தென்பாற் செவ்விதின் நடந்து மேல்பால்
இரவியில் இரவி செல்ல இமையவர் சயிலஞ் சேர்ந்தான்.

இ—ள்: அரி—திருமாலும், அயன்—பிரமதேவரும், மகத்தின் தேவன்—யாகங்களுக்கதிபனன இந்திரனும், அமரர்கள்—தேவர்களும், இலக்கத்து ஒன்பான் பொரு திறல் வயவர்—போர்செய்தற்குரிய வலியையுடைய இலக்கத்தொன்பது வீரர்களும், ஏனை பூதர்கள் யாரும்போற்ற—மற்றையபூதர்களுமாகிய அனைவருந்துதிக்க, திரு நெடு வேலோன்—அழகிய நெடிய வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள், செவ்விதின்—சிறப்பாக, தென்பால் நடந்து—தென்றிசையை

* மாகவந் தங்கள் கூளி வாய்ப்பறை மிழற்ற ஆடும்

நோக்கிப்போய், இரவி மேல்பால் இரவியின் செல்ல—சூரியன் அத்தமன கிரியையடைய, இமையவர் சயிலம் சேர்ந்தான்—தேவகிரியையடைந்தார் எ-று.

மேல்பாலிரவி—மேற்றிசைக்கணுள்ளமலை. நடந்து சேர்ந்தான் எனவியையும். (2)

ஒப்பறு சூர்பின் னோனை ஒருவன்வேல் அட்ட தன்மை
இப்புற வுலகின் உள்ளார் யாவரும் உணர்வர் இன்னே
அப்புற வுலகின் உள்ளார் அறிந்திட யானே சென்று
செப்புவ னென்பான் போலச் செங்கதிர் மறைந்து போனான்.

இ—ள்: ஒருவன் வேல்—ஒப்பற்ற முருகக்கடவுளது வேற்படை, ஒப்பு அறு சூர் பின்னோனை அட்ட தன்மை—நிகரற்ற சூரபன்மனது தம்பியாகிய தாரகாசுரனையழித்த தன்மையை, இ புற உலகின் உள்ளார் யாவரும் உணர்வர்—இந்தப் பக்கத்திலுள்ள பூவுலகத்தில் வசிக்கின்றவர்களனைவருமறிவார்கள், அ புற உலகின் உள்ளார் அறிந்திட—அந்தப்பக்கத்திலுள்ள உலகங்களிலுள்ளவர்களறியும்படி, இன்னே—இப்பொழுது, யானே சென்று செப்புவன் என்பான் போல—நானே போய்ச்சொல்வேனென்று கருதியவன்போல, செம் கதிர் மறைந்து போனான்—சிவந்தகிரணங்களையுடைய சூரியன் அத்தமித்தான் எ—று.

யானேயென்பதில் ஏகாரம் பிரிநிலை. இச்செய்யுளும் பின்மூன்று செய்யுட்களுந் தற்குறிப்பேற்றம். (3)

பானுவென் றுரைக்குமேலோன் பகற்பொழு தெலாங்கைக் கொண்டான்
ஏனைய மதியப் புத்தேள் இரவினுக் கரச னானான்
நானிவற் றிடையே சென்று நண்ணுவ னென்று செந்தீ
வானவன் போந்த தென்ன வந்தது மாலைச் செக்கர்.

இ—ள்: பானு என்று உரைக்கும் மேலோன் பகற்பொழுது எலாம் கைக்கொண்டான்—சூரியனென்று சொல்லப்படுகின்றமேலவன் பகற்காலமுழுவதையுந் தனக்குரியதாகக் கவர்ந்து கொண்டான், ஏனைய மதியபுத்தேள் இரவினுக்கு அரசன் ஆனான்—மற்றைய சந்திரன் இராக்காலத்திற்கதிபனாயினான், நான் இவற்று இடையே சென்று நண்ணுவன் என்று—யானிவ்விரு காலங்களுக்குமிடையே போய்ப்பொருந்துவேனென்று சிந்தித்து, செம் தீ வானவன் போந்தது என்ன—சிவந்த நிறத்தையுடைய அக்கினிதேவன் வந்தாற்போல, மாலை செக்கர் வந்து—மாலைக்காலத்தில்வருஞ் செவ்வானந்தோன்றியது எ—று.

வானமெங்குஞ்செந்நிறம் பரவுதலை இங்ஙனம் வருணித்தார். (4)

வம்பவிழ் குமுத மெல்லா மலர்ந்திடு மாலை தன்னில்
வெம்படை பயிலத் தோன்றும் வேளுக்குத் தான்முன் வந்த
அம்புதி முரச மாயிற் றுகையால் தானும் வெற்றிக்
கொம்பென விளங்கிற் றென்ன எழுந்தது குழவித் திங்கள்.

இ—ள்: வம்பு அவிழ் குமுதம் எல்லாம் மலர்ந்திடும் மாலை தன்னில்—வாசனைவிரிந்த ஆம்பன்மலர்களனைத்தும் மலருகின்றமாலைக்காலத்தில், வெம் படை

பயில தோன்றும் வேளுக்கு-விரும்பத்தக்க மலர்களாகிய பாணங்கள் இடந் தோறும் பொருந்தத் தோற்றுகின்ற மன்மதனுக்கு, தான் முன் வந்த அம்புதி முரசம் ஆயிற்று ஆகையால்—தான் முன்னே தோற்றுதற்கிடமாகிய சமுத்திரம் முரசாயமைந்தது ஆதலால், தானும் வெற்றிக் கொம்பு என விளங்கிற்று என்ன—தானும் அதற்கேற்ப ஒரு வெற்றிக் கொம்பாக விளங்கினாற்போல, குழவித் திங்கள் எழுந்தது—பிறைச் சந்திரனுதித்தது எ—று.

மாலை தன்னில் தோன்றும் என இயையும். எழுந்தது என்பதனோடியைப் பினுமாம். தன்னைத் தோற்றுவித்த கடல் மன்மதனுக்கு முரசாயிருப்பத் தான் இயைபில்லாத குடையாயிருப்பது தக்கதன்றென்று சிந்தித்து இயைபுடைத்தான ஊது கொம்பானது போலப் பிறை உதித்ததென்பது கருத்து. (5)

ஏற்றெதிர் மலைந்து நின்ற இகலுடை யவுணர் தம்மேற்
காற்றெனத் தேர்கடாவிக் கடுஞ்சமர் புரிந்த வெய்யோன்
மாற்றருஞ் செம்பொன் மார்பில் வச்சிரப் பதக்கம் இற்று
மேற்றிசை வீழ்ந்த தென்ன இளம்பிறை விளங்கிற் றன்றே

இ—ள்: ஏற்று எதிர் மலைந்து நின்ற இகல் உடை அவுணர் தம் மேல்—எதிர்த்து மாறுகப் போர் செய்து நின்ற வலிமையையுடைய (மந்தேகரென்னும்) அசுரர்கள் மீது, காற்று என தேர் கடாவி—வாயுவைப் போல (வேகமாகத்) தேரைச் செலுத்தி, கடும் சமர் புரிந்த வெய்யோன்—கடும் போரைச் செய்த சூரியனது, மாற்ற அரும் செம் பொன் மார்பில் வச்சிர பதக்கம்—நீக்குதற்கரிய செம் பொன்னாலாகிய மார்பிலணியப்பட்ட வைரப் பதக்கமானது, இற்று மேல் திசை வீழ்ந்தது என்ன—அறுபட்டு மேற்குத் திக்கில் விழுந்தாற் போல, இளம் பிறை விளங்கிற்று—இளஞ் சந்திரன் பிரகாசித்தது எ—று.

மாற்றரும் பதக்கம் செம்பொற் பதக்கம் எனத் தனித்தனி இயையும். உதிக்கும் போதும் அத்தமிக்கும் போதும் மந்தேகரென்னுமசுரர் தடுக்கச் சூரியன் அவருடன் பொருது அந்தணராற் கொடுக்கப்படும் அர்க்கிய சலமாகிய ஆயுதத்தினால் வென்று செல்பவனாதலின் இங்ஙனம் வருணித்தார். மாற்று அரும் எனப் பிரித்து மாற்றுயர்ந்த வென வுரை கூறினுமாம். (6)

கானத்தின் ஏனம் ஒத்த கனையிருட் சூழல் மற்றவ்
வேனத்தின் எயிற்றை யொத்த திளம்பிறை அதனைப் பூண்ட
கோனொத்த தண்டம் அந்தக் கூரெயி றுகுத்த முத்தந்
தானொத்து விளங்கு கின்ற தாரகா கணங்க ளெல்லாம்.

இ—ள்: கனை இருள் சூழல் கானத்தின் ஏனம் ஒத்த—நெருங்கிய இருளின் கூட்டம் காட்டிலுள்ள பன்றியை நிகர்த்தது, இளம் பிறை அ ஏனத்தின் எயிற்றை ஒத்தது—இளஞ் சந்திரன் அப்'பன்றியின் கோட்டை நிகர்த்தது, அண்டம் அதனை பூண்ட கோன் ஒத்தது—ஆகாயம் அந்தப் பன்றிக் கோட்டையணிந்த சிவ பிரானை நிகர்த்தது, தாரகா கணங்கள் எல்லாம் அந்த கூர் எயிறு உகுத்த முத்தம் ஒத்து விளங்குகின்ற—நக்ஷத்திரக் கூட்டங்களெல்லாம் கூர்மையாகிய அந் தப் பன்றிக்கோடு சிதறிய முத்துக்களைப் போன்று ஒளிர்கின்றன எ—று.

காட்டுப்பன்றி கரு நிற முடைத்தாதலின் இருளுக்கும், அதன் கோடுகள் வெண்ணிறமும் வளைவு முடையவாகலின் இளம் பிறைக்கும் சிவபிரான் செந் நிற முடையராதலானும் பன்றிக் கோட்டைப் பூண்டாராதலானும் பிறையுடன்

கூடிச் செந்நிறமாயிருந்த வானத்திற்கும், முத்துக்கள் பெரும்பாலும் வெண்ணிற மமைந்தனவாய்ச் சிதறிக் கிடத்தலியல்பாதலின் நக்ஷத்திரங்கட்கும் உவமையாயின. தம் முளியை புடையனவாகிய பொருள்களையெடுத்து இங்ஙனமுவமித்தலின் இயைபுவமை. (7)

அல்லிது போந்த காலை ஆரமா மாலை யென்னக்
கல்லென அருவி தூங்குங் கடவுள்வெற் பொருசா ரெய்தி
மெல்லிதழ் வனசத் தேவும் விண்டுவும் விண்ணின் தேவும்
பல்லிமை யோருஞ் செவ்வேள் பதமுறை தொழுது சொல்வார்.

இ—ள்: அல் இது போந்த காலை—இவ்வியல்பினதாகிய இராக்காலம் வந்த பொழுது, மெல் இதழ் வனச தேவும்—மென்மையான இதழ்களையுடைய செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவரும், விண்டுவும்—திருமாலும், விண்ணின் தேவும்—சுவர்க்க லோகத்திற்குத் தலைவனாகிய இந்திரனும், பல் இமையோரும்—ஏனைய பல தேவர்களும், ஆர மா மாலை என்ன கல் என அருவி தூங்கும் கடவுள் வெற்பு ஒரு சார் எய்தி—பெரிய முத்துமாலையைப் போலக் கல்லென்னுங் குறிப் பொலியுடன் அருவி நீரிழிகின்ற தேவகிரியினோர் பக்கத்திற் போய், செவ்வேள் பதம் முறை தொழுது—முருகக்கடவுளது திருவடிகளை முறைப்படி வணங்கி, சொல்வார்—இவ்வாறு விண்ணப்பஞ் செய்வார்கள் எ—று.

ஆரமா மாலையென்ன தூங்கும் என இயைக்க. வெண்ணிற முடைத்தாய் இடை விடாதிழிதலின் ஆரமாலை அருவிக் குவமையாயிற்று. இவ்வுவமையால் அம் மலை மிகுந்த வளமுடைத்தென்பது போதரும். (8)

வன்கணே யுடைய சூர்பின் வருத்திட இந்நாள் காறும்
புன்கணே யுழந்தே யன்னோன் பொருப்பொடு முடியச் செற்றாய்
உன்கணே வழிபா டாற்ற உன்னினம் இன்ன வெற்பின்
தன்கணே இறுத்தல் வேண்டுந் தருதியிவ் வரம தென்றார்.

இ—ள்: வன்கணே உடைய சூர் பின் வருத்திட—தறுகண்மையினையே தன் குணமாகவுடைய சூரபன்மனது தம்பியாகிய தாரகாசுரன் வருத்த, இ நாள் காறும் புன்கணே உழந்தேம்—இத்தினம் வரையுந் துன்பத்தையே அனுபவித்தேம், அன்னோன் பொருப்பொடு முடிய செற்றாய்—அவ்வசுரன் தனதரணை கிரவுஞ்ச மலையோடும் அழியும்படி சங்கரித்தீர், உன் கண் வழிபாடு ஆற்ற உன்னினம்—ஆதலாற் சிறியேங்கள் தேவரீருக்குப் பூசை செய்ய நினைத்தேம், இன்ன வெற்பின் தன் கண் இறுத்தல் வேண்டும்—இந்த மலையிலெழுந்தருளியிருத்தல் வேண்டும், இ வரம் தருதி என்றார்—இந்த வரத்தைத் தந்தருள்கவென்று பிரார்த்தித்தார்கள் எ—று.

ஏகாரங்களுள் முன்னைய இரண்டும் பிரிநிலை; பின்னைய இரண்டும் அசை. உன் கண்-உருபுமயக்கம். (9)

பசைந்திடும் ஆர்வங் கொண்ட பண்ணவர் இனைய தன்மை
இசைந்தனர் வேண்டு மெல்லை எஃகுடை அண்ணல் அங்கண்
அசைந்திடு தன்மை யுன்னி அருள்செய வதுகண் டன்னோர்
தசைந்துமெய் பொடிப்பத் துள்ளித் தணப்பில்பே ருவகை பூத்தார்.

இ—ள்: பசைந்திடும் ஆர்வம் கொண்ட பண்ணவர் இசைந்தனர் இனைய தன்மை வேண்டும் எல்லை—குழைந்த அன்பினையுடைய தேவர்கள் யாவரும் ஒருமித்து இவ்வாறு வேண்டுதல் செய்யும் பொழுது, எஃகு உடை அண்ணல்—வேலாயுதத்தை யேந்திய முருகக்கடவுள், அங்கண் அசைந்திடு தன்மை உன்னி அருள் செய—அவ்விடத் தெழுந்தருளியிருத்தலைத் திருவுளங் கொண்டு கருணை செய்ய, அன்னோர் அதுகண்டு—அத் தேவர்கள் அதனைப் பார்த்து, மெய் தசைந்து பொடிப்ப துள்ளி தணப்பு இல் பேர் உவகை பூத்தார்—சரீரம் பூரித்துப் புளக முறக் குதித்துக் குறைவில்லாத பெரு மகிழ்ச்சியைப் பெற்றார்கள் எ—று.

பசைந்திடு மார்வம்-பிரியாது தொடருமன்பு. அசைதல் - இளைப்பாறியிருத்தல். (10)

ஒண்ணில வுமிழும் வேலோன் ஒலிகழற் றானையோடுங்
கண்ணனை முதலா வுள்ள கடவுளர் குழுவி னோடும்
பண்ணவர் கிரிமேற் சென்று பாங்கரில் தொழுது போந்த
விண்ணவர் புனைவன் றன்னை விளித்திவை புகல லுற்றான்.

இ—ள்: ஒள் நிலவு உமிழும் வேலோன்—பேரொளியைக் காலும் வேற் படையை யேந்திய முருக்ககடவுள், ஒலி கழல் தானையோடும்—ஒலிக்கின்ற வீரக் கழலையுடைய சேனைகளோடும், கண்ணனை முதல் ஆ உள்ள கடவுளர் குழுவினோடும்—திருமாலை முதலாகவுடைய தேவர் கூட்டத்தோடும், பண்ணவர் கிரி மேல் சென்று—தேவகிரியிற் போய், பாங்கரில் தொழுது போந்த விண்ணவர் புனைவன் தன்னை விளித்து—பக்கத்திற் கைதொழுது கொண்டு வந்த தேவத்தச்சனையழைத்து, இவை புகலலுற்றான்—இவ் வாசகங்களைத் திருவாய் மலர்வார் எ—று.

ஒள் நிலவு-பிரகாசிக்கின்ற ஒளி: ஒலி கழல்-வினைத்தொகை. (11)

புகலுறுஞ் சூழ்ச்சி மிக்கோய் புங்கவ ராயு ளோருந்
தொகலுறு கணர்கள் யாருந் துணைவரும் யாமும் மேவ
அகலுறும் இனைய வெற்பின் அருங்கடி நகர மொன்றை
விகலம தின்றி இன்னே விதித்தியால் விரைவின் என்றான்.

இ—ள்: புகலுறும் சூழ்ச்சி மிக்கோய்—வியந்து சொல்லத்தக்க உபாயபுத்தியிற் சிறந்தவனே!, புங்கவராய் உளோரும் தொகல் உறு கணர்கள் யாரும் துணை வரும் யாமும் மேவ—தேவர்களாயுள்ளவர்களும் தொகுதியாகிய பூதர்கள்யாவரும் எமது தம்பிமாரும் யாமுமிருத்தற்கு, அகல் உறும் இனைய வெற்பின்—விசாலமான இந்த மலையில், அரும் கடி நகரம் ஒன்றை—அருமையாகிய சிறந்த ஒருநகரத்தை, விகலமது இன்றி—குறைபாடின்றி, இன்னே—இப்பொழுது, விரைவின் விதித்தி என்றான்—சீக்கிரத்திற் படைப்பாயாகவென்று திருவாய்மலர்ந் தருளினார் எ—று.

மேவ விதித்தி என இயையும். பிறராற்செய்து முடித்தற்கரிய தொழிற்சித்திரங்களையெல்லாமெளிதிலமைத்தற்கேற்ற விவேகபுத்தியுடையாயென்பார் 'புகலுறுஞ்சூழ்ச்சிமிக்கோய்' எனவும், நாமாத்திரமன்று நம்பரிசனருமொருங்குவசித்தற் கேற்றவாறென்பார் 'புங்கவராயுளோருந் தொகலுறுகணர்கள்யாருந்துணைவரும் யாமுமேவ' எனவும் அங்ஙனம் பெரிதாயமைத்தற்கேற்ற இடப்பரப்பினையுடையதென்பார் 'அகலுறுமினையவெற்பு' எனவும், அந்நகர் பொன்னகரினுஞ்

சிறந்த பொற்புடைத்தாதல் வேண்டுமென்பது போதர 'அருங்கடிநகரம்' எனவும், சிற்ப நூலிற்கூறியவுறுப்புக்களிற் சிறிதுங்குறைவுபடாதென்பார் 'விகலமதின்றி' எனவும் கூறினர். (12)

## வேறு

குழங்கல் வேட்டுவக் கோதையர் ஆடலுங்
கழங்கு நோக்கிக் களிப்பவன் மற்றிது
வழங்கு மெல்லை வகுப்பனென் றன்னவன்
தழங்கு நூபுரத் தாள்பணிந் தேகினன்.

இ—ள்: குழங்கல் வேட்டுவ கோதையர் ஆடலும் கழங்கும் நோக்கி களிப்பவன்—குழங்கல்மாலையையணிந்த வேட்டுவமாதர்களது விளையாட்டையுங் கழங்காடலையும் பார்த்து மகிழ்பவராகிய முருகக்கடவுள், இது வழங்குங் எல்லை—இவ்வாசகத்தையருளிச்செய்தபொழுது, அன்னவன்-அந்தத்தேவத்தச்சன், வகுப்பன் என்று—அங்ஙனமேயமைப்பேனென்றுகூறி, தழங்கும் நூபுர தாள் பணிந்து ஏகினன்—ஒலிக்கின்றசிலம்புகளையணிந்த அவரது பாதங்களை வணங்கிச்சென்றான் எ—று.

குழங்கல்-மாலைவிசேடம் ''குழங்கன்மாலைமல்லுப்பூத்தகன்றமார்பீர்'' என்றார் பிறரும். ஆடல்கூத்தெனவுரைப்பாருமுளர். அம்மலையில் வசித்தற்குத்திருவுளம்பற்றியதற்கிணங்கக் குறிஞ்சிநிலத்து நிகழுமாடல்களைநோக்கி மகிழ்தலைப் புணர்த்தி 'குழங்கல்வேட்டுவக்கோதையராடலுங்கழங்கு நோக்கிக்களிப்பவன்' என்றார். (13)

மகர தோரணம் வாரியின் மல்கிய
சிகர மாளிகை செம்பொனின் சூளிகை
நிகரில் பற்பல ஞெள்ளல்கள் ஈண்டிய
நகர மொன்றினை யாயிடை நல்கினன்.

இ—ள்: மகர தோரணம் வாரியில் மல்கிய சிகர மாளிகை—மகர தோரணங்கள் வாயில்களினிறையப் பெற்ற தூபியையுடைய மாளிகைகளும், செம்பொனின் சூளிகை — செம்பொன்னாலாகிய சூளிகை, நிகர் இல் பற்பல ஞெள்ளல்கள் — ஒப்பில்லாத பல பல வீதிகளும், ஈண்டிய—நெருங்கப் பெற்ற, நகரம்ஒன்றினை—ஒரு நகரத்தை, ஆயிடை நல்கினன்—அவ்விடத்தமைத்தான் எ—று.

மல்கிய மாளிகை என இயையும். மகர தோரணம் முன்னர்த் திருநகரப் படலத்தில் விளக்கப்பட்டது. (14)

அவ்வ ரைக்கண் அகன்பெரு நொச்சியுட்
கைவல் வித்தகக் கம்மியர் மேலவன்
எவ்வெ வர்க்கும் இறைவன் இருந்திடத்
தெய்வ தக்குல மொன்றுசெய் தானரோ.

இ—ள்: கைவல் வித்தக கம்மியர் மேலவன்—கைத்தொழிலில் வல்ல நுண்மதியினையுடைய தேவத்தச்சன், அ வரை கண்—அந்தத் தேவகிரியின் கண், அகன் பெரும் நொச்சியுள்—அகன்ற பெரிய மதிலினுள், எ எவர்க்கும் இறைவன் இருந்திட—எத்தகை மேம்பாடுடையார்க்குந் தலைவராகிய முருகக்கடவுள் வீற்றிருக்கும்படி, தெய்வத குலம் ஒன்று செய்தான்—ஓர் தேவாலயத்தை யமைத்தான் எ—று.

கை-ஆகுபெயர். கம்மியர் மேலவன்-கைத் தொழிலாளருட் சிறந்தவன். எவ் வெவர்க்குமிறைவனிருந்திட என்றதனுல் மிக்க சிறப்பமைய என்பது போதரும். (15)

மாற்ற ரும்பொன் வரையுள் மணிக்கிரி
தோற்றி யென்னச் சுடர்கெழு மாழையின்
ஏற்ற கோட்டத் திழைத்தனன் கேசரி
ஆற்று கின்ற அரதனப் பீடிகை.

**இ—ள்:** மாற்ற அரும் பொன் வரையுள் மணி கிரி தோற்றி என்ன—விலக்குதற்கரிய (சிறந்த) பொன் மலையினுள்ளே மாணிக்க மலையொன்று காணப்பட்டாற்போல, சுடர் கெழு மாழையின் ஏற்ற கோட்டத்து—ஒளி விளங்குகின்ற பொன்னுலியற்றப்பட்ட கோயிலினுள், கேசரி ஆற்றுகின்ற அரதன பீடிகை இழைத்தனன் — சிங்கத்தாற் சுமக்கப்படுகின்ற இரத்திஞசனத்தைச் செய்து வைத்தான் எ—று.

தோற்றியென்ன இழைத்தனன் என இயையும். மாணிக்க மலையை யுவமை கூறியதனுற் சிங்காசனம் மாணிக்க ரத்தினத்தாலானமை போதரும். ரத்நம் என்னும் வடமொழி அரதனமென விகாரமாயிற்று. மாற்று அரும் பொன் எனப் பிரித்து மாற்றுயர்ந்த பொன்னென வுரை கூறினுமாம். (16)

இனைய தன்மையும் ஏனவும் நல்கியே
மனுவின் தாதை வருதலும் மள்ளர்தம்
அனிக மோடும் அமரர்கள் தம்மொடும்
முனையின் வேற்படை மொய்ம்பன் அங் கேகினுன்.

**இ—ள்:** மனுவின் தாதை—மனுவென்னுங் கம்மியனது பிதாவாகிய தேவத் தச்சன், இனைய தன்மையும் ஏனவும் நல்கி வருதலும்—இத் தன்மையுடையவைகளையும் பிறவற்றையும் படைத்துத் திரும்பி வருதலும், மள்ளர் தம் அனிகமோடும் அமரர்கள் தம்மொடும்—சேனை வீரர்களுடனுந் தேவர்களுடனும், முனையின் வேல் படை மொய்ம்பன் அங்கு ஏகினுன்—கூரிய வேலாயுதத்தையேந்திய வலியுடையராகிய முருகக்கடவுள் அந் நகரத்துட் பிரவேசித்தார் எ—று.

மள்ளர் தம் அனிகமோடும்=அனிக மள்ளர் தம்மோடும். மனுவென்பானுக்குத் தேவத்தச்சன் பிதாவென்பதை ''தொட்டாமனுத் தொன்மயனைத்தனது சுதரென்ன முன்ன முதவிக்-கட்டாமரைக்குள் விதிபோல நல்கு கலை கற்றுளானை'' என மேல் தக்ஷகாண்டத்துச் சாலை செய்படலத்திற் கூறுதலாலுமுணர்க-மொய்ம்பு-புயமுமாம் (17)

அறுமு கத்தவன் அந்நக ரேகியே
துறும லுற்றிடுந் தொல்பெருந் தானையை
இறுதி யற்ற இருக்கைகொள் ஆவணம்
நிறுவ லுற்று நிகேதனத் தெய்தினுன்.

**இ—ள்:** அறு முகத்தவன்-ஆறுதிருமுகங்களையுடைய முருகக்கடவுள், அ நகர் ஏகி—அந்நகரத்துட் பிரவேசித்து, துறுகல் உற்றிடும் தொல் பெரும் தானையை இறுதி அற்ற இருக்கை கொள் ஆவணம் நிறுவல் உற்று—நெருக்கமாகிய பழைய

பெரிய பூதசேனைகளை அளவற்றமாளிகைகளையுடைய வீதிகளில்நிறுத்தி, நிகேதனத்து எய்தினுன்— (தமக்காயமைக்கப்பட்டிருந்த) கோயிலினுட்சென்றருளினுர் எ—று.

பெருந்தொகைச்சேனையென்பார் 'துறுமலுற்றிடுந்தொல்பெருந்தானை' எனவும் அவையெல்லாந்தங்கியிருத்தற்கேற்ற வீதியென்பார் 'இறுதியற்றவிருக்கைகொளாவணம்' எனவும் கூறினுர். மேற்செய்யுளில் 'தணப்பரும் வீரரும் சூழ்தர ஏகினுன்' எனக்கூறுதலால் ஈண்டுத்தானையென்றது பூதசேனையை. (18)

இரதம் விட்டங் கிழிந்துபொற் பாதுகை
சரணம் வைத்துத் தணப்பரும் வீரருஞ்
சுரரு முற்றுடன் சூழ்தரத் துங்கவேல்
ஒருவன் மற்றவ் வுறையுளின் ஏகினுன்.

**இ—ள்:** துங்க வேல் ஒருவன்—உயர்ச்சிபொருந்திய வேலாயுதத்தையுடைய ஒப்பற்ற முருகக்கடவுள், இரதம் விட்டு அங்கு இழிந்து—ஏறிவந்த தேரை விட்டு அவ்விடத்திலிறங்கி, பொன் பாதுகை சரணம் வைத்து—(வீரவாகுதேவராலிடப்பட்ட) பொன்னுலாகிய பாதரக்ஷையில் திருவடிகளைத் தூக்கிவைத்து, தணப்பு அரும் வீரரும் சுரரும் உற்று உடன் சூழ்தர—பிரிதலில்லாத இலக்கத்தொன்பது வீரர்களுந் தேவர்களும் அணுகித்தம்முடன்சூழ்ந்துவர, அ உறையுளின் ஏகினுன்—அந்தத்திருக்கோயிலினுட்சென்றருளினுர் எ—று.

அங்கென்றது கோயில்வாயிலை. பூதசேனையைப்போலப் புறத்தேநிறுத்தற்பாலரல்லரென்பதுபோதர 'தணப்பரும்வீரர்' எனவும், முன் வருணிக்கப்பட்ட கோயிலென்பது போதர 'அவ்வுறையுள்' எனவும் கூறினுர். (19)

ஊறில் வெய்யவர் யாரும் ஒரோவழிச்
சேற லெய்திச் செறிந்தென வில்விடு
மாறில் செஞ்சுடர் மாமணிப் பீடமேல்
ஏறி வைகினன் யாரினும் மேலையோன்.

**இ—ள்:** ஊறு இல் வெய்யவர் யாரும் ஒரோவழி சேறல் எய்தி செறிந்து என—மறுவில்லாத சூரியர்களெல்லாம் ஓரிடத்திற்சென்று நெருங்கியதன்மையைப்போல, வில் விடும்—ஒளிவீசுகின்ற, மாறு இல் செம் சுடர் மா மணி பீட மேல்—ஒப்பில்லாத செவ்வொளியையுடைய மாணிக்கரத்தினத்தாலான ஆசனத்தின்மேல், யாரினும் மேலையோன் ஏறி வைகினன் — எவரினுமேலவராகிய முருகக்கடவுள் இவர்ந்து வீற்றிருந்தார் எ—று.

ஒளிசிறிதுங்குறைவுபடாமைவேண்டி 'ஊறில்வெய்யவர்' என்ருர். யாருமென்றதனுற் பன்னிரு சூரியரையும் அவரது பரிவாரங்களையுங்கொள்க. எல்லாவண்டத்துமுள்ள எல்லாச்சூரியருமெனினுமாம். (20)

பொழுது மற்றதிற் பூவினன் ஆதியாம்
விழுமை பெற்றிடும் விண்ணவர் யாவருங்
குழும லுற்றுக் குமரனை அவ்விடை
வழிப டத்தம் மனத்திடை உன்னினுர்.

இ—ள்: பொழுது அதில்—அந்தச்சமயத்தில், பூவினன் ஆதியா விழுமை பெற்றிடும் விண்ணவர் யாவரும் அ இடை குழுமலுற்று—பிரமாமுதலாகவுள்ள சிறப்பினையுடைய தேவர்களெல்லோரும் அவ்விடத்திலொருங்குகூடி, குமரனை வழிபட தம் மனத்திடை உன்னினர்—முருகக்கடவுளைப்பூசிக்குமாறு தங்கள்மனத்தில் நினைத்தார்கள் எ—று.

பொழுது அதில்=அப்பொழுதில். (21)

புங்க வன்விழி பொத்திய அம்மைதன்
செங்கை தன்னிற் சிறப்பொடு தோன்றிய
கங்கை தன்னைக் கடவுளர் உன்னலும்
அங்கண் வந்ததை அப்பெரு மாநதி.

இ—ள்: கடவுளர்—தேவர்கள், புங்கவன் விழி பொத்திய அம்மை தன் செம் கை தன்னில் சிறப்பொடு தோன்றிய கங்கை தன்னை உன்னலும்— சிவபிரானது கண்களைமூடிய உமாதேவியாரது சிவந்த திருக்கைவிரல்களினின்று சிறப்புடனே தோன்றிய கங்கைநதியை வருமாறு நினைக்க, அ பெரு மா நதி— அந்தப் பெரிய சிறந்த நதி, அங்கண் வந்தது—அவ்விடத்து வந்தது எ—று.

கங்கை நதியின் வரலாற்றை மேல் தக்ஷ காண்டத்துத் ததீசி யுத்தரப் படலத்திற் காண்க. ஐ-சாரியை. (22)

சோதி மாண்கலன் தூயன பொற்றுகில்
போது சாந்தம் புகைமணி பூஞ்சுடர்
ஆதியாக அருச்சனைக் கேற்றன
ஏதும் ஆயிடை எய்துவித் தாரரோ.

இ—ள்: சோதி மாண் கலன்—ஒளி பொருந்திய சிறந்த ஆபரணங்களும், தூயன பொன் துகில்—தூய்மையினையுடைய பீதாம்பரங்களும், போது—மலர்களும், சாந்தம்—சந்தனக் குழம்பும், புகை—தூபமும், மணி—மணியும், பூசுடர்—பொலிவாகிய தீபமும், ஆதி ஆக—முதலாக, அருச்சனைக்கு ஏற்றன ஏதும்— பூசைக்கேற்ற உபகரணங்களெலலாவற்றையும், ஆயிடை எய்துவித்தார்—அவ்விடத்தே வருவித்தார்கள் எ—று.

சாந்தம்-ஆகுபெயர். (23)

அண்டர் தொல்லை அமுத மிருத்திய
குண்ட முற்ற குடங்கர் கொணர்ந்திடா
மண்டு தெண்புனல் வானதி தன்னிடை
நொண்டு கொண்டனர் வேதம் நுவன்றுளார்.

இ—ள்: அண்டர் தொல்லை அமுதம் இருத்திய குண்டம் உற்ற குடங்கர் கொணர்ந்திடா—தேவர்கள் பழைய அமிர்தத்தை வைத்த ஆழமாகிய குடங்களைக் கொண்டு வந்து, வான் நதி தன் இடை—தேவகங்கையில், வேதம் நுவன்று உளார்—வேத மந்திரங்களை யுச்சரித்தவர்களாய், மண்டு தெண் புனல் கொண்டு கொண்டனர்— நிறைந்த தெளிந்த தீர்த்தத்தை முகந்து கொண்டார்கள் எ—று.

மிகச் சிறந்த குடமென்பார் 'அமுதமிருத்திய-குடங்கர்' எனவும், கலங்குத லின்றித் தெளிந்த நீரை நிறைய முகந்தனராதலின் 'மண்டு தெண்புனல்-மொண்டு கொண்டனர்' எனவும் கூறினர். அமுதம்-அமிர்தமென்னும் வட மொழியின் றிரிபு. (24)

அந்த வெல்லை அயன்முதற் றேவரும்
முந்து கின்ற முனிவருஞ் சண்முகத்
தெந்தை பாங்கரின் ஈண்டி யவன்பெயர்
மந்திரங் கொடு மஞ்சன மாட்டினர்.

இ—ள்: அந்த எல்லை—அச் சமயத்தில், அயன் முதல் தேவரும்—பிரமா முதலிய தேவர்களும், முந்துகின்ற முனிவரும்—முதன்மை பொருந்திய முனிவர் களும், சண்முகத்து எந்தை பாங்கரின் ஈண்டி—ஆறு திருமுகங்களையுடைய எம் பரம பிதாவாகிய முருகக்கடவுளது பக்கத்திற் செறிந்து, அவன் பெயர் மந் திரம் கொடு மஞ்சனம் ஆட்டினர்—அவரது திருநாமமமைந்த வேத மந்திரங் களைக் கூறித் தீர்த்தத்தை அபிடேகித்தார்கள் எ—று. (25)

வெய்ய வேற்படை விண்ணவற் கின்னணம்
ஐய மஞ்சனம் ஆட்டிமுன் சூழ்ந்திடுந்
துய்ய பொன்னந் துகிலினை நீக்கியே
நொய்ய பஃறுகில் நூதனஞ் சாத்தினர்.

இ—ள்: வெய்ய வேற்படை விண்ணவற்கு—கொடிய வேலாயுதத்தை யுடைய முருகக்கடவுளுக்கு, இன்னணம் ஐய மஞ்சனம் ஆட்டி—இவ்வாறு அழ கிய திருமஞ்சனத்தை அபிடேகஞ் செய்து, முன் சூழ்ந்திடும் துய்ய பொன்னம் துகிலினை நீக்கி—முன் தரித்திருந்த தூய்மையாகிய பீதாம்பரத்தைக் கழித்து, நொய்ய பல் துகில் நூதனம் சாத்தினர்—மிருதுவாகிய பல வஸ்திரங்களைப் புதிதாகத் தரித்தார்கள் எ—று.

பஃறுகில் என்றது இரண்டு வஸ்திரங்களை. இன்ன வண்ணமென்பது இன்னணமென மருவிற்று. துட்டர்களை யொறுத்தலின் 'வெய்ய வேல்' என் றார். (26)

வீற்றொர் சீய வியன்றவி சின்மிசை
ஏற்றி வேளை இருத்தி அவன்பெயர்
சாற்றி மாமலர் சாத்தித் தருவிடைத்
தோற்று பூவின் தொடையலுஞ் சூட்டினர்.

இ—ள்: வேளை—முருகக்கடவுளை, வீற்று ஓர் சீய வியன் தவிசின் மிசை ஏற்றி இருத்தி—வேறொரு பெரிய சிங்காசனத்திலெழுந்தருளியிருக்கச் செய்து, அவன் பெயர் சாற்றி—அவரது திருநாமங்களைக் கூறி, மா மலர் சாத்தி— சிறந்த மலர்களைச் சூட்டி, தரு இடைதோற்று பூவின் தொடையலும் சூட்டி னர்—கற்பகதருவிற் றோன்றிய பூவினாலாகிய மாலையையுஞ் சாத்தினார் கள் எ—று.

உம்மை எச்சம், தரு தலைமை பற்றி ஈண்டுக் கற்பகத்தையுணர்த்தும். முன் னிருந்த ஆசனத்தினுஞ் சிறந்ததாகலின் 'வியன்றவிசு' எனவும், விலக்கப்பட்

டனவற்றைத் தவிர்த்து விதிக்கப்பட்டனவாகத் தெரிந்து கொள்ளப்பட்ட மல ரென்பார் 'மாமலர்' எனவும் கூறினர். (27)

செய்ய சந்தனத் தேய்வைமுன் கொட்டினர்
ஐய பாளிதம் அப்பினர் நாவியுந்
துய்ய நானமுந் துன்னமட் டித்தனர்
மெய்யெ லாமணி மேவரச் சாத்தினர்.

**இ—ள்:** செய்ய சந்தன தேய்வை முன் கொட்டினர்—செம்மையாகிய சந் தனக் குழம்பை முதலிற் பூசினர்கள், ஐய பாளிதம் அப்பினர்—அழகிய பச் சைக் கர்ப்பூரத்தை அப்பினர்கள், நாவியும் துய்ய நானமும் துன்ன மட்டித் தனர்—புனுகையுந் தூய்மையாகிய கஸ்தூரியையும் மிகப் பூசினர்கள், மெய் எலாம் அணி மேவர சாத்தினர்—திருமேனி முழுவதிலும் ஆபரணங்களை இயை யச் சாத்தினர்கள் எ—று.

அழகுற என்பார் 'மேவர' என்றார். (28)

சந்து காரகில் தண்ணென் கருப்புரங்
குந்து ருக்கமொண் குக்குலு வப்புகை
செந்த ழற்சுடர் சீர்மணி ஆர்ப்பொடு
தந்து பற்றித் தலைத்தலை சுற்றினர்.

**இ—ள்:** சந்து—சந்தனமும், கார் அகில்—கரிய அகிலும், தண் என் கருப் புரம்—பச்சைக் கர்ப்பூரமும், குந்துருக்கம்—குந்துருக்கமும், ஒண் குக்குலுவ புகை—ஒளி பொருந்திய குங்குலியமு மென்னுமிந்த ஐந்து பொருள்களையுஞ் சேர்த்தமைக்கப் பெற்ற தூபத்தையும், செம் தழல் சுடர்—சிவந்த நிறத்தை யுடைய தீபத்தையும், சீர் மணி ஆர்ப்பொடு தந்து பற்றி—சிறந்த மணியோசை யுடனெடுத் தேந்தி, தலைத் தலை சுற்றினர்—இடமிடங்கடோறுஞ் சுற்றினர் கள் எ—று.

தழற்சுடர்-இரு பெயரொட்டு. தீபாராதனை செய்யும் வழி முகமுங் கண் களும் மூக்கு நுனியுங் கழுத்தும் நெஞ்சும் பாதங்களுமாகிய உறுப்புக்கட்கு நேர் படக் காட்டி ஒவ்வோர் சுற்றும் பிரணவாகாரமமைய மூன்று முறை வலமாய்ச் சுற்றவேண்டு மென்னும் விதிப்படி சுற்றினராதலின் 'தலைத்தலை சுற்றினர், என்றார். (29)

இத்தி றத்தவும் ஏனவும் எஃகவேற்
கைத்த லத்துக் கடவுட்கு நல்கியே
பத்தி மைத்திற னாற்பணிந் தேத்தினர்
சித்தி சங்கற்பஞ் செய்திடுஞ் செய்கையோர்.

**இ—ள்:** இ திறத்தவும் ஏனவும்—இங்கே கூறிய உபசாரங்களையும் பிற வுப சாரங்களையும், எஃக வேல் கைத்தலத்து கடவுட்கு நல்கி—கூரிய வேலாயுதத்தை யேந்திய திருக்கரத்தையுடைய முருகக்கடவுளுக்குச் செய்து, சித்தி சங்கற்பம் செய்திடும் செய்கையோர்—காரிய சித்தியை உறுதிப்படுத்திய தன்மையையுடைய வர்களாய், பத்திமை திறனால் பணிந்து ஏத்தினர்—அன்பு மேலீட்டினால் வணங் கித் துதித்தார்கள் எ—று.

ஏனவென்றது நைவேத்திய முதலியவற்றை. பத்திமையென்பதில் மை-பகுதிப் பொருள் விகுதி. சூரனைச் சங்கரித்தலும் தேவரைச் சிறை மீட்டலுமாகிய சித்திகள் ஒரு தலையாற் கிடைக்குமென்னு முறுதிப்பாடுடையராய் வணங்கினராதலின் 'சித்தி சங்கற்பஞ் செய்திடுஞ் செய்கையோர்' என்றார். இதற்குச் சித்தியை யெண்ணிச் சங்கற்பஞ் செய்தவர்களாயெனவும் பொருள் கூறுவர். (30)

தேவு கொண்ட சிலம்பினில் பண்ணவர்
ஏவ ருங்குழீஇ யின்னணம் பூசனை
யாவ தாற்ற வதுகொண் டமர்ந்தனன்
மூவி ரண்டு முகனுடை மொய்ம்பினோன்.

இ—ள்: தேவு கொண்ட சிலம்பினில்—தேவகிரியில், பண்ணவர் ஏவரும் குழீஇ—தேவரனைவரு மொருங்கு கூடி, இன்னணம் பூசனை ஆவது ஆற்ற—இவ்வாறு பூசையைச் செய்ய, மூவிரண்டு முகன் உடை மொய்ம்பினோன்—ஆறு திருமுகங்களையுடைய வீரராகிய முருகக்கடவுள், அது கொண்டு அமர்ந்தனன்—அப் பூசையை யேற்றுக் கொண்டெழுந்தருளியிருந்தார் எ—று.

குழீஇ-குழுமி என்பதன் விகாரம். பூசனையாவது என்பதில் ஆவது பகுதிப் பொருள் விகுதி. மொய்ம்பு-ஆகு பெயராய் வீரத்தை யுணர்த்திற்று. (31)

அமரர் வெற்பில் அயிற்படை யேந்திய
விமல னுற்றது சொற்றனம் மேலினிச்
சமரி டைப்படு தாரகன் தந்திடு
குமரன் உற்றது மற்றதுங் கூறுகேம்.

இ—ள்: அயில் படை ஏந்திய விமலன்—வேலாயுதத்தைத் தாங்கிய முருகக் கடவுள், அமரர் வெற்பில் உற்றது சொற்றனம்—தேவகிரியிலெழுந்தருளிய சரித்திரத்தைக் கூறினோம், மேல் இனி—இனி, சமர் இடை படு தாரகன் தந்திடு குமரன் உற்றதும் மற்றதும் கூறுகேம்—போர்க்களத்திலிறந்த தாரகாசுரன் பெற்ற புதல்வனாகிய அசுரேந்திரன் (ஆசுரபுரத்தினின்று) மீண்டு வந்ததையும் பிறவற்றையுஞ் சொல்வேம் எ—று.

மேல் இனி-ஒரு பொருட் கிளவிகள். மற்றது என்றது தகனக்கிரியை முடித்ததும் மகேந்திரபுரத்திற்குப் போய்த் தன் பெரிய தந்தையாகிய சூரபன்மனுக்குணர்த்தியதும் முதலாயின.

தேவகிரிப் படலம் முற்றிற்று.

ஆகத்திரு விருத்தம் 1563

# 22. அசுரேந்திரன் மகேந்திரஞ் செல்படலம்.

அசுரேந்திரன் தன் பிதாவின் மரணத்தைச் சூரபன்மனுக்குத் தெரிவிக்கும் பொருட்டு வீரமகேந்திரபுரத்திற்குச் சென்ற சரித்திரத்தைக் கூறுதலினிப் பெயர்த்தாயிற்று.

## இப்படலப்பொழிப்பு.

தாரகாசுரனது முதன் மனைவியாகிய சவுரியென்பாளும் மற்றைய மனைவி யரும் கணவனிறந்ததைக் கேள்வியுற்றுப் போர்க்களத்திற் சென்று அவன் மேல் விழுந்து புலம்பினர். சிங்கமுகாசுரனைக் காணும் பொருட்டு ஆசுரபுரிக்குச் சென் றிருந்த அசுரேந்திரனும் வந்து பிதாவிறந்ததையறிந்து பலவாறு புலம்பிப் பின்னொருவாறு தெளிந்து அவனுடலைத் தகனஞ் செய்தனன். உடனே மனை வியருஞ் சககமனஞ் செய்தனர். பின் அசுரேந்திரன் மகேந்திர புரத்தையடைந்து பெரியதந்தையாகிய சூரபன்மனுக்கு அந் நிகழ்ச்சிகளைக் கூறினன். அவனும் அந் நகரிலுள்ளாரனைவருங் கேட்டு அழுது புலம்பினர். பின் சூரபன்மனொரு வாறு தெளிந்து கோபமுற்று என்றம்பியைக் கொன்றவனை யானொரு கணத்தி லழித்து வருவேனென்று கூறிப் போர்க்குச் செல்ல முயன்று அமோகனென்னும் மந்திரி பலவாறு புத்தி கூறித் தடுக்கக் கோபந் தணிந்து பகைவரது திறமையை யறிந்து வருமாறு பல தூதுவரையேவி முன்போலரசிருந்தனன் என்பதாம்.

எந்தை குமரன் எறிந்ததனி வேற்படையாற்
றந்தி முகமுடைய தாரகன்றான் பட்டதனை
முந்துசில தூதர் மொழிய அவன்தேவி
அந்தமிலாக் கற்பிற் சவுரி அலக்கணுற்றாள்.

இ—ள்: எந்தை குமரன் எறிந்த தனி வேற்படையால்—எமது பரம பிதா வாகிய முருகக்கடவுளேவிய ஒப்பற்ற வேலாயுதத்தினால், தந்தி முகம் உடைய தாரகன் பட்டதனை—யானை முகத்தையுடைய தாரகாசுரனிறந்ததை, முந்து சில தூதர் மொழிய—விரைந்து சென்ற சில தூதர்கள் கூற, அவன் தேவி அந் தம் இலா கற்பில் சவுரி அலக்கண் உற்றாள்—அந்தத் தாரகனது முதன் மனைவி யாகிய அழிவற்ற கற்பினையுடைய சவுரியென்பவள் கேட்டுத் துயரத்தையடைந் தாள் எ—று.

தான்-அசை. சமர்க்களத்து நின்று தாரகனிறந்ததை யறிந்து வந்த தூது வர் பலருள் விரைந்து வந்த சிலரென்பார் 'முந்து சில தூதர்' என்றார். தார கன் றேவி பெயர் கவுரியென முதனூலிற் காணப்படுகின்றது. (1)

வாழ்ந்த துணைவியர்கள் மற்றுள்ளோர் எல்லோருஞ்
சூழ்ந்து பதைத்திரங்கத் துன்பத் துடனேகி
ஆழ்ந்த கடல்படியும் அம்மென் மயிலென்ன
வீழ்ந்து கணவன் மிசையே புலம்புறுவாள்.

இ—ள்: வாழ்ந்த துணைவியர்கள் மற்று உள்ளோர் எல்லோரும் சூழ்ந்து பதைத்து இரங்க—உடன் வாழ்ந்திருந்த மற்றைய மனைவியர் யாவரும் தன்னைச் சூழ்ந்து பதைத்துப் புலம்ப, துன்பத்துடன் ஏகி—துக்கத்துடன் போர்க்களத்திற் போய், ஆழ்ந்த கடல் படியும் அம் மென் மயில் என்ன—ஆழமாகிய சமுத்திரத்தில் மூழ்குகின்ற அழகிய மெல்லிய மயிற் பறவையைப் போல, கணவன் மிசை வீழ்ந்து—நாயகன் மேல் விழுந்து, புலம்புறுவாள்—(பின்வருமாறு) புலம்புவாள் எ—று.

இருவர் யாக்கையுங் கருநிறமுடையனவாதலின் முறையே கடலுக்கும் மயிலுக்கும் உவமையாயின. சமர்க்களத்திற் கிடந்த தாரகனது உடலின் மேற் சவுரி ஓடிப்போய் வீழ்ந்து அலறிப் புலம்புதலானும் இவ்வுவமை ஒக்குமென்க. (2)

சங்குற் றிடுசெங்கைத் தண்டுளவோன் தன்பதமாம்
அங்குற் றனைஅன் றயன்பதஞ்செல் வாயன்று
கங்கைச் சடையான் கயிலையிற்சென் றுயல்லால்
எங்குற் றனைஅவ் விறைவன் அருள் பெற்றுயே.

இ—ள்: சங்கு உற்றிடு செம் கை தண் துளவோன் தன் பதம் ஆம் அங்கு உற்றனை அன்று—பாஞ்ச சன்னியமென்னுஞ் சங்கையேந்திய சிவந்த கையையுங் குளிர்ந்த துளசிமாலையையுமுடைய திருமாலினது உலகமாகிய அந்த வைகுண்டத்திற் போனீரல்லீர், அயன் பதம் செல்வாய் அன்று—பிரமதேவரது சத்திய லோகத்தும் போவீரல்லீர், கங்கை சடையான் கயிலையில் சென்றுய் அல்லால்—கங்கை நதியையணிந்த சடையையுடைய சிவபிரானது திருக்கைலாச கிரிக்குப் போனீரேயன்றி, அ இறைவன் அருள் பெற்றுய் எங்கு உற்றனை—அந்தச் சிவபிரானது கருணையைப் பெற்ற நாயகரே! நீர் வேறெங்கே போனீர் எ—று.

சிவபிரானிடத்தருள் பெற்ற நீர் ஏனைத் தேவர் மாட்டுச் செல்லீர், அப்பெருமானிடத்தே மீண்டுஞ் சென்றீர் என்பது கருத்து. பெற்றுயே என்பதில் ஏகாரத்தை அசையாக்காது விளியுருபெனக் கொள்ளினுமாம். (3)

உந்துதனி யாழி உனக்கணியாத் தந்தோனும்
இந்திரனும் ஏனை இமையவர்க ளெல்லோரும்
அந்தகனுர் தாமும் அனைவர்களும் இன்றன்றே
சிந்தைதனி லுள்ள கவலையெலாந் தீர்ந்தனரே.

இ—ள்: உந்து தனி ஆழி உனக்கு அணியா தந்தோனும்—சமர் முகத்திலேவிய ஒப்பற்ற சக்கராயுதத்தை உமக்கு ஆபரணமாகத் தந்த திருமாலும். இந்திரனும்—இந்திரனும், ஏனை இமையவர்கள் எல்லோரும்—மற்றைய தேவர்கள் யாவரும், அந்தகனுர் தாமும்—யமனுரும், அனைவர்களும்—உன் பகைஞராயுள்ளார் பிறர் யாவரும், சிந்தைதனில் உள்ள கவலை எலாம் இன்று அன்றே தீர்ந்தனர்—தம் மனத்திலுள்ள துன்பங்களெல்லாவற்றையும் இற்றைத் தினத்திலன்றே நீங்கினுர்கள் எ—று.

தனக்கிலக்காகிய பகைவரது உயிரைக் கவர்ந்தன்றி மீளாவியல்பினதாதலின் தாரகனுயிரைக் கவருமாற்றலின்றிக் கழுத்திற் பற்றியவாறே பதக்கம் போற் கிடந்த சக்கரத்தைத் திருமால் இன்று பண்டு போன் மீளப் பெற்றுக்

கொண்டனராதலானும் இந்திரனும் மற்றைய தேவர்களும் தந்தலைமை நீங்கி மாற்றார்க்கடிமை பூண்டிருந்த துயரை நீங்கினராதலானும் யமன் உயிர் கவரு மாற்றல் பெற்றனனாதலாலும் அவரெல்லாங் கவலை தீர்ந்தனரென்றாள். (4)

பொன்னகரோர் யாரும் புலம்புற் றிட அவுணர்
மன்னவரோ டென்பால் வரும்பவனி காணாதேன்
துன்னு பறவையினஞ் சூழத் துயிலுமுனை
இன்ன பரிசேயோ காண்பேனால் எம்பெருமான்.

இ—ள்: எம் பெருமான்—எமது நாயகரே!, பொன்னகரோர் யாரும் புலம்பு உற்றிட—சுவர்க்கலோகத்திலுள்ள தேவரனைவருந் துயரமுற, அவுணர் மன்னவரோடு என் பால் வரும் பவனி காணாதேன்—அசுரத் தலைவர்களோடு என்னிடத்து வருகின்ற பவனியைக் காணாதவளாகி, துன்னு பறவை இனம் சூழ துயிலும் உனை—நெருங்கிய பறவைக் கூட்டங்கள் மொய்க்க இறந்து கிடக்கின்ற உம்மை, இன்ன பரிசேயோ காண்பேன்—இத்தன்மையாகவா யான் காணுவேன்! எ—று.

தேவர்களுடன் போர்க்குச் சென்ற காலங்களில் அவர்களை வென்று அசுரத் தலைவர் சூழப் பவனி வருதலைக் கண்டயான் இப்பொழுது இப் போரி லிறந்து இப்படிக் கிடத்தலைக் காணலாயிற்றேயென்று புலம்பினளென்க. (5)

புல்லா திருந்தனையான் புல்லுவது கண்டுமது
பல்லோருங் காணிற் பழியென் றொழிந்தாயேல்
மல்லாருந் தோளாய் மயக்குற்றேற் கோருரையுஞ்
சொல்லாய் வறிதே துயின்றாய் துனியுண்டோ.

இ—ள்: மல் ஆரும் தோளாய்—வலிமை பொருந்திய புயங்களையுடைய நாயகரே!, யான் புல்லுவது கண்டும் புல்லாது இருந்தனை—யான் றழுவுவதைப் பார்த்தும் நீரென்னைத் தழுவாது கிடக்கின்றீர், அது பல்லோரும் காணில் பழி என்று ஒழிந்தாயேல்—அதனைப் பலருங் காணச் செய்யில் நிந்தையாமென்று விடுத்தீராயின், மயக்கு உற்றேற்கு ஓர் உரையும் சொல்லாய்—மயக்கமடைந்த தமியேனுக்குத் தேற்றரவாக ஒரு வாசகத்தையேனுங் கூறவேண்டும் அதையுங் கூறாது, வறிதே துயின்றாய்—வாளா துயின்றீர், துனி உண்டோ-என்மீது யாதேனும் வெறுப்புண்டா? (கூறுதிர்) எ—று.

யான்றழுவுந் தோறும் எதிர்தழீ இக் கோடலாகிய இயல்பை யொழித்த தற்குக் காரணமுளதாயினும் என்னுடனுரையாடா திருத்தற்குக் காரணம் பிறிதொன்றுமின்று, என்மேல் வெறுப்பேயுளதாதல் வேண்டும் என்றாளென்க. சொல்லாய்-முற்றெச்சம். (6)

மையோ டுறழும் மணிமிடற்றோன் தந்தவரம்
மெய்யா மெனவே வியந்திருந்தேன் இந்நாளும்
பொய்யாய் விளைந்ததுவோ பொன்றினையால் என்றுணைவா
ஐயோ இதற்கோ அருந்தவமுன் செய்தாயே.

இ—ள்: என் துணைவா—எனது நாயகரே, மையோடு உறழும் மணி மிடற்றோன் தந்த வரம் மெய் ஆம் என—இருளையொத்த கரிய கண்டத்தையுடைய சிவபிரான் உமக்குத் தந்தருளிய வரம் உண்மையே யாமென்று, இ நாளும்

வியந்து இருந்தேன்—இந்நாள் வரையும் புகழ்ந்திருந்தேன், பொய் ஆய் விளைந் ததுவோ—அவ்வரம் இப்போது பொய்யாய் முடிந்ததா, பொன்றினை ஆல்—இறந்தீரே, ஐயோ—ஐயகோ, இதற்கோ அரும் தவம் முன் செய்தாய்—இப் படியிறத்தற்கா அரிய தவத்தை முற்காலத்திற் செய்தீர் எ—று.

முழுமுதற் கடவுளாகிய சிவபிரானிடத்து இறவா வரம் பெற்றீரென்று யான் கருதியிருக்க அவ்வெண்ணத்திற்கு மாறாய் முடிந்ததேயெனப் புலம்பின னென்க. (7)

தன்னோ டிணையின்றித் தானே தலையான
முன்னோன் அருள்புரிந்த முன்னோன் இளவல்வரின்
என்னோ அவனோ டெதிர்ந்தாய் இறந்தனையே
அன்னோ விதிவலியை யாரே கடந்தாரே.

**இ—ள்:** தன்னோடு இணை இன்றி தானே தலை ஆன முன்னோன் அருள் புரிந்த முன்னோன் இளவல் வரின்—தமக்கு நிகராவாரின்றித் தாமே முதலாயிருக் கின்ற சிவபிரான் பெற்ற விநாயகக் கடவுளின் தம்பியாகிய முருகவேள் போர் செய்யப் புகின், அவனோடு என்னோ எதிர்ந்தாய்—அவரோடு ஏனெதிர்த்தீர், இறந்தனையே—(அங்ஙனமெதிர்த்ததனால்) இறந்தீரே, அன்னோ—ஐயோ, விதி வலியை யாரே கடந்தார்—விதியின் வல்லமையை யார்தாம் வென்றவர்கள்? (ஒருவருமில்லையே) எ—று.

தன்னின் மிக்காரை யெதிர்த்துப் பொர எவருமஞ் சுவராகவும் நீர் கட வுளின் மகனென்பதைக் கருதாதெதிர்த்து மாண்டது ஊழின் வலியினாற் போலு மென்பது கருத்து. (8)

சந்தார் தடம்புயத்துத் தானவர்கள் தற்சூழ
அந்தார் கமழும் அரியணைமேல் வைகியநீ
சிந்தா குலத்திற் செருநிலத்தில் துஞ்சினையால்
எந்தாய் புகலாய் இதுவுஞ் சிலநாளோ.

**இ—ள்:** சந்து ஆர் தடம் புயத்து தானவர்கள் தன் சூழ—சந்தனக் குழம்பு செறிந்த பெரிய புயங்களையுடைய அசுரர்கள் உம்மைச் சூழ, அம் தார் கமழும் அரி அணை மேல் வைகிய நீ—அழகிய மலர்கள் மணம் வீசுகின்ற சிங்காசனத் தின் மேலரசிருந்த நீர், சிந்தா குலத்தில் செரு நிலத்தில் துஞ்சினை—மனத் துய ரோடு போர்க்களத்தின் மாண்டு கிடக்கின்றீர், இதுவும் சில நாளோ—இவ் வாழ்க்கையுஞ் சில நாள் வாழ்க்கையாயிற்றோ, எந்தாய் புகலாய்—எனது தலை வரே சொல்வீராக எ—று.

சிந்தா ஆகுலம்=சிந்தாகுலம்; வட நூன் முடிபு. (9)

வென்றிமழு வேந்தும் விமலன் உனக்களித்த
துன்றும் வரத்தியலை யுன்னினையாற் சூழ்ச்சியினை
ஒன்று முணரா துயிருந் தொலைந்தனையே
என்று தமியேன் இனியுன்னைக் காண்பதுவே.

**இ—ள்:** வென்றி மழு ஏந்தும் விமலன் உனக்கு அளித்த துன்றும் வரத்து இயலை உன்னினை—வெற்றியினையுடைய மழுப்படையை யேந்திய சிவபிரான்

உமக்குத் தந்த சிறந்த வரத்தினியல்பை நினைத்தீர், சூழ்ச்சியினை ஒன்றும் உணராது—(அவ்வரந் தருதற்கணிகழ்ந்த) கபடங்களைச் சிறிதுமறியாது, உயிரும் தொலைந்தனையே—ஆன்மாவையுமிழந்தீரே, தமியேன் இனி உன்னை காண்பது என்று—துணையற்றேனாகிய யான் இனியும்மைப் பார்ப்பது எக் காலத்தில் (ஒருபோதும் பார்க்கமாட்டேனே) எ—று.

சிவபிரான் வரந் தரும்போது தேவரால் யாதோ சூழ்ச்சி நிகழ்ந்திருத்தல் வேண்டும். அதனையுணராது அழியா வரமென்று நினைத்திறந்தீரே யென்பது கருத்து. ஒன்று அற்பமென்னும் பொருளில் வந்தது. உயிரும் என்பதில் உம்மை-உயர்வு சிறப்பும் எச்சமுமாம். (10)

வன்னி விழியுடையான் மைந்தன் அமர்புரிய
முன்னைவலி தோற்று முடிந்தா யெனக்கேட்டுப்
பின்னுமிருந் தேனென்னிற் பேரன் புடையோர்யார்
என்னினியான் செய்கேன் எனவே இரங்குற்றாள்.

இ—ள்: வன்னி விழி உடையான் மைந்தன் அமர் புரிய—அக்கினியைத் தமது திருக்கண்களுளொன்றாகவுடைய சிவபிரானது புதல்வர் போர் செய்தலால், முன்னை வலி தோற்று முடிந்தாய் என கேட்டு—முன்னுளதாயிருந்த வலிமை கெட்டிறந்தீரென்று தூதர் சொல்லக் கேள்வியுற்று, பின்னும் இருந்தேன்—மேலும் உயிருடனிருந்தேன் (ஆதலின்), என்னில் பேரன்பு உடையோர் யார்—(கணவர் மாட்டு என்னினும் பார்க்கப்) பேரன்புடையோர் வேறியாவர் (ஒருவருமில்லை), இனி யான் என் செய்கேன் இனி யான் யாது செய்வேன், என இரங்குற்றாள்—என்று புலம்பினாள் எ—று.

கணவரிறந்தாரென்னுஞ் சொல்லைக் கேட்ட மாத்திரத்துயிரிழப்பவரே பேரன்புடையர், அங்ஙனஞ் செய்யாத யான் சிறிது மன்பில்லேன் என்பது குறிப்பு. என் எவன் என்பதன் விகாரம். இனித் தானிருத்தலாற் பயனின்றென்பாள் 'என்னினியான் செய்கேன்' என்றாள். (11)

மற்றைத் துணைவியரும் வந்தீண்டி மன்னவனைச்
சுற்றிப் புலம்பித் துயருற் றிடும்வேலை
அற்றத் தினனாகி ஆசுரத்தின் பாற்போன
கொற்றப் புதல்வன் வினவிக் குறுகினனால்.

இ—ள்: மற்றை துணைவியரும் வந்து ஈண்டி—மற்றை மனைவியர்களும் வந்து நெருங்கி, மன்னவனை சுற்றி புலம்பி துயர் உற்றிடும் வேலை—தாரகாசுரனைச் சூழ்ந்து புலம்பித் துக்கப்படும் பொழுது, ஆசுரத்தின் பால் போன கொற்ற புதல்வன்—ஆசுரபுரிக்குச் சென்றிருந்த வெற்றியை யுடைய புத்திரனாகிய அசுரேந்திரன், அற்றத்தினன் ஆகி—சமயம் வாய்த்தவனாகிப் புறப்பட்டு, வினவி குறுகினன்—வழியிற் கேள்வியுற்று அவ்விடத்து வந்தான் எ—று.

உம்மை-எச்சம். தன் பிதாவிறந்தமையையறியானாய்ச் சென்ற காரிய முற்றிப் புறப்பட்டு வந்தானாதலால் 'அற்றத்தினனாகி-குறுகினன்' என்றார். முதனூலாரும், தற்செயலாகப் பிதாவைக் காணுமாவலுடையவனாய் விரைவில் வந்து இடைவழியிற் பிதாவிறந்தமையைக் கேள்வியுற்றானெனக் கூறியுள்ளார். முதன் மனைவியின் புதல்வனாதலின் 'கொற்றப் புதல்வன்' என்றார். (12)

தண்டா விறல்சேருந் தன்றாதை வீந்ததனைக்
கண்டான் உயிர்த்தான் கலுழ்ந்தான் கரங்குலைத்தான்
அண்டாத சோகத் தழுங்கினான் வெய்யகனல்
உண்டா னெனவீழ்ந் தயர்ந்தான் உணர்ந்தனனே.

**இ—ள்:** தண்டா விறல் சேரும் தன் தாதை வீந்ததனை கண்டான்—(எத்துணை வலியுடையாருடன் பொரினுங் குறைவடையாத வலிமை பொருந்திய தன் பிதாவாகிய தாரகாசுர னிறந்ததைப் பார்த்து, உயிர்த்தான்—பெருமூச்செறிந்து, கலுழ்ந்தான்—அழுது, கரம் குலைத்தான்—கைகளையுதறி, அண்டாத சோகத்து அழுங்கினான்—அடங்காத துயரத்துள் மூழ்கி, வெய்ய கனல் உண்டான் என வீழ்ந்து அயர்ந்தான்—கொடிய அக்கினியை விழுங்கியவன் போல விழுந்து அறிவு மயங்கி, உணர்ந்தனன்—சிறிது நேரத்தின் பின் றெளிந்தான் எ—று. (13)

என்றுமுறா இன்ன லிடைப்பட் டவன்எழுந்து
சென்றுதன தன்னை திருத்தா ளிடைவீழா
உன்றலைவன் யாண்டையான் ஓதாய்அன் னேயென்று
நின்று புலம்பி நினைந்தினைய செய்கின்றான்.

**இ—ள்:** அவன்—அவ்வசுரேந்திரன், என்றும் உறா இன்னல் இடை பட்டு—எக்காலத்துமடையாத பெருந் துயரிலகப்பட்டு, எழுந்து சென்று—எழும்பிப்போய், தனது அன்னை திரு தாள் இடை வீழா—தனது தாயாகிய சவுரியென் பாளது சிறந்த கால்களில் விழுந்து, அன்னே—தாயே!. உன் தலைவன் யாண்டையான் ஓதாய் என்று புலம்பி—உன் கணவரெங்கே போயினார் சொல்லுதியென்று புலம்பி, நின்று—பின் எழுந்து நின்று, நினைந்து இனையன செய்கின்றான்—ஆலோசித்து இவற்றைச் செய்வானாயினான் எ—று. (14)

அன்னைமுத லோரை அகல்வித் தொருசாரில்
துன்னுதிரென் றேவித் தொலையாத தானவரில்
தன்னுழையோர் தம்மால் தழல்இந் தனமுதலாம்
மன்னு கருவி பலவும் வருவித்தான்.

**இ—ள்:** அன்னை முதலோரை அகல்வித்து—தாய் முதலியவர்களை யவ்விடத்தினின்று விலக்கி, ஒரு சாரில் துன்னுதிர் என்று ஏவி—ஒரு பக்கத்திற் சென்றிருங்களென் றனுப்பி விட்டு, தொலையாத தானவரில் தன் உழையோர் தம்மால்—போரிலழியா தெஞ்சிய அசுரர்களுள் .தன் பக்கத்தில் வந்து நின்ற சிலரால், தழல் இந்தனம் முதல் ஆ மன்னு கருவி பலவும் வருவித்தான்—நெருப்பும் விறகும் முதலாகப் பொருந்திய பிதிர் மேதத்திற்கு வேண்டிய உபகரணங்கள் பலவற்றையுங் கொணர்வித்தான் எ—று. (15)

வந்த பொழுதுதனில் வன்களத்தில் துஞ்சுகின்ற
தந்தைதனை முன்போல் தகவுபெற வொப்பித்தோர்
எந்திரத்தேர் மீதேற்றி ஈமத் திடையுய்த்துச்
சந்தனப்பூம் பள்ளி மிசையே தருவித்தான்.

இ—ள். வந்த பொழுது தனில்—அவை வந்து சேர்ந்தவுடன், வன் களத்தில் துஞ்சுகின்ற தந்தைதனை முன்போல் தகவுபெற ஒப்பித்து—வலிய போர்க்களத்திலிறந்த பிதாவை முன் போலத் தகுதியுற அலங்கரித்து, ஓர் எந்திர தேர் மீது ஏற்றி—யந்திரத்தையுடைய ஒரு தேரின் மேலேற்றி, ஈமத்து இடை உய்த்து—சுடுகாட்டிற் கொண்டு சென்று, சந்தன பூம் பள்ளி மிசை தருவித்தான்—சந்தனக் கட்டைகளாலடுக்கிய பொலிவாகிய சிதையிற் கிடத்தினன் எ—று.

முன்போல்-உயிருடனிருக்கும் பொழுதுபோல். எந்திரம்-உருளை; குதிரை முதலியவற்றினீர்க்கப்படா தியங்குதற்கேற்ற பொறியெனினுமாம். (16)

ஈமக் கடன்கள் இயற்றித்தன் றாதைதனைத்
தாமக் கனலால் தகனம் புரிந்திடலுங்
காமுற் றனனென் கணவனுடன் செல்வதற்குத்
தீமுற் றருதி யெனஅன்னை சென்றுரைத்தாள்.

இ—ள்: ஈம கடன்கள் இயற்றி—சுடுகாட்டிற் செயற்பாலனவாகிய கடன்களைச் செய்து, தன் தாதை தனை—தன் பிதாவை, தாம கனலால் தகனம் புரிந்திடலும்—ஒளி பொருந்திய அக்கினியினற் றகனஞ் செய்தலும், அன்னை—தாயாகிய சவுரியென்பாள், சென்று—போய், என் கணவனுடன் செல்வதற்கு காமுற்றனன்—எனது நாயகனுடன் சககமனஞ் செய்தற்கு விரும்பினேன், தீ முன் தருதி என உரைத்தாள்—அக்கினியை முன்னாக அமைக்கக்கடவை யென்று மைந்தற்குக் கூறினள் எ—று.

பேரன்புடைய மனைவியர் கணவனிறந்து தகிக்கப்படும் பொழுது தாமும் உடன்கட்டையேறி அந்த அக்கினியால் தகிக்கப்படுவர். இது சககமனமெனப் படும். (17)

நற்றாய் மொழிந்ததனைக் கேட்டு நடுநடுங்கிப்
பொற்றாள் பணிந்தென்னைப் போற்றி யிருத்தியெனச்
சொற்றா னதுமறுத்துத் தோகை சுளித்துரைப்ப
அற்றாக வென்றான் அசுரேந் திரன்என்பான்.

இ—ள்: நற்றாய் மொழிந்ததனை கேட்டு நடு நடுங்கி—பெற்ற தாயானவள் கூறிய வசனத்தைக் கேட்டு மிக நடுங்கி, பொன் தாள் பணிந்து—அவளது பொன் போன்ற கால்களை வணங்கி, என்னை போற்றி இருத்தி என சொற்றான்—தாயே! நீ என்னைப் பாதுகாத்துக் கொண்டிருக்கக் கடவாயென்று கூறினன், தோகை—சவுரியென்பாள், அது மறுத்து சுளித்து உரைப்ப—அவ் வாசகத்தை மறுத்துக் கடிந்து பேச, அசுரேந்திரன் என்பான் அற்று ஆக என்றான்—அசுரேந்திரனென்பவன் அப்படியாகுகவென்று பின் உடன்பட்டான் எ—று.

தந்தையிறந்த துயர் தணியு முன்னர்த் தாயுமிறப்பத் துணிந்தாளாதலின் நடு நடுங்கி மறுத்து, அதற்கிணங்காது பின்னுங் கடியத் தாய் சொன் மறுப்பது தகவன்றென்று ஒருப்பட்டனனென்க. (18)

ஏனையதோர் தாயர்களும் யாமுங் கணவனுடன்
வானகம்போய் எய்த வழங்கென் றிடவிசையா
ஆன படியே அழலமைக்க அன்னையராம்
மானனையார் எல்லோரும் வான்கனலி னுள்புக்கார்.

இ—ள்: ஏனையது ஓர் தாயர்களும்—மற்றைய தாய்மார்களும், யாமும் கணவனுடன் வான் அகம் போய் எய்த—நாங்களு மெங்கள் நாயகனுடன் விண்ணுலகத்திற் போயடையும்படி, வழங்கு என்றிட—தழல் வளர்ப்பா யென்று கூற, இசையா—அசுரேந்திரனுடன்பட்டு, ஆனபடியே அழல் அமைக்க—அப்படியே தீயை வளர்க்க, அன்னையர் ஆம் மான் அனையார் எல்லோரும்—அவனது தாய்மார்களாகிய பெண்களெல்லோரும், வான் கனலின் உள்புக்கார்—பெரிய அக்கினியிற் பிரவேசித்தார்கள் எ—று.

தாயர்களும் என்றிட என இயையும். மானனையார்-மானினோக்கம் போன்ற நோக்கத்தையுடையவர். அப் பெண்களனைவருந் தகிக்கப்படுதற் கேற்றவாறென் பார் 'ஆனபடியே' எனவும், அதற்கேற்ப 'வான்கனல்' எனவும் விசேடித்தார். உடன் கட்டையேறும் பெண்மணிகள் கணவன் எத்துணைப் பாவங்களைச் செய்த வனாயினும் அவனைத் தீநெறியிற் செல்லவிடா தழைத்துக்கொண்டு விண்ணுல கிற் புகுவரெனத் தரும நூல்கள் விதிக்கின்றன. (19)

புக்கதொரு காலை புலம்பியே அந்நகரை
அக்கணமே நீங்கி அசுரேந் திரனென்போன்
தக்க கிளைஞர்சிலர் தற்சூழ வேயேகி
மைக்கடலுள் வைகும் மகேந்திரமூ தூர்உற்றான்.

இ—ள்: புக்கது ஒரு காலை—தீயில் வீழ்ந்திறந்தபின், அசுரேந்திரன் என் போன்—அசுரேந்திரனெனவன், புலம்பி—துன்புற்று, அ நகரை அ கணமே நீங்கி—அந்த மாயமாபுரியை அந்தக் கணத்திற்றானே நீங்கி, தக்க கிளைஞர் சிலர் தன் சூழ ஏகி—சிறந்த உறவினருட் போரிலழியாதிருந்த சிலர் தன்னைச் சூழ்ந்து வரப் போய், மை கடலுள் வைகும் மகேந்திர முது ஊர் உற்றான்—கரிய சமுத் திரத்தினடுவிலிருக்கின்ற பழைய வீர மகேந்திரபுரியை யடைந்தான் எ—று.

அக் கணமே யென்பதில் ஏகாரம் கால தாமதஞ் செய்யாமையையுணர்த் திற்று. தந்தை தாயர்க்குப் பின் செய்ய வேண்டியனவாயுள்ள பிரேத கிருத் தியங்களையு முடித்து, முடிந்தவுடன் மகேந்திரத்திற்குப் போயினனென முத னூல் கூறுதலின் அவ்வாறே யமைத்துப் பொருள் கூறுக. (20)

### வேறு

உளந்தளர் வெய்தித் தொல்லை ஒளிமுகன் இழந்து மேனி
தளர்ந்தனன் வறியன் போன்று தாரக முதல்வன் தந்த
இளந்தனி மைந்தன் வல்லே யேகலும் அனைய நீர்மை
வளந்திகழ் தொல்லை வீர மகேந்திரத் தவுணர் கண்டார்.

இ—ள்: தாரக முதல்வன் தந்த இளம் தனி மைந்தன்—தலைவனாகிய தார காசுரன் பெற்ற இளமைப்பருவத்தையுடைய ஒப்பற்ற அந்தப் புதல்வன், உளம் தளர்வு எய்தி—மனஞ் சோர்வடைந்து, தொல்லை ஒளி முகன் இழந்து—

பழைய முகப் பொலிவு குன்றி, மேனி தளர்ந்தனன்—சரீரம் வாடி, வறியன் போன்று—தரித்திரனைப் போன்றவனாய், வல்லே ஏகலும்—விரைவில் வருதலும், அனைய நீர்மை—அத் தன்மையை, வளம் திகழ் தொல்லை வீரமகேந்திரத்து அவுணர் கண்டார்—வளப்பம் விளங்குகின்ற பழைய வீரமகேந்திர புரத்தி லுள்ள அசுரர்கள் கண்டார்கள் எ—று.

முகன்-போலி. ஒளிமுகம்=முகவொளி. (21)

உரங்கிளர் அவுணர் காணூஉ ஒய்யெனத் துளங்கி யேங்கிக்
கரங்களை விதிர்த்துக் கண்ணீர் கானெறி படர்ந்து செல்லப்
பெருங்கட லுடைந்த தேபோல் பேதுற வெய்தி யாற்ற
இரங்கியிக் குமர னுற்ற தென்கொலென் றிசைக்க லுற்றார்.

இ—ள்: உரம் கிளர் அவுணர் காணூஉ—வலிமை மிக்க அசுரர் அவனைப் பார்த்து, ஒய் என துளங்கி ஏங்கி—விரைவாக நடுங்கி ஏக்கமுற்று, கரங்களை விதிர்த்து—கைகளையுதறி, கண்ணீர் கால் நெறி படர்ந்து செல்ல—கண்களி னின்று வெளிப்படும் நீர் கால்களின் வழியே சிந்திப் பாய, பேதுறவு எய்தி—வருத்தமடைந்து, பெரும் கடல் உடைந்ததே போல் ஆற்ற இரங்கி—பெரிய சமுத்திரங் கட்டுடைந்ததையே போல மிகப் புலம்பி, இ குமரன் உற்றது என் கொல் என்று இசைக்கல் உற்றார்—இம் மைந்தன் வந்தது யாது காரணம் பற்றியோவென்று ஒருவரோடொருவர் பேசுவராயினர் எ—று.

ஒய்-விரைவுக் குறிப்பு. கால்-கால்வாயுமாம். (22)

வஞ்சமுங் கொலையுஞ் செய்யான் மற்றிவன் இதற்குத் தாதை
வெஞ்சினங் கொடுபோ கென்று விடுத்தனன் போலும் என்பார்
தஞ்சம தாகி யுள்ள தாரகன் கொடுமை நோக்கி
அஞ்சியே அவனை நீங்கி அடைந்தனன் கொல்லோ என்பார்.

இ—ள்: இவன் வஞ்சமும் கொலையும் செய்யான்—இப் புதல்வன் வஞ்ச கத்தையுங் கொலையையுஞ் செய்யமாட்டான், இதற்கு தாதை வெம் சினம் கொடு போக என்று விடுத்தனன் போலும் என்பார்—இதற்காகப் பிதாவாகிய தாரகன் கொடுங் கோபமுற்று இவ்விடத்தை விட்டகலுதியென்று துரத்தினன் போலுமென்பார்கள் சிலர், தஞ்சமது ஆகி உள்ள தாரகன் கொடுமை நோக்கி—அடக்கலமாயிருந்த தாரகாசுரனது தீமையைப் பார்த்து, அஞ்சி அவனை நீங்கி அடைந்தனன் கொல் என்பார்—பயந்து அவனை விட்டுப் பிரிந்து இங்குவந்தான் போலுமென்று சொல்வார்கள் சிலர் எ—று.

போலும்-ஒப்பில் போலி. போக என்னும் வியங்கோளீற்றகரந்தொக் கது. (23)

சீரொடு துறக்கம் நீத்துத் தேவர்கோன் உருவ மாற்றிப்
பாரிடை யுழந்தான் என்பார் மற்றவன் பரனை வேண்டிப்
பேரிகல் மாயம் வன்மை பெற்றுவந் தடுபோர் செய்யத்
தாரகன் இறந்தான் கொல்லோ தளர்ந்திவன் வந்தான் என்பார்.

இ—ள்: தேவர்கோன்—இந்திரன், சீரொடு துறக்கம் நீத்து—தனது சிறப் பையுஞ் சுவர்க்கலோகத்தையுமிழந்து, உருவம் மாற்றி பாரிடை உழந்தான் என்பார்—வேற்றுருவங்கொண்டு பூவுலகத் திற்றிரிந்தானென்று பலர்பேசினார்கள்,

அவன்—அந்தஇந்திரன், பரனைவேண்டி—சிவபிரானைப் பிரார்த்தித்து, பேர் இகல் மாயம் வன்மைபெற்று வந்து—பெரும்போர் செய்தற்குரிய மாயத்தையும் வலியையும் பெற்றுவந்து, அடு போர் செய்ய—கொலைத் தொழில் பொருந்திய போரைச்செய்ய, தாரகன் இறந்தான் கொல்—தாராசுரனிறந்தான் போலும், இவன் தளர்ந்து வந்தான் என்பார்—இப்புதல்வன் தளர்ச்சியடைந்து வந்தானென்றுசொல்வார்கள் சிலர் எ—று. (24)

மாண்கிளர் தார கப்பேர் மன்னவன் பகைஞர் ஆற்றும்
ஏண்கிளர் சமரில் வீந்தான் என்பதற் கேது வுண்டால்
சேண்கிளர் நிவப்பா லெங்குந் தெரிகிர வுஞ்ச வெற்பில்
காண்கிலம் அவுணர் தம்மைப் பூழியே காண்டும் என்பார்.

இ—ள்: மாண் கிளர் தாரக பேர் மன்னவன்—மாட்சிமை மிகுந்த தலைவனாகிய தாரகாசுரன், பகைஞர் ஆற்றும் ஏண் கிளர் சமரில் வீந்தான் என்பதற்கு ஏது உண்டு—பகைவர்செய்த இறுமாப்புமிக்க போரிலிறந்தானென்பதற்குக் காரணமுண்டு, சேண் கிளர் நிவப்பால் எங்கும் தெரி கிரவுஞ்ச வெற்பில்—ஆகாயம் வரையுங் கிளருகின்ற உன்னதத்தோடு எவ்விடங்களிலுங் காணப்படுகின்ற கிரவுஞ்ச மலையில், அவுணர் தம்மை காண்கிலம்—அசுரர்களைக் காணுகின்றிலோம், பூழியே காண்டும் என்பார்—தூளியையே காணுகின்றோமென்று சொல்வார்கள் சிலர் எ—று. (25)

பையர வணையில் துஞ்சும் பகவன தாழி தன்னை
ஐயபொன் அணிய தாக அணிந்திடும் அவுண னோடு
மொய்யமர் புரிவார் யாரே முரணொடு வெம்போர் சில்லோர்
செய்யினும் அவரால் அன்னோன் முடிகிலன் திண்ணம் என்பார்.

இ—ள்: பை அரவு அணையில் துஞ்சும் பகவனது ஆழி தன்னை ஐய பொன் அணியது ஆக அணிந்திடும் அவுணனோடு—படம்பொருந்திய அனந்தனெனுஞ் சர்ப்பமாகிய சயனத்தில் அறிதுயில்செய்கின்ற திருமால் செலுத்திய சக்கரத்தை அழகிய பொன்னாபரணமாகத் தரித்துள்ள தாரகாசுரனுடன், மொய் அமர் புரிவார் யார்—வலிய போரைச் செய்ய வல்லவர்கள் யாவர், சில்லோர் முரணொடு வெம் போர் செய்யினும்—சிலர் வலிமையுடன் கொடிய போரைச் செய்தாலும், அவரால் அன்னோன் முடிகிலன்—அவர்களால் அத் தாரகன் இறக்கமாட்டான், திண்ணம் என்பார்—இது நிச்சயமென்று சொல்வார்கள் சிலர் எ—று. (26)

அங்கையை ஒருவன் வாளால் அறுத்திடப் புலம்பி நங்கோன்
தங்கைவந் தமரர் தம்மைச் சயந்தனைச் சிறைசெய் வித்தாள்
இங்கிவன் தானுந் துன்புற் றேகுவான் இன்றும் அற்றே
புங்கவர் தமக்கே இன்னல் புரிகுவன் போலும் என்பார்.

இ—ள்: ஒருவன் அம் கையை வாளால் அறுத்திட—ஒரு வீரன் அழகிய கையை வாளினால் வெட்ட, நம் கோன் தங்கை—எங்களரசனாகிய சூரபன்மனது தங்கையாகிய அசமுகி, புலம்பி வந்து—அழுதுகொண்டு வந்து, அமரர் தம்மை சயந்தனை சிறை செய்வித்தாள்—தேவர்களையுஞ் சயந்தனையுஞ் சிறை வைப்பித்தாள், இங்கு இவன் தானும் துன்பு உற்று ஏகுவான்—இப்போது இவனுந் துன்பங் கொண்டு வருகின்றான் (ஆதலின்), இன்றும் அற்றே—இன்றைக்குமப்

படியே, புங்கவர் தமக்கே இன்னல் புரிகுவான் போலும் என்பார்—தேவர்களுக்கே துன்பத்தைச் செய்வான் போலுமென்று சொல்வார்கள் சிலர் எ—று.

ஒருவனென்றது-வீரமாகாளரை. அசுரர்க்குப் பயந்து சீகாழிப்பதியிலொளித்திருந்த இந்திரன் மனைவியைக் காக்கும்படி வீரமாகாளரை நிறுத்துவித்துக் கயிலைக்குச் செல்ல, அசமுகி சென்று சூரபன்மனுடனவளைக் கூட்டுமாறு வலிந்து கையிற் பற்றியிழுத்தாள், வீரமாகாளர் அந்த அசமுகியின் கையை வெட்டி இந்திராணியை விடுவித்தனர். பின் அசமுகி அந் நிகழ்ச்சிகளைத் தமையனாகிய சூரபன்மனுக்குணர்த்த அவன் கோபமுற்றுப் பானுகோபனையே வித் தேவரையுஞ் சயந்தனையுஞ் சிறைப்படுத்துவித்துச் சுவர்க்கலோகத்தைத் தீக்கிரையாக்கினன். இச் சரித்திரத்தை மேல் அசுர காண்டத்திற் காண்க. (27)

மணிகிளர் எழிலி வண்ணன் மற்றவ னொடுபோர் ஆற்றான்
அணியுல களித்த செம்மல் அமர்த்தொழில் சிறிதுந் தேறான்
தணிவறு செயிர்மீக் கொண்ட தாரக னொடுபோர் செய்யின்
இணையகல் ஈசன் அன்றி யாவரே வல்லர் என்பார்.

இ—ள்: மணி கிளர் எழிலி வண்ணன் அவனொடு போர் ஆற்றான்—அழகு விளங்குகின்ற மேகம் போலுங் கரு நிறத்தையுடைய திருமால் அந்தத் தாரகனோடு போர் செய்ய மாட்டார், அணி உலகு அளித்த செம்மல் அமர் தொழில் சிறிதும் தேறான்—அழகிய உலகங்களைப் படைத்த பிரமதேவர் போர்த் தொழிலைச் சற்றாயினுஞ் செய்ய நினையார், தணிவு அறு செயிர் மீ கொண்ட தாரகனோடு போர் செய்யின்—குறைவில்லாத கோபத்தை மிகவுடைய தாரகாசுரனோடு போர் செய்ய வெண்ணின், இணை அகல் ஈசன் அன்றி யாவரே வல்லர் என்பார்—ஒப்பற்ற சிவபிரானையல்லாமல் வேறியார்தாம் வல்லவர்களென்று சொல்வார்கள் சிலர் எ—று.

திருமால் முன்பொருது தோற்றனராதலாலும் பிரமதேவர் பஞ்சாங்கஞ் சொல்பவராதலாலும் தாரகனோடு பொரமாட்டாரென்றெண்ணினரென்க. (28)

இமையவர் கருடர் நாகர் இயக்கர்கந் தருவ ரேனோர்
நமரிடு பணிகள் ஆற்றி நாடொறுந் திரிந்தார் அற்றால்
சமரெதிர் இழைப்பார் இன்றித் தளர்ந்தனம் இந்நாள் காறும்
அமரினி யுளது போலும் ஐயமதில்லை என்பார்.

இ—ள்: இமையவர்—தேவர்களும், கருடர்—கருடர்களும், நாகர்—நாகர்களும், இயக்கர்—இயக்கர்களும், கந்தருவர்—கந்தருவர்களும், ஏனோர்—பிறரும், நமர் இடு பணிகள் ஆற்றி நாள் தொறும் திரிந்தார்—நம்மவர்கள் விதித்த ஏவல்களைச் செய்து தினந்தோறுமலைந்தார்கள், அற்றால்—அதனால், எதிர் சமர் இழைப்பார் இன்றி இ நாள் காறும் தளர்ந்தனம்—எதிர்த்துப் போர் செய்பவரில்லாமல் இன்றுவரையுஞ் சோர்ந்திருந்தோம், இனி அமர் உளது போலும்—இனிப் போருண்டு போலும், ஐயமது இல்லை என்பார்—இதற்குச் சந்தேகமில்லையென்று சொல்வார்கள் சிலர் எ—று. (29)

சேயிவன் அலக்கண் எய்திச் செல்லுறு பரிசா லங்கண்
ஆயதோர் தீங்கு போலும் ஐயமின் றிதனை நாடி
நாயகன் விடுக்கு முன்னம் நம்பெருந் தானை யோடு
மாயமா புரிகா றேகி அறிந்தனம் வருதும் என்பார்.

இ—ள்: சேய் இவன் அலக்கண் எய்தி செல்லுறு பரிசால்—இந்தப் புதல்வன் துன்பங் கொண்டு வருந் தன்மையினால், அங்கண் ஓர் தீங்கு ஆயது போலும்—அவ்விடத்து யாதேனு மொரு தீமை நிகழ்ந்தது போலும், ஐயம் இன்று—இதற்குச் சந்தேகமில்லை, நாயகன் வீடுக்கும் முன்னம்—நமது தலைவனாகிய சூரபன்மனனுப்புதற்கு முன்னே, நம் பெரும் தானையோடு மாயமாபுரி காறு ஏகி—எமது பெரிய சேனைகளுடன் மாயாபுரி வரையும் போய், இதனை நாடி அறிந்தனம் வருதும் என்பார்—இதனை யாராய்ந்து தெரிந்து வருவோமென்று சொல்வார்கள் சிலர் எ—று. (30)

எனைப்பல இனைய வாற்றா லியாவரும் அவுணர் ஈண்டி
மனப்படு பைத லோடும் வயின்வயின் உரையா நிற்ப
நினைப்பருந் திருமிக் குள்ள நெடுமகேந் திரத்திற் சென்று
வனைப்பெருங் கழற்காற் சூர மன்னவன் கோயில் போந்தான்.

இ—ள்: அவுணர் யாவரும்—அசுரர்களெல்லோரும், வயின் வயின் ஈண்டி—இடங்கடோறுங் குழுமி, மனப்படு பைதலோடும்—மனத்திற் பொருந்திய வருத்தத்துடன், இனையவாற்றால்—இங்ஙனமாக, எனைப்பல உரையா நிற்ப—வேறும் பல பல வாசகங்களைக் கூறா நிற்க, நினைப்பு அரும் திரு மிக்கு உள்ள நெடு மகேந்திரத்தில் சென்று—நினைத்தற்கரிய செல்வத்தான் மேம்பட்டுள்ள நீண்ட மகேந்திரபுரியில் அசுரேந்திரன் போய், வனை பெரும் கழல் கால் சூர மன்னவன் கோயில் போந்தான்—அலங்கரிக்கப்பட்ட பெரிய வீரக் கழலையணிந்த காலையுடைய சூரபன்மனாகிய தலைவனது கோயிலிற் புகுந்தான் எ—று.

ஏனையென்பது முதல் குறுகிற்று. வனைபெரும் எனற்பாலது எதுகைச் சிறப்பு நோக்கிப் பகரவொற்று விரிந்தது. (31)

போந்துதா ரகன்றன் மைந்தன் பொள்ளெனப் படர்த லோடும்
வாய்ந்தபே ரவைய மன்றில் வரம்பிலா அவுணர் போற்ற
ஏந்தெழில் அரிகள் தாங்கும் எரிமணித் தவிசின் மீக்கண்
வேந்தர்கள் வேந்தன் சூரன் மேவிவீற் றிருந்தான் மாதோ.

இ—ள்: தாரகன் தன் மைந்தன்—தாரகாசுரனது புதல்வனாகிய அசுரேந்திரன், போந்து—போய், பொள் என படர்தலோடும்—விரைவாக உட்புகுதலும், வாய்ந்த பேர் அவையமன்றில்—சிறந்த பெரிய சபா மண்டபத்தில், வரம்பு இலா அவுணர் போற்ற—அளவிறந்த அசுரர்கள் துதிக்க, ஏந்து எழில் அரிகள் தாங்கும் எரி மணி தவிசின் மீ கண் மேவி—அழகு பொருந்திய சிங்கங்களாற் சுமக்கப்படுகின்ற ஒளி மிகுந்த இரத்தினாசனத்தின் மேற் பொருந்தி, வேந்தர்கள் வேந்தன் சூரன்—அசுரர்க்கரசனாகிய சூரபன்மன், வீற்றிருந்தான்—அரசிருந்தான் எ—று.

மன்றில் வீற்றிருந்தானென இயையும். ஏந்தெழிலரிகள்=எழில் ஏந்து அரிகள். (32)

வீற்றிருந் தரசு போற்றும் வேந்தனை யெய்தி யன்னான்
காற்றுணை முன்னர் வீழ்ந்து கரங்களால் அவற்றைப் பற்றி
ஆற்றவும் அரற்றல் செய்ய அவுணர்கோன் அதுகண் டைய
சாற்றுதி புகுந்த தன்மை தளர்ந்தனை புலம்ப லென்றான்.

இ—ள்:வீற்றிருந்து அரசு போற்றும் வேந்தனை எய்தி—சிங்காசனத்திலிருந்து அரசியலைச் செய்கின்ற சூரபன்மனையணுகி, அன்னான் கால் துணை முன்னர் வீழ்ந்து—அச் சூரபன்மனது இரண்டு கால்களுக்கு முன்னே விழுந்து, கரங்களால் அவற்றை பற்றி—இரு கைகளாலுமவற்றைப் பிடித்துக்கொண்டு, ஆற்றவும் அரற்றல் செய்ய—மிகப் புலம்ப, அவுணர்கோன் அது கண்டு—அசுரர்க்கரசனாகிய சூரபன்மன் அச் செயலைப் பார்த்து, ஐய—புதல்வனே! புகுந்த தன்மை சாற்றுதி—நிகழ்ந்த சம்பவத்தைச் சொல்லுதி, தளர்ந்தனை புலம்பல் என்றான்—வருந்திப் புலம்பாதேயென்று கூறினான் எ—று.

மைந்தனை ஐய என்றது அன்பு பற்றி வந்த மரபுவழுவமைதி. (33)

என்றலும் மைந்தன் சொல்வான் இந்திரன் புணர்ப்பால் ஈசன்
வன்றிறற் குமரன் பூத வயப்படை தன்னொ டேகி
உன்றன திளவல் தன்னை ஒண்கிர வுஞ்ச மென்னுங்
குன்றொடும் வேலாற் செற்றுக் குறுகினன் புவியி லென்றான்.

இ—ள்: என்றலும் மைந்தன் சொல்வான்—என்று சூரபன்மன் கூறப் புதல்வனாகிய அசுரேந்திரன் சொல்வான், ஈசன் வன் திறல் குமரன்—மிக்க வலிமையையுடைய சிவகுமாராகிய முருகக்கடவுள், இந்திரன் புணர்ப்பால்—இந்திரனது சூழ்ச்சியால், பூத வய படை தன்னொடு ஏகி—பூதர்களாகிய வெற்றியையுடைய சேனைகளோடு வந்து, உன் தனது இளவல் தன்னை—உமது தம்பியை, ஒண் கிரவுஞ்சம் என்னும் குன்றொடும்—ஒளி பொருந்திய கிரவுஞ்சமாகிய மலையினுடன், வேலால் செற்று—வேற்படையினாலழித்து, புவியில் குறுகினன்—பூவுலகத்தில் வந்திருக்கின்றார், என்றான்—என்று கூறினான் எ—று.

மிகச் சேய்மையிலுந் தோற்றுமலையாகலின் 'ஒண் கிரவுஞ்சம்' என்றான். (34)

வெய்யசூர் அதனைக் கேளா விழுமிதென் றுருமின் நக்குச்
சையமாம் அவுண னோடு தாரக வலியோன் றன்னை
மையுறழ் கண்டத் தண்ணல் மைந்தனோ அடுதல் செய்வான்
பொய்யிது வெருவல் மைந்த உண்மையே புகறி என்றான்.

இ—ள்: வெய்ய சூர் அதனை கேளா—கொடிய சூரபன்மன் அவ் வாசகத்தைக் கேட்டு, விழுமிது என்று உருமில் நக்கு—இவ் வாசகம் நன்றாயிருக்கிறதென்று இடியைப் போலச் சிரித்து, சையம் ஆம் அவுணனோடு—மலையாகிய கிரவுஞ்சனென்னு மசுரனுடன், தாரக வலியோன் தன்னை—வலியுடையனாகிய தாரகாசுரனை, மை உறழ் கண்டத்து அண்ணல் மைந்தனோ அடுதல் செய்வான்—இருள் போன்ற கண்டத்தையுடைய சிவபிரானது குமாரனா அழிப்பான், இது பொய்—இவ் வாசகம் பொய்யேயாம், மைந்த—பாலகனே, வெருவல்—பயப்படாதே, உண்மையே புகறி என்றான்—உண்மையையே சொல்லுதியென்று கூறினான் எ—று.

சிவகுமார் சிறுபாலராதலின் பெருவலி படைத்துடைய தாரகனையுங் கிரவுஞ்ச மலையையு மழிக்கமாட்டாரென்று கருதி இங்ஙனங் கூறினனென்க. (35)

தாதைகேள் சரதம் ஈது தாரகத் தந்தை தன்னை
மேதகு கிரவுஞ் சத்தை வேல்கொடு பரமன் மைந்தன்
காதினன் சென்றான் ஈமக் கடன்முறை எந்தைக் காற்றி
மாதுயர் கொண்டு நின்பால் வந்தனன் என்றான் மைந்தன்.

**இ—ள்:** தாதை கேள்—பிதாவே! கேட்பீராக, பரமன் மைந்தன்—பரமசிவனது குமாரராகிய முருகக்கடவுள், தாரக தந்தை தன்னை—தாரகாசுரனுகிய என் பிதாவையும், மேதகு கிரவுஞ்சத்தை—உயர்ச்சி மிகுந்த கிரவுஞ்ச மலையையும், வேல் கொடு காதினன் சென்ருன் வேற்படையினுலழித்துப் போயினுர், எந்தைக்கு ஈமக்கடன் முறை ஆற்றி—(அதன்பின் யான்) என் பிதாவுக்குத் தகனக்கிரியைகளை விதிப்படி செய்து, மா துயர் கொண்டு நின் பால் வந்தனன்—பெருந் துன்பத்தைக் கொண்டு உம்மிடத்து வந்தேன், ஈது சரதம்—இது சத்தியம், என்ருன்—என்று கூறினுன், மைந்தன்—அசுரேந்திரன் எ—று.

தாதை-அண்மை விளி. இது ஈது என முதனீண்டது. (36)

**வேறு**

தோட்டுணைவ னும்இளவல் துஞ்சினன் எனுஞ்சொல்
கேட்டலும் உளத்திடை கிளர்ந்தது சினத்தீ
நாட்டமெரி கால்வபுகை நண்ணுவன துண்டம்
ஈட்டுபொறி சிந்துவன யாக்கையுள் உரோமம்.

**இ—ள்:** தோள் துணைவன் ஆம் இளவல் துஞ்சினன் எனும் சொல் கேட்டலும்—புயத் துணைவனுகிய தம்பியிறந்தானென்று அசுரேந்திரன் கூறிய வார்த்தையைக் கேட்டவுடன், உளத்திடை—அச் சூரபன்மனுடைய மனத்தில், சின தீ கிளர்ந்தது—கோபாக்கினி சொலித்தது, நாட்டம் எரி கால்வ—கண்கள் அக்கினிப் பொறியைக் கக்குவன, துண்டம் புகை நண்ணுவன—மூக்கினின்று புகை தோன்றுவன, யாக்கை உள் உரோமம் ஈட்டு பொறி சிந்துவன—சரீரத்திலுள்ள மயிர்த் துவாரங்களெல்லாம் நெருங்கிய நெருப்புப் பொறிகளைச் சிதறுவன எ—று.

உடன் பிறப்புடையானைத் தோள் வலியுடையனுக வழங்குவர் ஆன்ரோர். 'உடன் வந்தோன் மரித்திடுகில் வாகுவலிபோம்' என்னும் நீதிவெண்பாவானுமறிக. மேன் மேலு மூண்டு பகைவரை முருக்குதலாற் சினத்தைத் தீயென்ருர். (37)

நெறித்தபுரு வத்துணைகள் நெற்றிமிசை சென்ற
கறித்தன எயிற்றினிரை கவ்விஅத ரத்தைச்
செறித்தன துடித்தன தெழித்தஇதழ் செவ்வாய்
குறித்தது மனங்ககன கூடமும் முடிக்க.

**இ—ள்:** நெறித்த புருவத்துணைகள் நெற்றிமிசை சென்ற—நெருப்புக் கொண்ட இரண்டு புருவங்களும் நெற்றியின் மேலுயர்ந்து சென்றன, கறித்தன எயிற்றின் நிரை அதரத்தை கவ்வி செறித்தன—கடித்தனவாகிய பல் நிரைகள் கீழுதட்டைக் கவ்வியுறுத்தின, இதழ் துடித்தன—உதடுகள் துடித்தன, செவ்வாய் தெழித்த—சிவந்த வாய் ஒலித்தது, மனம் ககன கூடமும் முடிக்க குறித்தது—அவனுடைய மனம் அண்ட கூடத்தையுமழிக்கும்படி சிந்தித்தது எ—று.

நெறித்தல்-நேர்மை மாறி முரிந்து தோன்றல். அதரம்-கீழுதடு. கீழுள்ளதென்பது சொற் பொருள். துடித்தன தெழித்த விதழ் செவ்வாய்-நிரனிறை. உம்மை-உயர்வு சிறப்பு. (38)

இவ்வகை சினத்தெரி யெழுந்துமிசை கொள்ள
அவ்வெரியின் ஆற்றலை யவித்ததது போழ்தில்
வெவ்வினைகொள் தாரகன் மிசைத்தொடரும் அன்பால்
தெவ்வர்புகழ் சூரனிடை சேர்ந்ததுயர் ஆழி.

இ—ள்: இவகை—இப்படியாக, தெவ்வர் புகழ் சூரன் இடை—பகைவரும் புகழுகின்ற சூரபன்மனிடத்து, சினத்து எரி எழுந்து மிசை கொள்ள—கோபாக்கினி தோன்றி மேற்கொள்ள, அது போழ்தில்—அப்பொழுது, வெவ் வினை கொள் தாரகன் மிசை தொடரும் அன்பால் சேர்ந்த துயர் ஆழி—கொடிய தீவினையையுடைய தாரகாசுரன் மேற் பற்றியுள்ள அன்பினாற் றோன்றிய துன்பக் கடல், அவ் எரியின் ஆற்றலை அவித்தது—அந்தக் கோபாக்கினியின் வலியை யழித்தது எ—று.

தன்னுட்பட்டாரை மீளவிடாதமிழ்த்துதலின் துயர் ஆழி எனப்பட்டது. சினத்தைத் தீயாக உருவகித்ததற்கு அதனை யவிக்குந் துயரைக் கடலாக வுருவகித்தது இயைபாதல் காண்க. தெவ்வரும் என்பதில் எச்சவும்மை தொக்கது. (39)

துப்புநிகர் கண்புனல் சொரிந்தநதி யேபோல்
மெய்ப்புறம் வியர்த்தமிக வெள்ளமவை யீண்டி
அப்புணரி யானதுய ராழியது வென்றே
செப்புபொரு ளுண்மையது தேற்றியது போலும்.

இ—ள்: துப்பு நிகர் கண் நதியே போல் புனல் சொரிந்த—பவளம் போற் சிவந்த கண்கள் ஆற்றையே போல நீரைச் சொரிந்தன, மெய்ப்புறம் மிக வியர்த்த—சரீரம் மிக வியர்வை கொண்டது, வெள்ளம் அவை ஈண்டி—அந்த வெள்ளங்கள் செறிந்து, அ புணரி ஆன—அந்தச் சமுத்திரம் போலாயின, அது—அத் தன்மை, துயர் ஆழியது என்று செப்பு பொருள் உண்மை தேற்றியது—துன்பத்தைச் சமுத்திரமென்று சொல்லுகின்ற கருத்தினுண்மையை விளக்கியது எ—று.

இடைவிடாது மிகச் சொரிதலின் 'நதியே போற் சொரிந்த' என்றார். போலும் அசைநிலை. கண்ணீரும் வியர்வை நீருஞ் சேர்ந்து கடல் போற் பெருகித் துயரைக் கடலென்று கூறும் வருணனையை உண்மையாக்கினவென்க. அப் புணரியென்பதில் அகரம்-பண்டறிசுட்டு. (40)

பருவர லெனும்புணரி யூடுபடி வுற்றே
அரியணை மிசைத்தவறி அம்புவியில் வீழா
உருமென அரற்றினன் உணர்ந்ததனை யஞ்சி
நரலையொடு பாரகம் நடுங்கியதை யன்றே.

இ—ள்: பருவரல் எனும் புணரி ஊடு படிவுற்று—துன்பமாகிய கடலிலமிழ்ந்தி, அரி அணை மிசை தவறி அம் புவியில் வீழா—சிங்காசனத்தினின்றுந் தவறி அழகிய பூமியில் விழுந்து, உரும் என அரற்றினன்—இடியைப் போலக் கதறினன், அதனை உணர்ந்து அஞ்சி—அவ்வோசையைக் கேட்டுப் பயந்து, நரலையொடு பாரகம் நடுங்கியது—கடலும் பூமியும் நடுங்கின எ—று.

நரலையொடு பாரகம் நடுங்கியது-பன்மையிஞெருமை வந்த வழுவமைதி. ஐகாரம் சாரியை. பெரு முழக்கமுறக் கதறினனுதலின் 'உருமென வரற்றினன்' என்றூர். (41)

கூற்றுள நடுங்கிய குலைந்தது செழுந்தீக்
காற்றுவெரு வுற்றது கதிர்க்கடவுள் சோமன்
ஏற்றமிகு கோளுடு விரிந்தபுவி முற்றும்
ஆற்றிய பணிக்கிறையும் அஞ்சிய தலைந்தே.

**இ—ள்:** கூற்று உளம் நடுங்கிய—யமன் மனம் நடுங்கப்பெற்றுன், செழும் தீ குலைந்தது—செழுமையாகிய அக்கினி நிலை கெட்டது, காற்று வெருவுற்றது—வாயுப் பயந்தது, கதிர்க்கடவுள் சோமன் ஏற்றம் மிகு கோள் உடு இரிந்த—சூரியனுஞ் சந்திரனும் உயர்ச்சி மிகுந்த ஏனைய கிரகங்களும் நாண்மீன்களும் அஞ்சியோடின, புவி முற்றும் ஆற்றிய பணிக்கு இறையும் அலைந்து அஞ்சியது—பூவுலக முழுவதையுஞ் சுமந்திருக்கின்ற ஆதிசேடனும் நிலைபெயர்ந்து பயந்தது எ—று.

நடுங்கியது என்பதில் துவ்விகுதி தொக்கது. கூற்று முதலியன தெய்வப் பெயர்களாதலின் அஃறிணை வினைமுற்ருேடு முடிந்தது வழுவன்றென்க. இரிதல்—தானிருக்குமிடத்தை விட்டோடுதல். (42)

பாங்கருறு தானவர்கள் பாசறையின் மூழ்கி
ஏங்கினர் விழுந்தனர் இரங்கினர் தளர்ந்தார்
ஆங்கனைய போழ்துதனில் அந்நகர மெல்லாம்
ஓங்குதுயர் கொண்டுகலுழ் ஓசைமலிந் தன்றே.

**இ—ள்:** பாங்கர் உறு தானவர்கள்—பக்கங்களிலிருந்த அசுரர்கள், பாசறையில் மூழ்கி—துன்பத்திலழுந்தி, ஏங்கினர் விழுந்தனர் இரங்கினர் தளர்ந்தார்—ஏக்கமுற்று நிலத்தில் விழுந்து அழுது தளர்ச்சியடைந்தார்கள், அனைய போழ்து தனில்—அப்பொழுது, அ நகரம் எல்லாம் ஓங்கு துயர் கொண்டு—அந்த நகரத்திலுள்ளவர்களெல்லாரும் பெருந் துக்கங் கொண்டதனுல், கலுழ் ஓசை மலிந்தன்று—அழுகையோசை மிகுந்தது எ—று.

மலிந்தன்று றுவ்விகுதியும் தகரவிடை நிலையும் அன் சாரியையும் பெற்று முடிந்த அஃறிணையொன்றன்பாற் படர்க்கை வினைமுற்று. (43)

ஆனபொழு தத்தினில் அழுங்கலுறு சூரன்
போனதொரு சீற்றவழல் புந்தியிடை மூள
மானமொடு நாணமட வல்லையில் எழுந்தே
தானுடைய ஏவலர் தமக்கிவை உரைப்பான்.

**இ—ள்:** ஆன பொழுதத்தினில்—அச் சமயத்தில், அழுங்கல் உறு சூரன்—வருத்தமெய்திய சூரபன்மன், போனது ஒரு சீற்ற அழல் புந்தியிடை மூள—முன்னர்த் தோன்றித் தணிந்த கோபாக்கினி மனத்தில் மீளவுங் கிளரவும், மானமொடு நாணம் அட—அபிமானமும் வெட்கமும் நலியவும், வல்லையில் எழுந்து—விரைவிலெழும்பி, தான் உடைய ஏவலர் தமக்கு இவை உரைப்பான்—தன்னுடைய ஏவலாளர்களைப் பார்த்து இவ் வாசகங்களைக் கூறுவான் எ—று.

தன்னுடைய எனற்பாலது-எதுகை நோக்கி விகாரமின்றித் தானுடைய என நின்றது. துயரத்தை உறுந்துணையுமுற்று ஒரு சிறிது தெளிந்தவனென்பது போதர 'அழுங்கலுறு சூரன்' என்ருர். தன் றம்பியைக் கொன்ருனைத் தப்பாது கொல்ல வேண்டுமென மானமும் ஒரு சிறு பாலகன் உலகனைத்தையு மொரு குடைக் கீழ்ப்படுத்தி யாளுமென்றம்பியைக் கொன்ருனேயென நாணமும் மிகக் கொண்டனனுதலின் 'மானமொடு நாணமட' என்ருர். (44)

மன்னிளவல் ஆருயிரை மாற்றிவரு கந்தன்
தன்னிகல் கடந்துசய மெய்திவரல் வேண்டும்
என்னிரதம் வெம்படை இடுங்கவசம் யாவும்
உன்னுகணம் ஒன்றின்முனம் உய்த்திடுதி ரென்ருன்.

இ—ள்: மன் இளவல் ஆர் உயிரை மாற்றி வரு கந்தன் தன் இகல்கடந்து—நிலைபெற்ற என்றம்பியின் அரிய உயிரை யழித்துவருகின்ற கந்தனது வலிமையை யடக்கி, சயம் எய்தி வரல் வேண்டும்—வெற்றிபெற்று வருதல் வேண்டும் (ஆதலின்), என் இரதம்—எனது தேரும், வெம் படை—கொடிய ஆயுதங்களும், இடும் கவசம்—அணிகின்ற சட்டையுமாகிய, யாவும்—எல்லாவற்றையும், உன்னு கணம் ஒன்றின் முனம் உய்த்திடுதிர் என்ருர்—நினைக்கப்படுகின்ற ஒரு கணப்பொழுதினுள்ளே கொணர்வீராகவென்று ஆஞ்ஞாபித்தான் எ—று.

முனம் தொகுத்தல். போர்முகத்திற் புறங்கொடாதுநின்று பொருமாற்றலுடையனென்பான் 'மன்னிளவல்' எனவும், தெய்வப்படைகளானுஞ் செகுத்தற்கரிதாயவுயிரென்பான் 'ஆருயிர்' எனவும், கழிந்ததோ அன்ருே என என்னுற் கருதப்பட்டுக் கொண்டிருக்குங் கணமென்பான் 'உன்னுகணம்' எனவும் கூறினுன். (45)

இறையிவை புகன்றிடலும் ஏவலர்கள் யாரும்
முறையிலவை உய்த்திடுதல் முன்னினர்கள் போனுர்
அறைகழ லுடைத்தகுவர் அன்னசெயல் நாடிக்
குறைவில்அனி கங்களொடு கொம்மென அணைந்தார்.

இ—ள்: இறை இவை புகன்றிடலும்—சூரபன்மனிவ்வாறு கூற, ஏவலர்கள் யாரும்—கேட்ட ஏவலர்கள்யாவரும், முறையில் அவை உய்த்திடுதல் முன்னினர்கள் போனுர்—முறைப்படி அவற்றைக்கொண்டுவரும் பொருட்டுச் சிந்தித்துப் போனுர்கள், அறை கழல் உடை தகுவர்—ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய அசுரர்கள், அன்ன செயல் நாடி—அத்தன்மையையறிந்து, குறைவு இல் அனி கங்களொடு கொம் என அணைந்தார்—குறைவற்ற சேனைகளுடன் விரைவில் வந்து கூடினுர்கள் எ—று.

கொம்—விரைவுக்குறிப்பு. (46)

ஆயசெயல் காண்டலும் அமைச்சரில் அமோகன்
மாயைதரு சூரனடி வந்தனை புரிந்தே
ஏயதொரு மாற்றம திசைப்பல்அது கேண்மோ
தீயசின மெய்திட லெனுஇனைய செப்பும்.

இ—ள்: அமைச்சரில் அமோகன்—(அப்போது) அங்குள்ள மந்திரிமாருள் அமோகனென்பவன், ஆய செயல் காண்டலும்—அச் செயலைப் பார்த்தவுடன். மாயை தரு சூரன் அடி வந்தனை புரிந்து—மாயவள் பெற்ற புதல்வனாகிய சூர பன்மனது கால்களை வணங்கி, ஏயது ஒரு மாற்றமது இசைப்பல்—அரசனே! யான் இசைந்த ஒரு வார்த்தையைச் சொல்லுகின்றேன், அது கேள்—அதனைக் கேட்பீராக, தீய சினம் எய்திடல்—கொடுங் கோபங் கொள்ளற்க, எனா—என்று கூறி, இனைய செப்பும்—இவ் வாசகத்தைச் சொல்வான் எ—று.

உமக்கு நன்மை பயக்கும் வாசகமென்பான் 'ஏயதொரு மாற்றம்' எனவும், அது நுங்கோட்பாட்டிற் கிணங்காதென்பது தோன்ற 'தீய சினமெய்திடல்' எனவும் கூறினன். (47)

### வேறு

நஞ்சுறை படைகள் கற்று நவையுறு தொன்ன லாரை
வஞ்சினத் தெறியும் வீரர் வளநகர் அதனை மாற்றோர்
இஞ்சியைச் சூழ்ந்து போருக் கெய்தினும் எண்ணி யன்றி
வெஞ்சினத் தினைமேல் கொண்டு விரைந்தமர் இயற்றச் செல்லார்.

இ—ள்; நஞ்சு உறை படைகள் கற்று நவை உறுது ஒன்னலாரை வஞ் சினத்து எறியும் வீரர்—நஞ்சு பூசப்பெற்ற படைக்கலங்களின் வித்தைகளைப் பயின்று குற்றம் பொருந்தாமற் பகைவர்களைச் சபதஞ் செய்து கொல்லுகின்ற வீரர்கள், மாற்றோர் வள நகர் அதனை இஞ்சியை சூழ்ந்து போருக்கு எய் தினும்—பகைவர் வளப்பம் பொருந்திய நகரத்தினது மதிலை வளைந்து போர் செய்ய வந்தாலும், எண்ணி அன்றி-ஆலோசித்தல்லாமல், வெம் சினத்தினை மேற்கொண்டு விரைந்து அமர் இயற்ற செல்லார்—கொடுங் கோபத்தைத் தலைக்கொண்டு சீக்கிரத்திற் போர் செய்யப் போகமாட்டார்கள் எ—று.

படை ஆகுபெயர். நவை-புறங்காட்டினனைக் கோறல் மாயத்தாற் கோறல் முதலியன. சினைக்கு ஐயுருபு விரித்தற்கேற்ப முதலின்கணுள்ள ஐயுருபை ஆற னுருபாக்கிப் பொருள் கூறினும். உம்மை-எண்ணுது போர்க்குச் செல்ல வேண் டிய காலமென்பதை யுணர்த்திற்று. (48)

குலத்தினை வினவி உள்ளக் கோளினை வினவி வந்த
நிலத்தினை வினவித் தொல்லோர் நெறியினை வினவிக் கொண்ட
சலத்தினை வினவிப் போர்செய் தானையை வினவி அன்னோர்
வலத்தினை வினவி யல்லால் மற்றொன்று மனங்கொள் வாரோ.

இ—ள்: குலத்தினை வினவி—பகைவரது குலத்தை ஆராய்ந்தும், உள்ளக் கோளினைவினவி—அவரது மனக் கோட்பாட்டை யாராய்ந்தும், வந்த நிலத் தினை வினவி—அவரெவ்விடத்திருந்து வந்தாரென்பதை யாராய்ந்தும், தொல் லோர் நெறியினை வினவி—அவரின் முன்னோர்களது வரன் முறைகளையாராய்ந் தும், கொண்ட சலத்தினை வினவி—பகைவர் தம்மேற் கொண்ட விரோதத்தின் காரணத்தை ஆராய்ந்தும், போர் செய் தானையை வினவி—போர் செய்தற்கு அவருடன் வருஞ் சேனையை ஆராய்ந்தும், அன்னோர் வலத்தினை வினவி அல் லால்—அவரது வீரத்தை யாராய்ந்துமன்றி, மற்று ஒன்று மனங் கொள்வாரோ— வேறொன்றை (அரசர்கள்) மனத்தினினைப்பார்களா? (நினையார்கள்) எ—று.

முன்னோர்களது வரன்முறையாவது பகைவருடைய முன்னோர் முற்காலத்தில் யாது செய்தார் எவரை வென்றார் எவர்க்குத் தோற்றார் என்றற்றொடக்கத்தன. (49)

வரத்தினில் வலியி னாரோ மாயையில் வலியி னாரோ
கரத்தினிற் படைக்க லத்தின் கல்வியில் வலியி னாரோ
உரத்தினில் வலியி னாரோ உணர்ச்சிசேர் ஊக்க மான
சிரத்தினில் வலியி னாரோ என்றிவை தேர்வ ரன்றே.

இ—ள்: வரத்தினில் வலியினாரோ—பகைவர் வரத்தாற் சிறந்தவர்களா?, மாயையில் வலியினாரோ—மாயத்தாற் சிறந்தவர்களா?, கரத்தினில் படைக்கலத்தின் கல்வியில் வலியினாரோ—கையிலேந்திய படைக்கலங்களின் பயிற்சியாற் சிறந்தவர்களா?, உரத்தினில் வலியினாரோ—சரீர பலத்தாற் சிறந்தவர்களா?, உணர்ச்சி சேர் ஊக்கம் ஆன சிரத்தினில் வலியினாரோ—அறிவின்றொடர்பானுகின்ற உற்சாகமாகிய முதன்மையாற் சிறந்தவர்களா?, என்று இவை தேர்வர்—என்று இவற்றையெல்லாமாராய்ந்துணர்வார்கள் எ—று.

படைப்பயிற்சியுஞ் சரீரபலமும் பிறவும் ஊக்கமில்லாவழிப் பகைவர்முற்றேய்ந்தழியுமாதலின் ஊக்கத்தைச் சிரமென்று சிறப்பித்தான். "உடையரெனப்படுவ தூக்கமஃதில்லா-ருடையதுடையரோமற்று" என்றார் திருவள்ளுவரும்.

ஒற்றரைத் தூண்டி அன்னோர் உறுவலி உணர்வ ரேனும்
மற்றுமோ ரொற்றின் அல்லால் அன்னது மனத்துட் கொள்ளார்
சுற்றுறும் அனிக மன்றி யொருபுடை துவன்றிச் சூழும்
பெற்றியும் உளதோ என்னு வேயொரீஇத் தேர்வர் பின்னும்.

இ—ள்: ஒற்றரை தூண்டி அன்னோர் உறு வலி உணர்வரேனும்—தூதுவரையனுப்பி அப்பகைவர்கொண்டுடைய வலிமைமுழுதையும் அறிந்தாரேயாயினும், மற்றும் ஓர் ஒற்றின் அல்லால் அன்னது மனத்துள் கொள்ளார்—வேறுமொருதூதினாலல்லாமல் அவற்றை உண்மையாக மனத்திற்கருதமாட்டார்கள், சுற்றுறும் அனிகம் அன்றி—சூழ்ந்து நிற்கின்ற சேனைகளேயல்லாமல், ஒரு புடை துவன்றி சூழும் பெற்றியும் உளதோ என்னு—வேறுசேனைகள் வேறொருபுறத்தில் நெருங்கிச் சூழ்ந்திருக்கின்ற தன்மையுமுண்டோவென்று, வேய் ஓரீஇ—தூதனுப்பி, பின்னும் தேர்வர்—பின்னும் ஆராய்வார்கள் எ—று.

மூன்றுமுறை தூதனுப்பித்தெளியவேண்டுமென்பது தாற்பரியம். "ஒருவரொருவர் தமையறியா தொருமை வினைக்கண் மூவர்தமை-மருவ விடுக்க மூவர்களும் வந்து மொழிவ நேர்ந்துவிடிற்-கரும மதனை மிகத்தெளிக" என்றார் விநாயக புராணத்தார். "ஒற்றொற்றுணராமையாள்கவுடன்மூவர் - சொற்றொக்க தேறப்படும்" என்றார் திருவள்ளுவரும். ஓரீஇ-ஒருவியென்பதன் விகாரம்; விடுத்தென்பது பொருள். பெற்றியும் பின்னும் என்பவற்றில் உம்மைகள்-எச்சங்கள் (51)

வினையது விளைவை யென்றும் மெல்லிய என்கை வெஃகார்
அனிகமும் அனையர் தன்மை அதனையுஞ் சிறுமைத் தாக
நினைகிலர் தமக்கு மாற்றார் நேர்ந்தவ ராகின் மேலோர்
முனையுறு புலத்தி லாற்றும் மும்மையும் முன்னிச் செய்வார்.

இ—ள்: மேலோர்—பெரியோர்கள், வினையது விளைவை என்றும் மெல்லிய என்கை வெஃகார்—போரினாரம்பத்தையெப்போதாயினுஞ் சிறிதென்றுசொல்லு தற்கு விரும்பார்கள், அனிகமும் அனையர் தன்மை அதனையும் சிறுமைத்து ஆக நினைகிலர்—சேனைகளையும் அப்பகைவரது இயல்பையுஞ் சிறிதாகச் சிந்திக்கமாட்டார்கள், மாற்றார் தமக்கு நேர்ந்தவர் ஆகின்—பகைவர் தம்முடன் வலிமுதலி யனவற்றாலொத்தவரென்று தெரிந்தால், முனை உறு புலத்தில் ஆற்றும் மும்மையும் முன்னி செய்வார்—பகை வந்த காலத்திற் செயற்பாலனவாகிய மூவகையுபாயங்களையும் ஆலோசித்துச் செய்வார்கள் எ—று.

முனையுறுபுலத்திலாற்று மும்மை - சாமம் பேதம் தானம் என்பன. சாமம்-எதிர்ந்தாருடன் நண்புபூண்டு பகையைத்தீர்த்தல். பேதம்-பகைவருள் ஒருவர்க்கொருவர் விரோதமுண்டாக்குதலால் அவரைத்தம்மோடெதிர்க்க வலியிலராக்குதல். தானம்-பொருள்முதலியவற்றைக் கொடுத்துப் பகையைத்தீர்த்தல். முன்னிச்செய்தல்-எவ்வாறு செய்யிற் சித்திபெறலாமென்றுய்த்துணர்ந்து செய்தல். மெலியாரெனிற் சேனைவீரரையேவியழித்தலும் வலியாரெனிற் சரண் புகுதலும் விதிக்கப்படுதலால் 'நேர்ந்தவராகின்-மும்மையு முன்னிச்செய்வார்' என்றான். (52)

மூவியல் மரபி னாலும் முற்றுறா தொழிந்த காலைக்
கோவியல் மரபுக் கேற்பக் கொடுஞ்சினந் திருகிக் கொட்புற்
றேவியல் படைஞ ரோடும் படையொடும் எதிர்ந்து சுற்றி
மேவலர் பான்மை யுன்னி வெற்றிகொண் டணைவர் அன்றே.

இ—ள்: மூவியல் மரபினாலும் முற்றுறாது ஒழிந்த காலை—(முற்கூறிய) மூன்று வகை முறைமைகளினாலு முடியாது போன பொழுது, கோ இயல் மரபுக்கு ஏற்ப கொடும் சினம் திருகி கொட்புற்று—அரசியன் முறைக்கிசையக் கடுங்கோபமுறுகி மாறுபட்டு, ஏ இயல் படைஞரோடும் படையொடும் எதிர்ந்து சுற்றி—படைகளையேவு மியல்பினையுடைய வீரருடனும் படைக்கலங்களுடனும் எதிர்த்து வளைந்து, மேவலர் பான்மை உன்னி வெற்றிகொண்டு அணைவர்—பகைவரது தன்மையைச் சிந்தித்து வெற்றிபெற்று வருவார்கள் எ—று.

மரபினாலும் என்பதில் உம்மை முற்று. முதன் மூன்றுபாயங்களிற் பகை வரமையாவழி நான்காவதாகிய தண்டத்தாற் கோறல் அரசர் நீதியாதலின் 'கோவியன்மரபுற்கேற்ப' எனவும், அங்ஙனந்தண்டிக்கப்புகுங்கால் வலி படை சேனை முதலியவைகள் அவரினுமதிகமாகத் தமக்குவேண்டுதலின் 'மேவலர் பான்மையுன்னி' எனவும் கூறினர். (53)

நேர்ந்திட வலியி லோரும் ஞாட்பிடை நேர்தி ரென்னச்
சேர்ந்திடும் போழ்தும் வேந்தர் செருவினைக் குறித்துச் சென்று
சார்ந்திடல் பழிய தன்றோ வெல்லினுந் தானை தூண்டிப்
பேர்ந்திடச் செய்வர் அஃதே பெறலரும் புகழ தன்றே.

இ—ள்: நேர்ந்திட வலியோர் ஞாட்பிடைநேர்திர் என்ன சேர்ந்திடும் போழ்தும்—எதிர்க்க வலிமையில்லாதவர்கள் போரிலெதிர்க்கக் கடவீர்களென்று வீரம் பேசி யடைந்தகாலத்தும், வேந்தர் செருவினை குறித்து சென்று சார்ந்திடல் பழியது அன்றோ—அரசர்கள் போரைக்குறித்துச் சென்றணுகல் நிந்தையாமல்

லவா?, வெல்லினும்—அவரை வெல்லக்கருதினும், தானை தூண்டி பேர்ந்திட செய்வர்—சேனைகளையேவி நிலைகுலையச்செய்வார், அஃதேபெறல் அரும் புகழது—அதுவேயடைதற்கரிய புகழாகும் எ—று.

உம்மை முன்னையது இழிவுசிறப்பு. பின்னையது எதிர்மறை. அஃதே என்பதில் ஏகாரம் பிரிநிலை. (54)

ஈதரோ உலகி லுள்ள இறைவர்தம் இயற்கை யாகும்
ஆதலால் நின்னைப் பாரில் அழிவிலா அகில மாள்வாய்
ஏதமொன் றடையாய் வானோர் யாரையும் ஏவல் கொண்டாய்
போதனும் நெடுமா லோனும் வைகலும் புகழ வுற்றாய்.

இ—ள்: ஈது அரோ உலகில் உள்ள இறைவர்தம் இயற்கை ஆகும்—இதுவே உலகத்திலுள்ள அரசர்களது இயல்பாம், ஆதலால்—ஆதலின், நின் ஒப்பார் இல்—உம்மையொப்பவர் பிறரில்லை, அழிவுஇலாய்—இறத்தலில்லாதீர், அகிலம் ஆள்வாய்—எல்லாவுலகங்களையுமரசியல் செய்வீர், ஏதம் ஒன்று அடையாய்—குற்றஞ்சிறிதுமணுகாதீர், வானோர் யாரையும் ஏவல் கொண்டாய்—தேவரனைவரையுமேவல் செய்வாராகக் கொண்டீர், போதனும் நெடு மாலோனும் வைகலும் புகழ உற்றாய்—பிரமதேவரும் நெடிய திருமாலுந் தினந்தோறுந் துதிக்க இருக்கின்றீர் எ—று.

ஒன்றுமென்பதில் இழிவுசிறப்பும்மை தொக்கது. ஆதலால் என்பது வருஞ் செய்யுளில் உனக்கதுவசையது என்பதனோடியையும். (55)

இன்னதோர் மிடல்பெற் றுள்ள இறைவநீ அளிய னாகும்
பொன்னக ரவன்சொற் கேட்டுப் பூதமே படையா ஈசன்
றென்னலின் உதவும் பிள்ளை நேர்ந்திடின் அவனை வெல்ல
உன்னினை போதி யென்னின் உனக்கது வசைய தன்றோ.

இ—ள்: இன்னது ஓர் மிடல் பெற்று உள்ள இறைவ—இத்தன்மையாகிய வலிமையைப் பெற்றுள்ள தலைவரே, நீ—நீர், அளியன் ஆகும் பொன்னகரவன் சொல் கேட்டு—எளியவனாகிய இந்திரனது சொல்லைக்கேட்டு, பூதமே படையா—பூதங்களே சேனைகளாக, ஈசன் நென்னலின் உதவும் பிள்ளை நேர்ந்திடின்—சிவபிரான் நேற்றுப்பெற்ற பாலகனெதிர்த்தால், அவனை வெல்ல உன்னினை போதி என்னின்—அவனைவெல்லும்படி நினைத்துப்போவீரேயானால், உனக்கு அது வசையது அன்றோ—உமக்கு அது வசையாமல்லவா? எ—று.

நீ போதியென்னின் என இயையும். வசையைத்தருவதை வசையென்றது காரணகாரிய உபசாரம். சிறுபாலனென்பான் 'நென்னலினுதவும்பிள்ளை' என்றான். (56)

மாற்றலர் வன்மை யோராய் மற்றவர் படைஞர் தங்கள்
ஆற்றலை யுணராய் நின்றன் அரும்பெருந் தலைமை யுன்னைப்
போற்றிடும் அமைச்ச ரோடும் புரிவன சூழாய் வாளா
சீற்றமங் கதுமேல் கொண்டு செல்லலுந் திறலின் பாற்றோ.

இ—ள்: மாற்றலர் வன்மை ஓராய்—பகைவரது வலிமையுணரதும், அவர் படைஞர் தங்கள் ஆற்றலை உணராய்—அவரது சேனைவீரரின் வலியையுணரா

தும், நின் தன் அரும்பெரும் தலைமை உன்னுய்—உமது மிகச்சிறந்த தலைமையை நினையாதும், போற்றிடும் அமைச்சரோடும் புரிவன சூழாய்—துதிக்கப்படத்தக்க மந்திரிமாருடன் செய்ய வேண்டுவனவற்றை ஆலோசியாதும், வாளா சீற்றம் மேல் கொண்டு செல்லலும்—வெறுமையாகக் கோபத்தை மாத்திரங் கொண்டு போர்க்குப் போதலும், திறலின் பாற்றே—வீரத்தின் வழிப்பட்டதா? (அன்று) எ—று.

அங்கது-அசை. ஓராய் உணராய் உன்னுய் சூழாய் என்பன முற்றெச்சங்கள். முற்றுகக் கொண்ட வழிப் பின்னவாக்கியமாம். புரிவன-வினையாலணையும் பெயர். போற்றிடும் என்பதற்கு நற்புத்தி கூறுதலால் அரசனைக் காக்கின்றவெனப் பொருள் கூறினுமாம். செல்லலும் என்பதில் உம்மை இழிவு சிறப்பு. மற்று-வினைமாற்று. (57)

வீரமும் வலியும் மிக்கோ ராயினும் விதிவந் தெய்தில்
பாரிடை வலியி லோரும் படுத்திடப் படுவர் நின்போல்
பேருடல் அழியா ஆற்றல் பெருமையால் இறுவா யெய்தத்
தாரகன் மழலை தேருச் சிறுவனுந் தடியப் பட்டான்

இ—ள்: வீரமும் வலியும் மிக்கோர் ஆயினும்—வீரத்தாலும் வலிமையாலுஞ் சிறந்தோராயினும், விதி வந்து எய்தில்—ஊழ் வந்தணுகப் பெற்றால், பார் இடை வலியிலோர் படுத்திடவும் படுவர்—பூவுலகத்தில் வலிமையில்லாதாரழிக்கவும் அழிவார், தாரகன்—தாரகாசுரன், நின் போல் பேர் உடல் அழியா ஆற்றல் பெருமையால்—உம்மைப் போல வச்சிர யாக்கையையும் அழியா வரத்தையும் பெற்றுக் கொள்ளாமையினுல், இறுவாய் எய்த—மரண காலமணுக, மழலை தேரு சிறுவன் தடியவும் பட்டான்—குதலை வார்த்தை திருந்தப் பெருத பாலகனழிக்கவும் அழிந்தான் எ—று.

ஆயினுமென்பதில் உம்மை உயர்வு சிறப்பு. பின்னைய இரண்டும்மைகளு மிழிவு சிறப்பு; அவை மாறிக் கூட்டப்பட்டன. விதிவந்தெய்திற் படுவரெனவும், இறுவாயெய்தப்பட்டாரெனவும் இயைத்துக் கொள்க. பெருமை ஈண்டுச் சிறப்பின் மேற்றுதலின் பேருடலென்றது வச்சிரயாக்கையை. (58)

கலகல மிழற்றுந் தண்டைக் கழலடிச் சிறுவன் றன்மேற்
றலையுடை இளவல் தன்னைத் தடிந்ததற் புதத்த தன்றால்
வலியரும் ஒருகா லத்தில் வன்மையை இழப்பர் ஆற்ற
மெலியரும் ஒருகா லத்தில் வீரராய்த் திகழ்வர் அன்றே.

இ—ள்: கலகல மிழற்றும் தண்டை கழல் அடி சிறுவன்—கலகலவென் றெலிக்கின்ற தண்டையையும் வீரக்கழலையுமணிந்த கால்களையுடைய பாலன், கைம்மா தலை உடை இளவல் தன்னை தடிந்தது அற்புதத்து அன்று—யானைத் தலையினையுடைய உமது தம்பியைக் கொன்றது வியப்பன்று (ஏனெனில்), வலியரும் ஒரு காலத்தில் வன்மையை இழப்பர் — வலியுடையோரும் ஒரு காலத்தில் தமது வலியை இழந்துவிடுவார்கள், ஆற்ற மெலியரும் ஒரு காலத்தில் வீரர் ஆய்

திகழ்வர்—மிக வலி குறைந்தவர்களுஞ் சில காலத்தில் வீரராகி விளங்குவார் கள் (ஆதலின்) எ—று.

கலகல-ஒலிக் குறிப்பு. கைம்மா-கையையுடைய விலங்கு. உம்மை-முன்னை யது உயர்வு சிறப்பு; பின்னையது இழிவு சிறப்பு. (59)

யாருநே ரன்றி வைகும் இறைவநீ சிறுவன் றன்மேற்
போரினை முன்னி யேகல் புகழ்மைய தன்றால் அன்னான்
சீரொடு மதுகை யாவுந் தேர்ந்துபின் னவனில் தீர்ந்த
வீரரைப் படையொ டேவி வெற்றிகொண் டமர்தி யென்றான்.

இ—ள்: யாரும் நேர் அன்றி வைகும் இறைவ—எவரும் ஒப்பாகாவண் ணஞ் சிறந்திருக்கின்ற அரசனே!, நீ—நீர், சிறுவன் தன் மேல் போரினை முன்னி ஏகல் புகழ்மையது அன்று—சிறு பிள்ளையின் மேற் போர் செய்ய நினைத் துப் போதல் சிறப்பன்று, அன்னான் சீரொடு மதுகை யாவும் தேர்ந்து—அவ னது கீர்த்தியும் வலியு முதலிய எல்லாவற்றையுமாராய்ந்து. பின்—பின்பு, அவனில் தீர்ந்த வீரரை படையொடு ஏவி—அவனிலுஞ் சிறந்த வீரர்களைச் சேனைகளோடுமனுப்பி, வெற்றி கொண்டு அமர்தி என்றான்—வெற்றி பெற்றிருப் பீராகவென்று கூறினான் எ—று. (60)

அறிதரும் அமைச்சர் தம்முள் அமோகன்இத் தன்மை தேற்ற
உறிதியீ தென்று சூரன் உள்ளுறு சினத்தை நீத்து
விறல்கெழும் அரிமான் ஏற்று விழுத்தகு தவிசின் ஏறிச்
செறிதரும் உழைஞர் தம்முட் சிலவரை நோக்கிச் சொல்வான்

இ—ள்: அறிதரும் அமைச்சர் தம்முள் அமோகன் இத் தன்மை தேற்ற— அரச நீதிகளையறிந்த மந்திரிமார்களுள் அமோகனென்பவன் இவ்வாறு கூறித் தெளிவிக்க, சூரன்—சூரபன்மன், ஈது உறுதி என்று—இது உறுதிமொழியா மென்று சிந்தித்து, உள் உறு சினத்தை நீத்து—மனத்திற் பொருந்திய கோபத்தை விடுத்து, விறல் கெழும் அரிமான் ஏற்று விழுத்தகு தவிசின் ஏறி—வலிமை மிகுந்த ஆண் சிங்கங்களாற் சுமக்கப்படுகின்ற சிறப்புமிக்க ஆசனத்திலேறி, செறிதரும் உழைஞர் தம்முள் சிலவரை நோக்கி சொல் வான்—தன் பக்கத்தில் நெருங்கிய ஏவலாளர்களுட் சிலரைப் பார்த்து இவ்வாறு சொல்வான் எ—று. (61)

பகனொடு மயூரன் சேனன் பரிதியம் புள்ளின் பேரோன்
சுகனிவர் முதலா வுள்ள தூதரைத் தருதி ரென்னப்
புகழ்புனை சூர பன்மன் பொன்னடி இறைஞ்சி யேத்தித்
தகுவர்கள் தலைவர் மற்றச் சாரணர் தம்மை உய்த்தார்.

இ—ள்: பகன்—பகனும், மயூரன்—மயூரனும், சேனன்—சேனனும், பரி தியம் புள்ளின் பேரோன்—சக்கரவாகனும், சுகன்—சுகனும், இவர் முதல் ஆ உள்ள தூதரை தருதிர் என்ன—என்னுமிவர் முதலாகவுள்ள தூதுவர்களை யழைத்து வருதிரென்று கட்டளை செய்ய, தகுவர்கள் தலைவர்—அது கேட்ட

அசுரத் தலைவர்கள், புகழ் புனை சூரபன்மன் பொன் அடி இறைஞ்சி ஏத்தி—கீர்த்தி மிக்க சூரபன்மனது அழகிய பாதங்களை வணங்கித் துதித்து, அ சாரணர் தம்மை உய்த்தார்—அந்தத் தூதுவர்களையழைத்துக் கொணர்ந்து முன்விடுத் தார்கள் எ—று.

பகன் கொக்கு வடிவையும் மயூரன் மயில் வடிவையும் சேனன் பருந்து வடிவையும் சக்கரவாகன் சக்கரவாகப் பறவை வடிவையும் சுகன் கிளி வடிவையும் கொண்டு சென்று பகைவரியல்புகளை யறிபவர். பரிதியம்புள்-வட்ட வடிவுடைய பறவை. (62)

சாரணர் இனையர் போந்து தாள்முறை பணிந்து நிற்பச்
சூரனங் கவரை நோக்கித் துண்ணென நீவிரேகிப்
பாரிடை வந்த கந்தன் பான்மையும் படைவெம் பூதர்
சேருறு தொகையும் யாவுந் தேர்ந்திவண் வருதி ரென்றான்.

இ—ள்: இனையர் சாரணர் போந்து—இந்தத் தூதுவர்கள் வந்து, தாள் முறை பணிந்து நிற்ப—பாதங்களை முறைப்படி வணங்கி நிற்க, சூரன் அவரை நோக்கி—சூரபன்மன் அவர்களைப் பார்த்து, நீவிர் துண் என ஏகி—நீங்கள் விரைவிற் போய், பாரிடை வந்த கந்தன் பான்மையும்—பூவுலகத்தில் வந்த கந்தனது தன்மைகளையும், படை வெம் பூதர் சேருறு தொகையும்—சேனை களாகிய கொடிய பூதர்களாகச் சேர்ந்திருக்கின்ற தொகையையும், யாவும் தேர்ந்து இவண் வருதிர் என்றான்—பிறவற்றையுமாராய்ந்தறிந்து இவ்விடத்து வரக்கடவீர்களென்று கட்டளையிட்டான் எ—று.

போர்க்குவந்த காரண முதலியவெல்லாமடங்க யாவுமென்றான். (63)

ஒற்றுவர் உணர்ந்தந் நீர்மை உச்சிமேல் கொண்டு தங்கோன்
பொற்றடங் கழல்கள் தாழ்ந்து புடவியை நோக்கிச் சென்றார்
மற்றவர் போய பின்னர் மாறிலாச் சூர பன்மன்
வெற்றிகொள் அவுணர் போற்ற வீற்றிருந் தரசு செய்தான்.

இ—ள்: ஒற்றுவர் அ நீர்மை உணர்ந்து—தூதுவர்கள் அந்தக்கட்டளையைக் கேட்டு, உச்சிமேல் கொண்டு—சிரமேற்கொண்டு, தம் கோன் பொன் தடம் கழல்கள் தாழ்ந்து—தங்களரசனாகிய சூரபன்மனது அழகிய விசாலித்த பாதங் களை வணங்கி, புடவியை நோக்கிச் சென்றார்—பூமியை நோக்கிச்சென்றார்கள், அவர் போய பின்னர்—அவர்கள் போனபின்பு, மாறு இலா சூரபன்மன்—ஒப் பில்லாத சூரபன்மன், வெற்றி கொள் அவுணர் போற்ற வீற்றிருந்து அரசு செய்தான்—வெற்றியையுடைய அசுரர்கள் துதிக்க வீற்றிருந்து அரசியலை நடாத் தினான் எ—று. (64)

ஏதமில் சூர பன்மன் இளவல்தன் முடிவு நேடி
மாதுயர் கொண்டு தேறி வைகிய தன்மை சொற்றாம்
ஆதியங் கடவுள் மைந்தன் அமரர்தங் கிரியை நீங்கிப்
பூதல மீது வந்த நெறியினைப் புகல லுற்றாம்.

இ—ள்: ஏதம் இல் சூரபன்மன்-குற்றமற்ற சூரபன்மன், இளவல் தன் முடிவு நேடி மா துயர் கொண்டு தேறி வைகிய தன்மை சொற்றும்—தன்றம்பியாகிய தாரகனது மரணத்தையறிந்து பெருந்துக்கங்கொண்டு பின் தெளிந்திருந்த தன்மையையிதுகாறுங் கூறினேம் (இனி), ஆதியம் கடவுள் மைந்தன்—முதற் கடவுளாகிய சிவபிரானது புதல்வரான முருகவேள், அமரர் தம் கிரியை நீங்கி பூதலமீது வந்த நெறியினை புகலல் உற்றும்—(தாமெழுந்தருளியிருந்த) தேவ கிரியை நீங்கிப் பூமியில் வந்த வரலாற்றைச் சொல்லத் தொடங்குவோம் எ-று.

பகைவரால் நேருமிடர் முதலியனவற்றை முன்னொரு போதும் பெறுது வாழ்ந்தவனென்பார் 'ஏதமில் சூரபன்மன்' என்றார். (65)

அசுரேந்திரன் மகேந்திரஞ்செல் படலம் முற்றிற்று.

ஆகத்திரு விருத்தம் 1928

# 23. வழி நடைப் படலம்.



முருகக்கடவுள் வழி நடந்த செயலைக் கூறுதலின் இப்பெயர்த்தாயிற்று.

## இப்படலப்பொழிப்பு.

தேவகிரியிலெழுந்தருளியிருந்த முருகக்கடவுள் சூரியனுதித்தவுடன் புறப் பட்டுப் பரிசனர் சூழப் போய்க் கேதாரம், காசி, திருப்பருப்பதம் முதலாகிய தலங் களைத் தரிசித்து மண்ணியாற்றங்கரையில் வந்தனர் என்பதாம்.

குருமணி மகுடம் ஆறுங் குழைகளுந் திருவில் வீசத்
திருமணி வரையின் மேவுந் திருக்கைவேற் பெருமா னுக்குக்
கருமணி யாழிப் புத்தேள் கையுறை யாக ஆங்கோர்
பருமணி நீட்டிற் றென்னப் பானுவந் துதயஞ் செய்தான்.

இ—ள்: குரு மணி மகுடம் ஆறும் குழைகளும் திருவில் வீச—நிறம்விளங்கு கின்ற இரத்தினமிழைக்கப்பெற்ற ஆறு கிரீடங்களும் (பன்னிரண்டு) குண்டலங் களும் சிறந்த ஒளியைப் பரப்ப, திரு மணி வரையின் மேவும் வேல் திருக்கை பெருமானுக்கு — சிறந்த அழகிய தேவகிரியில் வீற்றிருக்கின்ற வேலாயுதத்தை யேந்திய திருக்கரத்தையுடைய முருகக்கடவுளுக்கு, கையுறை ஆக — உபகாரப் பொருளாக, கருமணி ஆழி புத்தேள் — கரிய இரத்தினங்களையுடைய சமுத்திரத் திற்கிறைவனாகிய வருணன், ஒரு பருமணி நீட்டிற்று என்ன — ஒரு பெரிய இரத் தினத்தை நீட்டியது போல, பானு வந்து உதயம் செய்தான் — சூரியன் வந்து தோன்றினன் எ—று.

கையுறை - கையிலுறப்படுவது. தாரகனையுங்கிரவுஞ்சத்தையுமழித்த நன்மைக் காக வருணன் ஒருபகாரத்தைக் கொடுக்க நினைந்து கையினால் ஒரு பருமணியை நீட்டினாற்போலச் சூரியனுதித்தானென்பது கருத்து. தற்குறிப்பேற்றவணி, கருமை ஆழியை விசேடித்தது.

### வேறு

மங்குல் வானமேல் வெய்யவன் கதிரென வழங்குஞ்
செங்கை கூப்பியே தொழுதிடு வானெனச் செல்ல
அங்கவ் வேலையில் அறுமுகன் கடவுள்வெற் பகன்று
பொங்கு தானையும் அமரருஞ் சூழ்தரப் போந்தான்.

இ—ள்: வெய்யவன் — சூரியன், கதிர் என வழங்கும் செம் கை கூப்பி தொழுதிடுவான் என — கிரணங்களென்று சொல்லப்படுகின்ற சிவந்தகையைக் குவித்துத் தொழுபவன்போல, மங்குல் வானமேல் செல்ல — மேகங்களுலாவு கின்ற ஆகாயத்திலுதிக்க, அவ்வேலையில் — அப்பொழுது. அறுமுகன் — முருகக் கடவுள், பொங்கு தானையும் அமரரும் சூழ்தர — மிகுந்த சேனைகளுந் தேவர்

களுஞ் சூழ, கடவுள் வெற்பு அகன்று — தேவகிரியை நீங்கி, போந்தான் — புறப்பட்டார் எ—று.

முற்செய்யுள் போலவே இச்செய்யுளுந் தற்குறிப்பேற்றவணி. (2)

தன்னை நீக்கியே சூழ்வுறுந் தவமுடைப் பிருங்கி
உன்னி நாடிய மறைகளின் முடிவினை யுணரா
என்னை யாளுடை யானிடஞ் சேர்வன்என் றிமையக்
கன்னி பூசனை செய்தகே தாரமுன் கண்டான்.

இ—ள்: தன்னை நீக்கி சூழ்வுறும் தவம் உடை பிருங்கி உன்னி நாடிய மறைகளின் முடிவினை உணரா — தம்மைவிட்டுச் சிவபிரானை மாத்திரம் வலம் வருகின்ற தவத்தையுடைய பிருங்கிமுனிவர் ஆராய்ந்துணர்ந்த வேதங்களின் முடிவையுணர்ந்து, என்னை ஆளுடையான் இடம் சேர்வன் என்று — என்னை யடிமையாகவுடைய சிவபிரானது இடப்பாகத்தில் வேறுதலின்றிச் சேர்ந்துகொள்வேனென்றெண்ணி, இமைய கன்னி பூசனை செய்த—பார்வதி தேவியார் பூசித்த, கேதாரம் — திருக்கேதாரத்தை, முன் கண்டான் — முதலிற்றரிசித்தார் எ—று.

தேவகிரியினின்று தென்றிசை நோக்கிவரும் வழியில் முதலெதிர்ப்படுவது திருக்கேதாரமாதலின் 'முன்கண்டான்' என்றார். இவ்வாறே மேற்கூறப்படுந் தலங்களும் முறைநோக்கி வைக்கப்பட்டிருத்தல் காண்க.

**தேவியார் திருக்கேதாரத்திற் பூசைசெய்த சரித்திரம்** :— பிருங்கி முனிவர் தேவியாரை நீக்கிச் சிவபிரானை மாத்திரம் வலஞ்செய்யத் தேவியர் சிவபிரானை நோக்கி 'இறைவரே! இவன் என்னை நீக்கித் தேவரீரை வலஞ்செய்தற்குக் காரணம் யாது' என்று வினவினர். சிவபிரான் வேதத்தையுணர்ந்த மெய்ஞ்ஞானியர் நின்னை வழிபடார்' என்று அருளிச் செய்தனர். உடனே தேவியார் சினந்து பிருங்கி முனிவரின் தேகத்தில் தமது கூறுயுள்ள சத்தியைக் கவர, அவர் வெற்றெலும்புந் தோலும் நரம்புமல்லது வேறொன்றுமின்றியொல்கி வலியற்றுத் தளர்ந்தனர். அப்பொழுது சிவபிரான் வேறுமொரு கால்கொடுத்துத் தளரா வண்ணம் நிறுவினர். அதன்மேல் தேவியார் திருக்கேதாரத்திற் சென்று பல காலம் பூசித்து இடப்பாகந் தமதுருவும் வலப்பாகஞ் சிவனுருவுமாகி அர்த்தநாரீசுர வடிவமெய்தினர் என்பதாம். (3)

பைய ராவின்மேற் கண்டுயில் பண்ணவன் றனக்குந்
தையல் பாதிய னேபரம் பொருளெனுந் தன்மை
மையன் மானுட ருணர்ந்திட மறைமுனி யெடுத்த
கைய தேயுரைத் திட்டதோர் காசியைக் கண்டான்.

இ—ள்: பை அராவின் மேல் கண்துயில் பண்ணவன் தனக்கும் தையல்பாதியனே பரம்பொருள் எனும் தன்மை — படம்பொருந்திய அனந்தனென்னுஞ் சர்ப்பமாகிய சயனத்தின் மேலறித் துயில் செய்கின்ற திருமாலினுஞ் சிவபிரானே மேலான கடவுளென்று நூல்கள் கூறுந்துணிபை, மையல் மானுடர் உணர்ந்திட — மயக்கத்தையுடைய மாந்தர்களறியும் பொருட்டு, மறை முனி எடுத்த கையதே உரைத்திட்டது — வியாசமுனிவருயர்த்திய கையே சான்று கூறிய, ஓர் காசியை—ஒப்பற்ற காசிப்பதியை, கண்டான்—தரிசித்தார் எ—று.

இச்சரித்திரத்தை முன்னர்க் கடவுள் வாழ்த்திற் பத்தொன்பதாஞ் செய்யுளிற் காட்டினம், மெய்ஞ்ஞானமுடையோர்க்கித்தகைய சான்றுகள் வேண்டற்பாற்றன்ருதலின் 'மையன்மானுடருணர்ந்திட' என்ருர். தையல்பாதியன்—உமாதேவியைப் பாதித்திருமேனியாகவுடையவர். மறைமுனி—வேதங்களை வகுத்த முனிவர். ஏகாரமிரண்டனுள் முன்னையது தேற்றம்; பின்னையது பிரிநிலை. (4)

பருப்ப தப்பெயர்ச் சிலாதனற் பாலகன் பரம
னிருப்ப வோர்வரை யாவனென் றருந்தவ மியற்றிப்
பொருப்ப தாகியே யீசனை முடியின்மேற் புனைந்த
திருப்ப ருப்பதத் தற்புதம் யாவையுந் தெரிந்தான்.

இ—ள்: பருப்பத பெயர் சிலாதன் நல் பாலகன்—பருவதரென்னும் பெயருடைய சிலாதமுனிவரது சிறந்தபுதல்வர், பரமன் இருப்ப ஓர் வரை ஆவன் என்று—சிவபிரான் வீற்றிருத்தற்கேற்ப ஒரு மலைவடிவாவேனென்று சிந்தித்து, அரும்தவம் இயற்றி — அருமையாகிய தவத்தைச் செய்து, பொருப்பது ஆகி — மலையாகி, ஈசனை முடியின்மேல் புனைந்த — சிவபிரானைச் சிரமேற் சுமந்த, திருப்பதத்து — ஸ்ரீ சைலத்தின்கண்ணுள்ள, அற்புதம் யாவையும் தெரிந்தான்—அதிசயமனைத்தையுந் தரிசித்தார் எ—று.

பருப்பதர் மலையானமையின் இத்தலம் திருப்பருப்பதமெனப் பெயர்பெற்றது. (5)

அண்ட மன்னுயி ரீன்றவ ளுடன் முனிவாகித்
தொண்ட கங்கெழு சுவாமிதன் மால்வரை துறந்து
மண்டு பாதலத் தேகியே யோர்குகை வழியே
பண்டு தான்வரு வேங்கட கிரியையும் பார்த்தான்.

இ—ள்: அண்ட மன் உயிர் ஈன்றவள் உடன் முனிவு ஆகி—அண்டங்களையும் அவற்றிலுள்ள நிலைபெற்ற உயிர்களையும் பெற்றருளிய உமையம்மையாரோடு கோபித்து, தொண்டகம் கெழு சுவாமி தன் மால் வரை துறந்து—குறிஞ்சிப்பறை முழங்குகின்ற சுவாமிமலையை நீங்கி, மண்டு பாதலத்து ஏகி—நெருங்கிய பாதலவுலகத்திற் சென்று, ஓர் குகை வழியே பண்டு தான் வரு—ஒரு முழையின்வழியாக முற்காலத்திற்ருமேறிவந்த, வேங்கட கிரியையும் — திருவேங்கட மலையையும், பார்த்தான் — தரிசித்தார் எ—று.

முருகக்கடவுள் மாதாவாகிய பார்ப்பதியாருடன் சினங்கொண்டு பிதாவாகிய சிவபிரானைப் பூசித்திருந்த காரணத்தாற் சுவாமி மலையென்னும் பெயர் வழங்கிற்று. வேங்கடமலையும் முருகக் கடவுட்குரியதே, அது இக்காலத்தில் திருமாலின் தலமாக வழங்குகின்றது. (6)

சிலந்தி மாசுண மும்மதக் கரிசிவ கோசன்
மலைந்தி டுஞ்சிலை வேட்டுவன் கீரனே மடவார்
பலந்த ரும்வழி பாட்டினுற் பாட்டினுற் பரனைக்
கலந்து முத்திசேர் தென்பெருங் கயிலையுங் கண்டான்.

இ—ள்: சிலந்தி—சிலந்தியும், மாசுணம்—பாம்பும், மும்மத கரி — மும்மதங்களையுடைய யானையும், சிவகோசன்—சிவகோசரியாரும், மலைந்திடும் சிலை வேட்

டுவன் — போர்செய்தற்குரிய வில்லையுடைய வேடராகிய கண்ணப்பநாயனரும், கீரன்—நக்கீரதேவரும், மடவார்—கன்னியர்களும், பலம் தரும் வழிபாட்டினல் — பலனைக் கொடுக்கின்ற பூசையினலும், பாட்டினல் — தோத்திரத்தினலும், பரனை கலந்து முத்திசேர் — சிவபிரானைச் சேர்ந்து வீடுபெற்ற, தென் பெரும் கயிலையும் கண்டான்—பெரிய திருக்காளத்தியையுந் தரிசித்தார் எ—று.

ஏ - எண். கீரன் பாட்டினலும் ஏனையோர் வழிபாட்டினலும் முத்திசேர்ந் தனர். சிவபிரான் கயாரணியத்திற் கல்லால விருக்ஷ நீழலில் வீற்றிருந்து வசிட்ட முனிவருக்குத் திரிபதார்த்த விலக்கணங்களை நெடுங்காலம் போதிக்க உமா தேவியார் பிரிவாற்ருது மைந்தருடன் வந்து வீற்றிருந்தனர். அதுகண்ட கயிலை மலையும் வந்திருந்தது. ஆதலால் அத்தலம் தென்கயிலையெனப் பெயர் பெற்றது.

**சிலந்தி முத்திபெற்ற சரித்திரம்:—** பிரமதேவர் படைத்தற்ருெழிலை நடத்திக் கொண்டிருக்க விச்சுவகன்மனது கண்ணினுதித்த மாதவவூறனென்பவன் அவரை மதியாது தானும் படைக்க முயன்ருன். பிரமதேவர் சிறியநூலையுண்டாக்குஞ் சிலந்தியாகுகவென்று சபித்தனர். பின்னர் அவன் அச்சாபத்தை நீக்கும்படி பிரார்த்திக்க, பிரமதேவர் 'கயராணியத்திலுள்ள வில்வ வனத்தையடைந்து சிலந்தியாகி நூலினுற் கோயிலமைத்துச் சிவபெருமானை வழிபட்டு முத்தியடை வாயாக' என்று அருள்புரிந்தனர். அவ்னவ்வாறே சென்று வழிபட்டு முத்தி சேர்ந்தனன் என்பதாம்.

**பாம்பு முத்திபெற்ற சரித்திரம்:—** திருக்கைலாச மலையிற் சிவபிரான் ஒரு நாட் சிங்காசனத்தி லெழுந்தருளத் திருவுளங்கொண்டு திருமேனியிலே புலித்தோ லாடை முதலியவற்றைப் புனைந்து ஆதிசேடன் முதலிய பாம்புகளை ஆபரண மாக அணியும்போது காளனென்னும் பாம்பைக் காணுது அது விரகங்கொண்டு மகளிர்பாலடைந்திருப்பதையறிந்து அழைத்து 'நீ கயராணியத்தையடைந்து பாம்பாயிருந்து எம்மை இரத்தினங்களால் வழிபட்டு அங்கே எம்மைப் பூசிக்க வரும் யானையுடன் பகைகொண்டு அதனைக்கொல்ல இருவீருமிறந்து முத்தி சேர்வீர்' என்று கட்டளையிட்டனர். அது அவ்வாறே சென்று பூசித்து முத்தி பெற்றது என்பதாம்.

**யானை முத்தி பெற்ற சரித்திரம்:—** திருக்கயிலாசமலையில் அத்தியென்னுங் கணத்தலைவன் சிவபிரானது கோயில் வாயிலையடைந்து 'யான் பிரானை வணங்க வேண்டும், உள்விடுப்பீராக' என்று கூற வாயிற் காவலாளர் 'பெருமான் தேவியாருடன் தனித்து வீற்றிருக்கின்ருர், அங்கே செல்லுதல் தகாது' என் றனர். கணத்தலைவன் அதனைக் கேளாது உட்புகத் தேவியார் முனிந்து யானை யாகும்படி சபித்துப் பின்னும் அக்கணநாதனது பிரார்த்தனைக் கிரங்கி 'நீ கயார ணியத்தில் யானையுருக்கொண்டு தென்கயிலாயப் பெருமானை வழிபடுங்காலத் தில் நினக்கும் அந்தப் பெருமானை வழிபடும் ஓர் பாம்புக்கும் பகைமை நிகழ, இருவருமடிந்து முத்தி சேர்வீர்' என்று அருள்செய்தனர். கணநாதன் அவ் வாறே யானையாகிச் சென்று வழிபட்டு முத்தியடைந்தான் என்பதாம்.

**சிவகோசரியார் முத்திபெற்ற சரித்திரம்:** சிவகோசரியார் ஆகமவிதிப்படிதினந்தோ றும் நித்தியபூசையைய்யற்றிவருநாளில் ஒரு நாள் பூசிக்க வரும்போது கண்ணப்ப நாயனர் நிவேதித்த ஊன்களிருப்பக் கண்டு மனம் வருந்தி அவற்றையெல்லா மகற்றி நீராடிப் பிராயச்சித்தஞ் செய்து பூசித்தார். பின்னுட்களினும் அவ் வாறே நிகழ மனம் வருந்தி 'எம்பெருமானே! தேவரீரது திருமுன்னிலையிலிவ் வாறு அசுசியைச் செய்கின்றனரே யான் யாது செய்வேன்' என்று கூறித் துயர

முற்று நித்திரை செய்தனர். காளத்தீசர் கனவிற்றேன்றி 'அப்பனே, திண்ண னென்னும் வேடன் எனக்கு நிவேதிக்கின்ற ஊன் யாகஞ்செய்வோர் தருமவிப் பாகத்தினுஞ் சிறந்தது, அவன் செய்யும் பூசையை மெய்யன்புடன் ஏற்றுக் கொண்டோம், அவனது பத்தி முதிர்வை உனக்குக் காண்பிப்போம், நாளை வந்து ஒளித்திருந்து காணுதி' என்று அருள்செய்து மறுநாள் தமது திருக்கண்ணி னின்று இரத்தம் பாயவிருந்து திண்ணனுர் கண்ணிடந்தப்பக் காட்டினர். பின் னும் அச்சிவகோசரியார் பலநாட் பூசித்துத் தேகாந்தத்தில் முத்தி பெற்றனர் என்பதாம்.

**வேட்டுவன் முத்திபெற்ற சரித்திரம்:—** பாண்டவர்களுளொருவனுகிய அருச் சுனன் துரியோதனன் முதலிய பகைவரைக் கொல்லும் பொருட்டுப் பாசு பதாஸ்திரம் பெற விரும்பி இந்திர நீலமலையில் அருந்தவஞ் செய்துவரு நாளில் அவனைக் கொல்லும்படி துரியோதனனுலேவப்பட்ட முகாசுரனென்பவன் பன்றி யுருக் கொண்டு அக் காட்டிலுள்ள முனிவர் முதலியோர்க்குத் துயர் விளைத் திருப்ப, சிவபிரான் அருச்சுனனுக்குத் தீங்கு நேரிடாவண்ணமதனையழிக்க வெண்ணி வேடவுருக் கொண்டு பன்றியையணுகி அதன்மேல் ஒரு பாணத்தை யேவினர். அது பட்டவுடன், பன்றி அஞ்சி மேகம்போல முழங்கி முனிவரிருக்கு மிடத்தை யணுக அவர்கள் அஞ்சியோடி அருச்சுனன்பாற் சென்றனர். அவ னெழுந்து பாணமேவிப் பன்றியைக் கொல்ல அதைத் தொடர்ந்து வந்த சிவ பிரான் 'இப் பன்றியை யான் கொன்றேன்' என்றனர். அருச்சுனன் சிவபிரானை நோக்கி 'வேடனே! நின் பாணம் இதை யுருவும் ஆற்றலுடைத்தன்று, யான் விடுத்த பாணமே கொன்றது' என்றனன். உடனே இருவர்க்குங் கலகம் விளைந்து போர் நிகழ அருச்சுனன் நாணற்ற தனது வில்லால் அவருக்கடிக்க, அவ்வடி சராசரங்கட்கெல்லாம் பட்டது. அப்பொழுது சிவபிரான் இடபாரூட ராய்க் காட்சி தந்து உனக்கு யாது வேண்டுமென்று வினவ அருச்சுனன் 'வெந் துயர்ப் பிறவியின் மெலியாது வீடுபெற அருள்க' என்று வேண்டினன். சிவ பிரான் நீ பகைவரையழிக்கப் பாசுபதாஸ்திரத்தை விரும்பித் தவம் புரிந்தனை யாதலின் முன்னர் அதனைப் பெற்றுக்கொள்ளுதி, நீ என்னை வேடனென்றிகழ்ந்து கூறியதனுற் பின்னேர் பிறப்பில் வேடுவனுகித் தென் கயிலையிற் பன்றி முதலிய விலங்குகளின் ஊனை நிவேதித்து எம்மைப் பூசித்து முத்திபெறுவை என்றனர். அவனவ்வாறே திண்ணனுரென்னும் பெயருடனவதரித்துப் பூசித்து முத்தி யடைந்தனன் என்பதாம்.

**நக்கீரதேவர் பாடி முத்திபெற்ற சரித்திரம்:—** பாண்டி நாட்டிலே மதுரைப் பதியிலே சங்கப் புலவர்க்கு வேண்டிய சிறப்புக்களை நடாத்தி வந்த வங்கிய சூடா மணி யென்னும் பாண்டியன் ஒருநாள் மேன் மாளிகையில் மனைவியோடிருக் கும் பொழுது சிறிய தென்றலோடு கலந்து ஒரு திவ்விய மணம் வீச அவன் அதைத் தனது மனைவியினது கூந்தலின் மணமென்றையுற்றுப் பிறர்க்குப் புலப்படுத்தாது தன் மனத்தடக்கிக் கொண்டு ஆயிரம் பொன்னை ஓர் முடிப் பாக்கி 'யான் ஐயுற்ற பொருளை விளங்கச் செய்யுளியற்றும் புலவர் இதனைக் கொள்க' என்று கூறிச் சங்க மண்டபத்திற்றூக்கினுன். புலவர் அரசன் கருத்தை யமைத்துப் பாடாமையால் அக்கிழி தூக்கப்பட்டவாறேயிருந்தது. சில நாளின் பின் மதுரைச் சோமசுந்தரக் கடவுளை வழிபடுந் தருமியென்பவர் விவாகஞ் செய்வதற்குப் பொருள் வேண்டுமென்று சோமசுந்தரக் கடவுளை வணங்கிப் பிரார்த் தித்தனர். சோமசுந்தரக்கடவுள் 'அன்பனே! பாண்டியன் தனது கருத்தை

விளக்கிச் செய்யுள் செய்யும் புலவர் கைக் கொள்ளும்படி ஆயிரம் பொன்னமைந்த ஓர் கிழியைச் சங்க மண்டபத்திற் றூக்கியிருக்கின்றான். இப் பாடலைக் கூறிப் பெற்றுக்கொள்வாயாக' என்று கட்டளையிட்டு ''கொங்குதேர் வாழ்க்கையஞ் சிறைத்தும்பி - காமஞ் செப்பாது கண்டது மொழிமோ - பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற் - செறியெயிற் றரிவை கூந்தலி - னறியவு முளவோ நீயறியும் பூவே'' என்னுந் திருப்பாசுரத்தையளித்தனர். தருமி அப் பாடலை அரசன் முன் கூற அரசன் தனது எண்ணத்தை யடக்கியிருத்தலாலுவந்து 'இப் பாடலைச் சங்கப்புலவர்பாற் சென்று அரங்கேற்றுவீராக' என்றனன். தருமி சென்று அப் புலவர்கள் பாலுரைக்க அவர்கள் மகிழும் பொழுது நக்கீரதேவர் 'இப் பாடல் குற்றமுடைத்து' என்றார். அது கேட்ட தருமி வாட்டமுற்றுச் சோமசுந்தரக் கடவுளுக்கு விண்ணப்பஞ் செய்ய அப்பெருமான் புலவர் வடிவங் கொண்டு சங்க மண்டபத்திற்கு வந்து 'குற்றமற்ற நமது கவியிற் குற்றங் கூறினார் யாவர்' என்று வினவினர். உடனே நக்கீரதேவர் 'யானே கூறினேன்' என்று தருக்கி மொழிதலும் பெருமான் 'குற்றம் யாது' என்று வினவினர். நக்கீரதேவர் 'கூந்தலுக் கியற்கை மணமில்லையாகவும் உள்ளதாகக் கூறியது குற்றம்' என்றனர். மீட்டும் பெருமான் 'அரம்பையர் கூந்தலுக்கு மணம் இயற்கையன்றோ' என்று கூற 'அதுவும் மந்தார மலரொடு கலந்து மணத்தலாற் செயற்கையே' என்றனர். சோமசுந்தக்கடவுள் 'நீ வழிபட்டேத்தும் காளத்திநாதரது பாகத்தமர்ந்த ஞானப் பூங்கோதையம்மையினது கூந்தல் எத்தன்மையது' என வினவ அதுவுஞ் செயற்கையே யென்றனர். பின்னர் நெற்றிக் கண்ணையுஞ் சடை முடியையுங் காட்டியருள 'நீர் வடிவ முழுதுங் கண்களைக் காட்டினாலுங் குற்றமே, இதற்குப் பயந்து எனது கொள்கையை விடேன்' என்றுரைத்தனர். கடவுள் அம்பிகையின் கூந்தலைப் பழித்த காரணத்தாற் குட்டநோய் கொண்டலையும்படி சபிக்க உடனே நக்கீரதேவர் அஞ்சிப் பணிந்து 'இச் சாபப்பிணி நீங்கத் திருவருள் புரிக' என்றனர். பெருமான் திருவுளமிரங்கி 'கயிலையைக் காணின் இப்பிணி நீங்கும்' என்று பணித்து மறைந்தருளினர். நக்கீரதேவர் நோய் வருத்த முன் கயிலையைத் தரிசிக்கு நோக்கமாக வட திசை நோக்கி நடந்து இமயமலை சேர்ந்து ஓர் தடாகத்தில் நீராடி நியதி முடித்து அதன் கரையிலுள்ள ஆலமரத்தின் கீழ் தியானத்திருந்து அம் மரத்திலை யொன்று பாதி சலத்திலும் பாதி கரையிலுமாகி வீழ்ந்து சலத்தில் வீழ்ந்த பாகம் மீனும் கரையில் வீழ்ந்தபாகம் பறவையுமாகி ஒன்றை யொன் றீர்ப்பக் கண்டு தியான நிலை தவறிப் பூதத்தால் உணவினிமித்தங் கவரப் பெற்றுத் திருமுருகாற்றுப் படையை யருளிச் செய்து இடர் நீக்கித் தமக்குச் சாப நேர்ந்த வரலாற்றை முருகக் கடவுளுக்கு விண்ணப்பஞ் செய்து அவராற் காட்டப் பெற்ற தடாகத்தில் மூழ்கித் தென் கயிலையைத் தரிசித்து வியாதி நீங்கிக் கயிலை பாதி காளத்தி பாதியென்னும் அந்தாதிப் பிரபந்தத்தைப் பாடி முத்தி பெற்றார் என்பதாம்.

**கன்னியர்கள் முத்திபெற்ற சரித்திரம் :—** மதுரைப் பதியிலே மாணிக்கவல்லி யென்னும் பரத்தைக்குப் புதல்வியரிருவர் பிறந்தனர். அவர்கள் பாலியத்திற் றானே சிவபத்தியுடையராய் அன்னையாற் பயிற்றப்படுங் காமக் கல்விகளையும் பொருள் தேடு முபாயங்களையும் வெறுத்து நக்கீரதேவர் பாடிய அந்தாதியை யோதித் தென் கயிலையைத் தரிசிக்க ஆவல் கொண்டிருந்தனர். தாயாகிய மாணிக்கவல்லி காளையரை மயக்கிப் பொருள் தேடாது இவ் விளமைப் பிராயத்தை வாளா போக்குகின்றீர்களே யென்று பலவாறு சினந்து பேசியும் அவர்களதற் கிணங்காமையால் மணிமந்திர ஔடதங்களாலிவர்களுக்குக் காமவிச்சை

யுண்டாக்குவோர் பொருள் கொடாமலே யிவரை யனுபவிக்கக் கடவரென்று யாவர்க்கும் வெளிப்படுத்த, இதையறிந்த கன்னியர் இவளை நீங்கி என்று தென் கயிலையைத் தரிசிக்கப் பெறுவோமென்னுஞ் சிந்தனையோடு அரவின் வாய்த் தேரை போலஞ்சியிருந்தனர். அக் காலத்தில் இரண்டு கள்வர் இவரணிந்திருக் கும் ஆடையாபரண முதலியவற்றைப் பறிக்க நினைத்துத் தவ வேடம் பூண்டு காளத்தி காக்க வென்றுரைத்துக் கொண்டு கன்னியரைச் சார்ந்து காளத்திக்குச் செல்கின்றோமென்று கூறி மருட்டி அன்னையறியாவண்ணம் அர்த்தயாமத்தில் தம்மை யெதிர்ப்படுமாறு இடங் கற்பித்துப் போயினர். கன்னியர் தம்முயிர் போன்ற இரண்டு சேடியருடன் வேண்டிய திரவியங்களைக் கொண்டு அன்னை யறியாவண்ணம் அவருடனடந்து வழியில் நாடோறும் எதிர்ப்படுந் தலங்களைத் தரிசித்துக் காளத்திக்குச் சமீபமாகச் செல்லுங்கால் கள்வர் தம்முயிரைச் சிதைத் துப் பொருளைக் கவர்ந்து செல்ல முயலுங் குறிப்பையுணர்ந்து பெருமானைத் தியானித்தனர். சிவபிரான் மலர் கொய்து தொடுக்குந் தொண்டர் வேடந் தாங்கி வந்து அவர்களை யழைத்துக் கொண்டு காளத்தி சேர்ந்து அங்குள்ள அற் புதங்களைக் காட்டி மறைந்தருளினர். அக் கன்னியர் பெருமானைப் பூசித்து முத்தியெய்தினர் என்பதாம். (7)

கொடிய வெஞ்சினக் காளியிக் குவலய முழுதும்
முடிவு செய்வன்என் றெழுந்தநாள் முளரியான் முதலோர்
அடைய அஞ்சலும் அவள்செருக் கழிவுற வழியாக்
கடவுள் ஆடலால் வென்றதோர் வடவனங் கண்டான்.

இ-ள்: கொடிய வெம் சின காளி—மிகக் கொடிய கோபத்தையுடைய காளியானவள், இ குவலயம் முழுதும் முடிவு செய்வன் என்று எழுந்த நாள்— இப் பூவுலக முழுவதையு மழித்து விடுவேனென்று கிளர்ந்த நாளில், முளரியான் முதலோர் அடைய அஞ்சலும்—பிரமா முதலிய தேவர்களனைவரும் பயப்படு தலும், அவள் செருக்கு அழிவுற—அவளது கர்வமழியும்படி, அழியா கடவுள்— அழிவில்லாத சிவபிரான், ஆடலால் வென்றது—ஊர்த்துவ தாண்டவத்தால் வெற்றி பெற்றருளிய, வட வனம்—திருவாலங்காட்டை, கண்டான்—தரிசித் தார் எ—று.

காளி செருக்கழிய ஆடலால் வென்றதை "மடிதரு முலக மென்ன வயங் கருணல்கி மெல்ல-வடி பெயர்த் தாடல் செய்ய வருகுறுங் காளி நோக்கி-யொடி வுறு நாணின் மேவி யொளிமுக மிறைஞ்சி யொல்கி-வடிவுறு பாவை போலச் செயலற மயங்கி நின்றாள்" என்னுந் திருவாலங்காட்டுச் செய்யுளானறிக. (8)

அம்பு ராசிகொள் பிரளயத் தினுமழி வின்றி
உம்பர் மாலயற் குறையுளாய்க் கயிலைபோ லொன்றாய்
எம்பி ரான்தனி மாநிழல் தன்னில்வீற் றிருக்குங்
கம்பை சூழ்தரு காஞ்சியந் திருநகர் கண்டான்.

இ-ள்: அம்புராசி கொள் பிரளயத்தினும் அழிவு இன்றி—உலகத்தைக் கடல் மூடுகின்ற இறுதிக் காலத்திலுமழிதலின்றி, உம்பர் மால் அயற்கு உறை யுள் ஆய்—தேவர்கள் திருமால் பிரமா என்னுமிவர்களுக்கிருப்பிடமாய், கயிலை போல் ஒன்றாய்—திருக்கைலாச மலையைப் போன்ற ஒரு சிறந்த இருக்கையாகி, எம் பிரான் தனி மா நிழல் தன்னில் வீற்றிருக்கும்—எங்கள் தலைவராகிய சிவ

பிரான் ஒப்பற்ற மாமர நீழலிலெழுந்தருளியிருக்கப் பெற்ற, கம்பை சூழ்தரு காஞ்சியம் திரு நகர்—கம்பை நதி சூழ்ந்த சிறந்த காஞ்சீபுரத்தை, கண்டான்—தரிசித்தார் எ—று.

இச் செய்யுளிற் சுட்டிய காஞ்சி மகத்துவங்களையும் பிற் செய்யுளிற் சுட்டிய சரித்திரங்களையுந் திருநகரப் படலத்துக் காண்க. (9)

ஏல வார்குழல் உமையவள் பூசைகொண் டிருந்த
மூல கார மாகிய முதல்வன்ஆ லயமும்
மாலும் வேதனும் அமரரும் வழிபடு மற்றை
ஆல யங்களாய் உள்ளவுங் கண்டனன் ஐயன்.

இ—ள்: ஏல வார் குழல் உமையவள் பூசை கொண்டு இருந்த மூலகாரணம் ஆகிய முதல்வன் ஆலயமும்—மயிர்ச் சாந்து பூசப் பெற்ற நீண்ட கூந்தலையுடைய காமாட்சியம்மையாரது பூசையையேற்றுக் கொண்டிருந்த முதற் காரணராகிய திருவேகம்பநாதரது திருக்கோயிலையும், மாலும் வேதனும் அமரரும் வழிபடும் மற்றை ஆலயங்கள் ஆய் உள்ளவும்—திரு மாலும் பிரமதேவரும் ஏனைய தேவர்களும் பூசித்த ஏனைய கோயில்களையும், ஐயன் கண்டனன்—முருகக்கடவுள் தரிசித்தார் எ—று.

மற்றையாலயங்களின் பெயர்களைத் திருநகரப் படலத்து எண்பத்தொன்பதாஞ் செய்யுளிற் காண்க. (10)

வேறு

என்னிகர் எவரு மில்லென் றிருவரும் இகலும் எல்லை
அன்னவர் நடுவு தோன்றி அடிமுடி தெரியா தாகி
உன்னினர் தங்கட் கெல்லாம் ஒல்லையின் முத்தி நல்கித்
தன்னிகர் இன்றி நின்ற தழற்பெருஞ் சயிலங் கண்டான்.

இ—ள்: என் நிகர் எவரும் இல் என்று இருவரும் இகலும் எல்லை—என்னையொப்பாரொருவருமில்லையென்று பிரம விஷ்ணுக்களிருவரும் ஒருவரோடொருவர் பகைத்தபொழுது, அன்னவர் நடுவு தோன்றி—அவர்களுக்கு நடுவே தோற்றி, அடி முடி தெரியாது ஆகி—அடியு முடியுங் காணப்படாததாய், உன்னினர் தங்கட்கு எல்லாம் ஒல்லையில் முத்தி நல்கி—நினைத்தார்க்கெல்லாம் விரைவில் வீடு பேற்றையுதவி, தன் நிகர் இன்றி நின்ற—தனக் கொப்பின்றி நிலை பெற்ற பெரும் தழல் சயிலம்—பெரிய திருவண்ணாமலையை, கண்டான்—தரிசித்தார் எ—று.

உன்னினர் தங்கட்கெல்லா மொல்லையின் முத்தி நல்குதலை ''துவக்கற வறிந்து பிறக்குமாரூருந் துயர்ந்திடா தடைந்துகாண் மன்று-முவப்புடனிலத்து மரிக்குமோர் பதியு மொக்குமோ நினைக்கு நின்னகரைப்-பவக் கடல் கடந்து முத்தியங் கரையிற் படர்பவர் திகைப்பற நோக்கித்-தவக்கல நடத்த வுயர்ந்தெழுஞ் சோண சயிலனே கயிலை நாயகனே'' என்னுஞ் சிவப்பிரகாச சுவாமிகள் திருவாக்கானறிக. (11)

மண்ணுல கிறைவன் செய்யும் மணந்தனை விலக்கி எண்டோள்
அண்ணலோர் விருத்தன் போல்வந் தாவண வோலை காட்டித்
துண்ணென வழக்கில் வென்று சுந்தரன் றனையாட் கொள்ளும்
பெண்ணையம் புனல்சூழ் வெண்ணெய்ப் பெரும்பதி தனையுங் கண்டான்.

இ—ள்: எண் தோள் அண்ணல்—எட்டுப் புயங்களையுடைய சிவபிரான், ஓர் விருத்தன் போல் வந்து—ஒரு விருத்தப் பிராமணர் போல் (வடிவங் கொண்டு) வந்து, ஆவண ஓலை காட்டி—அடிமையோலையைக் காண்பித்து, துண் என வழக்கில் வென்று—விரைவாக வழக்கில் வெற்றி கொண்டு, மண் உலகு இறைவன் செய்யும் மணம் தனை விலக்கி—நில்வுலகத்தரசராகிய நரசிங்கமுனையரையராற் செய்விக்கப்பட்ட விவாகத்தைத் தடுத்து, சுந்தரன் தனை ஆட்கொள்ளும்—சுந்தரமூர்த்தி நாயனாரை அடிமை கொண்டருளிய, பெண்ணையம் புனல் சூழ்—பெண்ணை நதி சூழ்ந்த, வெண்ணை பெரும் பதி தனையும்—பெரிய திருவெண்ணை நல்லூரையும், கண்டான்—தரிசித்தார் எ—று.

ஆவணம் - கடைவீதி. அவ் வீதியில் விற்கும்போதெழுதப்படுமோலையாதலின் அடிமையோலைக்கு ஆவணவோலையெனப் பெயரெய்திற்று. நரசிங்கமுனையரையர் தமக்குப் பிள்ளைமை பூண்டு வளர்ந்த சுந்தரமூர்த்திநாயனார்க்குச் சடங்கவி சிவாசாரியரது மகளை மணஞ் செய்யுஞ் சபையிற் சிவபிரான் விருத்தப் பிராமண வேடங்கொண்டு வந்து அந் நாயனாரைத் தமக்கடிமையென்று கூறி மணஞ்செய்யாவண்ணந் தடுத்து அவர் மறுக்க அதற்குச் சாதனமாக அடிமையோலை காட்டித் தாங் கூறிய வழக்கை வென்று ஆட்கொண்டு திருவெண்ணை நல்லூரிற் சென்று மறைந்தருளினர் என்பது சரித்திரம். பெண்ணை நல்லூர் என்பது வெண்ணை நல்லூரென விகாரமாய் வழங்கியது போலும். (12)

தூசினால் அம்மை வீசத் தொடையின்மேற் கிடத்தித் துஞ்சும்
மாசிலா வுயிர்கட் கெல்லாம் அஞ்செழுத் தியல்பு கூறி
ஈசனே தனது கோலம் ஈந்திடு மியல்பால் அந்தக்
காசியின் விழுமி தான முதுகுன்ற வரையுங் கண்டான்.

இ—ள்: அம்மை தூசினால் வீச—உமாதேவியார் (சிரமந் தீர்த்தற்பொருட்டு) வஸ்திரத்தினால் வீச, தொடையின் மேல் கிடத்தி—தமது திருத்தொடைகளின் மேற் கிடத்தி, துஞ்சும் ஆசு இலா உயிர்கட்கு எல்லாம்—இறக்கின்ற குற்றமற்ற ஆன்மாக்களுக்கெல்லாம், அஞ்செழுத்து இயல்பு கூறி—பஞ்சாக்ஷரத்தின் மான்மியத்தை உபதேசித்து, ஈசனே தனது கோலம் ஈந்திடும் இயல்பால்—சிவபிரானே தமது திருவுருவத்தையருளுகின்ற தன்மையால், அந்த காசியின் விழுமிது ஆன—அந்தக் காசிப் பதியினுஞ் சிறந்ததாயிருக்கின்ற, முதுகுன்ற வரையும்—விருத்தாசலத்தையும், கண்டான்—தரிசித்தார் எ—று.

ஏகாரம் ஆன்மாக்கள் விரும்பாதிருக்கவும் வலிந்தாட் கொள்ளுதலை விளக்கிற்று. விருத்தாசலங் காசியிற் சிறந்ததென்பதை ''மாசி யதிகந் துறந்தார் மகிழ் குன்றை மாநகரோ-காசி யதிகங்கொ லோவென்பி ராயினக் காசியெனப்-பேசி யதிகந் தகன்றிருந் தான்பரன் பேரடலை-பூசி யதிகம் பரனீங்கிலானிப் புரியினையே'' என்னுஞ் சிவப்பிரகாச சுவாமிகள் திருவாக்கானுமறிக. (13)

விரிகனல் வேள்வி தன்னில் வியன்றலை அரிந்து வீட்டிப்
பொருவரு தவத்தை யாற்றும் பதஞ்சலி புலிக்கால் அண்ணல்
இருவரும் உணர்வாற் காண எல்லையில் அருளா லீசன்
திருநட வியற்கை காட்டுந் தில்லைமூ தூரைக் கண்டான்.

இ—ள்: விரிகனல் வேள்வி தன்னில் வியன் தலே அரிந்து வீட்டி பொரு அறு தவத்தை ஆற்றும் பதஞ்சலி—பரந்த அக்கினியை வளர்த்துச் செய்கின்ற யாகத்திற் பெரிய தலேயை யரிந்து விழுத்தி ஒப்பற்ற தவத்தைச் செய்த பதஞ் சலி முனிவரும், புலிக்கால் அண்ணல்—வியாக்கிரபாத முனிவருமாகிய, இரு வரும்—இரண்டு அடியார்களும், உணர்வால் காண—மெய்யறிவுடன் றரிசிக்கும் படி, எல்லே இல் அருளால்—அளவிறந்த கருணேயினுல் ஈசன்—சிவபிரான், திரு நட இயற்கை காட்டும்—திரு நிருத்தத்தினியல்பைக் காண்பித்த, தில்லே முது ஊரை—பழைய சிதம்பரத்தை, கண்டான்—தரிசித்தார் எ—று.

பதஞ்சலி-அஞ்சலியில் வீழ்ந்தவர். பதத்+அஞ்சலி=பதஞ்சலி. முன்னெரு காலத்தில் திருமால் பாற்கடலிற் சேட சயனத்தினின்றுமெழுந்து கைகளேச் சிரத்திற் குவித்துப் பதுமாசனமாகி அரகரசங்கரவென் றுச்சரித்தனர். சேடன் அஃதென்னேயென, திருமால் தாருக வனத்திற் சிவபிரான் செய்தருளிய இன்ப நிருத்தத்தின் ஆனந்தமென, சேடனும் அதனேத் தரிசிக்கத் தவங் கிடந்தான். பரமபதி அத் தவத்திற்கெளிவந்து 'அன்பனே! ஆயிரம் பணுமகுடமுள்ள இவ் வுருவுடன் போவையேலுலகமஞ்சும். ஆதலால் நின்னேப் புத்திரனுக்க விரும்பிய அத்திரி முனிவரது மனேயாரின் அஞ்சலியில் சிறிய உருவத்தோடு போய் வீழ்ந்து பதஞ்சலியெனப் பெயர் பெற்று அவ்வுருவத்தோடு வந்து அங்குள்ள வியாக்கிரபாதனுடன் தரிசிப்பாயாக' என்று கூறித் தைமாதத்திற் பூச நக்ஷத் திரமுங் குருவாரமுங் கூடிய சுபதினத்தில் மத்தியானத்தில் திரு நிருத்தங் காட்டினர். சிவபூசையின் பொருட்டுக் கொய்யு மலர்கள் பகற் காலத்தில் வண்டு களாலெச்சிற்படுதலால் இரவிற்றுனே யெடுத்துக் கொள்ள விரும்பிச் சிவபிரா னிடத்திற் புலிக் கண்ணும் புலிக் காலும் பெற்றவர் வியாக்கிரபாதரென்க. (14)

தண்டளிர்ச் சோலேத் தில்லேத் தபனிய மன்றி லென்றுந்
தொண்டையங் கனிவாய் மாது தொழச்சுராட் புருடன் உள்ளத்
தண்டரு மதிக்க லாற்று அற்புதத் தனிக்கூத் தாடல்
கண்டனன் கசிவால் உள்ளங் களிப்புற வணங்கிப் போனுன்.

இ—ள்: தண் தளிர் சோலே தில்லே தபனிய மன்றில்—தண்மையான தளிர் களேயுடைய சோலே சூழ்ந்த தில்லேப்பதியின் கணுள்ள கனக சபையில், என்றும்— எப்போதும், தொண்டையம் கனி வாய் மாது தொழ—கொவ்வங் கனியைப் போன்ற அதரத்தையுடைய உமையம்மையார் (நிருத்தசாக்ஷியாய் நின்று) கைதொழ, சுராட்புருடன் உள்ளத்து—விராட்டென்னும் புருடனது இருதயத் தில், அண்டரும் மதிக்கல் ஆற்று அற்புத தனி கூத்து ஆடல்—தேவர்களும் மதித்தற்கியலாத அதிசயத்தை விளேக்கின்ற ஒப்பற்ற திருநடனத்தை யியற்று தலே, கண்டனன்—தரிசித்து, கசிவால் உள்ளம் களிப்பு உற வணங்கி போனுன்— அன்பினேடு மனங் களிப்பையடையப் பணிந்து அப்பாற் போனுர் எ—று.

தண்மை-செழிப்பு. மன்றில் ஆடல் என இயையும். விராட்டென்பது பிரமாண்டத்தைத் தூல தேகமாக அபிமானிக்கும் ஆதிபுருஷன். இந்த விராட் புருடனுக்குச் சிதம்பரம் இருதயமும் பிற தலங்கள் பிறவுறுப்புக்களுமாம். பஞ்சகிருத்திய நடனமாதலின் 'அண்டரு மதிக்கலாற்று வற்புதத் தனிக் கூத்து' என்றுர். (15)

குடமுனி கரத்தில் ஏந்துங் குண்டிகை இருந்து நீங்கிப்
படிதனில் வேறு வேருய்ப் பற்பல நாமந் தாங்கிக்
கடல்கிளர்ந் தென்னச் செல்லுங் காவிரி யென்னு மாற்றின்
வடகரை மண்ணி யின்பால் வந்தனன் கருணை வள்ளல்.

**இ—ள்:** குடமுனி கரத்தில் ஏந்தும் குண்டிகை இருந்தும்—அகத்திய முனிவர் கையிற் ருங்கிய கமண்டலத்தினின்றும், படிதனில் நீங்கி—பூவுலகத்தி லிழிந்து, வேறு வேறு ஆய் பற்பல நாமம் தாங்கி—வெவ்வேறு பிரிவாய்ப் பல பல பெயர்களைப் பெற்று, கடல் கிளர்ந்து என்ன செல்லும்—சமுத்திரம் பெருகி வருவது போலப் பாய்கின்ற, காவிரி என்னும் ஆற்றின்—காவேரியென்னும் நதியினது, வடகரை—வட பாகத்திலுள்ள, மண்ணியின் பால்—மண்ணி நதிக்கரையில், கருணை வள்ளல் வந்தனன்—அருள் வள்ளலாகிய முருகக்கடவுள் வந்து சேர்ந்தார் எ—று. *(16)*

வழி நடைப் படலம் முற்றிற்று.

**ஆகத்திருவிருத்தம் 1644**

# 24. குமாரபுரிப் படலம்

குமாரக்கடவுளுக்கு ஓர் புரியமைத்தமையைக் கூறுதலின் இப்பெயர்த்தா யிற்று.

## இப்படலப்பொழிப்பு.

முருகக்கடவுள் சூரியனத்தமிக்கும்போது மண்ணியாற்றங்கரையில் வந்து பிரமா முதலிய தேவர்களின் வேண்டுகோட்படி அவ்விடத்தில் வீற்றிருக்கச் சம்ம தித்துத் தேவதச்சனைக்கொண்டு ஒரு நகரமைப்பித்து அந்நகரிலெழுந்தருளியிருந் தார். வீரவாகு முதலிய வீரர்களும் பூதர்களுந் தேவர்களுந் தத்தமக்கு இயற் றப்பட்ட இருக்கைகளிற் போயிருந்தனர். பின்னர்ச் சீர்காழிப்பதியிலுள்ள வன தேவதை இந்திரனிடத்து வந்து அவனதும் இந்திராணியினதும் ஆபரணங்கள் பொதிந்த ஒரு கிழியை முன்வைத்து 'தேவராசனே! நீர் என்னிடம் அடைக்கல மாகத் தந்த இக்கிழியை ஏற்றுக்கொள்க' என்று கூறிற்று. இந்திரன் அதனை வாங்கி யவிழ்த்து மனைவியினுபரணங்கள் மேலிருக்கக்கண்டு அவளை நினைந்து காம மீறிக் கலங்கி அக்கிழியை முடித்து சேமித்துவைக்கும்படி தன்பரிசனரிடங்கொடுத்து வனதேவதையை யனுப்பிவிட்டு இரவுமுழுதுங் காமநோயாற் கவன்று சூரியோதய மானவுடன் மனந்தெளிந்து முருகக் கடவுளை யணுகினன். மேல் முருகக்கடவுள் ஒரு திருக்கோயிலை யமைப்பித்து அதிற் சிவபிரானைப் பூசித்துச் சர்வசங்காரப் படைக்கலத்தைப் பெற்றுச் சேனைகளுடன் புறப்பட்டு வழியில் திருவிடைமருதூர் திருமயிலாடுதுறை முதலிய தலங்களைத் தரிசித்தார் என்பதாம்.

அளவில் பூதவெம் படையொடு மண்ணியா றதன்கட்
குளகன் வந்துழி எழுந்திடு பூழிவான் குறுகி
ஒளிரும் வெய்யவன் கதிர்தனை மறைத்தலா லோடி
வளைநெ டுங்கடல் மூழ்குவான் புக்கென மறைந்தான்.

இ—ள்: குளகன்—முருகக்கடவுள், அளவு இல் பூத வெம் படையொடு—எண் ணிறந்த கொடிய பூதசேனைகளுடன், மண்ணியாறு அதன் கண் வந்துழி—மண்ணி யாற்றங்கரையில் வந்தபொழுது, எழுந்திடு பூழிவான் குறுகி—கிளம்பிய தூளிகள் ஆகாயத்திற் செறிந்து, கதிர்தனை மறைத்தலால்—கிரணங்களை மறைத்தலினால், ஓடி—ஓடிப்போய், வளை நெடும் கடல் மூழ்குவான் புக்கு என — பூமியை வளைந்து நிற்கின்ற நீண்ட சமுத்திரத்தில் நீராடும்படி சென்றாற்போல, ஒளிரும் வெய்ய வன் மறைந்தான்—பிரகாசிக்கின்ற சூரியன் மறைந்தான் எ—று.

குழகன் — ழகர ளகரவொற்றுமைபற்றி எதுகைக்கிணங்கக் குளகனென்று யிற்று. வந்துழி மறைந்தான் என இயையும். நீராட நினைத்தல் - மேனியிற் செறிந்த பூழியைக் கழுவுதற்கென்க. தற்குறிப்பேற்றம்.

மறைந்த காலையில் தோன்றின மாலையு நிசியுங்
குறைந்த திங்கள்வந் துதித்தது தாரகை குறுகி
நிறைந்தெ ழுந்தவோர் மன்னவன் இறந்துழி நீங்கா
துறைந்த ஒன்னலர் யாவருங் கிளர்ந்தவா றெுப்ப.

இ—ள்: மறைந்த காலையில்—சூரியனத்தமித்தபொழுது, மாலையும் நிசியும் தோன்றிய—மாலைக்காலமும் இராக்காலமும் வந்தன, குறைந்த திங்கள் வந்து உதித்தது—பிறைச்சந்திரன் வந்து தோன்றியது, தாரகை குறுகி நிறைந்து எழுந்த—நக்ஷத்திரங்கள் செறிந்து நிறைந்து தோற்றின, ஓர் மன்னவன் இறந்துழி நீங்காது உறைந்த ஒன்னலர் யாவரும் கிளர்ந்தவாறு ஒப்ப — ஒரு சக்கிரவர்த்தி யிறந்தபோது விலகாமலமைந்திருந்த பகையரசர் யாவரும் நிமிர்ந்த தன்மையைப் போல எ—று.

ஒப்ப என்பது தோன்றிய முதலிய வினைமுற்றுக்களுடன் தனித்தனி இயையும், ஓரரசன் உலகமனைத்தையு மொருகுடைக் கீழ்ப்படுத்தி யரசியற்றலால் அவனுக்கமைந்திருந்த சிற்றரசர் அவனிறந்துழித் தம்வயத்தராய்த் தலைப்படல் போல, சூரியனுதித்தலாலொளிகுன்றி மறைந்திருந்த தாரகை முதலியன அவனத்தமித்துழி ஒளிபெற்று விளங்கின என்பது கருத்து. தற்குறிப்பேற்றம். (2)

மிக்க தாருக வனத்தினை யொத்தது விசும்பில்
தொக்க பேரிருள் மாதரொத் தனஉடுத் தோற்றஞ்
செக்கர் ஈசனை யொத்தநொண் போனகஞ் செறிந்த
கைக்க பாலம தொத்தது கதிரிளம் பிறையே.

இ—ள்: விசும்பில் தொக்க பேர் இருள்—ஆகாயத்திற் செறிந்த பெரிய இருளானது, மிக்க தாருக வனத்தினை ஒத்தது—சிறந்த தாருக வனத்தை நிகர்த்தது, உடுத் தோற்றம் மாதர் ஒத்தன—நக்ஷத்திரங்களின் காட்சி அவ் வனத்துள்ள முனிபத்தினிகளை நிகர்த்தது, செக்கர் ஈசனை ஒத்தது—செவ்வானம் அங்கே வந்த சிவபிரானை நிகர்த்தது, கதிர் இளம் பிறை—ஒளி பொருந்திய இளஞ் சந்திரன், ஒண் போனகம் செறிந்த கை கபாலமது ஒத்தது—ஒளி பொருந்திய அன்னம் நிறைந்த கையிலேந்திய பிரம கபாலத்தை நிகர்த்தது எ—று.

தாருகவனம் பச்சிலை செறிந்த மரங்களாலடர்ந்திருத்தலின் இருட்குவமையாயிற்று. தாருகவன மாதர் சிவபிரானது பிக்ஷாடன வடிவத்தைக் கண்டவுடன் மனையினின்று புறப்பட்டு வெளியில் வந்து குழுமுதலின் செவ்வானந் தோன்றியவுடன் மறைவு நீங்கி வெளிப்பட்டு விண்ணிற் செறிந்து கிடக்கும் நக்ஷத்திரங்களுக்குவமையாயினர். பரமசிவன் திருக்கரத்திலேந்திய கபாலம் அன்னம் நிறையப் பெற்று நிறத்தாலும் உருவத்தாலும் ஒத்திருத்தலின் இளம் பிறைக்குவமையாயிற்று. பல வயிற் போலியுவமை. (3)

நிலவு லாவிய ககனமா நீடுபாற் கடலில்
குலவு கின்றதோர் பொருளெலாம் கொண்டுகொண் டேகி
உலகில் நல்குவான் முயலெனும் ஒருமகன் உய்ப்பச்
செலவு கொண்டதோர் தோணிபோன் றதுசிறு திங்கள்.

இ—ள்: சிறு திங்கள்—இளம் பிறையானது, நிலவு உலாவிய ககனம் ஆம் நீடு பாற்கடலில் குலவுகின்றது ஓர் பொருள் எலாம் கொண்டு கொண்டு ஏகி உலகில் நல்குவான்—ஒளி பொருந்திய ஆகாயமாகிய நெடிய பாற்கடலிலமைந்துள்ள திரவியங்களெல்லாவற்றையும் ஏற்றியேற்றிக் கொண்டுபோய்ப் பூவுலகத்திற் கொடுக்கும்படி, முயல் எனும் ஒரு மகன் உய்ப்ப—முயற்களங்கமாகிய

ஒரு மாலுமி செலுத்த செலவு கொண்டது செல்லுதலைப் பொருந்திய, ஓர் தோணி போன்றது—ஒரு மரக்கலத்தை யொத்தது எ—று.

ஆகாயத்தைப் பாற்கடலாகவும், பிறையைத் தோணியாகவும், முயலை மாலுமியாகவும் இயைபுற உருவகித்தும் உவமித்துங் கூறினர். (4)

ஆன காலையில் அறுமுகப் புங்கவன் அமல
மேனி சேரொளி நிலவொடு கங்குலை வீட்டிப்
பானு மேவரு மெல்லெனச் செய்தலிற் பரமாம்
வான நாயகன் கயிலைபோன் றிருந்ததவ் வையம்.

இ—ள்: ஆன காலையில்—அவ்வாறாகிய சமயத்தில், அறுமுக புங்கவன் அமல மேனி சேர் ஒளி—ஆறு திருமுகங்களையுடைய முருகக்கடவுளது நின்மலமாகிய மேனியிற் பொருந்திய பிரகாசமானது, நிலவொடு கங்குலை வீட்டி—நிலவையு மிருளையு மொழித்து, பானு மேவரும் எல் என செய்தலின்—சூரியனுதித்திருக்கின்ற பகற்காலம் போலாக்குதலின், அ வையம்—அந்தப் பூமி, பரமாம் வான நாயகன் கயிலை போன்று இருந்தது — பரம்பொருளாகிய சிவபிரானது திருக்கைலாச மலையையொத்திருந்தது எ—று.

கயிலைமலை தன் மேனியினொளியால் இருளையும் நிலவையும் மாழ்கச் செய்வது போல, மண்ணி நதிக்கரையும் முருகவேளின் மேனிப் பிரகாசத்தாலவற்றை மாழ்குவித்ததென்பது கருத்து. (5)

## வேறு

வீசு பேரொளி விறற்குகன் இவ்வா
றுசின் மண்ணியின் அகன்கரை நண்ண
ஈச னும்அவனை எய்துபு வேதாக்
கேச வன்முதல்வர் இன்ன கிளப்பார்.

இ—ள்: வீசு பேர் ஒளி விறல் குகன்—மிக்க சோதியைப் பரப்புகின்ற வலிய குமாரக்கடவுள், இவ்வாறு—இப்படி, ஆசு இல் மண்ணியின் அகன் கரை நண்ண—குற்றமற்ற அகன்ற மண்ணி நதிக்கரையை யடைய, வேதா கேசவன் முதல்வர்—பிரமாவுந் திருமாலு முதலாகிய தேவர்கள், ஈசன் ஆம் அவனை எய்துபு—கடவுளாகிய அந்தக் கந்தவேளை யணுகி, இன்ன கிளப்பார்—இவ் வாசகங்களைக் கூறுவார்கள் எ—று.

வேதா-வடசொல். (6)

ஆண்ட இந்நதி யகன்கரை எல்லாம்
மாண்ட வாலுகம் மலிந்தினி தாகும்
நீண்ட சோலைகள் நிரந்தன தோன்றி
ஈண்டி ஈண்டையின் இறுத்துள அன்றே.

இ—ள்: ஆண்ட இ நதி அகன் கரை எல்லாம்—ஆழமாகிய இந்த யாற்றின் அகன்ற கரையெங்கும், மாண்ட வாலுகம் மலிந்து இனிது ஆகும்—சிறந்த வெண் மணல்கள் நிறைந்து சிறந்திருக்கின்றது, நீண்ட சோலைகள் நிரந்தன—

நெடிய சோலைகள் நிறைந்துள்ளன, தோன்றி ஈண்டையின் ஈண்டி இறுத்துள—காந்தள் இவ்விடத்து நெருங்கிப் பொருந்தியுள்ளன எ—று.

ஆழ்ந்த என்பது எதுகை நோக்கி வந்த விகாரம். (7)

பிறைபு னைந்திடு பெருந்தகை தானம்
இறுதி யில்லன இருந்தன வற்றால்
நறிய தாகுமிந் நதிக்கரை தன்னில்
இறைவ இவ்விடை இருந்தருள் என்றார்.

இ—ள். இறைவ — கடவுளே!, பிறை புனைந்திடு பெருந்தகை தானம் இறுதி இல்லன இருந்தன—பிறைச் சந்திரனையணிந்த சிவபிரானது ஆலயங்கள் அளவில்லாதனவாயிருக்கின்றன, அற்றால்—அக்காரணத்தால், நறியது ஆகும் இ நதி கரை தன்னில்—நன்மையுடைத்தாகிய இந்த மண்ணி நதிக்கரையில், இவ்விடை—இந்த இடத்தில், இருந்தருள் என்றார்—வீற்றிருந்தருள்கவென்று வேண்டினார்கள் எ—று.

பெருந்தகை - அன்மொழித் தொகை. பெரிதாகிய தகுதியுடையவனென்பது பொருள். இவ் விடையென்று சுட்டியது இவ் வேண்டுகோள் நிகழும் பொழுதெய்திய இடத்தை. (8)

வனையும் மேனி அயன் மால்முதல் வானோர்
இனைய செப்புதலும் யாரினும் மேலோன்
வினைய மெத்தவுள விச்சுவ கன்மப்
புனைவ னுக்கிது புகன்றிடு கின்றான்.

இ—ள்: வனையும் மேனி அயன் மால் முதல் வானோர் இனைய செப்புதலும்—அலங்கரிக்கப்பட்ட சரீரத்தையுடைய பிரமாவுந் திருமாலு முதலாகிய தேவர்கள் இவ் வாசகங்களைக் கூற, யாரினும் மேலோன்—எத்தகையாரினுஞ் சிறந்தவராகிய முருகக்கடவுள், வினையம் மெத்த உள விச்சுவகன்ம புனைவனுக்கு இது புகன்றிடுகின்றான்—கைத்தொழிற் பயிற்சியை மிகுதியாகவுடைய விச்சுவகன்மனாகிய தேவத்தச்சனுக்கு இவ்வாசகத்தைக் கூறியருளுவார் எ-று. (9)

மெய்வி தித்தொழிலில் வேதன் நிகர்க்குங்
கைவ லோய்ஒரு கணம்படு முன்னர்
இவ்வி டத்தினில் எமக்கொரு மூதூர்
செவ்வி திற்புனைவு செய்குதி யென்றான்.

இ—ள்: மெய் விதித் தொழிலில் வேதன் நிகர்க்கும் கைவலோய்—மெய்ம்மையாகிய சிருட்டித் தொழிலிற் பிரமனை யொத்த கைத்தொழிற் சாமர்த்தியனே!, ஒரு கணம் படும் முன்னர்—ஒரு கண நேரங் கழியுமுன், இவ் விடத்தினில்—இங்கே, எமக்கு ஒரு முது ஊர்—எமக்கு ஒரு சிறந்த நகரத்தை, செவ்விதில் புனைவு செய்குதி—அழகுறப் படைக்குதி, என்றான்—என்று திருவாய்மலர்ந்தருளினார் எ—று.

செவ்விதிற் புனைவு செய்குதி என்றதற்கேற்ப 'மெய்விதித் தொழிலில் வேதனிகர்க்குங் கைவலோய்' என்றார். (10)

என்ன லோடும்அவ் விடந்தனில் எங்கோன்
துன்னு தொல்படை சுராதிப ரோடு
மன்ன அங்கணொரு மாநகர் நெஞ்சத்
துன்னி நல்கலும் உவந்தனர் யாரும்.

இ—ள்: என்னலோடும்—என்று திருவாய் மலர்ந்தருளியவுடன், அவ்விடம் தனில்—அவ்விடத்தில், எம் கோன் துன்னு தொல் படை சுராதிபரோடும் மன்ன—எம்மிறைவராகிய முருகக்கடவுள் நெருங்கிய பழைய சேனைகளோடும் தேவத் தலைவர்களோடும் வீற்றிருக்கும்படி, அங்கண்—அந்த மணியாற்றங்கரையில், ஒரு மா நகர்—ஒரு பெரிய நகரத்தை, நெஞ்சத்து உன்னி நல்கலும்—மனத்தாலினைத்து விச்சுவகன்மன் படைத்தலும், யாரும் உவந்தனர்—அனைவரு மகிழ்ந்தார்கள் எ—று.

அங்கண் நல்கலும் என இயையும். சுராதிபர் வட நூன் முடிபு. (11)

அப்பு ரத்தையறி வன்கடி தாற்றி
முப்பு ரத்தையடு முன்னவன் நல்கும்
மெய்ப்பு ரத்தவனை நோக்குபு மேலோய்
இப்பு ரத்திடை எழுந்தரு ளென்றான்.

இ—ள், அறிவன்—விச்சுவகன்மன், அ புரத்தை கடிது ஆற்றி—அந்த நகரத்தை விரைவிலமைத்து, முப்புரத்தை அடும் முன்னவன் நல்கும் மெய் புரத்தவனை நோக்குபு—முப்புரங்களையுமெரித்தழித்த முதல்வராகிய சிவபிரான் பெற்றருளிய மெய்ம்மையாகிய திருமேனியையுடைய முருகக்கடவுளைப் பார்த்து, மேலோய்—இறைவரே!, இ புரத்திடை எழுந்தருள் என்றான்—இந்த நகரத்திற் புகுந்தருளுக என்று வேண்டினான் எ—று.

அழகிற் சிறந்த திருமேனியை யுடையராதலின் 'மெய்ப்புரத்தவன்' என்றார்; ஞானமயமான திருமேனியை யுடையரெனினுமாம். (12)

என்ற லோடும்இர தத்தின் இழிந்தே
துன்றும் வானவர் சுராதிப ரானோர்
சென்ற பூதர்கள் செறிந்துடன் ஏக
மன்றல் மாநகரில் வள்ளல் புகுந்தான்.

இ—ள்: என்றலோடும்—என்று பிரார்த்தித்தவுடன், வள்ளல்—முருகக்கடவுள்,இரதத்தின் இழிந்து—தேரினின்றுமிறங்கி, துன்றும் வானவர்—நெருங்கிய தேவர்களும், சுராதிபர் ஆனோர்—தேவத் தலைவர்களும், சென்ற பூதர்கள்—வந்த பூதர்களும், செறிந்து உடன் ஏக—நெருங்கி உடன் செல்ல, மன்றல் மா நகரில் புகுந்தான்—மங்கலகரமாகிய பெரிய நகரத்தினுள்ளே போனார் எ—று. (13)

செல்லு மாமுகில் செறிந்திடு காப்பின்
மல்லல் மாநகர் வளந்தனை நோக்கி
எல்லை யில்அறிவன் யாமுறை தற்கு
நல்ல மாநகரி தென்று நவின்றான்.

இ—ள்: எல்லை இல் அறிவன்—முற்றறிவினையுடைய முருகக்கடவுள், செல்லும் மா முகில் செறிந்திடு காப்பின் மல்லல் மா நகர் வளம் தனை நோக்கி—சஞ்சரிக்கின்ற கரிய மேகங்கள் நெருங்கிய மதிலையுடைய வளப்ப மிக்க சிறந்த அந் நகரத்தினது வளங்களைவற்றையும் பார்த்து, இது யாம் உறைதற்கு நல்ல மா நகர் என்று நவின்ருன்—இது யாமிருத்தற்கேற்ற சிறந்த நகரமாமென்று கூறியருளினுர் எ—று.

மிகவுயர்ந்த மதிலென்பார் 'முகில் செறிந்திடு காப்பு' என்ருர். (14)

வீர வேளிது விளம்புத லோடும்
ஆரும் வானவர்கள் அம்மொழி கேளா
ஏரெ லாமுடைய இந்நகர் சேய்ஞ
லூர தென்றுபெயர் ஓதினர் அன்றே.

இ—ள்: வீர வேள் இது விளம்புதலோடும்—வீரத்தையுடைய முருகக்கடவுள் இவ் வாசகத்தைக் கூறியருள, வானவர்கள் ஆரும் அ மொழி கேளா—தேவர்களெல்லோரும் அவ் வாசகத்தைக் கேட்டு, ஏர் எலாம் உடைய இ நகர்—அழகனைத்தையுமுடைய இந்த நகரம், சேய்ஞலூர் அது என்று—திருச்சேய்ஞலூராகுமென்று, பெயர் ஓதினர்—பெயரைக் கூறினுர்கள் எ—று.

சேய் நல்லூரென்பதில் நகரம் போலியாயிற்று; முருகக்கடவுளுக்கு நல்ல நகரமென்பது பொருள். 'யாமுறைதற்கு நல்ல மாநகர்' என முருகக்கடவுள் கூறியதற்கேற்ப இப் பெயர் தேவர்களாலமைக்கப்பட்டது. முதனூலிற் குமார புரியெனக் கூறியுள்ளார்' அது பற்றியே இப் படலமும் அப்பெயர்த் தாயிற்று. (15)

ஆய காலையணி கப்படை சூழ
ஏய பின்னிளைஞர் இந்திரன் வேதா
மாயன் ஏனையர் வழுத்திட ஆண்டைக்
கோயில் செல்லுபு குமாரன் இருந்தான்.

இ—ள்: ஆயகாலை—அவ்வாருகிய சமயத்தில், குமாரன்—முருகக்கடவுள், அனிகப்படை சூழ—சேனைகள் சூழவும், பின் ஏய இளைஞர் இந்திரன் வேதா மாயன் ஏனையர் வழுத்திட—பின் பிறந்த வீரவாகு முதலிய தம்பிமார்களும் இந்திரனும் பிரமதேவருந் திருமாலும் பிறருந் துதிக்கவும், ஆண்டை கோயில் செல்லுபு—அவ்விடத்திலுள்ள திருக்கோயிலிற் போய், இருந்தான்—வீற்றிருந்தார் எ—று.

அனிகப்படை-இரு பெயரொட்டு. ஏயபின்னிளைஞர்=பின் ஏய இளைஞர்: ஏனையர்-தேவர் முனிவராதியோர். (16)

**வேறு**

பன்னிரு புயத்தொகை படைத்தகும ரேசன்
தன்னருள் அடைந்துவிதி தன்னைமுத லானேர்
அன்னவன் விடுத்திட வகன்றுபுடை யேகித்
தொன்னிலை இருக்கைகள் தொறுந்தொறும் அடைந்தார்.

இ—ள்: விதி தன்னை முதல் ஆனோர்—பிரமாவை முதலாகவுடைய தேவர்கள், பன்னிரு புய தொகை படைத்த குமரேசன் தன் அருள் அடைந்து—பன்னிரண்டு திருப்புயங்களையுடைய முருகக்கடவுளது கருணையைப் பெற்று, அன்னவன் விடுத்திட அகன்று—அக் கடவுள் விடை கொடுத்தனுப்ப அவ்விடத்தினின்று நீங்கி, புடை ஏகி—அவரது கோயிலின் பக்கங்களிற் போய், தொல் நிலை இருக்கைகள் தொறும் தொறும் அடைந்தார்—அங்கே பழைய முறைப்படியமைக்கப்பட்டிருந்த மாளிகைகடோறும் புகுந்திருந்தார்கள் எ—று.

அவரவரது உயர்வு தாழ்வுகளுக்கேற்ப முன் தேவகிரியிலமைக்கப்பட்டவாறே யமைக்கப்பட்டிருத்தலின் 'தொன்னிலையிருக்கைகள்' என்றார்.

தானைகள் தமக்குரிய சாரதர் இலக்கர்
ஏனையர் வழுத்த எமை யாளுடைய வள்ளல்
கோனகர் இருக்கவிடை கொண்டுசெல் குழாத்துள்
வானவர் தமக்கிறை செயற்கையை வகுப்பாம்.

இ—ள்: எமை ஆள் உடைய வள்ளல்—எம்மை அடிமையாகவுடைய முருகக்கடவுள், தானைகள் தமக்கு உரிய சாரதர் இலக்கர் ஏனையர் வழுத்த—சேனைகளுக்குரிய பூதர்களும் இலக்க வீரர்களும் மற்றைய ஒன்பது வீரர்களுந் துதிக்க, கோநகர் இருக்க—திருக்கோயிலில் வீற்றிருக்க, விடைகொண்டு செல் குழாத்துள்—அவரிடமனுமதி பெற்றுக் கொண்டு சென்ற கூட்டத்தவர்களுள், வானவர் தமக்கு இறை செயற்கையை வகுப்பாம்—தேவர்க்கரசனாகிய இந்திரன் செய்த செயலை இனிக் கூறுவாம் எ—று.

சேனைத் தலைவரென்பார் 'தானைகடமக்குரிய சாரதர்' என்றார். ஏனையரென்றது ஒன்பதின்மரை, இருக்க என்னுமெச்சம் செல்லென்னும் வினைத்தொகையோடியைந்தது. (18)

## வேறு

தாங்கரும் பெருந்திறல் தார காசுரன்
பாங்கமர் குன்றொடும் பட்ட பான்மையால்
ஆங்கனம் புரந்தரன் அவலம் யாவதும்
நீங்கினன் உவகையால் நிறைந்த நெஞ்சினன்.

இ—ள்: தாங்கரும் பெரும் திறல் தாரகாசுரன்—எவராலுமடைதற்கரிய பெரு வலியினையுடைய தாரகாசுரன், பாங்கு அமர் குன்றொடும் பட்ட பான்மையால்—அருகிலிருந்த கிரவுஞ்ச மலையுடனழிந்த தன்மையினால், ஆங்கனம்—அப்பொழுது, புரந்தரன்—இந்திரன், அவலம் யாவதும் நீங்கினன்—துயரங்களெல்லாம் நீங்கப் பெற்று, உவகையால் நிறைந்த நெஞ்சினன்—மகிழ்ச்சியினால் நிறைந்த மனத்தையுடையவனாயினான் எ—று.

நெஞ்சினன்-குறிப்பு முற்று. தாங்க என்பதனீற்றகரந் தொக்கது. தாங்கரும் பெருந் திறலென்பதற்குச் சமர் முகத்திற் பகைவராற் சகித்தற்கரிய பெருவலியெனினுமாம். (19)

விருந்தியல் அமிர்தினை விழும மில்வழி
அருந்தின னுமென ஆகந் தண்ணெனப்
புரந்தரன் இருந்துழிப் புக்குத் தாழ்ந்ததால்
வரந்திகழ் சிரபுர வனத்தில் தெய்வதம்.

இ—ள்: புரந்தரன்—இந்திரன், விருந்து இயல் அமிர்தினை விழுமம் இல்வழி அருந்தினன் ஆம் என—புதிதாகக்கிடைத்த அமிர்தத்தைத் துக்கமில்லாத காலத்தி லுண்டானைப்போல, ஆகம் தண்ணென—சரீரங் குளிர்ச்சியடைய, இருந்துழி—இருந்தபொழுது, வரம் திகழ் சிரபுர வனத்தில் தெய்வதம் — மேன்மை விளங்கப் பெற்ற சீகாழி வனத்திலிருந்த தேவதை, புக்கு தாழ்ந்தது—சென்று வணங்கியது எ—று.

பலகாலுண்டதை யுண்டவழியும் துயரமிக்ககாலத்தி லுண்டவழியும் மிக்க தண்மையைத் தராதாகலின் 'விருந்தியலமிர்தினை விழுமமில்வழி யருந்தினனு மென' என்றார். (20)

முகில்பொதி விண்ணக முதல்வன் பூண்களும்
நகில்பொதி சாந்துடை நங்கை பூண்களுந்
துகில்பொதி கிழியொடு தொல்லை வைத்தவை
அகில்பொதி காட்டகத் தடிகள் உய்த்ததே.

இ—ள்: முகில் பொதி விண்ணக முதல்வன் பூண்களும் — மேகங்கள் சூழப் பெற்ற சுவர்க்கலோகத்திற்கதிபனுகிய இந்திரனது ஆபரணங்களும், நகில் பொதி சாந்து உடை நங்கை பூண்களும்—தனங்களை மறைத்த சந்தனக் குழம்பையுடைய இந்திராணியினது ஆபரணங்களும், துகில் பொதி கிழியொடு தொல்லை வைத்தவை—வஸ்திரத்திற் பொதியப்பெற்ற முடிப்பினுடன் முன்னுளில் வைக்கப்பட்டன (அவற்றை), அகில் பொதி காட்டகத்து அடிகள் உய்த்தது—அகிலமரங்கள் செறிந்த சீகாழி வனத்திலுள்ள தேவதை முன்வைத்தது எ—று. (21)

முந்துற உய்த்தபின் முதல்வ கேட்டிநீ
பைந்தொடி அணங்கொடு பரமன் காழியில்
வந்தனை நோற்றநாள் வைத்த பூணிது
தந்தனன் கொள்கெனச் சாற்றி நின்றதே.

இ—ள்: முந்து உற உய்த்தபின் — முன்னே கொண்டுவந்து வைத்த பின்பு, முதல்வ கேட்டி — அரசே! கேட்பீராக, நீ பை தொடி அணங்கொடு பரமன் காழியில் வந்தனை நோற்ற நாள்—நீர் பசிய வளையணிந்த இந்திராணியுடன் சிவபிரான் வீற்றிருக்கின்ற சீர்காழிப்பதியில் வந்து தவஞ்செய்துகொண்டிருந்த காலத்தில், வைத்த பூண் இது — அடைக்கலமாக வைத்த ஆபரணமிதுவாகும், தந்தனன் கொள்க என— தந்தேன் ஏற்றுக்கொள்ளுமென்று, சாற்றி நின்றது — சொல்லி நின்றது எ—று.

கொள்கவென்னும் வியங்கோளீற்றகரந் தொக்கது. வந்தனை - முற்றெச்சம். உய்த்தபின் சாற்றி நின்றது என இயையும். பூணிது - சாதியொருமை. (22)

நிற்புறு கின்றுழி நேமி அண்ணற்கு
முற்படு கின்றவன் முளரிப் பண்ணவன்
கிற்புறு செய்யபூண் கிழியை நோக்கினுன்
கற்புடை யாள்விடுந் தூதின் காட்சிபோல்.

இ—ள்; நிற்புறு கின்றுழி—முன்னின்ற பொழுது, நேமி அண்ணற்கு முற்படுகின்றவன்—சக்கரத்தை யேந்திய திருமாலுக்கு முன் பிறந்த இந்திரன், கற்பு உடையாள் விடும் தூதின் காட்சி போல்—கற்புடை மகளிர் விட்ட தூதைக் கண்டாற் போல, முளரி பண்ணவன் கிற்புறு செய்ய பூண் கிழியை நோக்கினுன்—தாமரை மலராசனராகிய பிரமதேவராற் செய்யப்பட்ட சிறந்த ஆபரணங்களமைந்த முடிப்பைப் பார்த்தான் எ—று.

இந்திரன் திருமாலினவதாரமாகிய உபேந்திரனுக்கு முன் பிறந்தாஞதலின் 'நேமியண்ணற்கு முற்படுகின்றவன்' எனவும், எண்ணிய பொருளை யெளிதினியவல்ல கற்பக முதலியவற்றை யுடையான் இவ் வணிகளைப் பொருட்படுத்திப் பாதுகாப்புச் செய்தற்கேற்ற விசேடந் தோன்ற 'முளரிப்பண்ணவன் கிற்புறு செய்ய பூண்' எனவும், கற்புடை மாது கணவனிடந் தனதணிகளுளொன்றை யனுப்ப அது காமத்தை மிகுவிப்பது போலவே இவ்வணிகளுங் கண்ட மாத்திரத்தில் இந்திரனுக்கு விரக நோயை விளைத்தலின் 'கற்புடையாள் விடுந் தூதின் காட்சி போல்' எனவும் கூறினுர். (23)

எரிமணி அணிகலன் இட்ட பூந்துகில்
விரிதரு பொதியினை விரலின் நீக்கினுன்
திருமகள் அமர்தரு தெய்வத் தாமரை
வரியளி சூழ்வுற மலர்ந்த தென்னவே.

இ—ள்; திருமகள் அமர்தரு தெய்வ தாமரை—இலக்குமிதேவி வீற்றிருக்கின்ற தெய்வத் தன்மையமைந்த தாமரை மலரானது, வரி அளி சூழ்வுற மலர்ந்தது என்ன—வரி பொருந்திய வண்டுகள் மொய்க்க விரிந்த தன்மையைப் போல, எரி மணி அணிகலன் இட்ட பூ துகில் விரிதரு பொதியினை—ஒளி பொருந்திய இரத்தினுபரணங்களமையப்பெற்ற பொலிவாகிய வஸ்திரத்தினது பரந்த முடிப்பை, விரலில் நீக்கினுன்—விரல்களாலவிழ்த்தான் எ—று.

தாமரைமலர் வண்டுகள் படிய மலர்தல் போல ஆபரணப் பொதியும் இந்திரனது விரல்களவிழ்க்க அவிழ்ந்ததென்க. செந்நிற முடைமையால் ஆபரணப் பொதி தாமரை மலரையும் கருநிற முடைமையால் இந்திரன் கைவிரல்கள் வண்டுகளையும் நிகர்த்தனவென்க. கலன்-போலி. (24)

துண்ணெனக் கிழியதன் தொடர்பு நீக்கலும்
ஒண்ணுதற் றுணைவிபூண் உம்பர் தோன்றலுங்
கண்ணுறக் கண்டவட் கருதி ஞனரோ
எண்ணுதற் கரியதோர் இன்புந் துய்த்துளான்.

இ—ள்: துண் என கிழி அதன் தொடர்பு நீக்கலும்—விரைவாக அந்தப் பொதியின் முடிப்பையகற்றியவுடன், ஒண் நுதல் துணைவி பூண் உம்பர் தோன்றலும்—ஒளி பொருந்திய நெற்றியையுடைய இந்திராணியினது ஆபரணங்கள்

மேலே தோற்ற, எண்ணுதற்கு அரியது ஓர் இன்பம் துய்த்துளான்—நினைத்தற்கரிய போகவின்பத்தை முன்னேயனுபவித்தவனாகிய இந்திரன், கண்ணுற கண்டு—(அவற்றைக்) கண்ணுரப் பார்த்து, அவள் கருதினான்—அவ் விந்திராணியை நினைத்தான் எ—று.

கருதுதற்குக் காரணந் தோன்ற 'எண்ணுதற்கரிய தோரின்பந்துய்த்துளான்' என்றார். (25)

பூட்கையின் முலையுடைப் பொன்னங் கொம்பின்மேல்
வேட்கைய தாயினன் மிகவும் பற்பகல்
வாட்கையின் றிருந்தது மனத்தின் முன்னினான்
காட்கொளுங் காமநோய்க் கவலை எய்தினான்.

இ—ள்: பூட்கையின் முலை உடை பொன்னம் கொம்பின் மேல் — யானைக் கோடுபோன்ற தனங்களையுடைய இந்திராணியின்மேல், மிகவும் வேட்கையது ஆயினன்—மிகுதியாக விருப்பமுற்று, பல்பகல் வாட்கை இன்று இருந்தது மனத்தில் முன்னினான்—பலகாலங் கூடிவாழ்தலின்றிப் பிரிந்திருந்ததை மனத்தில் நினைத்து, காட்கொளும் காமநோய் கவலை எய்தினான் — நிலைபெற்ற காமநோயாகிய கவலையையடைந்தான் எ—று.

பொன்னங்கொம்பு - அடையடுத்த உவமவாகுபெயர். வாழ்க்கையென்பது வாட்கையெனவும் காழ்கொளும் என்பது காட்கொளும் எனவும் விகாரமாயின. காழ் - வயிரம்; ஈண்டுத் தாற்பரியவிலக்கணை. (26)

நெய்ம்மலி தழலென நீடிக் காமநோய்
இம்மென மிசைக்கொள இரங்கி ஏங்கினான்
விம்மினன் வெதும்பினன் வெய்து யிர்த்தனன்
மைம்மலி சிந்தையன் மருட்கை எய்தினான்.

இ—ள்: காமநோய் — காமநோயானது, நெய் மலி தழல் என நீடி — நெய் நிறையப் பெய்யப்பெற்ற அக்கினியைப்போலப் பெருகி, இம்மென மிசைக்கொள —விரைவில் மேற்கொள்ள, இரங்கி ஏங்கினான்—வருந்தி ஏக்கமுற்று, விம்மினன்—மனத்துன்பமுற்று, வெதும்பினன் — புழுங்கி, வெய்துயிர்த்தனன் — பெருமூச்சு விட்டு, மை மலி சிந்தையன் —குற்றம் நிறைந்த மனத்தையுடையனாய், மருட்கை எய்தினான் — மயக்கமடைந்தான் எ—று. (27)

பசையற வுலர்வுறு பராரைப் பிண்டியின்
தசைமலி முழுதுடல் தளர்ந்து வாடினான்
இசைவரு கைவலோன் எழுது பாவைபோல்
அசைவிலன் இருந்தனன் அணங்குற் றென்னவே.

இ—ள்: பசை அற உலர்வுறு பரு அரை பிண்டியில் — பசுமை நீங்குமாறு காய்ந்த பருத்த அடியினையுடைய அசோக மரத்தைப்போல, தசை மலி முழுது உடல் தளர்ந்து வாடினான் — தசைநிறைந்த சரீரம் முழுதும் இளைத்து வாடி,

இசை வரு கைவலோன் எழுது பாவை போல் அசைவிலன் — புகழ்பெற்ற சித்திர காரனெழுதிய பாவையைப்போலசைவற்றவனாய், அணங்குற்று என்ன இருந் தனன் — பேய்தீண்டினாற்போல விகாரமுற்றிருந்தான் எ—று (28)

முருந்துறழ் எயிற்றினாள் முலைத்த டங்களில்
பொருந்துற மூழ்கியே புணர்ந்து வைகலும்
இருந்திடு கின்றவன் இடர்ப்பட் டின்னணம்
பிரிந்திடின் வருந்துதல் பேசல் வேண்டுமோ.

இ—ள்: முருந்து உறழ் எயிற்றினாள் முலைத்தடங்களில் — மயிலிறகினடி முள்ளைப் போன்ற பற்களையுடைய இந்திராணியினது தனங்களாகிய தடாகத்தில், பொருந்துற மூழ்கி — பொருந்தும்படி படிந்து, புணர்ந்து—சேர்ந்து; வைகலும் இருந்திடுகின்றவன் —எப்போதுஞ் சுகமுற்றிருந்த இந்திரன், இடர்ப்பட்டு இன்ன ணம்பிரிந்திடின் — துயரமுற்று இவ்வாறு பிரிந்திருப்பானாயின், வருந்துதல் பேசல் வேண்டுமோ—அவன் வருந்துந் தன்மையைச் சொல்லவேண்டுமா?, (சொல்லா மலே விளங்கும்) எ—று.

என்றுமொன்றும் பிரியாது கூடி யின்புற்றுமுன் பின் பலநாட் பிரிந்திருந்தானாத லின், பெருந்துயரெய்தினனென்பது கருத்து. முலைத்தடம் - உருவகம். (29)

மெய்ந்நனி அலசுற விரக மீக்கொள
இன்னணஞ் சசிபொருட் டினையும் நீர்மையோன்
பொன்னணி தன்னையும் புனைதல் வேண்டலன்
தன்னுழை யவர்தமை நோக்கிச் சாற்றுவான்.

இ—ள்: மெய் நனி அலசுற—சரீரம் மிக வாட, விரகம் மீக்கொள—காம நோய் மேலிட, இன்னணம் சசி பொருட்டு இனையும் நீர்மையோன்—இப்படி இந்திராணியைப் பிரிந்தமையால் வருந்து மியல்பினனாகிய இந்திரன், பொன் அணி தன்னையும் புனைதல் வேண்டலன்—பொன்னாபரணங்களையு மணிய விரும் பாதவனாய், தன் உழையவர் தமை நோக்கி—தன் பக்கத்தினின்றவர்களைப் பார்த்து, சாற்றுவான்—(பின்வருமாறு) கூறுவான் எ—று.

உம்மை-உயர்வு சிறப்பு. (30)

இக்கிழி யொன்றினை ஏந்தி முந்துபோற்
சிக்குற வீக்கியே சேமித் துங்கள்பால்
வைக்குதிர் என்றலும் வணங்கி நன்றெனா
அக்கணம் அனையவர் அதனை யாற்றினார்.

இ—ள்: இ கிழி ஒன்றினை ஏந்தி—நீவிர் இந்தப் பொதியொன்றைக் கைக் கொண்டு, முந்து போல் சிக்குற வீக்கி—முன் போலிறுகக் கட்டி, சேமித்து— பாதுகாத்து. உங்கள் பால் வைக்குதிர் என்றலும்—உங்களிடத்தே வையுங் களென்று இந்திரன் கூறுதலும், அனையவர்—அப் பரிசனர்கள், வணங்கி நன்று எனா—அவனைத் தாழ்ந்து நல்லதென்று கூறி, அக்கணம் அதனை ஆற்றினார்—அந் தக் கணப்பொழுதில் அதனைச் செய்தார்கள் எ—று. (31)

அன்னதோர் அளவையில் அடவித் தேவினைக்
கொன்னுனை வச்சிரக் குரிசில் நோக்குறு
நின்னுழை அளித்திட நீசெல் கென்றலும்
மன்னவ நன்றெறன வணங்கிப் போயதே.

இ—ள்: அன்னதோர் அளவையில்—அந்தச் சமயத்தில், கொன் நுனை வச்சிர குரிசில்—அச்சத்தை விளைக்கின்ற முனையினையுடைய வச்சிராயுதத்தையேந்திய இந்திரன், அடவி தேவினை நோக்குறு—வன தேவதையைப் பார்த்து, நின் உழை அளித்திட நீ செல்க என்றலும்—உன்னிடத்தைக் காவல் செய்தற்கு நீ போவாயாகவென்று கூறுதலும், மன்னவ—அரசனே!, நன்று என- நல்லதென்று கூறி, வணங்கி போயது—பணிந்து சென்றது எ—று.

கொல் நுனை என வகுத்துப் பகைவரைக் கொல்லுகின்ற முனையினையுடைய எனப் பொருள் கூறினுமாம். உழை ஈண்டுப் பெயராய் நின்றது. (32)

போந்திடு காலையிற் புலோம சைப்பெயர்
ஏந்திழை காமநோய் எரியின் துப்பினுற்
காந்திய வுளத்தினன் கனலும் யாக்கையன்
ஓய்ந்தனன் தட்பமேல் உளம்வைத் தேகினுன்.

இ—ள்: போந்திடு காலையில்—(வனதேவதை) போன பொழுது, புலோமசைப் பெயர் ஏந்திழை காம நோய் எரியின் துப்பினுல்—இந்திராணி யென்னும் பெண் மேற்கொண்ட காம நோயாகிய அக்கினியின் கிளர்ச்சியினுல், காந்திய உளத்தினன்—வெதும்பப் பெற்ற மனத்தையுடையனும், கனலும் யாக்கையன்—அழலுகின்ற தேகத்தையுடையனும், ஓய்ந்தனன்—தளர்ந்து, தட்ப மேல் உளம் வைத்து ஏகினுன்—சீதளத்தில் விருப்பமுற்றுத் (தன்னிருப்பிடத்தை விட்டுப்) போனுன் எ—று.

ஏந்திழை-அன்மொழித் தொகை. புலோமசை-புலோமனென்னு மசுரன் பெற்ற புதல்வி. அவ்வசுரனை இந்திரன் கொன்று புதல்வியைக் கவர்ந்து மனைவியாக்கிக் கொண்டனனென்க. காமநோயெரி-உருவகவுருவகம். (33)

ஒளியிழை உழத்தியர் ஒளிமென் கூந்தலின்
அளியினம் நறவுதுய்த் தலரிற் கண்படு
நளியிருந் தண்டலை ஞாங்கர் பொங்கிய
புளினமொன் றதன்மிசை புக்கு வைகினுன்.

இ—ள்: அளியினம்—வண்டுக் கூட்டங்கள், ஒளி இழை உழத்தியர் ஒளி மென் கூந்தலின் நறவு துய்த்து—சோதி விளங்குகின்ற ஆபரணங்களையணிந்த உழத்தியர்களது ஒளியையுடைய மெல்லிய கூந்தலில் தேனைப் பருகி, அலரில் கண்படும்—மலர்களிற் றுயிலுகின்ற, நளி இரும் தண்டலை ஞாங்கர்—குளிர்ந்த பெரிய சோலையின் பக்கத்தில், பொங்கிய—உயர்ந்திருக்கின்ற, புளினம் ஒன்று அதன் மிசை—ஒரு மணற் குன்றின்மேல், புக்கு வைகினுன்—போயிருந்தான் எ—று.

மலர் சூடும்போது அதிகமாகத் தேன் சிந்தியிருத்தலால் வண்டுகள் மலரிற் பருக விரும்பாது கூந்தலிற் பருகுவன வென்க. (34)

தீந்தழல் வெங்கதிர் திளைத்த வாறென
நீந்தருங் கங்குலின் நிலவுத் தீப்படப்
பூந்துணர் பரவிய புளினம் பொன்னகர்
வேந்தனுக் காற்றவும் வெம்மை செய்ததே.

இ—ள்: தீ தழல் வெம் கதிர் திளைத்தவாறு என—கொடிய அக்கினியும் வெவ்விய வெய்யிலும் பட்டாற் போல, நீந்தரும் கங்குலில் நிலவுத்தீ பட—கடத்தற்கரிய இராக் காலத்தில் வந்த நிலவாகிய அக்கினி மேனியிற் படுதலால், பூ துணர் பரவிய புளினம்—பூங்கொத்துக்கள் பரவப் பெற்றிருக்கின்ற மணற் குன்றானது, பொன்னகர் வேந்தனுக்கு—சுவர்க்க லோகாதிபனாகிய இந்திரனுக்கு, ஆற்றவும் வெம்மை செய்தது — மிகவும் வெப்பத்தையுண்டாக்கியது எ—று.

தீந்தழல் வெங்கதிர் திளைத்தவாறென என்பதற்கு கொடிய அக்கினியின் வெவ்விய சோதி பட்டாற் போல எனப் பொருள் கூறினுமாம். காம மிக்கார்க்கிரவு நீடித்துத் தோன்றுதலின் 'நீந்தருங்கங்குல்' எனவும், வெப்பந் தருதலால் 'நிலவுத்தீ' எனவும், பூந்துணர்களா லுண்டாகுந் தட்பத்தினும் பன்மடங்கான வெப்பத்தை நிலவுத்தீ விளைத்த தென்பார் 'நிலவுத்தீப்பட-பூந்துணர் பரவிய புளினம்-வெம்மை செய்தது' எனவும் கூறினர். (35)

சூற்புயல் மாறிய சுரத்தில் தொக்குறு
மாற்பரல் வரைபுரை மணலின் திட்டையின்
பாற்படு கின்றனன் பனிம திக்கதிர்
மேற்பட அசைந்தனன் வினையம் வேறிலான்.

இ—ள்: சூல் புயல் மாறிய சுரத்தில் தொக்கு உறும் மால் பரல் வரை புரை—கருக் கொண்ட மேகங்கள் மழை பெய்தலில்லாத பாலைவனத்திற் பொருந்தியிருக்கின்ற பெரிய பருக்கைக் கற்களாலாகிய மலையை நிகர்த்த, மணலின் திட்டையின் பால்—மணற் குன்றின்மீது, படுகின்றனன்—இருக்கின்றவனாய், பனி மதி கதிர் மேல் பட—குளிர்ந்த சந்திர கிரணங்கள் தன் மேனியிற் பட, வினையம் வேறு இலான்—விரக நோயைத் தீர்க்குமுபாயம் வேறொன்றுந் தோன்றப் பெறானாய், அசைந்தனன்—தளர்ந்தான் எ—று.

மிகுந்த தட்பமுடையதாயினும் அந்த மணற் குன்று இந்திரனுக்கு ஆற்றொணாப் பெருந் துயரை விளைத்ததென்பது உவமை முகத்தாற் பெறப்படும். (36)

திங்களும் வெங்கனல் சிதறிக் காய்ந்திடத்
துங்கவேள் படையுடன் பிறவுஞ் சூழ்ந்திட
மங்கிய உணர்ச்சியன் மயலின் வன்மையான்
புங்கவர் மன்னவன் புலம்பல் எய்தினான்.

இ—ள்: திங்களும் வெம் கனல் சிதறி காய்ந்திட—சந்திரனுங் கொடிய அழற் கிரணங்களைப் பரப்பி வருத்த, துங்க வேள் படையுடன் பிறவும் சூழ்ந்திட—உயர்ச்சி பொருந்திய மன்மதனது படைக்கலங்களும் மற்றைய கருவிகளுஞ் சூழ, மங்கிய உணர்ச்சியன்—நல்லறிவு குறைந்தவனாயும், மயலின் வன்மை

யான்—பெரு மயக்கமுடையவனும், புங்கவர் மன்னவன்—தேவர்க்கரசனாகிய இந்திரன், புலம்பல் எய்தினான்—புலம்பத் தொடங்கினான் எ—று.

படையெனப் பொதுமையிற் கூறுதலால் பூங்கணைகளுடன் கருப்புவில் மாந் தளிர் வாள் முதலியவற்றையுங் கொள்க. வெப்பந் தீர்க்குமியல்பினதென் பதை விளக்க இழிவு சிறப்பும்மை புணர்த்தி 'திங்களும்' எனவும், தன்னணை யைச் செலுத்துதற்குச் சமயம் வாய்த்தானாதலின் 'துங்கவேள்' எனவும் கூறி னார். பிற-தென்றற்றேர் கிளிக் குதிரை முதலியன. (37)

மட்டமர் புரிகுழல் மடந்தை என்னுடல்
இட்டுயிர் வவ்வினள் இருந்த யாக்கையுஞ்
சுட்டிடு கிற்றியால் தூய திங்கள்நீ
பட்டவர் தம்மையும் படுப்ப ரோவென்பான்.

இ—ள்: தூய திங்கள்—தூய்மையையுடைய சந்திரனே!, மட்டு அமர் புரி குழல் மடந்தை—வாசனை பொருந்திய முறுக்கி முடித்த கூந்தலையுடைய இந் திராணி, என் உடல் இட்டு உயிர் வெளவினள்—எனது சரீரத்தை விட்டு உயிரை மாத்திரங் கவர்ந்தாள், நீ இருந்த யாக்கையும் சுட்டிடு கிற்றி—நீ எஞ்சியிருந்த சரீரத்தையுந் தகிக்கின்றாய், பட்டவர் தம்மையும் படுப்பரோ என்பான்—எவரா வது இறந்தவர்களையுங் கொல்ல முயல்வார்களாவென்று கூறுவான் எ—று.

இறந்தவரைக் கொல்ல எவரு முயலாராகவும் இந்திராணியாலுயிர் கவரப் பெற்ற என்னை மீட்டும் வாட்ட முயல்வது இழிதகவாமெனப் புலம்பினனென்க. உம்மை-முன்னையது எச்சம்; பின்னையது இழிவு சிறப்பு. (38)

எஞ்சலில் அமுதினை யார்க்கும் நல்குநீ
நஞ்சினை யுகுத்திநண் ணலரில் தப்பியே
உஞ்சனன் இவனுயிர் ஒழிப்பன் யானெனா
வஞ்சினம் பிடித்தியோ மதிய மேயென்பான்.

இ—ள்: மதியமே—சந்திரனே!, எஞ்சல் இல் அமுதினை யார்க்கும் நல்கும் நீ—குறைவில்லாத அமிர்தத்தை அனைவர்க்குங் கொடுக்கின்ற நீ, நஞ்சினை உகுத்தி—எனக்கு மாத்திரம் விஷத்தைச் சொரிகின்றாய், நண்ணலரில் தப்பி உஞ்சனன்—பகைவரினின்றுந் தப்பியுய்ந்திருக்கின்றான் ஆதலால், யான் இவன் உயிர் ஒழிப்பன் எனா—யானிவனது உயிரைக் கவர்வேனென்று, வஞ்சினம் பிடித்தியோ—சபதஞ் செய்து கொண்டாயோ, என்பான்—என்று கூறு வான் எ—று.

உஞ்சனன் - போலி. சந்திரன் அமிர்தங்கொடுத்தலை அவையடக்கத்தில் குறைபல மாமதியென்னுஞ் செய்யுளுரையிற் காண்க. (39)

நிற்றலும் வருதிநீ நீடு தண்ணளி
உற்றிடல் அன்றியே ஒறுத்தி லாய்மதி
அற்றமின் றுன்னிவந் தடுதி யாரிடைக்
கற்றனை இத்திறங் கள்வ நீயென்பான்.

இ—ள்: மதி—சந்திரனே!, நீ நிற்றலும் வருதி — நீ தினந்தோறும் உதிக்கின்ருய், நீடு தண்ணளி உற்றிடல் அன்றி ஒறுத்திலாய் — (அக்காலங்களிலெல்லாம்) மிகுந்த தட்பத்தைப் பொருந்தியிருந்தாயன்றிக் காய்ந்தாயில்லை, இன்று அற்றம் உன்னி வந்து அடுதி — இன்றைக்குச் சமயம் பார்த்து வந்து வருத்துகின்ருய், கள்வ நீ — வஞ்சகனே! நீ, இத்திறம் ஆரிடை கற்றனை—இந்தச் சூழ்ச்சியை எவரிடத்திற் பயின்ருய், என்பான்— என்று கூறுவான் எ—று.

ஏனைக்காலங்களிலிடர் செய்பவருந் துயர்வந்த காலத்திற் றுணைசெய்வர், நீ அதற்கு மறுதலையாக ஏனைய காலங்களிலெல்லாந் துணைசெய்திருந்து துயருற்ற இச்சமயத்திலிடர் செய்வது பெருங்கபடமென்ருனென்க. (40)

பெண்ணிய லாரிடைப் பிறங்கு காமமும்
உண்ணிகழ் விரகமும் உனக்கும் உண்டதை
எண்ணலை யழல்சொரிந் தென்னைக் காய்தியால்
தண்ணளி மதிக்கிது தகுவ தோவென்பான்.

இ—ள்: பெண்ணியலார் இடை பிறங்கு காமமும் — மகளிர்பாற் கொள்கின்ற காமமும், உள் நிகழ் விரகமும்—அதுபற்றி மனத்திலுதிக்கின்ற விரகமும், உனக்கும் உண்டு — உனக்குமுள்ளனவேயாம், அதை எண்ணலை — அதைச் சிந்தியாது, அழல் சொரிந்து என்னைக் காய்தி—அக்கினியைச் சிதறி என்னைச் சுடுகின்ருய், தண்ணளி மதிக்கு இது தகுவதோ என்பான் — சீதளத்தையுடைய சந்திரனுகிய உனக்கு இது தக்கதா (அன்றே) என்று கூறுவான் எ—று.

யாவராலும் மதிக்கப்படுதலால் மதியென்னுங் காரணப் பெயர் பெற்றவுனக்குக் காரணமின்றி என்னை வருத்துவது தகாதென்ருனென்க. பெண்ணியலார் —பெண்களுக்கு வேண்டிய இலக்கணமுற்று மொருங்கமைந்தார். காமம்-மாதர் மேல்வைக்கு மிச்சை. விரகம் — இச்சித்த மகளிரைக் கூடாமையால் வரும் வேதனை. (41)

அரியநற் றவம்பல ஆற்றி இன்றுகா
றுரியதோர் என்பல வூனில் யாக்கையேன்
பரிவுறச் சுடுவதிற் பயனென் பாரிலிவ்
வொருவனை விடுகென உரைத்து வேண்டுவான்.

இ—ள்: அரிய நல் தவம் பல இன்றுகாறு ஆற்றி — அருமையாகிய நல்ல பல தவங்களை இன்றுவரையுஞ் செய்தலால், உரியது ஓர் என்பு அலது ஊன் இல் யாக்கையேன் — உரியதாகிய எலும்பேயன்றித் தசையற்ற சரீரத்தையுடையேன், பரிவு உற சுடுவதில் பயன் என் — (ஆதலின்) வருத்தமடையும்படி என்னைச் சுடுவதனுற் கிடைக்கும் பிரயோசனம் யாது? (ஒன்றுமில்லையே), பாரில் இவ் ஒருவனை விடுக — பூவுலகத்தில் இந்த ஒருவனை (உய்ந்திருக்குமாறு) விடுவாய், என — என்று, உரைத்து வேண்டுவான் — சொல்லி வேண்டுதல் செய்வான் எ—று.

சகிக்கவல்லாரையன்றி வன்மையற்ற என்னை வருத்துவது முறையன்றென்ருனென்க. விடுக என்னும் வியங்கோளீற்றகரம் தொக்கது. தசைமுதலியன வழிந்த காலத்தும் அழியாதிருத்தலின் 'உரியதோரென்பு' என்ருன். (42)

அண்டமேல் நின்றனை அவனி வானகம்
எண்டிசை எங்கணும் எளிது காண்டியால்
ஒண்டொடி யொருத்திஎன் னுயிர்கொண் டுற்றனள்
கண்டதுண் டோமதிக் கடவுள் நீயென்பான்.

இ—ள்: மதிக்கடவுள்—சந்திரனே!, நீ அண்டமேல் நின்றனை — நீ ஆகாயத்தினின்றாய் (ஆதலின்), அவனி வானகம் எண் திசை எங்கணும் எளிது காண்டி— பூவுலகமும் ஆகாயவுலகமும் எட்டுத்திக்குகளுமாகிய எல்லாவிடங்களையும் இலகுவிற் காண்பாய், ஒண் தொடி ஒருத்தி என் உயிர் கொண்டு உற்றனள் — ஒள்ளிய வளையலையணிந்த ஒரு பெண்ணானவள் எனது உயிரைக் கவர்ந்திருந்தாள், கண்டது உண்டோ—அதனைப் பார்த்ததுண்டா?, என்பான்—என்று கூறுவான் எ—று.

கண்டதுண்டாயிற்கூறுதி; யானவள்பாற் சென்றிரந்து மீட்டும் பெற்றுக் கொள்வேனென்பது எஞ்சியது. இதுகாறும் ஆறு செய்யுட்கள் சந்திரனைக் குறித்துக் கூறிய புலம்பல். (43)

யான்முதல் தோன்றினன் எனது பின்னவன்
கான்முளை யாகிய காம நீபல
பான்மையின் எனையடல் பழிய தேயலால்
மேன்மைய தாகுமோ விளம்பு வாயென்பான்.

இ—ள்: யான் முதல் தோன்றினன்—யான் முன்பிறந்தேன், எனது பின்னவன் கான்முளை ஆகிய காம — எனக்குப் பின்பிறந்த உபேந்திரனது புதல்வனாகிய மன்மதனே!, நீ பல பான்மையின் எனை அடல்—நீ பலவாற்றாலுமென்னை வருத்துவது, பழியதே அலால்—நிந்தையாகுமேயன்றி, மேன்மையது ஆகுமோ— மகிமையாகுமா, விளம்புவாய் என்பான்—சொல்லுதியென்று கூறுவான் எ—று.

யானுனக்குப் பெரிய தந்தையாதலின் என்னை வருத்தலாகாதென்றானென்க. (44)

பரேருள உனதுமெய் படுத்த கண்ணுதல்
ஞெரேலென உதவிய நிமலன் ஈண்டுளன்
ஒரேகணம் ஒடுங்குமுன் உயிரும் வாங்குமால்
பொரேலினி மதனநீ போகு போகென்பான்.

இ—ள்: மதன—மன்மதனே!, பரு ஏர் உள உனது மெய் படுத்த கண்ணுதல் ஞெரேல் என உதவிய நிமலன் ஈண்டு உளன்— மிகுந்த அழகினையுடைய உனது தேகத்தையெரித்த சிவபிரான் விரைவிற்றோற்றுவித்த புதல்வராகிய முருகக் கடவுள் இவ்விடத்திருக்கின்றார், ஒரே கணம் ஒடுங்கும் முன் உயிரும் வாங்கும் — ஒரு கணப்பொழுது கழியுமுன்னர்த்தானே உனதுயிரையுங் கவர்வார், நீ இனி பொரேல் — நீ இனிப்போர் செய்யற்க, போகு போகு என்பான் — போ போ என்று கூறுவான் எ—று.

பரு ஏர் என்பது - முற்றியலுகரங்கெட்டுப் பரேரெனப்புணர்ந்தது. ஏகாரம் பன்மையைமறுத்தது. உம்மை எச்சம். கு இரண்டுஞ் சாரியைகள். இச்செய்யுளும் முற்செய்யுளும் மன்மதனைக் குறித்துக் கூறிய புலம்பல். (45)

வானுழை திரிதரு மதியம் போக்கிய
தீநுழை புண்ணில்வேல் செறித்த தென்னவேள்
கோனுழை கின்றன அதனில் கூடளி
ஈநுழை கின்றன போலும் என்கின்முன்.

**இ—ள்:** வான் உழை திரிதரும் மதியம் போக்கிய தீ நுழை புண்ணில்—ஆகாயத்திலுலாவுகின்ற சந்திரன் பரப்பிய (கிரணங்களாகிய) அக்கினி பட்ட புண்ணில், வேல் செறிந்தது என்ன=வேற் படையைச் செருகினுற் போல, வேள் கோல் நுழைகின்றன—மன்மதனது பாணங்களழுந்துகின்றன, அதனில் கூடு அளி—அம் மலரம்புகளில் மொய்த்த வண்டுகள், ஈ நுழைகின்றன போலும் என்கின்முன்—அப் புண்ணில் ஈ நுழைவதை யொக்குமென்று கூறுவான் எ—று.

சந்திரகிரண முதலியன தம்முளிணக்க முடையனவாய்ப் பெருந் துயர் விளைத்தமையைக் கூறிப் புலம்பினுனென்க. (46)

வன்றிறற் கொலைஞர்கள் மானில் கூவிமான்
ஒன்றறக் கவர்தல்போல் உயிரென் காலினை
இன்றது போலவந் துள்புக் கீர்த்ததால்
தென்றலுக் கியான்செய்த தீதுண் டோவென்பான்.

**இ—ள்:** வன் திறல் கொலைஞர்கள்—மிக்க வலிமையையுடைய வேடர்கள், மானில் கூவி—மான் கூவுவது போலக் கூவி, மான் ஒன்றற கவர்தல் போல்—(அவ்வொலி கேட்டு வரும்) மான்களை ஒன்றுந் தவரு வண்ணம் (வலையிட்டுப்) பிடித்தல் போல, உயிர் என் காலினை—பிராணனென்னும் வாயுவை, இன்று அதுபோல வந்து உள்புக்கு ஈர்த்தது—இன்றைத் தினத்திம் அக்காற்றுப்போல வந்து உள் நுழைந்து கவர்ந்தது, தென்றலுக்கு யான் செய்த தீது உண்டோ என்பான்—தென்றற் காற்றுக்கு யானியற்றிய தீங்கு யாதேனுமுண்டா? (ஒன்று மில்லையே) என்று கூறுவான் எ—று.

தீமை செய்யாத என்னுயிரைச் சூழ்ச்சி செய்து கவர்தலால் மிகக் கொடிய தென உவமான முகத்தாலிழித்துக் கூறினனென்க. (47)

வாகுலப் பரியதோர் மாதர் மாலெனும்
ஆகுலப் புணரியுள் அழுந்தி னேரையும்
வீகுலத் தொகையினுள் விட்டி சைத்திடுங்
கோகிலப் பறவையுங் கொல்லு மோவென்பான்.

**இ—ள்:** வாகு உலப்பு அரியது ஓர் மாதர் மால் எனும்—அழகு குறைவில்லாத பெண்களது மயக்கமாகிய, ஆகுல புணரியுள்—துன்பத்தைத் தருங் கடலில், அழுந்தினேரை—அழுந்தினவர்களை, வீ குல தொகையினுள் விட்டு இசைத்திடும் கோகிலப் பறவையும்—பறவையினங்களின் தொகுதியுள் விட்டு விட்டொலிக்கின்ற குயிற் பறவையும், கொல்லுமோ என்பான்—கொல்லுமா என்று கூறுவான் எ—று.

வீக்குலமெனற்பாலது எதுகை நோக்கிக் ககரவொற்றுத் தொக்கது. முந்திய உம்மை அசை நிலை. (48)

நம்முரு வாயினன் நாகர் கோனெனுத்
தம்மன முன்னியே தளர்வு நீக்கில
கொம்மென அரற்றியுங் கூவ லின்றியும்
எம்முயிர் கொள்வன இருபுளா மென்பான்.

இ—ள்: நாகர்கோன் நம் உரு ஆயினன் எனு—தேவேந்திரன் நமது வடிவத்தைக் கொண்டானென்று, தம் மனம் உன்னி தளர்வு நீக்கில—தங்கள் மனத்தில் நினைத்து என் வருத்தத்தையொழிக்காதனவாய், கொம்மென அரற்றியும் கூவலின்றியும்—விரைவிற் கூவியுங் கூவாதும், எம் உயிர் கொள்வன—எமதுயிரைக் கவர்வன, இரு புள் ஆம் என்பான்—இரண்டு பறவைகளாகுமென்று கூறுவான் எ—று.

தம்முருக்கொண்டமையால் இனத்தானென்றெண்ணித் துணை செய்தல் வேண்டுமாகவும் அங்ஙனஞ் செய்யாது வருத்துகின்றன என்றானென்க. இரு புள்ளென்றது குயிலையும் கோழியையும். இவற்றுட் குயில் கூவி வருத்துவது; இது கூவாதொழியிற் காமந் தணியும். கோழி கூவாது வருத்துவது; இது கூவின் இரவு புலர்ந்து காம நீங்கும். சூரனுதியோர் திக்கு விசயத்தின் பொருட்டுச் சுவர்க்கலோகம் புகுந்த பொழுதும் தக்கன் யாகத்தையழிக்க வீரபத்திரர் வந்த பொழுதும் குயிலுருவையும், கௌதம முனிவரது மனைவியைப் புணரச் சென்ற பொழுது கோழியுருவையும் இந்திரன் கொண்டனன். (49)

தண்டுதல் இன்றியே தானு நானுமாய்ப்
பண்டொரு வனிதையைப் பரிவிற் கூடினேம்
அண்டரும் அறிகுவர் அற்றை நாட்சினம்
உண்டுகொல் கதிரினம் உதிக்கி லானென்பான்.

இ—ள்: தண்டுதல் இன்றி—மனம் பின்னிடுதலில்லாமல், தானும் நானும் ஆய்—அவனும் யானுமாக, பண்டு—முன்னை நாளில், ஒரு வனிதையை பரிவில் கூடினேம்—ஒரு பெண்ணை அன்புடன் புணர்ந்தேம், அண்டரும் அறிகுவர்—தேவர்களும் அதனை அறிவார்கள், அற்றைநாள் சினம் உண்டு கொல்—அற்றை ஞான்றிற் கொண்ட கோபம் இன்னுந் தணியாதிருக்கின்றது போலும், கதிர் இனம் உதிக்கிலான் என்பான்—சூரியனின்னும் உதயஞ் செய்கின்றிலானென்று கூறுவான் எ—று.

வனிதையென்றது பெண் வடிவு கொண்ட அருணனை. இந்திரனுஞ் சூரியனும் இவனைப் புணர்ந்த சரித்திரத்தைக் காம தகனப் படலத்திற் பதினான்காஞ் செய்யுளிற் காண்க. ஒரு பெண்ணை இரு காளையர் விரும்பிய வழிப் பகை நிகழ்வதுலகியலாதலின் 'அற்றை நாட்சின முண்டுகொல்' என்றான். (50)

கோழிலை மடற்பனைக் குடம்பை சேர்தரு
மாழையம் பசலைவாய் மகன்றி லென்பவை
காழக வரிசிலைக் காமன் கோடுபோல்
ஊழியும் வீழ்ந்திடா தொலிக்கு மோவென்பான்.

இ—ள்: கோழ் இலை மடல் பனை குடம்பை சேர்தரும்—வலிய இலைகளை யுடைய மடலமைந்த பனை மரங்களிலுள்ள கூட்டிற் பொருந்திய, மாழையம் பசலை வாய் மகா அன்றில் என்பவை—பொன்னிறமமைந்த பசிய வாயையுடைய பெரிய அன்றிற் பறவைகள், காழக வரி சிலை காமன் கோடு போல்—வயிர மாகிய வரிந்த வில்லையேந்திய மன்மதனது ஊது கொம்பு போல, ஊழியும் வீந்திடாது ஒலிக்குமோ என்பான்—ஊழிக் காலமளவுமோயாது ஒலிக்குமா என்று கூறுவான் எ—று.

மகா அன்றில்-மகன்றிலென மருவிற்று. மகன்றில் ஆணன்றிலென்பர் சிலர். விரகாக்கினியை மூட்டுதலால் 'காமன்கோடு போல்' என்றான். (51)

துன்னல ராகிய தொகையி னோர்தமைத்
தன்னிடை வைத்தெனைத் தளர்வு கண்டதால்
அன்னதும் அன்றியின் றாவி கொள்ளவும்
உன்னிய தோகடல் உறங்க லாதென்பான்.

இ—ள்: துன்னலர் ஆகிய தொகையினோர் தமை தன்னிடை வைத்து—பகைவராகிய அசுரர் கூட்டத்தாரைத் தன்னிடத்திருத்தி, எனை தளர்வு கண்டது—என்னை (இந்நாள் காறும்) வருத்தியது, அன்னதும் அன்றி—அதுவுமல்லாமல், இன்று ஆவி கொள்ளவும் உன்னியதோ—இற்றைத் தினத்தில் உயிரைக் கவரவும் நினைத்தது போலும், கடல் உறங்கலாது என்பான்—சமுத்திரம் நித்திரை செய்கின்றிலது என்று சொல்வான் எ—று.

உம்மை முன்னையது இழிவு சிறப்பு; பின்னையது எச்சம். ஒ—ஐயம். உறங்குதலென்றது ஒலியடங்குதலை. 'துன்னலராகிய தொகையினோர்தமைத் தன்னிடை வைத்தெனைத் தளர்வு கண்டது' எனவும் 'இன்றாவி கொள்ளவு முன்னியது' எனவும் கூறியதனால் அசுரரால் விளைந்த துயரினும் இத்துயர் பெருந் துயரென்றானென்பது பெற்றாம். (52)

இவ்வகை யாமினி யெல்லை முற்றவும்
வெவ்வழல் சுற்றிடும் விரக நோய்தெற
உய்வகை யொன்றிலன் உயங்கல் அல்லது
செய்வது பிறிதிலன் தெருளில் சிந்தையான்.

இ—ள்: இவ்வகை—இப்படியாக, யாமினி எல்லை முற்றவும்—இராக் கால வெல்லை முழுதும், வெவ் அழல் சுட்டிடும் விரக நோய் தெற—கொடிய அக்கினி போற் சுடுகின்ற காம நோயானது வருத்த, உய்வகை ஒன்று இலன்—உய்யும் வழி சிறிதுமில்லாதவனாய், உயங்கல் அல்லது செய்வது பிறிது இலன்—வாடுதலையன்றி வேறொரு செயலுமில்லாமல், தெருள் இல் சிந்தையான்—தெளிவற்ற மனத்தை யுடையவனாயினான் எ—று.

யாமினி-யாமங்களையுடையது. இலன்-இரண்டுங் குறிப்பு முற்றெச்சங்கள். தெருளில் சிந்தையான்-குறிப்பு முற்று. (53)

## வேறு

ஆக்கம் இத்திறம் அடைவுழிப் பத்துநூ றடுத்த
நோக்க முற்றவன் சசிபொருட் டுற்றநோய் அதனை
நீக்கு கின்றனன் யானெனா நினைந்துளான் என்ன
மாக்கள் பூண்டதேர் வெய்யவன் குணதிசை வந்தான்.

இ—ள்: இத் திறம் ஆக்கம் அடைவுழி—இவ்வாறான நிகழ்ச்சிகள் நிகழும் பொழுது, பத்து நூறு அடுத்த நோக்கம் உற்றவன் சசி பொருட்டு உற்ற நோய் அதனை யான் நீக்குகின்றனன் என நினைந்துளான் என்ன—ஆயிரமென்னுந் தொகையமைந்த கண்களையுடைய இந்திரன் இந்திராணியின் காரணமாகக் கொண்ட காம நோயை யானொழிக்கின்றேனென்று கருதினவன் போல, மாக்கள் பூண்ட தேர் வெய்யவன்—ஏழு குதிரைகள் பூட்டப்பெற்ற தேரையுடைய சூரியன், குணதிசை வந்தான்—கிழக்குத் திக்கிலுதித்தான் எ—று.

தற்குறிப்பேற்றவணி. (54)

வெம்பு தொல்லிருள் அவுணர்தங் குழுவினை வீட்டி
உம்பர் மேற்செலும் மதியெனும் மடங்கலை உருத்துப்
பைம்பொன் வெஞ்சுடர்க் கரங்களால் அதன்வலி படுக்குஞ்
சிம்பு ளாமெனத் தோன்றினன் செங்கதிர்க் கடவுள்.

இ—ள்: வெம்பு தொல் இருள் அவுணர்தம் குழுவினை வீட்டி—தன்னுடன் பகைத்த பழைய இருளையும் மந்தேகரென்னுமசுரர் கூட்டத்தையும் அழித்து, உம்பர் மேல் செலும் மதி எனும் மடங்கலை உருத்து—ஆகாயத்தின் மேற் செல்லுகின்ற சந்திரனாகிய சிங்கத்தைச் சினந்து, பைம் பொன் வெம் சுடர் கரங்களால் அதன் வலி படுக்கும்—செம்பொன்னிறமான வெவ்விய கிரணங்களாகிய கைகளால் அதனுடைய வலியையழிக்கின்ற, சிம்புள் ஆமென—சரபம் இதுவென்று சொல்லும்படி, செம் கதிர் கடவுள் தோன்றினன்—சிவந்த கிரணங்களைப் பரப்புகின்ற சூரியன் உதித்தான் எ—று.

வெம்புதல் அவுணர்க்குரிய சாதியடை. மதியெனுமடங்கல் சுடர்க்கரம் என்பன உருவகங்கள். வீரபத்திரர் சரபப் பறவையுருக் கொண்டபோது, கருநிறத்தையுடைய அசுரர் கூட்டத்தையழித்துச் செருக்குற்றுத் தேவர்களோடெதிர்த்துச் சென்ற நரசிங்கத்தை யழித்தலால் சிலேடையுவமை. (55)

தொடர்ந்த ஞாயிறு விடுத்திடுங் கதிர்களாந் தூசி
படர்ந்த காலையில் நிலவெனும் அனிகமுன் பட்ட
அடைந்த மீனெனுந் துணைவரும் பொன்றினர் அமர்செய்
துடைந்த மன்னரில் போயினன் உடுபதிக் கடவுள்.

இ—ள்; தொடர்ந்த ஞாயிறு விடுத்திடும் கதிர்கள் ஆம் தூசி படர்ந்த காலையில்—(போர் செய்யுமாறு) தொடர்ந்து வந்த சூரியன் பரப்பிய கிரணங்களாகிய தூசிப்படை பரவியபொழுது, நிலவெனும் அனிகம் முன் பட்ட—நிலவாகிய சேனைகள் முந்தி அழிந்தன, அடைந்த மீன் எனும் துணைவரும் பொன்றினர்—வந்த நக்ஷத்திரங்களாகிய துணைவர்களும் (பின்) அழிந்தார்கள், உடுபதிக் கடவுள் அமர் செய்து உடைந்த மன்னரில் போயினன்—சந்திரன் போர் செய்து தோற்ற அரசரைப்போல மறைந்தான் எ—று.

இச் செய்யுளிலும் பின்னிரு செய்யுட்களிலும் சந்திரனை ஓரரசனாகவும் சூரியனைப் பிறிதோரரசனாகவும் பாவித்து வருணித்தார். சூரியனுதிக்க நக்ஷத்திரங்கள் மறைந்தன; சந்திரனத்தமித்தான் என்பது இதன் தாற்பரியம். கதிர்களாந் தூசி நிலவெனுமனிகம் மீனெனுந் துணைவர் என்பன இயைபு பற்றி வந்த உருவகங்கள். (56)

விரிந்த பல்கதிர் அனிகத்தை வெய்யவன் விடுப்பத்
துரந்த சோமனே அவன்புறங் காட்டினன் தொலைந்து
கரந்து போதலும் பின்னுறச் சென்றில களத்தில்
இரிந்து ளோரையுந் தொடர்வரோ சூரர்தம் இனத்தோர்.

**இ—ள்:** விரிந்த பல் கதிர் அனிகத்தை வெய்யவன் விடுப்ப—பரந்த பல கிரணங்களாகிய சேனைகளைச் சூரியனேவ, சோமனே துரந்த—(அவை) சந்திரனைத் துரத்தின, அவன் புறங்காட்டினன் தொலைந்து கரந்து போதலும்—அச் சந்திரன் தோற்று மறைந்து செல்லுதலும், பின்னுற சென்றில—பின்னே தொடர்ந்து சென்றில, சூரர் தம் இனத்தோர்—சூரரது இனத்தவர்கள், களத்தில் இரிந்துளோரையும் தொடர்வரோ—போர்க்களத்திற் புறங்காட்டினேரையும் பின்றொடர்வார்களா? (தொடரார்கள்) எ—று.

சூரர் தம்மினத்தோரென்பது வீரர் கூட்டத்தாரெனவும், சூரியனது இனத்தாரெனவும் சிலேடைப் பொருடந்து நிற்றலின் இது சிலேடையின் முடித்த வேற்றுப் பொருள் வைப்பணி. (57)

திங்கள் தன்குறை உணர்த்தவாய் திறந்தெனச் செய்ய
பங்க யங்கள்போ தவிழ்ந்தன குமுதங்கள் பலவுந்
தங்கள் நாயகன் உடைந்தது நோக்கியே தபனற்
கங்கை கூப்பிய திறனென ஒடுங்கியு அன்றே.

**இ—ள்:** திங்கள் தன் குறை உணர்த்த வாய் திறந்து என—சந்திரனது தோல்வியைப் பிறர்க்குக் கூறும் பொருட்டு வாயைத் திறந்தாற் போல, செய்ய பங்கயங்கள் போது அவிழ்ந்தன—செந்தாமரை மலர்கள் முகை விரிந்தன, குமுதங்கள் பலவும்—ஆம்பன் மலர்களெல்லாம், தங்கள் நாயகன் உடைந்தது நோக்கி—தங்கள் தலைவன் தோற்றமையைப் பார்த்து, தபனற்கு அங்கை கூப்பிய திறன் என—சூரியனுக்கு அகங்கைகளைக் குவித்து நின்ற தன்மையைப்போல, ஒடுங்கிய - குவிந்தன எ—று.

சூரியோதயத்திற்றாமரை மலர்தலையும் குமுதங் குவிதலையும் இவ்வாறு தற்குறிப்பேற்றி வருணித்தார். (58)

வனமெ ழுந்தன வனசமு மெழுந்தன வரியின்
இனமெ ழுந்தன மாக்களும் எழுந்தன எழில்சேர்
அனமெ ழுந்தன புள்ளெலாம் எழுந்தன அவற்றின்
மனமெ ழுந்தன எழுந்தன மக்களின் தொகையே.

**இ—ள்:** வனம் எழுந்தன — சோலைகள் கிளர்ந்தன, வனசமும் எழுந்தன—தாமரைகளும் மலர்ந்தன, வரியின் இனம் எழுந்தன—வண்டுக்கூட்டங்களெழுந்தன, மாக்களும் எழுந்தன—மிருகங்களுமெழுந்தன, எழில் சேர் அனம் எழுந்தன—அழகுபொருந்திய அன்னப்பறவைகளெழுந்தன, புள் எலாம் எழுந்தன—ஏனைய பறவைகளுமெல்லாமெழுந்தன, அவற்றின் மனம் எழுந்தன — அந்த விலங்கு பறவை முதலியவற்றின் மனங்கிளர்ந்தது, மாக்களின் தொகை எழுந்தன — மனிதரின் தொகுதி எழுந்தது. எ—று.

சோலைகள் பகலிற் சூரியனது வெப்பத்தாலாகிய வாட்டம் நீங்கப்பெற்று உதயகாலத்தில் தழைவுற்று நிற்பனவாதலின் 'வனமெழுந்தன' என்றார். மன மெழுதல்—சஞ்சரித்தற்கும் உணவுமுதலியவற்றைத் தேடற்கும் விரும்புதல். (59)

ஞாயி றுற்றவவ் வளவையின் நனந்தலை உலகில்
ஏயெ னச்செறி இருளெலாம் மறைந்திருந் தென்னச்
சேய ரிக்கணி தந்திடு தெளிவில்கா மத்து
மாயி ருட்டொகை யொடுங்கிய திந்திரன் மனத்துள்.

இ—ள்: ஞாயிறு உற்ற அ அளவையில்—சூரியனுதித்த அப்பொழுதே, நனந் தலை உலகில்—அகன்ற இடத்தையுடைய இப்பூவுலகத்தில், செறி இருள் எலாம் ஏயென மறைந்திருந்தது என்ன—பரந்த இருள் முழுவதும் விரைவில் மறைந்திருந் தாற்போல, சேய் அரி கணி தந்திடு தெளிவு இல் காமத்து மா இருள் தொகை—செவ்வரிபரந்த கண்களையுடைய இந்திராணியினால் வருவிக்கப்பட்ட தெளிவில் லாத விரகமாகிய பெரிய இருட்டொகுதி, இந்திரன் மனத்துள் ஒடுங்கியது-இந்தி ரனது மனத்தினுள் மறைந்தது எ—று.

இருட்படலம் உலகில் மறைந்ததுபோலக் காமநோயும் இந்திரன் மனத்தில் மறைந்ததென்பது கருத்து. நனந்தலையுலகில்—உலகத்தினடுவே யெனினுமாம். அரி - கண்களிலுள்ள சிவப்புநிறமான இரேகைகள். (60)

கையி கந்துபோய்த் தன்னுயிர் அலைத்தகா மத்தீப்
பைய விந்திடு பாந்தள்போல் தணிதலும் பதைப்புற்
றொய்யெ னக்கடி தெழுந்தனன் நகைத்துவெள் குற்றான்
ஐய கோவிது வருவதே எனக்கென அறைந்தான்.

இ—ள்: கையிகந்து போய் தன் உயிர் அலைத்த காமத்தீ —வரம்புகடந்து சென்று தனது ஆன்மாவை வருத்திய காமமாகிய அக்கினியானது, பை அவிந் திடு பாந்தள் போல் தணிதலும்—படஞ்சுருங்கப்பெற்ற பாம்புபோலடங்க, பதைப் புற்று—திடுக்குற்று, ஒய்யென கடிது எழுந்தனன்—மிகவிரைவிலெழும்பி, நகைத்து வெள்குற்றான் — சிரித்து வெட்கங்கொண்டு, ஐயகோ—ஐயோ, இது எனக்கு வருவதே என அறைந்தான் — இவ்விழிவரவு எனக்கு நேர்தற்பாலதாவென்று கூறினான் (இந்திரன்) எ—று.

ஏகாரம் - கழிவிரக்கம். நன்னெறிப்படல் வேண்டுமென்றெண்ணி முருகக் கடவுளைச் சேவித்திருப்பவும் தன்னகத்தை வேறுபடுத்திப் புகுந்து வருத்தியவென் பார் 'கையிகந்துபோய்த் தன்னுயிரலைத்த' எனவும், அரவின்படம் சினந்தணிந் துழித் தானே சுருங்குவதுபோலக் காமநோய் இரவு புலரத் தானாய் மறைந்தமை யின் 'பையவிந்திடு பாந்தள்போற்றணிதலும்' எனவும், அஃதொழிந்தவுடன் நல்லுணர்வுதிக்க அதுகாறும் புலம்பிக் கிடந்தமைக் கஞ்சி நடுங்கினானாதலின் 'பதைப்புற்று' எனவும், அதுபற்றி அவ்விடத்திற் சிறிதுந் தாங்காது செல்லுமாறு விரைவிலெழுந்தனனாதலின் ஒருபொருட்கிளவியிரண்டுபுணர்த்தி 'ஒய்யெனக் கடிதெழுந்தனன்' எனவும், இச்சோலையிலிதுகாறுமிருந்து புலம்பியதைக் கண்டா ருங்கேட்டாரும் நகையாடுவரே! என்செயலிருந்தபடி யென்னையென்றெண்ணித் தன்னைத்தானே பழித்து வெள்கினனாதலின் 'நகைத்துவெள்குற்றான்' எனவும், பேதைமைமிக்க காமுகர்பாற்சார்தற்பாலனவாகிய இவ்விழிகுணங்கள் நூற்கேள்

வியின் மிக்கநுண்ணியனுகிய எனக்குநேர்தற்பாலனவல்லவேயெனத் துயருற்றன னென்பார் 'ஐயகோ விதுவருவதே யெனக்கென வறைந்தனன்' எனவும் கூறி னர். (61)

தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்புந்
தோமில் செல்வமுங் கெடுக்கும்நல் லுணர்வினைத் தொலைக்கும்
ஏம நன்னெறி தடுத்திருள் உய்த்திடும் இதனுல்
காம மன்றியே ஒருபகை உண்டுகொல் கருதில்.

இ—ள்: தீமை உள்ளன யாவையும் தந்திடும்—தீங்கென்றுள்ளனவெல்லாவற் றையும் பயக்கும். சிறப்பும் தோம் இல் செல்வமும் கெடுக்கும்—மேம்பாட்டையும் குற்றமற்ற செல்வத்தையும் அழிக்கும், நல் உணர்வினை தொலைக்கும் — நல்லறி வைக் கெடுக்கும், ஏம நல் நெறி தடுத்து இருள் உய்த்திடும்—சுகத்தைத் தருகின்ற நல்வழியிற் செல்லுதலைத் தடுத்து நரகத்திற் செலுத்தும், இதனுல்—இக்காரணத் தால், கருதில்—ஆராயுமிடத்து, காமமே அன்றி ஒரு பகை உளது கொல்—காம மேயன்றி (அதனினுங்கொடிய) பிறிதொரு பகை உண்டா? (இல்லையே) எ—று.

''காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்ணே டாத — காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சுங் — காமமே கள்ளுண்டற்குங் காரண மாத லாலே — காமமே நரகபூமி காணியாக் கொடுப்பது'' என்ருர் பரஞ்சோதிமுனி வரும். (62)

என்ப துன்னியே இந்திரன் ஆண்டைவைப் பிகந்து
தன்பு றந்தனிற் கடவுளர் குழுவெலாஞ் சார
அன்பொ டேபடர்ந் தறுமுகன் அடிகளை அடைந்து
முன்பு தாழ்ந்தனன் உரோமமுஞ் செங்கையும் முகிழ்ப்ப.

இ—ள்: என்பது உன்னி—என்னும் நீதிநூற்றுணிபைச் சிந்தித்து, இந்திரன் —இந்திரன், ஆண்டை வைப்பு இகந்து—அவ்விடத்தை நீங்கி, தன்புறம் தனில் கடவுளர் குழு எலாம் சார—தன்பக்கத்திற்றேவர்கூட்டத்தாரனைவரும் வந்துசூழ, அன்பொடு படர்ந்து — அன்பினுடன்போய், அறுமுகன் அடிகளை அடைந்து — முருகக்கடவுளது பாதங்களையணுகி, முன்பு—திருமுன்னிலையில், உரோமமும் செம் கையும் முகிழ்ப்ப தாழ்ந்தனன் — மயிர்களுஞ் சிவந்த கைகளு முகிழ்ப்பப் பணிந்தான் எ—று.

இகந்து படர்ந்து என இயையும். முகிழ்த்தல் — உரோமத்திற்காம்போது சிலிர்த்தல், கைக்காம்போது குவிதல். (63)

தொழுத கையினன் கோட்டிய மெய்யினன் துகிலத்
தெழுது பாவையில் ஆன்றமை புலத்தினன் இறைஞ்சிப்
புழுதி தோய்தரும் உறுப்பினன் சுருதியின் பொருண்மை
முழுதும் ஊறிய துதியின னுகிமுன் நின்ருன்.

இ—ள்: தொழுத கையினன்—குவித்த கைகளையுடையவனும், கோட்டிய மெய்யினன்—வளைத்த தேகத்தையுடையவனும், துகிலத்து எழுது பாவையில் ஆன்று அமை புலத்தினன்—வஸ்திரத்திற் சித்திரித்த பாவையைப் போல ஒரு

வழிப்பட்டடங்கிய ஐம்புலன்களையுடையவனும், இறைஞ்சி புழுதி தோய் தரும் உறுப்பினன்—வணங்குதலால் தூளி படியப்பெற்ற அவயவங்களையுடைய வனும், சுருதியின் பொருண்மை முழுதும் ஊறிய துதியினன் ஆகி—வேதப் பொருள்கள் முழுதுமமைந்த தோத்திரத்தைச் சொல்பவனுமாகி, முன் நின் றான்—திருமுன்னிலையினின்றான் எ—று.

மெய் கோட்டியது பெரியோர் முன்னிறுமாந்து நிற்றலிழுக்காதலின். ஐம் புலனு மொன்றி இறைவர் மாட்டுப் பதிந்தமையின் பொறிகளெல்லாஞ் சித் திரப் பாவை போற் செயலற்றிருந்தனவென்க. (64)

கரிய வன்றனைச் செய்யவன் கருணைசெய் தருளி
வருதி யென்றுகூய் மறைகளும் வரம்புகாண் கில்லா
அரன தாள்களை அருச்சனை புரிதுநாம் அதனுக்
குரிய வாயபல் கரணமுந் தருதியென் றுரைத்தான்.

இ—ள்: செய்யவன்—சிவந்த நிறத்தையுடைய முருகக்கடவுள், கரியவன் தனை கருணை செய்தருளி—கரு நிறத்தையுடைய இந்திரனுக்குக் கிருபை செய்து, வருதி என்று கூய்—(சமீபத்தில்) வருவாயென்றழைத்து, நாம்—யாம், மறை களும் வரம்பு காண்கில்லா அரன தாள்களை அருச்சனை புரிதும்—வேதங்களும் முடிவு காணப் பெறாத சிவபிரானது பாதங்களைப் பூசிப்போம், அதனுக்கு உரிய ஆய பல் கரணமும் தருதி என்று உரைத்தான்—அதற்கேற்றனவாகிய பல உப கரணங்களையுங் கொணர்வாயென்று கூறியருளினார் எ—று.

அரன என்பதில் அ ஆறும் வேற்றுமைப் பன்மையுருபு. உம்மை-முன்னை யது உயர்வு சிறப்பு; பின்னையது முற்று. (65)

உரைத்த வெல்லையில் தொழுதுபோய் உழையரில் பலரைக்
கரைத்து வீற்றுவீற் றேவியே கடிமலர் கண்ணி
திரைத்து கிற்படா நறும்புனல் அவிபுகை தீபம்
விரைத்த கந்தங்களேனவுந் தந்தனன் விரைவில்.

இ—ள்: உரைத்த எல்லையில்—அவ்வாறு கூறியருளியபொழுது, தொழுது போய்—இந்திரன் கைதொழுது சென்று, உழையரில் பலரை கரைத்து—தன் பரிசனர்களுட் பலரை யழைத்து, வீற்று வீற்று ஏவி—வெவ்வேறாக ஏவி, கடி மலர் கண்ணி—மணம் பொருந்திய மலர்களையும் மாலையையும், திரை துகில் படாம்—திரை வஸ்திரத்தையும், நறும் புனல்—வாசனையூட்டப்பெற்ற திருமஞ் சனத்தையும், அவி—நைவேத்தியத்தையும், புகை—தூபத்தையும், தீபம்—தீபத் தையும், விரைத்த கந்தங்கள்—பரிமளிக்கின்ற சுகந்தங்களையும், ஏனவும்—பிற வற்றையும், விரைவில் தந்தனன்—சீக்கிரத்தில் வருவித்தான் எ—று.

துகிற்படாம்-இரு பெயரொட்டு. ஒவ்வோர் பொருளையுந் தனித்தனி கூறி அவ்வவற்றைக் கொணருமாறு ஒவ்வோர் பரிசனர்க்கும் பணித்தானாதலின் 'வீற்று வீற்றேவி' என்றார். (66)

அவ்வக் காலையில் ஆறுமா முகனுடை யடிகள்
தெய்வக் கம்மியற் கொண்டொரு சினகரம் இயற்றிச்
சைவத் தந்திர விதியுளி நாடியே தாதை
எவ்வெக் காலமும் நிலையதோர் உருவுசெய் திட்டான்.

**இ—ள்:** அ அக்காலையில்—அங்ஙனங் கொணர்ந்த அச் சமயத்தில், ஆறு மாமுகன் உடை அடிகள்—சிறந்த ஆறு முகங்களையுடைய முருகக்கடவுள், தெய்வ கம்மியன் கொண்டு ஒரு சினகரம் இயற்றி—தேவதச்சனைக் கொண்டு ஒரு கோயிலையமைப்பித்து, சைவ தந்திர விதியுளி நாடி — சைவாகமவிதி முறையை ஆராய்ந்து, தாதை எவ்வெக்காலமும் நிலையது ஓர் உருவு செய்திட்டான்—பிதாவாகிய சிவபிரான் எக்காலத்திலும் நிலைத்திருக்கின்ற ஒரு திருவுருவத்தையமைத்தார் எ—று.

நித்திய நைமித்திகங்கள் நிகழாதொழியினுஞ் சான்னித்தியங் குறைவுபடா திருக்கின்றவென்பார் 'எவ்வெக்காலமுநிலையது' என்றார். பாசுபத விரத நெறியாகப் பூசித்தாரென முதனூலிற் கூறப்பட்டது. அந்நெறி வேதோபநிடதங்களிற் கூறப்படுங் கிரமத்தைத் தழுவியது. (67)

தேவு சால்மணிப் பீடத்தில் ஈசனைச் சேர்த்தி
ஆவின் ஓரைந்தும் அமுதமும் வரிசையால் ஆட்டித்
தாவி லாததோர் வாலிதாம் அணித்துகில் சாத்திப்
பூவின் மாலிகை செய்யசாந் தத்தொடும் புனைந்தான்.

**இ—ள்:** தேவு சால் மணி பீடத்தில் ஈசனை சேர்த்தி—தெய்வத் தன்மை பொருந்திய இரத்திநாசனத்திற் சிவபெருமானை யெழுந்தருளச் செய்து, ஆவின் ஓரைந்தும் அமுதமும் வரிசையால் ஆட்டி—பஞ்சகவ்வியத்தையும் பஞ்சாமிர்தத்தையும் முறைப்படியபிடேகித்து, தா இலாதது ஓர் வாலிது ஆம் மணி துகில் சாத்தி—குற்றமற்ற சுத்தமாகிய அழகிய வஸ்திரத்தையணிந்து, பூவின் மாலிகை செய்ய சாந்தத்தொடும் புனைந்தான்—புஷ்ப மாலையையும் செப்பமாகிய சந்தனத்தையுஞ் சாத்தினர் எ—று.

தேவு என்பதில் உகரம் பண்புப் பெயர் விகுதி. ஓர்—அசை. ஆவினைரைந்து தொகைக் குறிப்புச் சொல். ஆவினைந்தாவன:- பால் தயிர் நெய் கோமயம் கோசலம் என்பன. பஞ்சாமிர்தம்:— பால் தயிர் நெய் தேன் சர்க்கரை என்பன. இவற்றிற் சிலவற்றை நீக்கி, தேங்காய்த் துருவல் பழவகை முதலியவற்றைச் சேர்த்தும் வழங்குவர். வரிசையாலாட்டி என்றதனால், நல்லெண்ணெய், மாக்காப்பு, மஞ்சட்காப்பு, கருப்பஞ்சாறு, இளநீர் முதலியவற்றையும் முன் பின் முறை தெரிந்து அபிடேகித்தனரென்பது போதரும். அமுதம் தீர்த்தமெனினுமாம். (68)

மருந்தி னாற்றவுஞ் சுவையன வாலுவ நூல்போய்த்
திருந்தி னார்களும் வியப்பன திறம்பல வாகிப்
பொருந்து கின்றன நிரல்அமை கருனையம் புழுக்கல்
சொரிந்து பொற்கலத் தருத்தினன் மந்திரத் தொடர்பால்.

**இ—ள்:** மருந்தின் ஆற்றவும் சுவையன — தேவாமிர்தத்தினின்றும் மிக இனிமையுடையனவும், வாலுவ நூல் போய் திருந்தினார்களும் வியப்பன—பாக சாஸ்திரத்திற் பயின்று திருந்தியுள்ளவர்களும் புகழத்தக்கனவும், பல திறம் ஆகி பொருந்துகின்றன—பலவிதங்களா யமைந்தனவும் ஆகிய, நிரல் அமை கருனையம் புழுக்கல் — ஒழுங்கமைந்த பொரிக் கறிகளையுடைய அன்னத்தை, பொன் கலத்து சொரிந்து—பொற்றட்டத்திற் படைத்து, மந்திரத் தொடர் பால் அருத்தினன்—மந்திரோச்சாரணத்துடன் நிவேதித்தார் எ—று.

முற்கான்னமும் திலான்னமும் பாயசான்னமும் சுத்தான்னமு முதலாகப் பல வகையாயமைக்கப்பட்டிருத்தலின் 'திறம் பலவாகிப் பொருந்துகின்றன' என்றூர். (69)

கந்தம் வெள்ளிலை பூகநற் காயிவை கலந்து
தந்து பின்முறை அருத்தினன் புகைசுடர் தலையா
வந்த பான்மைக ளியாவையும் வரிசையா லுதவி
முந்து கைதொழூஉப் போற்றினன் மும்முறை வணங்கி.

இ—ள்: பின் முறை—நைவேத்தியஞ் செய்த பின்பு, கந்தம் வெள்ளிலை பூக நல் காய் இவை கலந்து தந்து அருத்தினன்—முகவாசம் வெற்றிலை பாக்கு என்னுமிவற்றைச் சேர்த்து நிவேதித்து, புகை சுடர் தலையா வந்த பான்மைகள் யாவையும் வரிசையால் உதவி—தூபம் தீபம் முதலாகவுள்ள உபசாரங்களெல்லாவற்றையும் முறைப்படி கொடுத்து, முந்து கை தொழூஉ—திருமுன்னின்று கை கூப்பி, மும் முறை வணங்கி—மூன்று முறை பணிந்து, போற்றினன்—துதித்தார் எ—று.

கந்தம்-தக்கோலம் ஏலம் முதலியன. பூகநற்காய் - கமுகினது நல்ல காய். (70)

**வேறு**

இருவரும் உணர்கிலா திருந்த தாள்களைச்
சரவண மிசைவரு தனயன் பூசனை
புரிதலும் உமையொரு புடையிற் சேர்தர
அருள்விடை மீமிசை அண்ணல் தோன்றினன்.

இ—ள்: சரவணமிசை வரு தனயன்—சரவண தடாகத்திற் றேன்றிய புதல்வராகிய முருகக்கடவுள், இருவரும் உணர்கிலாது இருந்த தாள்களை பூசனை புரிதலும்—பிரம விஷ்ணுக்களாலு மறியப்படாதிருந்த திருவடிகளை வழிபடுதலும், அண்ணல்—சிவபிரான், உமை ஒரு புடையில் சேர்தர—உமாதேவி வாமபாகத்திலமைய, அருள் விடை மீ மிசை தோன்றினன்—கருணையையுடைய இடபவாகனத்திலெழுந்தருளினர் எ—று.

தருமவடிவாகிய இடபமென்பார் 'அருள் விடை' என்றூர். (71)

கார்த்திகை காதலன் கறைமி டற்றுடை
மூர்த்திநல் லருள்செய முன்னி வந்தது
பார்த்தனன் எழுந்தனன் பணிந்து சென்னிமேற்
சேர்த்திய கரத்தொடு சென்று போற்றினன்.

இ—ள்: கார்த்திகை காதலன்—கார்த்திகை மாதர்க்குப் புதல்வரான முருகக்கடவுள், கறை மிடற்று உடை மூர்த்தி நல் அருள் செய முன்னி வந்தது பார்த்தனன்—நஞ்சைத் திருமிடற்றிலுடைய சிவபிரான் நல்ல கிருபையைச் செய்ய நினைத்து எழுந்தருளிய தன்மையைப் பார்த்து, எழுந்தனன் பணிந்து—எழும்பி வணங்கி, சென்னிமேல் சேர்த்திய கரத்தொடு சென்று போற்றினன்—சிரமேற் கூப்பிய திருக்கரத்துடன் திருமுன் சென்று துதித்தார் எ—று. (72)

செயிர்ப்பறு நந்திதன் திறத்தில் வீரரும்
வியர்ப்பினில் வந்தெழு வீர ருங்குழீஇக்
கயற்புரை கண்ணுமை கணவற் காணுறீஇ
மயிர்ப்புறம் பொடிப்புற வணங்கி ஏத்தினர்.

இ—ள்: செயிர்ப்பு அறு நந்திதன் திறத்தில் வீரரும்—கோபமில்லாத நந்தி கணத்தவர்களாயிருந்த நவ வீரர்களும், வியர்ப்பினில் வந்து எழு வீரரும்—வியர்வையிற் றோன்றிய இலக்க வீரர்களும், குழீஇ—கூடி, கயல் புரை கண் உமை கணவன் காணுறீஇ—கயல்மீன் போன்ற கண்களையுடைய உமாதேவியாரது நாயகராகிய சிவபிரானைத் தரிசித்து, மயிர்ப்புறம் பொடிப்பு உற வணங்கி ஏத்தினர்—தேகத்திலுள்ள உரோமங்கள் புளகமுறப் பணிந்து துதித்தார்கள் எ—று.

மயிர்ப்புறம்=புறமயிர், கடவுளைக் காணுதற்கேற்ற நற்குணமுடையரென்பது போதர 'செயிர்ப்பறு நந்திதன்றிறத்தில் வீரர்' என்றார். (73)

முண்டகன் முதல்வரும் முரண்கொள் பூதருங்
கண்டனர் அனையது கரங்கள் கூப்பியே
மண்டனின் மும்முறை வணங்கி வானகம்
எண்டிசை செவிடுற ஏத்தல் மேயினர்.

இ—ள்: முண்டகன் முதல்வரும்—பிரமா முதலிய தேவர்களும், முரண்கொள் பூதரும்—வலிமையையுடைய பூதர்களும், அனையது கண்டனர்—அத் தன்மையைப் பார்த்து, கரங்கள் கூப்பி—கைகுவித்து, மண் தனில் மும்முறை வணங்கி—நிலத்தில் வீழ்ந்து மூன்று முறை பணிந்து, வானகம் எண் திசை செவிடு உற ஏத்தல் மேயினர்—ஆகாயமும் எட்டுத் திக்குகளுஞ் செவிடுபடும்படி (பேரொலியாகத்) துதிப்பாராயினர் எ—று. (74)

### வேறு

ஆயது காலை தன்னில் அருவுரு வாகும் அண்ணல்
சேயினை நோக்கி உன்றன் வழிபடற் குவகை செய்தேம்
நீயிது கோடி யென்னா நிரந்தபல் புவன முற்றும்
ஏயென முடிவு செய்யும் படைக்கலத் திறையை ஈந்தான்.

இ—ள்: ஆயது காலை தன்னில்—அப்பொழுது, அரு உரு ஆகும் அண்ணல்—அருவமாயும் உருவமாயும் அருவுருவமாயும் நிற்கின்ற சிவபிரான், சேயினை நோக்கி—தமது புதல்வராகிய முருகக்கடவுளைத் திருநோக்கஞ் செய்து, உன் தன் வழி படற்கு உவகை செய்தேம்—நீயியற்றிய பூசைக்கு மகிழ்ந்தேம், நீ இது கோடி என்னா—நீ இதனை ஏற்றுக்கொள்வாயென்று திருவாய்மலர்ந்தருளி, நிரந்த பல் புவனம் முற்றும் ஏயென முடிவு செய்யும் படைக்கலத்து இறையை ஈந்தான்—நிறைந்த பல வுலகங்கள் முழுவதையும் விரைவிலழிக்க வல்ல படைக்கல ராசனாகிய பாசுபதாஸ்திரத்தைக் கொடுத்தருளினர் எ—று.

இப்படையைச் சர்வசங்காரப் படையெனவும் வழங்குப. (75)

மற்றிது நம்பால் தோன்றும் வான்படை மாயன் வேதாப்
பெற்றுள தன்றி யார்இப் பெரும்படை பரிக்கும் நீரார்
முற்றுயிர் உண்ணும் வெஞ்சூர் முரட்படை தொலைப்பான் ஈது
பற்றுதி மைந்த என்னுப் பராபரன் அருளிப் போனுன்.

இ—ள்: மைந்த—புதல்வனே!, இது நம்பால் தோன்றும் வான் படை—இது எம்மிடத்திற் றேன்றிய சிறந்த படைக்கலம், மாயன் வேதா பெற்றுளது அன்று—திருமாலும் பிரமனுமாகிய தேவத்தலைவர் தாமும் பெற்றுள்ளதன்று, இ பெரும் படை பரிக்கும் நீரார் யார்—பெரிய இந்தப் படைக்கலத்தைத் தாங்குதற்கேற்ற வலிமையையுடையார் (உன்னையன்றி) வேறியாவர் (ஒருவருமில்லை), முற்று உயிர் உண்ணும்—இது எல்லாவுயிர்களையுமழிக்கும், வெம் சூர் முரண் படை தொலைப்பான்—கொடிய சூரபன்மனது வலிய சேனைகளையழிக்குமாறு, ஈது பற்றுதி என்னு—இப்படையை யேற்றுக்கொள்ளென்று கூறி, பராபரன்—சிவபிரான், அருளி—கொடுத்து, போனுன்—மறைந்தருளினுர் எ—று. (76)

கருணைசெய் பரமன் சேணிற் கரந்தனன் போன காலை
அருள்பெறு நெடுவேல் அண்ணல் அன்னவற் போற்றிப் பின்னை
விரவிய இலக்கத் தொன்பான் வீரரும் அயனும் ஏனைச்
சுரர்களும் வழுத்திச் செல்லத் தூயதன் தேரிற் புக்கான்.

இ—ள்: கருணை செய் பரமன் சேணில் கரந்தனன் போன காலை—இவ்வாறு திருவருள் செய்த சிவபிரான் ஆகாய மார்க்கமாக மறைந்து சென்றபொழுது, அருள் பெறும் நெடு வேல் அண்ணல்—அவரது திருவருளைப் பெற்ற நெடிய வேற்படையை யேந்திய முருகக்கடவுள், அன்னவன் போற்றி—அவரைத் துதித்து, பின்னை—பின்பு, விரவிய இலக்கத்தொன்பான் வீரரும் அயனும் ஏனை சுரர்களும் வழுத்தி செல்ல—செறிந்த இலக்கத்தொன்பது வீரர்களும் பிரமாவும் திருமால் முதலிய மற்றைய தேவர்களுந் துதித்து உடன்வர, தூய தன் தேரில் புக்கான்—சுத்தமாகிய தமது மனேவேகப் பொற்றேரிலேறியருளினுர் எ—று. (77)

சில்லியந் தேர்மேற் செவ்வேள் சேர்தலும் உலவை வேந்தன்
வல்லைதன் தமர்க ளோடும் வாம்பரி கடாவி உய்ப்ப
எல்லையிற் பரிதி தோன்ற எழுதரும் உயிர்க ளேபோல்
ஒல்லென எழுந்த தம்மா உருகெழு பூத வெள்ளம்.

இ—ள்: செவ்வேள்—முருகக்கடவுள், சில்லியம் தேர்மேல் சேர்தலும்—உருளைகளையுடைய தேரின் மேலெழுந்தருளுதலும், உலவை வேந்தன்—வாயு தேவன், வல்லை—விரைவாக, தன் தமர்களோடும்—தனது சுற்றத்தவர்கள் நாற்பத்தொன்பதின்மர்களுடன், வாம் பரி கடாவி உய்ப்ப—தாவுகின்ற குதிரைகளை ஏவிச் செலுத்த, எல்லையில் பரிதி தோன்ற எழுதரும் உயிர்களே போல்—காலையிற் சூரியனுதிக்க நித்திரை விட்டெழும்புகின்ற ஆன்ம வர்க்கங்களைப்போல, ஒல் என—விரைவாக, உரு கெழு பூத வெள்ளம் எழுந்தது—எவருமஞ்சத்தக்க தோற்றம் பொருந்திய பூதசேனு சமூகம் எழுந்தது எ—று.

சூரியன் உதயமலையிற்றேன்றி வரக்கண்டு உயிர்வர்க்கங்களெழுவது போல முருகக்கடவுள் தேர்மேல் வருதலைக் கண்டு பூதர்களெழுந்தனரென்பது கருத்து.

உரு-எவருமஞ்சத்தக்க தோற்றம். கெழுதல்-பொருந்துதல். செந்நிறமுடைமை யாற் செவ்வேளுக்குச் சூரியனையுவமித்தார். (78)

சாரத நீத்த மெல்லாந் தரையின்நின் றெழுந்து சூழ்ந்து
போரணி யணிந்து போந்த புடைதனில் இலக்கத் தொன்பான்
வீரருஞ் சுரர்கள் யாரும் மேவினர் வந்தார் வான்றோய்
தேர்மிசை அவர்க்கு நாப்பட் சென்றனன் குமரச் செம்மல்.

இ—ள்: சாரத நீத்தம் எல்லாம்—பூத வெள்ள முழுதும், தரையில் நின்று எழுந்து சூழ்ந்து—பூமியினின்று மெழும்பி ஒருங்கு கூடி, போர் அணி அணிந்து போந்த—போர்க் கோலங் கொண்டு சென்றன, இலக்கத்தொன்பான் வீரரும் சுரர்கள் யாரும் புடைதனில் மேவினர் வந்தார்—இலக்கத்தொன்பது வீரர்களுந் தேவரனைவரும் பக்கத்திற் சூழ்ந்து வந்தார்கள், அவர்க்கு நாப்பண்—அவரனை வர்க்கும் நடுவில், வான் தோய் தேர் மிசை—ஆகாயத்தையளாவிய தேரின் மேல், குமர செம்மல் சென்றனன்—குமாரக்கடவுள் சென்றருளினர் எ—று.

வான்றோய்தேர் ஆகாயமார்க்கமாகச் செல்லுகின்றதேரெனினுமாம். (79)

மண்ணியங் கரையிற் றென்பால் வகுத்தசேய் ஞல்லூர் நீங்கி
எண்ணிய வுதவும் பொன்னி யிகந்திடை மருதி னோடு
தண்ணியல் மஞ்ஞை யாடுந் தண்டுறை பறிய லூருங்
கண்ணுதல் இறைவன் தானம் ஏனவுங் கண்டு போனான்.

இ—ள்: மண்ணியம் கரையில் தென்பால் வகுத்த சேய்ஞல்லூர் நீங்கி— மண்ணியாற்றங்கரையின் றென்பாகத்திலமைக்கப்பட்ட திருச்சேய்ஞலூரை நீங்கி, எண்ணிய உதவும் பொன்னி இகந்து—நினைத்த பலன்களையெல்லாங் கொடுக்கின்ற காவேரி நதியைக் கடந்து, இடைமருதினோடு—திருவிடைமரு தூரையும், தண் இயல் மஞ்ஞை ஆடும் தண் துறை—திருமயிலாடு துறையையும், பறியலூரும்—திருப்பறியலூரையும், கண் நுதல் இறைவன் தானம் ஏனவும்— நெற்றிக்கண்ணையுடைய சிவபிரான் வீற்றிருக்கின்ற பிற தலங்களையும் கண்டு போனான்—தரிசித்து அப்பாற் சென்றார் எ—று.

தண்ணியன் மஞ்ஞையாடுந் தண்டுறை-தண்மையான இயல்பினையுடைய மயில்களாடுகின்ற குளிர்ந்ததுறை. இத்தலத்தை மாயூரமெனவும் வழங்குப. (80)

எழில்வளஞ் சுரக்குந் தொல்லை இலஞ்சியங் கானம் நோக்கி
மழவிடை இறைவன் பொற்றாள் வணங்கியே மலர்மென் பாவை
முழுதுள திருவும் என்றும் முடிவில்மங் கலமும் எய்த
விழுமிதின் நோற்றுப் பெற்ற வியன்திரு வாரூர் கண்டான்.

இ—ள்: எழில் வளம் சுரக்கும் தொல்லை இலஞ்சியங்கானம் நோக்கி— சிறந்த வளங்களைத் தருகின்ற பழைய திருவிலஞ்சியங் கானத்தைத் தரிசித்து, மழ விடை இறைவன் பொன் தாள் வணங்கி—(அங்கு வீற்றிருக்கின்ற) சிவ பிரானது அழகிய பாதங்களைப் பணிந்து, மலர் மென் பாவை முழுது உள

திருவும் என்றும் முடிவு இல் மங்கலமும் எய்த விழுமிதில் நோற்றுப் பெற்ற வியன் திருவாரூர் கண்டான்—செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற மெல்லிய இலக்குமி எல்லாச் செல்வங்களையும் எப்போது மழியாத மங்கலியத்யையும் அடையும்படி நன்கு தவம் புரிந்து பெற்றுக்கொண்ட சிறந்த திருவாரூரைத் தரிசித்தார் எ—று.

மழவிடையிறைவன்-இளமையாகிய இடபவாகனத்திலெழுந்தருளுகின்ற தலைவன். முன்னொரு காலத்தில் திருமால் பகைவரை வெல்லும் பொருட்டுச் சென்று வில்லைக் கீழ் மேலாக நிறுத்திக் கீழ்க் குதையை வலக்காற் பெரு விரலாலும் மேற் குதையை மோவாய்க் கட்டையாலும் ஊன்றி நிற்பப் பகைவர்கள் செல்லுருக் கொண்டு நாணையறுத்து விட்டமையால் அவ்வில் நிமிர்ந்தது. அதனால், தலை வேருய்க் கிளப்பப்பட்டுத் திருக்கண்ண மங்கையென்னுந் தலத்தில் விழத் திருமாலுயிர் பிரிந்தார். அதன்மேல் திருமகள் திருவாரூரையடைந்து சிவபிரானைக் குறித்துத் தவஞ் செய்து தனது நாயகராகிய அத் திருமாலை யெழுப்பி எல்லாச் செல்வங்களையும் பெற்று வாழ்ந்திருந்தனள் என்பது சரித்திரம். (81)

குமாரபுரிப் படலம் முற்றிற்று.

ஆகத்திரு விருத்தம் 1725

# 25. சுரம்புகு படலம்.



முருகக்கடவுள் பாலைவனத்திற் சென்றருளிய சரித்திரத்தைக் கூறுதலின் இப் பெயர்த்தாயிற்று.

## இப்படலப்பொழிப்பு.

முருகக்கடவுள் திருவாரூர்க்குச் சென்று சுவாமி தரிசனஞ் செய்தபின் பாலை வன மார்க்கமாகச் சென்றனர். அப் பாலைவனம் அவர் வரும்போது பூஞ்சோலை கள் பொருந்தப் பெற்று மிகக் குளிர்ந்தது. திருப்பரங்குன்றத்திருந்த பராசர முனிவரின் குமாரரறுவரும் அவரது வருகையை ஞானத்தாலுணர்ந்து எதிர் கொண்டுவந்து வணங்கினர். அச் சமயத்தில் அவர் வரலாற்றை இந்திரன் கூற, முருகவேள் கேட்டு அருள் செய்து அவரையுடனழைத்துக் கொண்டு அப்பாற் சென்றார் என்பதாம்.

புற்றிடங் கொண்ட புத்தேள் புரந்தரற் கருள்செய் திட்ட
நற்றலந் தன்னைச் சேர்ந்த நகரமுள் ளனவுங் காணூஉக்
கொற்றவெங் கதிர்வேல் அண்ணல் கொல்லுலை அழலிற் செக்கர்
பற்றிய இரும்பு போலும் பாலையங் கானத் துற்றான்.

**இ—ள்;** கொற்ற வெம் கதிர் வேல் அண்ணல் — வெற்றி பொருந்திய வெவ் விய ஒளிபொருந்திய வேற்படையை யேந்திய முருகக்கடவுள், புற்று இடம் கொண்ட புத்தேள் புரந்தரற்கு அருள்செய்திட்ட நல் தலம் தன்னை சேர்ந்த நகரம் உள்ளனவும் காணூஉ — புற்றையிடமாகக்கொண்டெழுந்தருளியிருக்கின்ற பரமசிவன் இந்திரனுக்குத் திருவருள்புரிந்த நல்ல திருவாரூரைச் சார்ந்துள்ள ஆலயங்களெல்லாவற்றையுந் தரிசித்து, கொல் உலை அழலில் செக்கர் பற்றிய இரும்பு போலும் பாலையம் கானத்து உற்றான் — கொல்லனது உலைக்களத்திலுள்ள அக்கினியிற் காய்ந்து சிவப்பேறிய இரும்பைப் போன்ற பாலைவனத்திற் போயருளினார். எ—று.

திருவாரூர் பஞ்சபூதத் தலங்களுட் பிருதுவித்தலமெனப்படும். தெய்வீகமாகிய புற்றையுடைமையால் அத்தல நாதரை வன்மீகநாதரென வழங்குவது. இந்திரன் தான் பூசித்த மூர்த்தியை முசுகுந்தச் சக்கரவர்த்திக்குக் கொடுத்தமையாற் புலையருருவெய்தித் திருவாரூரிற் சென்று சிவபிரானது விழாவிற்குப் பறையறைந்து திரிந்து சிலநாளில் அவரருளாற் பழைய இயல்பைப் பெற்றான்: இச்சரித்திரம் மேல் தக்ஷகாண்டத்திற் கந்தவிரதப் படலத்திற் கூறப்பட்டுள்ளது. அணுகினுந் தீராவுபத்திரவத்தை விளைத்தலின் அப்பாலைவனத்திற்குக் கொல்லுலை யழலிற்காய்ச்சிய இரும்பை உவமை கூறினார். (1)

### வேறு

ஏழு நேமியும் பெரும்புறக் கடலுமெண் டிசையுஞ்
சூழ அன்னதால் அழிவின்றித் தொன்மைபோ லாகி
ஆழி யுள்ளுறும் வடவையின் அவற்றினைப் பருகி
ஊழி தன்னினும் இருப்பதவ் வுயர்பெரும் பாலை.

இ—ள்: ஏழு நேமியும் பெரும் புறக்கடலும் எண் திசையும் சூழ—ஏழு சமுத்திரங்களும் பெரிய புறவாழியும் எட்டுத்திக்குகளினுஞ் சூழ்ந்து நிற்கவும், அன்னதால் அழிவு இன்றி — அவற்றாலழிதலில்லாமல், தொன்மைபோல் ஆகி-முன்போலாகி, ஆழி உள் உறும் வடவையின் அவற்றினை பருகி — சமுத்திரத்தினுள்ளிருக்கின்ற வடவாமுகாக்கினியைப்போல அக்கடல்களைப் பருகி, ஊழி தன்னினும் இருப்பது — பிரளயகாலத்திலுமழியாதிருப்பது, அ உயர் பெரும் பாலை — அந்த உயர்ந்த பெரிய பாலைவனம் எ—று.

பின்னைய உம்மை உயர்வுசிறப்பு. பிரளயகாலத்தில் ஒன்றுபட்டுப் பெருகி யுலகத்தையழிக்குங் கடல்களெல்லாம் தன்மேற் பரவுந்தோறும் அப்பாலைநிலம் அழியாது அந்நீரைப் பருகியிருப்பதென்க. (2)

அண்டர் நாயகன் உலகடும் மகந்தனக் காகும்
பண்ட மேசெறி பல்வளம் ஆருயிர் பசுக்கள்
மண்டு நேமிநெய் நிலங்கல மாயுற மலர்தீக்
குண்ட மாயது கள்ளிசூழ் கொடியவெம் பாலை.

இ—ள்: செறி பல் வளம்—(உலகத்தில்) நெருங்கிய பலவகை வளங்களும், அண்டர் நாயகன் உலகு அடும் மகம் தனக்கு ஆகும் பண்டம்—தேவநாயகராகிய சிவபிரான் உலகங்களைச் சங்கரித்தலாகிய யாகத்திற்கு அமைந்த உபகரணங்களாகவும், ஆர் உயிர் பசுக்கள்—நிறைந்த ஆன்மாக்களெல்லாம் யாக பசுக்களாகவும், மண்டும் நேமி நெய்—நீர் நிறைந்த கடல்கள் நெய்யாகவும், நிலம் கலம் ஆய் உற—பூமி நெய்ப் பாத்திரமாகவுமிருக்க, கள்ளி சூழ் கொடிய வெம் பாலை—கள்ளி மரங்கள் சூழ்ந்த மிகக் கொடிய அந்தப் பாலை நிலமானது, தீ மலர் குண்டம் ஆயது—அக்கினி சொலித் தெரிகின்ற ஓமகுண்டமாயிருந்தது எ—று.

எல்லா வளங்களையும் எல்லாவுயிர்களையும் எல்லாக் கடல்களையும் பெய்யினும் அவ் வானத்திலுள்ள அக்கினி தணியாது சொலிக்கத் தக்கதென்பது குறிப்பு. பல பொருள்களைத் தம் முளியைபுடையனவாக உருவகஞ் செய்தலின் இது இயைபுருவகம். (3)

வண்ண ஒண்சுதை மெய்யுடை வரநதி கேள்வன்
நண்ணு தொல்லுல காகியே நரலையுற் றென்னத்
தண்ணி லாவெழு நாத்தலை இரண்டுடைத் தழலின்
பண்ண வற்குல காயது முதுபெரும் பாலை.

இ—ள்: நரலை—சமுத்திரமானது, வண்ண ஒண் சுதை மெய் உடை வரநதி கேள்வன் நண்ணு தொல் உலகு ஆகி உற்று என்ன—அழகிய ஒளி பொருந்திய வெண்ணிறமான சரீரத்தையுடைய வருணனிருக்கின்ற பழைய உலகமாயிருந்தாற் போல, முது பெரும் பாலை—பழைய பெரிய அந்தப் பாலை நிலமானது, தண் இலா எழு நா தலை இரண்டு உடை தழலின் பண்ணவற்கு உலகு ஆயது—குளிர்ச்சியில்லாத ஏழு நாக்களையும் இரண்டு தலைகளையுமுடைய அக்கினி தேவனுக்கு உலகமாயிருந்தது எ—று.

சுதை-வெண்மை; வரநதிகேள்வன்-கங்கைக்கு நாயகன். (4)

உடைய தொல்குலக் கேண்மையால் அவ்வனத் துறையுங்
கொடிய வன்னிபாற் சென்றதோ வெப்பமேல் கொண்டு
நடுந டுங்கிவெம் புகையுமிழ்ந் தரற்றிநா வுலர்ந்து
கடல்ப டிந்துநீர் பருகுமால் வடவையங் கனலே.

இ—ள்: வடவையம் கனல் — வடவாமுகாக்கினி, உடைய தொல் குல கேண்மையால்—தமக்கியல்பாயுள்ள பழைய சாதியுரிமையினால், அ வனத்து உறையும் கொடிய வன்னி பால் சென்றதோ—அந்தப் பாலைவனத்திலிருக்கின்ற கொடிய அக்கினியிடத்துப் போயிற்றோ, வெப்பம் மேல் கொண்டு—சூடுமிகப் பெற்று, நடுநடுங்கி — மிக நடுங்கி, வெம் புகை உமிழ்ந்து—கொடிய புகையைக் கான்று, அரற்றி—புலம்பி, நா உலர்ந்து—நாவரண்டு, கடல் படிந்து — சமுத்திரத்திலமிழ்ந்தி, நீர் பருகும்—நீரைப் பருகுகின்றது எ—று.

ஓகாரம் ஐயப்பொருட்டு. வடவைத் தீக்கடலுண் மூழ்கியிருந்து நீரைப் பருகுவது அப் பாலைநிலத்து வந்தமையாற் போலுமெனக் கூறியதனால், வடவையின் வெப்பத்தினும் இப் பாலைநில வெப்பம் பன்மடங்கதிகமென்பது பெற்றாம். (5)

கற்றை யங்கதிர்ப் பரிதியும் மதியுமக் கானஞ்
சுற்றி யேகுவ தல்லது மிசைபுகார் சுரரும்
மற்று ளார்களும் அனையரே எழிலியும் மருத்தும்
எற்றை வைகலும் அதன்புடை போகவும் இசையா.

இ—ள்: கற்றையம் கதிர் பரிதியும் மதியும் அ கானம் சுற்றி ஏகுவது அல்லது மிசை புகார் — கூட்டமாகிய கிரணங்களையுடைய சூரியனுஞ் சந்திரனும் அந்தக் காட்டைச் சூழ்ந்து செல்வதன்றி மேலாகச் செல்லார்கள், சுரரும் மற்று உளார்களும் அனையரே — தேவர்களும் பிறரும் அத்தன்மையரே, எழிலியும் மருத்தும் எற்றைவைகலும் அதன்புடை போகவும் இசையா — மேகங்களுங் காற்றும் எஞ்ஞான்றும் அவ்வனத்தினருகிற் போகவுந் துணியமாட்டா எ—று.

போகவும் என்பதில் உம்மை இழிவு சிறப்பு. (6)

சேனம் வெம்பணி ஒண்புறு விரலைமான் செந்நாய்
ஆனை யாதிகள் அவ்வனத் திருக்கவும் ஆவி
போன தில்லையால் அங்கியிற் றோன்றிய பொருள்கள்
மேனி கன்றுவ தன்றியே விளியுமோ அதனால்.

இ—ள்: சேனம் வெம் பணி ஒண் புறு இரலை மான் செந்நாய் ஆனை ஆதிகள் — பருந்தும் கொடிய பாம்பும் ஒளிபொருந்திய புறவும் கலைமானும் புள்ளிமானும் செந்நாயும் யானையுமுதலாகிய பிராணிகள், அவ் வனத்து இருக்கவும் — அந்தப் பாலைவனத்திலிருந்தபோதும், ஆவி போனது இல்லை — இறந்தில, அங்கியில் தோன்றிய பொருள்கள் அதனால் மேனிகன்றுவதே அன்றி விளியுமோ — அக்கினியிற்றோன்றிய பொருள்கள் அவ்வக்கினியினாலுடல் வெதும்புவதேயன்றி இறக்குமா? (இறவா) எ—று.

பாலைநிலத்திற்றோன்றிய பொருள்களாதலால் அந்நில வெப்பத்தாலழியாது சரீரம் வெதும்பியிருந்தன வென்பது கருத்து. (7)

எண்ணி னுஞ்சுடும் பாலையங் கானிடை எழுந்த
கண்ண கன்புகை அழல்படு கின்றகாட் சியவே
விண்ணின் நீலமுஞ் செக்கரும் அவற்றினல் வெடித்த
புண்ணும் மொக்குளுங் கதிர்களும் உடுக்களும் போலாம்.

இ—ள்: விண்ணில் நீலமும் செக்கரும்—ஆகாயத்திற் காணப்படுகின்ற நீல நிறமும் செவ்வானமும், எண்ணினும் சுடும் பாலையம் கான் இடை எழுந்த கண் அகன் புகை அழல் படுகின்ற காட்சிய—நினைத்தாலுஞ் சுடுகின்ற அப்பாலைவனத்தினின்று கிளர்ந்துசென்ற இடமகன்ற புகைப்படலமும் அக்கினியும் பொருந்துவதுபோன்ற தோற்றத்தையுடையன, கதிர்களும் உடுக்களும்—(அவ்வாகாயத்திலுள்ள) சூரியசந்திரர்களும் நட்சத்திரங்களும், அவற்றினல் வெடித்த புண்ணும் மொக்குளும் போல் ஆம் — அப்புகையாலும் அக்கினியாலும் வெதுப்பப்பட்டு வெடித்த புண்ணையுங் கொப்புளத்தையும் ஒத்திருக்கும் எ—று.

ஆகாயத்தினது நீலநிறம் புகையையும் செவ்வானம் அக்கினியையும் கிரகங்களும் நட்சத்திரங்களும் புண்ணையுங் கொப்புளத்தையும் போல்வனவென்க. (8)

வேக வெய்யவன் புடையுரு தவ்வன மிசையே
போக வோரிறை எழுந்தழல் சுட்டது போலும்
ஏகு தேரொரு காலிலா திகழ்ந்ததால் இருகால்
பாகி ழந்தனன் அவன் கதிர் அங்கிபட் டனவே.

இ—ள்: வேக வெய்யவன் புடை உருது அ வனமிசையே போக—வேகமாகச் செல்லுகின்ற சூரியன் விலகிச் செல்லாமல் அப் பாலைவனத்தின் மேலாகப் போக, எழும் தழல் ஓர் இறை சுட்டது போலும்—அவ்வனத்திற் கிளர்ந்தெரிகின்ற அக்கினி ஒரு சிறிது சுட்டது போலும், ஏகு தேர் ஒரு கால் இலாது இழந்தது—ஓடுகின்றதேர் ஒரு சக்கரமின்றி இழந்தது, பாகு இருகால் இழந்தனன்—தேர்ச் சாரதி இரண்டு கால்களையுமிழந்தான், அவன் கதிர் அங்கிபட்டன—அச் சூரியனது கிரணங்கள் அக்கினிமயமாயின எ—று.

சூரியனது தேர் ஒருருளுடையதென்பதும் அத் தேரின் சாரதியாகிய அருணனுக்குக் காலில்லை யென்பதும் புராணக் கோட்பாடு. தற்குறிப்பேற்றவணி. (9)

தங்கள் தொல்பவம் அகன்றிலா விண்ணவர் தம்மைத்
துங்க முத்தியின் பொருட்டினல் அடைபவர் தொகைபோல்
அங்கம் நொந்துதம் போலவே வெப்பமுற் றயருங்
கங்கம் நாடியே நீழலுக் கடைவன கலைகள்.

இ—ள்: தங்கள் தொல் பவம் அகன்றிலா விண்ணவர் தம்மை துங்க முத்தியின் பொருட்டினல் அடைபவர் தொகை போல்—தங்களுக்கெய்திய பழைய பிறவித் துயரை நீங்காத தேவர்களைச் சிறந்த முத்தியின்பத்தைப் பெறும் பொருட்டுச் சேவிப்பவர்களது தொகுதிபோல, கலைகள்—கலைமான்கள், அங்கம் நொந்து தம் போலவே வெப்பம் உற்று அயரும் கங்கம் நாடி—சரீரம் வருந்தித் தம்மைப்

போலவே வெப்பத்தைப் பெற்று வருந்துகின்ற பருந்துகளைத் தேடி, நீழலுக்கு அடைவன நிழலின்பொருட்டுச் செல்கின்றன எ—று.

போலவே என்பதில் ஏகாரம் தேற்றம். பிறந்திறந் துழல்கின்ற ஆன்மாக்கள் பிறவித் துயரையொழிக்குமாறு முதற் கடவுளின் பாதநீழலைச் சாராது தம் போலுழல்கின்ற அற்ப தேவரைச் சார்வது போல, வெப்பத்தையாற்றுமாறு நிலையான நீழலைப் பெறுது தம்போலுழலும் பருந்தினீழலைச் சார்வனவென்பது கருத்து. (10)

கோல வெங்கதிர் மதியிவர் வைகலுங் கொடிய
பாலை வெஞ்சுரத் தாரழல் வெம்மைபட் டனரோ
காலை தன்னினும் மாலையம் பொழுதினுங் கங்குல்
வேலை தன்னிலும் பிறவினும் வேலைநீர் படிவார்.

இ—ள்: கோல வெம் கதிர் மதி இவர்—அழகிய கொடிய சூரியனுஞ் சந்திரனுமாகிய இவர்கள், வைகலும்—தினந்தோறும், கொடிய பாலை வெம் சுரத்து ஆர் அழல் வெம்மை பட்டனரோ—மிகக் கொடிய பாலைவனத்திலுள்ள நிறைந்த அக்கினியின் சூடு தீண்டப்பெற்றூர்களோ, காலை தன்னினும்—உதய காலத்திலும், மாலையம் பொழுதினும்—மாலைக் காலத்திலும், கங்குல் வேலை தன்னினும்—இராக் காலத்திலும், பிறவினும்—மற்றைக் காலங்களிலும், வேலை நீர் படிவார்—கடல் நீரில் முழுகுவார்கள் எ—று.

சூரியன் காலைமாலைகளிலும் சந்திரன் ஏனைக்காலங்களினும் உதித்தலும் அத்தமித்தலுமுண்மையால் 'காலை தன்னினும்......பிறவினும் வேலைநீர்படிவார்' என்றூர். (11)

தொடரும் வானவர் யாவரும் ஐயைதாள் தொழுவார்
கொடிய பாலைமுன் னுணர்கிலா தணுகினர் கொல்லோ
அடிசி வந்தகம் வெம்பியே அமுதமுண் டதற்காப்
படியின் மேலென்றுஞ் செல்கிலர் விண்மிசைப் படர்வார்.

இ—ள்: தொடரும் வானவர் யாவரும்—கூட்டமாகிய தேவரனைவரும், ஐயை தாள் தொழுவார்—துர்க்கையின் பாதங்களை வழிபட விரும்பியவர்களாய், கொடிய பாலை முன் உணர்கிலாது அணுகினர் கொல்—வெவ்விய அப் பாலை வனத்தின் றன்மையை முந்தியே,யறியாது வந்தார் போலும், அடி சிவந்து—கால்கள் சிவப்பேறி, அகம் வெம்பி—மனம் வெதும்பி, அதற்கா அமுதம் உண்டு—அவ்வெப்பந் தீரும் பொருட்டு அமிர்தத்தைப் புசித்து, படியின் மேல் என்றும் செல்கிலர்—பூமியின் மேல் எக்காலத்திலும் நடவாதவர்களாய், விண் மிசை படர்வார்—ஆகாய மார்க்கத்திற் செல்வார்கள் எ—று.

துர்க்கை பாலைநிலத் தெய்வமாதலின் 'ஐயைதாடொழுவார்.........அணுகினர் கொல்' என்றூர். தற்குறிப்பேற்றவணி. (12)

ஒள்ளி தாகிய தலைமையிற் பிறந்துளோர் உலகம்
எள்ளும் நல்குர வெய்தலால் இழிந்தவர் கண்ணுங்
கொள்ளு மாறெரு பயன்குறித் தேகல் போற்கொடிய
கள்ளி தன்புடை நீழலுக் கொதுங்குவ கரிகள்.

இ—ள்: ஒள்ளிது ஆகிய தலைமையில் பிறந்துளோர்—சிறந்த உயர்குலத்திற் பிறந்தவர்கள், உலகம் எள்ளும் நல் குரவு எய்தலால்—உலகத்தாராலிகழப்படுகின்ற வறுமை வருதலால், ஒரு பயன் கொள்ளுமாறு குறித்து இழிந்தவர் கண்ணும் ஏகல் போல்—ஒரு பிரயோசனத்தைப் பெறுமாறு கருதி இழிகுலத்தாரிடத்துஞ் செல்லுதல் போல, கரிகள்—யானைகள், கொடிய கள்ளிதன் புடை—கொடிதாகிய கள்ளி மரத்தினருகே, நீழலுக்கு ஒதுங்குவ—நிழலின் பொருட்டொதுங்கி நிற்பன எ—று.

உயர் குலத்தார் வறுமை மிகுதியால் வேண்டிய பொருளைப் பெறுமாறு இழி குலத்தார் பாற் சார்ந்து நிற்பது போல, யானைகள் வெப்ப மிகுதியால் நிழலைப் பெறுமாறு கள்ளிமரத்தினருகிலொதுங்கி நிற்பனவென்பது கருத்து. தலைமை-ஆகுபெயர். (13)

இரவி கம்மியன் சுட்டுறு கோல்கதிர் எரிதீ
மருவு செந்தரை பொறிமணி கொள்கலம் வறுங்கான்
கரிக ளேகரி காற்குழல் துதிக்கைநீர் கானல்
புரித ரும்பணி வெந்திடும் பணிக்குலம் போலும்.

இ—ள்: இரவி கம்மியன்—சூரியன் பொற் கொல்லனும், கதிர் சுட்டுறு கோல்—அச் சூரியனது கிரணங்கள் சூட்டுக் கோலும், தீ மருவு செம் தரை எரி—அக்கினி சொலிக்கின்ற சிவந்த நிலம் நெருப்பும், பொறி மணி—சிதறிக் கிடக்கின்ற அக்கினிப் பொறிகள் இரத்தினங்களும், வறும் கான் கொள்கலம்—வெறுமையாகிய காடு பாத்திரமும், கரிகளே கரி—யானைகளே கரியும், துதிக்கை காற் குழல்—அந்த யானைகளின் துதிக்கை ஊது குழலும், கானல் நீர்—பேய்த்தேர் நீரும், வெந்திடும் பணிக்குலம் புரிதரும் பணி போலும்—வெந்து கிடக்கின்ற பாம்புக் கூட்டங்கள் செய்து முடித்த ஆபரணமும் போலிருக்கும் எ—று.

போலும் என்னும் உவமைச் சொல்லை ஒவ்வொரு தொடர்களோடுமியைத்துக் கொள்க. கானல்-நீரில்லாதிருக்கவும் அயற்றேசங்களிலுள்ள சோலை முதலியவற்றினிழல் படிதலால் நீர் நிலை போலத் தோன்றுமிடம். காற்குழல்-காற்றையுண்டாக்குங் குழல். இயைபுவமை. (14)

ஆன்ற வான்புவி நதிப்புனல் பாதலம் அதன்கண்
தோன்று நீத்தநீர் யாவையும் ஒருங்குறத் துற்றுச்
சான்ற பாலையஞ் செந்தழல் அப்புனல் தன்னைக்
கான்ற வாறெனக் கிளர்வன அந்நிலக் கானல்.

இ—ள்: சான்ற பாலையம் செம் தழல்—அந்தப் பாலை நிலத்திற் பரந்த சிவந்த அக்கினியானது, ஆன்ற வான் புவி நதி புனல்—அகன்ற ஆகாயத்திலும் பூமியிலுமுள்ள ஆற்று நீர்களும், பாதலம் அதன் கண் தோன்றும் நீத்த நீர்—பாதாளத்திற் றோன்றுகின்ற நீரும் ஆகிய, யாவையும்—எல்லாவற்றையும், ஒருங்குற துற்று—முற்றுய்ப் பருகி, அ புனல் தன்னை கான்றவாறு என—பின் அந்த நீரையுமிழ்ந்த தன்மைபோல, அ நில கானல் கிளர்வன—அந்த நிலத்திலுள்ள பேய்த் தேர்கள் விளங்குவன எ—று. (15)

விஞ்சு கானல்வெண் டேரினை யாறென விரும்பி
நெஞ்சில் உன்னியே இரலைமான் மடப்பிடி நெடுந்தாட்
குஞ்ச ரந்திரிந் துலைவன கொடியவெம் பணிகால்
நஞ்சு தன்னையும் அருந்துவ ஞமலிநீர் நசையால்.

இ—ள்: இரலை—கலைமானும், மான்—புள்ளிமானும், மட பிடி—அறியாமையையுடைய பெண்யானையும், நெடும் தாள் குஞ்சரம்—நெடிய கால்களையுடைய களிற்று யானையும், விஞ்சு கானல் வெண்டேரினை யாறு என விரும்பி—மிகுந்த கானல் நீராகிய பேய்த் தேரை யாறென்று விரும்பி, நெஞ்சில் உன்னி—மனத்தில் நினைத்து, திரிந்து உலைவன—நடந்து திரிந்து (அவை நீராகாமையால்) அலைவன, ஞமலி—நாய்கள், நீர் நசையால்—நீர் வேட்கையினல், கொடிய வெம் பணி கால் நஞ்சு தன்னையும் அருந்துவ—மிகக் கொடிய சர்ப்பங்களுமிழந்த நஞ்சையும் உண்ணுவன எ—று.

பேய்த் தேர் பல விடங்களினுந் தோன்ற அவற்றையெல்லாம் உண்மையான நீர் நிலைகளென்று கருதிப் போய்ப் போய் அலைந்து திரிவனவென்க. (16)

செய்ய மண்மகள் உலப்புரு உந்தியந் தீயாய்
வெய்ய வன்செலற் கரியவப் பாலைமே வுதலான்
மொய்யில் வெம்பணி புகையழல் உமிழ்வன முரணும்
மையு றுங்கொடு நஞ்சொடு கான்றசெம் மணிகள்.

இ—ள்: செய்ய மண்மகள் உலப்பு உரு உந்தியம் தீ ஆய்—செவ்விய பூமி தேவியினது குறைவில்லாத உதராக்கினியாய், வெய்யவன் செலற்கு அரிய அ பாலை—சூரியனுஞ் செல்லுதற்கரிதாயிருக்கின்ற அந்தப் பாலைவனத்தில், மேவுதலால்—தங்கியிருத்தலால், மொய் இல் வெம் பணி புகை அழல் உமிழ்வன முரணும்—வலிமையற்ற கொடிய பாம்புகள் புகையையும் அக்கினியையும் உமிழ்தலையொத்திருக்கும், மை உறும்கொடு நஞ்சொடு கான்ற செம்மணிகள்—கரு நிறம் பொருந்திய கொடிய நஞ்சினுடன் அந்தச் சர்ப்பங்களுமிழ்ந்த சிவந்த இரத்தினங்கள் எ—று.

நஞ்சையுமிழ்தல் புகையையுமிழ்தலையும் மணிகளையுமிழ்தல் அழலையுமிழ்தலையும் போன்றன வென்க. (17)

முளையி னஞ்சொரி முத்தமும் முந்துசெம் பரலும்
அளவில் பாந்தளின் மணிகளும் ஈண்டியே அமர்தல்
விளிவில் அவ்வனத் தீச்சுடத் தனதுமெய் வெடித்தே
உளையும் மண்மகள் மொக்குளுற் றிடுதிறன் ஒக்கும்.

இ—ள், முளையினம் சொரி முத்தம்—மூங்கிற் கூட்டங்களுகுத்த முத்துக்களும், முந்து செம் பரலும்—முன்றொடங்கியுள்ள சிவந்த பரற் கற்களும், அளவு இல் பாந்தளின் மணிகளும் ஈண்டி அமர்தல்—அளவிறந்த சர்ப்பங்களீன்ற இரத்தினங்களும் நெருங்கியிருத்தல், விளிவு இல் அ வன தீ சுட—அழிவில்லாத அந்தப் பாலைவனத்திலுள்ள அக்கினி சுடுதலினல், உளையும் மண்மகள்—வருந்திய

நிலமகள், தனது மெய் வெடித்து மொக்குள் உற்றிடு திறன் ஒக்கும்—தன்னுடைய சரீரம் வெடிக்கப் பெற்றுக் கொப்புளமடைந்த தன்மையைப் போலும் எ—று.

தற்குறிப்பேற்றவணி. (18)

கள்ளி பட்டன பாலையுந் தீந்தன கரிந்து
முள்ளி பட்டன எரிந்தன குராமரம் முளிந்து
கொள்ளி பட்டன காரகில் அன்னதாற் கொடுந்தீப்
புள்ளி பட்டது போன்றது பாலையம் புவியே.

இ—ள்: கள்ளி பட்டன—கள்ளி மரங்களழிந்தன, பாலையும் தீந்தன—பாலை மரங்களுமெரிந்தன, முள்ளி கரிந்து பட்டன—முள்ளிச் செடிகள் கரிந்தழிந்தன, குராமரம் எரிந்தன—குராமரங்களெரிந்தன, கார் அகில் முளிந்து கொள்ளி பட்டன—கரு நிறமான அகில மரங்கள் காய்ந்து கொள்ளியாயின, அன்னதால்—அக் காரணத்தால், பாலையம் புவி—அப் பாலைநிலம், கொடும் தீ புள்ளி பட்டது போன்றது—கொடிய அக்கினி புள்ளிபட்டாற் போன்றிருந்தது எ—று.

அப் பாலை நிலத்துக் கள்ளி முதலியன எரிந்தழிந்து கிடத்தல் அக்கினியின் மேனியிற் புள்ளிகள் பொருந்தியிருத்தல் போலுமென்பது கருத்து. (19)

இன்ன தாகிய பாலையஞ் சுரத்திடை இறைவன்
தன்ன தாகிய தானைக ளொடுந்தலைப் படலும்
மின்னு மாமுகில் பொழிந்தபின் தண்ணளி மிக்கு
மன்னு கின்றபூங் குறிஞ்சிபோ லாயதவ் வனமே.

இ—ள்: இறைவன்—முருகக்கடவுள், இன்னது ஆகிய பாலையம் சுரத்திடை—இவ்வாறாகிய பாலைவனத்தில், தன்னது ஆகிய தானைகளொடும் தலைப்படலும்—தமது சேனைகளுடனெழுந்தருளியவுடன், அ வனம்—அந்தவனம், மின்னும் மா முகில் பொழிந்த பின் தண்ணளி மிக்கு மன்னுகின்ற பூ குறிஞ்சி போல் ஆயது—மின்னுகின்ற கரிய மேகங்கள் மழை பெய்தபின் முன்னையினும் குளிர்ச்சி மிகுந்திருக்கின்ற பொலிவாகிய குறிஞ்சி நிலத்தைப் போலாயிற்று எ—று.

மலையு மலை சார்ந்த நில மும் குறிஞ்சியெனப்படும். (20)

ஆற்ற ருந்திறல் அங்கிதன் அரசியல் முறையை
மாற்றி எம்பிரான் வருணற்கு வழங்கினு னென்ன
ஏற்ற மாகிய வெம்மைபோய் நீங்கியே எவரும்
போற்று நீரொடு தண்ணளி பெற்றதப் புவியே.

இ—ள்: எம் பிரான்—எங்கள் கடவுளாகிய முருகவேள், ஆற்ற அரும் திறல் அங்கி தன் அரசியல் முறையை மாற்றி—சகித்தற்கரிய வலிமையினையுடைய அக்கினிதேவனது அரசியலுரிமையை விலக்கி, வருணற்கு வழங்கினுன் என்ன—வருணபகவானுக்கு அவ்வரசைக் கொடுத்தாரென்று சொல்லுமாறு, அ புவி—அந்தப் பாலைநிலம், ஏற்றம் ஆகிய வெம்மை போய் நீங்கி—மிகுதியாகிய வெப்பங் குறைந்தொழிந்து, எவரும் போற்றும் நீரொடு—எவரும் புகழத்தக்க நீர் வளத்துடன், தண்ணளி பெற்றது—குளிர்ச்சியைப் பொருந்தியது எ—று.

ஒருங்கு தீர்ந்தமையை விளக்க 'போய் நீங்கி' என ஒரு பொருட்கிளவியிரண்டு புணர்த்தினர். (21)

காதல் நீங்கலா தலமரும் ஆருயிர்க் கரணம்
ஆதி ஈசன தருளினுல் அவனதா கியபோல்
ஏது நீரிலா தழல்படு வெய்யகான் இளையோன்
போத லாற்குளிர் கொண்டது நறுமலர்ப் பொழிலாய்.

இ—ள்: காதல் நீங்கலாது அலமரும் ஆர் உயிர் கரணம்—ஆசை நீங்கப் பெருமையினுற் பிரபஞ்சத்திற் சென்றுழல்கின்ற நிறைந்த ஆன்மாக்களின் (மன முதலிய) கருவிகள், ஆதி ஈசனது அருளினுல் அவனது ஆகிய போல்—முதற் கடவுளாகிய சிவபிரானது கருணையினுல் அவருடையதாயினுற்போல, ஏதும் நீர் இலாது அழல் படு வெய்ய கான்—சிறிதும் நீர் வளமின்றி அழன்றிருந்த கொடிய பாலைவனம், இளையோன் போதலால்—முருகக்கடவுள் வருதலால், நறு மலர் பொழில் ஆய் குளிர் கொண்டது—நறுமணங் கமழும் மலர்கள் நிறைந்த சோலை யாகிக் குளிர்ச்சியைப் பெற்றது எ—று.

சீவகரணங்கள் இறைவனருளால் தம்மியல்பு நீங்கிச் சிவகரணத்தினியல் பைப் பெற்ருற் போலப் பாலைவனமும் முருகக்கடவுளருளால் தன்னழற்சி நீங்கிக் குளிர்ந்ததென்பது கருத்து. (22)

புறநெ றிக்கணே வீழ்ந்துளோர் சிவனருள் புகுங்கால்
அறிவும் ஆற்றலுங் குறிகளும் வேறுபட் டனபோல்
வறிய செந்தழல் வெவ்வனம் வேலவன் வரலால்
நறிய தண்மலர்ச் சோலையாய் உவகைநல் கியதே.

இ—ள்: புறநெறிக்கண் வீழ்ந்துளோர்—புறச் சமயத்திற் புகுந்தவர்கள், சிவன் அருள் புகுங்கால்—சிவபிரானது கருணை சேர்ந்த பொழுது, அறிவும் ஆற்றலும் குறிகளும் வேறுபட்டன போல்—தமது அறிவும் செயலும் அடையாளங் களும் வேருந் தன்மையையடைதல் போல, வறிய செம் தழல் வெவ் வனம்— வெறுமையாகிய சிவந்த அக்கினி செறிந்த கொடிய பாலைவனம், வேலவன் வர லால்—சுப்பிரமணியக்கடவுள் வரப்பெறுதலால், நறிய தண் மலர் சோலை ஆய்— நறுமணங் கமழுகின்ற குளிர்ந்த பூஞ்சோலையாகி, உவகை நல்கியது—மகிழ்ச்சி யைப் பயந்தது எ—று.

புறச் சமயத்திற் புகுந்துழல்வாரது அறிவும் பிறவும் சிவனருள் கிடைத்துழித் தீய தன்மைகளை நீங்கி நல்ல தன்மைகளையடைதல் போலப் பாலை நிலமும் முரு கக் கடவுள் சென்றுழி வெம்மை நீங்கித் தண்மையெய்திற்றென்பது கருத்து. (23)

வேறு

நீரறு முரம்பின் றன்மை நீங்குமச் சுரத்தின் தன்பால்
ஈரறு புயத்தன் செல்ல எழில்கெழு பரங்குன் றத்தில்
பாரறு தவம்பூண் டுள்ள பராசரன் சிருர்க ளாய
ஓரறு வகைமை யோரும் ஓதியால் அதனைக் கண்டார்.

இ—ள்: நீர் அறும் முரம்பின் தன்மை நீங்கும் அ சுரத்தின் தன் பால்—நீரில்லாத பரலடுத் துயர்ந்த நிலத்தின் றன்மையை நீங்கிய அந்தப் பாலைவனத்தில், ஈரறு புயத்தன் செல்ல—பன்னிரண்டு திருப்புயங்களையுடைய முருகக் கடவுளெழுந்தருளிய பொழுது, எழில் கெழு பரங்குன்றத்தில் பார் அறு தவம் பூண்டு உள்ள பராசரன் சிறுர்கள் ஆய ஓர் அறு வகைமையோரும்—அழகு விளங்குகின்ற திருப்பரங்குன்றில் ஒப்பற்ற தவத்தைச் செய்திருந்த பராசர முனிவரின் புத்திரர்களாகிய ஆறு முனிவர்களும், அதனை ஓதியால் கண்டார்—அத் தன்மையை ஞானத்தாலறிந்தார்கள் எ—று.

பாரறு தவம்-பூவுலகத்திற் பிறராற் செய்யப்படுதலில்லாத பெருந் தவம். (24)

தத்தனே அனந்தன் நந்தி சதுர்முகன் பரிதிப் பாணி
மெய்த்தவ மாலி என்ன மேவுமூ விருவர் தாமும்
அத்தன தருளை முன்னி அடுக்கலின் இருக்கை நீங்கி
உத்தர நடவை யெய்தி ஒய்யெனப் படர்த லுற்ருர்.

இ—ள்: தத்தன் அனந்தன் நந்தி சதுர்முகன் பரிதிப்பாணி மெய் தவ மாலி என்ன மேவும் மூவிருவர் தாமும்—தப்தரும் அனந்தரும் நந்தியும் சதுர்முகரும் சக்கரபாணியும் மெய்ம்மையாகிய தவத்தையுடைய மாலியுமென்றுள்ள ஆறுமுனிவர்களும், அத்தனது அருளை முன்னி—சிவபிரானது கருணையை சிந்தித்து, அடுக்கலின் இருக்கை நீங்கி, திருப்பரங் குன்றத்திலிருத்தலை நீங்கி உத்தரம் நடவை எய்தி—வட திசையை நோக்கி நடந்து, ஒய் என படர்தல் உற்ருர்—விரைவிற் செல்வாராயினுர் எ—று.

''பரங்கோ-டென்னுவுரை பெறு குன்றிடையிருந்தே தவம் புரிமின்-சின்னுண்மிசையிவன் வந்தருள் செயும்'' என்று சிவபிரான் முன்னே யருளிச் செய்தமையை நினைந்தென்பார் 'அத்தனதருளை முன்னி' என்ருர். (25)

ஆர்வல ராகும் மைந்தர் அறுவரும் அளகை நேடிப்
பார்வல்வந் தணையு மாபோல் பாலையென் றுரைக்கு மெல்லை
நேர்வரு கின்ற காலை நெடும்படை நீத்தஞ் சூழச்
சூர்வினை முடிப்பான் செல்லுந் தோன்றல்வந் தணிய ணுன்.

இ—ள்: ஆர்வலர் ஆகும் மைந்தர் அறுவரும்—அன்பையுடையவர்களான முனி குமாரரறுவரும், அளகை நேடி பார்வல் வந்து அணையுமா போல்—தாய்ப் பறவையைத் தேடிப் பார்ப்பினங்கள் வந்தணுகுந் தன்மையைப் போல, பாலை என்று உரைக்கும் எல்லை நேர் வருகின்ற காலை—பாலையென்று சொல்லப்படுகின்ற இடத்திற்கு நேராகவரும் பொழுது, நெடும்படை நீத்தம் சூழ—நெடிய சேனை வெள்ளஞ் சூழ, சூர் வினை முடிப்பான் செல்லும் தோன்றல் வந்து அணியன் ஆனுன்—சூரபன்மனுல் வினையுந் தீவினையையழிக்கும்படி வருகின்ற முருகக் கடவுள் வந்து அணுகினுர் எ—று.

பார்ப்பினங்கள் தாயப் பறவையிடத்துச் செல்லுதலை யுவமை கூறியது பேராவலுடன் சென்றமையை விளக்குதற்கென்க. (26)

அணிமையிற் சேயோன் நண்ண ஆறுமா முகமும் பன்னீர்
இணைதவிர் புயமுங் கையும் ஏந்தெழிற் படையின் சீரும்
மணியணி மார்புஞ் செங்கேழ் வான்றுகின் மருங்கும் பாதத்
துணையுமத் துணையிற் கண்டு தொழுதுகண் களிப்புக் கொண்டார்.

இ—ள்: சேயோன் அணிமையில் நண்ண—முருகக்கடவுள் சமீபத்திலணுக, ஆறு மா முகமும்—சிறந்த ஆறு திருமுகங்களையும், இணை தவிர் பன்னீர் புயமும்—ஒப்பற்ற பன்னிரண்டு திருப்புயங்களையும், (பன்னீர்) கையும்—பன்னிரண்டு திருக்கைகளையும், ஏந்து எழில் படையின் சீரும்—அக் கைகளிலேந்திய அழகிய படைக் கலங்களினழகையும், மணி அணி மார்பும்—இரத்தினுபரணங்களை யணிந்த மார்பையும், செம் கேழ் வான் துகில் மருங்கும்—சிவந்த நிறமமைந்த சிறந்த பீதாம் பரத்தையணிந்த அரையையும், பாதத் துணையும்—இரண்டு திருவடிகளையும், அத் துணையில் கண்டு—அப்பொழுது தரிசித்து, தொழுது—கைகூப்பி, கண்களிப்புக் கொண்டார்—நேத்திரானந்தமுற்றார்கள் (அந்த முனி குமாரர்கள்) எ—று.

நண்ணக் கண்டு என இயையும். (27)

மூவிரு திறத்தி னோரும் முற்றொருங் குணர்ந்த வள்ளல்
பூவடி வணங்கித் தேனீப் புதுநறா அருந்தி யார்த்து
மேவருந் தன்மைத் தென்ன வியப்பொடு வழுத்தி நின்று
தேவர்கள் தேவ எம்பால் திருவருள் செய்தி யென்றார்.

இ—ள்: மூ இரு திறத்தினோரும்—ஆறு முனிவர்களும், முற்று ஒருங்கு உணர்ந்த வள்ளல் பூ அடி வணங்கி—எல்லாவற்றையுமொருங்கே யறிந்த முருகக் கடவுளது மலர்போலுந் திருவடிகளைப் பணிந்து, தேனீ புது நறா அருந்தி ஆர்த்து மேவரும் தன்மைத்து என்ன—தேன் வண்டுகள் புதிதாகிய தேனைப் பருகி இசை பாடி நிற்குந் தன்மையைப் போல, வியப்பொடு வழுத்தி நின்று—அதிசயத்துடன் துதித்து நின்று, தேவர்கள் தேவ—தேவாதி தேவரே!, எம்பால் திருவருள் செய்தி என்றார்—எமக்குத் திருவருள் செய்வீராக என்று பிரார்த்தித்தார்கள் எ—று.

புதிய தேனையுண்ட வண்டுகள் பேரானந்தத்துடனிசை பாடுதல் போல முனி குமாரரும் பேரானந்தத்துடனின்று துதித்தனரென்க. (28)

என்றிவை இருமூ வோரும் இசைத்துழி உயிர்கட் கெல்லாம்
ஒன்றிய உயிரு மாகி உணர்வுமாய் இருந்த மூர்த்தி
தன்றிரு மலர்த்தாள் முன்னந் தலையளி யோடு தாழ்ந்து
நின்றுகை தொழுதிட் டன்னோர் நிலைமையை மகவான் கூறும்.

இ—ள்: என்று இவை இரு மூவோரும் இசைத்துழி—என்று இந்த வாசகங்களை ஆறு முனிவர்களுங் கூறிய பொழுது, மகவான்—இந்திரன், உயிர்கட்கு எல்லாம் ஒன்றிய உயிரும் ஆகி உணர்வும் ஆய் இருந்த மூர்த்தி தன் திரு மலர் தாள் முன்னம் தலையளியோடு தாழ்ந்து—ஆன்மாக்களிலெல்லாம் பொருந்திய உயிராகியும் அறிவாகியுமிருக்கின்ற முருகக்கடவுளது சிறந்த தாமரை மலர் போலுந் திருவடிகளின் முன் பேரன்போடு வணங்கி, நின்று கைதொழுதிட்டு—நின்று கைகுவித்து, அன்னோர் நிலைமையை கூறும்—அம் முனிவர்களது வரலாற்றை விண்ணப்பஞ் செய்வான் எ—று.

இந்திரன் விண்ணப்பஞ் செய்ய முன்னும் முருகவேள் உணர்ந்துடையரென் பது தோன்ற 'உயிர்கட்கெல்லா மொன்றிய வுயிருமாகி யுணர்வுமாயிருந்த மூர்த்தி' என்ருர். (29)

மறுவறு பராச ரன்றன் மதலைக ளாகு மின்னோர்
அறுவருஞ் சிறுரே யாகி ஆடுறு செவ்வி தன்னில்
நிறைதரு சரவ ணத்து நெடுந்தடம் புனலிற் பாய்ந்து
முறைமுறை புக்கு மூழ்கி முகேரென அலைக்க லுற்ருர்.

இ—ள்: மறு அறு பராசரன் தன் மதலைகள் ஆகும் இன்னோர் அறுவரும்—குற்றமற்ற பராசர முனிவரது புதல்வராகிய இந்த ஆறு முனிவர்களும், சிருர் ஆகி ஆடுறு செவ்வி தன்னில்—பாலர்களாய் விளையாடுங் காலத்தில், நிறைதரு சரவணத்து நெடும் தடம் புனலிற் பாய்ந்து—நிறைந்த நெடிய பெரிய சரவண வாவியிற் குதித்து, முறை முறை புக்கு மூழ்கி—நிரை நிரையாகப் போயமிழ்ந்தி, முகேர் என அலைக்கலுற்ருர்—முகேரென்னுமொலி யுண்டாகக் கலக்கினுர் கள் எ—று.

பிரமாவின் வம்சத்தவராதலின் மறுவறு பராசரன் என்ருர். பிரமாவின் புதல்வர் வசிட்ட முனிவர், வசிட்ட முனிவரின் புதல்வர் சத்தி முனிவர், சத்தி முனிவரின் புதல்வர் பராசரரென்க. (30)

உலைத்தலை உணர்ச்சி கொள்ள உள்ளுயிர் திரியுமாபோல்
நிலைத்தலை யின்றி யார்க்கும் நீந்தல்செய் குண்டு நீத்தம்
அலைத்தலை யடையும் எல்லை ஆயிடை வதிந்த மீன்கள்
தலைத்தலை யிரிய இன்னோர் தன்மையங் கதனைக் கண்டார்.

இ—ள்: உணர்ச்சி உலைத்தலை கொள்ள உள் உயிர் திரியுமா போல்—அறிவு அலை தலைப் பொருந்த உள்ளிருக்கின்ற உயிரானது (நிலையின்றித்) திரியுந் தன்மை போல, யார்க்கும் நீந்தல் செய் குண்டு நீத்தம்—எவராலும் நீந்தப்படுகின்ற ஆழமாகிய அச் சரவண வாவியிலுள்ள நீர், நிலைத்தலை இன்றி அலைத்தலை அடையும் எல்லை—நிலைபடுதலின்றி அலைதலைப் பொருந்தும் பொழுது, ஆயிடை வதிந்த மீன்கள் தலைத்தலை இரிய—அத் தடாகத்திலிருந்த மீன்கள் இடந்தோறுந் திரிய, இன்னோர் தன்மை அதனை கண்டார்—இம் முனிவர்கள் அத் தன்மையைப் பார்த் தார்கள் எ—று.

உலைதல் அலைதல் என்பன எதுகை நோக்கி விரித்தல் விகாரமாயின. யார்க் கும் என்றதில் நான்கனுருபு மூன்றனுருபாகத் திரிக்கப்பட்டது. திரியுமா போல் இரிய என இயையும். அறிவு, நிலைகுலைந்துழி உயிர் நிலை குலைவது போலச் சரவண வாவியிலுள்ள நீரலைந்துழி அங்குள்ள மீன்களுமலைந்தன என்க. (31)

அங்கது தெரிந்து நின்ருேர் ஆண்டுறு மீன்கள் பற்றித்
துங்கம துடைய கோட்டின் சூழலுய்த் துலவு மெல்லைச்
செங்கதி ருச்சி வேலைச் செய்கடன் நிரப்ப உன்னிப்
பங்கமில் நோன்மை பூண்ட பராசரன் அங்கண் வந்தான்.

இ—ள்; அது தெரிந்து நின்றோர்—அதனைப் பார்த்து நின்ற அறுவரும், ஆண்டு உறும் மீன்கள் பற்றி—அப் பொய்கையிலுள்ள மீன்களைப் பிடித்து, துங்க மது உடைய கோட்டின் சூழல் உய்த்து உலவும் எல்லை—உயர்ச்சியினையுடைய கரையின் சூழ்விலிட்டு உலாவும் பொழுது, பங்கம் இல் நோன்மை பூண்ட பராசரன்—குற்றமற்ற தவத்தை மேற் கொண்ட பராசர முனிவர், செம் கதிர் உச்சி வேலை செய் கடன் நிரப்ப உன்னி—சூரியனுச்சியிற் புகும் மத்தியானத்திற் செய்ய வேண்டிய அனுட்டானத்தை முடிக்க நினைத்து, அங்கண் வந்தான்—அவ் விடத்து வந்தார் எ—று.

உச்சிவேலைச் செய்கடன்=மாத்தியானிகம். உலவுமெல்லை வந்தான் என இயையும். (32)

வள்ளுறை கொண்ட தெய்வ வான்சர வணத்து வந்தோன்
பிள்ளைக ளாகும் இன்னோர் பிடித்தபுன் றொழிலை நோக்கித்
தள்ளருஞ் சினமேல் கொண்டு தனயர்காள் நீவிர் ஈண்டே
துள்ளுறு மீன மாகிச் சுலவுதி ரென்று சொற்றான்.

இ—ள்: வள் உறை கொண்ட தெய்வ வான் சரவணத்து வந்தோன்—வளப்ப மான நீரையுடைய தெய்வத் தன்மையமைந்த பெரிய சரவண தடாகத்தில் வந்த பராசர முனிவர், பிள்ளைகள் ஆகும் இன்னோர் பிடித்த புன் தொழிலை நோக்கி—புதல்வர்களாகிய இவர்களறுவருஞ் செய்கின்ற எளிய செயலைப் பார்த்து, தள்ளரும் சினம் மேல் கொண்டு—தடுத்தற்கரிய கோபம் மிகப் பெற்று, தனயர்காள்—புதல்வர்களே!, நீவிர்—நீங்கள், ஈண்டே—இச் சரவணதடாகத் திற்றானே, துள்ளுறும் மீனம் ஆகி சுலவுதிர் என்று சொற்றான்—துள்ளுகின்ற மீன் களாகித்திரிகுதிரென்று சபித்தார் எ—று.

அதிக நீரென்பார் 'வள்ளுறை' என்றார். (33)

அவ்வுரை இறுக்கு முன்னர் அறுவரும் மேனாள் ஆற்றும்
வெவ்வினை யூழின் பாலால் மீனுரு வாகி அஞ்சி
எவ்வமி தகலு கின்ற தெப்பகல் உரைத்தி யென்னச்
செவ்விதின் உணர்ந்து மேலைத் திருமுனி புகலல் உற்றான்.

இ—ள்: அ உரை இறுக்கும் முன்னர்—அச் சாபமொழி முடியுமுன், அறு வரும்—ஆறு புதல்வர்களும், மேல் நாள் ஆற்றும் வெவ் வினை ஊழின் பாலால்—முற்பிறப்பிற் செய்த கொடிய தீவினையாலுண்டாகிய விதியின் வசத்தால், மீன் உரு ஆகி—மீன் வடிவத்தைக் கொண்டு, அஞ்சி—பயந்து, எவ்வம் இது அகலுகின் றது எ பகல் உரைத்தி என்ன—இந்தக் குற்றந் தீர்வதெஞ்ஞான்று அதனைச் சொல்லுதிரென்று வினவ, மேலை திரு முனி—பழைய சிறந்த பராசர முனிவர், செவ்விதின் உணர்ந்து—நன்றாக ஆலோசித்து, புகலல் உற்றான்—சொல்லத் தொடங்கினார் எ—று.

முனிவர் சாபத்தோடு ஊழ்வினையுமிணங்கி நின்றதென்பார் 'வெவ்வினை யூழின் பாலால்' எனவும், ஞானவுணர்ச்சியினால் அது தீருங் காலவரையறை யைத் தெரிந்தென்பார் 'செவ்விதினுணர்ந்து' எனவும், அதனையுணரவல்லா ரென்பார் 'மேலைத் திருமுனி' எனவும் கூறினார். (34)

இத்தடந் தன்னில் மேனாள் இராறுதோ ளுடைய அண்ணல்
அத்தன தருளால் வைக அனையனை யெடுக்கும் அம்மை
மெய்த்தனம் உகுக்குந் தீம்பால் வெள்ளமாம் அதனை நீவிர்
துய்த்திடும் எல்லை தன்னில் தொல்லுரு வாதி ரென்றான்.

இ—ள்: மேல் நாள்—பிற்காலத்தில், அத்தனது அருளால்—சிவபிரானது கிருபையினால், இராறு தோள் உடைய அண்ணல்—பன்னிரண்டு திருப்புயங்களை யுடைய முருகக்கடவுள், இ தடம் தன்னில் வைக—இந்தத் தடாகத்திலிருக்க, அனையனை எடுக்கும் அம்மை மெய் தனம் உகுக்கும் தீம் பால் வெள்ளம் ஆம்—அக் கடவுளையெடுக்குமுமாதேவியாரது மெய்ம்மையாகிய தனங்கள் பொழிகின்ற இனிய பால் வெள்ளமாய்ப் பாயும், அதனை நீவிர் துய்த்திடும் எல்லை தன்னில்—அப் பாலை நீவிர் பருகும் பொழுது, தொல் உரு ஆதிர் என்றான்—பழைய வடிவ மாவீரென்று கூறினார் எ—று. (35)

என்றிவை முனிவன் கூறி இரும்பகற் கடனை யாற்றிச்
சென்றனன் அதற்பின் மீனின் திருவுரு அமைந்த இன்னோர்
அன்றுதொட் டளப்பில் காலம் அலமரும் உணர்ச்சி யெய்தி
மன்றலஞ் சரவ ணத்து மாண்பெருந் தடாகத் துற்றார்.

இ—ள்: முனிவன்—பராசர முனிவர், என்று இவை கூறி—என்று இந்த வாசகங்களைச் சொல்லி, இரும் பகல் கடனை ஆற்றி சென்றனன்—மாத்தியானிகத்தை முடித்துப் போயினார், அதன் பின்—அதன் பின்பு, மீனின் திரு உரு அமைந்த இன்னோர்—மீனினது சிறந்த வடிவத்தையெய்திய இவர்கள், அன்று தொட்டு—அன்று முதல், அளப்பு இல் காலம்—எண்ணிறந்த காலமாக, அலமரும் உணர்ச்சி எய்தி—சுழலுகின்ற புத்தியையுடையவர்களாய், மன்றலம் சரவணத்து மாண் பெரும் தடாகத்து உற்றார்—மலர் மண நிறைந்த சரவணமென்னும் பெயரை யுடைய மாட்சிமை பெற்ற பெரிய தடாகத்திலிருந்தார்கள் எ—று.

இரும்பகல்=மத்தியானம். அலமருமுணர்ச்சியெய்தி=உணர்ச்சியலமருத லெய்தி. (36)

ஐயநீ யனைய பொய்கை அமர்தலும் அவ்வை கண்டாங்
கொய்யென எடுப்பக் கொங்கை உகளநின் றிழிந்த தீம்பால்
துய்யதோர் நீத்த மாகித் துறுமலும் அதனைத் துய்த்து
மையல்நீங் குற்றுத் தொல்லை வாலிய வடிவம் பெற்றார்.

இ—ள்: ஐய—கடவுளே!, நீ அனைய பொய்கை அமர்தலும்—தேவரீர் அந்தத் தடாகத்தில் வீற்றிருக்க, அவ்வை கண்டு—உமையம்மையார் பார்த்து, ஒய் யென எடுப்ப—விரைவிலெடுக்க, கொங்கை உகளம் நின்று இழிந்த தீம் பால்—இரண்டு தனங்களின்றுஞ் சிந்திய இனிய பாலானது, துய்யது ஓர் நீத்தம் ஆகி துறுமலும்—சுத்தமாகிய வெள்ளமாகிப் பாய்ந்து வருதலும், அதனை துய்த்து—அப் பாலைப் பருகி, மையல் நீங்குற்று—அஞ்ஞானம் நீங்கப்பெற்று, தொல்லை வாலிய வடிவம் பெற்றார்—பழைய தூய்மையாகிய உருவத்தைப் பெற்றுக்கொண்டார்கள் எ—று. (37)

தொல்லுரு வடைந்த இன்னோர் தூமதி வேணி யண்ணல்
நல்லருள் அதனால் வந்து நவையகல் பரங்குன் றத்தின்
எல்லையில் விரதம் பூண்டாங் கிருந்தனர் எந்தை ஈண்டுச்
செல்லுவ துணர்ந்து போந்தார் என்றனன் தேவர் செம்மல்.

இ—ள்: தொல் உரு அடைந்த இன்னோர்—பழைய வடிவத்தை பெற்ற இம் முனிவர்கள், தூ மதி வேணி அண்ணல் நல் அருள் அதனால்—தூய்மையாகிய சந்திரனை யணிந்த சடை முடியையுடைய சிவபிரானது நல்ல கருணையினால், நவை அகல் பரங்குன்றத்தின் வந்து—குற்றமற்ற திருப்பரங்குன்றத்தில் வந்து, ஆங்கு—அம் மலையில், எல்லை இல் விரதம் பூண்டு இருந்தனர்—அளவிறந்த விரதங்களை யனுட்டித்துக் கொண்டிருந்து, எந்தை ஈண்டு செல்லுவது உணர்ந்து போந்தார்—எங்கள் கடவுளாகிய தேவரீரிவ்விடத்தெழுந்தருளுவதை யறிந்து வந்தார்கள், என்றனன்—என்று விண்ணப்பஞ் செய்தான், தேவர் செம்மல்—தேவேந்திரன் எ—று. (38)

தம்மக வுரைக்குங் கூற்றந் தாதையர் வினவு மாபோல்
அம்மக பதிசொற் கேளா அருள்செய்து பராச ரன்றன்
செம்மல்கள் தம்மை நோக்கிச் செயிரறு குணத்து நீவிர்
எம்மொடு செல்வீ ரென்றான் யாவையும் உணர்ந்த பெம்மான்.

இ—ள்: தம் மகவு உரைக்கும் கூற்றம் தாதையர் வினவுமா போல்—தங்கள் புதல்வர் கூறிய வார்த்தையைத் தாய் தந்தையர் கேட்பது போல, யாவையும் உணர்ந்த பெம்மான்—எல்லாவற்றையு முற்றறிவாலறிந்த முருகக்கடவுள், அ மகபதி சொல் கேளா—அந்த இந்திரன் சொல்லிய வார்த்தையைக் கேட்டு, அருள் செய்து—கிருபை புரிந்து, பராசரன் தன் செம்மல்கள் தம்மை நோக்கி—பராசர முனிவரது புதல்வர்களைப் பார்த்து, செயிர் அறு குணத்து நீவிர் எம்மொடு செல்வீர் என்றான்—குற்றமற்ற குணத்தையுடைய நீவிர் எம்முடன் வரக் கடவீரென்று கட்டளையிட்டார் எ—று.

மைந்தர் கூறுங் குதலை மொழி வழுவுடைத்தாயினுந் தாய் தந்தையரு வந்து கேட்டுப் பரிவு கூர்வது போல இந்திரன் கூறிய வாசகந் தவறுடைத்தாயினும் மனமகிழ்ந்து கேட்டுக் கருணை கூர்ந்தனராதலின் 'தம் மகவுரைக்குங் கூற்றந் தாதையர் வினவுமாபோ-லம்மகபதி சொற் கேளா' எனவும், தமக்காட் படுதற்கேற்ற மனத் தூய்மையுடையரென்பதை யுள்ளிட்டு 'செயிரறு குணத்து நீவிர்' எனவும் கூறினர். யாவையுமுணர்ந்த பெம்மானென்றதற்கு முன்னர் இருபத்தொன்பதாஞ் செய்யுளிற் கூறியதுபோ லகலங் கூறுக. (39)

பராசரன் மைந்த ரன்ன பான்மையை வினவிச் செவ்வேற்
கராசரண் அடைந்தேம் என்று கட்டுரைத் திறைஞ்சிச் செல்லச்
சராசரம் யாவுந் தந்த சண்முகன் தழல்கட் கெல்லாம்
இராசர்தந் தன்மை எய்தும் இருஞ்சுரங் கடந்து போனான்.

இ—ள்: பராசரன் மைந்தர் அன்ன பான்மையை வினவி—பராசரரது குமாரரறுவரும் அவ் வாசகத்தைக் கேட்டு, செவ் வேல் கரா சரண் அடைந் தேம் என்று கட்டுரைத்து—சிவந்த வேற்படையையேந்திய கையையுடைய வரே! தேவரீரைச் சரண் புகுந்தோமென்று உறுதிமொழி கூறி, இறைஞ்சி செல்ல—வணங்கி உடன் வர, சராசரம் யாவும் தந்த சண்முகன்—இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளுமாகிய எல்லாவற்றையும் படைத்தருளிய முருகக்கடவுள், தழல்கட்கு எல்லாம் இராசர் தம் தன்மை எய்தும் இரும் சுரம் கடந்து போனன்—அக்கினிகளெல்லாவற்றிற்கும் முதன்மையைப் பெற்ற பெரிய பாலைவனத்தைக் கடந்து அப்பாற் சென்றூர் எ—று. (40)

சுரம்புகுபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 1765

# 26. திருச்செந்திப் படலம்



முருகவேள் திருச்செந்திப் பதியிற் சென்று வீற்றிருந்த சரித்திரத்தைக் கூறுதலின் இப் பெயர்த்தாபிற்று.

## இப்படலப்பொழிப்பு.

முருகக்கடவுள் திருச்செந்திப் பதியையடைந்து தேவத்தச்சனைக் கொண்டு ஓர் கோயிலை யமைப்பித்து அக் கோயிலிற் பரிசனருடனெழுந்தருளியிருந்து அசுரர் வரலாறனைத்தையுங் கூறுமாறு இந்திரனை வினவினர். இந்திரன் வியாழபகவானைத் தூண்டினன். உடனே வியாழபகவான் வணங்கிக் கூறத் தொடங்கினர் என்பதாம்.

சுரமது கடந்து நீங்கிச் சோதிவே லுடைய வள்ளல்
விரிபுனல் சடிலத் தண்ணல் மேவுசெங் குன்றூர் நோக்கிப்
பருமணி வயிர முத்தம் பலவளம் பிறவும் ஆழித்
திரையெறி யலைவா யாகுஞ் செந்திமா நகரம் புக்கான்.

**இ—ள்:** சோதி வேல் உடைய வள்ளல்—ஒளி பொருந்திய வேற்படையை யேந்திய முருகக்கடவுள், சுரம் அது கடந்து நீங்கி—அந்தப் பாலைவனத்தைக் கடந்து சென்று, விரி புனல் சடிலத்து அண்ணல் மேவு செங்குன்றூர் நோக்கி—பரந்த கங்கை நதியை யணிந்த சடை முடியையுடைய சிவபிரான் வீற்றிருக்கின்ற திருச்செங்குன்றூரைத் தரிசித்து, பரு மணி வயிரம் முத்தம் பல வளம் பிறவும் ஆழி திரை ஏறி அலைவாய் ஆகும் செந்தி மா நகரம் புக்கான்—பெருத்த இரத்தினங்களையும் வயிரங்களையும் முத்துக்களையும் ஏனைய பல வளப்பங்களையும் கடலினின் றெழுகின்ற திரைகள் வீசுகின்ற திருச்சீரலைவாயாகிய திருச்செந்தூரை யடைந்தார் எ—று.

சயந்தி யென்னும் வடமொழி செந்தியென விகாரமாயிற்று. (1)

அறுமுகன் அங்க ணேகி அகிலகம் மியனை நோக்கி
இறையிலோர் சினக ரத்தை இயற்றுதி ஈண்டை என்னத்
திறனுணர் புனைவர் செம்மல் சிந்தையின் நாடித் தேவர்
உறைதிரு நகரம் வெஃக ஒருதிருக் கோயில் செய்தான்.

**இ—ள்:** அறுமுகன் அங்கண் ஏகி—முருகக்கடவுள் அவ்விடத்திற் போய், அகில கம்மியனை நோக்கி—விச்சுவகன்மாவைப் பார்த்து, ஈண்டு—இவ்விடத்து, இறையில் ஓர் சினகரத்தை இயற்றுதி என்ன—கணப்பொழுதில் ஒரு கோயிலை யமைக்குதியென்று கட்டளையிட, திறன் உணர் புனைவர் செம்மல்—சிற்ப விதிகளை யுணர்ந்த தேவத்தச்சன், சிந்தையில் நாடி—மனத்தினுலாராய்ந்து, தேவர் உறை திரு நகரம் வெஃக—தேவர்கள் வசிக்கின்ற சுவர்க்கலோகமும் (யானித் துணைப் பேரெழில் பெற்றிலேனேயென்று) ஆசைப்படும்படி, ஒரு திரு கோயில் செய்தான்—ஒரு சிறந்த கோயிலையமைத்தான் எ—று.

ஐ-சாரியை. அகில கம்மியன்-விச்சுவகன்மா. அகிலம் விச்சுவம் என்பன ஒரு பொருண் மொழிகள். புனைவர் செம்மல்-தச்சருட்டலைவன். உயர்வு சிறப்பும்மை தொக்கது. (2)

பொன்னுறும் இரதம் நீங்கிப் புறனெலாந் தானை நண்ண
அந்நகர் அதனு ளேகி அரும்பெருந் துணைவர் பூதர்
மன்னவர் அயன்மா லாதி வானவர் யாரும் போற்ற
மின்னுபொற் பீடத் தையன் வீற்றிருந் தருளி னானே.

**இ—ள்:** ஐயன்—முருகக்கடவுள், பொன் உறும் இரதம் நீங்கி—பொன் மயமாகிய தேரினின்று மிறங்கி, புறன் எலாம் தானை நண்ண அ நகர் அதனுள் ஏகி—புறவிடமுழுதுஞ் சேனைகள் நிற்க அந்தக் கோயிலினுட் போய், அரும் பெரும் துணைவர் பூதர் மன்னவர் அயன் மால் ஆதி வானவர் யாரும் போற்ற—அருமையாகிய பெருமை வாய்ந்த தம்பிமாரும் பூதத் தலைவர்களும் பிரமா திருமால் முதலிய தேவருமாகிய அனைவருந் துதிக்க, மின்னு பொன் பீடத்து வீற்றிருந் தருளினன்—பிரகாசிக்கின்ற பொன்னாலாகிய சிங்காசனத்திலெழுந்தருளி யிருந்தார் எ—று.

பூத சேனையைப் புறத்தே நிறுத்தி உட்சென்றனராதலின் 'புறனெலாந்தானை நண்ண-ஏகி' என்றார். (3)

### வேறு

பானிமிர் மென்குரற் பாற்படு நல்யாழ்
கானமி சைத்தனர் கந்தரு வத்தோர்
ஆனபல் சட்டுவம் அங்கைதொ றேந்தி
வானமிர் தைச்செவி வாக்குறு மாபோல்.

**இ—ள்:** ஆன பல் சட்டுவம் அங்கை தொறு ஏந்தி வான் அமிர்தை செவி வாக்குறுமா போல்—சிறந்த பல அகப்பைகளை அகங்கையிற்றாங்கித் தேவாமிர்தத்தைக் காதின் வழியே ஊற்றினாற்போல, கந்தருவத்தோர்—கந்தருவர்கள், பால் நிமிர் மென் குரல் பால் படு நல் யாழ் கானம் இசைத்தனர்—இயல்பு மிகுந்த மெல்லிய நரம்புகளினிடத்துத் தோன்றுகின்ற நல்ல யாழிசையையும் மிடற்றிசையையும் பாடினார்கள் எ—று.

செவிக்கு மிகவுமினிமையைத் தருதலின் 'வானமிர்தைச் செவி வாக்குறுமா போல்' என்றார். (4)

சுருதியெ லாமுணர் தூயவன் வானோர்
புரவலன் மாமுனி புங்கவர் யாரும்
மருமலர் மாரி வழுத்தினர் வீசி
இருபுடை தன்னினும் எய்தினர் ஈண்டி.

**இ—ள்:** சுருதி எலாம் உணர் தூயவன்—வேதங்களெல்லாவற்றையுமறிந்த பரிசுத்தராகிய பிரமதேவரும், வானோர் புரவலன்—தேவர்க்கரசனாகிய இந்திரனும், மா முனி புங்கவர் யாரும்—சிறந்த முனி சிரேட்டர்களுமாகிய அனைவரும்,

மரு மலர் மாரி வீசி வழுத்தினர்—நறுமணங்கமழும் பூ மழையைச் சொரிந்து துதித்து, இருபுடை தன்னினும் ஈண்டி எய்தினர்—இரு பக்கங்களிலும் நெருங்கி நின்றூர்கள் எ—று. (5)

வாலிய தூயொளி வானதி யாவும்
பாலகன் மெய்யணி பார்த்தனர் ஆடி
ஏலுறு பாங்கரின் ஈண்டிய வாபோல்
காலினர் சாமரை கைக்கொ டசைத்தார்.

**இ—ள்:** வாலிய தூய் ஒளி வானதி யாவும்—வெள்ளிய சுத்தமாகிய சோதியையுடைய ஆகாய கங்கைகளெல்லாம், பாலகன் மெய் அணி பார்த்தனர்—முருகக் கடவுளது திருமேனியினழகைப் பார்த்து, ஆடி—ஆநந்தக் கூத்தாடி, ஏலுறு பாங்கரின் ஈண்டியவா போல்—தகுதியாகிய பக்கங்களில் நெருங்கி நின்றூற் போல, காலினர் சாமரை கைகொடு அசைத்தார் — வாயுக்கள் சாமரங்களைக் கையிலெடுத்து வீசினூர்கள் எ—று.

ஈண்டியவாறு என்பதில் ஈற்றுயிர் மெய் தொக்கது. சாமரமிரட்டுவது கங்கையினலை வீசுதல் போன்றிருத்தலின் இவ்வாறு வமித்தார். வடநூல் வழக்குப் போல நதியைப் பெண்பாற் படுத்து 'பார்த்தனர்' என்றூர். (6)

ஒண்ணிழல் மாமதி யோரிரு வடிவாய்
அண்ணல் முகத்தெழி லார்ந்திட நண்ணி
விண்ணிடை நின்றென வெங்கனல் வருணன்
தண்ணிழல் வெண்குடை தாங்கினர் நின்றூர்.

**இ—ள்:** ஒள் நிழல் மா மதி—ஒள்ளிய குளிர்ந்த பூரண சந்திரன், ஓரிரு வடிவு ஆய்—இரண்டுருவங்களைக் கொண்டு, அண்ணல் முகத்து எழில் ஆர்ந்திட—முருகக்கடவுளது திருமுகத்தினழகைப் பெறும் பொருட்டு, விண் இடை நண்ணி நின்று என—மேலிடத்தில் வந்து நின்றூற்போல, வெம் கனல் வருணன்—கொடிய அக்கினியும் வருணனும், தண் நிழல் வெண் குடை தாங்கினர் நின்றூர்—குளிர்ந்த நிழலைச் செய்கின்ற வெள்ளிய குடைகளைப் பிடித்து நின்றூர்கள் எ—று.

நிலவை நிழலென வழங்குதலின் 'ஒண்ணிழல்' என்றூர். விண் ஈண்டுத் திருக்கோயின் மண்டபத்தின் மேலிடம். (7)

கட்டழல் கான்றிடு காமரு நாகம்
எட்டும லாதன யாவையும் ஈண்டி
உட்டெளி வாற்பணி உற்றென ஆல
வட்டம சைத்தனர் வானவர் பல்லோர்.

**இ—ள்:** கண் தழல் கான்றிடு காமரு நாகம் எட்டும் அலாதன யாவையும் ஈண்டி—கண்ணினின்றும் அக்கினியைச் சொரிகின்ற அழகிய எட்டு நாகங்களு மல்லாத மற்றைய நாகங்களெல்லாம் நெருங்கி, உள் தெளிவால் பணிவுற்று என—மனத் தெளிவோடும் வணங்கி நின்றூற்போல, வானவர் பல்லோர்—பல தேவர்கள், ஆலவட்டம் அசைத்தனர்—ஆலவட்டத்தை யசைத்தார்கள் எ—று.

எட்டு நாகங்களும் எண்டிசைகளினு நிற்பனவாதலின் அவற்றைத் தவிர்த்துக் கூறினுர். ஆலவட்டமசைவது பாம்பு படம் விரித்து நிற்பது போலுமாதலின் இவ்வாறுமித்தார். (8)

வானுயர் தோள்விறல் வாகெனும் அண்ணல்
தானுடை வாள்கொடு சார்ந்தயல் நிற்ப
ஏனைய தம்பியர் எண்மர் இலக்கர்
ஆனவர் போற்றி அகன்கடை நின்ருர்.

இ—ள்: வான் உயர் தோள் விறல்வாகு எனும் அண்ணல் உடைவாள் கொடு சார்ந்து அயல் நிற்ப—மிகவுயர்ந்த புயங்களையுடைய வீரவாகுதேவர் உடைவாளையேந்திவந்து பக்கத்தினிற்க, ஏனைய தம்பியர்—மற்றைய தம்பிமார்களாகிய, எண்மர் இலக்கர் ஆனவர்—எட்டு வீரர்களும் இலக்க வீரர்களும், போற்றி அகன்கடை நின்ருர்—துதித்து அகன்ற வாயிலில் நின்ருர்கள் எ—று. (9)

வேறு

பொருந்தி இன்னவர் புறத்துற அங்கண்
இருந்த ஞானமுதல் எல்லையில் காலம்
வருந்து கின்றமக வான்முகம் நோக்கித்
தெரிந்தி டாதவரின் இன்னன செப்பும்.

இ—ள்: இன்னவர் பொருந்தி புறத்து உற—முற் கூறப்பட்டவர்களெல்லாம் பொருந்திப் புறத்தில் நிற்ப, அங்கண் இருந்த ஞான முதல்—அவ்விடத்திலிருந்த ஞான முதல்வராகிய முருகக்கடவுள், எல்லை இல் காலம் வருந்துகின்ற மகவான் முகம் நோக்கி—அளவிறந்த காலமாகத் துயருழக்கின்ற இந்திரனது முகத்தைப் பார்த்து, தெரிந்திடாதவரின் இன்னன செப்பும்—ஒன்றுமறியாதவர்களைப் போல இவ் வாசகங்களைக் கூறுவார் எ—று.

செய்ய வேண்டிய பணி முறைகளுடனமைந்தென்பார் 'பொருந்தி' எனவும், தாமெலாமறிந்திருந்தும் பகைவர் வரலாறுகளை நன் குசாவியே போர் செய்ய வேண்டுமென்னும் நீதி நூனியதிக்கேற்ப வினுவினரென்பார் 'தெரிந்திடாதவரினின்னன செப்பும்' எனவுங் கூறினுர். (10)

துறந்து நீதியமர் சூர்முத லானோர்
பிறந்த வாறுமவர் பேணிய நோன்பும்
இறந்த செய்யவரம் எய்திய வாறுஞ்
சிறந்து பின்னரசு செய்திடு மாறும்.

இ—ள்: நீதி துறந்து அமர் சூர் முதலானோர் பிறந்தவாறும்—நீதி நெறியினின்று தவறியிருக்கின்ற சூரபன்மன் முதலிய அசுரர்கள் பிறந்த தன்மையும், அவர் பேணிய நோன்பும்—அவர்கள் தவஞ் செய்த தன்மையும், இறந்த செய்ய

வரம் எய்தியவாறும்—மிகுந்த சிறந்த வரங்களைப் பெற்ற தன்மையும், பின் சிறந்து அரசு செய்திடுமாறும்—அதன்மேற் சிறப்புற்று அரசியற்றிய தன்மை யும் எ—று.

அவர் பேணிய நோன்பும்—அவர் நோன்பு பேணியதும். இச் செய்யுளும் பிற் செய்யுளுங் குளகம். (11)

மற்ற வெய்யவர் தம் மாயமும் முற்கொள்.
வெற்றி யும்வலியும் மேன்மையும் நும்பால்
இற்றை நாள்வரை இயற்றிய துன்பும்
முற்று மொன்றற மொழிந்திடு கென்றான்.

இ—ள்: அ வெய்யவர் தம் மாயமும்—அந்தக் கொடியவர்களது மாயத்திற மும், முன் கொள் வெற்றியும்—முன்பெற்றவெற்றிகளும், வலியும்—வலிமையும், மேன்மையும்—மேம்பாடும், நும் பால் இற்றை நாள்வரை இயற்றிய துன்பும்—உங்களுக்கு இந்நாள்வரையுஞ் செய்த துன்பமும் ஆகிய, முற்றும் — எல்லா வற்றையும், ஒன்று அற மொழிந்திடுக என்றான்—ஒன்றுந் தவறாமற் கூறுகவென்று திருவாய் மலர்ந்தார் எ—று. (12)

நும்பால் - உருபுமயக்கம்.

கோக்கு மாரன்இவை கூற இசைந்தே
மீக்கொள் பொன்னுலக வேந்தயல் நின்ற
வாக்கின் வல்லகுர வன்றனை அன்பால்
நோக்கி நீயிவை நுவன்றருள் கென்றான்.

இ—ள்: கோ குமாரன் இவை கூற — முதல்வராகிய முருகக் கடவுள் இவ் வாசகங்களைக் கூறியருள, மீ கொள் பொன்னுலக வேந்து இசைந்து—மேலுள்ள சுவர்க்கலோகத்திற்கதிபனாகிய இந்திரன் சம்மதித்து, அயல் நின்ற வாக்கின் வல்ல குரவன் தனை அன்பால் நோக்கி—தன்னருகினின்ற பேச்சிற் சாதுரியமுடைய வியாழபகவானை அன்பினுடன் பார்த்து, நீ இவை நுவன்றருள்க என்றான்—நீர் இவைகளைக் கூறியருளுகவென்று வேண்டினான் எ—று.

முருகக்கடவுள் முன்னிலையில் அசுரர் வரலாற்றையெல்லாம் முறைப்படி கூற வல்லார் வியாழபகவானாதலின் அவரைவேண்டினன். அதுபற்றியே 'வாக்கின் வல்லகுரவன்' என்று விசேடித்தார். (13)

வச்சி ரங்கொள்கரன் மற்றது செப்ப
அச்சே னக்குரவன் அன்ன திசைந்தே
செச்சை மொய்ம்புடைய சேயிரு பொற்றாள்
உச்சி கொண்டுதொழு தின்ன துரைப்பான்.

இ—ள்: வச்சிரம் கொள் கரன் அது செப்ப — வச்சிராயுதத்தையேந்திய கையையுடைய இந்திரன் அவ்வாசகத்தைக் கூறியவுடன், குரவன் — வியாழ பகவான், அச்சென அன்னது இசைந்து — விரைவிலதற்குடன்பட்டு, செச்சை மொய்ம்பு உடைய சேய் இரு பொன் தாள் உச்சி கொண்டு—வெட்சிமாலையணிந்த

புயங்களேயுடைய முருகக் கடவுளது பொன்மயமாகிய இரண்டு திருவடிகளேயுஞ் சிரமேற்கொண்டு (வணங்கி), தொழுது கைகூப்பி, இன்னது உரைப்பான்—இவ் வாசகத்தைக் கூறுவார் எ—று. (14)

அறிதி எப்பொருளும் ஆவிக டோறுஞ்
செறிதி எங்கள்துயர் சிந்துதல் முன்னிக்
குறிய சேயுருவு கொண்டனே யார்க்கும்
இறைவ நின்செயலே யாருணர் கிற்பார்.

இ—ள்: யார்க்கும் இறைவ — அனேவர்க்கு முதல்வரே! எப்பொருளும் அறிதி — எல்லாப் பொருள்களேயுந் தேவரீர் அறிவீர், ஆவிகள் தோறும் செறிதி— எல்லாவுயிர்களிலும் வியாபித்தும் நிற்கின்றீர், எங்கள் துயர் சிந்துதல் முன்னி குறிய சேய் உருவு கொண்டனே — சிறியேங்களது துன்பத்தைத் தீர்த்தருளும் பொருட்டுச் சிறிய குழந்தையின் வடிவத்தைக் கொண்டீர், நின் செயலே யார் உணர்கிற்பார்—தேவரீரது திருவருட் செயலே யார்தாம் அறியவல்லார்? எ—று.

சர்வஞ்ஞத்துவத்தையும் சர்வவியாபகத்தையுமுடைய இறைவராகிய தேவ ரீர் அடியார்க்கருளுமாறு பாலவேடங் கொண்டீராதலின் தேவரீரது திருவருட் செயலேயுணர வல்லாரொருமில்லேயென்பது கருத்து. (15)

எல்லே யில்புவனம் யாவையும் யாண்டும்
ஒல்லு மூவரும் உயிர்த்தொகை யாவுந்
தொல்லே மேனிகொடு தோன்றினே யால்நீ
வல்ல மாயவியல் மற்றெவர் தேர்வார்.

இ—ள்: எல்லே இல் புவனம் யாவையும் — அளவிறந்த எல்லாப் புவனங்களே யும், யாண்டும் ஒல்லும் மூவரும்—எங்குங் கலந்து நிற்கின்ற மும்மூர்த்திகளேயும், உயிர்த்தொகை யாவும் — உயிர்க் கூட்டங்கள் முழுவதையும், தொல்லே மேனி கொடு—பழைய திருமேனியாகக்கொண்டு, தோன்றினே—அவதரித்தீர் (ஆதலின்), நீ வல்ல மாய இயல் மற்று எவர் தேர்வார்—தேவரீர் செய்யவல்ல மாயங்களின் திறத்தை வேறியாரறிவார்? (ஒருவருமறியார்) எ—று.

விச்சுவரூபியாயும் பிரமாணுதீதராயுமிருக்கின்றீர் என்பது குறிப்பு. (16)

வெய்யர் தன்மையை வினவிய தன்மை
ஐய அன்னதை யறிந்திட அன்றே
கைய ரேந்துயர் களேந்துள மீதில்
செய்ய இன்புதவு சீரரு ளாமால்.

இ—ள்: ஐய—கடவுளே, வெய்யர் தன்மையை வினவிய தன்மை— (அத் தகைய தேவரீர்) கொடிய அசுரர்களது வரலாற்றைச் சொல்லுமாறு கேட்ட தன்மை, அன்னதை அறிந்திட அன்று — அவற்றையறிந்துகொள்ளுதற்கன்று. (பின்னென்னேயெனில்), கையரேம் துயர் களேந்து—கீழோராகிய எங்களது துன் பத்தையொழித்து, உளமீதில் — எங்கள் மனத்தில், செய்ய இன்பு உதவுசீர் அருள் ஆம் — செம்மையாகிய இன்பத்தைத் தருகின்ற சிறந்த கருணேயே யாம் எ—று.

முன்னிரு செய்யுட்களாலுங் கூறப்பட்ட இயல்பினையுடைய தேவரீர் அசுரர்களது செயலினை வினவியது அறிந்துகொள்ளுதற்கன்று; எங்கள் மனத்தை மகிழ்வித்தற்கேயாமென்பது கருத்து. (17)

ஆகையால் அவுணர் தன்மைக ளெல்லாம்
போகு மெல்லைபுகல் கின்றனன் என்று
வாகை சேர்குமர வள்ளலை நோக்கி
ஓகை யோடரசன் ஓதிடு கின்றான்.

இ—ள்: ஆகையால்—ஆதலினால், அவுணர் தன்மைகள் எல்லாம் — அசுரர்களது வரலாறனைத்தையும், போகும் எல்லை புகல்கின்றனன் என்று — தெரிந்தவரையிற் கூறுகின்றேனென்று, வாகை சேர் குமர வள்ளலை நோக்கி — வெற்றி பொருந்திய குமாரக்கடவுளைப் பார்த்து, ஓகையோடு—மகிழ்ச்சியுடன், அரசன் ஓதிடுகின்றான் — வியாழபகவான் சொல்லுகின்றார் எ—று. (18)

திருச்செந்திப்படலமுற்றிற்று.

ஆகத்திரு விருத்தம் 1783

உற்பத்திகாண்டமுற்றுப்பெற்றது.



உ

திருச்சிற்றம்பலம்

# கந்தபுராணம் உற்பத்திகாண்டம்

## செய்யுள் முதற் குறிப்பகராதி

